ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களுள் தலைவரான

நம்மாழ்வார் அருளிச்செய்த



# திருவாய்மொழி

திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரையாசிரியரான

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

பதவுரையோடும் விசேஷவுரையோடும் கூடினது.



சென்னைத் தொண்டமண்டலம் வித்யாநிலயத்தில் நடைபெற்றுவரும்

பகவத்கதா பிரஸங்க ஸபையின் நீண்டகால ஞாபகசின்னமாக

இது வெளியிடப்பட்டது.

காஞ்சீபுரம் ஸ்ரீ ஸுதர்சன அச்சுக்கூடத்தில்,

அச்சிடுவிக்கப்பட்டது.

1944.

# ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய புத்தக விளம்பரம்

சின்ன காஞ்சீபுரம் ஸன்னிதி வீதி, நெ. 39, க்ரந்தமாலா ஆபீஸில் கிடைக்கும்

## ஸ்தகங்களின் ஜாபிதா

... ... ..ண்ணங்கராசாரியரின் வெளியீடுகள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| 1. பகவத்ராமாநுஜ க்ரந்தமாலா. (தெலுங்கு லிபி) உடையவர் அருளிச்செய்த ஸ்ரீ பாஷ்யம் முதலிய ஸகல க்ரந்தங்களும் ஒரே ஸம்புடமாக வுள்ளது. | 6 | 0 |
| 2. ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்தமாலா (தேவநாகர லிபி] ஸ்ரீ தேசிகன் அருளிச்செய்த ஸம்ஸ்க்ருத க்ரந்தங்கள் யாவும் எட்டு வால்யமாக அச்சிட்டிருப்பவை. | 25 | 0 |
| (இவை தனித் தனி வால்யமாகவும் கிடைக்கும்.) | | |
| 3. ஸ்ரீ தேசிக க்ரந்தமாலா. ஸம்பிரதாய விபாகம். [தெலுங்கு லிபி] ஸ்ரீ தேசிகன் அருளிச்செய்த முப்பத்திரண்டு ரஹஸ்ய க்ரந்தங்களும், தேசிகப் பிரபந்தமென்கிற தமிழ்ப் பிரபந்தங்களும் எல்லாம் ஒன்று சேர்ந்த ஸம்புடம். | 5 | 0 |
| 4. ஸ்ரீமத் வரவர முநீந்த்ர க்ரந்தமாலா (தெலுங்கு லிபி) மணவாளமாமுனிகள் அருளிச்செய்த ஸ்ரீ வசந பூஷண தத்வத்ரய - முமுக்ஷுப்படி- ஆசார்ய ஹ்ருதய வியாக்யானங்கள் நான்கும் ஒன்று சேர்ந்த ஸம்புடம். | 6 | 0 |
| 5. பகவத் விஷயம். தெலுங்கு லிபி ஈடு முப்பத்தாறாயிரப்படி | 10 | 8 |
| 6. முதலாயிரம் - திவ்யார்த்த தீபிகை | 12 | 0 |
| 7. பெரிய திருமொழி ௸ | 13 | 0 |
| 8. திருக்குறு, திருநெடுந்தாண்டகம் ௸ | 2 | 8 |
| 9. இயற்பா ஆயிரம் விரிவுரை ௸ | 12 | 0 |
| 10. முகுந்தமாலை உரை | 0 | 6 |
| 11. ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்னம் உரை | 0 | 12 |
| 12, வரதராஜ ஸ்தவ வியாக்யானம் [தமிழ்] | 1 | 0 |
| 13. ஸுதர்சந சதக வியாக்கியானம் ,, | 1 | 0 |
| 14. கோதா ஸ்துதி வியாக்யானம் | 0 | 10 |
| 15 விவாத விஷய பரிசீலனைப் புத்தகங்கள் | 1 | 0 |
| 16. காஞ்சீ அத்திகிரி வைபவம் (வசனம்) | 0 | 4 |
| 17. ஸமுத்ர சரணகதி விசேஷார்த்தங்கள் | 1 | 0 |
| 18. ௸ ஸம்ஸ்கிருதம் (தேவநாகர லிபி) | 0 | 8 |
| 19. பூருவாசார்யர்கள் அருளிச்செய்த ஸகல ஸ்தோத்ர பாடங்கள் (நாகர லிபி) | 1 | 8 |
| 20. திருமந்திரார்த்தம்—தாத்பரியச் சுருக்கம் | 0 | 12 |
| 21. ஸ்ரீசைலேசாஷ்டக வியாக்கியான விஜயம் | 0 | 8 |
| 22. ஸ்ரீ வசனபூஷணம் ஆசார்ய ஹ்ருதயம் முமுக்ஷுப்படி தத்வத்ரயம் இவை கருத்துரையுடன் அற்புதமான பதிப்பு | 3 | 8 |
| 23. வேத லக்ஷண விசாரத் தொகுதி | 1 | 8 |
| 24. திருவாய்மொழி விரிவுரை | 18 | 8 |
| 25. பிள்ளையந்தாதி உரை | 0 | 6 |
| 26. மணவாள மாமுனிகள் வைபவம் | 0 | 4 |
| 27. ௸ ஸ்ரீ வைஷ்ணவ ஸௌபாக்யம் உரையுடன் | 0 | 12 |
| 28. தர்க்க சாஸ்த்ரஸாரம் (நாகரி) | 0 | 8 |
| 29. ஸ்ரீரங்க ராஜஸ்தவம் (தமிழுரை) | 2 | 8 |
| 30. தென்னாசார்ய ஸம்பிரதாயம் | 1 | 0 |
| 31 கூரத்தாழ்வான் வைபவம் | 0 | 4 |
| 32. அண்ணவைபவ சஞ்சிகைகள் | 0 | 12 |
| 33. ஸதாசார்ய ஸூக்திரக்ஷா | 0 | 6 |
| 34. ஸத்ஸம்பிரதாய பரிசுத்தி | 0 | 6 |
| 35. க்ருஷ்ணவதார கதா ரஹஸ்யம் | 0 | 8 |
| 36. உபந்யாஸ ரத்நமாலா (க்ரந்த லிபி) | 0 | 6 |
| 37. பாலபோத ரஸாயநம் | 0 | 3 |
| 38. ரக்ஷாவிலோசந பாவப்ரகாசிகா (நாகரி) | 0 | 6 |
| 39. காஞ்சி ஹஸ்திகிரி வைபவம் ,, | 9 | 4 |
| 40 ப்ரஹ்ம வ்யாப்தி பரிஷ்க்ரியா ,, | 0 | 6 |
| 41. ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவ விமர்சம் உரையுடன் | 1 | 0 |
| 42. விசேஷார்த்த ரத்னநிதி :முதல் மலர்: | 0 | 8 |
| 43 அத்யாநுஸந்தான விரிவுரை | 2 | 8 |
| 44. ஸ்வாப தேசார்த்த ஸாகரம் | 0 | 8 |
| 45. லக்ஷ்மீ தத்வநிர்ணயம் | 0 | 4 |
| 46. ரத்ந பரீக்ஷா | 0 | 4 |
| 47. தேசிகஸூக்தி ஸித்தாஞ்ஜநம் | 0 | 8 |
| 48. வதரியாத்திரை விளக்கு | 0 | 6 |
| 49. செந்தமிழாராய்ச்சி | 0 | 8 |
| 50. முதலாயிரம் உரை | 5 | 0 |

மற்றுமுள்ள நூல்களுக்கு நேரில் விசாரிக்க



ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்






ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீலக்ஷ்மீஹயக்ரீவதிவ்ய பாதுகாஸேவகஸ்ரீமத்
அபிநவ ரங்கநாதப்ரஹ்மதந்த்ர பரகாலமஹாதேசிகனுடைய நிய
மனத்தை சிரஸாவஹித்து ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கரார் யதாஸனல் ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிக
ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கும் உபயுக்தமாகும்படி எழுதப்
பட்ட நாலாயிரதிவ்யப்ரபந்தவுரையில்,

## நான்காவது ஆயிரமான

# திருவாய்மொழி

———:O:———

### தனியன்கள்

ஸ்ரீப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி பணித்தது.

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்ய பூஷணம்
ஸ்ரீமத்வேங்கட நாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம்

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| ராமாநுஜதயா பாத்ரம் | கிடாம்பியப்புள்ளாருடைய திருவருளுக்குப் பாத்ர பூதரும் | ஸ்ரீமத்வேங்கட நாதார்யம் | ஸ்ரீமத்வேங்கடநாதார்ய ரென்கிற திருநாமம் பூண்டவருமான |
| ஜ்ஞாநவைராக்ய பூஷணம் | ஞானமென்ன விரக்தியென்ன இவற்றை அலங்காரமாக வுடையவரும். | வேதாந்ததேசி கம் வந்தே | வேதாந்ததேசிகனை வணங்குகிறேன். |

கூரத்தாழ்வான் அருளிச்செய்தது.

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.

| | | | |
|---|---|---|---|
| லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் | எம்பெருமானைத் தொடக்கத் திலே உடைத்தாய் | அஸ்மதாசார்ய பர்யந்தாம் | எமக்கு ஆசார்யரான எம் பெருமானாரை முடிவிலே உடைத்தான |
| நாத யாமுந மத்யமாம் | ஸ்ரீமந் நாதமுனிகளையும், ஆள வந்தாரையும் இடையிலே உடைத்தாய் | குருபரம்பராம் வந்தே | ஆசார்ய பரம்பரையை வணங்காநின்றேன். |

இதுவும் ஆழ்வான் அருளிச்செய்தது.

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணய மேநே

**அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:**
**ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.**

| | |
|---|---|
| | யாவரொரு எம்பெருமானார் எந்நாளும் |
| ...ச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம வ்யாமோஹத: | எம்பெருமானது திருவடித் தாமரை யிணைகளாகிற ஸு வர்ணத்திலுள்ள மிகுந்த விருப்பத்தினாலே |
| ...த் இதராணி | அத்திருவடிகளுக்குப் புறம்பாயுள்ள விஷயங்களை |
| த்ருணய மேநே | துரும்பாக நினைத்துத் தள்ளி விட்டாரோ |

| | |
|---|---|
| அஸ்மத் குரோ: | எமக்கு ஆசார்யராய் |
| பகவத: | ஸமஸ்த கல்யாணகுண பூர்ணராய் |
| தயா ஏக ஸிந்தோ: | திருவருட்கடலான |
| அஸ்ய ராமாநுஜஸ்ய | இந்த எம்பெருமானாருடைய |
| சரணௌ | திருவடிகளை |
| சரணம் | உபாயமாக |
| ப்ரபத்யே | பற்றுகிறேன். |

ஆளவந்தார் அருளிச்செய்தது

**மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி:**
**ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,**
**ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்**
**ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா**

| | |
|---|---|
| மத் அந்வயாநாம் | என்னைச் சேர்ந்தவர்களுக்கு |
| நியமேந | எப்பொழுதும் |
| மாதா பிதா யுவதய: தநயா: விபூதி: ஸர்வம் | தாய், தந்தை, மாதர், மக்கள், செல்வம் (மற்றுமுள்ள) எல்லாமும் |
| யத் ஏவ | யாதொரு ஆழ்வார் திருவடியேயோ |

| | |
|---|---|
| ந: ஆத்யஸ்ய குலபதே: | நமக்குக் குலகூடஸ்தராகிய ஆழ்வாருடைய |
| வகுள அபிராமம் | மகிழமலர்களினால் அழகாயும் |
| ஸ்ரீமத் | நித்யோஜ்வலமாயு மிருக்கிற |
| தத் அங்க்ரியுகளம் | அந்தத் திருவடியிணையை |
| மூர்த்நா | தலையால் |
| ப்ரணமாமி | வணங்குகின்றேன். |

ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.

**பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத**
**ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்,**
**பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ராந்**
**ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.**

| | |
|---|---|
| பூதம் | பூதத்தாழ்வாரையும் |
| ஸரச் ச | பொய்கையாழ்வாரையும் |
| மஹத் ஆஹ்வய பட்டநாத ஸ்ரீ பக்திஸார குலசேகர யோகிவாஹாந் | பேயாழ்வார் பெரியாழ்வார் திருமழிசை யாழ்வார் குலசேகராழ்வார் திருப்பாணாழ்வார் இவர்களையும் |

| | |
|---|---|
| பக்தாங்க்ரிரேணு பரகாலயதீந்த்ர மிச்ராந் | தொண்டரடிப்பொடியாழ்வார் திருமங்கையாழ்வார் எம்பெருமானார் இவர்களையும் |
| ஸ்ரீமத்பராங்குசமுநிம் | நம்மாழ்வாரையும் |
| நித்யம் | நாள்தோறும் |
| ப்ரணத: அஸ்மி | ஸேவிக்கிறேன். |

ஆழ்வார்கள் பதின்மரையும் ஆசாரியர்களில் முக்கியரான எம்பெருமானாரையும் சேர்த்து அநுஸந்திக்கும் ச்லோகமாமிது. இதில், பொய்கையார் பூதத்தார் பேயார் என்கிற முறைமைப்படியே திருநாமங்களைப் பதியாமல் பூதத்தாழ்வாரை முன்னே பதிந்தும் நம்மாழ்வாரை முடிவிற் பதிந்துமிருப்பது அவயவபூதர்களை அடைவே முன்னம் பணித்து அவயவியான நம்மாழ்வாரைப் பின்னே பணித்தபடி. *பூதம் ஸரோஹ்ரத மஹாஹ்வய மகூியுக்மம்* இத்யாதிச்லோகம் இங்கே அநுஸந்தேயம்..............*




ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

# திருவாய்மொழித் தனியன்கள்

—★—

(ஸ்ரீமந்நாதமுனிகள் அருளிச்செய்தது)

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம் ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோபவாங்மயம்
ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம் நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்.

| | | | |
|---|---|---|---|
| பக்த அம்ருதம் | தொண்டர்கட்கு அமுதமாயிருப்பதும் | ஸ்ரீசடகோப வாங்மயம் | நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்திமயமுமான |
| விச்வ ஜந அநுமோதநம் | ஸகல ஜனங்களையும் ஆனந்திக்கச் செய்வதும் | த்ராவிட வேத ஸாகரம் | தமிழ் வேதக் கடலை |
| ஸர்வ அர்த்ததம் | ஸமஸ்த புருஷார்த்தங்களையும் அளிக்கவல்லதும் | | |
| ஸஹஸ்ர சாகா உபநிஷத் ஸமாகமம் | ஆயிரக்கணக்கான சாகைகளையுடைய உபநிஷத்துக்களின் திரட்சியாயிருப்பதும் | அஹம் | அடியேன் |
| | | நமாமி | ஸேவிக்கிறேன். |

* * *—திருவாய்மொழி ஒரு கடலாக ரூபணம் செய்யப்படுகிறது. கடலுக்குள்ள தன்மையடங்கலும் திருவாய்மொழிக்கும் உண்டென்று விசேஷணங்களினால் நிரூபிக்கப் படுகின்றது. உபநிஷத்ஸம் - ஆகமம் என்றும் பிரியும்.

ஈச்வரமுனிகள் அருளிச்செய்த தனியன்

திருவழுதிநாடென்றுந் தென்குருகூரென்றும் மருவினிய வண்பொருநலென்றும்—அருமறைகள்
அந்தாதிசெய்தா னடியிணையே யெப்பொழுதும் சிந்தியாய் நெஞ்சே தெளிந்து.

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே! | அரு மறைகள் | அருமையான வேதங்களை |
| திருவழுதி நாடு என்றும் | திருவழுதி நாடென்கிற தேசத்தை அநுஸந்தித்தும் | அந்தாதி செய்தான் | அந்தாதித் தொடையான திருவாய்மொழி முகத்தாலே பாடின ஆழ்வாருடைய |
| தென் குருகூர் என்றும் | அழகிய திருக்குருகூரென்கிற திவ்ய தேசத்தை அநுஸந்தித்தும் | அடி இணையே | உபய பாதங்களையே |
| | | எப்பொழுதும் | இடைவிடாமல் |
| மருவ இனிய வண்பொருநல் என்றும் | ஆசைப்படும்படி போக்யமாய் அழகியதான தாமிரபர்ணியாற்றை அநுஸந்தித்தும், | தெளிந்து | தெளிவுடனே |
| | | சிந்தியாய் | சிந்தை செய்யக்கடவை. |

* * *—ஆழ்வாருடைய திருவடிகளை அநுஸந்திக்கும்போது அவரது திருவவதார ஸ்தலமான திருநகரியையும் அது இருக்கும் நாடாகிய வழுதிவளநாட்டையும், அந்நாட்டுக்கு அலங்காரமாய் ஆழ்வார்க்கும் புராண நிரூபகமான தாமிரபரணீ திவ்ய நதியையும் அநுஸந்தித்துப் பின்பு 'ஆழ்வார் திருவடிகளே சரணம்' என்னவேணுமென்கிறது. இதனால் உத்தேச்ய வஸ்துவின் ஸம்பந்தஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களும் உத்தேச்யம் என்கிற சாஸ்த்ரார்த்தம் வெளியிடப்பட்டதாகும்.

சொட்டைநம்பிகள் அருளிச்செய்த தனியன்

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர்பேணும் இனத்தாரையல்லாதிறைஞ்சேன்—தனத்தாலும்
ஏதுங்குறைவிலேன் எந்தைசடகோபன் பாதங்கள் யாமுடைய பற்று.

| | |
|---|---|
| மனத்தாலும் | நெஞ்சினாலும் |
| வாயாலும் | வாக்கினாலும் |
| வண் குருகூர் பேணும் | திருநகரியை ஆதரிக்கின்ற |
| இனத்தாரை அல்லாது | கோஷ்டியில் சேர்ந்தவர்களைத் தவிர (மற்றையோர்களை) |
| இறைஞ்சேன் | வணங்கமாட்டேன்; |
| தனத்தாலும் | செல்வத்தினாலும் |
| ஏதும் குறைவு இலேன் | எவ்விதமான குறையுமுடையேனல்லேன்; (ஏதனாலென்னில்) |
| எந்தை சடகோபன் | அஸ்மத் ஸ்வாமியான நம்மாழ்வாருடைய |
| பாதங்கள் | திருவடிகள் |
| யாமுடைய | நம்முடைய |
| பற்று | ஆதாரமாயிராநின்றது. |

* * *—ஆழ்வார்திருநகரியையே போற்றிக்கொண்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் அந்வயித்த மஹான்களைத் தவிர மற்று எவரையும் வணங்கமாட்டேனென்றது, எப்போதும் அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகளையே வணங்குவேனென்றபடி.

முன்னடியில் இறைஞ்சேன் என்று ஒருமையாகச் சொல்லிப் பின்னடியில் யாமுடைய என்று பன்மையாகச் சொன்னது, இயல்புபற்றிய தனித்தன்மைப் பன்மை; ஸ்வஸம்பந்திகளையுங் கூட்டிக் கொண்டு பேசுகிறாரென்னவுமாம்.

அனந்தாழ்வான் அருளிச்செய்த தனியன்

ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமானுசமுனிதன் வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்தபெருஞ் சீரார்சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும் பேராதவுள்ளம்பெற.

| | |
|---|---|
| ஆய்ந்த | குற்றங் கலசாத |
| பெரு சீர் | சிறந்த திருக்குணங்களினால் |
| ஆர் | பரிபூர்ணமான |
| சடகோபன் | நம்மாழ்வார் அருளிச்செய்த |
| செந்தமிழ் வேதம் | செவ்விய தமிழ் வேதத்தை |
| தரிக்கும் | தாங்கிக் கொள்ளவல்லதாய் |
| பேராத | வேறொன்றில் செல்லமாட்டாததான |
| உள்ளம் | நெஞ்சை |
| பெற | பெறும் பொருட்டு |
| ஏய்ந்த பெரு கீர்த்தி இராமாநுச முனி தன் | தகுதியான பெரும் புகழையுடைய எம்பெருமானாரது |
| வாய்ந்த பாதம் மலர் | பொருத்தமான திருவடித் தாமரைகளை |
| வணங்குகின்றேன் | தொழுகின்றேன். |

* * *—மேல் தனியனில் "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்னப்படுதலால் திருவாய்மொழியை வளர்த்தவரான எம்பெருமானாருடைய திருவருளின்றித் திருவாய்மொழியை மனப்பாடமாகத் தரிக்கவல்ல சக்தி வாய்க்கமாட்டாதாதலால், செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராதவுள்ளம் பெறுதற்காக இராமாநுசனது மலர்ப்பாதம் வணங்குகின்றேனென்கிறது இதில்.

"எங்கள் கதியே யிராமாநுசமுனியே, சங்கை கெடுத்தாண்ட தவராசா, பொங்குபுகழ்மங்கையர் கோனீந்த மறையாயிரமனைத்தும், தங்குமனம் நீயெனக்குத்தா" என்ற பெரிய திருமொழித் தனியனையும் இங்கு ஸ்மரிப்பது.

பட்டர் அருளிச்செய்த தனியன்

வான்திகழுஞ்சோலை மதிளரங்கர்வண்புகழ்மேல் ஆன்றதமிழ்மறைகளாயிரமும்—ஈன்ற
முதற்றாய்சடகோபன் மொய்ம்பால்வளர்த்த இதத்தாயிராமானுசன்.

| | |
|---|---|
| வான் திகழும் சோலை | ஆகாசத்தளவும் ஓங்கி விளங்குகின்ற சோலைகளையும் |
| மதிள் | ஸப்த ப்ராகாரங்களையும் உடைத்தான |
| அரங்கர் | திருவரங்கத்தில் பள்ளி கொண்ட எம்பெருமானுடைய |
| வண் புகழ் மேல் ஆன்ற | திருக்கல்யாண குண விஷயமாக அமைந்த |

| | | | |
|---|---|---|---|
| தமிழ் மறைகள் ஆயிரமும் | தமிழ் வேதமான 'ஆயிரம் பாசுரங்களையும் | மொய்ம்பால் | மிடுக்குடனே |
| ஈன்ற முதல் தாய் | பெற்ற முக்கியமான மாதா | வளர்த்த | அதனை வளர்த்த |
| சடகோபன் | நம்மாழ்வாராவர். | இதம் தாய் | ஹிதமான மாதா |
| | | இராமாநுசன் | எம்பெருமானாராவர். |

* * *—கீழ்த் தனியனிலே "செந்தமிழ் வேதந் தரிக்கும் பேராத வுள்ளம்பெற—இராமாநுசமுனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்" என்று பேசும்படி எம்பெருமானார்க்கும் திருவாய்மொழிக்குமுள்ள தொடர்பை வெளியிடுவது இப்பாசுரம். உலகத்தில் பிரஜைகளுக்குப் பெற்றதாய் என்றும் வளர்த்ததாய் என்றும் இரண்டு தாய்மார் ஏற்படுவது போல் திருவாய்மொழியாகிற ப்ரஜைக்கும் இரண்டு தாய்மாருண்டு; அவர்களாகிறார் நம்மாழ்வாரும் எம்பெருமானாரும். ஆழ்வார் பெற்றருளினர்; எம்பெருமானார் போஷித்தருளினார். கண்ணபிரானுக்குத் தேவகிப் பிராட்டியும் யசோதைப் பிராட்டியும் போலே.

இதுவும் பட்டரருளிச் செய்த தனியன்

மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும்
தக்கநெறியுந் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும்வாழ்வினையு மோதுங்குருகையர்கோன்
யாழினிசைவேதத்தியல்.

| | | | |
|---|---|---|---|
| குருகையர்கோன் | திருநகரியிலுள்ளார்க்குத் தலைவரான ஆழ்வார் (அருளிச்செய்த) | தக்க நெறியும் | ஸ்வரூபாநுரூபமான உபாயத்தின் ஸ்வரூபத்தையும் |
| யாழின் இசை வேதத்து இயல் | வீணைகானம்போன்ற திருவாய்மொழிப் பாசுரங்கள் | தடைஆகி தொக்கு இயலும் ஊழ்வினையும் | (பகவத்ப்ராப்திக்குப்) பிரதிபந்தகமாகிச் சேர்ந்து கிடக்கிற முன்னை வினைகளாகிற விரோதி ஸ்வரூபத்தையும் |
| மிக்க இறை நிலையும் | ஸர்வோத்க்ருஷ்டனை எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் | வாழ்வினையும் | வாழ்வாகிற பரம புருஷார்த்த ஸ்வரூபத்தையும் |
| மெய்யாம் உயிர் நிலையும் | நித்யனை ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும் | ஓதும் | கூறுவன. |

எம்பெருமானே ஸர்வஸ்மாத்பரன், ஜீவாத்மா அவ்வெம்பெருமான் பக்கலில் சேஷத்வத்தையே தனக்கு நிரூபகமாகவுடையவனாயிருப்பன், சரணாகதியே எம்பெருமானைப் பெறுதற்கு வழி, பொய்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமாகிற விவையே பிரதிபந்தகம், ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்வதே பரமபுருஷார்த்தம் என்கிற இவ்வைந்து அர்த்தங்களும் இத்திருவாய்மொழியில் பன்னிப்பன்னியருளிச்செய்யப்படுகின்றன. ஆதலால் அர்த்தபஞ்சகமே திருவாய்மொழிக்கு ப்ரமேயமென்க.

தனியன் உரை முற்றிற்று

---

## திருவாய்மொழியின் அவதாரிகை.

நம்மாழ்வார் நான்கு வேதங்களின் ஸாரமாக நான்கு திவ்யப் பிரபந்தங்களையருளிச் செய்தார். திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதியென்ற கீழ்ப்ரபந்தங்கள் மூன்றும் இயற்பாவிற் சேர்ந்தவை. இதுவே சரமப்ரபந்தமாகும். ஸாமவேதத்தின் ஸாரமென்று ஆசாரியர்களால் அருமை பெருமை பொலிய ஆதரிக்கப்பட்டது இதுவே. எம்பெருமான் இவரைக்கொண்டு உலகத்தை திருத்திப்பணிகொள்ளத் திருவுள்ளம் பற்றியதனால், இவர் அபேக்ஷித்தபோதே இவர்க்கு ஸம்ஸார நிவ்ருத்தியைப் பண்ணிக்கொடாமல் ஸம்ச்லேஷவிச்லேஷங்களாலே ஞானபக்திகளை வளரச்செய்து தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள் சொல்லுவித்து, பரமபக்தி தசையை எடுப்புஞ் சாய்ப்புமாக விளைத்து இப் பிரபந்தத்தின் முடிவில் அந்தமில் பேரின்பமளித்தருளுகிறான்.

ஸ்ரீ:

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி

## முதற்பத்து—முதல்திருவாய்மொழி—உயர்வற

பராத்பரனுடைய உயர்த்திகளையெல்லாமுரைப்பது.

2675 உயர்வறவுயர்நலம் உடையவன்யவனவன் * மயர்வறமதிநலம் அருளினன்யவனவன்
அயர்வறுமமரர்கள் அதிபதியவனவன்* துயரறுசுடரடி தொழுதெழென்மனனே. (க)

| | |
|---|---|
| என் மனனே | என்து மனமே ! |
| உயர்வு அற | (தன்னைப் பார்க்கிலும்) உயர்த்தி இல்லாதபடி |
| உயர் | உயர்ந்த |
| நலம் | (ஆனந்தம் முதலிய) கல்யாண குணங்களை |
| உடையவன் | (சுயமாக) உடைத் தானவன் |
| யவனவன் | யாவனொருவனோ, |
| மயர்வு அற | அஜ்ஞானம் நசிக்கும்படி |
| மதி நலம் | ஞானத்தையும் பக்தியையும் |
| அருளினன் | (அடியேனுக்கு) கிருபை பண்ணினவன் |
| யவனவன் | யாவனொருவனோ, |
| அயர்வு அறும் | மறப்பு இல்லாத |
| அமரர்கள் | நித்யஸூரிகளுக்கு |
| அதிபதி யவன் | ஸ்வாமி யாவனொருவனோ |
| அவன் | அந்த எம்பெருமானுடைய |
| துயர் அறு சுடர் அடி | துக்கங்களைப் போக்குகிற சோதிமயமான திருவடிகளை |
| தொழுது | வணங்கி |
| எழு | நீ கடைத்தேறக்கடவை. |

* * *—இதில், மஹோபகாரங்களைத் தமக்குச் செய்தருளின எம்பெருமானுடைய திருவடிகளைத் தொழுது மேன்மை பெறும்படியாக ஆழ்வார் தமது திருவுள்ளத்திற்கு உபதேசிக்கிறார். புறமதத்தவருடைய கொள்கைப்படி எம்பெருமான் நிர்க்குணனல்லன், ஸமஸ்த கல்யாணகுணாத்மகன் என்கிற வேதாந்த ஸித்தாந்தத்தை முதலடியிலே வெளியிட்டருளுகிறார். இதனால் எம்பெருமான் தனது திருக்கல்யாண குணங்களைக் காட்டி இவ்வாழ்வாரை ஈடுபடுத்திக்கொண்டமை விளங்கும். (க)

2676 மனனகமலமற மலர்மிசையெழுதரும்* மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன்*
இனனுணர்முழுநலம் எதிர்நிகழ் கழிவினும்* இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே. (உ)

| | |
|---|---|
| மனனகம் | மனத்திலே யிருக்கிற |
| மலம் அற | (காமம் கோபம் முதலிய) தீக்குணங்கள் கழியக் கழிய (அதனால்) |
| மலர் | மலர்ந்ததாகி |
| மிசை எழுதரும் | மேலே மேலே விருத்தி யடைகிற |
| மனன் உணர்வு | மானஸ ஜ்ஞான மென்கிற யோக வுணர்ச்சியால் |
| அளவிலன் | அளவிடப்படாதவனும் |
| பொறி உணர்வு அவை இலன் | (மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும்) வெளியிந்திரியங்களின் ஞானத்தினால் அளவிடப்படாதவனுமாய் |
| இனன் | இப்படிப்பட்டவனும் |
| முழு உணர் நலம் | பரிபூர்ண ஞானானந்த ஸ்வரூபியும் |
| எதிர் நிகழ் கழிவினும் | எதிர்காலம் நிகழ்காலம் இறந்த காலம் என்ற மூன்று காலங்களிலும் |
| இனன் இலன் | ஒப்பு இல்லாதவனும் |
| மிகுநரை இலன் | மேற்பட்டவரில்லாதவனுமாயிருப்பவன். |
| என்' நன்' உயிர் | எனக்கு நல்ல ஆத்மா. |

* * *—முதற்பாசுரத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட திருக்குணங்களுக்கு ஆச்ரயமான திவ்யாத்ம ஸ்வரூபமானது சித்து அசித்து என்கிற இரண்டு தத்துவங்களிற்காட்டிலும் விலக்ஷணமென்பதை இப்பாட்டில் அருளிச்செய்கிறார். முதல் ஒன்றரையடிகளால் ஜீவாத்ம

ஸ்வரூபத்திற்காட்டிலும் பரமாத்ம ஸ்வரூபம் விலக்ஷணமெனப்படுகிறது. பொறியுணர்வவை யிலன் என்பதனால் ஜடப்பொருள்களிற்காட்டில் வைலக்ஷண்யம் சொல்லப்படுகிறது. இனன் - இப்படிப்பட்டவனென்று முன்னடிகளிற் சொன்ன சிதசித் வைலக்ஷண்யத்தையே அநுபாஷிக்கிறபடி. உணர்முழுநலம் - உணர்வும் நலமுமே முழுதுமாக வுள்ளவன்; கட்டடங்க ஜ்ஞாநாநந்த ஸ்வரூபி யென்றபடி. எதிர் நிகழ் கழிவினும் இனனிலன் - மூன்று காலங்களிலும் தனக்கு ஒப்பில்லாதவன். (௨)

2677 இலனதுஉடையனிது எனநினைவரியவன்* நிலனிடைவிசும்பிடை உருவினனருவினன்*
புலனொடுபுலனலன் ஒழிவிலன்பரந்த * அந்நலனுடையொருவனை நணுகினம்நாமே. (௩)

| | | | |
|---|---|---|---|
| அது இலன் (என) | அந்தப் பொருள் (தனக்கு) இல்லாதவனென்றும் | அருவினன் | ரூபியல்லாத சேதனர்களை யுடையவனாகியும் |
| இது உடையன் என | இந்தப் பொருளை யுடையவன் என்றும் | புலனொடு | (இப்படிப்) புலன்களுக்கு விஷயமாகிற பொருள்களோடு (கலந்து நின்றாலும்) |
| நினைவு அரியவன் | நினைப்பதற்கு அருமைப்பட்டவனாகியும் | புலன் அலன் | (தான்) புலன்களுக்கு விஷயமாகாதவனாகியும் |
| நிலன் இடை | பூமி முதலான (கீழ்) உலகங்களிலும் | ஒழிவு இலன் பரந்த | எப்பொழுதும் எங்கும் வியாபித்திருக்கிற |
| விசும்பு இடை | ஆகாசம் முதலான (மேல்) உலகங்களிலும் உள்ள | அ நலன் உடை ஒருவனை | முன் சொன்ன கல்யாண குணங்களையுடைய ஒப்பற்ற எம்பெருமானை |
| உருவினன் | ரூபியான அசேதநப் பொருள்களை யுடையவனாகியும் | நாம் நணுகினம் | நாம் கிட்டப்பெற்றோம். |

* * *—எம்பெருமானுக்குண்டான லீலாவிபூதிச் செல்வத்தை இப்பாட்டி லருளிச் செய்கிறார். 'இவனுக்கு அது இல்லை' என்றும் நினைக்கமுடியாது, 'இவனுக்கு அதுவுண்டு' என்றும் நினைக்க முடியாது; நிலனிடை விசும்பிடை யுருவினனருவினன்' என்றே பேசவேணும்; கீழுலகங்களிலும் மேலுலகங்களிலும் சேதநப் பொருள்களும் ஜடப்பொருள்களும் எத்தனையுண்டோ அவற்றையெல்லா முடையவன் என்னவேணுமென்கை. புலனொடு புலனலன் - புலப்படுகின்ற ஸகல பதார்த்தங்களோடும் அந்தராத்மாவாய்க் கலந்து நின்றானேயாகிலும் அவற்றின் தோஷங்கள் தன்னிடத்தில் தட்டப்பெறாதவன். ஒழிவிலன் பரந்த - ஒரு வஸ்துவும் ஒரு காலமு மொழியாமல் ஸர்வத்ர ஸர்வதா வியாபித்தவன். (௩)

2678 நாமவனிவனுவன் அவளிவளுவளெவள் * தாமவரிவருவர் அதுவிதுவுதுவெது *
வீமவையிவையுவை அவைநலந்தீங்கவை * ஆமவையாயவை ஆய்நின்றவவரே. (௪)

| | | | |
|---|---|---|---|
| நாம் | நாம் முதலான தன்மைப் பொருள்களும் | எது | எது என்னும் ஒன்றன்பால் வினைப்பொருளும் |
| அவன் இவன் உவன் | அவன் இவன் உவன் என்கிற ஆண்பால் சுட்டுப் பொருள்களும் | வீம் அவை | நசிக்குந் தன்மையுள்ள பொருள்களும் |
| அவள் இவள் உவள் | அவள் இவள் உவள் என்னும் பெண்பால் சுட்டுப்பொருள்களும் | இவை உவை அவை | இவை உவை அவை என்னும் பலவின்பால்சுட்டுப் பொருள்களும் |
| எவள் | எவள் என்கிற பெண்பால் வினைப் பொருள்களும் | நலம் அவை | நல்ல வஸ்துக்களும் |
| தாம் | தாம் என்னும் பன்மைப் பொதுப்பொருள்களும் | தீங்கு அவை | கெட்ட வஸ்துக்களும் |
| | | ஆம் அவை | எதிர்காலப் பொருள்களும் |
| அவர் இவர் உவர் | அவர் இவர் உவர் என்னும் பலர்பால் சுட்டுப்பொருள்களும் | ஆய அவை | இறந்தகாலப் பொருள்களும் |
| | | ஆய் நின்ற | ஆகின்ற எல்லாப் பொருள்களும் |
| அது இது உது | அது இது உது என்னும் ஒன்றன்பால் சுட்டுப் பொருள்களும் | அவரே | அந்த ஸர்வேச்வரனேயாம். |

* * *—இப்பாட்டுமுதல் மேற்பாட்டுக்களெல்லாம் கீழ்ப்பாட்டிற் சொன்ன லீலா விபூதிச் செல்வத்தைப் பன்னியுரைப்பன. எம்பெருமானார் கத்யத்தில் *ஸ்வாதீந த்ரிவித சேதநா சேதந ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம்* என்றருளிச்செய்வது இப்பாட்டுமுதல் முறையே யுள்ள மூன்று பாசுரங்களிலும் சொல்லுகிற பொருளையே ஸங்கிரஹித்தபடியாம். ஸகல சேதநாசேதநங்களினுடையவும் ஸ்வரூபம் எம்பெருமானுடைய அதீநமாயிருக்குமென்பது இப்பாட்டிற் சொல்லுகிறது. அப்படியே அவற்றின் ஸ்திதியும் [ரக்ஷணமும்] அவனதீன மென்பது மேற்பாட்டிற் சொல்லுகிறது. அவற்றின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் அவனதீனங்க ளென்பது அதற்கு மேற்பாட்டிற் சொல்லுகிறது. (ச)

2679 அவரவர்தமதமது அறிவறிவகைவகை + அவரவரிறையவர் எனவடியடைவர்கள் +
அவரவரிறையவர் குறைவிலரிறையவர் + அவரவர்விதிவழி அடையநின்றனரே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| அவர் அவர் | அந்தந்த அதிகாரிகள் | குறைவு இலர் | (அவரவர்கள் விரும்பின பலன் களைக்கொடுப்பதில்)குறையற் றனவே; (எதனாலே என்னில்) |
| தம நமது | தங்கள் தங்களுடைய | இறையவர் | ஸர்வ ஸ்வாமியான ஸ்ரீமந்நா ராயாணன் |
| அறிவு அறி வகை வகை | ஞானத்தாலே அறியப்படுகிற பலபல படிகளாலே | அவரவர் | அந்தந்த அதிகாரிகள் |
| அவரவர் | அந்தந்த தெய்வங்களை | விதி வழி | தங்கள் தங்கள் அத்ருஷ்டாநு ஸாரமாய் |
| இறையவர் என | ஸ்வாமிகளென்றெண்ணி | அடைய | பலன் பெறும்படியாக |
| அடி அடைவர்கள் | ஆச்ரயிப்பர்கள்; | நின்றனர் | (அந்தந்த தேவதைகளுக்கு) அந்தர்யாமியாக எழுந்தருளி யுள்ளான். |
| அவரவர் இறையவர் | அந்தந்த அதிகாரிகளால் தொழப்படுகிற தெய்வங்கள், | | |

* * *—உலகத்தில் நடக்கிற ரக்ஷணத்தொழில்யாவும் எம்பெருமானுடையதே; அக்நி இந்திரன் சிவன் பிரமன் முதலிய இதர தெய்வங்களைக் குறித்து அவரவர்கள் வழிபாடுகள் செய்து தாம்தாம் கோலின பலன்களைப் பெறுவதாகக் கண்டாலும் அதுவும் எம்பெருமான் தானே அத் தெய்வங்களுக்கு உள்ளீடாக இருந்து நடத்துகிற ரக்ஷணமேயன்றி அத்தெய்வங் களே சுதந்திரமாகச் செய்துவிடுகிற ரக்ஷணமன்று என்றதாயிற்று. (ரு)

2680 நின்றனரிருந்தனர் கிடந்தனர்திரிந்தனர் + நின்றிலரிருந்திலர் கிடந்திலர்திரிந்திலர் +
என்றுமோரியல்வினர் எனநினைவரியவர்+ என்றுமோரியல்வோடு நின்றவெந்திடரே.(சு)

| | | | |
|---|---|---|---|
| நின்றனர் | நிற்பவர்கள் | | (ஆக இப்படிப்பட்டவர்களினுடைய நில்லாமை இராமை கிடவாமை திரி யாமையாகிற நிவ்ருத்திகளெல்லா மும் அப்பெருமானுடைய அதீநமே) |
| இருந்தனர் | இருப்பவர்கள் | | |
| கிடந்தனர் | கிடப்பவர்கள் | | |
| திரிந்தனர் | திரிபவர்கள் (ஆக இப்படிப் பட்டவர்களினுடைய நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதலா கிற ப்ரவ்ருத்திகளெல்லாம் அப்பெருமானுடைய அதீ நமே.) | என்றும் | எப்போதும் |
| | | ஒரு இயல்வினர் என நினைவு அரியவர் | ஒரேவிதமான இயற்கையை யுடையவரென்று நினைக்க முடியாதவரும் (அவரே) (அவர்தாம் யாவரென்னில்) |
| | | என்றும் | எப்போதும் |
| நின்றிலர் | நில்லாதவர்கள் | ஓர் இயல்வொடு நின்ற | ஒரேவிதமான இயற்கையோடு கூடியிருக்கின்றவராய் |
| இருந்திலர் | இராதவர்கள் | எம் திடர் | திடமான பிரமாணத்தினால் ஸித் தரான நம்முடையவர். |
| கிடந்திலர் | கிடவாதவர்கள் | | |
| திரிந்திலர் | திரியாதவர்கள் | | |

* * *—லீலாவிபூதியின் ஸ்வரூபமும் ரக்ஷணமும் எம்பெருமானுடைய அதீனமென் பது கீழிரண்டு பாசுரங்களில் அருளிச்செய்யப்பட்டது; அதனுடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி களும் அவனதீனமே யென்கிறது இப்பாட்டில். இதில் முதலடியில் ப்ரவ்ருத்திகளைச் சொல்லு கிறது. இரண்டாமடியில் நிவ்ருத்திகளைச் சொல்லுகிறது. நின்றனர் இத்யாதிக்கு - நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் என்கிற தொழில்களே இங்குப் பொருளாக அமையும். நின்றிலர் இத்யாதிக்கும் - நில்லாமை இராமை கிடவாமை திரியாமை என்பவைகளே பொருளாகப் பொருந்தும்.

திடர் - திடமான வேதப்ரமாணத்தினல் ஸித்திப்பவர் என்றபடி. எம்பெருமான் அப்படி ஸித்திப்பது வைதிகோத்தமராகிய தமக்குப் பரமலாபம் என்பது தோன்ற எம்திடர் என்கிருர். எமக்காகவே ப்ரபலப்ரமாண ஸித்தராஞர் என்றபடி. (சு)

2681 திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை * படர்பொருள்முழுவதுமாய் அவையவைதோறும் + உடன்மிசையுயிரெனக் கரந்தெங்கும்பரந்துளன் * சுடர்மிகுசுருதியுள் இவையுண்டசுரனே. (எ)

| | |
|---|---|
| திடம் | உறுதியான |
| விசும்பு | ஆகாசமென்ன |
| எரி வளி நீர் நிலம் | அக்நியென்ன வாயுவென்ன ஜலமென்ன பூமியென்ன |
| இவை மிசை | ஆகிய இவற்றை ஆதாரமாகக் கொண்டு |
| படர் பொருள் முழுவதும் ஆய் | படர்ந்த பதார்த்தங்கள் யாவும் தானும்படி அவற்றிற்கு உபாதானமாய் (அவற்றை உண்டாக்கி) |
| அவை அவை தொறும் | அந்தந்த பதார்த்தங்களெல்லாவற்றிலும் |
| உடல் மிசை உயிர் என | சரீரத்தில் ஆத்மா வியாபிப்பது போல |
| கரந்து | மறைந்து |
| எங்கும் பரந்து | உள்ளிலும் வெளியிலும் வியாபித்து |
| சுடர் மிகு சுருதியுள் உளன் | தேசுபொலிந்த வேதத்தில் உள்ளவனை எம்பெருமான் |
| இவை உண்ட சுரன் | (ஸம்ஹார காலத்தில் இவற்றையெல்லாம் தன் பக்கலிலேயாக்கிக் கொள்ளும் தேவனுவான். |

* * *—கீழ்ப்பாசுரங்களிலும் மேலிற் பலவிடங்களிலும் 'எல்லாப் பொருள்கட்கும் எம்பெருமானே நியாமகன்' என்று சொல்லவேண்டுமிடங்களில் அப்படிச் சொல்லாமல் 'எல்லாம் எம்பெருமானே' என்று [ஸமாநாதிகரணமாகச்] சொல்லுவதால் அத்வைதாபிப்ராயம்போல் தோன்றக்கூடுமன்றே; உண்மையில் அப்படியில்லை; ஸகல சேதநாசேதநங்களும் சரீரமாய் எம்பெருமான் ஸகலாந்தர்யாமித்வேந சரீரியாய் நிற்றலால் இப்படிப்பட்ட சரீர சரீரிபாவ ஸம்பந்தத்தைப் பற்றவே ஐக்கியம் சொல்லப்பட்டதென்று நிரூபிக்கிறது இப்பாசுரம். விசிஷ்டாத்வைதக்கோட்பாட்டை இப்பாட்டு ஸாரமாக எடுத்துரைக்கின்றது. (எ)

2682 சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும் * வரன்முதலாயவை முழுதுண்டபரபரன் * புரமொருமூன்றெரித்து அமரர்க்குமறிவியந்து * அரனயனென உலகழித்தமைத்துளனே.

| | |
|---|---|
| சுரர் அறிவு அரு நிலை | (பிரமன் முதலிய) தேவர்களுக்கும் அறியவொண்ணுத நிலைமையை யுடைத்தான |
| விண் முதல் முழுவதும் வரன் முதல் ஆய் | மூலப்ப்ரக்ருதி முதலாக உள்ள ஸகல வஸ்துக்களுக்கும் சிறந்த காரணபூதனுய் (அவற்றையெல்லாம் படைத்தவனுயும்) |
| அவை முழுது உண்ட | அவற்றையெல்லாம் (ப்ரளய காலத்தில்) திருவயிற்றிலே ரக்ஷிப்பவனுயுமுள்ள |
| பரபரன் | பரம புருஷன் |
| அரன் என | ருத்ரமூர்த்தியின் உருவத்தைத் தரித்தவனுகி |
| ஒரு மூன்று புரம் எரித்து | இணையில்லாத திரிபுரங்களைத் தஹித்தும் |
| உலகு அழித்து | உலகங்களை அழித்தல்செய்தும் |
| அயன் என | நான்முகக் கடவுள் என்னும்படியாக நின்று |
| அமரர்க்கு அறிவு இயந்து | தேவர்களுக்கு ஞானத்தைக் கொடுத்தும் |
| உலகு அமைத்து | உலகங்களைப் படைத்தல் செய்தும் |
| உளன் | அவர்களுக்குள் ஆத்மாவாயிருக்குமவனே. |

* * *—பிரமன் சிவன் முதலான தேவர்களும் சிலசில அரிய பெரிய காரியங்களை நடத்திப்போருவதாக ப்ரமாணங்களில் விளங்காநின்றதே; சிவபிரான் த்ரிபுரஸம்ஹாரமாகிற மிகப்பெரிய காரியத்தை நடத்தினனென்றும் ஸகல லோகத்தின் ஸம்ஹாரத் தொழிலுக்கும் அதிகாரியா யிருக்கிருனென்றும், பிரமனும் தேவர்களுக் கெல்லாம் ஞானமளித்தனனென்றும் லோகஸ்ருஷ்டியை நடத்திப் போருகிருனென்றும் பிரமாணங்களால் விளங்கும்போது எல்லாப் பெருமைகளையும் விஷ்ணுவின்மேலேயே ஏறிட்டுச் சொல்லுவதென்? என்று சிலர் சங்கிக்க, அவர்களுக்குத் தெளிவு பிறப்பிக்கும் பாசுரம் இது. *விஷ்ணு ராத்மா பகவதோ

பவஸ்யாமிததேஜஸ:, தஸ்மாத் தநுர்ஜ்யாஸம்ஸ்பர்சம் ஸ விஷேஹே மஹேச்வர: * என்று மஹாபாரதத்தில் கர்ணபர்வத்தில் சொல்லிற்று. இங்ஙனே பல ப்ரமாணங்களை நோக்குமிடத்து சிவன் பிரமன் முதலானோர் செய்யுமவையும் ஸ்ரீமந் நாராயணாதிஷ்டான பலத்தினாலேயே என்பது ஸ்பஷ்டமாகுமென்றதாயிற்று. (அ)

2683 உளனெனிலுளன் அவனுருவமிவ்வுருவுகள் * உளனலனெனில் அவனருவமிவ்வருவுகள்*
உளனெனவிலனென இவைகுணமுடைமையில்* உளனிருதகைமையொடு ஒழிவிலன்பரந்தே.

| | | | |
|---|---|---|---|
| உளன் எனில் | ஈச்வரனுண்டென்று (வைதிகர்கள் சொல்லுகிறப்போலே) சொன்னாலும் | இவ்வுருவுகள் | இவ்வுருவுகள் உருவமுடையனவாயும் உருவமில்லாதனவாயுமிருக்கின்ற உலகப் பொருள்கள் யாவும் |
| உளன் அலன் எனில் | ஈச்வரனில்லையென்று (நாஸ்திகர்களின்படியே) சொன்னாலும் | அவன் உருவம் அவன் அருவம் | அப்பெருமானுக்கு ஸ்தூல சரீரங்களும் ஸூக்ஷ்ம சரீரங்களுமாம்; |
| உளன் | ஈச்வரனுண்டு என்பதாகவே தேறும்; | இருதகைமையொடு | இரண்டு தன்மையோடும் (அதாவது ரூபியும் அரூபியுமான ஸ்தூல ஸூக்ஷ்ம ப்ரபஞ்சங்களை வடிவாகக்கொண்டு) |
| உளன் என இலன் என இவை குணம் உடைமையின் | உளனென்றும் இலனென்றுஞ்சொல்லப்படுகிற அஸ்தித்வ நாஸ்தித்வங்களை ப்ரகாரமாக வுடையனாகுந் தன்மையினாலே | ஒழிவுஇலன் பரந்து உளன் | எல்லாக்காலங்களிலும் எல்லா இடங்களிலுமுள்ளவனாகவே ஸித்திப்பன். |

* * *—இப்பாட்டில் ஸர்வ சூந்யவாதி நிரஸிக்கப்படுகிறான். ப்ரஹ்மஸூத்ரம் இரண்டாவது அத்யாயம் இரண்டாவது பாதத்தில் *ஸர்வதாநுபபத்தேச்ச* என்கிற ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்தில் பாஷ்யகாரர் சூந்யவாதத்தைக் கண்டித்திருப்பது பெரும்பாலும் இப் பாசுரத்தின் நடையை உட்கொண்டேயாம். 'எல்லாமுள்ளது' என்று பிரதிஜ்ஞை பண்ணினால் என்ன தேறுமோ அதுவேதான் 'எல்லாம்இல்லது' என்கிற ப்ரதிஜ்ஞையாலும் தேறும். உலகத்தில், உண்மையென்றும் இல்லாமையென்றும் இரண்டுவகையான சப்தங்களும் ப்ரதீதிகளும் இருக்கின்றனவே? அவற்றின் விஷயம் என்னவென்று ஆராய்ந்தால், உள்ளதான வஸ்துவுக்கே நிலைமைவேறுபாடுகள் நேருவதே மேற்குறித்த ப்ரதீதிகளுக்கு விஷயமாகும். 'இங்கே துணியிருக்கின்றது' என்றால் பஞ்சினுடைய அல்லது நூலினுடைய நிலைமைவேறுபாடு தோன்றும். முன்பு பஞ்சாகவோ நூலாகவோ இருந்த பொருள் இப்போது துணியாகிய வேறொரு நிலைமையைப் பெற்றுள்ளது என்றபடியாகும். 'துணி அழிந்து போயிற்று' என்றால் துணி யென்னும்படியான காரிய நிலைமையை விட்டுக் காரணாவஸ்தையாக மாறிவிட்டது என்றபடியாகும். இந்த விதமாகவே எந்த ப்ரதீதியாலும் அடியோடு சூந்யத்வமென்பது ஸித்திக்கவேமாட்டாது.

'முயற்கொம்பு இல்லை, மலடிமகன் இல்லை, ஆகாசத்தாமரை இல்லை' என்றால் மேற்குறித்த வஸ்துக்களின் அத்யந்த சூந்யத்வம் விளங்குகின்றதே; இவ்விடங்களில் அவஸ்தாந்தராபத்தி யென்பது சொல்லமுடியாதன்றோ என்னில்; இங்கும் அடியோடு சூந்யத்வமென்பது ஒருநாளும் ஏற்படாது. முயற் கொம்பு இல்லையென்றால் முயல் இல்லையென்றும் கொம்பு இல்லையென்றும் ஏற்படுமோ? ஆகாசத்தாமரை யில்லையென்றால் ஆகாசமேயில்லை, தாமரையேயில்லையென்பதாக ஏற்படுமோ? மேற்குறித்த பொருள்களெல்லாம் உண்டென்பது மறைக்க முடியாது; ஆனால். 'முயலுக்கும் கொம்புக்கும் ஸம்பந்தமில்லை, மலடிக்கும் மகனுக்கும் ஸம்பந்தமில்லை, ஆகாசத்திற்கும் தாமரைக்கும் ஸம்பந்தமில்லை' என்று அந்தந்த வஸ்துக்களுக்குப் பரஸ்பர ஸம்பந்தமில்லை யென்பதாக ஸம்பந்தாபாவம் மாத்திரம் ஏற்படுமேயன்றி அந்த வஸ்துக்களே அடியோடு இல்லையென்பதாக ஒருபோதும் ஏற்படாது. ஆகவே ஸர்வசூந்யவாதம் ஒருவழியாலும் ஸித்திக்க வகையில்லை. (கூ)

2684 பரந்ததண்பரவையுள் நீர்தோறும்பரந்துளன் * பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவற *
கரந்தசிலிடந்தோறும் இடந்திகழ்பொருடோறும்* கரந்தெங்கும்பரந்துளன் இவையுண்டகரனே.

| | | | |
|---|---|---|---|
| பரந்த | எங்கும் வியாபித்த | இடம் | அவ்வவ்விடங்களிலே |
| தண் பரவையுள் | குளிர்ந்த கடலினுள் | திகழ் | விளங்காநின்ற |
| நீர் தோறும் | ஜலபரமாணுதோறும் | பொருள் தோறும் | ஆத்மவஸ்துக்கள்தோறும் |
| பரந்த அண்டம் இது என பரந்து உளன் | விஸ்தாரமான இவ்வண்டத்திலிருக்குமா போலே நெருக்குண்ணுமல் இருப்பவனுய் (இப்படி) | கரந்து | (வ்யாப்ய வஸ்துக்களும் அறியாதபடி) மறைந்து |
| நிலம் | பூமியிலும் | எங்கும் பரந்து உளன். | எல்லா விடங்களிலும் வியாபித்திராநின்றுன் (யாவனென்னில்;) |
| விசும்பு | மேலுலகங்களிலும் | | |
| ஒழிவு அற | ஒன்றெழியாமே | இவை உண்ட கரன் | இவ் வஸ்துக்களை ஸம்ஹார நசையிலும் தனக்குள்ளே யடக்கி தான் ஸ்திரமாயிருக்கு மெம்பெருமான். |
| கரந்த சில் இடம் தொறும் | அதி ஸூக்ஷ்மமாய் அற்பமான இடங்கள்தோறும் | | |

* * *—பரத்துவத்தைப் பேசுவதான இப்பதிகத்தில் ஸ்ரீமந் நாராயணனுக்கே பரத்வமுள்ளதாக ஸ்தாபித்தல்ஆழ்வாருடைய திருவுள்ளத்திலுள்ளது. அந்த நாராயணத் திருநாமத்தை மேற்பதிகங்களிலே ஸ்பஷ்டமாகப் பேசியருளுகிற ஆழ்வார் இந்தப் பதிகத்திலே ஒருவாறு மறைத்தே காட்டினர். கீழ் ஏழாம்பாட்டில் "சுடர்மிகு சுருதியுள் இவையுண்டசுரனே" என்றது முக்கியமாக நாராயணத் திருநாமத்தைத் திருவுள்ளம்பற்றியேயாமென்பது ஸம்பிரதாயம். சுருதி யென்றால் வேதம்; மிகுசுருதி யென்றால் வேதாந்தமாகிய உபநிஷத்து; சுடர்மிகுசுருதி யென்றால் நாராயணநுவாகம். ஆகவே நாராயணநுவாக ஸித்தனான எம்பெருமானுக்கே இப்பதிகத்தில் பரத்துவம் பேசப்பட்டதென்பது குறிக்கொள்ளத்தக்கது. ஸர்வ வ்யாபகத்வமே நாராயணநாமத்தின் தேர்ந்தபொருளாதலால் அதனை இப்பாட்டிலருளிச்செய்தார். (கo)

2685 கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை * வரனவில்திறல்வலி அளிபொறையாய்நின்ற *
பரனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொல்* நிரனிறையாயிரத்து இவைபத்தும்வீடே. (கக)

| | | | |
|---|---|---|---|
| கரம் | திடமான | பொறை | எதையும் பொறுத்துக் கொண்டிருப்பதாகிற க்ஷமை யென்ன |
| விசும்பு | ஆகாசமென்ன | | |
| எரி | அக்னியென்ன | | |
| வளி | வாயுவென்ன | ஆய் நின்ற | ஆகிய இத் தருமங்களெல்லாம் தன் வசமா யிருக்கப்பெற்ற |
| நீர் | ஜலமென்ன | | |
| நிலம் | பூமியென்ன (ஆகிய) | பரன் | ஸர்வேச்வரனுடைய |
| இவை மிசை | இவற்றின்மீதுள்ள [இவற்றிற்கு ஸ்வபாவங்களாயுள்ள] | அடி மேல் | திருவடி விஷயமாக |
| | | குருகூர் சட கோபன் சொல் | திருநகரியில் திருவவதரித்த நம்மாழ்வார் அருளிச்செய்த |
| வரன் | சிறந்த | | |
| நவில் | சப்தமென்ன | நிரல் நிறை | சப்த பூர்த்தியும் அர்த்த பூர்த்தியுங் கொண்ட |
| திறல் | (கொளுத்தும்) சக்தி யென்ன | | |
| வலி | (எதையும் தூக்கவல்ல) பலமென்ன | ஆயிரத்து | ஆயிரம் பாசுரங்களிலே |
| | | இவை பத்தும் | இப்பத்துப் பாசுரமும் |
| அளி | குளிர்ச்சியென்ன | வீடு | மோக்ஷப்ராபகம். |

* * *—இது திருநாமப்பாட்டு எனப்படும். இப்பதிகங்கற்பார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டுகிறது இது. இவை பத்தும்வீடே யென்றது இப்பத்துப் பாசுரமும் வீடாகிய மோக்ஷஸாம்ராஜ்யத்தைத் தரவல்லது என்றபடி.

இவைபத்தும் வீடு = இப்பத்துப் பாசுரங்களும் எம்பெருமானுடைய திருவடிகளின் மேலே விடப்பட்டன—ஸமர்ப்பிக்கப்பட்டன என்றும் பொருளுரைப்ப. (கக)

---

## இரண்டாந் திருவாய்மொழி—வீடுமின்முற்றவும்

எம்பெருமானுடைய நன்மையையும், ஸம்ஸாரிகள் பற்றிக்கிடக்கிற விஷயாந்தரங்களின் அற்பத்தன்மை அநித்யத்தன்மை முதலியவற்றையும் அருளிச் செய்யாநின்றுகொண்டு நீங்கள் விஷயாந்தரங்களில்நசையற்று பகவத்பக்திபண்ணுங்கோளென்று உபதேசிக்கிறார்.

2686 வீடுமின்முற்றவும் + வீடுசெய்து + உம்முயிர்
வீடுடையானிடை + வீடுசெய்ம்மினே. (க)

| | | | |
|---|---|---|---|
| முற்றவும் | (பஜந விரோதியான ஸாத்ய ஸாதனங்கள்) எல்லாவற்றையும் | உம் உயிர் | உங்களுடைய ஆத்ம வஸ்துவை |
| வீடுமின் | விட்டுவிடுங்கள் ; | வீடு உடையான் இடை | மோக்ஷ நிர்வாஹகனான ஸ்வாமியிடத்திலே |
| வீடுசெய்து | அப்படி விட்டு, | வீடு செய்ம்மின் | ஸமர்ப்பியுங்கள். |

+ + +—எம்பெருமானைத் தவிர்ந்த மற்றெல்லா விஷயங்களையும்விட்டு எம்பெருமானது திருவடிகளிலே ஆத்மாவை ஸமர்ப்பியுங்கோளென்கை. (க)

2687 மின்னின்னிலையில + மன்னுயிராக்கைகள் +
என்னுமிடத்து + இறையுன்னுமினீரே. (உ)

| | | | |
|---|---|---|---|
| உயிர் மன்னு | ஆத்மா பொருந்தி வர்த்திக்கிற | என்னும் இடத்து | என்றுசொல்லுமளவில் (இதை) |
| ஆக்கைகள் | சரீரங்கள் | நீரே | நீங்களே |
| மின்னின் | மின்னலைக்காட்டிலும் | இறை | சிறிது |
| நிலை இல | நிலையுடையனவல்ல ; | உன்னுமின் | ஆராய்ச்சி பண்ணிப் பாருங்கள். |

+ + +—நெடுநாள் வாஸநைபண்ணித் தொடர்ந்துவருகிற விஷயங்களை விடமுடியுமோ? என்ன, அவற்றின் குற்றங் குறைகளைக் காணவே நன்கு விடலாமென்கிறார் இப்பாட்டில். மின்னின்=மின்னல்போல ; மின்னலைக்காட்டிலும்.

என்னுமிடத்து இறையுன்னுமின்நீரே=இந்த விஷயத்தை நீங்களே ஆராய்ந்து பார்க்கலாமே; இதற்காக ஒரு ஆசார்யோபதேசம் வேணுமோ? தோஷம் ப்ரத்யக்ஷமாதலால் உங்களுக்கே தெரியுமே என்றவாறு.

பன்னீராயிர வுரையின்படிக்குப் பின்னடிகளின் கருத்தாவது —மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள் என்று சொல்லும்படியாதலால் நீங்கள், இறை—ஸ்வாமியை, உன்னுமின்—மநநம் பண்ணுங்கோள் என்பதாம். (உ)

2688 நீர்நுமதென்றிவை + வேர்முதல்மாய்த்து + இறை
சேர்மினுயிர்க்கு + அதனேர்நிறையில்லே. (௩)

| | | | |
|---|---|---|---|
| நீர் நுமது என்ற இவை | அஹங்கார மமகாரங்களாகிற இவற்றை | சேர்மின் | அடையுங்கள் ; |
| வேர் முதல் மாய்த்து | (ருசி வாஸநைகளாகிற) பக்க வேரோடே முதலறுத்து | உயிர்க்கு | ஆத்மாவுக்கு |
| | | அதன் நேர் | அதனோடு ஒத்த |
| இறை | ஸ்வாமியை | நிறை இல் | பூர்த்தி இல்லை. |

+ + +—விடவேண்டிய வஸ்துக்கள் பலபல கிடப்பதால் அவற்றையெல்லாம் தனித்தனியே எடுத்துரைத்தல் பெரும்பாடாகுமாதலால் விடவேண்டியவற்றைச் சுருங்க அருளிச்

செய்கிறாரிதில். நாம் நமது என்னவேண்டியிருக்க, நீர் நுமது என்றது அநுவாதரீதியாலுங் கூட அஹங்கார மமகார ஸ்பர்சம் தமக்குக்கூடாதென்ற கருத்தினாலென்க. நான் எனது என்று தம்வாக்காலே சொல்லமாட்டாரே, நாக்குவேம் என்று. (௩)

2689 இல்லதுமுள்ளதும் ✝ அல்லதவனுரு ✝
எல்லையிலந்நலம் ✝ புல்குபற்றற்றே. (௪)

| | | | |
|---|---|---|---|
| அவன் உரு | அந்த எம்பெருமானுடைய ஸ்வரூபமானது, | உள்ளதும் அல்லது | ஸத்து என்னப்படுபவனான ஜீவாத்மாவின் படியையுடையதுமன்று ; |
| | | எல்லை இல் | எல்லையில்லாத |
| இல்லதும் அல்லது | விகாராஸ்பதமாகையாலே அஸத்து என்னப்படுமதான அசேதநத்தின் படியையுடையது மன்று ; | அ நலம் | அப்படிப்பட்ட ஆநந்த ஸ்வரூபியாயிருக்கும் ; (ஆதலால்) |
| | | பற்று அற்று | ஹேய விஷய ஸங்கத்தைவிட்டு |
| | | புல்கு | (அப்பெருமானை) ஆச்ரயிக்க. |

✝✝✝ விடவேண்டிய விஷயத்தின் தோஷமிகுதியை இரண்டாம்பாட்டிலருளிச்செய்தார். பற்றவேண்டிய பகவத் விஷயத்தின் நன்மைமிகுதியை இப்பாட்டிலருளிச்செய்கிறார். அவனுரு உள்ளதுமல்லது இல்லதுமல்லது = இல்லது என்றது அழியுந்தன்மையுடையது என்றபடி. உள்ளது என்றது அழியாத பொருள் என்றபடி. அசித்தையும் சித்தையும் சொன்னபடி. பகவானுடைய ஸ்வரூபம் சித்தையும் அசித்தையுங்காட்டில் விலக்ஷணம் என்றதாயிற்று.

புல்கு என்னும் ஏவலொருமைவினைமுற்றுக்குச் சேர, விளி வருவித்துக்கொள்க. நாட்டை நோக்கிச் சொல்வதாகக் கூறுப. (௪)

2690 அற்றதுபற்றெனில் ✝ உற்றதுவீடுயிர் ✝
செற்றதுமன்னுறில் ✝ அற்றிறைபற்றே. (௫)

| | | | |
|---|---|---|---|
| பற்று அற்றது எனில் | விஷயாந்தர ஸங்கம் அற்றொழிந்தது என்னுமளவிலேயே | மன்ன உறில் | நிலைநிற்கும்படி பகவத் விஷயத்தைக் கிட்டப்பார்க்கில் |
| உயிர் | ஆத்துமா | அற்று | (ஆச்ரயிக்கும்போதே) எம்பெருமானுக்கென்றே அற்றுத்தீர்ந்து |
| வீடு உற்றது | மோக்ஷத்தைப் பெற்றானவன்; [கைவல்யமோக்ஷ முண்டாகும்;] | | |
| அது | அந்தக் கைவல்ய மோக்ஷத்தை | இறை | அந்த எம்பெருமானை |
| செற்று | வெறுத்து | பற்று | பற்றுக. |

✝✝✝ எம்பெருமானைப் பற்றுதற்கு இடையூறாகக் கைவல்ய மோக்ஷத்தில் நசையுண்டாகக் கூடியதாதலால் அந்த இடையூறுதன்னை விலக்கிக்கொள்ளுமாறு உபதேசித்தருளுகிறாரிப்பாட்டில். ஆத்மாநுபவத்தில் ருசியொழிந்து பரமாத்மாநுபவத்திலாசை கொள்கவென்கிறார். (௫)

2691 பற்றிலனீசனும் ✝ முற்றவும்நின்றனன் ✝
பற்றிலையாய் ✝ அவன்முற்றிலடங்கே. (௬)

| | | | |
|---|---|---|---|
| ஈசனும் | எம்பெருமானும் | | (ஓ லோகமே!) |
| பற்றிலன் | ஆச்ரிதர்களோடு பொருந்தியிருப்பதையே இயல்வாகவுடையவனாய் | பற்றிலை ஆய் | எம்பெருமானோடு பொருந்தியிருப்பதையே இயல்வாக உடைத்தாய் |
| முற்றவும் | தாரகம் போஷகம் போக்யம் என்னும்படியான ஸகல வஸ்துவாகவும் | அவன் | அப்பெருமானுடைய |
| | | முற்றில் | ஸகல கைங்கரியங்களிலும் |
| நின்றனன் | இராநின்றான்; | அடங்கு | அந்வயிப்பது. |

+ + + "ஆழ்வீர்! புறம்புள்ளவற்றைவிட்டுப் பரமபுருஷனைப் பற்றும்படி உபதேசிக்கிறீர்; அவன்தான் ஸர்வேச்வரனன்றோ? நமக்கு அவன் முகந்தருவனோ" என்று ஸம்ஸாரிகள் சங்கிப்பதாகக்கொண்டு, எம்பெருமானை அப்படி நினைக்கலாமோ? ஈச்வரத்வம் வந்தேறியென்னும்படி ஸௌசீல்யமே வடிவாயிருப்பவனன்றோ என்று ஸமாதாநம் பண்ணுகிறார்.

முற்றவும் நின்றனன் - ஸகலவித பந்துவுமாகவும், தாரக போஷக போக்ய வஸ்துக்களெல்லாமாகவும், அறிவு ஒழுக்கம் ஜாதி முதலியவற்றால் ஏற்றத்தாழ்வு பெரிதுமுடைய எவ்வகுப்பினர்க்கும் ஒருங்கே ஆச்ரயணீயனாகவும் நின்றான் என்க.

இப்பாசுரத்திற்கு பட்டர் அருளிச்செய்யும்படி யொன்றுண்டு; அதாவது ஈசனும் - ஷாட்குண்ய பரிபூர்ணனாய் ஸ்ரீவைகுண்ட நிலயனான எம்பெருமானும், பற்றிலன் - அங்குள்ள நித்யமுக்தர்களிடத்தும் பற்று இல்லாதவனாய், முற்றவும் நின்றனன்- இன்று ஆச்ரயிக்கிற ஸம்ஸாரிகளிடத்திலேயே பரிபூர்ணமான காதல் கொண்டிராநின்றான். பற்றிலையாய் - ஹேய விஷயங்களிலே நீ வைத்திருக்கிற பற்றை விட்டவனாகி, அவன்முற்றிலடங்கு - அவனையே எல்லாமாகப் பற்றுவாயாக என்று.

இப்பாட்டிலும் அடங்கு என்ற ஏவலொருமை வினைமுற்றுக்குச் சேர விளி வருவித்துக் கொள்க. உலகத்தை விளித்துச் சொல்லுகிறபடி. (௬)

2692 அடங்கெழில்சம்பத்து + அடங்கக்கண்டு + ஈசன்
அடங்கெழிலஃதென்று + அடங்குகவுள்ளே. (௭)

| | | | |
|---|---|---|---|
| அடங்க எழில் | முற்றிலும் அழகியதான | ஈசனஃது | நம்பெருமானுடையதான |
| சம்பத்து அடங்க | (எம்பெருமானுடைய) விபூதியை எல்லாம் | எழில் என்று | ஸம்பத்து என்று துணிந்து |
| கண்டு | பார்த்து | உள்ளே | அந்த பகவத்விபூதிக்குள்ளேயே |
| அடங்க | அதெல்லாம் | அடங்குக | சொருகிப்போவது. (௭) |

2693 உள்ளமுரைசெயல் * உள்ளவிம்மூன்றையும் *
உள்ளிக்கெடுத்து * இறையுள்ளிலொடுங்கே. (௮)

| | | | |
|---|---|---|---|
| உள்ளம் | நெஞ்சு என்றும் | உள்ளி | ஆராய்ந்துபார்த்து |
| உரை | வாக்கு என்றும் | கெடுத்து | அவற்றிற்குள்ள விஷயாந்தரப் பற்றைத் தவிர்த்து |
| செயல் | உடல் என்றும் | | |
| உள்ள | ஏற்கனவே யுள்ள | இறை உள்ளில் | எம்பெருமான்பக்கலிலே |
| இம் மூன்றையும் | இந்த மூன்று உறுப்புக்களையும் | ஒடுங்கு | அந்வயிப்பது. |

+ + + என்ன உபகரணங்களைக்கொண்டு எம்பெருமானுக்கு அடிமைசெய்வது? என்ன, புதிதாக ஸம்பாதிக்கவேண்டாமல் ஏற்கனவே அமைந்திருந்துள்ள மன மொழி மெய்கள் மூன்றையும் 'இவை எம்பெருமானுக்கு அடிமைசெய்வதற்குறுப்பாகவே கண்டவை என்று அநுஸந்தித்து, புறம்புண்டான விஷயங்களில் நின்றும் மீட்டு எம்பெருமான் பக்கலிலே ஊன்றவைப்பதென்கிறாரிப்பாட்டில்.

ஒடுங்கு என்பதைத் தன்வினையாகவும், பிறவினையில்வந்த தன்வினையாகவுங்கொள்வர். நீங்கள் ஒடுங்கவேணுமென்றும், உங்கள் உறுப்புக்களை ஒடுங்கச் செய்யவேணுமென்றும் முறையே பொருள் காண்க. ஒடுங்குதல்—அந்வயித்தல். (௮)

2694 ஒடுங்கவவன்கண் * ஒடுங்கலுமெல்லாம் *
விடும்பின்னுமாக்கை * விடும்பொழுதெண்ணே. (௯)

| | | | |
|---|---|---|---|
| அவன்கண் | அந்த எம்பெருமான் பக்கலிலே | விடும் | விட்டு நீங்கும்; |
| ஒடுங்க | அந்வயிக்கவே | பின்னும் | அதற்குப்பிறகு |
| எல்லாம் ஒடுங்கலும் | (ஆத்மாவை) ஒடுங்கப்பண்ணுவதான அவித்யை முதலானவை யெல்லாம் | ஆக்கை விடும் பொழுது | சரீரம் தொலையும் நாளை |
| | | எண் | எதிர்பார்த்திருப்பது |

* * * எம்பெருமானோடு நமக்குள்ள உறவின் உணர்ச்சி யுண்டாகவே கூசாமல் அணுகலாமென்றார் ஏழாம் பாட்டில். அவன் தன்விஷயத்தில் உபயோகப்படுத்துதற்காகவே தந்தருளின உறுப்புக்களை அவன் விஷயத்திலேயே உபயோகப்படுத்து மத்தனையே வேண்டுவது என்றார் எட்டாம் பாட்டில். இவற்றைக் கேட்ட உலகர்கள் 'ஆழ்வீர்! நாங்கள் ஸ்வாதந்திரியம் பாராட்டி அதனால் பகவத்விஷயத்தில் ஊற்றமற்றிருக்கின்றோமல்லோம்; எம்பெருமானுடைய போக்யதையை அறியாமலிக்கிறோமல்லோம்; அப்ராப்தங்களான விஷயாந்தரங்களை விட்டு ப்ராப்தனான அவனையே பஜிக்கவேணுமென்னும் விருப்பம் மிகவுடையோமாயினும் பஜிக்கவொட்டாத விரோதிகள் கனக்க உண்டாயிருப்பதனாலன்றோ நாங்கள் பஜியாமலிருக்கிறோம்' என்ன' நீங்கள் அவனைக் கிட்டவே அந்த விரோதிகளெல்லாம் உடனே விட்டு நீங்குமென்கிறாரிப்பாட்டில். (௯)

2695 எண்பெருக்கந்நலத்து * ஒண்பொருளீறில *
வண்புகழ்நாரணன் * திண்கழல்சேரே. (௧0)

| | | | |
|---|---|---|---|
| எண் பெருக்கு | எண்ணிக்கை பெருகிக்கொண்டே யிருக்கும்படி அளவிறந்த | ஈறு இல | முடிவில்லாத |
| | | வண் புகழ் | திருக்கல்யாண குணங்களையும் உடையனான |
| அ நலத்து | அப்படிப்பட்ட ஞானம் முதலிய குணங்களையுடைய | நாரணன் | நாராயணனுடைய |
| ஒண் பொருள் | சிறந்த பொருளாகிய ஜீவாத்மவர்க்கத்தையும் | திண் கழல் | (அடியாரை ஒருநாளும்) கைவிடகில்லாத திருவடிகளை |
| | | சேர் | ஆச்ரயிப்பது. |

* * *—கீழே ஆழ்வார் உபதேசித்தபடிகளை யெல்லாங்கேட்ட ஸம்ஸாரிகள் "ஆழ்வீர்! அப்படியே செய்வோம்; எம்பெருமானைப் பஜிப்போம்; பஜநத்திற்கு ஆலம்பனமாக ஒரு மந்த்ரம் வேணுமே, அது என்ன மந்த்ரம்?" என்ன, அந்த மந்த்ரம் இன்னதென்று தெரிவித்தருளுகிறாரிப்பாட்டில். நாராயணத் திருநாமத்தின் பொருளை அநுஸந்தானஞ் செய்துகொண்டே அத்திருநாமத்தை வெளியிட்டருளுகின்றார் காண்மின்.

இப்பாசுரம் திருமந்த்ரார்த்தம் என்னுமிடம் ஆழ்வானுடைய இதிஹாஸத்தினால் நன்கு விளங்கும்; அது வருமாறு:— அழகியமணவாளனுடைய அநுக்ரஹத்தினால் ஆழ்வானுக்கு இரண்டு திருக்குமாரர்கள் திருவவதரிக்க, ஆழ்வான் அக்குமாரர்கட்கு நாமகரணம் முதலியன் செய்வித்தற்கு உடையவர் கடவரென்று எண்ணித் தாம் ஒன்றுஞ்செய்யாதிருக்க, நம்பெருமாள் திருவருளால் ஆழ்வானுக்கு உபயகுமாரர்கள் உதித்ததாகப் பெருமகிழ்ச்சி கொண்டிருந்த ஸ்ரீ பாஷ்யகாரர் அக்குழந்தைகள் பிறந்த பதினோரா நாளிலே சிஷ்யவர்க்கத்துடன் ஆழ்வான் திருமாளிகைக்கெழுந்தருளித் தமது பிரதான சிஷ்யர்களில் ஒருவரான எம்பாரை நோக்கிக் 'குழந்தைகளை எடுத்துக்கொண்டு வாரும்' என்ன, அவர் அங்ஙனமே பிரபன்ன குலக்கொழுந்தான அக்குழந்தைகளை யெடுத்துவரும்போது த்ருஷ்டிதோஷாதிகள் தங்காதபடி ரக்ஷையாக த்வயமென்னும் மந்த்ரரத்னத்தை அநுஸந்தித்து வாழ்த்திக்கொண்டே வந்து

குழந்தைகளை எம்பெருமானார்க்குக் காட்டினர். அவர் மிக்க களிப்புடனே ஆனந்தக் கண்ணீர் துளிக்கத் தம் திருக்கண்களால் குளிரக் கடாக்ஷிக்கும்போது அத் தெய்விக சிசுக்களின் தேஜோவிசேஷத்தைக் கண்டு வியப்புக் கொண்டு 'எம்பாரே! இக்குழந்தைகளிடம் த்வயம் பரிமளிக்கின்றதே, இங்ஙனம் ஆகுமாறு என் செய்தீர்?' என்று வினவ, எம்பார், 'குழந்தைகட்குக் காப்பாக த்வயாநுஸந்தானஞ் செய்துகொண்டு வந்தேன்' என்று சொல்ல, உடையவர் அப்படி எம்பார் காப்பிட்டதற்கு உகந்து அவரைப்பார்த்து 'இக்குழந்தைகள் உய்யும் வகையை நாடிச் செய்தற்கு முற்பட்டீராதலால் இவர்கட்கு நீரே ஆசார்யராகக் கடவீர்' என்று நியமித்துவிட்டார். இக்குமாரரிருவர்க்கும் கூரத்தாழ்வான் திருவாய்மொழிப் பொருள்சொல்லி வரும்போது* எணபெருக்கந்நலத்து இத்யாதியான இந்தப் பாசுரம் வந்தவளவிலே இது திருமந்திரார்த்தத்தை விவரிக்கிறதாதலாலும் மந்த்ரார்த்தம் ஆசார்யரிடத்திலேயே கேட்டறியவேண்டியதாதலாலும் அதனை அவர்கட்குச் சொல்லாது நிறுத்தி 'இதனை உங்கள் ஆசார்யர் பக்கலிலே கேட்டுக்கொள்ளுங்கள்' என்றுசொல்ல, அதனை விரைவில் அறிந்துகொள்ளவேணுமென்னும் அவாவினால் உடனே அவர்கள் எழுந்து தங்கள் ஆசார்யரான எம்பார் எழுந்தருளியிருக்குமிடத்தைக் குறித்துப் போகப்புக்கவளவில், ஆழ்வான் யாக்கைநிலையாமையைத் திருவுள்ளத்திற்கொண்டு அவர்களை யழைத்து, 'இன்னபோது இன்னாரிருப்பார் இன்னார் போவாரென்று தெரியாது, ஆதலால் இருந்து கேளுங்கள்' என்று திருமந்திரத்தைச் சொல்லி இப்பாட்டின் பொருளையும் விவரித்து, 'இப்பாசுரத்தைத் திருமந்திரத்தின் அர்த்தமாக நினைத்திருங்கள்' என்று பணித்தருளினார்—என்பதாம்.

ஈறிலவான ஆத்மாக்களையும் ஈறிலவான கல்யாண குணங்களையு முடையனுகையாயிற்று நாராயணனாகையாவது. அப்படிப்பட்ட நாராயணனுடைய, திண்கழல்சேர் = அடியவர்களை ஒருநாளுங் கைவிடமாட்டாத திருவடிகளைச் சேருங்கள் என்றவாறு. இப்பாட்டிலும் விளி வருவித்துக்கொள்வது. (க0)

°696 சேர்த்தடத் தென்குரு கூர்ச்சடகோபன்சொல் *
சீர்த்தொடையாயிரத்து * ஓர்த்தவிப்பத்தே. (கக)

| | | | |
|---|---|---|---|
| சேர் தடம் | செறிந்த தடாகங்களையுடைய | சீர் தொடை | கவியுறுப்புக்க ளெல்லாம் நன்கு அமையப்பெற்ற |
| தென் குருகூர் | திருநகரியில் அவதரித்த | ஆயிரத்து | ஆயிரத்தினுள்ளே |
| | | இ பத்து | இப்பத்துப் பாசுரம் |
| சடகோபன் சொல் | நம்மாழ்வார் அருளிச்செய்த | ஓர்த்த | ஆராய்ந்து சொல்லப்பட்டது. |

* * *—இத்திருவாய்மொழி வாய்வந்தபடி சொல்லிற்றன்று, சேதநருடைய ஹிதத்துக்கீடாக ஆராய்ந்து சொல்லப்பட்டதென்று நிகமனஞ் செய்கிற பாசுரம் இது.

சேர்த்தடத் தென்குருகூர்ச்சடகோபன்சொல் = இங்கு ஈடுமுப்பத்தாறாயிரப்படியில் சேர்த்தடம் என்கிற வித்தைச் சேர்தடமாக்கி" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இலக்கணப்படிக்குச் சேர்தடமென்று இயல்பாகவே யிருக்கவேண்டுமல்லது சேர்த்தடமென்று தகரவொற்று மிகவேண்டிய அவசியமில்லை; ஆனாலும், மற்ற மூன்றடிகளிலும் இதே ஸ்தானத்தில் வல்லொற்றுமிக்கிருப்பதனால் அதற்கிணங்க முதலடியிலும் மிக்கது: சொற்செறிவு அங்ஙனமிருந்தாலும் பொருட்சேர்த்திக்குஏற்பத் தகரவொற்றுஇன்றியே கொள்க என்றபடி.

பாட்டின் முதலிலுள்ள சேர் என்பதை வினைமுற்றாகவுங் கொள்ளலாம்; இப்பத்தே சேர்—இப்பத்துப் பாட்டையும் சேருங்கள், (அதாவது) அநுஸந்தானஞ் செய்யுங்கள் என்றபடி. முதற்பாட்டில் வீடுமின் என்ற பன்மைக்குச் சேர இங்கும் பன்மையாகவே பொருள் கொள்ள வுரியது. (கக)

# முதற்பத்து மூன்றாந்திருவாய்மொழி—பத்துடையடியவர்

முதற்றிருவாய்மொழியில் எம்பெருமானுடைய பரத்துவத்தைப் பேசினார்; அங்ஙனம் பரனை அப்பெருமானைப் பஜியுங்கோளென்று இரண்டாந் திருவாய்மொழியில் உபதேசமாக அருளிச்செய்தார். அங்ஙனம் உபதேசித்த ஆழ்வாரை நோக்கி ஸம்ஸாரிகள் "ஸ்வாமின்! இருகை முடவனை நோக்கி 'ஆனையேறு' 'ஆனையேறு' என்றால் அவனால் ஏறப்போமோ? அப்படியே, ஸர்வேச்வரனைப் "நாகணைமிசை நம்பரர் செல்வர் பெரியர்" என்னும்படி மிகப் பெரியனாயிருக்கின்ற அவனை நீசரான ஸம்ஸாரிகளாலே பற்றப்போமோ?" என்ன, அவ்வானை தானே அவ்விருகை முடவனுக்கும் ஏறலாம்படி படிந்து கொடுக்குங்கால் ஏறத் தட்டில்லை யன்றே; அப்படியே ஸம்ஸாரிகளுக்குப் பஜிக்கலாம்படி அவன் தன்னைத் தாழவிட்டு எளியனுமாகில் பஜிக்கத் தட்டில்லையே யென்று அவனது ஸௌலப்ய குணத்தைப் பேசுகிறார் இதில்.

எம்பெருமானுடைய பரத்வத்தை எவ்வளவும் பேசலாம்; எளிமையைப் பேசுவது அரிது; 'அப்படிப்பட்ட பெரியவன் இப்படித் தாழ நின்றானே!' என்று* உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்து உடம்பெலாங் கண்ணநீர் சோரப் பேசவேண்டிய விஷயமாகையாலே தெளிந்திருந்து பேசப் போகாது. ஆழ்வாரை ஆறுமாதம் மோஹிக்கப்பண்ணிற்று இது. (க)

**2697** பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன்* மலர்மகள்விரும்பும் நமரும்பெறலடிகள்*
மத்துறுகடைவெண்ணெய்களவினில் உரவிடையாப்புண்டு*
எத்திறமுரலினோடு இணைந்திருந்தேங்கியவெளிவே. (க)

| | | | |
|---|---|---|---|
| பத்து உடை | பக்தியையுடைய | மத்து உறு கடை வெண்ணெய் களவினில் | (யசோதைப்பிராட்டி) மத்தையுறுத்திக் கடைகின்ற வெண்ணெயினுடைய களவில் |
| அடியவர்க்கு | அடியார்களுக்கு | உரம் இடை | மார்வினிடையிலே |
| எளியவன் | ஸுலபனாயும் | ஆப்புண்டு | கட்டுண்டு |
| பிறர்களுக்கு | மற்றையோர்களுக்கு | உரலினோடு இணைந்திருந்து | உரலோடு பொருந்தியிருந்து |
| அரிய | துர்லபனாயுமிருக்கிற | ஏங்கிய | ஏங்கியிருந்த |
| வித்தகன் | ஆச்சரியபூதனும், | எளிவு | எளிமைக்குணம் |
| மலர் மகள் விரும்பும் | பெரியபிராட்டியார் விரும்புதற் கிடானவனும் | எத்திறம் | எப்படிப்பட்டது! |
| பெறல் அரு | பெறுதற்கு அரியனுமான | | |
| நம் அடிகள் | நமது ஸ்வாமி | | |

* * *—எம்பெருமானுடைய ஸௌலப்யம் நன்கு விளங்கினது அவதாரங்களிலாதலால் அப்படிப்பட்ட அவதாரங்களுள்ளும் நீர்மைக்கு எல்லையான க்ருஷ்ணாவதாரத்திலே யிழிந்து, அதிலேயும் பரத்வத்தோடு ஸமமாகச் சொல்லக்கூடிய நிலைகளிற் செல்லாதே, வெண்ணெய் களவுகண்டு கட்டுண்டு வருந்தி யேங்கி நின்ற நிலையிலே யகப்பட்டு இப்படியும் ஒரு எளிமைக்குணமுண்டோ வென்று ஈடுபடுகிறார்.

2698 எளிவருமியல்வினன் நிலைவரம்பிலபலபிறப்பாய் *
ஒளிவருமுழுநலம் முதலிலகேடிலவீடாம் *
தெளிதருநிலைமையது ஒழிவிலன்முழுவதுமிறையோன் *
அளிவருமருளினோடு அகத்தனன்புறத்தனனமைந்தே. (உ)

| | | | |
|---|---|---|---|
| நிலை வரம்பு இல பல பிறப்பு ஆய் | ஒரு நிலையும் ஒரு நியதியும் இல்லாத பலவகைப்பட்ட பிறப்பையுடையனாய் | முதல் இல கேடு இல முழு நலம் | முதலுமில்லாமல் முடிவுமில்லாமலிருக்கின்ற கல்யாண குணங்களெல்லாம் |

| | |
|---|---|
| ஒளி வரும் | ஒளிமல்கும்படியான |
| எளிவரும் இயல்வினன் | ஸௌலப்யத்தையே இயல்வாக வுடையனாய் |
| வீடு ஆம் தெளி தரு நிலைமை அது முழுவதும் | மோக்ஷமாகிற தெளிவைத் தருதலாகிற அந்த நிலைமையை முழுவதும் |
| ஒழிவு இலன் | எப்போதும் உடையவனான |
| இறையோன் | ஸ்வாமியானவன் |
| அளிவரும் அருளினோடு அமைந்து | அளிந்த கிருபையோடே கூடி |
| அகத்தனன் | (அடியவர்க்கு) அந்தரங்கனாய் |
| புறத்தனன் | (மற்றையோர்க்கு) அணுகத்தகாதவனாயிருப்பன். |

பலபிறப்பாயொளிவரு முழுநலம்=பிறக்கப் பிறக்க நாம் புகரழிந்து வாரா நின்றோம்; அங்ஙனல்லாமல் எம்பெருமான் பிறக்கப் பிறக்கக் கல்யாணகுணங்கள் மிகவும் புகர்பெற்று விளங்குமாயிற்று. "ஸ உ ஶ்ரேயாந் பவதி ஜாயமாநः" என்று வேதமும் ஓதிற்று. [ஸः (பவாந்) ஜாயமாநஸ்ஸந் ஶ்ரேயாநேவ பவதி] என்றபடி. கருமமடியாக பிறந்தாலன்றோ பிறக்கப் பிறக்கப் புகர் அழிவது; அநுக்ரஹமடியாக வருகிற அவதாரமாதலால் ஔஜ்ஜ்வல்யம் மிக்கிருக்குமென்க. தெளிவு என்னுஞ்சொல் தெளி என்று குறைந்து கிடக்கின்றது. பரமபதத்தைத் "தெளிவிசும்பு" என்றே வழங்குவர். தெளிவே வடிவெடுத்திருக்குமிடமாதல் அறிக. "அவன் இங்கே வந்து அவதரிக்கிலும் சோக மோஹங்களைப் பண்ணும் இவ்விடம்; இவன் அங்கே செல்லிலும் தெளிவைப்பண்ணும் அவ்விடம்" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி உணரத்தக்கது. இந்த லீலாவிபூதி கலக்கத்திற்கே ஏற்பட்டதுபோல அந்த நித்யவிபூதி தெளிவுக்கே ஏற்பட்டதென்றவாறு. அருளுக்கு அளிவருதலாவது நிர்ஹேதுகத்வமாம். பாண்டவர்போல்வார்க்குக் கையாளாயிருக்கையும் துரியோதனாதியர்க்கு ஆளிட்டுவிடுகையும் ஈற்றடிக்கு விஷயம். (௨)

2699 அமைவுடையறநெறி முழுவதுமுயர்வறவுயர்ந்து *
அமைவுடைமுதல்கெடல் ஒடிவிடையறநிலமதுவாம் *
அமைவுடையமரரும் யாவையும்யாவரும்தானும் *
அமைவுடைநாரணன்மாயையை அறிபவர்யாரே. (௩)

| | |
|---|---|
| அமை உடை | நல்ல பலபரிபாகத்தையுடைத்தான |
| அறம் நெறி முழுவதும் | தருமமார்க்கம் எல்லாவற்றாலும் |
| உயர்வு அற உயர்ந்து | இதற்குமேல் உயர்த்தியில்லையென்னும்படியாக மிகவுமுயர்ந்தவர்களாகி; |
| அமைவு உடை | (ஆச்சரியப்படத்தகுந்த) அமைதியையுடைய |
| முதல் கெடல் இடை முடிவு | ஸ்ருஷ்டியென்ன ஸம்ஹாரமென்ன அவாந்தர ஸம்ஹாரமென்ன (ஆகிய இவை) |
| அற | மிகவும் |
| நிலம் அது ஆம் | கைவந்திருக்கப்பெறுவதாகிற |
| அமைவு உடை | சதிரையுடையரான |
| அமரரும் | பிரமன் முதலிய தேவர்களும் |
| யாவையும் | எல்லா அசேதனங்களும் |
| யாவரும் | எல்லாச்சேதனர்களும் |
| தான் ஆம் | தானேயாம்படியான |
| அமைவு உடை | பொருத்தம் பொருந்திய |
| நாரணன் | நாராயணனுடைய |
| மாயையை | அவதார ரஹஸ்யத்தை |
| யாரே அறிபவர் | ஆர்தாம் அறியவல்லார்? [ஆருமில்லை.] |

முதலடியில் அமைவுடை யென்று தொடங்கி மூன்றாமடியில் அமைவுடை என்னுமளவும் அமரர்க்கு (விசேஷணம்) அடைமொழி. அமரரும் யாவையும் யாவரும் தானுமமைவுடை நாரணன்=கீழ்ச்சொன்ன கடவுளர்களென்ன, ஸகல அசேதநப்பொருள்களென்ன, மற்றுள்ள ஸகல சேதனப்பொருள்களென்ன—ஆகிய எல்லாம் தான் என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படியான அமைதியையுடையனாய், இதுபற்றியே நாராயணனென்னுந் திருநாமம் படைத்தவனான எம்பெருமானுடைய என்றபடி. யாரே அறிபவர்?=நித்யஸூரிகள் பரத்வாநுபவத்திலே போதுபோக்குகையாலே இதனை அறியார்கள்; ஸம்ஸாரிகள் உண்டியே உடையே உகந்தோடுமவர்களாகையாலே அறியார்கள்; மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களோ மோஹித்துக்கிடப்பர்கள்; ஆகையாலே ஒருவருமறியார்கள். (௩)

மிதற்கும் என்ன ஸம்பந்தம்? ஆச்ரிதர்களின் ஸம்பந்தம்பெற்ற வஸ்துவே உனக்குத் தாரகமாதலால் வெண்ணெயுண்டாயத்தனை; இதுதான் காரணம்; வேறு காரணம் பரிஹாஸ்யம் என்று சொல்ல, உடனே எம்பெருமான் 'ஆழ்வீர்! ஆச்ரிதர்களின் வஸ்துவே நமக்குத் தாரகமென்பதை நீர் நன்கு அறிந்திருக்கிறீரன்றோ? உம்முடைய உடலும் எனக்கு அந்த வெண்ணெய்போன்றதே காணும்; இதுவே எனக்குத் தாரகங்காணும்; ஆனபின்பு நீர் உம்மைக் கொண்டு அகல்வீராகில், திருவாய்ப்பாடியில் வெண்ணெயூண் விலக்கினார் புக்க லோகம் புகுவீரத்தனை; இனி நம்மை அனுகப்பாரும்' என்று மடிபிடிக்க, மேலே ஒன்றும் வாய்திறக்க வழியில்லாத ஆழ்வார் எம்பெருமானது கருத்தைத் தாம் அறிந்தமை தோற்றவும் மேலே காட்டின ஸம்வாதம் வெளிப்படவும் பாங்காக இப்பாசுர மருளிச்செய்கிற அழகு பாரீர். இவ்வளவு ஆழ்ந்த கருத்தை அழகாகக் கண்டுபிடித்து வியாக்கியானங்கள் அமைத்தருளின பூருவாசாரியர்களின் மதிக்கு மண் விண்ணெல்லாங்கூடியும் விலைபோருமோ? 'மருந்தோ' என்ற ஓகாரம் - அன்று என்ற பொருளைத்தரும். மாயோனே! என்றது - ஆச்ரிதரின் ஸம்பந்தம்பெற்ற பொருளாலன்றி வேறொன்றால் தரிப்புறாதபடியான வ்யாமோஹத்தாலே வெண்ணெயும் நெய்யு முண்டாய் என்ற குறிப்பு, அப்படிப்பட்ட வ்யாமோஹத்தினால் தான் உம்மையும் விரும்புகின்றேனென்று எம்பெருமானுரைத்தது உள்ளுறை. (அ)

2727 மாயோம்தீயவலவலைப் பெருமாவஞ்சப்பேய்வீய *
தூயகுழவியாய்விடப்பாலமுதா அமுதுசெய்திட்ட
மாயன் * வானோர்தனித்தலைவன் மலராள்மைந்தன் எவ்வுயிர்க்கும்
தாயோன் * தம்மானென்னம்மான் அம்மாமூர்த்தியைச்சார்ந்தே. * (௯)

| | |
|---|---|
| தீய | கொடிய நினைவை யுடையவளாய் |
| அலவலை | பஹுஜல்பிதங்களை யுடையவளாய் |
| பெரு மா வஞ்சம் | மிகப் பெரிய வஞ்சகையான |
| பேய் | பூதனையானவள் |
| வீய | முடியும்படி |
| தூய குழவி ஆய் | பசுங்குழந்தையாகி |
| விடம் பால் அமுது ஆ | (அந்தப் பூதனையின்) விஷங் கலந்த பால் அமிருதமாம்படி |
| அமுது செய்திட்ட | அமுது செய்த |
| மாயன் | ஆச்சரியஸ்வபாவனும் |
| வானோர் தனி தலைவன் | நித்ய ஸூரிகளுக்கு அத்விதீய நாதனும் |
| மலராள் மைந்தன் | திருமகள் கொழுநனும் |
| எவ் உயிர்க்கும் தாயோன் | எல்லாவுயிர்களுக்கும் தாய் போன்றவனும் |
| தம்மான் | தனக்குந்தானே ஸ்வாமியும் |
| என் அம்மான் | எனக்கு ஸ்வாமியும் |
| அ மா மூர்த்தியை | அப்படிப்பட்ட மேலான திவ்ய மங்கள விக்ரஹத்தை யுடையனுமான பெருமானை |
| சார்ந்து | கிட்டி |
| மாயோம் | இருவரும் மாயாது வாழக்கடவோம். |

* * *—கீழ்ப்பாட்டில் எம்பெருமான் வெண்ணெயின் ப்ரஸ்தாவமெடுத்து ஆழ்வார் வாயை மூடுவித்தானே; அதற்குமேல் ஆழ்வார்—'எம்பெருமானே! திருவாய்ப்பாடியில் வெண்ணெய் உனக்குப் பரமபோக்யமென்பது மெய்யே; ஒப்பற்ற ப்ரீதியுடைய யசோதைப்பிராட்டி முதலானோருடைய வெண்ணெயாகையாலே அஃது உனக்கு அமுதமாயிருக்கும்; பாபியான என்னுடைய ஸம்பந்தம் உனக்கு விஷமாயிருக்குமே' என்றார்; அது கேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! அப்படி விஷமானாலும் நமக்குக் குறையில்லை காணும்; பூதனையின் கதை உமக்குத் தெரியாமை யில்லையே; அவளுடைய விஷமும் நமக்கு அமுதமாயிற்றன்றோ; அதுபோலவே உம்மால் விஷமென்று நினைக்கப்படுவதும் எனக்கு அமுதமேயாகத் தடையில்லை' என்று சொல்லிக்கொண்டு ஆழ்வாரது திருமேனியை மேல்விழுந்து கைக்கொள்ள, இனி அகல்வேனல்லேனென்று பொருந்துகிறாரிதில். பாட்டின் தலையிலுள்ள மாயோம் என்பது வினைமுற்று; "அம்மாமூர்த்தியை சார்ந்துமாயோம்" என்று அன்வயம். பிரிகை யென்றும் மாய்கை யென்றும் பரியாயம். இனிமேல் ஒருகாலும் பிரிந்து தொலையக்கடவோமல்லோம் என்கிறார். (௯)

2728 சார்ந்தவிருவல்வினைகளும்சரித்து மாயப்பற்றறுத்து *
தீர்ந்துதன்பால்மனம்வைக்கத்திருத்தி வீடுதிருத்துவான் *
ஆர்ந்தஞானச்சுடராகி அகலம்கீழ்மேலளவிறந்து *
நேர்ந்தவுருவாயருவாகும் இவற்றினுயிராம்நெடுமாலே. * (க௦)

| | |
|---|---|
| சார்ந்த இரு வல் வினைகளும் சரித்து | சேர்ந்திருக்கிற (புண்யபாப ரூபங்களான) இருவகைப்பட்ட வல்வினைகளையும் தொலைத்து |
| மாயம் பற்று அறுத்து | அஜ்ஞாந காரியமான விஷய ஸங்கத்தையும் தவிர்ந்து |
| தன்பால் தீர்ந்து மனம் வைக்க திருத்தி | தன்னிடத்திலே உறுதிகொண்டு நெஞ்சைப் பொருந்த வைக்கும்படி என்னைத் திருத்தி |
| வீடு திருத்துவான் | (எனக்குத் தருவதான) மோக்ஷஸ்தானத்திலும் சில திருத்தங்களைச்செய்து ஒழுங்குபடுத்துவதாக ஆரம்பித்துவிட்டான்; |
| | (அவன் யாவனென்னில்;) |
| ஆர்ந்த ஞானம் சுடர் ஆகி | பரிபூர்ணமான (ஸ்வயம்ப்ரகாச) ஞான வொளியையுடையனாய் |
| அகலம் கீழ் மேல் அளவு இறந்து | சுற்றும் கீழும் மேலும் எல்லையற்று எங்கும் வியாபித்தவனாய் |
| நேர்ந்த உரு ஆய் அரு ஆகும் இவற்றின் உயிர் ஆம் நெடு மால் | மிகவும் நுட்பமான அசித்தும் சித்துமாகிற இந்தப் பொருள்களுக்கு அந்தர்யாமியாகி நிற்கிற வ்யாமோஹமே வடிவான எம்பெருமான். |

* * *—கீழ்ப்பாட்டைத் திருச்செவி சார்த்தின எம்பெருமான் "அம் மாமூர்த்தியைச் சார்ந்து மாயோம்;" என்ற வுறுதியையறிந்து திருவுள்ளம் பூரித்து, எப்போதும் விட்டுப் பிரியகில்லாத திருநாட்டிலே இவ்வாழ்வாரைக் கொண்டுபோய் நித்யாநுபவம் பண்ணக்கருதி, ஒரு புதுமையுஞ் செய்யவேண்டாதபடியான பரமபதத்தையும் தமக்காக அவன் கோடிக்கப்புக்கதைக் கண்டு ஈதென்ன வ்யாமோஹமோ! என்று ஈடுபடுகிறாரிதில். (க௦)

2729 மாலேமாயப்பெருமானே மாமாயனேயென்றென்று *
மாலேயேறிமாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன் *
பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவுமாயிரத்தின்
பாலேபட்ட * இவைபத்தும்வல்லார்க்கு இல்லைபரிவதே. * (கக)

| | |
|---|---|
| மாலே | பெரியோனே! |
| மாயம் பெருமானே | ஆச்சரிய குணநிதியே |
| மா மாயனே | மஹத்தான ஆச்சரிய சேஷ்டிதங்களை யுடையவனே! |
| என்று என்று | என்று இங்ஙனம் பலவிதங்களான திருநாமங்களைச் சொல்லி |
| மாலே ஏறி | பித்தம் பிடித்து |
| மால் அருளால் மன்னு | ஸர்வேச்வரனது க்ருபையினால் பொருந்தப்பெற்ற |
| குருகூர் சடகோபன் | திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் (அருளிச்செய்ததான) |
| பால் ஏய் தமிழர் | பாலுக்குச் சமானமான இனிமையுள்ள தமிழில் வல்லவர்களென்ன |
| இசைகாரர் | இசையறிந்து பாடவல்லவர்களென்ன |
| பத்தர் | பக்திமான்களென்ன ஆகிய இவர்களெல்லாரும் |
| பரவும் | கொண்டாடும்படியமைந்த |
| ஆயிரத்தின் பால் | ஆயிரம் பாட்டினுள் |
| பட்ட | தோன்றின |
| இவை பத்தும் | இந்தப்பத்துப்பாட்டையும் |
| வல்லார்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| பரிவது இல்லை | யாதொரு துக்கமும் உண்டாகமாட்டாது. |

* * *—இத் திருவாய்மொழியைக் கற்பார்க்கு ஒருவகைத் துன்பமும் நேரிடாதென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். எம்பெருமான் ஸௌசீல்யாதிக்கவர, 'நான் அயோக்யன்' என்று அகன்று தாம் பட்ட வருத்தங்கள் இத் திருவாய்மொழி கற்பார்க்கு உண்டாகமாட்டாவென்றவாறு. ஆயிரத்தின்பாலேபட்ட இவைபத்தும்=திருவாய்மொழி யாயிரமும் மிகச்சிறந்ததாகவே யிருக்கச்செய்தேயும் இந்தத் திருவாய்மொழியையும் மற்றவற்றையும் பார்க்குமிடத்து, மற்றவை கடல்போலவும் இது முத்துப்போலவு மிருக்கும் என்ற கருத்து இதில் தொனிக்கும். 'கடலில் முத்துப்பட்டது' என்னுமா போலேயன்றோ இங்குப் பிரயோகமிருப்பது. (கக)

# முதற்பத்து ஆறாந் திருவாய்மொழி—பரிவதில்ஈசனை.

நாம் இட்டது கொண்டு த்ருப்தி பெறுமவனான எம்பெருமான் ஆராதனைக்கு எளியன் என்பதை யருளிச்செய்கிறார் இத்திருவாய்மொழியில்.

2730 பரிவதில்ஈசனைப்பாடி * விரிவதுமேவலுறுவீர் *
பிரிவகையின்றிநன்னீர்தூய் * புரிவதுவும்புகைபூவே. * (க)

| | | | |
|---|---|---|---|
| பரிவது இல் ஈசனை பாடி | துன்பமற்ற ஸர்வேச்வரனைத் துதி செய்து | பிரி வகை இன்றி | பிரயோஜனத்தைக் கொண்டு விலகிப்போதலின்றியே |
| | | நல் நீர் தூய் | நல்ல தீர்த்தத்தை ஸமர்ப்பித்து |
| விரிவது மேவல் உறுவீர் | ஸ்வரூபவிகாஸத்தைப் பெறவேணுமென்கிற உறுதியுடையவர்களே!, | புரிவதுவும் | (அதன்பிறகு) ஸமர்ப்பிப்பதும் |
| | | புகை பூவே | ஏதேனுமொரு தூபமும் ஏதேனுமொரு புஷ்பமுமேயாகும். |

* * *—எம்பெருமானை ஆராதிக்கு முபகரணங்களின் ஸௌகர்யம் இப் பாசுரத்தில் அருளிச்செய்யப்படுகிறது. இப் பாசுரத்தை பட்டர் உபந்யஸிக்கும்போது "புரிவதுவும் புகை பூவே" என்ற சப்தஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளம்பற்றி 'இவ்விடத்தில் அகில் புகையென்றாவது கருமுகைப்பூ என்றாவது சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும் ஏதேனும் ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; † செதுகையிட்டுப் புகைக்கலாம், கண்டகாலிப்பூவுஞ் சூட்டலாம்' என்று உபந்யஸித்தாராம். அதை நஞ்சீயர் கேட்டு "ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச்செய்யலாமோ? என்று கேட்டார்; அதற்கு பட்டர் அருளிச்செய்த ச்லோக்தி:—"சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுத்தபடியன்று; அடியார்கள் அப்பூவைப் பறித்தால் கையில் முள் பாயுமே என்று பக்தர்கள் பக்கலில் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததேயன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லை" என்றாம். "புரிவதுமாவது பூவே" என்று பாடாந்தரமிருப்பதாகப் பன்னீராயிரப்படி யுரைகாரர் கூறியுள்ளார். (க)

2731 மதுவார்தண்ணந்துழாயான் * முதுவேதமுதல்வனுக்கு *
எதுவேதென்பணி யென்னாததுவே ஆட்செய்யுமீடே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அம் மது வார் தண் துழாயான் | அழகிய தேன் ஒழுகுகின்ற குளிர்ந்த திருத்துழாய் மாலையை அணிந்துள்ளவனும் | எது பணி | (தகுதியாகச் செய்யக்கூடிய) கைங்கர்யம் எது ? |
| முது வேதம் முதல்வனுக்கு | பழமையான வேதங்களால் முழுமுதற் கடவுளாகச் சொல்லப்பட்டவனுமான பெருமானுக்கு | என் பணி ஏது | (அதிலும்) நான் செய்யக்கூடிய கைங்கரியம் ஏது ? |
| | | என்னாததுவே | என்று சிந்தியாமலிருப்பதே |
| | | ஆள் செய்யும் ஈடு | அடிமைசெய்தற்கொப்பாகும். |

* * *—எம்பெருமானுக்கு இடுவதற்கு இன்னபொருள்தானென்கிற நியதியில்லை யென்றார் கீழ்ப்பாட்டில்; பொருள்நியதியில்லாததுபோலவே அதிகாரி நியதியுமில்லையென்பது இப் பாசுரம். எது பணி? என் பணி ஏது? என்னாததுவே ஆட்செய்யுமீடு=நித்ய ஸூரிகளன்றோ அவனுக்குத் தகுதியாக அடிமை செய்யவல்லவர்கள்; அற்பனான நான் செய்யக்கூடிய பணிவிடை உண்டோ என்று நெகிழாததுவே ஆட்செய்கைக்கு அதிகாரமாவது என்றபடி. இத்தால், அடிமைசெய்வது ஸர்வாதிகாரமென்றதாயிற்று. என்னாத + அதுவே, என்னாததுவே; தொகுத்தல் விகாரம். (உ)

† தச்சன் செதுக்குகிற சராய் முதலியவற்றையிட்டு என்றபடி.

2732 ஈடுமெடுப்புமிலீசன் * மாடுவிடாதென்மனனே *
பாடுமென்னாவவன்பாடல் * ஆடுமெனங்கமணங்கே. * (௩)

| | | | |
|---|---|---|---|
| என் மனன் | எனது மனமானது | என் நா அவன் பாடல் பாடும் | எனது நாவானது அந்த ஸர்வேச்வரன் விஷயமான துதிகளைப் பாடுகின்றது; |
| ஈடும் எடுப்பும் இல் ஈசன் மாடு விடாது | குற்றம் பார்த்துத்தள்ளிவிடுதலும் குணம்பார்த்துக் கைக்கொள்ளுதலுமில்லாத ஸர்வேச்வரனுடைய ஸமீபத்தை விடுகிறதில்லை; | என் அங்கம் அணங்கு ஆடும் | எனது உடம்பு தைவாவேசங் கொண்டதுபோல் ஆடுகின்றது. |

* * *—எம்பெருமான் விஷயத்தில் அடிமைசெய்கைக்கு அதிகாரி நியதியில்லையென்று காட்டப்பட்டது கீழ்ப்பாட்டில்; அஃது எதனாலென்ன; அடிமைசெய்கையில் விருப்பமுடையவர்களை ஜாதி குணம் தொழில் முதலியவற்றால் நிஹீநரென்று கைவிடும் ஸ்வபாவம் எம்பெருமானுக்கில்லாமையாலே என்கிறது இப்பாட்டில். (௩)

2733 அணங்கெனவாடுமெனங்கம் * வணங்கிவழிபடுமீசன் *
பிணங்கியமரர்பிதற்றும் * குணங்கெழுகொள்கையினனே. * (௪)

| | | | |
|---|---|---|---|
| அணங்கு என ஆடும் என் அங்கம் | தைவாவேசங்கொண்டாற் போல் ஆடுகின்ற எனது சரீரம் | அமரர் பிணங்கி பிதற்றும் | நித்யஸூரிகள் பரஸ்பரவிவாதம் செய்து பிதற்றும்படியாயுள்ள |
| வணங்கி வழி படும் ஈசன் | சேவித்து ஆராதிக்கும்படி நின்ற எம்பெருமான் (எப்படிப்பட்டவனென்றால்) | குணம் கெழு கொள்கையினன் | பல திருக்குணங்கள் பொருந்திய கோட்பாட்டை யுடையவன். |

* * *—பிணங்கி யமரர் பிதற்றுங் குணங்கெழு கொள்கையினனை ஈசனை, அணங்கென ஆடும் என் அங்கம், வணங்கி வழிபடும் என்று அந்வயிப்பதுமாம். தம்முடைய மனமொழி மெய்களுக்கு எம்பெருமான் பக்கலிலுண்டான ஊற்றம் சிறிதுபோது உண்டாய்விடுகையன்றியே நித்யஸூரிகளுக்குப்போலே நிரந்தரயாத்ரையானபடி சொல்லுகிறது இப்பாட்டு. ஆறாயிரப்படியில் பிள்ளானருளிச்செயலை நோக்குமிடத்து "கொள் கலனே" என்பதாகப் பாடம் புலப்படும். கலம் எனினும் கலன் எனினும் ஒக்கும்; மகரனகரப்போலி. பாத்திரம் என்றபடி. (௪)

2734 கோள்கைகோளாமை யிலாதான் * எள்கலிராகமிலாதான் *
விள்கைவிள்ளாமைவிரும்பி * உள்கலந்தார்க்கோரமுதே. * (௫)

| | | | |
|---|---|---|---|
| கொள்கை | குணம்பார்த்துக் கொள்ளுதலும் | விள்கை | வேறு ப்ரயோஜனங்களைக் கொண்டு விலகிப் போவதையும் |
| கொளாமை | குணமில்லாமை பார்த்துத் தள்ளுதலும் | விள்ளாமை | (தன்னையே விரும்பி)விடாதிருப்பதையும் |
| இலாதான் | இல்லாதவனாய் | விரும்பி | எதிர்பார்த்து |
| எள்கல் | கைவிடுகைக்கு அடியான மனநெகிழ்ச்சியும் | உள் கலந்தார்க்கு | (விண்டுபோகாமல்) தன்னில் கலந்தவர்கட்கு |
| இராகம் | கைக்கொள்ளுதற்கு அடியான ஆசையும் | ஓர் அமுது | ஒப்பற்ற அமுதமாயிருப்பன். |
| இலாதான் | இல்லாதவனாய், | | |

* * *—தன்னைவந்து பணிகின்ற அதிகாரிகளைத் தான் பரீக்ஷித்துப்பார்ப்பன்; இவர்கள் ஏதேனும் க்ஷுத்ரபலன்களைப் பெற்றுக்கொண்டு நெகிழ்ந்து போய்விடுகிறவர்களா? அல்லது அவற்றில் நசையற்று நம்மையே பரமப்ரயோஜநமாகப் பற்றுகிறவர்களா? என்று பார்ப்பன்; அகன்று போகிறவர்களாயிருந்தால், க்ஷுத்ரபலன்களைத்தந்து அவர்களை அகற்றிவிடுவன்; அங்ஙனல்லாதவர்களுக்குத்தானே முற்றூட்டாக இருப்பன் என்கிறது பின்னடிகளில். (௫)

2735 அமுதமமரர்கட்கீந்த * நிமிர்சுடராழி நெடுமால் *
அமுதிலுமாற்றவினியன் * நிமிர்திரைநீள்கடலானே. * (சு)

அமரர்கட்கு அமுதம் ஈந்த — தேவர்கட்கு அமிர்தத்தைக் கொடுத்தவனாய்
நிமிர் சுடர் ஆழி — வளர்கின்ற ஒளியையுடைய திருச்சக்கரத்தை யுடையனாய்
நெடுமால் — எல்லைகடந்த பெருமையை யுடையனுமாய்க்கொண்டு
நிமிர் திரை நீள் கடலான் — அலையெறிகின்ற விசாலமான திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளின
அமுதிலும் ஆற்ற இனியன் — (அக்கடலிலுண்டான) அமிர்தத்தைவிட மிகவும் போக்யன்.

* * *—கீழ்ப்பாட்டில் * விள்கைவிள்ளாமை விரும்பி * என்று சொன்ன சொற்போக்கிலே பிரயோஜநாந்தரபரர்கள் ப்ரஸ்தாவிக்கப் பட்டமையால், ஐயோ! உள்கலந்தார்க்கு ஓரமுதாயிருக்கு மெம்பெருமானை விட்டுப் பிரயோஜநாந்தரபரர்களாய் ஆபாஸமான அமுதத்தைப் பெற்றுக்கொண்டு விலகிப்போவாரும் சிலரே! என்று தேவர்களை நிந்திப்பதிலே நோக்காகச் செல்லுகிறது இப்பாட்டு. (சு)

2736 நீள்கடல்சூழிலங்கைக்கோன் * தோள்கள்தலை துணிசெய்தான்*
தாள்கள்தலையில்வணங்கி * நாள்கடலைகழிமினே. * (எ)

நீள் கடல் சூழ் இலங்கை கோன் — நீண்ட கடலினால் சூழப்பட்ட லங்காபுரிக்குத் தலைவனாயிருந்த இராவணனுடைய
தோள்கள் தலை — இருபது தோள்களையும் பத்துத் தலைகளையும்
துணிசெய்தான் — அறுத்தொழித்த ஸ்ரீராமபிரானுடைய
தாள்கள் தலையில் வணங்கி நாள் கடலை கழிமின் — திருவடிகளைத் தலையாலே வணங்கி காலமாகிய கடலைத் தாண்டுங்கள்.

* * *—இங்ஙனம் பரமபோக்யனை எம்பெருமானுடைய குணங்களை அநுபவித்துக் கொண்டு போதுபோக்குவதே ப்ராப்த மென்கிறார் இதில். ஈற்றடியில், "நாட்கடலை" என்ற ஸ்தானத்தில் 'நாழ்க்கடலை' என்றும் பாட முண்டாதலால், நாழ் என்று பாபமாய், பாபமாகிற கடலைக் கழியுங்கோள் என்றபடி யாகவுமாம். (எ)

2737 கழிமின்தொண்டீர்கள்! கழித்து * தொழுமினவனைத்தொழுதால் *
வழிநின்றவல்வினைமாள்வித்து * அழிவின்றி யாக்கந்தருமே. * (அ)

தொண்டீர்கள் — தொண்டர்களே!
கழிமின் — விஷயாந்தர ஸங்கத்தைக் கழித்து விடுங்கள்;
கழித்து — அதனைக் கழித்துவிட்டு
அவனை தொழுமின் — அப்பெருமானைத் தொழுங்கள்;
தொழுதால் — தொழுதமாத்திரத்தினால் (அவன்)
வழி நின்ற வல் வினை மாள்வித்து — ஜன்ம பரம்பரையாய்த் தொடர்ந்துநின்ற வலிய பாவங்களை ஒழித்து
அழிவு இன்றி ஆக்கம் தரும் — சாச்வதமான முக்திஸம்பத்தைத் தந்தருள்வன்.

* * *—ஸ்ரீராமபிரானுடைய வீரசரிதத்தை யநுஸந்தித்து இதர விஷயப்பற்றுகளைத் தவிரவே, அவன்றானே இடையூறுகளைப் போக்கி நித்ய கைங்கரியத்தைத் தந்தருள்வனென்கிறார். ஆக்கம்—ஸம்பத்து. (அ)

2738 தருமவரும்பயனாய * திருமகளார்தனிக்கேள்வன் *
பெருமையுடையபிரானார் * இருமைவினைகடிவாரே. * (கூ)

அ அரு பயன் ஆய — அப்படிப்பட்ட அருமைப்பயனை புருஷார்த்தத்தை
திரு மகளார் தனி கேள்வன் — பெரிய பிராட்டியார்க்கு ஒப்பற்ற நாயகனாய்க் கொண்டு [பிராட்டியோடுகூடி நின்று]
தரும் — தந்தருள்வன்;
பெருமை உடைய பிரானார் — (லக்ஷ்மீ ஸம்பந்தத்தாலே)மேன்மையை யுடைய (அந்த) ஸர்வேச்வரன்
இருமை வினை — இருவகைப்பட்ட (புண்ய பாப ரூபமான) கருமத்தை.
கடிவார் — போக்குவான்.

* * *—எம்பெருமான் தன்னைப்பற்றின மாத்திரத்திலே இப்படி இடையூறுகளையெல்லாம் போக்கிப் பரம புருஷார்த்தத்தையும் தந்தருளக்கூடுமோவென்ன; பிராட்டி அருகேயிருக்கும் போது எதுதான் செய்யக்குறை? என்கிறார். முதலடியை, தரும் அவ்வரும்பயனாய என்றும் தரும அரும்பயனாய என்றும் இருவகையாகப் பிரித்துப் பொருள் கூறுவர். ஆசார்யஹ்ருதயத்தில் (4-1) * பரபரனாய்நின்ற * என்ற சூர்ணிகையில் "தொழுதால் அரும்பயனாய தரும்" என்றருளிச்செய்திருப்பதும் இங்கு நினைக்கத்தக்கது. அ + அரும்பயனாய, அவ்வரும்பயனாய என்று சந்தியாகவேண்டு மிடத்து "அவரும்பயனாய" என்று ஆனது தொகுத்தல்விகாரமென்க. பெறமுடியாததாக சாஸ்திரங்களிலே ப்ரஸித்தமாகவுள்ள புருஷார்த்தங்களைத் தந்தருள்வன் என்றபடி. (௯)

2739 கடிவார்தீயவினைகள் * நொடியாருமளவைக்கண் *
கொடியாவடுபுள்ளுயர்த்த * வடிவார்மாதவனாரே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| அடு புள் கொடி ஆ உயர்த்த | பகைவரை அழிக்கின்ற கருடப் பறவையை த்வஜமாக எடுத்தவரும் | மாதவனார் | லக்ஷ்மீபதியானவர் |
| | | தீய வினைகள் | கொடிய பாவங்களை |
| வடிவு ஆர் | விலக்ஷணமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவருமான | நொடி ஆரும் அளவை கண் | ஒரு நொடிப் பொழுதிற்குள்ளே |
| | | கடிவார் | போக்கியருள்வார். |

* * *—எம்பெருமான் பிராட்டியோடுகூடி அடியார்க்குக் காரியஞ்செய்தருள்வது தாமதமாக நடைபெறுமோ என்ன; இல்லை; ஒரு நொடிப்பொழுதிலே நடைபெறு மென்கிறது. (௧௦)

2740 மாதவன்பால் சடகோபன் * தீதவமின்றியுரைத்த *
ஏதமிலாயிரத்திப்பத்து * ஓதவல்லார்பிறவாரே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| சடகோபன் | ஆழ்வார் | ஏதம் இல் ஆயிரத்து | வழுவற்ற இத்திருவாய்மொழியாயிரத்தில் |
| மாதவன் பால் | லக்ஷ்மீநாதனை எம்பெருமான் பக்கலில் (பக்தியுக்தராய்) | இ பத்து | இப் பத்துப்பாசுரங்களையும் |
| தீது அவம் இன்றி உரைத்த | தனது மேன்மையைப்பார்த்து உதாஸீநனாயிருத்தல், அடியாருடைய குற்றங்களைப் பார்த்துக் கைவிட்டொழிதல் ஆகிற இருவகைக்குற்றமும் எம்பெருமானுக்குஇல்லையென்பதையெடுத்துரைத்த | ஓத வல்லார் | (குருமுகமாக அதிகரிக்க வல்லவர்கள் |
| | | பிறவார் | மீண்டும் பிறந்து வருந்தமாட்டார்கள். |

---

## முதற்பத்து ஏழாந் திருவாய்மொழி—பிறவித்துயரற.

எம்பெருமானுடைய ஆச்ரயணத்தின் இனிமையை யருளிச்செய்கிறார்.

2741 பிறவித்துயரற ஞானத்துள்நின்று * துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்வார் *
அறவனை ஆழிப்படையந்தணனை * மறவியையின்றி மனத்துவைப்பாரே. (௧)

| | | | |
|---|---|---|---|
| பிறவி துயர் அற | ஜநநமரணங்களினால் வருந்துன்பம் மாத்திரம் நீங்குகைக்காக | அறவனை | பரமதார்மிஷ்டனாயும் |
| ஞானத்துள் நின்று | ஆத்மாவலோகநமாகிற கைவல்யோபாஸநத்தில் ஊன்றி | ஆழி படை | திருவாழியாழ்வானை ஆயுதமாகவுடையனாயும் |
| | | அந்தணனை | பரம பரிசுத்தனாயுமிருக்கின்ற எம்பெருமானை |
| துறவி சுடர் விளக்கம் தலைப் பெய்வார் | ஸகல உபாதிகளையும் விட்டவனாய் ஸ்வயம் ப்ரகாசனான ஆத்மாவினுடைய ஸாக்ஷாத்காரத்தைப் பெறவிரும்புகின்ற கைவல்யார்த்திகள், | மறவியை இன்றி | (தாம் விரும்பிய பலனில்) மறப்பில்லாமல் |
| | | மனத்துவைப்பார் ஏ | உபாஸிக்கின்றார்களே!. |

* * *—எம்பெருமானுடைய போக்யதையை ஆழ்வார் தாம் தமது திருவுள்ளத்தினால் முந்துற அநுபவித்து அதனை வாய் விட்டுப் பாசுரமிட்டுப் பேசுவதற்குமுன்னே, இங்ஙனம் பரம போக்யமானவனை ஆச்ரயித்து வைத்து அந்தோ! அற்ப பலனாகிய கைவல்யத்தை அபேக்ஷிப்பதே! என்று கேவலர்களை நிந்தித்து, 'அவர்களுடைய புன்மையைப் பாராதே அவர்கள் அபேக்ஷிதத்தைக் கொடுப்பதே!' என்று எம்பெருமானது நீர்மையைக்கண்டு வியந்து கூறுவது.

2742 வைப்பாம்மருந்தாம் அடியரை * வல்வினைத் துப்பாம்புலனைந்தும் துஞ்சக்கோடானவன்*
எப்பால்யவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்து * அப்பாலவன் எங்களாயர்கொழுந்தே. (௨)

| | | | |
|---|---|---|---|
| அடியரை | தன்னடியாரை | மருந்து ஆம் | (விரோதி நிரஸந முகத்தால்) மருந்துமானவன்; |
| வல் வினை | வலிய கருமங்களினுடைய | அவன் | அந்த எம்பெருமான் |
| துப்பு ஆம் | மிடுக்கின் வழியிலே ஸஞ்சரிக்கிற | எப்பால் யவர்க்கும் | எவ்விடத்துமுள்ள யாவர்க்கும் |
| புலன் ஐந்தும் | பஞ்சேந்திரியங்களிலும் அகப்பட்டு | நலத்தால் உயர்ந்து உயர்ந்து | ஆனந்தகுணத்தினால் மிகவும் உயர்ந்து |
| துஞ்சக்கொடான் | நசித்துப்போம்படி விட்டுக் கொடாதவன் | அப்பாலவன் | வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதபடி அப்புறப்பட்டவனாய் |
| வைப்பு ஆம் | (அவர்களுக்குப் புருஷார்த்தமான) நிதியுமாய் | எங்கள் ஆயர் கொழுந்து | எங்களுக்கே உரியவனான ஆயர் தலைவன். |

* * *—கீழ்ப்பாட்டில் 'ஐயோ! கைவல்யார்த்திகள் எம்பெருமானைப் பணிந்து க்ஷுத்ரமான பலனைப் பெற்றுப்போவதே!' என்று அவர்களை நிந்தித்தார்; அவன்றன்னையே ஆசைப்பட்டிருக்குமவர்கள் திறத்தில் அவன் இருக்கும்படியை அருளிச்செய்கிறாரிப்பாட்டில். "வைப்பாம் மருந்தாம்" என்ற இரண்டாலும் எம்பெருமானுடைய உபேயத்வமும் உபாயத்வமும் சொல்லப்பட்டதாகும். "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்றும் "வைத்தமாநிதியாம் மதுசூதன்" என்றும் சொல்லுகிறபடியே கொள்ளக்கொள்ளக்குறையாத மஹாநிதிபோலே *கொள்ளமாளாவின்ப வெள்ளமாய் எப்போதும் அநுபவிக்க வுரியனாயிருக்குந்தன்மை 'வைப்பாம்' என்பதனால் சொல்லப்படுகிறது. அப்படி அநுபவிக்க சக்தியற்றவர்களுக்கு சக்தியைக் கொடுத்தருளுந்தன்மை 'மருந்தாம்' என்பதனால் சொல்லப்படுகிறது; இதுதான் உபாயத்வம். (௨)

2743 ஆயர்கோழுந்தாய் அவரால்புடையுண்ணும் * மாயப்பிரானை என்மாணிக்கச்சோதியை *
தூயவமுதைப் பருகிப்பருகி * என் மாயப்பிறவி மயர்வறுத்தேனே. (௩)

| | | | |
|---|---|---|---|
| ஆயர் கொழுந்து ஆய் | இடையர் தலைவனான கோபால க்ருஷ்ணனாகி | தூய அமுதை | பரிசுத்தமான அம்ருதம் போன்றவனுமான பெருமானை |
| அவரால் புடை உண்ணும் | அவ்விடையர்களாலே (வெண்ணெய் களவு முதலியவற்றிற்காக) அடியுண்கிற | பருகி பருகி | இடைவிடாமல் அநுபவித்து |
| மாயம் பிரானை | மாயச்செயல் வல்லவனும் | என் மாயம் பிறவி மயர்வு அறுத்தேன் | என்னுடைய ப்ரக்ருதியின் காரியமாய் வருகின்ற பிறவியினால் உண்டான அஜ்ஞானத்தைப் போக்கிக்கொண்டேன். |
| என் மாணிக்கம் சோதியை | எனக்கு விதேயனும் மாணிக்கம்போல் ஒளிபெற்ற வடிவையுடையவனும் | | |

* * *—முதற்பாட்டில் ப்ரயோஜநாந்தரபரர்களான கேவலர்களை நிந்தித்தார்; இரண்டாம் பாட்டில், அநந்யப்ரயோஜநாதிகாரிகள் விஷயத்தில் எம்பெருமான் இருக்கும்படியை யருளிச்செய்தார்; 'ஆக இவ்விரண்டு வகுப்பிலே நீர் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்?' என்று ஆழ்வாரைச் சிலர் கேட்க; 'நான் அநந்யப்ரயோஜநனாய் அவனைப்பற்றினேன்' என்று நேரே சொல்லமாட்டாமல் 'அவனை அநுபவித்துக்கொண்டே யிருக்கச்செய்தே விரோதிகள் தன்னடையே கழிந்துபோகப் பெற்றவன் நான்' என்கிறாரிதில். பஞ்சலக்ஷங்குடியிலுள்ளாரெல்லா

ராலும் மத்தாலே புடைக்கப்பெற்று அழுதேங்கிநிற்கும் மாயத்தைப் பேசுகிறார் "புடையுண்ணும் மாயப்பிரானை என் மாணிக்கச்சோதியை" என்று. அடியார்கள் மத்தாலும் கயிற்றுலும் கட்டியடிக்கவடிக்க, களங்கமறக்கடையுண்ட மாணிக்கம்போலே திருமேனி புகர் பெற்று வருமாம். தூயவமுதைப் பருகிப்பருகி=தேவர்களுண்ணும் அமுதமானது பல நியமங்களை அபேக்ஷித்திருக்குமாதலால் அப்படிப்பட்டதல்லாத பகவத்விஷயமாகிற அமுதமே தூயதாகுமென்க. இதனை ஆரப்பருகி என் மாயப் பிறவி மயர்வறுத்தேனென்றாராயிற்று. (௩)

2744 மயர்வறவென்மனத்தே மன்னினான்தன்னை * உயர்வினையேதரும் ஒண்சுடர்க்கற்றையை*
அயர்விலமரர்கள் ஆதிக்கொழுந்தை* என் இசைவினை என்சொல்லியான் விடுவேனே. (௪)

| | | | |
|---|---|---|---|
| மயர்வு அற | அஜ்ஞானம் தொலையும்படி | ஆதி கொழுந்தை | முதல் தலைவனாய் |
| என் மனத்தே மன்னினான்தன்னை | எனது நெஞ்சிலே நித்யவாஸஞ் செய்பவனாய் | என் இசைவினை | (தன்னைக் கிட்டுமாறு) எனக்கு இசைவை விளைவித்தவனான எம்பெருமானை |
| உயர்வினையே தரும் | (எனக்கு) ஞானபக்தி வளர்ந்தியையே தந்தருள்கின்றவனாய் | | |
| ஒண் சுடர் கற்றையை | அழகிய தேஜோராசியாய் | யான் என் சொல்லி விடுவேனே | அடியேன் என்ன குறையைச் சொல்லி விடக்கடவேனே? [விடமாட்டேன்.] |
| அயர்வு இல் அமரர்கள் | மறப்பில்லாத நித்யஸூரிகளுக்கு | | |

* * *—அஜ்ஞாநராசியை வாஸநையோடே போகச்செய்ததுமன்றியே 'இனி ஒரு நாளும் அது குடிபுகவொண்ணாது' என்று என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து ஸ்திரமாக இருப்பவனும், அப்படி யிருந்துகொண்டு "நாவலிட்டுழிதருகின்றோம் நமன்றமர்தலைகள்மீதே" என்று சொல்லி யமபடர்கள் தலையிலும் அடியிட்டுத் துகைக்கும்படியான உயர்த்தியையுந் தந்தருள்பவனும், இப்படியென்னை வசப்படுத்திக்கொள்வதற்குப் பாங்கான வடிவழகுடையவனும்' அப்படிப்பட்ட வடிவழகை யநுபவிக்கும் அயர்வறுமமரர்களை ஒரு நாடாகவுடையவனும், என்னை இசைவித்துத் தன் தாளிணைக் கீழ்ப் புகுவித்துக்கொண்டவனுமான ஸர்வேச்வரனை என்ன ஹேதுவைக்கொண்டு விடுவேன்? (௪)

2745 விடுவேனோவென்விளக்கை என்னாவியை *
நடுவேவந்து உய்யக்கோள்கின்றநாதனை *
தோடுவேசெய்து இளவாய்ச்சியர்கண்ணினுள் *
விடவேசெய்து விழிக்கும்பிரானையே. (௫)

| | | | |
|---|---|---|---|
| என் விளக்கை | எனக்கு எல்லாப் பொருள்களையும் விளக்கிக் காட்டுகிற விளக்குப்போன்றவனும் | இள ஆய்ச்சியர் கண்ணினுள் | இளமைதங்கிய இடப்பெண்களின் கண்களிலே |
| | | விடவே செய்து | விடத்தனமேசெய்து |
| என் ஆவியை | என் உயிராயிருப்பவனும் | | |
| நடுவே வந்து | திடீரென்று ஒருநாளிலே | விழிக்கும் பிரானை | கண்கலப்புச் செய்கிற பிரபுவாகிய எம்பெருமானை |
| உய்யக் கொள்கின்ற நாதனை | உஜ்ஜீவிப்பிக்கின்ற ஸ்வாமியும் | விடுவேனோ | விடவல்லேனோ? [விடமாட்டேன்] |
| தொடுவே செய்து | கபடச்செயல்களையே செய்து | | |

* * *—திருவாய்ப்பாடியிலிடைப்பெண்கள் கண்ணபிரானைவிட்டுப் பரமபதத்தை விரும்பினால் நானும் எம்பெருமானைவிட்டுப் புறம்புபோவேனென்கிறார். விடவு=விடனுடைய தன்மை: விடனென்பது வடசொல்; பெண்டிர்பால் தூர்த்தத்தனஞ்செய்பவன் விடன்; அவனது செயல், அல்லது தன்மை—விடவு. (௫)

2746 பிரான் பெருநிலங்கீண்டவன் * பின்னும் விராய்மலர்த்துழாய் வேய்ந்தமுடியன் *
மராமரமெய்தமாயவன் * என்னுள் இரானெனில் பின்னையானொட்டுவேனோ. (௬)

பிரான் — உபகாரகனும்
பெரு நிலம் கீண்டவன் — (வராஹாவதாரத்தில்) பெரிய பூமியைப் பிளந்தெடுத்தவனும்
பின்னும் — பின்னப்பட்ட[தொடுக்கப்பட்ட]
விராய் துழாய் மலர் வேய்ந்த முடியன் — பரிமளம் பொருந்திய திருத்துழாய் மாலையாலே சூழப்பட்ட திருமுடியையுடையவனும்
மராமரம் எய்த — ஏழுமராமரங்களை (ஸுக்ரீவனுடைய நம்புதலுக்காக ஓர் அம்பினால் எய்தவனுமான
மாயவன் — ஆச்சரியபூதன்
என் உள் இரான் எனில் — எனது நெஞ்சினுள்ளே எழுந்தருளியிரானாயின்
பின்னை யான் ஒட்டுவேனோ — பின்பு நான் தரித்திருப்பேனோ?

2747 யானொட்டியென்னுள் இருத்துவமென்றிலன் *
தானொட்டிவந்து என்தனிநெஞ்சைவஞ்சித்து *
ஊனொட்டிநின்று என்னுயிரில்கலந்து * இயல்
வானொட்டுமோ இனியென்னைநெகிழ்க்கவே. (எ)

யான் ஒட்டி என்னுள் இருத்துவம்என்றிலன் — நான் இசைந்து என்னுள்ளே (எம்பெருமானை) இருத்துவதாக நினைத்திலேன்;
தான் ஒட்டி வந்து — தானேபிரதிஜ்ஞை பண்ணிவந்து
என் தனி நெஞ்சை — என்னுடைய ஸ்வதந்திரமான மனத்தை
வஞ்சித்து — நானறியாதபடி வசீகரித்து
ஊன் ஒட்டி நின்று — சரீரத்திலே பொருந்திப் புகுந்து நின்று
என் உயிரில் கலந்து — எனது ஆத்மாவில் கூடி
இயல்வான் — இப்படி நடக்கிற ஸர்வேச்வரன்
இனி என்னை நெகிழ்க்க ஒட்டுமோ — இனி என்னைவிட்டு நீங்க ஸம்மதிப்பனோ?

* * *—எம்பெருமான் தம்மை ஒருநாளும் விடமாட்டானென்பதை வற்புறுத்தியருளிச் செய்கிறாரிதில். அவன் தானாகவே வந்து கைக்கொண்டவனாயிருந்துவைத்து எங்ஙனே விட்டு நீங்கவல்லானென்கிறார். [யானொட்டியென்னுள் இருத்துவமென்றிலன்] எம்பெருமானை என்னெஞ்சினுள்ளே யிருத்திக்கொண்டது நானாகவோ? அவன்தானே வந்து 'ஆழ்வீர்! உம்முடைய நெஞ்சிலே உறையக்கடவேன்' என்றாலும் வேண்டா வேண்டாவென்று விலக்குவதன்றோ என் பணியாயிருந்தது; 'இப்படி நீர் விலக்குவதனால் நான் இங்கு இருந்தே தீரக்கடவேன்' என்று சபதம் பண்ணிக்கொண்டு அவனாகவே வந்து இருக்கின்ற இருப்பன்றோவிது. [என்தனிநெஞ்சை வஞ்சித்து இத்யாதி.] ஸர்வசக்தனான தன்னாலுந் திருத்தவொண்ணாதபடி ஸ்வாதந்திரியத்தில் தலைநின்று அவிதேயமாய்க்கிடந்த எனது நெஞ்சைத் தன்னுடைய சீலாதி குணங்களாலும் வடிவழகாலும் தனக்கு விதேயமாம்படிபண்ணி, அபிமதவிஷயத்தில் அழுக்கு உகப்பாரைப்போலே என்னுடைய ஹேயமான வுடலைப்பற்றி நின்று என் பக்கலிலே விலக்காமை பெற்றவாறே என்னாத்மாவோடும் வந்துகலந்து இதுவே போதுபோக்காகவிருந்து இப்படி நிர்ஹேதுகமாக என்னை விஷயீகரித்தவன், நான் தன்பக்கலில் நின்றும் நெகிழ்ந்துபோவேனென்றால் அவன் இசைய ப்ரஸக்தியுண்டோ? எனக்கு ஞானம் பிறக்கைக்கு க்ருஷிபண்ணி, பிறந்த ஞானம் பலிக்குமளவானகாலத்திலே நான் அகன்று போவேனென்றால் அவனோ அகலவொட்டுவது? (எ)

2748 என்னைநெகிழ்க்கிலும் என்னுடைநன்னெஞ்சந்
தன்னை * அகல்விக்கத்தானுங்கில்லானினி *
பின்னைநெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை *
முன்னையமரர் முழுமுதலானே. (அ)

பின்னை நெடுபணை தோள் மகிழ் பீடு உடை — நப்பின்னைப் பிராட்டியினுடைய பெரிய சுற்றுடைத்தான தோள்களோடே அணையப் பெற்றதனாலுண்டான ஆனந்தப் பெருமையை உடையவனும்
முன்னை அமரர் முழுமுதலான் — பூருவர்களான நித்யஸூரிகளுக்கு ஸகலமும் தானேயாயிருக்கப் பெற்றவனுமான எம்பெருமான்
என்னை நெகிழ்க்கிலும் — (ஒருகால்) என்னைப்பிரிய விட்டாலும்

| | | | |
|---|---|---|---|
| என்னுடை நல் நெஞ்சம் தன்னை அகல்விக்க | என்னுடைய நல்ல நெஞ்சை (தன்னிடத் தினின்றும்) பிரிக்க | தானும் இனி கில்லான் | ஸர்வசக்தியுக்தனான தானும் இனிமேல் ஸமர்த்தனாகமாட்டான். |

***—அகடிதகடநாஸமர்த்தனான எம்பெருமான் றன்னாலும் இனியொருநாளும் வேறு படுத்தவொண்ணாதபடி எனது நெஞ்சு அங்கே ஆழங்காற்பட்டுவிட்டதென்கிறார். இதற்கு முன்புள்ள காலமெல்லாம் நான் அவனைவிட்டு நெகிழ்ந்தவனேயாகிலும் இனி அங்ஙனம் ஒரு நாளும் நெகிழமாட்டேன்; எம்பெருமான் தனது ஸ்வாதந்திரியத்தினாலே ஒருகால் என்னை நெகிழவிட்டாலும் விடக்கூடும்; தன் பக்கலிலேயே ஊன்றிக்கிடக்கின்ற எனது நெஞ்சை ஒருவகையாலும் அப்புறப்படுத்த அவன் றன்னாலுமாகாது. அவனோ ஸர்வசக்தன்; நினைத்த படி எதையும்செய்து நிறைவேற்றவல்லவன்; அவனுக்கு ஆகாததும் ஒன்றுண்டோ என்னில்; [தானும் கில்லான்.] அப்படிப்பட்ட அபாரசக்திவாய்ந்த பகவானும் இவ்விஷயத்தில் அஸமர்த்தனேயாவன். (அ)

2749 அமரர்முழுமுதல் ஆகியவாதியை * அமரர்க்கமுதீந்த ஆயர்கொழுந்தை *
அமரவழும்பத் துழாவியென்னாவி * அமரத்தழுவிற்று இனியகலுமோ. (கூ)

| | | | |
|---|---|---|---|
| அமரர் முழு முதல் ஆகிய ஆதியை | நித்யஸூரிகளுடைய ஸ்வரூபம் ஸ்திதி ப்ரவ்ருத்தி ஆகிய எல்லாவற்றிற்கும் ஹேதுவாய்க்கொண்டு பிரதானனானவனும், | ஆயர் கொழுந்தை | இடையர்களுக்குத் தலைவனுமான எம்பெருமானை |
| | | என் ஆவி | எனது ஆத்மாவானது |
| | | அமர அழும்ப துழாவி | மிகவும் நெருக்கமாகக்கலசி |
| அமரர்க்கு அமுது ஈந்த | (இந்திராதி) தேவர்களுக்கு (அவர்கள் விரும்பிய) அம்ருதத்தை (கடல்கடைந்து எடுத்துக்) கொடுத்தவனும், | அமர | இனிமேல் ஒருவராலும் பிரிக்கவொண்ணாதபடி |
| | | தழுவிற்று | உகந்து கலந்தது; |
| | | இனி அகலுமோ | இனிமேல் பிரிய வழியுண்டோ ?. |

***—"என்னுடை நன்னெஞ்சந்தன்னை யகல்விக்கத் தானுங்கில்லான்" என்று சொல்லவேண்டிய ப்ரஸக்திதானுமில்லையே; 'எனது நெஞ்சும் அவனுஞ்சேர்ந்து ஒரு திரவியம்' என்னலாம்படி ஒற்றுமைபெற்றுள்ள விதனைப் பிரிக்கும்வகைதான் உண்டோவென்கிறார். (கூ)

2750 அகலிலகலும் அணுகிலணுகும் * புகலுமரியன் பொருவல்லனெம்மான் *
நிகரிலவன்புகழ் பாடியிளைப்பிலம் * பகலுமிரவும் படிந்துகுடைந்தே (க0)

| | | | |
|---|---|---|---|
| அகலில் | (தன்பக்கலில் அற்பபலன்களைப் பெற்றுக்கொண்டு சிலர்) பிரிந்துபோனால் | பொருவு அல்லன் | (அநுகூலர்க்குத்) தடையற்றவனும் |
| அகலும் | (அவர்கள் விஷயத்தில்) வருத்தத்தோடே பிரிந்திருப்பவனும், | எம்மான் | எனக்கு ஸ்வாமியானவனும் |
| அணுகில் | (சிலர் அநந்யப்ரயோஜநராய்) விடமாட்டாதேயிருந்தால் | நிகரிலவன் | (ஆக இப்படிகளாலே) ஒப்பில்லாதவனுமான ஸர்வேச்வரனுடைய |
| அணுகும் | (அவர்களோடு) ஒரு நீராகக் கலக்குமவனும், | புகழ் | திருப்புகழ்களை |
| புகலும் அரியன் | (பிரதிகூலர்க்கு) அணுகவுமொண்ணாதவனும் | பகலும் இரவும் | எப்போதும் |
| | | படிந்து குடைந்து | உட்புகுந்து எங்கும் கலந்து |
| | | பாடி இளைப்பிலம் | பாடி ஓவுதல் உண்டாகிறிலோம். |

***—என்னோடுகலந்த எம்பெருமானுடைய திருக்குணங்களை எத்தனைகாலமனுபவித்தாலும் த்ருப்தி பிறப்பதில்லையென்கிறார். [அகலில் அகலும்.] எம்பெருமான் எவ்விதத்திலாவது நம்மைத் தன் வலையில் அகப்படுத்திக்கொள்ளும்வழியையே பார்ப்பன்; அவனுடைய உபாயங்களையெல்லாம் பழுதாக்கி நாம் அவனது வலைக்கு அகப்படாமல் அகன்றுபோவதையே விரதமாகக் கொண்டிருப்போமாகில், ஐயோ! நம்முடைய க்ருஷி பலிக்கவில்லையே!

என்று கண்ணீர்விட்டழுதுகொண்டே கைவாங்கிநிற்பன் என்றபடி. [அணுகில் அணுகும்] நாம் அவன்பால் நாலடி கிட்டச்சென்றால் நம்முடைய அபிநிவேசத்துக்கும் மேலாகவே அபிநிவேசங்கொண்டு அவன் நம்மைச் சூழ்ந்துகொள்வன் என்க. விபீஷணாழ்வான் போல்வார் திறத்திலே இக்குணம் காணத்தக்கது. [புகலும் அரியன்] நல்ல எண்ணமில்லாதார்க்கு எட்டாதவன் என்றபடி. [பொருவல்லன்] ஆச்ரிதர் தன்னைக்கிட்டுமிடத்தில் தடையுடையனல்லன் என்றபடி. பொரு என்பதற்கு 'தடை' என்னும் பொருள் நேரே கிடைக்காதாயினும் *'லக்ஷித லக்ஷணை' என்னும் முறைமையால் கிடைக்குமென்று திருவுள்ளம். [எம்மான்] ஆக இப்படிப் பட்ட தன்மைகளைக்காட்டி என்னை யீடுபடுத்திக்கொண்டவன் என்றவாறு. (௧௦)

2751 குடைந்துவண்டுண்ணும் துழாய் முடியானை * அடைந்ததென்குருகூர்ச் சடகோபன் *
மிடைந்தசொல்தொடை ஆயிரத்திப்பத்து * உடைந்துநோய்களை ஓடுவிக்குமே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| வண்டு குடைந்து உண்ணும் | வண்டுகளை உட்புகுந்து மதுவுண்ணப்பெற்ற | மிடைந்த | நெருங்கின |
| | | சொல் தொடை | சொல்மாலையாகிய |
| துழாய் முடியானை | திருத்துழாய் மாலையைத் திருமுடியிலணிந்த பெருமானை | ஆயிரத்து | ஆயிரத்தினுள்ளே |
| | | இ பத்து | இந்தத் திருவாய்மொழி |
| அடைந்த | பணிந்த | நோய்களை | ப்ராப்தி ப்ரதிபந்தகங்களை |
| தென் குருகூர் சடகோபன் | திருநகரியிலவதரித்த ஆழ்வாருடைய | உடைந்து ஓடுவிக்கும் | உருக்குலைந்து ஓடும்படி செய்திடும். |

---

## முதற்பத்து எட்டாந் திருவாய்மொழி—ஓடும்புள்ளேறி.

இத்திருவாய்மொழியில் அவனது ஆர்ஜவ குணத்தை அநுபவித்துப்பேசுகிறார். ஆர்ஜவமாவது—ருஜுவாயிருக்குந்தன்மை. மனத்திலுள்ளது ஒன்றும், வாயாற்சொல்லுவது வேறொன்றும், காரியத்தில் நடத்துவது பிறிதொன்றுமாயிருக்கை யன்றியே மனமொழி மெய்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருத்தல் ஆர்ஜவமெனப்படும். இதற்குத் தமிழில் செம்மை என்று பெயர். இக்குணம் இத்திருவாய்மொழியில் அநுபவிக்கப்படுகிறது.

2752 ஓடும்புள்ளேறி * சூடுந்தண்டுழாய் *
நீடுநின்றவை * ஆடுமம்மானே. (௧)

| | | | |
|---|---|---|---|
| நீடு நின்ற அவை | நித்யஸூரிகளாயிருக்கின்ற பெரிய திருவடி முதலானாரோடு | புள் ஏறி | பெரிய திருவடிமேற்கொண்டு |
| | | ஓடும் | (விரைந்து) ஓடுவன்; |
| ஆடும் | கூடிப்பரிமாறுகிற | தண் துழாய் | குளிர்ந்த திருத்துழாய்மாலையை |
| அம்மான் | ஸ்வாமி, | சூடும் | சாத்திக்கொள்வன். |

* * *—நித்ய விபூதியிலுள்ளாரோடு செவ்வைக்குணமுடையனாய்ப் பரிமாறும்வகை இப்பாட்டிற் சொல்லப்படுகிறது. பரமபதத்திலே செவ்வைக்கேடு சிறிதுமில்லாமையாலே அவர்களோடு எம்பெருமான் செவ்வியனாய்ப் பரிமாறுகிறான் என்றால் இதற்கு ஒரு பொருளில்லையே; ஸம்ஸாரிகளான நமக்கன்றோ செவ்வைக்கேடு உள்ளது; நம்மோடு பரிமாறுந்திறத்தில் செவ்வியனாய்ப்பரிமாறுகிறானென்றால் இது பொருந்தும்; செவ்வையே உள்ளதானவிடத்தில் செவ்வியனாய்ப்பரிமாறுகிறானென்கைக்கு ப்ரஸக்தியில்லையே! என்று சிலர் சங்கிக்கக்கூடும்; கேண்மின்; பரமபதத்திலுள்ளார்க்குச் செவ்வைக்கேடு இல்லையென்பது உண்மையே; அங்குள்ளாரெல்லார்க்கும் விஷயம் பகவத்விஷயமொன்றே யாகிலும் ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமான பணிவிடையைப் பரிக்ரஹிக்கின்றமையால் அந்த வ்ருத்திபேதத்தாலே ருசிபேதமுண்டாகுமே; அவரவர்களது ருசிக்கீடாகவே பரிமாறுகிறானென்கிறது. பெரிய திருவடிக்குத்

தன்னைச்சுமந்து திரிகை அபேக்ஷிதமானால் அவன்மேலேறி ஸஞ்சரிப்பன், திருத்துழாய் செவ்வி யழியாமல் சூடவேண்டும்நிலையறிந்து அதனைச் சூடிக்கொள்வன்; ஆகவிப்படி சாச்வதமாக அந்த நித்யஸூரிகளோடே ஒருநீராகக்கலந்து பரிமாறுவனெம்பெருமான் என்றதாயிற்று. மூன்றாமடியில் அவை என்றது முன்னடிகளிற்சொன்ன புள்ளையும் துழாயையுமாம். நித்ய ஸூரிகளாய்ப் பரம சேதநர்களாயிருக்கின்ற அவர்களை அவை என்று அஃறிணைப் பெயர்ச் சுட்டாற்சொன்னது வழக்குபற்றிய வழூவமைதியென்னலாம். 'அவற்றோடே பரிமாறும்' என்றதே அவையாடும் என்றது எம்பெருமானுக்கு அவர்களோடே அணையுமது விடாயர் மடுவிலே புகுந்து குடைந்து ஆடினாற்போலே யிருக்குந்தன்மையைக்காட்டுதற்கென்ப. (க)

2753 அம்மானாய்ப்பின்னும் * எம்மாண்புமானான் *
வெம்மாவாய்கீண்ட * செம்மாகண்ணனே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அம்மான் ஆய் | ஸ்வாமியாயிருந்து | செம் மா கண்ணன் | சிவந்துபெரிய திருக்கண்களை யுடையவனுமான ஸ்ரீக்ருஷ்ணன் |
| வெம் மா வாய் கீண்ட | உக்கிரமான குதிரையின் வடிவாகவந்தகேசி யென்னுமசுரனை வாய் கிழித்தவனும் | பின்னும் | பின்னையும் |
| | | எம்மாண்பும் ஆனான் | எல்லா அவதார ஸௌந்தரியமுமுடையனாயினான். |

* * *—கீழ்ப்பாட்டிற்கூறியபடி ஸ்ரீ வைகுண்டத்திலுள்ளாரோடு செவ்வியனாய்ப் பரிமாறுகை மாத்திரமேயல்லாமல் அங்குநின்றும் இந்நிலத்திலே வந்து அவதரித்து விரோதிகளைத் தொலைத்து ஸம்ஸாரிகளுடன் பரிமாறும்படியும் எம்பெருமானுக்குள்ளதென்று இப்பாட்டிற் சொல்லுகிறது. "அம்மானாய் வெம்மாவாய்கீண்ட செம்மா கண்ணன் பின்னும் எம்மாண்பு மானான்" என்று அந்வயிப்பது. பின்னும் எம்மாண்புமானான் = இப்படி க்ருஷ்ணாவதாரஞ்செய்தருளினது மாத்திரமன்றியே இன்னமும் எத்தனையோ அவதாரங்கள் செய்து தனது ருஜுத்வத்தை வெளியிட்டுக்கொண்டானென்பது பரமதாற்பரியம். (உ)

2754 கண்ணாவானென்றும் * மண்ணோர்விண்ணோர்க்கு *
தண்ணார்வேங்கட * விண்ணோர்வெற்பனே. (ங)

| | | | |
|---|---|---|---|
| மண்ணோர் விண்ணோர்க்கு என்றும் கண் ஆவான் | மண்ணுலகத்தார்க்கும் விண்ணுலகத்தார்க்கும் எப்போதும் கண்ணாயிருப்பன், (யாவனென்னில்) | வேங்கடம் | திருவேங்கடமென்கிற பெயரையுடைய |
| தண் ஆர் | குளிர்ச்சி நிறைந்த | விண்ணோர் வெற்பன் | நித்ய ஸூரிகட்கிடமான திருமலையை யுடையவன். |

* * *—இரட்டைப்பிள்ளைபெற்ற தாயானவள் இருகுழந்தைகட்கும் முலைகொடுக்கப்பாங்காக நடுவே கிடக்குமாபோலே நித்யஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்குமொக்க முகந்தருதற்காகத் திருவேங்கடமலையிலே நின்றருளும் நீர்மையை அருளிச்செய்கிறார். 'கண்ணாவான்' என்பதைப் பெயர்ச்சொல்லாகவுங்கொள்ளலாம், வான்விகுதிபெற்ற வினையெச்சமாகவுங் கொள்ளலாம். பெயர்ச்சொல்லாகக்கொண்டால் 'கண்ணாயிருப்பவன்' என்றபடி. வினையெச்சமாகக்கொண்டால் 'கண்ணாயிருப்பதற்காக' என்றபடி. "அக்ஷிப்யாந்த்வா நாஸத உதசக்ஷுர்நா:" என்கிற வேதவாக்கியத்தை மொழிபெயர்ப்பனபோலுள்ளன முதலிரண்டடிகள். (ங)

2755 வெற்பையொன்றெடுத்து * ஒற்கமின்றியே *
நிற்குமம்மான்சீர் * கற்பன்வைகலே. (ச)

| | | | |
|---|---|---|---|
| ஒன்று வெற்பை எடுத்து | (கோவர்த்தன மென்னும்) ஒரு மலையைக்(குடையாகத்) தூக்கி | அம்மான் | எம்பெருமானுடைய |
| ஒற்கம் இன்றியே நிற்கும் | இளைப்பில்லாமல் நின்றருளின | சீர் | திருக்குணத்தை |
| | | வைகல் கற்பன் | நாள்தோறும் பேசக்கடவேன், |

* * *—அவனுடைய ருஜுத்வகுணத்தை இடைவிடாது பேசியநுபவிக்கப்பெற்றமை தமக்கு நேர்ந்தபடியை யருளிச்செய்கிறார். இந்திரன் மேகங்களை ஏவி மழைபெய்வித்துத் திருவாய்ப்பாடியிலுள்ள சராசரங்களனைத்துக்கும் பெருத்த தீங்கை உண்டுபண்ணப் புகுந்ததற்குக் கண்ணபிரான் சீற்றமுற்று அவ்விந்திரன் தலையை அறுத்தெறிய வல்லமைபெற்றிருந்த போதிலும், அப்பிரான் அவன் திறத்து இறையேனுஞ் சீற்றங்கொள்ளாமல் 'நம்மிடத்தில் ஆநுகூல்யமுடைய இந்திரனுக்கு இக்குற்றம் திடீரென்று நேர்ந்துவிட்டதத்தனை; பெரும்பசியாற் பிறந்த கோபத்தினால் இப்போது இவன் தீங்கிழைக்க ஒருப்பட்டானாயினும் சிறிது போது கழிந்தவாறே தானே ஒய்வன்; இவனது உணவைக் கொள்ளைகொண்ட நாம் உயிரையுங் கொள்ளைகொள்ளக்கடவோமல்லோம்' எனப் பேரருள் பாராட்டி அடியாரை மலையெடுத்துக்காத்த ருஜுத்வகுணம் இங்கு "அம்மான் சீர்" என்றதனால் காட்டப்பட்டதாகும். (௪)

2756 வைகலும் வெண்ணெய் * கைகலந்துண்டான் *
போய்கலவாது * என் மெய்கலந்தானே. (௫)

| | | | |
|---|---|---|---|
| வைகலும் | எப்போதும் | பொய் கலவாது | மெய்யாகவே |
| வெண்ணெய் | வெண்ணெயை | | |
| கை கலந்து | கை உள்ளளவும் நீட்டி | என் மெய் | எனது மேனியிலே |
| உண்டான் | (வாரியெடுத்து) அமுதுசெய்தவன் | கலந்தான் | ஒன்று படக்கூடினான். |

* * *—நான் எம்பெருமானது திருக்குணத்தை விரும்புவதுபோல அவனும் என்னுடைய சரீரத்தையே விரும்பாநின்றானென்கிறார், இப்பாட்டில் பின்னடிகளே முக்கியமானவை; அதிற்சொல்லும் விஷயத்திற்கு த்ருஷ்டாந்தம் காட்டுவன முன்னடிகள். திருவாய்ப்பாடியில் வெண்ணெய் அவனுக்கு எவ்வளவு போக்யமாயிருந்ததோ அவ்வளவு போக்யமாயிருந்தது என்னுடைய சரீரமவனுக்கு என்றவாறு. பொய்கலவாது = அவாப்தஸமஸ்தகாமனும் அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநனுமான ஸர்வேச்வரன் உம்முடைய அழுக்குடம்பிலே கலந்தானென்றால் இது நம்பத்தகுந்ததோவென்று சிலர் ஸந்தேஹிக்கக்கூடுமென்று கருதி ஸத்யமிட்டுச் சொல்லுகிறார்போலும். (௫)

2757 கலந்தென்னாவி * நலங்கொள்நாதன் *
புலன்கொள்மாணாய் * நிலங்கொண்டானே. (௬)

| | | | |
|---|---|---|---|
| கலந்து | ஒரு நீராகக் கலந்து | புலன் கொள் மாண் ஆய் | (கண்முதலிய) இந்திரியங்களைக் கவர்ந்து கொள்கின்ற [மநோஹரமான] வாமந ப்ரம்மசாரி வேஷத்தையுடையவனாய் |
| என் ஆவி நலம் கொள் நாதன் | எனது ஆத்மாவினுடைய அடிமைத்தனமாகிற நன்மையை தனக்காக்கிக்கொண்ட ஸ்வாமியானவன் | நிலம் கொண்டான் | (மூவடி) நிலத்தை பிக்ஷையேற்றுக்கொண்டான். |

* * *—மஹாபலியைத் தன் வசப்படுத்தி, அவன் தன்னதாக அபிமானித்திருந்த பொருளைத் தன்னதாக்கிக்கொண்டது போலவே என்னோடே ஒரு நீராகக் கலந்து என்னுடைமையைக் கொண்டான்—நான் எனக்குரியேனாயிருக்கிற விருப்பைத் தவிர்த்தான். (௬)

2758 கொண்டானேழ்விடை * உண்டானேழ்வையம் *
தண்டாமஞ்செய்து * என் னெண்தானானே. (௭)

| | | | |
|---|---|---|---|
| ஏழ் விடை கொண்டான் | ஏழு எருதுகளையும் (நப்பின்னைக்காக) வலியடக்கினவனும், | தண் தாமம் செய்து | குளிர்ந்த பரமபதத்திற் கொப்பாக என்னைத் திருவுள்ளம் பற்றி |
| ஏழ் வையம் உண்டான் | ஏழுலகங்களையும் (பிரளயங் கொள்ளாதபடி) திருவயிற்றிலே வைத்தவனுமான எம்பெருமான் | என் எண் தான் ஆனான் | நான் எண்ணின எண்ணத்திற்குப் பிரதியாகத் தான் சில எண்ணங்கள் கொண்டான். |

* * * — நப்பின்னைப் பிராட்டியோடு ஸம்ச்லேஷிப்பதற்காக அதற்கிடை யூறாயிருந்த ஏழெருதுகளை வலியடக்கினாற்போலே என்னோடு கலவிசெய்ய விரும்பி என்னுடைய பாபம் முதலிய பிரதிபந்தகங்களைப் போக்கி யருளினானென்பது முதலடியின் கருத்து. பிரளயங்கொள்ளப்புகுந்த பூமண்டலத்தைத் தனது திருவயிற்றிலே வைத்து ரக்ஷியாவிடில் தனக்குத் தரிக்கவொண்ணாமையிருந்ததுபோல என்னைத் தன்னுள்ளே ஒருநீராக்கிக் கொள்ளாவிடில் தனக்குத்தரிப்பில்லை யென்னலாம்படி யிருந்தானென்பது இரண்டாமடியின் கருத்து. பரமபதத்திற் பண்ணும் விருப்பத்தை என்பக்கலிலே பண்ணினானென்பது மூன்றாமடியின் கருத்து. என் எண் தான் ஆனான்=அவன் விஷயத்திலே நான் எண்ணின எண்ணத்தை அவன் என் விஷயத்தில் எண்ணினான் என்றபடி. அதாவது—'பரமபதத்திற்குச் செல்லவேணும், விரஜையாற்றிலே மூழ்கவேணும்' அங்கே ஸாமகானம்பண்ணி அவனை யநுபவிக்கவேணும், என்றிப்படியெல்லாம் நான் பாரித்துக்கொண்டிருக்க 'திருக்குருகூர்க்குச் செல்லவேணும், தாம்ரபர்ணியிலே நீராடவேணும், கண்ணிநுண் சிறுத்தாம்பு பாடி ஆழ்வாரை அநுபவிக்கவேணும் என்று அவன்றான் பாரித்துக்கொண்டு இங்கேற ஓடிவந்தான் என்றவாறு. 'நான் எண்ணினபடியே எனக்குக் கைபுகுந்துவிட்டான்' என்கிற பொருளும் ஈற்றடிக்குக் கொள்ளத்தகும்; ஆனாலும் மேலே விவரித்தபொருளே சீரியது. (எ)

2759 ஆனானாயன் * மீனோடேனமும் *
தானானானென்னில் * தானாய சங்கே. (அ)

| | | | |
|---|---|---|---|
| ஆன் ஆயன் ஆனான் | பசு மேய்க்கும் இடையனானான் | என்னில் | என்னுமிடத்து |
| மீனோடு ஏனமும் தான் ஆனான் | மத்ஸ்யாவதாரமும் வராஹாவதாரமும் முதலான அவதாரங்களைத்தானே செய்தான், | தான் ஆய | தானெடுத்த அவதாரங்கள் |
| | | சங்கே | சங்கமென்னுங் கணக்கையுடையனவே. (அபாரமென்றபடி.) |

* * *—என்னை யகப்படுத்திக்கொள்வதற்காகவே எம்பெருமான் பல திருவவதாரங்கள் செய்தான்; அங்ஙனஞ் செய்த அவதாரங்களுக்கு ஓர் எல்லையில்லை யென்கிறார். ["என்னில் தானாய சங்கே"] என்னில்—என்னிடத்தில், தான் ஆய—தனக்குண்டான. சங்கு—ஸங்கத்தினாலே, (அதாவது) ஆசையினாலே; ஆனாயனானான், மீனோடு ஏனமும் தானானான் என்று மூரைப்பர். 'ஸங்கஃ' என்னும் வடசொல்லும் சங்கு எனத்திரியும்; 'ஶங்கஃ' என்னும் வடசொல்லும் சங்கு எனத்திரியும். பதவுரையிற்படி பொருள்கொண்டால், சங்கு என்பது லக்ஷம் கோடி போலே ஒரு மிகப்பெரிய எண்ணுக்குப் பெயர். (அ)

2760 சங்குசக்கரம் * அங்கையில்கொண்டான் *
எங்குந்தானாய * நங்கள்நாதனே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| எங்கும் தான் ஆய நங்கள் நாதன் | எவ்விடத்தும் (அவதாரமுகத்தாலே) தானே வியாபித்த எம்பெருமான் | அம் கையில் | அழகிய திருக்கைகளில் |
| | | சங்கு சக்கரம் கொண்டான் | திருவாழி திருச்சங்குகளைத்தரித்துள்ளான். |

* * *—இப்படி எனக்காக ஸகல யோனிகளிலும் வந்து பிறந்தருளுகிறவன் தனது திருக்கைகளில் அழகிய திருவாழியும் திருச்சங்கும் ஏந்தி அவ்வழகோடுகூட வந்து பிறப்பவனென்கிறார். சிலரை வசப்படுத்திக்கொள்ள நினைத்தவர்கள் கையிலே மருந்தைவைத்துக் கொண்டு திரியுமாபோலே அவதாரங்கள்தோறும் திவ்யாயுதங்களோடே வந்து அவதரிப்பனாம். எல்லா அவதாரங்களிலும் திவ்யாயுதங்கள் உண்டோவென்னில்; எங்குமுண்டு; உகவாதார் கண்ணுக்குத் தோற்றாது, உகந்தார் கண்ணுக்குத் தோற்றும். "எங்குந் தானாய" என்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் கூறுவர் (1) தேவயோநி மனுஷ்யயோநி முதலிய

எங்கின்ற யோனிகளிலும் வந்து திருவவதரிக்கின்ற. (2) ஒருவனைப் பிடிக்கவேண்டி ஊரை வளைவாரைப்போலே தம்மை விஷயீகரிப்பதற்காக எங்கும் வியாபித்து ஸர்வாந்தர்யாமி யாயிருப்பவன். (கூ)

2761 நாதன்ஞாலங்கொள் * பாதனென்னம்மான் *
ஓதம்போல்கிளர் * வேதநீரனே. (க०)

| | | | |
|---|---|---|---|
| நாதன் | ஸகலலோகநாதனும் | என் அம்மான் | எம்பெருமான் |
| ஞாலம் கொள் பாதன் | உலகத்தையெல்லா மளந்து கொண்ட திருவடிகளையுடையனுமான | ஓதம் போல் கிளர் வேதம் நீரன் | கடல்போல முழங்குகின்ற வேதங்களால் அறியத்தக்க நீர்மையையுடையான். |

* * *—இப்படி எனக்காக எண்ணிறந்த திருவவதாரங்களைப் பண்ணியருளின இவனுடைய ஆச்ரித வாத்ஸல்யத்தைப் பேசவேண்டில், நானோ பேசுவது? கடலோதங் கிளர்ந்தாப்போலே கிளர்ந்துள்ள வேதங்களே யன்றோ பேசவேண்டுமென்கிறார். எல்லார்க்கும் சேஷியாய், வஸிஷ்டசண்டாள விபாகமின்றியே எல்லார் தலைகளிலும் திருவடிகளைப் பரப்பினவனான ஸர்வேச்வரன், கடல்போலே கிளர்ந்து ஸ்தோத்திரம் பண்ணுகின்ற வேதங்களாலே பேசப்பட்ட நீர்மையையுடையவன் என்றதாயிற்று. நீர்மையையுடையவன்—நீரன். (க०)

2762 நீர்புரைவண்ணன் * சீர்சடகோபன் *
நேர்தலாயிரத்து * ஓர்தலிவையே. (கக)

| | | | |
|---|---|---|---|
| நீர் புரை வண்ணன் | நீரையொத்த நிறத்தை யுடையவனை ஸர்வேச்வரனுடைய | நேர்தல் இவை | நேர்ந்து அருளிச்செய்த இப் பத்துப் பாட்டும் |
| சீர் | ருஜுத்வமென்னுங்குணத்தைக் குறித்து | ஆயிரத்து | ஆயிரத்தினுள் |
| சடகோபன் | நம்மாழ்வார் | ஓர்தல் | ஆராய்ந்து அறியத்தக்கன. |

* * *—இந்தத் திருவாய்மொழி மற்ற திருவாய்மொழிகளிலும் ஆராய்ந்து சொல்லப் பட்டதென்கிறார். 'நீர்புரைவண்ணன்சீர்' என்றதனால் இத்திருவாய்மொழிக்கு ப்ரமேயம் ருஜுத்வகுணம் என்பது பெறப்படும். நீரின் ஸ்வபாவம்போன்ற ஸ்வபாவத்தையுடைய எம்பெருமானுடைய குணம் எனவே ஆர்ஜவகுணம் என்பது எங்ஙனே தெரியலாகும் என்னில்; நீர்வெள்ளத்தை நாம் எப்படியிழுத்தாலும் அப்படியெல்லாம் அது ஓடிவரும்; அதுபோலே எம்பெருமான் யார்க்கும் உடன்பட்டுவருவன் என்க. இத்திருவாய்மொழியை ஓதுதற்குப் பலன் யாதொன்றுங் கூறப்படாமையினால் இதனை ஓதுதல் தானே ஸ்வயம் ப்ரயோஜனம் என்பது விளங்கும். (கூக)

---

## முதற்பத்து ஒன்பதாந் திருவாய்மொழி—இவையுமவையும்.

எம்பெருமான் அடியார்களுக்குத் தன்னை அநுபவிப்பிக்குமிடத்தில் ஏககாலத்திலேயே பூர்ணாநுபவங் கொடுத்துவிடுகை யன்றியே பொறுக்கப் பொறுக்கச் சிறிது சிறிதாகக் கொடுப்பன். ஓரடியிலேயே பூர்ணாநுபவத்தைத் தந்தருளினால் அது தாங்கமுடியாதே போகும். சிறு குழந்தைகட்கு முதல் தன்னிலேயே சோறும் சாறும் கறியுமிடுவாரில்லையே; பால், கஞ்சி, சோறு என்று வரிசைக்கிரமமாக ஊட்டுகையன்றோ வுள்ளது; அதுபோலவே எம்பெருமானும் பொறுக்கப் பொறுக்கப் பரிமாறும்வகை யொன்றுண்டு; அஃது இத்திருவாய்மொழியில் விளங்கும். ஆழ்வாருடைய திருமுடியிலே வந்து வீற்றிருக்கவேணுமென நினைத்த எம்பெருமான் முதலடியிலே அது செய்தால், நிதிகண்ட ஜன்மதரித்ரன்போலே ஸந்

தோஷாதிசயம் தாங்கமாட்டாமே தளர்ந்திடுவர்; ஆதலால், சுற்றுப்பக்கத்திலே நின்று, அருகே நின்று, கூட நின்று, ஒக்கலையிலே வந்திருந்து, ஹ்ருதயப்ரதேசத்திலே வந்திருந்து, தோளிலே வந்திருந்து, நாவிலே வந்து புகுந்து, கண்ணுள்ளே நின்று, நெற்றியிலே நின்று பிறகு உச்சியிலே நின்றான்; ஆக இங்ஙனே பொறுக்கப் பொறுக்கச்செய்த செயலையநுபவித்து ஈடுபடுகிறாராழ்வார் இத்திருவாய்மொழியில். (*)

2763 இவையுமவையுமுவையும் இவருமவருமுவரும் *
எவையும்யவரும்தன்னுள்ளே ஆகியுமாக்கியுங்காக்கும் *
அவையுள்தனிமுதலெம்மான் கண்ணபிரானென்னமுதம் *
சுவையன்திருவின்மணாளன் என்னுடைச்சூழலுளானே. (க)

| | | | |
|---|---|---|---|
| இவையும் | ஸமீபத்திலுள்ள பொருள்களும் | அவையுள் | அந்த சேதநாசேதநங்களுக்கு அந்தர்யாமியானவனும் |
| அவையும் | தூரத்திலுள்ள பொருள்களும் | | |
| உவையும் | நடுத்தரமாகவுள்ள பொருள்களும் | தனி முதல் | ஒப்பற்ற காரணபூதனும் |
| இவரும் | ஸமீபத்திலுள்ள சேதனர்களும் | எம்மான் | அஸ்மத் ஸ்வாமியும் |
| அவரும் | தூரத்திலுள்ள சேதனர்களும் | கண்ணபிரான் | கண்ணனாக அவதரித்து ஸௌலப்யத்தைக் காட்டினவனும் |
| உவரும் | நடுத்தரமாகவுள்ள சேதனர்களும் | | |
| யவையும் | ஸகல அசேதநங்களும் | என் அமுதம் | எனக்கு அம்ருதம்போல் பரம போக்யனும் |
| யவரும் | ஸகல சேதனர்களும் (பிரளயகாலத்தில்) | சுவையன் | ரஸிகனும் |
| தன்னுள்ளே | தனக்குள்ளே | திருவின் மணாளன் | பெரியபிராட்டியார்க்கு மணவாளனுமானபெருமாள் |
| ஆகியும் | ஆகும்படி வைத்தும் | | |
| ஆக்கியும் | (பிறகு) படைத்தும் | என்னுடை சூழல் | என்னுடைய சுற்றுப்பக்கத்தில் |
| காக்கும் | ரக்ஷித்தும் போருகிறவனும் | உளான் | தங்கியிராநின்றான். |

* * *—சேதநாசேதந வர்க்கங்களெல்லாம் ஸம்ஹார ஸமயத்திலே தன்னுள்ளேயாம்படியாயும் ஸ்ருஷ்டி ஸமயத்திலே உண்டாக்கியும், ஸ்ருஷ்டிக்கப்பட்ட வவற்றுக்கு நேரும் ஆபத்துக்களைப் போக்கி அபிமதங்களைக்கொடுத்து ரக்ஷிக்குமவனாய் அவற்றினுள்ளே அந்தராத்மாவாய் வேறொரு ஸஹாயத்தையு மபேக்ஷியாத காரணமுமாய் ஸ்வாமியுமாய், கண்ண பிரானாக எளிமையைக் காட்டி எனக்குப் பரம போக்யபூதனாய் ரஸிகனான எம்பெருமான் பிராட்டியோடுகூட என்னுடைய சூழலிலே ஆனான். (க)

2764 சூழல்பலபலவல்லான் தொல்லையங்காலத்துலகை *
கேழலொன்றாகியிடந்த கேசவனென்னுடையம்மான் *
வேழமருப்பையொசித்தான் விண்ணவர்க்கெண்ணலரியான் *
ஆழநெடுங்கடல்சேர்ந்தான் அவனென்னருகலிலானே. (உ)

| | | | |
|---|---|---|---|
| பலபல சூழல் வல்லான் | மிகப்பல அவதாரங்கள் செய்ய வல்லவனும் | ஒசித்தான் | ஒடித்து அவ்யானையை முடித்தவனும் |
| தொல்லையம் காலத்து | முன்பொரு காலத்திலே | விண்ணவர்க்கு எண்ணல் அரியான் | தேவர்களுக்கு நினைத்தற்கும் அருமையானவனும் |
| உலகை கேழல் ஒன்று ஆகி இடந்த | பூமியை ஒப்பற்ற வராஹரூபியாகி குத்தியெடுத்து வந்தவனும் | ஆழம் நெடு கடல் சேர்ந்தான் | ஆழமாகிய நீண்ட ஸமுத்திரத்திலே திருக்கண்வளர்ந்தருள்பவனுமான |
| கேசவன் | கேசவனென்னும் திருநாமமுடையவனும் | என்னுடை அம்மான் அவன் | அவ்வெம்பெருமான் |
| வேழம் மருப்பை | (குவலயாபீட மென்னும்) யானையினுடைய கொம்புகளை | என் அருகலிலான் | என்னருகிலுள்ளான் |

*.* *— சூழல் என்னுஞ் சொல் கீழ்ப்பாட்டில் சுற்றுப் பிரதேசம் என்ற பொருளில் வந்தது; இப்பாட்டில் அதுவே சொல் அவதாரமென்ற பொருளில் வந்தது; சூழ்த்துக்கொள்வதற்காகச் செய்த காரியம் [அதாவது] ஸம்ஸாரிகளை அகப்படுத்திக் கொள்வதற்காகச் செய்தது என்ற காரணத்தினால் இச்சொல் அவதாரத்தைக் குறிக்குமென்க. (௨)

2765 அருகலிலாயபெருஞ்சீர் அமரர்களாதிமுதல்வன் *
கருகியநீலநன்மேனிவண்ணன் செந்தாமரைக்கண்ணன் *
பொருசிறைப்புள்ளுவந்தேறும் பூமகளார்தனிக்கேள்வன் *
ஒருகதியின்சுவைதந்திட்டு ஒழிவிலனென்னோடுடனே. (௩)

அருகல் இல் ஆய பெரு சீர் — ஒருநாளும் குறைபடுதலை உடையதல்லாத சிறந்த திருக்குணங்களை யுடையவனும்
அமரர்கள் ஆதி முதல்வன் — நித்யஸூரிகளுக்குத் தலைவனும்
கருகிய நீலம் நல் மேனி வண்ணன் — கறுத்த நீலமணிபோல் விலக்ஷணமான திருமேனி நிறத்தை யுடையவனும்
செம் தாமரை கண்ணன் — செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களை யுடையவனும்
பொரு சிறை புள் உவந்து ஏறும் — செறிந்த சிறகையுடைய பெரிய திருவடியை விரும்பி வாஹனமாகக் கொள்பவனும்
பூமகளார் தனி கேள்வன் — பெரிய பிராட்டியார்க்கு ஒப்பற்ற நாதனுமான எம்பெருமான்
என்னோடுடனே — என்னோடேகூடிநின்று
ஒரு கதியின் சுவை தந்திட்டு ஒழிவிலன் — ஒருவழியாலுள்ள இனிமையைத்தந்து தவிருகிறானில்லை. [ஸகலவித அநுபவங்களையும் தருகின்றானென்றபடி.]

* * *—பெரிய திருவடி திருவனந்தாழ்வான் பிராட்டிமார் முதலானோர் ஓரொரு வகைகளாலே தன்னோடு ஸம்ச்லேஷரஸம் பெறுமாபோலல்லாமல், எல்லாவகைகளாலுமுள்ள ஸம்ச்லேஷரஸங்களையும் நான் பெறும்படி எனக்குத் தந்து என்னை ஒருநாளும் விடாதபடி யானான் எம்பெருமானென்கிறார். அருகல்—குறைதல், அது இல்லாத எனவே, நித்யமான என்றபடி. அருகலிலாய பெருஞ்சீர் என்பதனால் சொல்லப்பட்ட அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநமான ஸ்வரூப வைலக்ஷண்யமென்ன, அமரர்களாதிமுதல்வன் என்பதனால் சொல்லப்பட்ட நித்யஸூரி நிர்வாஹகத்வமென்ன, கருகியநீலநன்மேனிவண்ணன் என்பதனால் சொல்லப்பட்ட விலக்ஷண திவ்யமங்கள விக்ரஹயுக்தத்வமென்ன, செந்தாமரைக்கண்ணன் என்பதனால் சொல்லப்பட்ட புண்டரீகாக்ஷத்வமென்ன, பொருசிறைப்புள்ளுவந்தேறும் என்பதனால் சொல்லப்பட்ட கருடவாஹநத்வமென்ன, பூமகளார்தனிக்கேள்வன் என்பதனால் சொல்லப்பட்ட ச்ரிய:பதித்வமென்ன ஆகிய இந்த அறுசுவையுந் தாராநின்றானென்று உட்கருத்துணர்க. (௩)

2766 உடனமர்காதல்மகளிர் திருமகள்மண்மகளாயர்
மடமகள் * என்றிவர்மூவராளும் உலகமும்மூன்றே *
உடனவையொக்கவிழுங்கி ஆலிலைச்சேர்ந்தவனெம்மான் *
கடல்மலிமாயப்பெருமான் கண்ணனென்னொக்கலையானே. (௪)

உடன் அமர் காதல் மகளிர் — கூடவே அமர்ந்திருக்கைக்கு விருப்பமுள்ள பிராட்டிமார் (யாவரென்னில்)
திரு மகள் மண் மகள் ஆயர் மட மகள் என்ற இவர் மூவர் — ஸ்ரீ மஹாலக்ஷ்மி பூமிப்பிராட்டி இடைக்குலத்துப் பெண்ணாகிய நப்பின்னைப்பிராட்டி என்று சொல்லப்பட்ட இம்மூவராவர்;
ஆளும் உலகமும் மூன்றே — தன்னாலாளப்படுகின்ற உலகங்களும் மூன்றேயாயிருக்கும்;
(ஆக இங்ஙனம் வாய்ந்தவனும்)
அவை உடன் ஒக்க விழுங்கி — அவ்வுலகங்களை விடாமலே ஏககாலத்திலே உண்டு
ஆல் இலை சேர்ந்தவன் எம்மான் — ஆலிலையில் கண்வளர்ந்தவனும் எனக்கு ஸ்வாமியும்
கடல் மலி மாயம் பெருமான் — கடலிற்காட்டிலும் மிகப்பெரிய மாயச்செயல்களால் பெருமைபெற்றவனுமான
கண்ணன் — கண்ணபிரான்
என் ஒக்கலையான் — என் இடுப்பிலே வந்தமர்ந்தான்.

* * *—எம்பெருமான் யசோதைப் பிராட்டியின் இடுப்பிலிருக்குமாபோலே என்னிடுப்பிலே வந்திருத்தல் தனக்குப் பெறும் பேறு என நினைத்திராநின்றானென்கிறார். உலகமும் மூன்றே என்றதில் அழியா வுலகமாகிய பரமபதத்தையுஞ் சேர்த்துப் பொருள் கொள்ளும் பக்ஷத்தில், மேலே "உடனவையொக்கவிழுங்கி" என்பதில் அர்த்தஸ்வபாவத்தாலே பரமபதம் மாத்திரம் கழியுண்ணக்கடவது. பரமபதத்தைச் சேராமலே பாதாளவுலகம் நிலவுலகம் சுவர்க்கவுலகம் என மூவுலகங்களென்னவுமாம். கடல் மலி=திருப்பாற்கடலில் சயனித்தருள்கிற என்றுமாம். (௪)

2767 ஒக்கலைவைத்துமுலைப்பாலுண்ணென்று தந்திடவாங்கி *
செக்கஞ்செகவன்றவள்பால் உயிர்செகவுண்டபெருமான் *
நக்கபிரானோடு அயனுமிந்திரனும்முதலாக *
ஒக்கவும்தோற்றியவீசன் மாயனென்னெஞ்சினுளானே. (௫)

| | |
|---|---|
| ஒக்கலை வைத்து | இடுப்பிலெடுத்துக்கொண்டு |
| முலைப்பால் உண் என்று தந்திட வாங்கி | 'முலைப்பாலையுண்பாய்' என்று சொல்லி முலைகொடுக்க (அம்முலையைக்) கையாற்பிடித்து |
| செக்கம் செக | (அந்தப் பூதனையின்) நினைவு அவளோடே முடியும்படியாக |
| அன்று | அந்நாளில் |
| அவள் பால் உயிர் செக உண்ட பெருமான் | அவளது பாலையும் பிராணனையும் அழிய அமுதுசெய்த ஸ்வாமியானவனும்; |
| நக்கபிரானோடு அயனும் இந்திரனும் முதலாக ஒக்கவும் தோற்றிய ஈசன் | திகம்பரச்சாமியான ருத்ரனும் பிரமனும் இந்திரனும் முதலாகவுள்ள எல்லாரையும் படைத்த ஈசனானவனும் |
| மாயன் | ஆச்சரியகுணசேஷ்டிதங்களையுடையவனுமான எம்பெருமான் |
| என் நெஞ்சின் உளான் | எனது இதயத்திலுள்ளானானன். |

* * *—செக்கஞ் செக என்பதற்குப் பலபடியாகப் பொருள்கூறுவர்; செக்கம் என்று மரணத்திற்குப் பேராய், கண்ணனுக்காக அவள் எண்ணின மரணம் அவளுக்கேயாம்படி என்னுதல்: செக்கஞ் செக=மிகவுஞ் சிவப்பாக என்றபடியாய், "கறுப்புஞ்சிவப்பும் † வெகுளிப்பெயரே" என்ற தமிழர்களின் ஸித்தாந்தத்தின்படி சீற்றத்தைச்சொல்லிற்றாய், மிகவுங் கோபங்கொண்டு என்றபடியுமாம். திருப்பவளம் மிகச் சிவக்கும்படி [அதரத்தின் பழுப்பு நன்கு தெரியும்படி] சிரித்துக்கொண்டே என்றபடியுமாம். அவள்பால்=பால் என்பதை ஏழனுருபாகவுங் கொள்ளலாம். அவளிடத்துள்ள என்றபடி. இப்பாட்டில் நெஞ்சு என்று மார்வைச் சொன்னபடி. (௫)

2768 மாயனென்னெஞ்சினுள்ளான் மற்றும்யவர்க்குமஃதே *
காயமும்சீவனும்தானே காலுமெரியுமவனே *
சேயனணியன்யவர்க்கும் சிந்தைக்கும்கோசரமல்லன் *
தூயன்துயக்கன்மயக்கன் என்னுடைத்தோளிணையானே. (௬)

| | |
|---|---|
| மாயன் என் நெஞ்சில் உள்ளான் | ஆச்சரியனான எம்பெருமான் எனது நெஞ்சில் இருக்கின்றான்; |
| மற்றும் யவர்க்கும் அஃதே | வேறு யாருக்கேனும் அப்படியிருப்பதுண்டோ? (இல்லை;) |
| காயமும் சீவனும் தானே | உடம்பும் உயிரும் தானேயாய், |
| காலும் எரியும் அவனே | காற்றும் நெருப்பும் அவன் தானேயாய், |
| சேயன் | (சிலர்க்கு) தூரஸ்தனாய், |
| அணியன் | (சிலர்க்கு) ஸமீபஸ்தனாய் |
| யவர்க்கும் சிந்தைக்கும் கோசரம் அல்லன் | எப்படிப்பட்ட ஞானிகளுக்கும் மனத்திற்கும் எட்டாதவனாய் |
| தூயன் | பரிசுத்தனாய் |
| துயக்கன் மயக்கன் | (அநுக்ரஹபாத்திரமாகாதவர்களுக்கு) ஸந்தேஹரூபமாயும் விபரீதரூபமாயுமிருக்கும் ஞானங்களைப் பிறப்பிப்பவனான எம்பெருமான் |
| என்னுடை தோள் இணையான் | எனது இரண்டு தோள்களிலுமுளனானான். |

† வெகுளி=கோபம்.

முனிவு இன்றி = பகவத் குணங்களைக் கேட்டால் பொருமைப்படுவார் பலருண்டு; அங்ஙனல்லாமல் என்றபடி. 'முனிவின்றி' என்பதற்கு முநித்வமில்லாமல் என்றும் பொருள் பணிப்பர். முநித்வமாவது மநநசீலத்வ பர்யாயமாகையாலே ஒருவகையான அங்க சேஷ்டையும் செய்யாதிருத்தலைச் சொன்னபடியாகும். அது இன்றி என்றது— அங்க சேஷ்டைகளைச் செய்துகொண்டு என்றவாறு. ஜ்ஞாநாதிக்யத்திற்குப் பலன் பகவத் குணங்களிலீடுபட்டு ஸம்ப்ரமிப்பதேயாம் என்பதை **முழுதுணர் நீர்மையினுரே** என்பதனல் காட்டினர். ஸகல சாஸ்த்ரங்களையும் கற்றவர்களாயிருந்தாலும் பகவத் குணநுபவத்தில் விகாரமடையா திருந்தார்களாகில் அவர்களே அஜ்ஞர்கள். ஒரு சாஸ்த்ரமும் கற்றிலராயினும் பகவத் குணநுபவத்தில் மனமொழி மெய்களால் விகாரப்படுவார்களாகில் அவர்களே ஸர்வஜ்ஞர்கள்—என்பது ஆழ்வாருடைய ஸித்தாந்தமென்க. (சு)

2947. நீர்மையில்நூற்றுவர்வீய ஐவர்க்கருள்செய்துநின்று*
பார்மல்குசேனையவித்த பரஞ்சுடரைநினைந்தாடி*
நீர்மல்குகண்ணினராகி நெஞ்சம்குழைந்துநையாதே*
ஊன்மல்கிமோடுபருப்பார் உத்தமர்கட்கென்செய்வாரே? (எ)

| | |
|---|---|
| நீர்மை இல் நூற்றுவர் வீய | ஈர நெஞ்சு இல்லாதவர்களான துரியோதனன் முதலிய நூறுபேரும் மாளும்படியாக |
| ஐவர்க்கு | பஞ்ச பாண்டவர்களுக்கு |
| அருள் செய்து நின்று | கிருபை பண்ணி |
| பார் மல்கு சேனை அவித்த | பூபாரமாயிருந்த சேனைகளைத் தொலைத்தருளின |
| பரம் சுடரை | பரஞ்சோதியான பெருமானை |
| நினைந்து ஆடி | தியானம் பண்ணிக் கூத்தாடி |
| நீர் மல்கு கண்ணினர் ஆகி | ஆனந்தக் கண்ணீர் நிறைந்த கண்களை யுடையவராகி |
| நெஞ்சம் குழைந்து நையாதே | நெஞ்சுருகி நையாமல் |
| ஊன் மல்கி மோடு பருப்பார் | உடல் தடித்து வயிறு பருப்பவர்கள் |
| உத்தமர்கட்கு என் செய்வார் | பாகவதோத்தமர்களுக்கு யாது செய்வார்? |

* * * எம்பெருமானை நினைப்பதாவது "இவனுடைய ஆச்ரித பாரதந்த்ரியம் இருந்தவாறு என்னே!" என்று நெஞ்சுளுத்துக் கிடப்பதாம். அங்ஙனம் அநுஸந்தித்தவாறே உடல் இருந்தவிடத்தேயிருக்கமாட்டாமல் ஆடும்; கண்களினின்று நீர் வெள்ளமிடும்; நெஞ்சு குழைந்து நையும். இங்ஙனமாகாமே மாம்ஸ பர்வதமென்னும்படி சரீரத்தைப் பருக்கடித்துத் திரியுமவர்கள் அந்த வுடல்கொண்டு லோகோபகாரம் என்ன செய்யப்புகுகிறுர்கள் என்கிருர்.

**உத்தமர்கட்கு என் செய்வாரே?** = எப்போதும் பகவத் குணங்களை அநுஸந்தித்துக்கொண்டு வார்ந்து வடிந்த சரீரங்களையுடைய ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு பகவத் குணநுபவத்திலே உசாத் துணையாயிருக்கப் போகிறுர்களோ? (எ)

2948. வார்புனலந்தணருவி வடதிருவேங்கடத்தெந்தை*
பேர்பலசொல்லிப்பிதற்றிப் பித்தரென்றேபிறர்கூற*
ஊர்பலபுக்கும்புகாதும் உலோகர்சிரிக்கநின்றாடி*
ஆர்வம்பெருகிக்குனிப்பார் அமரர்தொழப்படுவாரே. (அ)

| | |
|---|---|
| வார்புனல் அம் தண் அருவி | சிறந்த தீர்த்தங்களையுடையதும் அழகிய குளிர்ந்த அருவிகளை யுடையதுமான |
| வட திருவேங்கடத்து | வடக்குத் திருமலையில் நிற்கிற |
| எந்தை | எம்பெருமானுடைய |
| பலபேர் | பல திருநாமங்களையும் |
| சொல்லி பிதற்றி | வாய்வந்தபடி சொல்லி |
| பித்தர் என்றே பிறர் கூற | 'அவர்கள் பைத்தியக்காரர்கள்' என்றே பிறர் சொல்லுமாறு |
| ஊர்பல புக்கும் | பல வூர்களிலே புகுந்தும் |
| புகாதும் | அங்குப் புகாமலும் [பலபேர்களுடைய ஸன்னிதானத்திலும் அஸன்னிதானத்திலும் என்றபடி] |
| உலோகர் சிரிக்க ஆடி நின்று | உலகர்கள் சிரிக்கும்படியாக நர்த்தனஞ் செய்துகொண்டிருந்து |
| ஆர்வம் பெருகி குனிப்பார் | ஆசை விஞ்சி கோலாஹலஞ் செய்பவர்கள் |
| அமரர் தொழப் படுவார் | நித்யஸூரிகளாலே வணங்கப் படுவர்கள். |

* * * **பேர் பலசொல்லிப் பிதற்றி** = புகழுநல் லொருவனென்கிற கீழ்த்திருவாய் மொழியில் எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகள் விஷயமாகத்தாம் பேசின பாசுரங்களெல்லாம் வகை வகையாக ஒவ்வொரு பக்தர்களின் வாயிலும் வெளிவரவேண்டுமென்பது கருத்து.

**பித்தரென்றே பிறர்கூற** = ஸ்ரீ வைஷ்ணவர்கள் 'இவன் நம்முடையவன்' என்று அங்கீகரிப்பதிற்காட்டிலும் அவைஷ்ணவரா யிருப்பவர்கள் வசைகூறிக் கைவிடுவதே மிகவும் உத்தேச்யமென்பது

காட்டப்பட்டது. வைஷ்ணவர்களுடைய விஷயீகாரத்திலும் அவைஷ்ணவர்கள் இகழுகையே புருஷார்த்தமென்று கருத்து'' என்பது ஒன்பதினாயிரப்படி.

**ஊர்பலபுக்கும் புகாதும்**='குனிப்பார்' என்பதிலே இதற்கு அந்வயம். பல மனிதர்களின் எதிரிலும், ஒருவருமில்லாத விடத்திலும் களித்துக் கூத்தாடுமவர்கள் என்றபடி. பல மனிதர்களின் எதிரில் ஆடுவது எதற்காகவென்னில்; அவர்கள் கண்டு சிரிக்கவேணுமாம்; அந்தச் சிரிப்பே தாளமாகக் கூத்தாட வேணுமாம். அவர்கள் சிரிக்கச் சிரிக்க இவர்களுடைய ஸம்ப்ரமந்ருத்தம் மீதூர்ந்து நடைபெறுமென்க. ''ஆர்வ்ர். பெருகி'' என்பதனாலும் இது ஸூசிதமென்க. (அ)

2949: அமரர்தொழப்படுவானை அனைத்துலகுக்கும்பிரானை*
அமரமனத்தினுள்யோகுபுணர்ந்து அவன்தன்னோடொன்றாக*
அமரத்துணியவல்லார்களொழிய அல்லாதவரெல்லாம்*
அமரநினைந்தெழுந்தாடி அலற்றுவதேகருமமே. (கூ)

| | |
|---|---|
| அமரர் தொழப் படுவானை | நித்யஸூரிகளினால் ஸேவிக்கப்படுகிறவனும் |
| அனைத்து உலகுக்கும் பிரானை | ஸகல லோகங்களுக்கும் சேஷியுமான ஸர்வேச்வரனை |
| மனத்தினுள் அமர யோகு புணர்ந்து | நெஞ்சிலே ஊன்றியிருக்கும்படி யோகாப்யாஸத்தைப் பண்ணி |
| அவன் தன்னோடு ஒன்றாக அமர | (முக்தி தசையில்) அவனோடு இவ்வாத்ம வஸ்து ஸமானம் என்னும்படியாக |
| துணிய வல்லார்கள் ஒழிய | கருதுமவர்களான கைவல்ய நிஷ்டர்களைத் தவிர |
| அல்லாதவர் எல்லாம் | மற்ற பேர்களெல்லாரும் |
| அமர | அநந்யப்ரயோஜனராய்க் கொண்டு |
| நினைந்து எழுந்து ஆடி | (அவனை) நெஞ்சிலே யநுஸந்தித்து எங்கும் பரந்து கூத்தாடி |
| அலற்றுவதே | (துதிகளை) வாய் பிதற்றுவதே |
| கருமம் | செய்ய வுரியது. |

* * *—இப்பாசுரத்திற்குப் பொருளுரைக்கும் வகையில் பன்னீராயிரப்படியுரைகாரரான அழகிய மணவாளச்சீயர் தவிர மற்ற வியாக்கியான கர்த்தாக்கள் யாவரும் ஒரு மிடறாயிருப்பர்கள். உரைகாரர்மாத்திரம் வேறுவகையாக உரையிடுகின்றார். அவ்வகையைப் பின்னர் எடுத்துரைப்போம். கைவல்யபுருஷார்த்தத்தில் ஊன்றியிருப்பவர்கள் தவிர மற்றையோரெல்லீரும் ப்ரேமபரவசராய் எம்பெருமானுடைய குணாநுபவம் பண்ணிக் களித்துக் கூத்தாடுவதே செய்யத்தக்கது என்கிறாரிப்பாட்டில்—என்கிறவிதுவே திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலான ஆசிரியர்களின் திருவுள்ளம்.

''**அவன் தன்னோ டொன்றாக அமரத்துணிய வல்லார்க ளொழிய**'' என்ற வளவுக்குப் பொருளுரைப்பதில் தான் அபிப்ராய பேதமுள்ளது. அவன் தன்னோடு ஒன்றாக—அவனோடு ஸாம்யம் பெறும்படியாக; ஆத்மவஸ்து அவனோடொத்த சுத்தியை யுடைத்தாக—என்றபடி. கைவல்யாநுபவத்தை விவக்ஷித்துச் சொன்னபடி.

உரைகாரர் பொருள் கொண்டபடி எங்ஙனே யென்னில்; **அவன்தன்னோ டொன்றாக** = 'நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி'' என்று ஓதப்பட்ட பரம ஸாம்யாபத்தியைப் பெறும்படி. **அமரத்துணிய வல்லார்கள்**—நிலைநின்ற அத்யவஸாயத்தைப் பண்ணவல்ல பக்திமான்களும், [ஒழிய] அவர்கள் மாத்திரமேயல்லாமல், **அல்லாதவரெல்லாம்**—மற்றவர்களுங்கூட என்பதாக. (கூ)

2950. கருமமுங்கருமபலனுமாகிய காரணன்தன்னை*
திருமணிவண்ணனைச்செங்கண்மாலினைத் தேவபிரானை*
ஒருமைமனத்தினுள்வைத்து உள்ளம்குழைந்தெழுந்தாடி*
பெருமையும்நாணும்தவிர்ந்து பிதற்றுமின்பேதைமைதீர்ந்தே. (ய)

| | |
|---|---|
| கருமமும் கரும பலனும் ஆகிய காரணன் தன்னை | ஸாதந ரூபமான கர்மங்களும் அக்கருமங்களால் ஸாதிக்கப்படும் பலன்களும் தானிட்ட வழக்காம்படியுள்ள ஜகத்காரண பூதனும் |
| திரு மணி வண்ணனை | அழகிய மணிபோன்ற வடிவை யுடையவனும் |
| செம் கண் மாலினை | செந்தாமரைக் கண்களை யுடையவனும் ஆச்ரித வாத்ஸல்யமே வடிவெடுத்தவனும் |
| தேவபிரானை | தேவர்களுக்குப் பிரானுமான எம்பெருமானை |
| ஒருமை மனத்தினுள் வைத்து | உபாய உபேயங்களில் பேதம் பிறவாதபடி ஒருமைப்பட்ட நெஞ்சிலே வைத்து |
| உள்ளம் குழைந்து | மனமுருகி |
| பெருமையும் நாணும் தவிர்ந்து | அஹங்காரமும் வெட்கமும் இன்றிக்கே |
| எழுந்து ஆடி | கிளம்பிக் கூத்தாடி |
| பேதைமை தீர்ந்து | அவிவேகமு மொழிந்து |
| பிதற்றுமின் | (அவன் குணங்களை) வாய் வந்தபடி சொல்லுங்கள். |

* * * புண்ய பாப ரூபமான கருமங்களுக்கும் அவற்றின் பலங்களுக்கும் நியாமகனாய் ஸகல ஜகத்காரணபூதனாய் நீலமணிவண்ணனாய்ப் புண்டரீகாக்ஷனான எம்பெருமானை, ப்ரயோஜநாந்தரருசி கலசாத நெஞ்சையுடையராய்ப் பரமபக்தி யுக்தராய் அஹங்காரம் முதலிய தோஷங்களற்றவராய் விஷயாந்தரப்பற்று அற்றவர்களாய்க் கொண்டு ஏத்துங்கள் என்றாராயிற்று.

[ஒருமை மனத்தினுள் வைத்து] ஒரு ப்ரயோஜனத்துக்காக வன்றிக்கே நெஞ்சிலேயிருக்கை தானே ப்ரயோஜனமாக நெஞ்சிலே வைத்து—என்று ஈடு. ஒருமை—ஒருபடிப்பட என்றபடி. (௰)

**2951.** தீர்ந்தவடியவர்தம்மைத் திருத்திப்பணிகொள்ளவல்ல*
ஆர்ந்தபுகழச்சுதனை அமரர்பிரானையெம்மானை*
வாய்ந்தவளவயல்சூழ் தண்வளங்குருகூர்ச்சடகோபன்*
நேர்ந்தவோராயிரத்திப்பத்து அருவினைநீறுசெய்யுமே. (கக)

| | |
|---|---|
| தீர்ந்த அடியவர் தம்மை | தனக்கே அற்றுத்தீர்ந்த பக்தர்களை |
| திருத்தி பணி கொள்ள வல்ல | விரோதிகள் அற ஸ்வீகரித்து (அவர்கள் மூலமாக) நித்ய கைங்கரியத்தைக் கொள்ள வல்லவனும் |
| ஆர்ந்த புகழ் அச்சுதனை | நிறைந்த புகழுடையவனும் அச்யுதனென்னும் திருநாம முடையவனும் |
| அமரர் பிரானை எம்மானை | தேவர்களுக்கு ப்ரபுவுமான எம்பெருமானை |
| வாய்ந்த | கிட்டின |
| வளம் வயல் சூழ் தண் வளம் குருகூர் சடகோபன்—; | |
| நேர்ந்த ஓர் ஆயிரத்து இ பத்து | அருளிச் செய்த ஆயிரத்துள் இத்திருவாய்மொழி |
| அரு வினை நீறு செய்யும் | போக்கவரிய பாவங்களை பஸ்மமாக்கிவிடும். |

---

## மூன்றாம்பத்து—ஆறாந்திருவாய்மொழி—செய்யதாமரைக்கண்ணனாய்

கீழ்த் திருவாய்மொழியில், நிந்திக்கப்பட்ட பாபிகளையும் கைவிடமாட்டாத மிக்க கருணை வாய்ந்த ஆழ்வார், அவர்களையும் வழிப்படுத்திக்கொள்ள வேணுமென்று திருவுள்ளம்பற்றி, அன்னவர்களுடைய கல்நெஞ்சிலும் நன்கு பதியுமாறு இத் திருவாய்மொழியில் அப்பெருமானது ஸௌலப்ய குணத்தை யெடுத்துரைக்கின்றார்.

இப் பதிகத்திற்கு உயிரான பாசுரம் "தஞ்சமாகிய தந்தை தாயொடு" என்பதாம். அர்ச்சாவதார வைலக்ஷண்யத்தை நிரூபிக்கும் பாசுரம் அதுவேயாம்.

**2952.** செய்யதாமரைக்கண்ணனாய் உலகேழுமுண்டவவன்கண்டீர்*
வையம்வானம்மனிசர்தெய்வம் மற்றும்மற்றும்மற்றும்முற்றுமாய்*
செய்யசூழ்சுடர்ஞானமாய் வெளிப்பட்டிவைபடைத்தான்*பின்னும்
மொய்கொள்சோதியோடாயினான் ஒருமூவராகியமூர்த்தியே. (க)

| | |
|---|---|
| செய்ய தாமரை கண்ணன் ஆய் | செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களை யுடையவனாய் |
| உலகு ஏழும் உண்ட அவன் | ஸகல லோகங்களையும் (ஒரு சமயத்தில்) திரு வயிற்றிலே வைத்து நோக்கினவனாய் |
| வையம் வானம் மனிசர் தெய்வம் | பூமியும் விண்ணுலகங்களும் (முறையே அவற்றில் வாழ்கின்ற) மனிதரும் தேவதைகளும் |
| மற்றும் | மற்ற விலங்குகளும் |
| மற்றும் | மற்ற ஸ்தாவரங்களும் |
| மற்றும் | மற்றுள்ள பஞ்ச பூதங்களும் |
| முற்றும் ஆய் | மற்றுமுள்ள ஸகலமும் (காரண தசையில்) தன்னுள்ளே அடங்கப் பெற்றவனாய் |
| செய்ய சூழ் சுடர் ஞானம் ஆய் | சிறந்ததும் வியாபகமும் ஒளிமயமுமான ஸங்கல்ப ஜ்ஞானத்தை யுடையனாய் |
| வெளிப்பட்டு | ஸ்ருஷ்டியை உத்தேசித்துத் தோற்றி |
| இவை படைத்தான் | முன்சொன்ன இவையெல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தவனாய் |
| பின்னும் | அதற்கு மேலும் |
| மொய் கொள் சோதியோடு ஆயினான் | செறிந்த தேஜோமயமான பரமபதத்தை நிலயமாக வுடையனா யிருக்கின்ற எம்பெருமான் |
| ஒரு மூவர் ஆகிய மூர்த்தி கண்டீர் | ப்ரஹ்ம விஷ்ணு சிவரூபியாய் நின்று ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நிர்வஹிப்பவன் காண்மின். |

* * * இத்திருவாய்மொழி எம்பெருமானுடைய ஸௌலப்ய குணத்தை நிருபணம் செய்யப் பிறந்த தாயினும் முதலில் பரத்வமே பேசப்பட்டு வருகின்றது; பரத்வமுடையவனுடைய ஸௌலப்யமே பாராட்டவுரியதாகு மென்பதுபற்றி.

செய்யசூழ் சுடர் ஞானமாய் = ஸகல ஜகத்தையும் ஸ்ருஷ்டிப்பதற்கு உபயுக்தமான பகவத் ஸங்கல்பத்தின் பெருமை இத்தால் கூறப்படுகிறது. வருத்த மின்றிக்கே வியாபியாநின்ற விசதமமான தன்னுடைய ஸங்கல்பரூபஜ்ஞானத்தாலே படைத்தா னென்கை.

வெளிப்பட்டு என்பதை எம்பெருமானோடு அந்வயிப்பது முண்டு; இவை என்பதனோடேயே அந்வயிப்பது முண்டு: முந்தினபக்ஷத்தில் வெளிப்பட்டு—ஸ்ருஷ்டிக்கு அபிமுகனாய் நின்று தோற்றி என்றபடி. பிந்தின பக்ஷத்தில், வெளிப்பட்டிவை—வெளிப்பட்ட இவற்றைப் படைத்தானென்கை. ப்ரமாண ப்ரதிபந்நங்களான இவற்றை என்றபடி. தொகுத்தல் விகாரம்.

பின்னும் மோய்கோள் சோதியோடாயினன் = செறிந்த தேஜோமயமான திவ்ய தேசத்திலிருப்பைச் சொல்லுகிறது. பரமபத நிலயன் என்றவாறு. (௧)

**2953.** மூவராகியமூர்த்தியை முதல்மூவர்க்கும்முதல்வன்தன்னை*
சாவமுள்ளனநீக்குவானைத் தடங்கடல்கிடந்தான்தன்னை*
தேவதேவனைத்தென்னிலங்கை யெரியெழச்செற்றவில்லியை*
பாவநாசனைப் பங்கயத்தடங்கண்ணனைப்பரவுமினே! (௨)

| | |
|---|---|
| மூவர் ஆகிய மூர்த்தியை | மூவரும் தானே என்னலாம் படியுள்ளவனாய் |
| முதல் மூவர்க்கும் | (நூல்களில் ஆங்காங்கு) முதல்வராகச் சொல்லப்படுகின்ற அந்த இந்திரன்பிரமன்ஈசன் என்ற மூவர்க்கும் |
| முதல்வன் தன்னை | காரண பூதனாய் |
| சாவம் உள்ளன நீக்குவானை | (அவர்களுக்கு நேரும்) துன்பங்களை யெல்லாம் போக்குபவனாய் |
| தட கடல் கிடந்தான் தன்னை | விசாலமான திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருள்பவனாய் |
| தேவதேவனை | தேவாதி தேவனாய் |
| தென் இலங்கை எரி எழ செற்ற வில்லியை | தென்னிலங்கையில் அக்னி ஜ்வாலையெடுக்கும்படி பகைவரை அழித்த சார்ங்கத்தையுடையவனாய் |
| பாவநாசனை | பரம பாவநனாய் |
| பங்கயம் தட கண்ணனை | தாமரை போன்று பரந்த திருக்கண்களையுடையவனை எம்பெருமானை |
| பரவுமின் | புகழ்ந்து பாடுங்கள். |

* * *—கீழ்ப்பாட்டில் நிரூபித்த பரத்வத்தைக் கேட்டவர்கள் ‘இப்படிப்பட்ட பராத்பரனை நாங்கள் ஆச்ரயிக்க எங்ஙனே கூடும்? என்று சங்கிக்க, அப்படிப்பட்டவன்தானே உங்களோடு ஸஜாதீயனாய் சக்ரவர்த்தி திருமகனாய் வந்து அவதரித்தான் என்று அவதார வெளிமையை இப்பாட்டில் உணர்த்துகின்றார். (௨)

**2954.** பரவிவானவரேத்தநின்ற பரமனைப்பரஞ்சோதியை*
குரவைகோத்தகுழகனை மணிவண்ணனைக்குடக்கூத்தனை*,
அரவமேறிஅலைகடலமரும் துயில்கொண்டவண்ணலை*
இரவுநன்பகலும்விடாது என்றுமேத்துதல்மனம்வைம்மினே. (௩)

| | |
|---|---|
| வானவர் பரவி ஏத்த நின்ற பரமனை | தேவர்கள் வாயாரத் துதிக்கும்படி அமைந்த பராத்பரனாய் |
| பரம் சோதியை | மேலான ஒளியுருவனாய் |
| குரவை கோத்த குழகனை | (கோபிமார்களோடு) ராஸக்ரீடை செய்த ரஸிகனாய் |
| மணி வண்ணனை | நீலமணிவண்ணனாய் |
| குடக்கூத்தனை | குடக்கூத்தாடினவனாய் |
| அரவம் ஏறி | சேஷசயனத்தின் மீதேறி |
| அலை கடல் | அலையெறிகின்ற திருப்பாற்கடலில் |
| அமரும் துயில் கொண்ட | பொருத்தமான நித்திரையைக் கொண்டவனான |
| அண்ணலை | பெருமானை |
| நல் இரவும் பகலும் விடாது | நல்ல இரவும் பகலும் இடையறுமல் |
| என்றும் ஏத்துதல் | எந்நாளும் தோத்திரம் பண்ணுதலில் |
| மனம் வைம்மின் | சிந்தை செலுத்துங்கள். |

* * *—கீழ்ப்பாசுரத்தில் ப்ரஸ்தாவித்த இராமபிரானிற்காட்டிலும் எளியனாய்வந்து திருவவதாரம் பண்ணியருளின கண்ணபிரானை ஆச்ரயிக்கப் பாருங்களென்கிறார். க்ருஷ்ணாவதாரத்திற்கு ஹேதுவாகத் தேவர்கள் பண்ணின தோத்திரத்தைத் திருவுள்ளம்பற்றிப் **பரவி வானவரேத்தநின்ற** என்றருளிச் செய்கிறார். (௩)

2955. வைம்மின்நும்மனத்தென்று யானுரைக்கின்றமாயவன்சீர்மையை*
எம்மனோர்களுரைப்பதென்? அதுநிற்கநாள்தொறும்*வானவர்
தம்மையாளுமவனும் நான்முகனும்சடைமுடியண்ணலும்*
செம்மையாலவன்பாதபங்கயம் சிந்தித்தேத்தித்திரிவரே. (ச)

| | | | |
|---|---|---|---|
| நும் மனத்து வைம்மின் என்று | 'உங்கள் நெஞ்சிலே வையுங்கள்' என்று | நான்முகனும் | பிரமனும் |
| யான் உரைக்கின்ற | என்னால் சொல்லப்படுகின்ற | சடை முடி அண்ணலும் | ஜடாதரக் கடவுளான சிவனும் |
| மாயவன் | மாயோனுடைய | செம்மையால் | முறைமை தவறாது |
| சீர்மையை | சீல குணத்தை | அவன் | அவ்வெம்பெருமானுடைய |
| எம்மனோர்கள் | என்னைப் போன்றவர்கள் | பாதபங்கயம் | திருவடித் தாமரைகளை |
| உரைப்பது என் | சொல்லுவது என்னே? | நாள்தொறும் | எப்போதும் |
| அது நிற்க | அது கிடக்க; | சிந்தித்து | சிந்தனை செய்து |
| வானவர் தம்மை ஆளுமவனும் | தேவர்களை ஆள்பவனான இந்திரனும் | ஏத்தி | துதித்து |
| | | திரிவர் | இதுவே காரியமாக இருப்பர். |

2956. திரியும்காற்றோடகல்விசும்பு திணிந்தமண்கிடந்தகடல்*
எரியும்தீயோடிருசுடர்தெய்வம் மற்றும்மற்றும்முற்றுமாய்*
கரியமேனியன்செய்யதாமரைக்கண்ணன் கண்ணன்விண்ணோரிறை*
சுரியும்பல்கருங்குஞ்சி எங்கள்சுடர்முடியண்ணல்தோற்றமே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| கரிய மேனியன் | சாமளமான வடிவையுடையனாய் | அகல் விசும்பு | விசாலமான ஆகாசமென்ன |
| செய்ய தாமரை கண்ணன் | செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களை யுடையனாய் | திணிந்த மண் | கடினமான பூமியென்ன |
| விண்ணோர் இறை | நித்யஸூரி நாதனாய் | கிடந்த கடல் | கரை கடவாமல் கிடந்த ஸமுத்ரமென்ன |
| சுரியும் பல் கரி குஞ்சி | சுருண்டு அலகலகாய்க் கருமையாகிய குழற்கற்றையையுடையனாய் | எரியும் தீயோடு | ஜ்வலிக்கிற அக்னியென்ன |
| | | இரு சுடர் | சந்திர ஸூர்யர்களென்ன |
| சுடர் முடி | ஒளி பொருந்திய திருமுடியையுடையனாய் | தெய்வம் | (மற்றுள்ள) தேவதைகளென்ன |
| எங்கள் அண்ணல் கண்ணன் தோற்றம் | எமக்கு ஸ்வாமியான கண்ணபிரானுடைய விளக்கமானது, | மற்றும் | மற்றுள்ள மானிடர்களென்ன |
| | | மற்றும் | மற்றுள்ள திர்யக் ஸ்தாவரம் முதலியவைகளென்ன (ஆகிய) |
| திரியும் காற்றோடு | இடையறாது உலாவுகின்ற வாயுவென்ன | முற்றும் ஆய் | ஸகலஸ்வரூபமாயிருக்கும். |

* * *—எம்பெருமானுடைய விபூதிவிஸ்தாரங்களை அநுபவித்துப் பேசுகிறார். **திரியு**மென்று தொடங்கி "**எரியுந்தீயோடு**" என்னுமளவும் பஞ்சபூதங்கள் பேசப்பட்டன. இப்பஞ்சபூதங்களும் எம்பெருமானிட்ட வழக்கு. சந்திரன் ஸூர்யன் முதலான தேவர்களும் மனிதர்களும் விலங்குகளும் மற்றுமுள்ள யாவையும் அப்படியே. ஆக முன்னடிகளால் எம்பெருமானுடைய ஜகதாகாரத்வம் சொல்லப்பட்டு, மேல் அஸாதாரண விக்ரஹயுக்தனாயிருக்குமிருப்பு சொல்லப்படுகிறது.

ஆறாயிரப்படியை நோக்குமிடத்து, பாசுரமுள்ளபடியே அந்வயக்ரமத்தைப் பிள்ளான் திருவுள்ளம்பற்றினதாகப் புலப்படுகின்றது; **அண்ணல் தோற்றமே**—"எம்பெருமானை நான் காணப் பெற்றேன்" என்பது ஆறாயிரம், (ரு)

2957. தோற்றக்கேடவையில்லவனுடையான் அவனொருமூர்த்தியாய்*
சீற்றத்தோடருள்பெற்றவனடிக்கீழ்ப் புகநின்றசெங்கண்மால்*
நாற்றத்தோற்றச்சுவையொலி உறலாகிநின்ற*எம்வானவ
ரேற்றையேயன்றி மற்றொருவரையானிலேனெழுமைக்குமே. (சு)

| | | | |
|---|---|---|---|
| தோற்றம் கேடு அவை | ஜனன மரணங்களாகிய அவைகள் | ஒரு மூர்த்தி ஆய் | ஒப்பற்ற நரசிங்கமூர்த்தியாய் |
| இல்லவன் | இல்லாதவனும் | சீற்றத்தோடு அருள் பெற்றவன் | சீறியிருக்கும் நிலைமையிலேயே கருணைக்கு இலக்கான ப்ரஹ்லாதன் |
| உடையான் | அவற்றையுடையவனும் | | |
| அவன் | ப்ரமாண ப்ரஸித்தனும், | | |

அடி கீழ்புக நின்ற — தன் திருவடிவாரத்தில் கூசாது நிற்கப்பெற்றவனும்,
செம் கண் மால் — சிவந்த திருக்கண்களையும் ஆச்ரித பக்ஷபாதத்தையு முடையவனும்
நாற்றம் தோற்றம் சுவை ஒலி உறல் ஆகி நின்ற — கந்தம் ரூபம் ரஸம் சப்தம் ஸ்பர்சம் என்கிற பஞ்ச விஷயங்களுமாய் நிற்பவனும்
எம் வானவர் ஏற்றையே அன்றி — தேவாதிதேவனுமான எம்பெருமானையேயன்றி
எழுமைக்கும் — எல்லாக் காலத்திலும்
மற்று ஒருவரை — வேறொருவரை
யான் இலேன் — நான் புகலாகவுடையேனல்லேன்

* * *—ஆச்ரித விஷயத்தில் எல்லைகடந்த வாத்ஸல்யமுடைய நரஸிம்ஹ மூர்த்தியையொழிய மற்றொருவரை யானுடையேனல்லேனென்கிறார், தோற்றமாவது உத்பத்தி; கேடாவது விநாசம்; இவை யிரண்டும் பகவத்ஸ்வரூபத்திலில்லாமையாலே **தோற்றக்கேடவையில்லவன்** என்றது. இவை ஸ்வரூபத்தி லில்லாவிடினும் * **அஜாயமாநோ பஹுதா விஜாயதே** * என்றும் * எங்கின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் * என்றும் சொல்லுகிறபடியே ஸ்வேச்சையாலே பரிக்ரஹிக்கும் திருமேனிகளுக்கு உத்பத்தி விநாசங்கள் உள்ளனபோல் தோற்றுகையாலே ‘உடையான் என்றும் சொல்லிற்று. தோற்றக்கேடவை யுடையான் என்றபடி. இப்பொருளைவிட, **உடையான்** என்பதற்கு ஸ்வாமியென்கிற பொருள் சிறக்கும்; இதுவே ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றினதுமாகும், [உடையான்.] தோற்றக் கேடுள்ள பதார்த்தங் களை யுடையத் தனக்கு சேஷமாக வுடையான். நிருபாதிக சேஷி.'' என்பது ஈடு.

**நாற்றத்தோற்றமித்யாதி.** சப்தாதி விஷயங்கள் ஸம்ஸாரிகளுக்கு வேறாயிருக்கும்; தமக்கு அவையெல்லாம் எம்பெருமானேயாயிருப்பன் என்கிறது. (சு)

2958. எழுமைக்குமெனதாவிக்கு இன்னமுதத்தினையெனதாருயிர்*
கெழுமியகதிர்ச்சோதியை மணிவண்ணனைக்குடக்கூத்தனை*
விழுமியவமரர்முனிவர்விழுங்கும் கன்னற்கனியினை*
தொழுமின்தூயமனத்தராய் இறையும்நில்லாதுயரங்களே. (எ)

எழுமைக்கும் — எல்லா நிலைமைகளிலும்
எனது ஆவிக்கு இன் அமுதத்தினை — என் ஆத்மாவுக்கு இனிய அம்ருதம் போன்றவனும்
எனது ஆர் உயிர் கெழுமிய கதிர் சோதியை — என்னுடைய அருமையான உயிரோடே கலந்து நிற்கிற பரஞ்சோதியுருவனும்
மணி வண்ணனை — நீலமணி நிறத்தனும்
குடக் கூத்தனை — குடக் கூத்தாடினவனும்
விழுமிய அமரர் முனிவர் விழுங்கும் கன்னல் கனியினை — சிறந்த தேவர்களாலும் முனிவர்களாலும் அநுபவிக்கப் படுகிற கன்னற்கனி போன்றவனுமான எம்பெருமானை
தூய மனத்தர் ஆய் — அழுக்கற்ற மனமுடையீர்களாய்
தொழுமின் — தொழுங்கள்;
துயரங்கள் இறையும் நில்லா — (தொழுதால்) துன்பங்களானவை சிறிதேனும் நிற்கமாட்டா.

* * *—எம்பெருமான் இப்படி ஆச்ரித ஸுலபனாகையாலே அவன் பக்கலில் நீங்கள்பண்ணின துர்லபத்வசங்கையைத் தவிர்ந்து அவனை ஆச்ரயியுங்கள்; உங்கள் துயரங்கள் தொலைந்துபோம் என்கிறார்.

**[எனது ஆவிக்கு எழுமைக்கும் இன்னமுதத்தினை]** பகவத்விஷய ரஸமறியாமல் விஷயாந்தரங் களில் மண்டிக்கிடந்த என்னெஞ்சுக்கு இனிமேலுள்ள காலமெல்லாம் பரம போக்யனாயிருப்பவனை யென்றபடி. **எழுமைக்கும்** என்றது காலமுள்ளதனையும் என்றவாறு. **[எனது ஆருயிர் கெழுமிய கதிர்ச் சோதியை]** எம்பெருமானும் ஆழ்வாரோடே கலந்தபின்பே ஒளிமல்கப் பெற்றானென்க. (எ)

2959. துயரமேதருதுன்பவின்பவினைகளாய் அவையல்லனாய்*
உயரநின்றதோர்சோதியாய் உலகேழும்உண்டுமிழ்ந்தான்தன்னை*
அயரவாங்குநமன்தமர்க்கு அருநஞ்சினைஅச்சுதன்தன்னை*
தயரதற்குமகன்தன்னையன்றிமற்றிலேன் தஞ்சமாகவே. (அ)

துயரமே தரு — பரிதாபத்தையே தரக்கடவதான
துன்பம் இன்பம் வினைகள் ஆய் — புண்ய பாபரூப கருமங்களுக்கு நியாமகனாய்
அவை அல்லன் ஆய் — அவற்றுக்குத்தான் வசப்படாதவனாய்
உயர நின்றது ஓர் சோதி ஆய் — உயர்ந்த நிலமாகிய பரமபதத்திலெழுந்தருளியிருக்கின்ற விலக்ஷண தேஜோமய விக்ரஹ யுக்தனாய்

| | |
|---|---|
| உலகு ஏழும் | எல்லா வுலகங்களையும் |
| உண்டு உமிழ்ந்தான் தன்னை | (பிரளயத்தில்) உண்டு (மீண்டும்) வெளிப்படுத்தி ரக்ஷிப்பவனாய் |
| அயர வாங்கும் | மோஹிக்கும்படி உயிரை அபஹரிக்கின்ற |
| நமன் தமர்க்கு | யமபடர்களுக்கு |
| அரு நஞ்சினை | மீட்க முடியாத விஷமாய் |
| அச்சுதன் தன்னை | தன்னைப் பணிந்தாரை நழுவ விடாதவனாய் |
| தயரதற்கு மகன் தன்னை அன்றி | சக்ரவர்த்தி திருமகனான எம்பெருமானையல்லது |
| மற்று | மற்றொரு தெய்வத்தை |
| தஞ்சம் ஆக இலேன் | சரணமாக வுடையேனல்லேன். |

* * *—மற்றுள்ளாரும் தம்முடைய பக்ஷத்தையறிந்து ருசிபண்ணுகைக்காக 'நான் சக்ரவர்த்தி திருமகனை யல்லது மற்றொருவரை ஆபத்தனமாகப் பற்றியிரேன்' என்று தமது உறுதியை வெளியிடுகிறார்.

**துயரமே தரு** என்கிற அடைமொழி துன்பவினையிற் போலவே இன்ப வினையிலும் அந்வயிக்கும். பாபம் போலவே புண்யமும் துயரம் தரக்கூடியதேயாகும். பாபத்திற்காட்டிலும் புண்ணியம் நன்றாயிருந்ததேயாகிலும் மோக்ஷ மார்க்கத்திற்கு இடையூறாருந்திறத்தில் இரண்டும் ஒக்குமாதலாலும், "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்று உபநிஷத்தும் ஓதுகையாலும் புண்ய பாபங்களிரண்டுமே தொலையக் கடவனவாம். (அ

**2960.** தஞ்சமாகியதந்தைதாயொடு தானுமாயவையல்லனாய்*
எஞ்சலில்அமரர்குலமுதல் மூவர்தம்முள்ளுமாதியை*
அஞ்சிநீருலகத்துள்ளீர்கள்! அவனிவனென்றுகூழேன்மின்*
நெஞ்சினால்நினைப்பான்யவன் அவனாகும்நீள்கடல்வண்ணனே. (கூ)

| | |
|---|---|
| உலகத்து உள்ளீர்கள் | உலகத்தவர்களே!, |
| தஞ்சம் ஆகிய தந்தையொடு தாய்தானும் ஆய் | ரக்ஷிக்கும் தன்மை பொருந்திய தந்தையும் தாயுமாய் |
| அவை அல்லன் ஆய் | அவ்வளவோடும் நில்லாத ஸகலவித பந்துவுமாய் |
| எஞ்சல் இல் | (பகவதநுபவத்தில்) குறைதல் இல்லாத |
| அமரர் குலம் முதல் | நித்யஸூரிகளின் திரளுக்கு தலைவனாய் |
| மூவர் தம் உள்ளும் | மும்மூர்த்திகளுள்ளும் |
| ஆதியை | முதல்வனான எம்பெருமானைக் குறித்து |
| நீர் | நீங்கள் |
| அஞ்சி | மேன்மை கண்டு கலங்கி |
| அவன் இவன் என்று | எல்லை கடந்த மஹிமையை யுடைய அந்த எம்பெருமான் வேறு, இந்த அர்ச்சாரூபியான எம்பெருமான் வேறு என்று கொண்டு |
| கூழேல்மின் | கலங்கியிருக்க வேண்டா; |
| நெஞ்சினால் | நெஞ்சாலே |
| நினைப்பான் யவன் | நினைந்து உகந்தருள்விக்கப் பட்டவன் யவன் |
| அவன் | அவனே |
| நீள் கடல் வண்ணன் ஆகும் | விசாலமான கடல் போன்ற நிறத்தை யுடைய ஸர்வேச்வரனாவன். |

* * *—'எம்பெருமான் ஸ்ரீவைகுண்டத்திலெழுந்தளியிருக்கு மிருப்பு எங்களுக்கு உபயோகபடுவதன்று; ராம க்ருஷ்ணாதி அவதாரங்கள் பண்ணின காலத்தில் நாங்கள் அனுகியிருந்து வாழப்பெற்றிலோம்; ஆனபின்பு எங்ஙனே அவனைக் கண்டு ஆச்ரயிக்கும்படி? என்று ஸம்ஸாரிகள் வினவுவதாகக்கொண்டு, அவர்களுக்கு உத்தரமுரைக்கிறார்;—நீங்கள் ஏதேனு மொருபடி உகந்தருளப்பண்ணி ஆச்ரயிப்பது; அத்திருமேனியையே அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தானமாக விரும்பியருளக் குறையில்லையென்கிறார். இப்பதிகத்திற்கு இப்பாசுரமே உயிராயிருக்கும். இப்பாட்டின் பிரமேயத்திற்கு அவதாரிகை போன்றனவே கீழ்ப்பாசுரங்கள்.

**மூவர்தம்முள்ளுமாதியை** என்றதற்கு, பிரமன் முதலிய மூன்று மூர்த்திகளிலும் வைத்துக்கொண்டு பிரதானனாக வுள்ளவன் என்றும், 'மூவர்தம்' என்ற விடத்தில் **தம்** என்பதை **தாம்** என்பதன் குறுக்கலாகக்கொண்டு, மூவர்தாம்—பிரமன் சிவன் இந்திரனாகிய மூவரும், **உள்ளும்**—தியானிக்கிற, ஆதி என்றும் பொருள் கொள்ளலாம். (க

**2961.** கடல்வண்ணன்கண்ணன் விண்ணவர்கருமாணிக்கமெனதாருயிர்*
படவரவினணைக்கிடந்த பரஞ்சுடர்பண்டுநூற்றுவர்*
அடவரும்படைமங்க ஐவர்கட்காகிவெஞ்சமத்து*அன்றுதேர்
கடவியபெருமான் கனைகழல்காண்பதென்றுகொல்கண்களே? (ய

| | | | |
|---|---|---|---|
| கடல் வண்ணன் | கடல் போன்ற நிறத்தை யுடையவனாயும் | ஐவர்கட்கு ஆகி | பாண்டவ பக்ஷபாதியாகி |
| கண்ணன் | கண்ணபிரானாயும் | வெம் சமத்து | கொடிய பாரத யுத்தத்தில் |
| விண்ணவர் கரு மாணிக்கம் | பரமபதத்திலுள்ளவர்கட்கு நீலமணிபோலே போக்யனாயும் | அன்று | பகைவர் மேலிட்டு வந்த அந்நாளில் |
| எனது ஆர் உயிர் | எனது அருமையான உயிராயும் | தேர் கடவிய | (அர்ஜுநனுக்குத்) தேர் செலுத்திய |
| படம் அரவு இன் அணை கிடந்த பரம் சுடர் | படங்களையுடைய ஆதிசேஷனாகிற இனிய படுக்கையில் சயனித்த பரஞ்சோதியாயும் | பெருமான் | பெருமானாயிருக்கின்ற எம்பெருமானுடைய |
| பண்டு அட வரும் நூற்றுவர் படை மங்க | முன்பொருகால் கொல்வதற்காக திரண்டு வருகின்ற துரியோதனாதிகளின் சேனை தொலையும்படியாக | கனை கழல் கண்கள் காண்பது என்று கொல் | (வீரத்தண்டையினால்) ஒலிக்கின்ற திருவடிகளை (என்) கண்கள் ஸேவிக்கப் பெறுவது என்றைக்கோ ! |

* * * ஆழ்வார் தாம் உபதேசிக்கத் தொடங்கின ஸௌலப்ய காஷ்டையை அர்ச்சாவதார பர்யந்தமாக அருளிச்செய்து முடித்து, தாம் அகப்பட்ட துறையான க்ருஷ்ணாவதாரத்தை அநுபவிக்க ஆசைப்படுகிறார் இப்பாட்டில். இவ்வாழ்வார் அர்ச்சாவதார ஸௌலப்ய மறிந்திருக்கச் செய்தேயும் க்ருஷ்ணாவதாரத்திலே **எத்திறம்!** என்று மோஹிக்கு மியல்வினராதலால் அவ்வவதாரந் தன்னிலேயே இப்போதிவர் ஈடுபட்டுப் பேசுவதும் பொருந்தும்.

ஸேநாதூளியும் உழவுகோலும் பிடித்த சிறுவாய்க்கயிறும் தேருக்குக் கீழே தொங்கவிட்ட திருவடிகளும் அதிலே சாத்தின சிறு சதங்கையுமாய் ஸாரத்ய வேஷத்தோடே நின்றபோதைத் திருவடிகளில் ஆபரண த்வநி செவிப்படவும் அவ்வடிவைக் காணவுமாயிற்று இவர்க்குண்டான ஆசை. (௰)

2962. கண்கள்காண்டற்கரியனாய்க் கருத்துக்குநன்றுமெளியனாய்*
மண்கொள்ஞாலத்துயிர்க்கெல்லாம் அருள்செய்யும்வானவரீசனை*
பண்கொள்சோலைவழுதிநாடன் குருகைக்கோன்சடகோபன்சொல்*
பண்கொளாயிரத்திப்பத்தால் பத்தராகக்கூடும்பயிலுமினே. (கக)

| | | | |
|---|---|---|---|
| கண்கள் காண்டற்கு அரியன் ஆய் | கண்களால் பார்ப்பதற்கு அருமைப்பட்டவனாகி | பண் கொள் சோலை வழுதி நாடன் | (வண்டு முதலியவற்றின்) இசைமிகுந்த சோலைகளை யுடைய திருவழுதி நாட்டை யுடையராய் |
| கருத்துக்கு என்றும் எளியன் ஆய் | தியானத்திற்கு மிகவும் சுலபனாய் | குருகை கோன் சடகோபன் சொல் | திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் அருளிச் செய்த |
| மண் கொள் ஞாலத்து உயிர்க்கு எல்லாம் | பூமண்டலத்திலுள்ள பிராணிகளுக்கெல்லாம் | பண் கொள் ஆயிரத்து | ராக ப்ரதாநமான இவ்வாயிரத்தினுள்ளும் |
| | | இப் பத்தால் | இப்பதிகத்தினால் |
| | | பத்தர் ஆக கூடும் | பக்தியை யுடையராகக்கூடும்; (ஆதலால் ;) |
| அருள் செய்யும் வானவர் ஈசனை | (அர்ச்சாவதார முகத்தாலே) க்ருபை பண்ணுகிற தேவாதி தேவனைக் குறித்து, | பயிலுமின் | (இப்பதிகத்தை) அப்பஸியுங் கோள். |

---

## மூன்றாம்பத்து ஏழாந்திருவாய்மொழி—பயிலுஞ்சுடரொளி

பாகவத சேஷத்வமாகிற பரமபுருஷார்த்தத்தை யருளிச்செய்கிறார்.

2963. பயிலும்சுடரொளிமூர்த்தியைப் பங்கயக்கண்ணனை*
பயிலவினிய நம்பாற்கடல்சேர்ந்தபரமனை*
பயிலும்திருவுடையார் யவரேலுமவர்கண்டீர்*
பயிலும்பிறப்பிடைதோறு எம்மையாளும்பரமரே. (க)

| | | | |
|---|---|---|---|
| பயிலும் சுடர் ஒளி மூர்த்தியை | செறிந்த சுடர்ச் சோதி யுருவனாய் | கயம் கண்ணனை | தாமரை போன்ற திருக் கண்களை யுடையனாய் |

| | | | |
|---|---|---|---|
| பயில இனிய | பழகப் பழகப் பரம போக்யனாய் | யவர் ஏலும் | *எதுபிறப்பு ஏதியல்வாக நின்றவரானாலும் |
| நம் பால் கடல் சேர்ந்த பரமனை | நமக்காகத் திருப்பாற் கடலில் துயில் கொண்டருளும் பரம புருஷனான எம் பெருமானை | அவர் | அவர்களே |
| | | பயிலும் பிறப் பிடை தோறு | மேன்மேலும் நேர்கின்ற பிறவிகள் தோறும் |
| பயிலும் திரு உடையார் | நிரந்தரானுபவம் பண்ணுகை யாகிற செல்வமுடைய வர்கள் | எம்மை | நம்மை |
| | | ஆளும் | அடிமை கொள்ளவல்ல |
| | | பரமர் கண்டீர் | மஹான்களாவர். |

* * *—எம்பெருமானுடைய வடிவழகிலும் திருக்கல்யாண குணங்களிலும் ஈடுபட்டிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஆரேனுமாகிலும் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார். சுத்தஸத்வமயமாய் ஸ்வரூப ப்ரகாசகமான திவ்ய விக்ரஹத்தி லீடுபட்டவர்கள் எமக்கு ஸ்வாமிகள் என்கை.

**பங்கயக்கண்ணனை**=கீழ்ச் சொன்ன வடிவழகிலுங்கூட அகப்படாதாரையும் அகப்படுத்திக் கொள்ளவல்ல திருக்கண்ணழகிலே யீடுபடுமவர்கள் எமக்கு ஸ்வாமிகள் என்கை.

**பயிலவினிய**=' பயிலப்பயில வினிய ' என்றபடி. பகவத் விஷயத்தில் இடைவிடாத பரிசயம் பண்ணினாலும் இனிமை [—போக்யதை] ப்ரதிபத்தி விஷயமாகுமேயல்லது வைரஸ்யம் ஒருபோதும் தோற்றாதென்று கருத்து.

**யவரேலும்**=பரமனைப் பயிலுந் திருவுடையவர்கள் பிறந்த வருணம் எதுவாகவுமாம், அவர்களுடைய அறிவு, தொழில் முதலியவை எப்படிப்பட்டதாகவுமாம். அவற்றைக் கணிசிக்கத் தேவையில்லை; அவர்களிடத்துப் பரமனைப் பயிலுந் திரு உள்ளதா என்பதொன்றே பார்க்கத்தக்கது என்றபடி. (க)

2964. ஆளும்பரமனைக்கண்ணனை ஆழிப்பிரான்தன்னை*
தோளுமோர்நான்குடைத் தூமணிவண்ணனெம்மான்தன்னை*
தாளும்தடக்கையும்கூப்பிப் பணியுமவர்கண்டீர்*
நாளும்பிறப்பிடைதோறு எம்மையாளுடைநாதரே. (உ)

| | | | |
|---|---|---|---|
| ஆளும் பரமனை | ஆள்கின்ற பரம புருஷனையும் | தாளும் தட கையும் கூப்பி பணியும் அவர் | கால்களையும் கைகளையும் கூப்பி நமஸ்கரிப்பவர்கள் |
| கண்ணனை | ஸ்ரீ க்ருஷ்ணனையும் | | |
| ஆழி பிரான் தன்னை | திருவாழியாழ்வானையுடைய உபகாரகனையும் | பிறப்பிடை தோறு | ஜன்மந்தோறும் |
| ஓர் நான்கு தோளும் உடை | ஒப்பற்ற நான்கு புஜங்களை யுடையவனையும் | நாள் தோறும் | தினந்தோறும் |
| தூ மணி வண்ணன் | பரிசுத்தமான நீலமணி போன்ற நிறத்தையுடையவ னையு மிருக்கின்ற | எம்மை ஆள் உடை நாதர் கண்டீர் | எங்களை ஆட்கொள்ளும் அடிகளாவர். |
| எம்மான் தன்னை | எம்பெருமானை | | |

* * *—எம்பெருமானுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்தால் வசீகரிக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் எனக்கு ஸ்வாமிகளென்கிறார். கீழ்ப்பாட்டில் * பரமனைப்பயிலுந் திருவுடைய ஸ்ரீ வைஷ்ணவர்களே எம்மையாளும் பரமர் என்று சொல்லிவைத்து இப்பாட்டில் "**ஆளும்பரமனை**" என்றால் இது தகுதியோ? பாகவதர்களன்றோ ஆளும்பரமர்; இப்போது எம்பெருமானை ஆளும்பரமனாகச் சொல்லலாமோ வென்னில்; சொல்லலாம்; எம்பெருமான் தன் திருவடிகளின் கீழ்வந்து புகுந்தவர்களைப் பாகவத சேஷபூதர்களாக ஆக்கி ஆள்கின்றானென்பதுவே இங்கு விவக்ஷிதம். "அடியார்க்கென்னை யாட்படுத்தவிமலன்" (927) என்ற திருப்பாணாழ்வார் பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தரும்.

**தாளுந்தடக்கையுங்கூப்பி** என்றவிடத்தில் ஒரு நுட்பம் கண்டறியத்தக்கது; தாள் கூப்புகையாவது என்ன? கை கூப்புகையாவது என்ன? என்று ஆராயவேணும். இவையிரண்டாலும் ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் தெரிவிக்கப்பட்டவாறும்; தாள்களைக் கூப்பிவிட்டால் வேறெங்கும் எனக்குப் போக்கிடமில்லை யென்று ஸூசனையாதலால் அதனால் அநந்யகதித்வம் தெரியும்; கைகூப்பிவிட்டால் என்கையில் ஒன்றுமில்லை என்கிற ஸூசனையாதலால் அதனால் ஆகிஞ்சந்யம் தெரியும். ஆக, அஹங்கார மமகாரங்கள் அற்றபடியைக் கூறினவாறு. (உ)

2965. நாதனைஞாலமும்வானமுமேத்தும் நறுந்துழாய்ப்
போதனை*பொன்நெடுஞ்சக்கரத்து எந்தைபிரான்தன்னை*
பாதம்பணியவல்லாரைப் பணியுமவர்கண்டீர்*
ஓதும்பிறப்பிடைதோறு எம்மையாளுடையார்களே. (௩)

| | |
|---|---|
| நாதனை | ஸ்வாமியாய் |
| ஞாலமும் வான மும் ஏத்தும் | உபய விபூதியிலுள்ளாரும் ஏத்துதற்குரியவனுய் |
| நறு துழாய் போதனை | பரிமளமுள்ள திருத்துழாய் மலர்மாலையை யுடையனுய் |
| பொன் நெடு சக்கரத்து எந்தை பிரான் தன்னை | அழகினுல் உயர்ந்த திரு வாழியை யுடையனுன எம்பெருமானை |

| | |
|---|---|
| பாதம் பணிய வல்லாரை பணியும் அவர் | திருவடிகளில் வணங்க வல்லவர்களை வணங்கு மவர்கள், |
| ஓதும் பிறப்பிடை தோறு | பேசப்படுகிற ஜன்மங்கள் தோறும் |
| எம்மை ஆள் உடையார்கள் கண்டீர் | எங்களை அடிமை கொள்ப வர்களாவர். |

* * *—எம்பெருமானுடைய தோளும் தோள் மாலையுமான அழகிலே தோற்றவர்களான பாகவதர்களுக்கும் பக்தராயுள்ளவர்கள் எனக்கு ஸ்வாமிகளென்கிருர்.

இப்பாசுரத்தின் ஈட்டில் ஒரு ஐதிஹ்யமுளது.—(அதாவது) முற்காலத்தில் பிள்ளையாத்தான் என்பாரொருவர் ஆசார்ய பும்ஸ்த்வப்பிடார் பொலிய நிற்பவராகையாலே க்ருஹஸ்தர்களான ஆசார்யர்களிடத்திலே பணிந்திருந்து அர்த்த விசேஷங்கள் கேட்கத் திருவுள்ளமில்லாதவராய் நஞ்சீயர் பக்கலிலே வந்து 'எனக்கு ஓருரு திருவாய்மொழி அருளிச்செய்ய வேணும்' என்று கேட்க, 'நம்பிள்ளை பக்கலில் கேட்டால்தான் விசதமாகும்; அங்கே சென்று கேளும்' என்று நஞ்சீயர் அருளிச் செய்ய, அது கேட்ட அவர் 'நம்பிள்ளையினிடத்தில் கேட்பதானுல் அவரை நான் தண்டன் ஸமர்ப்பிக்கவேண்டிய தாகுமே; அதற்கு இருய்த்தன்ருே ஸ்வாமி பக்கலில் பிரார்த்திக்கிறேன்' என்றுகூற, அது கேட்ட நஞ்சீயர் "அப்படி ஒரு நிர்ப்பந்தமில்லை; என்று சொல்லிக்கொண்டே நம்பிள்ளையை வரவழைத்து 'இவனுக்குப் பாங்கானபடி ஓருரு திருவாய்மொழி சொல்லும்' என்று நியமித்தருள, நம்பிள்ளையும் ஆசார்ய நியமனத்தை சிரஸாவஹித்து அப்படியே அருளிச் செய்துவர, இத்திருவாய்மொழியளவும் கேட்டு வந்த அவர் பாகவதர்களின் பெருமை இப்படியன்ருே இருப்பதென்று தேறி, அதுவரையில் தாமிருந்த நிலைமைக்கு மிகவும் அநுதபித்து அன்று முதலாக நம்பிள்ளையினிடத்திலே அளவுகடந்த ப்ராவண்யம் காட்டப்புக, நம்பிள்ளை அதற்கு இசையா தொழியவே அவர் நஞ்சீயரிடத்திற் சென்று "பாகவத வைபவம் தெரியாமலே முன்பு அப்படிச் சொன்னேன்; க்ஷமித்தருளவேணும்; இனி அடியேன் அநுவர்த்திக்கும் படிகளுக் கெல்லாம் நம்பிள்ளை இசைந்திருக்குமாறு ஸ்வாமி நியமித்தருளவேணும்" என்று நிர்ப்பந்தித்துப் போந்தார் என்பதாக. (௩)

**2966.** உடையார்ந்தவாடையன் கண்டிகையன்உடைநாணினன்*
புடையார்பொன்னூலினன் பொன்முடியன்மற்றும்பல்கலன்*
நடையாவுடைத்திருநாரணன் தொண்டர்தொண்டர்கண்டீர்*
இடையார்பிறப்பிடைதோறு எமக்கெம்பெருமக்களே. (௪)

| | |
|---|---|
| உடை ஆர்ந்த ஆடையன் | திருவரைக்குத் தகுதியான திருப்பரிவட்டத்தை யுடையவனும் |
| கண்டிகையன் | கண்ட பூஷணத்தை யுடைய வனும் |
| உடை நாணினன் | திருப்பரிவட்டத்தின்மேல் சாத்தின திருவரை நாணை யுடையவனும் |
| புடை ஆர் பொன் நூலினன் | ஸந்நிவேச மமைந்த பொற் பூணூலை யுடையவனும் |

| | |
|---|---|
| பொன் முடியன் | அழகிய திருமுடியை யுடைய வனும் |
| மற்றும் பல்கலன் நடையா உடை திரு நாரணன் | மற்றும் பலவகைப்பட்ட ஆபரணங்களையும் இயற்கையாக வுடையவனுமான ஸ்ரீமந்நாராயணனுக்கு |
| தொண்டர் தொண்டர் | அடியரானுர்க்கும் அடியரானவர் |
| இடை ஆர் பிறப்பிடை தோறு | நிரந்தரமான பிறவிதோறும் |
| எமக்கு எம் பெரு மக்கள் கண்டீர் | எங்களுக்கு எவ்வளவோ சிறந்தவர்களாவர். |

* * *—திருவரை பூத்தாற்போலே யிருக்கிற திருப் பீதாம்பரத்தை யணிந்தவனுய், திருக் கழுத்திலே சாத்தும் திவ்யாபரணங்களை யுடையனுய், அழகிய அரைநூல்மாலையை யணிந்தவனுய், ஒரு பக்கத்திற்கு வேருெரு ஆபரணம் வேண்டாதபடி தானே போருமாய்க் காளமேகத்திலே மின்னினுப் போலே யிருக்கிற யஜ்ஞோபவீதத்தை யுடையவனுய், ஆச்ரிதரக்ஷணத்திற்கு முடிகவித்திருப்பவனுய், மற்றும் எண்ணிறந்த திருவாபரணங்களை இயற்கையாகவே அணிந்துள்ளவனுன ஸ்ரீமந்நாராயணனுக்கு தாஸாநுதாஸர்களா யிருக்குமவர்கள் பிறவிதோறும் எமக்கு அஸாதாரண சேஷிகளாவர்கள் என்ருராயிற்று. (௪)

**2967.** பெருமக்களுள்ளவர்தம்பெருமானை* அமரர்கட்கு
அருமையொழிய அன்ருரமுதூட்டியவப்பனை*
பெருமைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர்*
வருமையுமிம்மையும் நம்மையளிக்கும்பிராக்களே. (௫)

| | | | |
|---|---|---|---|
| பெரு மக்கள் உள்ளவர் தம் பெருமானை | பெருமக்கள் என்னப்படுகின்ற நித்யஸூரிகட்குத் தலைவனும் | பெருமை பிதற்ற வல்லாரை | (அவனது) பெருமைகளை அடைவின்றியே சொல்லுமவர்களான பாகவதர்களை |
| அமரர்கட்கு அருமை ஒழிய அன்று ஆர் அமுது ஊட்டிய | சாவாமை வேண்டியிருக்கும் தேவர்களுக்கு அருமைப்படாதபடி முன்பொரு காலத்தில் பூர்ணமாக அம்ருதத்தைப் புஜிப்பித்தவனுமான | பிதற்றுமவர் | அடைவின்றியே சொல்லித் துதிக்குமவர்கள் |
| | | வருமையும் இம்மையும் | இஹலோக பரலோகங்களிரண்டிலும் |
| அப்பனை | எம்பெருமானை உத்தேசித்து | நம்மை அளிக்கும் பிராக்கள் கண்டீர் | நம்மை உஜ்ஜீவிப்பிக்கும் ஸ்வாமிகளாவர். |

* * *—ப்ரயோஜநாந்தர பரர்க்குங்கூட அபேக்ஷிதத்தைத் தலைக்கட்டிக் கொடுத்தருளுமெம்பெருமானுடைய ஔதார்யத்திலே தோற்றவர்களான பாகவதர்களுக்குத் தோற்றிருக்குமவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார். (ரு)

2968. அளிக்கும்பரமனைக்கண்ணனை ஆழிப்பிரான்தன்னை*
துளிக்கும்நறுங்கண்ணித் தூமணிவண்ணனெம்மான்தன்னை*
ஒளிக்கொண்டசோதியை உள்ளத்துக்கொள்ளுமவர்கண்டீர்*
சலிப்பின்றியாண்டெம்மைச் சன்மசன்மாந்தரம்காப்பரே; (சா)

| | | | |
|---|---|---|---|
| அளிக்கும் பரமனை | உபகரிக்குமிடத்தில் தனக்கு மேலில்லாதபடி உபகரிக்குமவனும் | ஒளி கொண்ட சோதியை | அளவற்ற தேஜோரூபமான விக்ரஹத்தை யுடையவனுமான |
| கண்ணனை | க்ருஷ்ணனாக வந்து அவதரித்தவனும் | எம்மான் தன்னை | எம்பெருமானை |
| ஆழி பிரான் தன்னை | திருவாழியைக் கையிலேந்தி மஹோபகாரங்கள் செய்பவனும் | உள்ளத்து கொள்ளுமவர் | நெஞ்சிலே தாங்குமவர்கள் |
| துளிக்கும் நறு கண்ணி | தேன் வெள்ளமிடா நின்று நறுமணம் மிக்க மாலையை யணிந்துள்ளவனும் | எம்மை சலிப்பு இன்றி ஆண்டு சன்மம் சன்மாந்தரம் காப்பர் கண்டீர் | எம்மை ஒருகாலும் கைவிடாமே அடிமை கொண்டு எத்தனை ஜன்மமானாலும் ரக்ஷிக்குமவர்களாவர். |
| தூ மணி வண்ணன் | அழுக்கற்ற மாணிக்கம் போன்ற வடிவையுடையவனும் | | |

* * *—ப்ரயோஜநாந்தரங்களை விரும்பாமல் அநந்ய ப்ரயோஜநரா யிருப்பார்க்குத் தன் வடிவழகை அநுபவிப்பிக்கும் உஜ்வல ஸ்வபாவனை எம்பெருமானை அநுபவிப்பார் நமக்கு ரக்ஷகரென்கிறார். **அளிக்கும் பரமன்** என்றது—அளிக்கும் விஷயத்தில் தனக்கு மேற்பட ஒருவனுமில்லாதவன் என்றபடி. அதாவது—உலகத்திலே ரக்ஷகர் என்று பேர் சுமப்பவர்கள் பலருண்டாகிலும் எம்பெருமானே அத்விதீய ரக்ஷகன் என்பது கருத்து; (அல்லது) பிறர்க்குக்கொடுக்கும் விஷயத்தில் தனக்கு மேலில்லாதவன்—தன்னையே கொடுப்பவன் என்றுமாம். தன்னையே கொடுப்பதுமுண்டோவென்ன, **கண்ணனை** என்கிறார். கண்ணனாய்த் திருவவதரித்து ஒவ்வொருவர்க்கும் தன்னை முற்றூட்டாகக் கொடுத்தமை உணர்க. **சன்ம சன்மாந்தரம்**—வடசொல் தொடர். (சா)

2969. சன்மசன்மாந்தரம்காத்து அடியார்களைக்கொண்டுபோய்*
தன்மைபெறுத்தித் தன்தாளிணைக்கீழ்க்கொள்ளுமப்பனை*
தொன்மைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர்*
நன்மைபெறுத்தெம்மை நாளுய்யக்கொள்கின்றநம்பரே. (எ)

| | | | |
|---|---|---|---|
| சன்மம் சன்மாந்தரம் காத்து | மாறிமாறிப் பல பிறப்பும் பிறவாதபடி காத்து | தொன்மை பிதற்ற வல்லாரை | இயற்கையான ஔதார்ய குணத்தை வாய் வந்தபடி சொல்லித் திரியும் பாகவதர்களை |
| அடியார்களை கொண்டுபோய் | அடியவர்களை (நித்ய விபூதியிலே) கொண்டுபோய் | பிதற்றுமவர் | வாய்வந்தபடி புகழுமவர்கள் |
| | | எம்மை | நம்மை |
| தன்மை பெறுத்தி தன் தாள் இணை கீழ் கொள்ளும் அப்பனை | ஸ்வஸ்வரூப ப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்துத் தனது திருவடிகளின் கீழே அடிமைகொண்டருள்கின்ற ஸ்வாமியினுடைய | நன்மை பெறுத்து | நன்மை பெறும்படி பண்ணி |
| | | நாள் உய்யக் கொள்கின்ற நம்பர் கண்டீர் | ஆத்ம தத்துவமுள்ளவரையில் உஜ்ஜீவிப்பிக்க வல்லவர்களாக நம்பப்படுமவர்களாவர். |

* * *—அடியவர் திறத்து அவன் செய்தருளும் மஹோபகாரங்களை அநுஸந்தித்து அப்படிகளைப் பிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கள் கிடீர் எனக்கு எற்றைக்கும் ஸ்வாமிகளென்கிறார். அவரவர்கள் செய்துபோந்த கருமங்களுக்குப் பலனாக எத்தனையோ ஜன்மங்கள் நேரவேண்டியிருக்கும்; இருந்தாலும் ஸ்வல்பமான ஆபிமுக்யத்தையே கனக்கக்கொண்டு அந்த ஜன்மாந்தரங்கள் விளையாதபடி பரிஹரித்துத் தந்தருள்வன் எம்பெருமான்.

அக்குணத்திலே யீடுபட்டுப் புகழுமவர்களைப் புகழுமவர்கள் பாகவத சேஷத்வபர்யந்தமான பகவத் சேஷத்வஸம்பத்தை யுண்டாக்கி நமக்கு அவன் திருவடிகளில் கைங்கரியத்தை எஞ்ஞான்றும் நடத்தக்கடவ பெரியார் என்றதாயிற்று. (எ)

**2970.** நம்பனைஞாலம்படைத்தவனைத் திருமார்பனை*
உம்பருலகினில்யார்க்கும் உணர்வரியான்தன்னை*
கும்பிநரகர்களேத்துவரேலும் அவர்கண்டீர்*
எம்பல்பிறப்பிடைதோறு எம்தொழுகுலம்தாங்களே. (அ)

நம்பனை — நம்பப்படுமவனும்
ஞாலம் படைத்தவனை — (தன்னை ஆச்ரயித்து அநுபவிக்கைக்குறுப்பாக) ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணுமவனும்
திரு மார்பனை — பிராட்டியைத் திருமார்பிலே உடையவனும்
உம்பர் உலகினில் — மேலுலகங்களில்
யார்க்கும் — எப்படிப்பட்டவர்களுக்கும்
உணர்வு அரியான் தன்னை — அறியமுடியாத பெருமையை உடையவனுமான எம்பெருமானை
ஏத்துவர் — துதிக்குமவர்கள்
கும்பி நரகர்கள் ஏலும் — கும்பீபாக நரகவாஸிகளே யாகிலும்
அவர் தாங்கள் — அவர்கள்
எம் பல் பிறப்பு இடைதோறு — எமது பலவகைப்பட்ட ஜன்மாவகாசந்தோறும்
எம் தொழு குலம் கண்டீர் — யாம் தொழும்படியான குலீநராவர்

* * *—**கும்பிநரகர்கள்** என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவதுண்டு; ஆறாயிரப்படியில் "கும்பீநரகயாதநாநுபவாநுகுண பாபங்களைப் பண்ணினரேயாகிலும்" என்றருளிச் செய்திருக்கிறபடியே, கும்பீபாக நரகத்தில் துன்பங்களை யநுபவித்தற்கீடான பாவங்களைச் செய்தவர்கள் என்பது ஒருபொருள்; இப்பொருளில், அவர்கள் இவ்வுலகத்திலேயே யுள்ளவர்கள் என்பது பெறப்படும். 'கும்பீபாக நரகத்திலே கிடப்பவர்கள் என்பது மற்றொரு பொருள். "கும்பீபாகத்திலே துக்கானுபவம் பண்ணா நிற்க, திருநாமத்தைச் சொல்லக்கூடுமோ வென்னில்; க்லேசாதிசயத்தாலே அம்மே! அப்பா! என்னக்கூடாதோ வென்று காணும் இவர்க்கு நினைவு." என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்க. "மஹாபாப பலமான கும்பீபாக நரகத்திலே கிடந்தும் அங்கே திருநாமத்தைச் சொல்லுவார்களாகில்" என்பது இருபத்திநாலாயிரப்படி யருளிச்செயல். கும்பீபாக நரகத்திலுள்ளவர்களை ஆழ்வார் எங்ஙனே தொழக்கூடும்? என்று கேள்வி பிறக்கும்; அவர்கள் திருமார்பனை ஏத்தினார்களா இல்லையா என்பதை ஆழ்வார் எங்ஙனே தெரிந்துகொள்வது? என்றும் கேள்வி பிறக்கும். பாகவதர் திறத்தில் ஆழ்வார்க்குள்ள ப்ரதிபத்தி விசேஷத்தைத் தெரிவிப்பது மாத்திரத்தில் விச்ராந்தமான இந்த வசநவ்யக்திகளில் கேள்விகேட்கலாகாதென்பர் பெரியோர். (அ)

**2971.** குலம்தாங்குசாதிகள் நாலிலும்கீழிழிந்து*எத்தனை
நலந்தானிலாத சண்டாளசண்டாளர்களாகிலும்*
வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்றுஉள்
கலந்தார்*அடியார்தம்அடியார் எம்மடிகளே. (கூ)

குலம் தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து — ஸகல குலங்களுக்கும் ஆதாரமான பிராம்மணாதி ஜாதிகள் நான்கிலும் கீழே போந்து
எத்தனை நலம் தான் இலாத சண்டாள சண்டாளர்கள் ஆகிலும் — மிகவும் தாழ்வின் எல்லையிலே நின்ற சண்டாளரினும் கடைகெட்ட சண்டாளர்களேயானாலும்,
வலம் தாங்கு சக்கரத்து — வலத்திருக்கையில் ஏந்தப்பட்ட திருவாழியையுடைய
அண்ணல் — ஸ்வாமியான
மணி வண்ணற்கு — நீலமணி நிறத்தனான எம்பெருமானுக்கு
ஆள் என்று — சேஷப்பட்டிருக்கிறோமென்று
உள் கலந்தார் — உண்மையான ஸ்வரூபஜ்ஞானமுடையவர்களுக்கு
அடியார் தம் அடியார் எம்மடிகள் — அடிமைப்பட்டவர்களுக்கு அடிமைப்பட்டவர்கள் எமக்குத் தலைவராவர்.

* * *—ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரர்களென்று நான்கு ஜாதிகள் ப்ரஸித்தங்களாகவுள்ளன; அவற்றினும் கீழிழிந்த சண்டாளர்களிலும் மிக நீசரான சண்டாளர்களாயிருந்தாலும் அவர்கள் 'வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு' (2) என்று திருவாழியாழ்வானோடுண்டான

சேர்த்தியில் ஈடுபட்டுப் பல்லாண்டு பாடுமவர்களாகில் அவர்களின் தாஸாநுதாஸர்கள் எமக்கு ஸ்வாமிகள் என்றாராயிற்று. திருமழிசைப்பிரான், திருப்பாணாழ்வார், நம்பாடுவான் போல்வாரான பரம விலக்ஷணாதிகாரிகளை உத்தேசித்தே அவதரித்த பாசுரங்களைக்கொண்டு லோக க்ஷோபம் செய்ய நினைக்கலாகாது என்று அஸ்மதாசார்யர் அருளிச்செய்யக் கேட்டிருக்கை. விலக்ஷண பாகவதர்களுக்குப் பண்டைக்குலம் தவிர்ந்து 'தொண்டக்குலம்' என்று ஒரு சிறந்த நற்குலம் உண்டாகின்றதென்பது உண்மை. (கூ)

**2972.** அடியார்ந்தவையமுண்டு ஆலிலையன்னவசஞ்செய்யும்*
படியாதுமில்குழவிப்படி எந்தைபிரான்தனக்கு*
அடியாரடியார்தம்மடியாரடியார்தமக்கு
அடியாரடியார்தம்*அடியாரடியோங்களே. (க0)

| | | | |
|---|---|---|---|
| அடி ஆர்ந்த வையம் உண்டு | (த்ரிவிக்ரமாவதார காலத்தில்) தன் திருவடியோடு ஸம்பந்தம் பெற்றதான வுலகை (பிரளயகாலத்தில்) திரு வயிற்றிலே வைத்து | எந்தை பிரான் தனக்கு | எம்பெருமானுக்கு, |
| ஆல் இலை அன்ன வசம் செய்யும் | ஆலந்தளிரில் திருக்கண் வளர்ந்தருள்கின்ற | அடியார் அடியார் தம் அடியார் அடியார் தமக்கு அடியார் அடியார் தம் அடியார் அடியோங்கள் | ஏழு தலைமுறையளவான அடிமையின் எல்லையிலே நிற்பவர்களுக்கு நாங்கள் அடிமைப்பட்டவர்கள். |
| படி ஆதும் இல் | சிறிதும் உபமானமில்லாத | | |
| குழவிப் படி | சிறு குழந்தைப் பருவமுடைய | | |

* * *—ஈட்டு ஸ்ரீஸூக்தி:—"இப்போதும் தம்முடைய ருசிக்கு அவதி யுண்டாய் இவ்வளவிலே நின்றாரல்லர்; சந்தஸ்ஸில் இதுக்கு அவ்வருகு போக வொண்ணாமே நின்றதித்தனையிறே."—செய்யுளின் நிர்ப்பந்தத்தை நோக்கி இவ்வளவிலே தலைக்கட்டினாரத்தனை யல்லது 'இவ்வளவு சேஷத்வம் நமக்குப்போதும்' என்றெண்ணி முடித்தாரல்லர் என்றவாறு.

"இப்படி வைஷ்ணவர்களை விரும்பினால் இது லௌகிகரோடு சேரா திருந்ததாகில் ஆழ்வார் விரும்பினத்தை விச்வஸித்தோமாகிறோம்" என்று ஜீய ரருளிச் செய்யும்படி" என்பதும் ஈடு முப்பத்தாறாயிரம். இதன் கருத்து யாதெனில்; இந்தப்பதிகத்தில் ஆழ்வார் அருளிச் செய்தபடியே நாம் அநுஷ்டிப்பதாகக் கொண்டால் லோகவிருத்தமாகுமே; "எத்தனை நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும்" இத்யாதிகளால் அருளிச் செய்யப்படுகின்ற அர்த்தம் லோகாநுஷ்டானத்திற்கு அமையாதே என்கிற சங்கையின்மீது அருளிச் செய்கிறபடி. நாம் அநுஷ்டிக்கும்படியான பாக்கியம் பெறுதொழியினும் 'இங்ஙனே ஆழ்வார் பாரித்திருந்தார்' என்று விச்வாஸத்தோடே அநுஸந்தித்தாலும் போதும் என்றபடி.

**2973.** அடியோங்குநூற்றுவர்வீய அன்றைவர்க்கருள்செய்த
நெடியோனை*தென்குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள்*
அடியார்ந்தவாயிரத்துள் இவைபத்தவன்தொண்டர்மேல்
முடிவு*ஆரக்கற்கிற்கில் சன்மம்செய்யாமைமுடியுமே. (கக)

| | | | |
|---|---|---|---|
| அடி ஓங்கு | தங்களுடைய ராஜ்யப்ரதிஷ்டை உயர்ந்து வரும்படியான | அடி ஆர்ந்த ஆயிரத்துள் | ஸகலலக்ஷண ஸம்பந்நமான ஆயிரம் பாசுரத்தினுள்ளும் |
| நூற்றுவர் | (துரியோதனன் முதலானோர்) நூறுபேர்களும் | அவன் தொண்டர் மேல் முடிவு இவை பத்து | பாகவத விஷயத்தில்முடிவான இப்பதிகத்தை |
| வீய | முடியும்படி | | |
| அன்று | முன்பொருகால் | | |
| ஐவர்க்கு அருள் செய்த நெடியோனை | பஞ்சபாண்டவர்களுக்கு க்ருபை பண்ணின திருமாலை நோக்கி, | ஆர கற்கிற்கில் | நெஞ்சிலே பொருந்த கற்க வல்லாராகில் |
| தென் குருகூர் சடகோபன் குற்றேவல்கள் | அழகிய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வாருடைய கைங்கரிய ரூபமாய் | சன்மம் செய்யாமை முடியும் | பிறப்பு மறுபடியும் உண்டாகாதபடி முடிந்து போம். |

* * *—இதில் ஒவ்வொரு பாசுரத்திலும் எம்பெருமானைப் பற்றின ப்ரஸங்கமும் ப்ரபலமாக வுண்டாகிலும் அது உபஸர்ஜந கோடியிலேயாய் பாகவத சேஷத்வ ப்ரதிபாதனத்திலேயே பர்யவஸாநம் என்பது தோன்ற "**தொண்டர்மேல் முடிவு**" எனப்பட்டது. '**கற்க கிற்கில்**' என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து '**கற்கிற்கில்**' என்று ஒரு சொற்றன்மையதாயிற்று. (கக)

## மூன்றாம்பத்து, எட்டாந்திருவாய்மொழி—முடியானே

பஹு குடும்பியான வொருவன் க்ஷாமகாலத்திலே தன்பசிக்கு ஆற்றமாட்டாதே மக்கள் பசிக்கு ஆற்றமாட்டாதே அவற்றின் வாயில் சோற்றைத் தான்பறித்து உண்பது தன்வாயில் சோற்றை அவை பறித்துண்பதாய், 'என்பசிக்கு என்செய்வேன்? என் மக்கள் பசிக்கு என் செய்வேன்' என்னுமா போலே தாமும் தம்முடைய கரணக்ராமமுமாக நோவுபட்டுக் கூப்பிடுகிறபடியை இத்திருவாய்மொழி பேசுகின்றது. (*)

**2974.** முடியானே மூவுலகும்தொழுதேத்துஞ்சீ
ரடியானே*ஆழ்கடலைக்கடைந்தாய் புள்ளூர்
கொடியானே*கொண்டல்வண்ணா! அண்டத்தும்பரில்
நெடியானே*என்றுகிடக்குமென்னெஞ்சமே. (க)

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சம் | எனது மனமானது, | புள் ஊர் கொடி யானே | கருடப் பறவையை ஊர்தியாகவும் கொடியாகவு முடையவனே! |
| முடியானே | (உபய விபூதி நாயகத்வ லக்ஷணமான) திருவபிஷேகத்தை யுடையவனே! | கொண்டல் வண்ணா | நீலமேகம் போலும் நிறத்தை யுடையவனே! |
| மூ உலகும் தொழுது ஏத்தும் சீர் அடியானே | மூவுலகத்தவர்களும் வணங்கித் துதிக்கப் பெற்ற சிறப்புள்ள திருவடிகளை யுடையவனே | அண்டத்து உம்பரின் நெடியானே | பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளுக்கு மஹா புருஷனே! |
| ஆழ் கடலை கடைந்தாய் | (தேவர்களுக்கு அமுத மளிப்பதற்காக) ஆழமான கடலைக் கடைந்தவனே! | என்று கிடக்கும் | என்று அநுஸந்தித்து உருகிக் கிடக்கின்றது. |

* * *—தம்முடைய திருவுள்ளம் எம்பெருமானைக் காணவேணுமென்று ஆசைப்பட்டுப் பெருமையாலே நிர்வேதம் கொண்டு கிடக்கிறபடியை அருளிச்செய்கிறார். "என்று" என்பதை **முடியானே...!** இத்யாதியான ஒவ்வொரு விளியோடும் கூட்டுக; என் நெஞ்சம் முடியானே யென்று கிடக்கும். மூவுலகும் தொழுதேத்தும் சீரடியானே என்று கிடக்கும்—என்றிங்ஙனே தனித்தனி வாக்கியமாக யோஜிப்பது. ஏழுலகுக்கும் தனிக்கோல் செலுத்துமவன் என்பதைக் கோட்சொல்லித் தரக்கடவதான திருவபிஷேகமும் தானுமான வழகை யநுபவிக்க நெஞ்சு பாரித்திருக்கின்றமையை **முடியானே!** என்பதனால் தெரிவிக்கிறார். இங்ஙனே மற்றுங்காண்க. (க)

**2975.** நெஞ்சமேநீணகராக இருந்தவென்
தஞ்சனே!*தண்ணிலங்கைக்கு இறையைச்செற்ற
நஞ்சனே!*ஞாலம்கொள்வான் குறளாகிய
வஞ்சனே!*என்னுமெப்போதுமென்வாசகமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| என் வாசகம் | எனது வாக்கானது, | ஞாலம் கொள்வான் குறள் ஆகிய வஞ்சனே | (மாவலியிடமிருந்து) பூமியைக் கொள்ளும் பொருட்டு வாமன மூர்த்தியான வஞ்சகனே! |
| நெஞ்சமே நீள் நகர் ஆக இருந்த என் தஞ்சனே | மனத்தையே பெரிய நகரமாகக் கொண்டு அதிலே தங்கியிருக்கின்ற எனது நற்றுணைவனே! | என்னும் எப்போதும் | என்று எப்போதும் சொல்லாநின்றது. |
| தண் இலங்கைக்கு இறையை செற்ற நஞ்சனே | தண்ணிதான இலங்கா புரிக்குத் தலைவனாயிருந்த இராவணனைத் தொலைக்கும் விஷயத்தில் நஞ்சானவனே! | | |

* * *—வாக்கானது எம்பெருமானை நோக்கி 'ஸ்வாமிந்! நெஞ்சு தேவரீரை நினைக்க அதற்கு அருள் செய்தாப்போலே நானும் தேவரீரை நினைக்க அருள் செய்யவேணும்' என்று அலற்றாநின்றது என்கிறார். நெஞ்சுக்கு அருள் செய்ததுபோல எனக்கும் அருள் செய்ய வேணுமென்று வாக்கு விரும்புவதாகப் பாசுரத்தில் எங்குள்ளது? என்னில்; "**நெஞ்சமே நீணகராகவிருந்த**" என்பதில் இவ்வர்த்தம் உய்த்துணரத்தக்கது. 'எஞ்ஞான்றும் நெஞ்சிலேயிருந்து போமித்தனையோ? என் பக்கலிலும் ஒருகால் இருக்கலாகாதோ?' என்ற கருத்து இதில் அமைந்துளது. "பிறர் அகத்திற்கே போகின்றவரே!" என்று ஒருவனைக் குறித்துச் சொன்னால் "எம் அகத்திற்கும் ஒருநாள் வந்தாலாகாதோ" என்கிற கருத்து கிடைப்பதுபோல. 'நெஞ்சமே' என்ற ஏகாரத்தினால்—வேறு இந்திரியங்களிலும், பரமபதம் திருப்பாற்கடல் முதலியவற்றிலும் எம்பெருமான் விருப்பமற்றிருக்குந்தன்மை பெறுவிக்கப்படும்.

வாக்கானது **ஞாலங்கொள்வான்குறளாகிய வஞ்சனே!** என்று சொல்வதன் கருத்து யாதெனில்; மூவடிவேண்டி மாவலியிடஞ் சென்றபோது தேவரீர், அவ்வசுரனை நோக்கி அழகிய பேச்சுக்கள் பேசிற்றுமே; அங்ஙனே என்னேடும் சிறிது பேசலாகாதோ என்பதாம். (உ)

2976. வாசகமேயேத்தவருள்செய்யும் வானவர்தம்
நாயகனே!*நாளிளந்திங்களைக் கோள்விடுத்து*
வேயகம்பால்வெண்ணெய்தொடுவுண்ட ஆனயர்
தாயவனே!*என்றுதடவுமென்கைகளே. (ஙு)

| | | | |
|---|---|---|---|
| என் கைகள் | எனது கைகளானவை, | வேய் அகம் பால் வெண்ணெய் தொடு உண்ட | மூங்கிலால் செய்த வீடுகளில் வெண்ணெயைக் களவு செய்து அமுது செய்த |
| வாசகமே ஏத்த அருள் செய்யும் வானவர் தம் நாயகனே | வாக்கு மாத்திரமே துதிக்கும் படியாக அதற்கு அருள் செய்கின்ற தேவாதி தேவனே ! | ஆன் ஆயர் தாயவனே | கோபால க்ருஷ்ணனே ! |
| நாள் இளதிங்களை கோள்விடுத்து | புதிய இளைய உதய சந்திரன் போலப் பற்களின் ஒளியைப் பரவவிட்டு | என்று தடவும் | என்று தடவுகின்றன. |

* * *—தமது கைகளுக்கு வாக்கின் வ்ருத்தியிலும் தம் வ்ருத்தியிலுமுண்டான சாபலத்தை அருளிச் செய்கிறார். “வாசகமே யேத்த அருள் செய்யும்” என்றவிடத்து வாசகமே என்ற ஏகாரம்—வாக்கு மாத்திரமே தேவரீரை ஏத்தும்படியிருக்க வேணுமோ? (கைகளாகிய) நாங்களும் ஏத்தும்படி அருளலாகாதோ? என்ற கருத்தைக் காட்டும். [**வானவர்தம் நாயகனே!**'] ஆழ்வாருடைய திருவாக்கு ஏத்துகிறுப்போலவும் நித்யஸூரிகளின் வாக்கு ஏத்துகிறுப்போலவும் நாங்களும் ஏத்தும்படி யருள்செய்ய வேணுமென்று கைகளின் ப்ரார்த்தனை போலும்.

**நாளிளந்திங்களைக் கோள்விடுத்து**=சந்திரனுக்கு நேர்ந்த துன்பத்தைப் போக்கினதாக இங்கு ஆபாதப்ரதீதியில் பொருள் தோன்றக்கூடுமாயினும், இங்கு இதுவன்று பொருள். “அபிநவ பூர்ண சந்த்ரகிரணம் போலே திருமுத்தின்னொளி புறப்படும்படி திருப்பவளத்தைத் திறந்து” என்பது ஆறுயிரப்படி யருளிச் செயல். இப் பொருளையே ஸகல ஆசாரியர்களும் அருளிச் செய்துள்ளார்கள். இதுவே ரஸவத்தரம். இங்கு உபமேயமான வஸ்து சொல்லப்படாதிருப்பினும் **திங்கள்** என்னும் உபமான வாசகம் திருமுத்தாகிற உபமேயத்தையே லக்ஷணையினல் தெரிவிக்கும். “தாவி வையங்கொண்ட தடந்**தாமரை கட்கே**” (3323)) என்றவிடமும் காண்க.

கண்ணபிரான் *படலடைத்த சிறுகுரம்பை நுழைந்து புக்குப் பசுவெண்ணெய் களவுகாணப் புகுமிடத்தில் தன்நிறத்தின் இருட்சியாலும் அவ்விடத்தின் இருட்சியாலும் வெண்ணெயிருக்குமிடம் தெரியாமல் தடவாநிற்கையில் யாத்ருச்சிகமாகக் கையிலே வெண்ணெய்த்தாழிகள் தட்டின உவப்பினல் பல்லைத்திறந்து சிரிக்க நேரும்; பூர்ணசந்திரனுடைய கிரணம்போலே திருமுத்துக்களின் ஒளி புறப்படவே அந்த வொளியையே கைவிளக்காகக்கொண்டு அமுது செய்வன் என்றுணர்க. “உறியார்ந்த நறுவெண்ணெயொளியால்சென்றுஅங்குண்டானை” (1143) என்ற பெரியதிருமொழியிலும் ‘ஒளியால்’ என்றதற்கு இங்ஙனமே பொருளுரைக்கப்பட்டது காண்க. கண்ணபிரானுடைய திருமுத்துக்கள் நாளிளந் திங்களை யொத்திருக்கு மென்பது “செக்கரிடை நுனிக்கொம்பில் தோன்றும் சிறு பிறைமுளைப்போல, நக்க செந்துவர்வாய்த் திண்ணைமீதே நளிர் வெண்பல் முளையிலக”(87) என்ற பெரியாழ்வார் திருமொழியிலும் அறியத்தக்கது. **கோள் விடுத்து**—தேஜஸ்ஸைப் புறப்படவிட்டு என்றபடி. **தொடு உண்ட** = களவினல் உண்ட: “மாயை தொடு பட்டிமை வஞ்சனையாகும்” [பிங்கலந்தை—பண்பிற் செயலிற் பகுதி வகை—135.] என்றது காண்க. **என்றுதடவும் என்கைகள்**=அவன் வெண்ணெய் களவு செய்யப் புகுந்த விடத்தே வழியைக்கட்டிப் பிடித்துக்கொள்ளத் தேடுகின்றன என்கைகள் என்று ரஸோக்தியாகப் பொருள் கூறுவர். (ஙு)

2977. கைகளாலாரத் தொழுதுதொழுதுன்னை*
வைகலும்மாத்திரைப்போதும் ஓர்வீடின்றி*
பைகொள்பாம்பேறி உறைபரனே!*உன்னை
மெய்கொள்ளக்காண விரும்புமென்கண்களே. (ச)

| | | | |
|---|---|---|---|
| என் கண்கள் | எனது கண்களானவை, | உன்னை | |
| பை கொள் பாம்பு ஏறி உறை பரனே | படங்கொண்ட திருவனந்தாழ்வான் மீதேறி உறையும் பரம புருஷனே ! | கைகளால் ஆர தொழுது தொழுது | தேவரீரைக் கையாரப் பரிபூர்ண நமஸ்காரஞ் செய்து |

| | | | |
|---|---|---|---|
| வைகலும் | நாள்தோறும் | உன்னை மெய் கொள்ள காண | உன்னை மெய்யாகவே காண்பதற்கு |
| மாத்திரைபோதும் ஓர் வீடு இன்றி | க்ஷணகாலமும் இடைவிடாமல் | விரும்பும் | விரும்புகின்றன. |

* * *—கண்களானவை 'கைகளுடைய பரிமாற்றமும் வேணும், தம் விருத்தியான காட்சியும் வேணும்' என்னாநின்றன வென்கிறார். "கண்கள் கைகளாலாரத் தொழுது காணவிரும்பும்" என்று மூலமுள்ளது. கைகளால் தொழுவேணுமென்பதைக் கண்கள் ஆசைப்படுவது எங்ஙனே என்று விமர்சிக்கவேணும்; விமர்சித்தால், கைகளின் விருத்தியையும கண்கள் ஆசைப்பட்டமை விளங்கும்.

"மாத்திரைப்போதும் ஓர் வீடின்றிவைகலும்" என்பது மத்யமதீபந்யாயத்தாலே முதலடியிலும் ஈற்றடியிலும் அந்வயிக்கும்: அநவரதமும் கைகளால் தொழுவேணுமென்றும், அநவரதமும் காணவேணுமென்றும் விரும்புகின்றவாறு. (௪)

2978\. கண்களால்காண வருங்கொலென்றாசையால்*
மண்கொண்டவாமனன் ஏறமகிழ்ந்துசெல்*
பண்கொண்டபுள்ளின் சிறகொலிபாவித்து*
திண்கொள்ளவோர்க்கும் கிடந்தென்செவிகளே. (௫)

| | | | |
|---|---|---|---|
| என் செவிகள் | எனது காதுகளானவை, | மகிழ்ந்து செல் | மகிழ்ச்சியோடு செல்கின்ற |
| கண்களால் காண வரும் கொல் என்று ஆசையால் | கண்களால் காணும்படி வருவனோ வென்று ஆசையினால், | புள்ளின் | கருத்மானுடைய |
| | | பண் கொண்ட சிறகு ஒலி பாவித்து | ஸாம, வேத, ஸ்வர ப்ரசுரமான சிறகின் த்வனியை நினைத்து |
| மண் கொண்ட வாமனன் ஏற | (மாவலியிடம்) பூமியைக் கவர்ந்த வாமனன் (தன்மீது) ஏறுதலால் | கிடந்து | பரவசமாய்க் கிடந்து |
| | | திண்கொள்ள ஓர்க்கும் | உறுதியாக நிரூபிக்கின்றன. |

* * *—காணவும் வேணும், கேட்கவும் வேணுமென்று செவிகள் ஆசைப்படுகின்றன வென்கிறார். இப்பாசுரத்தில் செவிகள் எழுவாயாதலால் முதலடியிற் கூறப்பட்டுள்ள ஆசை செவிகளுக்குண்டான ஆசையாகவே கொள்ளத்தக்கது. செவிகளானவை தமக்குக் கண்கள் முளைக்கவேணுமென்றும் அவற்றாலே காணவேணுமென்றும் ஆசைப்படுகிறபடி. அன்றியே, தாமே கண்களாக மாறி ஆசைப்படுகிறபடியுமாம். கண்ணாரக் கண்டுகளிக்க எழுந்தருள்வனோ வென்கிற நசையாலே, செவிகளானவை, எம்பெருமான் பெரிய திருவடியின்மீது ஏறிக்கொண்டு எழுந்தருள்வதாகவும், எம்பெருமானைச் சுமந்து கொண்டு பெரியதிருவடி மகிழ்ச்சியாலே சிறகுகளையடித்துக்கொண்டு விரைந்து ஓடி வருவதாகவும் பாவனை கொண்டு அந்தச் சிறகொலியைக் கேட்க அதிலேயே ஊற்றமுற்றிருக்கின்றன வென்கிறார். (௫)

2979\. செவிகளாலார நின்கீர்த்திக்கனியென்னும்
கவிகளே*காலப்பண்தேன் உறைப்பத்துற்று*
புவியின்மேல் பொன்னெடுஞ்சக்கரத்துன்னையே*
அவிவின்றியாதரிக்கும் எனதாவியே. (௬)

| | | | |
|---|---|---|---|
| எனது ஆவி | என் பிராணனானது, | செவிகளால் ஆர | காதுகளால் பூர்ணமாக அநுபவிக்க |
| நின் கீர்த்தி கனி என்னும் கவிகளே | உன்னுடைய கீர்த்தியாகிய பழம் என்னலாம்படியான கவிகளையே | புவியின்மேல் | புவியின்மீது |
| காலம் பண் தேன் உறைப்ப | காலத்திற்கு ஏற்ற பண்களாகிற தேனிலே மிகவும் செறிய | பொன் நெடு சக்கரத்து உன்னையே | அழகிய பெரிய திருவாழியையுடைய தேவரீரையே |
| துற்று | கலந்து | அவிவு இன்றி | இடையறாமல் |
| | | ஆதரிக்கும் | விரும்பாநிற்கும் |

* * *—என்னுடைய ஆவியானது உன்னுடைய கீர்த்தியைக் கேட்கவேணுமென்று விரும்புகின்றதென்கிறார். இப்பாசுரத்தில் **ஆவி** என்பது எழுவாயாதலால் '**செவிகளாலார**' என்று கூறப்பட்ட ஆசை ஆவிக்கு உண்டான ஆசையாகக் கொள்ளத்தக்கது, ஆவியானது தனக்குச் செவிகள் முளைக்க வேணுமென்றும் அவற்றாலே எம்பெருமானது கீர்த்திக்கவிகளைக் கேட்கவேணுமென்றும் ஆசைப்படுகிறபடி. அன்றி, தானே செவியாக மாற ஆசைப்படுகிறபடியுமாம். 'செவிகளாலார' என்றது செவிகள் வயிறு நிறையும்படியாக என்றபடி. கீர்த்தியாவது கொண்டாடிக் கூறப்படும் திருக்குணங்களாம்; அவற்றைப்பற்றிப் பரமரஸிகர்களான பக்தர்கள் இயற்றும் கவிகள் பரமபோக்யமாக இருக்குமாதலால் "**கனியென்னுங் கவிகள்**" என்றார். "கவியென்னுங் கனிகள்" என்று சொல்லவேண்டிய முறை ப்ராப்தமாயிருக்க அங்ஙனம் கூறாது "கனியென்னுங் கவிகள்" என்றது கனிகளிலும் மிக்க போக்யதாதிஶயம் கவிகளில் இருக்கும்படியைக் காட்டுதற்காம்.

**காலப்பண் தேனுறைப்பத் துற்று**=கனிகள் இயற்கையிலே மதுரங்களாகவே யிருந்தாலும் செருக்கர் தேனிலே தோய்த்து உண்பர்கள்; அதுபோலே பகவத் ஸ்துதிக் கனிகளைக் காலாநுரூபமான பண்ணுகிற தேனிலே தோய்த்துச் சுவைக்க விரும்புகின்றபடி. வண்டுகள், குறிஞ்சி மருள் காமரம் கந்தாரம் என்னும் பண்களைப் பாடுமாபோல பக்தர்கள் பலவகைப்பட்ட பண்களிலே துதிமொழிகளைப் பாடி உள்ளங்குளிரப் பெறுவர்களென்க. (சு)

2980. ஆவியேஆரமுதே! என்னையாளுடை*
தூவியம்புள்ளுடையாய்! சுடர்நேமியாய்!*
பாவியேன்நெஞ்சம் புலம்பப்பலகாலும்*
கூவியும்காணப்பெறேன் உனகோலமே. (எ)

| | | | |
|---|---|---|---|
| ஆவியே | என் உயிராயிருப்பவனே! | சுடர் நேமியாய் | ஒளிமிக்க திருவாழியை யுடையவனே! |
| ஆர் அமுதே | அருமையான அமுதம் போன்றவனே! | உன கோலம் | உனது வடிவழகை |
| என்னை ஆள் உடை | என்னை அடிமை கொண்ட | பாவியேன் | பாவியாகிய நான் |
| அம் தூவி புள் உடையாய் | அழகிய சிறகுள்ள கருத்மானை வாஹநமாக வுடையவனே! | நெஞ்சம் புலம்ப பலகாலும் கூவியும் | மனம் துடிக்கப் பலகால் கூப்பிட்டும் |
| | | காண பெறேன் | கண்டு அநுபவிக்கப்பெற்றிலேன். |

* * *—மஹாபாபியாகையாலே நெஞ்சின் விடாய்தீர்க்கவும் பெற்றிலேனான நான் நெடுநாள் கூப்பிட்டவிடத்திலும் உன்னுடைய வழகு காணவும் பெற்றிலேன் என்கிறார். அதாவது—கரணங்களை யொழியத் தம்முடைய இழவு சொல்லுகிறபடி. —"ப்ரஜைகளின் இழவும் பசியும் சொன்னார் கீழ்; தம்மிழவும் பசியும் சொல்லுகிறார் மேல்" என்பது ஈடு. (எ)

2981. கோலமேதாமரைக்கண்ணதோர் அஞ்சன
நீலமே*நின்றெனதாவியை ஈர்கின்ற
சீலமே*சென்றுசெல்லாதன முன்னிலாம்
காலமே*உன்னையெந்நாள் கண்டுகொள்வனே. (அ)

| | | | |
|---|---|---|---|
| கோலமே | அழகுதானே வடிவெடுத்தாற் போன்றுள்ளவனே! | சீலமே | சீலகுணமே வடிவெடுத்திருப்பவனே! |
| தாமரைக் கண்ணது | தாமரை போன்ற திருக்கண்களையுடையதாகிய | சென்று செல்லாதன முன் நிலாம் காலமே | இறந்த காலம் எதிர்காலம் நிகழ்காலம் என்னும் முக்காலங்களுக்கும் நியாமகனே! |
| ஓர் அஞ்சனம் நீலமே | ஒப்பற்ற அஞ்சன மலை போன்ற நீலநிறமுடையவனே! | | |
| நின்று எனது ஆவியை ஈர்கின்ற | நிலைநின்று என் ஆத்மாவை ஈடுபடுத்துகின்ற | உன்னை எந்நாள் கண்டு கொள்வன் | உன்னை என்றைக்கு கண்டு அநுபவிப்பேன்? |

* * *—"பலகாலும் கூவியுங் காணப்பெறேனுன கோலமே" என்ற தம்மைக் குறித்து எம்பெருமான் 'உம்முடைய அபேக்ஷிதம் பூர்த்தி செய்கைக்கிடான காலம் வரவேண்டாவோ?' என்று அருளிச்செய்ததாகக் கொண்டு, 'காலமும் நீயிட்ட வழக்கன்றோ? நான் இழக்கத் தகுமோ?' என்கிறார்.

**உன்னை எந்நாள் கண்டுகொள்வனே?**="பூர்ணே சதுர்தசே வர்ஷே" என்று பரதாழ்வானுக்கு நாளிட்டுக் கொடுத்தாப்போலே எனக்கும் ஒருநாள் குறிப்பிடவேணுமென்கிறார். (அ)

2982. கொள்வன்நான்மாவலி மூவடிதாவென்ற
கள்வனே*கஞ்சனைவஞ்சித்து வாணனை
உள்வன்மைதீர*ஓராயிரம்தோள்துணித்த
புள்வல்லாய்*உன்னைஎஞ்ஞான்று பொருந்துவனே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| மாவலி நான் மூ அடி கொள்வன் தா என்ற கள்வனே | 'மஹாபலியே! நான் மூன்றடி நிலத்தை ஏற்றுக் கொள்வேன், கொடுப்பாயாக' என்று சொன்ன வஞ்சகனே! | உள் வன்மை தீர | மன வுறுதியானது அழியும்படி |
| கஞ்சனை வஞ்சித்து | கம்ஸனைத் தொலைத்து | ஓர் ஆயிரம் தோள் துணித்த | ஆயிரம் புயங்களையும் அறுத்த |
| வாணனை | பாணாசுரனை | புள் வல்லாய் | கருடவாஹனனே! |
| | | உன்னை எஞ்ஞான்று பொருந்துவன் | உன்னை எக்காலம் அடையப் பெறுவேன்? |

* * *—**கொள்வன் நான் மாவலி மூவடிதாவென்ற கள்வனே!**—குறிய மாணுருவாகி மாவலி பக்கல் யாசகனாய்ச் சென்றகாலத்து முந்துறமுன்னம் 'கொள்வன் நான்' என்றான்; யாசகன் உதாரனைப் பலபடியாகப் புகழ்ந்து பேசிவிட்டு 'இன்ன பொருள் எனக்கு நீ தரவேணும்' என்று யாசிக்க வேண்டுவது முறைமையாயிருக்க, வாமனன் அங்ஙனம் ஒன்றும் புகழ்ந்து பேசாதே வாய்திறந்து பேசும்போதே 'கொள்வன் நான்' என்றான். என்றைக்கும் யாசித்தறியாதவனாதலால் இன்னபடி சொல்லவேணுமென்று அறிந்திலன் போலும்.

வாமன மூர்த்தியின் மிக அழகிய வடிவத்தைக் கண்டு இவனுக்கு ஏதாவது தானம் பண்ணியே யாகவேணுமென்று குதூஹலங்கொண்ட மாவலி 'இவன் நம் பக்கலில் தானம் பெறுவனோ மாட்டானோ' என்று ஸந்தேஹித்திருக்க, அந்த நிலைமையைக் கண்ட வாமனன் அவனுடைய சங்கைதீரக் "கொள்வன் நான்" என்றானாகவுமாம்.

**மாவலி!**=அண்மைவிளி. பெரியோனைப் பெயர்சுட்டிச் சொல்லலாகாது என்பது வாமன மூர்த்திக்குத் தெரியாதோ? '**மஹா ப்ரபோ!**' என்று சிறப்பாகவன்றோ சொல்லவேணும்; 'மாவலி!' என்று பெயரையிட்டுச் சொன்னது ஏன்? என்று சங்கித்துக் கொண்டு நம்பிள்ளை யருளிச் செய்வன காண்மின்; "பிறந்தவன்றே பிக்ஷையிலே அதிகரிக்கையாலே பிரபுக்களை உபசரித்து வார்த்தை சொல்லி யறியானே; முன்பு சிலர் பாடே தாழ்வு சொல்லியறியான்; பிறந்த பின்பு வாஸனை பண்ணுகைக்கு நாளில்லை; அத்தாலே மாவலி யென்கிறான். எல்லாரும் தன்னை உயரச் சொல்லுமதொழிய இப்படி சொல்லக் கேட்டறியாமையாலே 'இவனொரு பாலன் நம் முன்பேநின்று சிறு பேரைச் சொல்லி யழைத்தானே' என்று இனியனாய் முகத்தைப் பார்த்து 'உனக்கு வேண்டுவதென்?' என்றான்; 'மூவடி' என்று விடை கூறினான் வாமனன். (அது கேட்ட மாவலி) தன்பக்கல் யாசிக்க வருமவர்களில் இப்படி சிறுக அர்த்திப்பாரில்லாமையாலே அநாதரித்திருந்தான்; அங்யபரதை பண்ணாதே தா என்கிறான்." (க)

2983. பொருந்தியமாமருதினிடைபோய எம்
பெருந்தகாய்!* உன்கழல்காணியபேதுற்று*
வருந்திநான்வாசகமாலைகொண்டு* உன்னையே
இருந்திருந்து எத்தனைகாலம்புலம்புவனே (ல)

| | | | |
|---|---|---|---|
| பொருந்திய மா மருதின் இடை போய | ஒன்றோடொன்று பொருந்தி நின்ற பெரிய மருத மரங்களின் நடுவே தவழ்ந்து சென்று அவற்றைத் தள்ளி முறித்த | வருந்தி | துக்கித்து |
| | | பேது உற்று | ஈடுபாடுடையேனாய் |
| எம் பெரும் தகாய் | எம்பெருமானே! | வாசகம் மாலை கொண்டு | சொல் மாலைகளைக் கொண்டு |
| | | உன்னையே | உன்னையே நோக்கி |
| | | இருந்து இருந்து | இடைவிடாது |
| நான் உன் கழல் காணிய | அடியேன் உனது திருவடிகளைக் காணும்பொருட்டு | எத்தனை காலம் புலம்புவன் | எவ்வளவு காலம் கதறுவேன்? |

* * *—**காணிய**=காண்கைக்காக என்றபடி. **பேதுற்று**=பேது, பைத்தியம்; அறிவு கலங்கி யென்றபடி. **வருந்தி நான் வாசகமாலை கொண்டு**=ஒரு சொல் எடுப்பது ஒரு மலை யெடுக்குமாபோலே யிருக்கிறதாம் ஆழ்வார்க்கு. (ல)

2984. புலம்புசீர்ப் பூமியளந்தபெருமானை*
நலங்கொள்சீர் நன்குருகூர்ச்சடகோபன்*சொல்
வலங்கொண்டவாயிரத்துள் இவையுமோர்பத்து*
இலங்குவான் யாவருமேறுவர்சொன்னலே. (கக)

| | | | |
|---|---|---|---|
| புலம்பு சீர் | (அனைவரும்) கொண்டாடுதற்குரிய திருக் குணங்களை யுடையனாய் | வலம் கொண்ட | மிக்க ஆற்றலையுடைய |
| | | ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரங்களுள் |
| பூமி அளந்த பெருமானை | பூமியை அளந்தவனை எம்பெருமானைக் குறித்து. | இவை ஓர் பத்தும் | இப்பத்துப் பாசுரத்தையும் |
| | | சொன்னால் | ஓதினால் |
| நலம் கொள் சீர் | ஞானபக்தி முதலிய சிறப்பு வாய்ந்த | யாவரும் | (இன்னார் இனையார் என்னும் வாசியற) எல்லாரும் |
| நன் குருகூர் சடகோபன்—; சொல் | அருளிச்செய்த | இலங்கு வான் ஏறுவர் | சோதிமயமான பரமபதத்தை ஏறப்பெறுவர். |

* * *—பரமபதத்தில் நித்யஸூரிகளுக்கே ஸம்பவிக்கக்கூடிய நிலைமையை இத்திருவாய்மொழியில் ஆழ்வார் ஆசைப்பட்டதனால் "இலங்கு வான் ஏறுவர்" என்று தேசவிசேஷ ப்ராப்தியைப் பயனுரைத்துத் தலைக்கட்டினரென்க. (கக)

## மூன்றாம்பத்து—ஒன்பதாந்திருவாய்மொழி—சொன்னால்விரோதம்

(நர ஸ்துதி செய்வாரை நிந்தித்தல்)

2985. சொன்னால்விரோதமிது ஆகிலும்சொல்லுவன்கேண்மினோ*
என்னாவிலின்கவி யானொருவர்க்கும்கொடுக்கிலேன்*
தென்னாதெனாவென்று வண்டுமுரல்திருவேங்கடத்து*
என்னானையென்னப்பன் எம்பெருமானுளனாகவே. (க)

இது சொன்னால் விரோதம் — இப்போது நான் சொல்லும் ஹிதவார்த்தையானது சொல்லப்படுமாகில் உங்களுக்கு அநிஷ்டமாக இருக்கும்;
ஆகிலும் சொல்லுவன் கேண்மின் — ஆனாலும் (உங்கள் அநர்த்தத்தைப் பொறுத்திருக்க மாட்டாமையினால்) சொல்லியே தீர்வேன்; காது கொடுத்துக் கேளுங்கள்;
வண்டு தென்னா தெனா என்று முரல் திரு வேங்கடத்து — வண்டுகளானவை தென்னா வென்று ஆளத்தி வைத்து ரீங்காரஞ் செய்யப் பெற்ற திருமலையிலே
என் ஆனை என் அப்பன் எம்பெருமான் — என்னுடைய யானை போன்றவனும் எனக்கு மஹோபகாரகனுமான ஸ்வாமி
உளன் ஆக — என் கவிக்கு இலக்காயிருக்கும்போது
என் நாவில் இன் கவி — எனது நாவினின்று உண்டான மதுரமான கவிகளை
யான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன் — நான் வேறொருவர்க்கும் கொடுக்கமாட்டேன்.

* * *—வேறு சிலரைக் கவி பாடுகின்றவர்களுக்கு ஹிதமுரைக்க இழிந்த ஆழ்வார், அவர்களுக்கு ருசி பிறக்கைக்காகத் தம்முடைய மதத்தை முந்துறமுன்னம் அருளிச் செய்கிறார். தொடங்கும் போதே '**சொன்னால் விரோதமிது**' என்கிறார்—நீங்கள் சில ப்ரயோஜனங்களை நினைத்து நரஸ்துதி செய்யாநிற்க, அதைத் தவிருமாறு நான் உரைக்குமிது உங்களுக்கு விரோதமாகவே யிருக்கும் என்றபடி. மூலத்தில் "சொன்னால் விரோதம்" என்றுள்ளதே யல்லது, இன்னார்க்கு விரோதம் என்று ஸ்பஷ்டமாக இல்லை; 'உங்களுக்கு விரோதமாகும்' என்பது போலவே 'சொன்னால் எனக்கு விரோதமாகும்' என்பதாகவும் கொள்ளலாம். இவர்க்கு என்ன விரோதம் என்னில்; நரஸ்துதியைப்பற்றி நெஞ்சினால் நினைப்பதும் வாயினால் சொல்வதுமே தமக்கு ஸ்வரூப விரோதம் என்று இவர் திருவுள்ளம்.

"ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ" என்று அவர்களுக்கு ஏதோ ஹிதமருளிச் செய்பவர் போலத் தொடங்கின ஆழ்வார் (அடுத்த அடிகளில்) அவர்கள் செய்யவேண்டியதை அருளிச் செய்யாமல் தம்முடைய நிலைமையைப் பேசுகிறார்; 'நாங்கள் இருக்கவேண்டிய நிலைமையைப்பற்றி நீர் ஏதுக்குச் சொல்லுகிறீர்?' என்று அவர்கள் சீறுவர்களோ வென்கிற அச்சத்தினால் போலும். வழிதவறிப் போமவர்கள் வழியே போவானொருவனைக் கண்டால் நாமுமப்படியே போகவேணுமென்று ஆசைப்பட வேண்டாவோ? நான் இருக்கிறபடி கண்டீர்களே; இப்படியே யன்றோ நீங்களுமிருக்கவேணும் என்கைக்காகச் சொல்லுகிறபடி. இப்பாசுரத்தில் திருவேங்கடமுடையானைச் சொன்னது பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரரூப பஞ்ச ப்ரகாரவிசிஷ்டனை எம்பெருமானைச் சொன்னபடி. (க)

2986. உளனாகவேயெண்ணித் தன்னையொன்றாகத்தன்செல்வத்தை*
வளனாமதிக்கும் இம்மானிடத்தைக்கவிபாடியென்?*
குளனார்கழனிசூழ் கண்ணன்குறுங்குடிமெய்ம்மையே*
உளனாயவெந்தையை எந்தைபெம்மானையொழியவே. (உ)

குளன் ஆர் கழனி சூழ் கண் நன் குறுங்குடி — குளங்கள் நிறைந்த கழனிகளால் சூழப்பட்ட இடமகன்ற விலக்ஷணமான திருக்குறுங்குடியிலே
மெய்ம்மை உளன் ஆய எந்தையை எந்தை பெம்மானை ஒழிய — ஸௌலப்யம் முதலிய குணங்களோடு கூடி உண்மையாக உறைபவனை என் குலநாதனைத் தவிர,
தன்னை — அஸத்கல்பனை தன்னை
உளன் ஆகவே ஒன்று ஆக எண்ணி — ஸத்தானவனாகவே கொண்டு ஒரு பொருளாக நினைத்து
தன் செல்வத்தை வளன் ஆ மதிக்கும் — தன்னதாக அபிமானித்த அற்ப செல்வத்தை மிகவும் மேம்பாடாக எண்ணியிருக்கிற
இ மானிடத்தை — இந்த அற்ப மனிதர்களை
கவி பாடி என் — கவிபாடுவதனால் என்ன பலன்?

* * *—உண்மையாயும் பரிபூர்ணமாயுமுள்ள கல்யாணகுண ஸம்பத்துக்களையுடையனாயிருந்துள்ள எம்பெருமானை விட்டு அஸத்கல்பராய் அற்ப ஸம்பத்துக்களை யுடையரானவர்களைக் குறித்துக் கவி பாடுவாரை நிந்திக்கிறார்.

ஈட்டில் ஓர் ஐதிஹ்ய மருளிச் செய்கிறார்; கல்ப்ரஹ்ம தேசத்திலே கரிக்கால் சோழப்ரஹ்ம ராயன் என்கிறவொரு ப்ரபு இருந்தான்; இவன் திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானம் எழுதிக் கொண்டுவந்து நஞ்சீயரிடம் காட்டி மதிப்புரை வாங்கப் பார்த்தான்; அவன் எழுதினது நன்றாக இல்லா மற் போனாலும் வெகு நன்றாயிருக்கிறதென்றே சொல்லியாக வேண்டும்; இல்லாவிடில் அவன் ப்ரபுவாகை யாலே ஏதேனும் தீங்கிழைக்க நினைப்பனோ வென்றுசங்கித்தார் நஞ்சீயர்; உத்தமாச்ரமியான நாம் இதில் அகப்பட்டுக் கொள்வானேன் என்றெண்ணி நம்பிள்ளையை நோக்கி 'நீர் இவ்வுரையைக் கேட்டு ஸம்பா வனை பண்ணும்' என்று நியமிக்க, ஜீயருடைய திருவுள்ளத்தை யுணர்ந்த பிள்ளைதாமும் அங்ஙனே அவ் வுரையை வாசிக்கக்கேட்டு அவனுடைய மனம் உகக்குமாறு கொண்டாடிக் கூறவேணுமென்று கருதி, "இவ்வுரை ஆழ்வாருடைய திருவுள்ளக் கருத்துக்குப் பொருத்தமாகவே மிக நன்றாக அமைந்திருக்கின் றது" என்று அருளிச் செய்ய அது கேட்ட அவ்வுரைகாரன் [ராயன்] "ஆழ்வார் வேறொரு காரியமு மில்லாமல் பிரபந்தம் பேசினார்; நான் கிராம காரியங்கள் பலவற்றையும் நோக்கிக் கொண்டே இடை யிடையில் இது எழுதினேன்; ஆதலால் ஆழ்வார்க்கும் எனக்கும் எவ்வளவு வாசியுண்டென்று ஆலோ சித்தருளவேணும்" என்றானும். "தன்னை யொன்றாகத் தன் செல்வத்தை வளாமதிக்கும்" என்றவிடத் திற்கு இது மிகவும் பொருத்தமான ஸம்வாதம். குளன்—குளம்; மகரனகரப்போலி. (உ)

2987. ஒழிவொன்றில்லாத பல்லூழிதோறூழிநிலாவ*போம்
வழியைத்தரும் நங்கள்வானவரீசனைநிற்கப்போய்*
கழியமிகநல்ல வான்கவிகொண்டுபுலவீர்காள்!*
இழியக்கருதி ஓர்மானிடம்பாடலென்னாவதே? (ந)

| | | | |
|---|---|---|---|
| ஒழிவு ஒன்று இல்லாத பல் ஊழி ஊழி தோறு நிலாவ போம் வழியை தரும் | ஒழிவு சிறிதுமில்லாத காலதத் துவமுள்ளதனையும் நிலை நின்று அநுபவிக்கும்படி செல்லக் கடவதான வழிபா டாகிய கைங்கரியத்தைத் தந்தருள்கின்ற | வான் கவி கொண்டு | திவ்யமான கவிகளைக்கொண்டு |
| நங்கள் வானவர் ஈசனை நிற்க | நமது தேவாதி தேவனை பெருமானிருக்க, | புலவீர்காள் | பண்டிதர்களே ! |
| போய் | அவனையுபேக்ஷித்து | இழிய கருதி | அதோகதியையடைய நினைத்து |
| கழிய மிக நல்ல | மிகவும் இனிய | ஓர் மானிடம் பாடல் | அற்ப மனிதர்களைப்பாடுதலால் |
| | | ஆவது என் | (உங்கட்கு) உண்டாகும் பயன் யாது?. |

* * *—ஒரு விச்சேதமில்லாதபடி யாவதாத்மபாவியான காலமெல்லாம் நிலைநின்று அநுபவிக் கும்படி செல்லக் கடவதாயுள்ள வழிபாடான கைங்கரியத்தைத் தந்தருளி நம்மை ஆட்கொள்பவன் எம்பெருமான்; இங்ஙனே கைங்கரியம் செய்கிற நித்யஸூரிகளை ஒரு நாடாகவுடையவன்; இப்படிப் பட்ட எம்பெருமான் விஷயத்தில் எத்தனையூழிகாலம் கவிபாடினாலும் ஏற்றிருக்கும்; பாடுவதற்கும் மெய் யான திருக்குணங்கள் எல்லைகடந்தவையுண்டு; பாடுகிறவர்களுக்கும் ஸகல புருஷார்த்த ஸித்தியுண்டு; பாட்டுக்கும் மிக்க சிறப்புண்டு; இப்படியிருக்க, தகாத விஷயங்களைத் தேடித்திரிந்து மானிடம் பாடி அதோகதியை யடையப் பார்க்கிறீர்களே, இதுவென்கொல்! என்கிறார்.

**வழியைத்தரும்** என்பதற்கு அர்ச்சிராதி மார்க்ககதியைக் கொடுத்தருள்கின்ற என்று பொருள் கொள்வாருமுளர்.

**வானவரீசனை நிற்க**—வானவரீசனைவிட்டு என்றபடி. இனி, 'ஈசனை' என்ற ஐகாரத்தைச் சாரியையாக வைத்து முதல் வேற்றுமைப் பொருள் கொள்ளுதலு மொன்று. "இவன் நம்மை நோக்கி ஒரு கவிபாடுவனோ" என்று எம்பெருமான் ஆசையோடிருக்க—என்று ரஸமயமான பொருள்கூறுவர் நம்பிள்ளை. (ந)

2988. என்னாவதெத்தனைநாளைக்குப்போதும்? புலவீர்காள்!*
மன்னுமனிசரைப் பாடிப்படைக்கும்பெரும்பொருள்*
மின்னார்மணிமுடி விண்ணவர்தாதையைப்பாடினால்*
தன்னாகவேகொண்டு சன்மஞ்செய்யாமையுங்கொள்ளுமே. (ச)

| | | | |
|---|---|---|---|
| புலவீர்காள் | பண்டிதர்களே ! | மின் ஆர் மணி முடி விண்ணவர் தாதையை பாடினால் | ஒளி நிறைந்த மணிமகுடத்தை யுடையவனான தேவாதி தேவனை கவிபாடினால் (அப்பெருமான் உங்களை) |
| மன்னு மனிசரை பாடி படைக்கும் | அல்பாயுஸ்ஸுக்களான மனி தர்களைக்கவிபாடி (அதனால்) நீங்களடைகின்ற | தன் ஆகவே கொண்டு | தனக்கு அடிமையாகவே கொண்டு |
| பெரும் பொருள் | பெருஞ் செல்வம் | சன்மம் செய்யாமையும் கொள்ளும் | இனிப் பிறவிகள் உண்டாகாத படியும் அங்கீகரித்தருள் வன். |
| என் ஆவது | யாதாவது ? | | |
| எத்தனை நாளைக்கு போதும் | (அது) எத்தனை நாளைக்குப் பற்றும்? | | |

* * *—கவிபாடினார்க்கு ஸகலவரிசைகளும் கொடுக்கவல்லவனை எம்பெருமானைவிட்டு. இன்றிருப்பார் நாளையிரார் என்னும்படியான அஸ்திரர்களைக் கவிபாடுவதில் என்ன பயனுண்டென்கிறார்,

என்னாவது ≡ அற்பர்களைக் குறித்து நீங்கள் கவிபாடுவதனால் உங்களுக்கு என்ன கிடைக்கப் போகிறது? என்றார்; அது கேட்டவர்கள், ‘கவிபாடினால் ஒன்றும் கிடைக்காமற் போகுமோ? கவிபாடுவாரும் பாடினவர்களுக்குக் கொடுப்பாருமாய்க் காணப்படவில்லையோ? என்றார்கள்; அதற்குமேல் **எத்தனை நாளைக்குப் போதும்?** என்கிறார். கவிபாடப் பரிச்ரமப்பட்ட நாள்களோ பலபல இருக்கும்; அந்நாட்களுள் ஒரு நாளைய ஜீவனத்திற்குக் காணுமோ அவன் கொடுக்கும் பொருள்—என்றபடி. அந்த அற்பபலனுக்கும் அவகாசமில்லையாம்படி அல்பாயுஸ்ஸுக்களாகவன்றோ அவர்கள் தாமிருப்பது என்கிறார் **மன்னு மனிசரை** என்பதனால். ஒருவன் விஷயமாக ஒரு வருஷகாலம் வெகு பரிச்ரமப்பட்டு ஒரு புத்தகமெழுதி முடித்து அதை அவனிடம் கொண்டுபோய்ப் படித்துக்காட்டிப் பரிசுபெற வேணுமென்றெண்ணிப் புறம்படும்போதே ‘அவன் மாண்டான்’ என்று எதிரே ஆள் வரும்படியாகவன்றோ இருப்பது. **சன்மம்செய்யாமையுங் கொள்ளும்**≡நீசரைரைக் கவிபாடுகைக்கு அடியான சரீரஸம்பந்தத்தையும் தொலைத்தருள்வன். சன்மம் ஏற்பட்டால் பசியும் ஏற்படுகிறது; அதனால் அற்பரிடம் சென்றுதுதிக்க நேருகின்றது; சன்மமேயில்லையாகில் நரஸ்துதியாகிற நாசமும் இல்லையாமென்று ஜன்ம ஸம்பந்தத்தையே போக்கியருள்வன் எம்பெருமான். (௪)

2989. கொள்ளும்பயனில்லைக் குப்பைகிளர்த்தன்னசெல்வத்தை*
வள்ளல்புகழ்ந்து நும்வாய்மையிழக்கும்புலவீர்காள் *
கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம்தரும்கோதில்*என்
வள்ளல்மணிவண்ணன்தன்னைக் கவிசொல்லவம்மினோ. (௫)

| | |
|---|---|
| கொள்ளும் பயன் இல்லை | நீங்கள் பெறும் பலன் சிறிதுமில்லையாம்படி |
| குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை | குப்பையைக் கிளறினாற்போல் குற்றம் குறைகளே தோற்றும்படியான செல்வமுடைய அற்பரைக் குறித்து |
| வள்ளல் புகழ்ந்து | உதாரனே! என்று கொண்டாடி |
| நும் வாய்மை இழக்கும் புலவீர்காள் | உங்களுடைய ஸத்யத்தை இழந்தொழிகிற புலவர்களே! |
| கொள்ள குறைவு இலன் | நீங்கள் பாடுகிற துதிமொழிகளைப் பொறுத்தமாகக் கொள்ளவல்ல பூர்த்தியையுடையவனும் |
| வேண்டிற்று எல்லாம் தரும் | வேண்டிய எல்லாவற்றையும் தந்தருள்பவனும் |
| கோது இல் | குற்றமற்றவனும் |
| என் வள்ளல் | என் விஷயத்தில் மஹோபகாரங்கள் செய்தவனும் |
| மணிவண்ணன் தன்னை | நீலமணி வண்ணனுமான பெருமானை |
| கவி சொல்ல வம்மின் | கவிபாட வாருங்கள். |

* * *—ஹேயகுணம் மலிந்த நீசரைவிட்டு, ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் நம் அபேக்ஷிதமெல்லாம் தரவல்லவனான எம்பெருமானைக் கவிபாட வாருங்கோளென்கிறார். பிறரைக் கவிபாடுவது ஒரு பிரயோஜனத்திற்காகவேயன்றி ஸ்வயம் ப்ரயோஜனமாகவன்றே; அப்படி நீங்கள் கருதுகிற பிரயோஜனம் பெறுவதில்லை என்று முந்துறமுன்னம் அருளிச் செய்கிறார்—பாவிகளின் உள்ளத்தில் பதிவதற்காக.

பயனில்லை யென்பது மாத்திரமன்று: இழவுமுண்டு என்கிறார் மேல். [குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை வள்ளல்புகழ்ந்து நும் வாய்மையிழக்கும் புலவீர்காள்!] நீங்கள் வாய்பெற்ற பேற்றை இழக்குமத்தனையே யுள்ளது என்கிறார். குப்பைகளைக் கிளறினால் கெடுதலான அம்ஸங்கள் தென்படுமே யல்லது நன்றானதொன்றும் தென்படமாட்டாது; அதுபோல நீசர்களின் சரிதைகளைக் கவிபாடப் புகுந்தால் மறைந்துகிடக்கும் மாசுகள்தாம் வெளிவரும் என்று அநுபவத்திற்குப் பொருத்தமாக அருளிச் செய்கிற அழகு காண்மின். (௫)

2990. வம்மின்புலவீர்! நும்மெய்வருத்திக்கைசெய்துய்ம்மினோ*
இம்மன்னுலகினில் செல்வரிப்போதில்லைநோக்கினோம்*
நும்மின்கவிகொண்டு நும்நுமிட்டாதெய்வமேத்தினால்*
செம்மின்சுடர்முடி என்திருமாலுக்குச்சேருமே. (௬)

| | |
|---|---|
| புலவீர் வம்மின் | புலவர்களே! (நரஸ்துதியை விட்டு) வாருங்கள் |
| நும் மெய் வருத்தி கை செய்து உய்ம்மின் | உங்களது உடலை சிரமப்படுத்தி தொழில் செய்து ஜீவியுங்கோள்; |
| மன இ உலகினில் செல்வர் இல்லை | (ப்ரவாஹரூபேண) நித்யமாயிருக்கின்ற இந்தலோகத்தில் (உங்களுக்குப் போதுமானவை கொடுக்கவல்ல) ஸ்ரீமான்கள் கிடையார்; |

| | |
|---|---|
| இப்போது நோக்கினோம் | (இங்ஙனே) இப்போது ஆராய்ந்து அறிந்தோம்; |
| நும் இன் கவி கொண்டு | உங்களது மதுரமான கவிகளைக்கொண்டு |
| நும் நும் இட்டா தெய்வம் ஏத்தினால் | உங்களுடைய இஷ்ட தெய்வத்தை துதி செய்தால் |
| | (அந்தந் துதிமொழிகளிற் கூறும் குணங்கள் அவர்களிடத்து இல்லாமையாலே அவை) |
| செம் மின் சுடர் முடி என் திருமாலுக்கு சேரும் | செவ்வனே மின்னுகின்ற வொளி பொருந்திய திருமுடியையுடைய எனக்கு ஸ்வாமியான லக்ஷ்மீநாதனுக்கு அந்வயிக்கும். |

* * *—ஜீவனம் உஜ்ஜீவனம் என்று இரண்டுண்டு; எம்பெருமான் திறத்துக் கவிபாடுதலால் உஜ்ஜீவிக்க வழியுண்டெனினும், ஜீவிக்க வழி தேடுகிற நாங்கள் நரஸ்துதிகளிலே இழிகிறோம் என்று சிலர் சொல்லுவதாகக் கொண்டு, நீசரைக் கவிபாடி ஜீவிப்பதிற் காட்டிலும் உடம்பு நோவத் தொழில் செய்து ஜீவித்தல் நன்று என்கிறார்.

**வம்மின்**—காட்டுத்தீயில் அகப்பட்டவர்களை மடுவைக் காட்டியழைப்பாரைப்போலே வாருங்களென்கிறார். **புலவீர்!**—நீங்கள் விவேகிகளாகையாலே நான் அழைக்கிற வாசியறிந்து வரலாமேயென்கிறார். "நும் மெய்வருத்திக் கைசெய்து உய்ம்மினோ" என்கிறவிடத்திற்கு "கோட்டை சுமந்தும் புல் சீவி விற்றும் ஜீவிக்கப் பார்க்கலாகாதோ?" என்று பணிப்பராம் எம்பார். (௬)

2991. சேரும்கொடைபுகழ் எல்லையிலானை*ஓராயிரம்
பேருமுடையபிரானையல்லால் மற்றுயான்கிலேன்*
மாரியனையகை மால்வரையொக்கும்திண்டோளென்று*
பாரிலோர்பற்றையைப் பச்சைப்பசும்பொய்கள்பேசவே. (எ)

| | |
|---|---|
| சேரும் கொடை புகழ் எல்லை இலானை | தனக்குத் தகுதியான ஔதார்யத்தினாலாகிய புகழுக்கு எல்லை யில்லா திருப்பவனும் |
| ஓர் ஆயிரம் பேரும் உடைய பிரானை அல்லால் | ஆயிரந் திருநாமங்களையுடைய உபகாரகனுமான எம்பெருமானை யன்றி |
| பாரில் | பூமியில் |
| மற்று ஓர் பற்றையை | வேறொரு அஸார பதார்த்தத்தைக் குறித்து |
| கை மாரி அனைய என்று | 'கைகள் மேகம்போல் உதாரங்கள்' என்றும் |
| திண் தோள் மால் வரை ஒக்கும் என்று | 'உறுதியான புயங்கள் பெரிய மலைபோல்வன' என்றும் |
| பச்சை பசும் பொய்கள் பேச | மெய் கலவாத புதுப் பொய்களைப் பேசுதற்கு |
| யான் கில்லேன் | நான் சக்தனல்லேன். |

* * *—கீழ் ஆறு பாசுரங்களினால் பரோபதேசம் செய்தருளின ஆழ்வார், தம் உபதேசம் கேட்டு ஒருவரும் திருந்தக் காணாமையாலே வெறுத்து அவர்களைவிட்டு, எம்பெருமானை யொழிய வேறு சிலரைக் கவிபாடுகையாகிற பாவம் எனக்கு இல்லையாகப் பெற்றதே! என்று தம்மளவிலே தாம் உகந்து பேசுகிறார். "வழிபறிக்கும் நிலத்தில் தன்கைப் பொருள்கொண்டு தப்பினவன் உகக்குமா போலே, இவர்களைப் போலன்றியே பகவத் விஷயத்தை யொழிய வேறு சிலரைக் கவிபாடுகைக்கு நான் க்ஷமனன்றிக்கே யொழியப் பெற்றேனென்று ப்ரீதராகிறார்." என்பது நம்பிள்ளையீடு.

அஸாரமான த்ருண விசேஷத்திற்குப் **பற்றை** யென்று பெயர். அது போன்றவனென்னாதே அதுவாகவே சொன்னது முற்றுவமை. "மூளைத்தெழுந்து தீய்ந்துபோவன சில சிறுதூறு உண்டாயிற்று; அதுபோல, பிறந்தவன்று தொடங்கி முடிந்துபோமளவும் ஒரு காரியத்திற்கும் உதவாதவர்களைப் பற்றை யென்கிறது." என்பர் ஆசிரியர்.

**பாரில்** என்று ஏழாம் வேற்றுமையாகக் கொள்ளாமல் **பார் இல்** என்று பிரித்து, 'தங்குவதற்கு ஓரிடமுமில்லாத வொரு க்ஷுத்ரனை' என்று பொருள் கூறுதலுமுண்டு. (எ)

2992. வேயின்மலிபுரைதோளி பின்னைக்குமணாளனை*
ஆயபெரும்புகழ் எல்லையிலாதனபாடிப்போய்*
காயம்கழித்து அவன்தாளிணைக்கீழ்ப்புகும்காதலன்*
மாயமனிசரை என்சொல்லவல்லேன்என்வாய்கொண்டே? (அ)

| | |
|---|---|
| வேயின் மலி புரை தோளி பின்னைக்கு மணாளனை | மூங்கிலைக் காட்டிலும் சிறந்து விளங்குகின்ற தோள்களையுடையளான நப்பின்னைப் பிராட்டிக்கு மணவாளனை கண்ணபிரானைக் குறித்து |
| எல்லை இலாதன ஆய பெரும் புகழ் பாடி | நிரவதிகமாயும் ஆராய்தற்கு உரியனவுமான பெரிய கீர்த்திகளைக் கவிபாடி |
| போய் | நெடுங்காலம் நடந்து |
| காயம் கழித்து | இவ்வுடலை யொழித்து |

அவன் தாள் இணை கீழ் புகும் காதலன் — அவ் வெம்பெருமானது திருவடியிணையில் அந்வயிக்க வேணுமென்கிற ஆசையையுடைய நான்

மாயம் மனிசரை என் வாய் கொண்டு என் சொல்ல வல்லேன் — ப்ராக்ருதர்களான மனிசர்களை (எம்பெருமானையே துதிக்கக் கண்ட) எனது வாக்கைக் கொண்டு என்ன கவி பாடுவேன்? [யாதொன்றும் பாட மாட்டேன்.]

* * *—நப்பின்னைப் பிராட்டியின் ஸம்ச்லேஷ விரோதிகளைத் தொலைத்து அவளை அடிமை கொண்டதுபோல என் விரோதிகளையும் தொலைத்து என்னை அடிமை கொள்பவனான எம்பெருமானையொழிய வேறு சில நீசரைக் கவிபாட நான் நினைத்தாலும் என்வாய் அதுக்குப் பாங்காகாது என்கிறார். எம்பெருமானை வருணிக்கப் புகுந்து 'நப்பின்னை கேள்வன்' என்று சொல்லி அந்த நப்பின்னையைப் பல பாசுரங்களால் வருணிப்பது, அவளது தோளழகைப் பல பாசுரங்களால் வருணிப்பது இங்ஙனே எத்தனை யூழிகாலம் பாசுரம்பாட நினைத்தாலும் விஷயங்கள் விசாலமாயிருக்க, இதர விஷயங்களைப் பாட என்ன ப்ரஸக்தி? என்று காட்டுகிறார் முதலடியினால். (அ)

2993. வாய்கொண்டுமானிடம்பாடவந்த கவியேனல்லேன்*
ஆய்கொண்டசீர்வள்ளல் ஆழிப்பிரானெனக்கேயுளன்*
சாய்கொண்டவிம்மையும்சாதித்து வானவர்நாட்டையும்*
நீகண்டுகொள்ளென்று வீடும்தரும்நின்றுநின்றே. (கூ)

வாய் கொண்டு மானிடம் பாட வந்த கவியேன் அல்லேன் — (அருமையான) வாக்கைக் கொண்டு அற்ப மனிதர்களைப் பாடப் பிறந்த கவி நானல்லேன்;

ஆய் சீர் கொண்ட வள்ளல் ஆழி பிரான் — (வேதாந்தங்களினால்) ஆராயப்பட்ட திருக்குணங்களையுடைய உதாரனாகிய சக்கரக் கையனான பெருமான்

எனக்கே உளன் — என் வாக்குக்கே இலக்காகவுள்ளான்;

(அப்பெருமான்)

சாய் கொண்ட இம்மையும் சாதித்து — அழகிய இஹ லோகத்து அர்ச்சாவதார அநுபவத்தையும் உண்டாக்கித் தந்து

வானவர் நாட்டையும் நீ கண்டுகொள் என்று — பரம பதாநுபவத்தையும் நீ பெறுவாயாக என்று சொல்லி

வீடும் நின்று நின்று தரும் — மோக்ஷ சுகத்தையும் அடைவுபடக் கொடுத்தருள்வன்.

* * *—ஆழ்வீர்! அனேக மஹர்ஷிகளும் மற்றும் முதலாழ்வார்கள் போல்வாரும் துதித்த எம்பெருமானையே நீரும் துதித்தால் என்ன ரஸமுண்டு? வெவ்வேறு விஷயமாகவன்றோ கவிபாட வேணும் என்று சிலர் சொல்ல, **ஆய்கொண்ட சீர்வள்ளலாழிப்பிரானெனக்கேயுளன்** என்கிறார். எம்பெருமானை நான் பேசுவது மற்றையோர் பேசினது போலவோ? "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம், ஒருவர் நம் போல்வருங் கேழ்பவருளரே" (திருவிருத்தம் 45.) என்னும்படி தன்கடாக்ஷத்தை என்பக்கலிலேயே ஒருமடை செய்ததுபோலத் தன்னைப்பற்றிக் கவிபாடுவதையும் என்னொருவனுக்கே உரியதாக்கியருளினானெம்பெருமான் என்றவாறு.

**நின்றுநின்றேவீடும்தரும்** = ப்ராப்த காலத்திலே மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையும் கொடுப்பன் என்று சிலர் பொருள் கூறினராம். **நின்றுநின்று** என்பதற்கு—'ஸாத்மிக்க ஸாத்மிக்க' என்று பொருள் கொள்வது சிறக்குமென்று நம்பிள்ளை திருவுள்ளம். குளப்படியிலே கடலைமடுத்தாற்போலன்றிக்கே, எந்த நன்மை செய்தாலும் பொறுக்கப் பொறுக்கச் செய்தருள்வது எம்பெருமானியல்பு. "ஆற்ற நல்ல வகைகாட்டுமம்மான்" (3055) என்பர் மேலும். (கூ)

2994. நின்றுநின்றுபலநாளுய்க்கும் இவ்வுடல்நீங்கிப்போய்*
சென்றுசென்றாகிலும்கண்டு சன்மம்கழிப்பானெண்ணி*
ஒன்றியொன்றியுலகம்படைத்தான் கவியாயினேற்கு*
என்றுமென்றுமினி மற்றொருவர்கவியேற்குமே? (ய)

பல நாள் நின்று நின்று உய்க்கும் இ உடல் நீங்கி போய் — அனேக காலம் இருந்து சேதனனைத் தன் வசத்திலே யாக்குகின்ற இந்தச் சரீரத்தை விட்டொழிந்துபோய்

சென்று சென்று ஆகிலும் கண்டு சன்மம் கழிப்பான் எண்ணி — இப்படியே பல பல ஜனன மரணங்கள் நடந்த பின்பாகிலும் (ஏதேனுமொரு காலத்தில்) தன்னைக் கண்டு பிறவியைக் கழிக்கக்கூடுமென்று திருவுள்ளம் பற்றி

| | | | |
|---|---|---|---|
| ஒன்றி ஒன்றி உலகம் படைத்தான் | (ஒருகாலும் சோம்பிக் கைவிடாமல்) மேன் மேலும் ஊக்கங் கொண்டு உலகங்களைப் படைத்து வருகின்ற எம்பெருமானுடைய | கவி ஆயினேற்கு | கவியாக அமைந்த எனக்கு |
| | | இனி என்றும் என்றும் | இனி எந்நாளும் |
| | | மற்று ஒருவர் கவி ஏற்குமே | வேறொருவரைக் கவிபாடுதல் தகுமோ? (தகாது.) |

* * *—தன்னைத் துதிப்பதற்கென்றே கரணகளேபரங்களைக் கொடுத்தருளினவனை எம்பெருமான் திறத்திலே கவிபாடப்பெற்ற வெனக்கு மற்றொருவரைக் கவிபாடுதல் ஏலாது என்கிறார். உலகில் க்ருஷி செய்பவன் தான் செய்த க்ருஷி பழுதுபட்டொழிந்தாலும் 'இன்னமும் ஒரு தடவை செய்து பார்ப்போம்' என்றுகொண்டு மீண்டுமீண்டும் நசையாலே க்ருஷிதன்னையே செய்து பார்ப்பன்; அதுபோல, எம்பெருமானும் "பத்தி யுழவன்" (2404) என்று திருமழிசைப்பிரான் அருளிச்செய்தபடியே பக்திக்ருஷி செய்பவனாதலால் அந்த க்ருஷி எத்தனை தடவை முட்டுப்பட்டாலும் 'இன்றொரு தடவையிலாகிலும் பலிக்கமாட்டாதோ' என்று கொண்டு மீண்டுமீண்டும் பிரபஞ்ச ஸ்ருஷ்டியைச் செய்தருள்வனென்கிறது இரண்டாமடிகளால்.

**உலகம் படைத்தான் கவியாயினேற்கு** = இங்ஙனே மேன் மேலும் கைவாங்காமல் ஒரு நசையாலே உலகத்தைப் படைத்துக்கொண்டே வந்த எம்பெருமானுடைய க்ருஷி என்னொருத்தனளவிலே பலித்ததனால் அவனையே கவிபாடும்படியான பாக்கியம் பெற்றேனென்றவாறு. (௰)

2995. ஏற்கும்பெரும்புகழ் வானவரீசன்கண்ணன்தனக்கு*
ஏற்கும்பெரும்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல்*
ஏற்கும்பெரும்புகழ் ஆயிரத்துளிவையுமோர்பத்து*
ஏற்கும்பெரும்புகழ் சொல்லவல்லார்க்கில்லைசன்மமே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| ஏற்கும் பெரு புகழ் வானவர் ஈசன் கண்ணன் தனக்கு | தனக்கு ஏற்றிருக்கின்ற மிக்க புகழையுடையவனும் நித்யஸூரி நாதனுமான கண்ணபிரான் விஷயமாக, | ஏற்கும் பெரும் புகழ் ஆயிரத்துள் | ஏற்ற பெரும்புகழையுடைய இவ்வாயிரத்தினுள் |
| ஏற்கும் பெரும்புகழ் | | ஏற்கும் பெரும் புகழ் இவை ஓர் பத்தும் | தகுதியான சிறந்த புகழையுடைத்தான இந்தத் திருவாய் மொழியை |
| வண் குருகூர் சடகோபன்—; | | சொல்லவல்லார்க்கு சன்மம் இல்லை | ஓத வல்லவர்களுக்கு மறு பிறப்பு இல்லை. |
| சொல் | அருளிச்செய்த | | |

* * *—இத்திருவாய்மொழி கற்றார்க்கு, பிறரைக்கவிபாடுதற்குரிய நீசப்பிறவி நேராதென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். இப்பாசுரத்தில் நான்கு அடிகளிலும் **ஏற்கும்பெரும்புகழ்** என்ற விசேஷணம் அமைந்திருக்கு மழகு நோக்கத்தக்கது. எம்பெருமானை உபயவிபூதிநாதன் என்று சொன்னால் ஏற்றிருக்குமாபோலே ஆழ்வாரை 'எம்பெருமான் கவி இவர்' என்றால் அப்படியே ஏற்றிருக்கும். 'அவ்வெம்பெருமானை உள்ளபடியே புகழும் வேதம் திருவாய்மொழிதான்' என்றால் இதுவும் ஏற்றிருக்கும். 'ஸ்வரூபநாசமாகப்பிறரைக் கவிபாடாமல் ஸ்வரூபம் நிறம்பெற எம்பெருமானையே கவிபாடுமாறு நியமித்த இப்பதிகமே இவ்வாயிரத்தினுள்ளும் சிறந்தது' என்றால் இதுவும் ஏற்றிருக்குமாயிற்று. (௧௧)

---

## மூன்றும்பத்து—பத்தாந்திருவாய்மொழி, சன்மம்பலபலசெய்து

கீழ்த் திருவாய்மொழியில்—துதிப்பதற்கு வாய்த்த ஸ்வரூப ரூப குணவிபூதி சேஷ்டிதங்களையுடையனை எம்பெருமானைத் துதிப்பது தவிர்ந்து க்ஷுத்ரநரஸ்துதிகளிலே வாய்செலுத்தித் திரியுமவர்களை உபதேசத்தாலே திருத்தப்பார்த்தும் அவர்கள் திருந்தக்காணாமையாலே, இவர்களைப் போலே நாமும் நரஸ்துதியிலே யிழிந்து அநர்த்தப்படாதிருக்கப் பெற்றோமே! என்று தம் உகப்போடே தலைக்கட்டினார். அந்த வுகப்பே விசேஷித்துப் பெருகுகிறது இத்திருவாய்மொழியில். நரஸ்துதிகளில் செல்லப்பெறுதமாத்திரமேயன்றியே எம்பெருமான் விஷயத்திலே பரிபூர்ணமாக அவகாஹித்துத் தாம் அநுபவிக்கப்பெற்ற பரிசை உள்குழைந்து பேசுகிறார். (*)

2996. சன்மம்பலபலசெய்துவெளிப்பட்டுச் சங்கொடுசக்கரம்வில்*
ஒண்மையுடையவுலக்கை ஒள்வாள்தண்டுகொண்டுபுள்ளூர்ந்து*உலகில்
வன்மையுடையவரக்கர் அசுரரைமாளப்படைபொருத*
நன்மையுடையவன்சீர்பரவப்பெற்ற நானோர்குறைவிலனே (௧)

| | | | |
|---|---|---|---|
| பல பல சன்மம் செய்து | பல பல வகைப்பட்ட அவதாரங்களைப் பண்ணி | உலகில் வன்மை உடைய அரக்கர் அசுரர் மாள | உலகத்திலுள்ள கடினமான மனமுடைய அரக்கர்களும் அசுரர்களும் மாண்டொழியும்படி |
| வெளிப்பட்டு | ஸம்ஸாரிகளின் கண்ணுக்கும் புலப்பட்டு | படை பொருத | ஆயுதப்பிரயோகம் பண்ணிப் போர்செய்து தொலைத்த |
| சங்கொடு சக்கரம் வில் ஒண்மை உடைய உலக்கை ஒள் வாள் தண்டு கொண்டு | சங்கு சக்கரங்களையும் சார்ங்கத்தையும் ஒளி பொருந்திய முஸலத்தையும் அழகிய நந்தகவாளையும் கௌமோதகியென்னும் கதையையும் ஏந்திக்கொண்டு | நன்மை உடையவன் | நன்மைமிக்கவனை எம்பெருமானுடைய |
| புள் ஊர்ந்து | பக்ஷிராஜனை வாஹனமாகக் கொண்டு | சீர் பரவ பெற்ற நான் ஓர் குறைவு இலன் | திருக்குணங்களைத் துதிக்கப் பெற்ற அடியேன் ஒரு குறையுமுடையே னல்லேன். |

* * *—திவ்யாயுதங்களோடே எம்பெருமான் வந்து அவதரிக்கும்படியை அநுஸந்திக்கப்பெற்ற வெனக்கு ஒரு குறையுமில்லை; ஒரு கற்பகத்தருபணைத்துக் கணுத்தோறும் அரும்பிநுைறபோலேயுள்ள திவ்யாயுதச் சேர்த்தியழகை யனுஸந்திக்கின்ற வெனக்கு ஒரு குறையுமில்லை.

அழகுக்கு இலக்காய் வாழமாட்டாதே அம்புக்கு இலக்காய் முடிந்துபோவதற்கென்று இட்டுப் பிறந்த அஸுரராக்ஷஸர்களை ஆயுதங்களாலே முடித்தருளும் வீரத்தை அநுஸந்திக்கிற வெனக்கு ஒரு குறையுமில்லையென்கிறார். ஆஸுரப்ரக்ருதிகளாய்ப் பிறந்து முடிந்துபோவாரும், மனிசர்களாயே பிறந்து வைத்து நரஸ்துதி முதலியவற்றில் இழிந்து ஸ்வரூபநாசம் பெற்றுப்போவாருமான இவ்வுலகில் நானொருவனே குறையற்றவன் என்று தம்முடைய நன்மைக்குத் தாம் உகந்து பேசினாராயிற்று. (க)

**2997.** குறைவில்தடங்கடல்கோளரவேறித் தன்கோலச்செந்தாமரைக்கண்*
உறைபவன்போலவோர்யோகுபுணர்ந்த ஒளிமணிவண்ணன்கண்ணன்*
கறையணிமூக்குடைப்புள்ளைக்கடாவி அசுரரைக்காய்ந்தவம்மான்*
நிறைபுகழேத்தியும்பாடியுமாடியும் யானொருமுட்டிலனே. (உ)

| | | | |
|---|---|---|---|
| குறைவு இல் தட கடல் கோள் அரவு ஏறி | குறையற்ற [பரிபூர்ணமான] விசாலமான திருப்பாற்கடலிலே மிடுக்கனை திருவனந்தாழ்வான் மீது ஏறி | கண்ணன் | கண்ணனாய்த் திருவவதரித்தவனும் |
| தன் கோலம் செம் தாமரை கண் உறைபவன் போல | தன்னுடைய அழகிய செந்தாமரை போன்ற திருக்கண்கள் துயிலப் பெற்றவன்போல | கறை அணி மூக்கு உடை புள்ளை கடாவி அசுரரை காய்ந்த அம்மான் | கறையை அணிந்த மூக்குடையவனை பக்ஷிராஜனை நடத்தி அசுரர்களை முடித்தவனுமான எம்பெருமானுடைய |
| ஓர் யோகு புணர்ந்த | யோக நித்திரை செய்தருள்கின்ற | நிறை புகழ் யான் ஏத்தியும் பாடியும் ஆடியும் | நிறைந்த புகழை நான் துதித்தும் இசையில் அமைத்துப் பாடியும் கூத்தாடியும் |
| ஒளி மணி வண்ணன் | அழகிய நீலமணி போன்ற நிறத்தனும் | ஒரு முட்டு இலன் | (எம்பெருமானை யனுபவிப்பதில்) ஒரு தடையுமுடையேனல்லேன். |

* * *—இந்நிலத்தில் வந்து திருவவதாரம் பண்ணுதற்கு அடியாகத் திருப்பாற்கடலில் கண் வளர்ந்தருளிப் பிறகு வஸுதேவர் திருமகனாய் வந்து பிறந்தருளி ஆச்ரிதவிரோதிகளைத் தொலைத்தருளின கண்ணபிரானுடைய கீர்த்தியைப் பலபடியும் அநுபவிக்கப்பெற்ற நான் மேன்மேலும் இங்ஙனம் அனுபவிப்பதில் யாதொரு தடையுமுடையே னல்லேனென்கிறார்.

**குறைவில் தடங்கடல்**=கீழே தமக்குக்கூறிய குறைவில்லாமையை இங்குத் தடங்கடலுக்குக் கூறுகின்றார். தடங்கடலும் நானுமே குறைவில்லாதவர்கள் என்கிற கருத்துப்போலுமாழ்வார்க்கு. "மாலுங் கருங்கடலே! என்னோற்றாய், வையகமுண்டாலினிலைத் துயின்றவாழியான், கோலக்கருமேனிச் செங்கண் மால் கண்படையுள், என்றுந்திருமேனி நீ தீண்டப்பெற்று" (2100) என்ற பொய்கையார் பாசுரத்தின் படியே கடலின் குறைவில்லாமை காண்க.

எம்பெருமான் அடியாரை ரக்ஷித்துப்படைத்த பெரும்புகழ்களைத்துதித்தும் இசையிலே வைத்துப்பாடியும் ஆடியும் திரிகிற நான் இடைவிடாத பகவதநுபவத்தையுடையேன் என்றாராயிற்று. (உ)

**2998.** முட்டில்பல்போகத்தொருதனிநாயகன் மூவுலகுக்குரிய*
கட்டியைத்தேனையமுதை நன்பாலைக்கனியைக்கரும்புதன்னை*
மட்டவிழ்தண்ணந்துழாய்முடியானைவணங்கி அவன்திறத்துப்
பட்டபின்னை* இறையாகிலும் யானென்மனத்துப்பரிவிலனே. (௩)

| | | | |
|---|---|---|---|
| முட்டு இல் பல் போகத்து | இடையூறென்றுமில்லாத பலவகையான போகங்களை யுடையவனும் | மட்டு அவிழ் தண் அம் துழாய் முடியானை | மது பெருகப்பெற்ற குளிர்ந் தழகிய திருத்துழாய் மாலை யைத் திருமுடியிலணிந்த வனுமான எம்பெருமானை |
| ஒரு தனி நாயகன் | ஒப்பற்ற தலைவனும் | வணங்கி அவன் திறத்து பட்ட பின்னை | நமஸ்கரித்து அவன் விஷயத் திலே ஆட்பட்டேனாதலால் |
| மூ உலகுக்கு உரிய | மூவுலகத்தவர்கட்கும் பொதுவிலே போக்யமான | யான் இறை ஆகி லும் என் மனத்து பரிவு இலன் | இப்படிப்பட்ட அடியேன் சிறிதளவும் என் மனத்தில் பீடையை யுடையேனல் லேன். |
| கட்டியை தேனை அமுதை நல் பாலை கனியை கரும்பு தன்னை | கருப்பங்கட்டி, தேன் அமி ருதம் நல்லபால் கனி கரும்பு இவை போன்ற வனுமாய் | | |

* * *—எம்பெருமானுடைய போக்யதையை அநுஸந்தித்து அவனுக்கு அடிமை செய்வதிலேயே ஊன்றியிருக்குமெனக்கு ஒரு துக்கமுமில்லை யென்கிறார். கட்டி, தேன், அமுது, பால், கனி, கரும்பு என்று ஆறு சுவைப்பொருள்களைக் கூறியது ஆழ்வார்தமக்கு எம்பெருமானே அறுசுவையடிசில் என்று காட்டினபடியாம்.

‘‘ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி’’ என்று உபநிஷத்திற் கூறியபடியே ஒரு தேசவிசேஷத்திலே சென்று பெறவேண்டிய அனுபவம் எனக்கு இந்நிலத்திலேயே கிடைத்து விட்டதனால் ஒரு குறையுமுடையேனல்லேன் என்றாராயிற்று. (௫)

**2999.** பரிவின்றிவாணனைக்காத்துமென்று அன்றுபடையொடும்வந்தெதிர்ந்த*
திரிபுரம்செற்றவனும்மகனும் பின்னுமங்கியும்போர்தொலைய*
பொருசிறைப்புள்ளைக்கடாவியமாயனை ஆயனைப்பொற்சக்கரத்து
அரியினை*அச்சுதனைப்பற்றி யானிறையேனுமிடரிலனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொரு காலத்தில், | மாயனை | ஆச்சர்ய சக்தியுக்தனும் |
| வாணனை பரிவு இன்றி காத்தும் என்று | பாணாசுரனை வருத்தமின்றியே காக்கக்கடவோம்' என்று அபிமானித்து | ஆயனை | கோபாலகிருஷ்ணனாய் அவதரித்தவனும் |
| படையொடும் வந்து எதிர்ந்த | ஆயுதங்களோடுகூட வந்து எதிரிட்ட | பொன் சக்கரத்து | அழகிய திருவாழியை யுடையவனாய்க் கொண்டு |
| திரிபுரம் செற்ற வனும் மகனும் பின்னும் அங்கியும் | த்ரிபுரதகனம் செய்தவனான சிவபிரானும் அவன் மகனான ஆறுமுகனும் அதற்குமேலே அக்நியும் | அரியினை | விரோதிகளை அழியச் செய் பவனும் |
| போர் தொலைய | போர்க்களத்திலே பங்க மடையும்படி, | அச்சுதனை | அடியார்களைக் கைவிடாதவனு மான எம்பெருமானை |
| பொரு சிறை புள்ளை கடாவிய | பொருகின்ற சிறகையுடைய பக்ஷிராஜனை நடத்திய | பற்றி | அடைந்து |
| | | யான் இறை யேனும் இடர் இலன் | அடியேன் சிறிதளவும் இடைஞ்சலுடையே னல்லேன். |

* * *—தேவதாந்தரங்களைப் பற்றினவர்களுக்கு அவர்கள் ரக்ஷகரல்லர் என்பதையும், தன்னைப் பற்றினவர்களைத் தான் கைவிடுவதில்லையென்பதையும் நன்கு காட்டிக்கொடுத்த எம்பெருமானைப்பற்றின வெனக்கு ஒரு குறையுமில்லை யென்கிறார்.

‘‘**பற்றி யான் இறையேனுமிடரிலனே**’’ என்றவிடத்து ஈடு;—பேரன் என்றிருக்கையாலே அநிருத்தாழ்வானுக்கு நாலுநாள் சிறையிலிருக்க வேண்டிற்று; அடியேனென்று பற்றினவெனக்கு அதுவும் வேண்டிற்றில்லை.’’ (௬)

**3000.** இடரின்றியே யொருநாளொருபோழ்தில் எல்லாவுலகும்கழிய*
படர்புகழ்ப்பார்த்தனும்வைதிகனும் உடனேறத்திண்டேர்கடவி*
சுடரொளியாய்நின்றதன்னுடைச்சோதியில் வைதிகன்பிள்ளைகளை*
உடலொடும்கொண்டுகொடுத்தவனைப்பற்றி ஒன்றும்துயரிலனே. (௭)

| | | | |
|---|---|---|---|
| ஒரு நாள் | ஒரு நாளிலே | படர்புகழ் பார்த்த னும் வைதிக னும் உடன் ஏற | பரம்பின புகழை யுடையவனான அர்ஜுனனும் வைதிகப் பிராமணனும் கூடவே ஏறி வரும்படி |
| ஒரு போழ்தில் | ஓர் அவஸரத்திலே | | |
| எல்லா உலகும் கழிய | எல்லா வுலகங்களுக்கும் அப்பால் போம்படியாக, | | |

| | | | |
|---|---|---|---|
| இடர் இன்றியே | இடைஞ்சல் ஒன்றுமின்றி | வைதிகன் பிள்ளைகளை | அந்த வைதிகனுடைய பிள்ளைகள் நால்வரையும் |
| திண் தேர் கடவி | திடமான திருத் தேரைச் செலுத்தி | உடலொடும் கொண்டு கொடுத்தவனை | அவ்வுடம்போடே மீட்டுக் கொணர்ந்து கொடுத்தருளின பெருமானை |
| சுடர் ஒளி ஆய் நின்ற | மிகவும் சிறந்த தேஜோ மயமாயிராநின்ற | பற்றி | அடைந்து (அதனால்) |
| தன்னுடை சோதியில் | தன்னுடையதாய், பரஞ்சோதியெனப்படுமதான திருநாட்டிலே | ஒன்றும் துயர் இலன் | சிறிதும் துயரமுடையேனல்லேன். |

* * *—வைதிகன் பிள்ளைகளைக் கொணர்ந்து கொடுத்த அதிமாநுஷ சேஷ்டிதத்தை அநுஸந்தித்து, இங்ஙனே அரியன செய்தும் அடியார்களைக் காத்தருளவல்ல பெருமானைப்பற்றின வெனக்கு யாதொரு துயருமில்லை யென்கிறார்.

மீளாவுலகமாகிய பரமபதத்திற் சென்றவர்கள் மீண்டனரென்பது எங்ஙனே கூடுமென்கிற சங்கைக்குப் பெரியோர்கள் இங்குப் பலவிதமாக சமாதானங் கூறுவர்கள்: அர்ச்சிராதிமார்க்கத்தாற் சென்றவர்கள் திரும்பி வருதலில்லையென்றும், அதுவும் அவர்களுடைய சுதந்திரமான இச்சையினால் இல்லையென்றும் இங்கு முக்கியமாக வுணர்க.

**"உடலொடுங் கொண்டு கொடுத்தவனை"** என்றவிடத்தை பட்டர் உபந்யஸித்தருளும்போது "பூசின மஞ்சளும் உடுத்தின பட்டும் இட்ட சவடிப் பூணூலும் இட்ட காதுப்பணி"களுமான வொப்பனையில் ஒன்றுங் குறையாதபடி கொண்டுவந்து கொடுத்தவனென்றருளிச் செய்தாராம்; அது கேட்டவர்கள் "இப்பிள்ளைகள் பிறந்த க்ஷணத்திலேயே கொண்டு போகப்பட்டார்களாகவன்றோ சொல்லுகிறது; அப்போது இவையெல்லாம் இருக்க ப்ரஸக்தி யில்லையே" என்று பட்டரிடம் விஜ்ஞாபிக்க, "ரிஷிபுத்திரர்களாகையாலே பிறக்கிறபோதே அவற்றோடே பிறப்பார்காணும்" என்றருளிச் செய்தாராம். ரஸோக்தி யிருந்தபடி. (௫)

3001. துயரில்சுடரொளிதன்னுடைச்சோதி நின்றவண்ணம்நிற்கவே*
துயரில்மலியும்மனிசர்பிறவியில் தோன்றிக்கண்காணவந்து*
துயரங்கள்செய்துதன்தெய்வநிலையுலகில் புகவுய்க்குமம்மான்*
துயரமில்சீர்க்கண்ணன்மாயன்புகழ்துற்ற யானோர்துன்பமிலனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| துயர் இல் சுடர் ஒளி தன்னுடை சோதி | துன்பமற்றதும் சிறந்த தேஜோரூபமுமான தன்னுடைய விக்ரஹமானது | தன் தெய்வம் நிலை உலகில் புக உய்க்கும் அம்மான் | தன்னுடைய அப்ராக்ருத ஸ்வபாவத்தை இவ்வுலகத்தின்கண் பிரசுரப்படுத்தின ஸ்வாமியாய் |
| நின்ற வண்ணமே நிற்க | அங்கு இருக்கும்படியிலொன்றுங் குறையாமே நிற்கும்படியாக, | துயரம் இல் சீர் | ஹேய குணங்கள் இன்றிக்கே கல்யாண குணமயனாய் |
| துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றி | துக்கத்திலே யழுந்தின மனிதருடைய யோனிகளிலே பிறந்து | மாயன் | ஆச்சர்ய சக்தி யுக்தனான |
| கண் காண வந்து | (அனைவரும்) கண்ணாற் காணும்படியாக வந்து | கண்ணன் | கண்ணபிரானுடைய |
| துயரங்கள் செய்து | (அனைவரையும்) ஈடுபடுத்தி | புகழ் | கீர்த்திகளை |
| | | துற்ற யான் | அநுபவிக்கப்பெற்ற நான் |
| | | ஓர் துன்பம் இலன் | ஒரு துன்பமுமுடையேனல்லேன். |

* * * தன்னுடைய அப்ராக்ருதமான திவ்யமங்கள விக்ரஹத்தை இதரஸஜாதீயமாக்கி ஸம்ஸாரிகளின் கட்புலனுக்கு இலக்காக்கி வைத்த கண்ணபிரானுடைய திருக்குணங்களை அனுபவிக்கப் பெற்ற வெனக்கு ஒரு துன்பமுமில்லை யென்கிறார்.

எம்பெருமான் மத்ஸ்யகூர்மாதி அவதாரங்களையும் ராமக்ருஷ்ணாதி அவதாரங்களையும் செய்தருளினகாலத்து ஏற்றுக்கொண்ட திருமேனியானது நம் போன்றவர்களின் உடல்போல மாம்ஸாதிமயமாகத் தோன்றியிருந்தாலும் உண்மையில் அப்படிப்பட்டதன்று; பரமபதத்தில் அப்ராக்ருதமாகவுள்ள திவ்யமங்கள விக்ரஹத்திற்கும் விபவாவதாரங்களில் பரிக்ரஹிக்கப்பட்ட திருமேனிக்கும் சிறிதும் வேற்றுமையில்லை—என்னுமிடம் முன்னடிகளிற் கூறப்பட்டது. **"மனிசர்பிறவியில்"** என்றதை உபலக்ஷணமாகவுங் கொள்ளலாம்; *எந்நின்ற யோனியுமாய்ப் பிறப்பவனாதலால்.

எம்பெருமானார் பெரும்பாலும் இந்தப் பாசுரந் தன்னையே திருவுள்ளத்திற் கொண்டு கீதா பாஷ்ய ப்ரவேசத்தில், "ஸகலமநுஜநயந விஷயதாம் கத:" இத்யாதி ஸ்ரீஸூக்திகளையருளிச் செய்தாரென்றுணர்க.

**துயரங்கள் செய்து** = துயரங்களைத் தீர்ப்பதற்காக வந்து அவதரித்திருக்கச் செய்தே 'துயரங்கள் செய்து' என்னலாமோ வென்னில்; இங்கே நம்பிள்ளை யீடு காண்மின்; "அநுகூலரை அழகாலே நோவுபடுத்தியும், ப்ரதிகூலரை ஆயுதத்தாலே நோவுபடுத்தியும்."

**உலகில் தன் தெய்வநிலை புகவுய்க்கு மம்மான்**=பரமபதத்திலே நடையாடுகின்ற ஸ்வபாவத்தை ஸம்ஸாரிகளுக்குத் தெரிவித்தவன் என்றபடி. தூதுபோயும் தேரோட்டியாயிருந்தும் தன்படியைத் தெரிவித்தவன் என்னவுமாம். இப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை நெருங்க அநுபவிக்கப்பெற்ற எனக்கு எவ்வகைத் துன்பமுமில்லை யென்றாராயிற்று.

துற்ற—துற்றிய என்றபடி. (சு)

3002. துன்பமுமின்பமுமாகிய செய்வினையாயுலகங்களுமாய்*
இன்பமில்வெந்நரகாகி இனியநல்வான்சுவர்க்கங்களுமாய்*
மன்பல்லுயிர்களுமாகிப் பலபலமாயமயக்குக்களால்*
இன்புறுமிவ்விளையாட்டுடையானைப்பெற்று ஏதுமல்லலிலனே. (எ)

| | | | |
|---|---|---|---|
| துன்பமும் இன்பமும் ஆகிய செய் வினை ஆய் | துக்கத்திற்கும் சுகத்திற்கும் காரணமாகக்கூடிய புண்ய பாபரூப கருமங்களுக்கு நிர்வாஹகனாய் | மன் பல் உயிர்களும் ஆகி | நித்யரான பல பிராணிகளுக்கும் நிர்வாஹகனாய் |
| உலகங்களும் ஆய் | உலகங்களுக்கும் நிர்வாஹகனாய் | பல பல மாயம் மயக்குக்களால் | பலவகைப்பட்ட ப்ரக்ருதி விகார ரூபமான மோஹ விகாரங்களாலே |
| இன்பம் இல் வெம் நரகு ஆகி | இன்பமற்ற கொடிய நரகலோகத்திற்கும் நிர்வாஹகனாய் | இன்பு உறும் இ விளையாட்டு உடையானை | ரஸாவஹமான விளையாடல்களை யுடையவனான எம்பெருமானை |
| இனிய நல் வான் சுவர்க்கங்களும் ஆய் | மிகவும் நன்றாய்ச் சிறந்த ஸ்வர்க்க ப்ரதேசங்களுக்கும் நிர்வாஹகனாய் | பெற்று | அநுபவிக்கப் பெற்றதனால் |
| | | ஏதும் அல்லல் இலன் | சிறிதும் துக்கமுடையேனல்லேன். |

* * * புண்யபாப ரூபகருமங்களுக்கும், அவற்றைச் சம்பாதிப்பதற்குரிய இடமான லோகங்களுக்கும், அப்பலன்களை அநுபவிக்குமவர்களான ஆன்மாக்களுக்கும் நியாமகனாய் லீலாரஸமநுபவிக்கின்ற எம்பெருமானை யடையப்பெற்றதனால் ஒருவகையான அல்லலும் எனக்கில்லையென்கிறார்.

**பலபலமாய மயக்குக்களால் இன்புறு மிவ்விளையாட் டுடையான்**="வணங்கும் துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி, அவையவை தோறு அணங்கும் பலபலவாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்" (2573) என்கிறபடியே பலவகைப்பட்ட உபாயங்களையும் வேறு வேறு மதங்களையும் நாநாவகைத் தெய்வங்களையு முண்டாக்கி வைத்து இங்ஙனே லீலாரஸங் கொண்டாடுகின்ற எம்பெருமானுடைய லீலைகளை யநுபவிக்கப் பெற்றதனால் ஒரு கிலேசமுமுடையேனல்லேன் என்றாராயிற்று. (எ)

3003. அல்லலிலின்பமளவிறந்தெங்கும் அழகமர்சூழொளியன்*
அல்லிமலர்மகள்போகமயக்குக்கள் ஆகியும்நிற்குமம்மான்*
எல்லையில்ஞானத்தன்ஞானமஃதேகொண்டு எல்லாக்கருமங்களும்செய்*
எல்லையில்மாயனைக்கண்ணனைத்தாள்பற்றி யானோர்துக்கமிலனே. (அ)

| | | | |
|---|---|---|---|
| அல்லல் இல் இன்பம் அளவு இறந்து | வருத்தம் சிறிதுங் கலசாத ஆனந்த குணம் அளவில்லாமல் இருக்கப்பெற்று | எல்லை இல் ஞானத்தன் | எல்லையில்லாத ஞான விளக்கத்தை யுடையனாய் |
| எங்கும் அமர் அழகு சூழ் ஒளியன் | எங்கும் பரம்பின ஸௌந்தர்யத்தோடு சேர்ந்த லாவண்யத்தை யுடையவனாய், | ஞானம் அஃதே கொண்டு கருமங்கள் எல்லாமும் செய் | அந்த ஞானத்தையே கருவியாகக் கொண்டு காரிய வுலகங்களை யெல்லாம் உண்டாக்குமவனாய் |
| அல்லி மலர் மகள் போகம் மயக்குக்கள் ஆகியும் நிற்கும் அம்மான் | தாமரை மலரில் தோன்றிய பெரிய பிராட்டியோடு ஆனந்தாநுபவத்தினாலுண்டாகிய வியாமோஹமே வடிவெடுத்திருக்கின்ற பெருமானாய், | எல்லை இல் மாயனை கண்ணனை தாள் பற்றி | எல்லையில்லாத ஆச்சரிய சேஷ்டிதங்களை யுடையவனை ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மாவை திருவடி தொழுது |
| | | யான் ஓர் துக்கம் இலன் | நான் ஒரு துக்கமுமுடையேனல்லேன். |

* * * முன்னிரண்டடிகளால்—திருநாட்டில் பெருமான் எழுந்தருளியிருக்கு மிருப்பையும் பின்னடிகளால்—அவன் இந்நிலத்திற் செய்தருளுஞ் செயல்களையும் பேசி, இப்படிப்பட்ட எம்பெருமானை யடையப் பெற்றதனால் எனக்கு யாதொரு துக்கமுமில்லை யென்கிறார்.

**எல்லையில் மாயனைக் கண்ணனை**=ஸங்கல்பரூப ஜ்ஞானத்தாலே ஸ்ருஷ்டி முதலிய ஸகலத்தையும் நிர்வஹிக்க வல்லவனாயிருந்துவைத்து, ஸ்ரீ க்ருஷ்ணனாய் நேர்கொடுநேரே வந்து பிறந்து அனைவரையும் மோஹிப்பித்த பெருமானைப்பற்றின வெனக்கு ஒரு துக்கமுமில்லை யென்றாராயிற்று. (அ)

3004. துக்கமில்ஞானச்சுடரொளிமூர்த்தி துழாயலங்கல்பெருமான்*
மிக்கபல்மாயங்களால்விகிர்தம்செய்து வேண்டுமுருவுகொண்டு*
நக்கபிரானோடயன்முதலாக எல்லாருமெவையும்*தன்னுள்
ஒக்கவொடுங்கவிழுங்கவல்லானைப்பெற்று ஒன்றும்தளர்விலனே. (௯)

| | |
|---|---|
| துக்கம் இல் ஞானம் | அஜ்ஞானம் கலசாத ஞானத்தை யுடையனாய் |
| சுடர் ஒளி மூர்த்தி | மிகுந்த தேஜோ ரூபமான விக்ரஹத்தை யுடையனாய் |
| துழாய் அலங்கல் பெருமான் | திருத்துழாய் மாலை யணிந்த பெருமானாய், |
| மிக்க பல் மாயங்களால் | மிகப் பலவகைப்பட்ட ஆச்சரிய சக்திகளாலே |
| வேண்டும் உருவு கொண்டு | இஷ்டமான உருவங்களைப் பரிக்ரஹித்து |
| விகிருதம் செய்து | விலக்ஷண சேஷ்டிதங்களைச் செய்யுமவனாய், |
| நக்கபிரானோடு அயன் முதல் ஆக எல்லாரும் எவையும் ஒக்க | திகம்பரச் சாமியான சிவபெருமானும் பிரமனும் முதலாக சேதநர்க ளெல்லாரையும் அசே தனங்களெல்லாவற்றையும் ஒரு சேர |
| தன்னுள் ஒடுங்க விழுங்க வல்லானை பெற்று | தனக்குள்ளடங்குமாறு (பிரளய காலத்தில்) விழுங்கி ரக்ஷிக்கவல்லவ னான எம்பெருமானை யடைந்ததனால் |
| ஒன்றும் தளர்வு இலன் | சிறிதும் தளர்ச்சியுடையே னல்லேன். |

* * * எவ்விதமான ஹேயமுமில்லாதவனாய் ஸர்வஜ்ஞனாய் மாசுமறுவற்ற தேஜோமய திவ்யரூபனாய், அதற்குமேலே திருத்துழாய் மாலையு மணிந்து தன் பெருமையெல்லாம் தோற்ற விளங்கு மவனாய், தன்னுடைய விசித்திர சக்திகளாலே தனக்கு விருப்பமான திவ்ய ரூபங்களைப் பரிக்ரஹித்து அற்புதமான திவ்ய சேஷ்டிதங்களைச் செய்து போருமவனாய், சிவன் பிரமன் முதலாய எல்லாரையும் மற்றுமெல்லாப் பொருள்களையும் பிரளயங் கொள்ளாமே திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்குமவனான எம்பெருமானை நான் அடையப் பெற்றதனால் ஒரு தளர்வு முடையே னல்லேன் என்றாராயிற்று. இரண்டாமடியை "மிக்கபன்மாயங்களால் வேண்டுமுருவு கொண்டு விகிருதஞ்செய்து" என்று அந் வயிப்பது. **விகிருதம் என்றது** விலக்ஷண சேஷ்டைகள் என்றபடி. வட சொல். (௯)

3005. தளர்வின்றியேயென்றுமெங்கும்பரந்த தனிமுதல்ஞானமொன்றாய்*
அளவுடையைம்புலன்களறியாவகையால் அருவாகிநிற்கும்*
வளரொளியீசனைமூர்த்தியைப் பூதங்களைந்தையிருசுடரை*
கிளரொளிமாயனைக்கண்ணனைத்தாள்பற்றி யானென்றும்கேடிலனே. (௰)

| | |
|---|---|
| என்றும் எங்கும் தளர்வு இன்றியே பரந்த | எக்காலத்திலும் எவ்விடத் திலும் ஆயாஸமில்லாமல் வியாபித்திருக்குமவனாய், |
| தனி முதல் ஞானம் ஒன்று ஆய் | அத்விதீயமாய் ஸமஸ்த காரணமான ஞானமே வடிவெடுத்தவனாய், |
| அளவு உடை ஐம்புலன்கள் அறியா வகையால் அரு ஆகி நிற்கும் | அளவுபட்ட இந்திரியங்கள் ஐந்தினாலும் அறியக் கூடாதபடி நிரவயவ ஸ்வரூபனா யிருக்குமவனாய், |
| வளர் ஒளி ஈசனை | வளர்கின்ற வொளியை யுடைய ஸ்வாமியாய் |
| மூர்த்தியை | விலக்ஷண விக்ரஹயுக்தனாய் |
| பூதங்கள் ஐந்தை | பஞ்சபூத நிர்வாஹகனாய் |
| இரு சுடரை | சந்த்ர ஸூர்ய நிர்வாஹகனாய், |
| கிளர் ஒளி மாயனை | ஒளிபொருந்தி மேன்மேலுங் கிளர்கின்ற ஆச்சரிய சேஷ்டைகளை யுடையனான |
| கண்ணனை | கண்ணபிரானை |
| தாள் பற்றி | திருவடி தொழப்பெற்றதனால் |
| யான் என்றும் கேடு இலன் | யான் ஒருநாளும் கேடு உடையே னல்லேன். |

* * * அனைவர்க்கும் அந்தராத்மபூதனான ஸ்ரீ க்ருஷ்ணனைப்பற்றின நான் ஒரு அழிவை யுடையேனல்லேனென்கிறார். "தளர்வின்றியே யென்று மெங்கும் பரந்த" என்றது எம்பெருமானுக்கு விசேஷணம். எல்லாக் காலத்திலும் எல்லாவிடத்தும் தன்னுடைய நியாமகத்வ சக்திக்குத் தளர்த்தி யில்லாத பூர்த்தியோடே வியாபித்திருக்குமவன் என்றபடி. "தனிமுதல் ஞானமொன்றாய்" என்றது— ஸகல ப்ரபஞ்ச ஸ்ருஷ்டிக்கும் வேறொரு கருவி வேண்டாதபடி ஸங்கல்பரூப ஜ்ஞானமொன்றையே அத் விதீய ஸாதனமாக வுடையவன் என்றபடி. **தனிமுதல்** என்பதையும் எம்பெருமானுக்கே அடைமொழி யாக்குதலுமுண்டு.

செவி வாய் கண் மூக்கு உடலென்னும் ஐம்புலன்கள் அற்பவிஷயங்களை க்ரஹிக்கவல்லவையே யன்றி, அபரிச்சிந்ந விஷயமான எம்பெருமானை க்ரஹிக்க முடியாதவை. உழக்காலே கடலை முகக்க வொண்ணாதாப்போலே ஐம்புலன்களால் அறிய வொண்ணாதபடி அவற்றுக்கு அவிஷயமாயிருப்பன் என் கிறது இரண்டாமடியால். **அளவுடையைம்புலன்களென்றது**—அளவுபட்ட விஷயங்களை க்ரஹிக்கவே ஏற்பட்ட பஞ்சேந்திரியங்களென்றபடி.

சேதநாசேதநங்களோடே கலசியிருக்கச் செய்தேயும் அவற்றின் தோஷங்கள் தன்பக்கலில் தட்டாமல் ஒளிமல்கி யிருக்கும்படியைக் கூறுவது "வளரொளியீசனை" என்பது. அஸாதாரண திவ்ய விக்ரஹ முடைமை சொல்லுகிறது மூர்த்தியை என்று. (௧௦)

3006. கேடில்விழுப்புகழ்க்கேசவனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன*
பாடலோராயிரத்துள் இவையுமொருபத்தும்பயிற்றவல்லார்கட்கு*அவன்
நாடுநகரமும்நன்குடன்காண நலனிடையூர்திபண்ணி*
வீடும்பெறுத்தித்தன்மூவுலகுக்கும்தரும் ஒருநாயகமே. (௧௧)

| | |
|---|---|
| கேடு இல் விழு புகழ் கேசவனை | ஒருநாளுமழிவில்லாத சிறந்த புகழையுடையனான எம்பெருமான் விஷயமாக |
| குருகூர் சடகோபன் சொன்ன—; | |
| பாடல் ஓர் ஆயிரத்துள் இவையும் ஒரு பத்தும் பயிற்ற வல்லார்கட்கு | ஓராயிரம் பாசுரங்களினுள்ளே இப்பதிகத்தை ஓதவல்லவர்களுக்கு |
| அவன் | அந்த எம்பெருமான், |
| நாடும் நகரமும் | சிறியார் பெரியாரென்கிற வாசியின்றிக்கே அனைவரும் |
| நன்குடன் காண | நன்றாகக் காணும்படி |
| நலன் இடை ஊர்தி பண்ணி | பகவத் பாகவத விஷயத்தில் அடிமைச் செல்வத்தோடே நடக்கும்படி பண்ணி |
| வீடும் பெறுத்தி | மோக்ஷானந்தத்தையும் அடைவித்து |
| தன் மூஉலகுக்கும் ஒரு நாயகம் தரும் | தன்னுடையதான மூவுலகங்கட்கும் ஏகாதிபதியாயிருக்கும் சிறப்பையும் தந்தருள்வன். |

* * *—இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கட்கு உபயவிபூதி ஸாம்ராஜ்யமும் குறையற உண்டாம்படி எம்பெருமான் அநுக்ரஹம் செய்தருள்வன் என்றதாயிற்று.

**பயிற்றவல்லார்**—தாங்கள் ஓதுமவர்கள், பிறரை ஓதுவிக்குமவர்கள் என்ற இருவகைப் பொருளும் கூறுவர். (௧௧)

## மூன்றும்பத்தின் அடிவரவு

1. முடி கட்டுரைக்கில் பரஞ்சோதி மாட்டா வருந்தா ஓதுவார் வாழ்த்துவார் மாஞால, மழுங்கா மறையா வியப்பாய முந்நீர்.
2. முந்நீர் வன்மா கொல்லா சூழ்ச்சி, வந்தாய் கிற்பன் எஞ்ஞான்று மேவு, கூவித் தலைப்பெய் உயிர்களொழிவில்.
3. ஒழிவி லெந்தை யண்ண லீசன், சோதி வேங்கடம் சுமந்து குன்றம், ஓயும் வைத்தநாள் தாள்பரப் புகழும்.
4. புகழுங் கூவுமா பங்கயச் சாதி, அச்சுதன் பாலென்கோ வானவ ரொளிமணி, கண்ணனை யாவையுங் கூடிவண் மொய்ம்மா.
5. மொய்ம்மாந் தண்கடல் மலையை வம்பவிழ், சாது மனிசரும் நீர்மையில் வார்புனல், அமரர் கருமமும் தீர்ந்தவடி செய்ய.
6. செய்ய மூவர் பரவி வைம்மின், திரியும் தோற்ற வெழுமைக்குந் துயரமே, தஞ்சமா கடல்வண் கண்கள் பயிலும்.
7. பயிலு மாளும் நாதனை யுடையார், பெருமக்க ளளிக்கும் சன்மசன்ம நம்பனை, குலந்தாங் கடியார்ந்த வடியோங்கு முடியான்.
8. முடியான் நெஞ்சமே வாசகம் கைகளால், கண்களால் செவிகளால் ஆவியே கோலமே, கொள்வனன் பொருந்திய புலம்புசீர் சொன்னால்.
9. சொன்னா லுளனா வொழிவொன் றென்னுவது, கொள்ளும் வம்மின் சேரும் வேயின், வாய்கொண்டு நின்றுநின் றேற்குஞ் சன்மம்.
10. சன்மங் குறை முட்டுப் பரிவிடர் துயர் துன்பமல்லல் துக்கந் தளர்வு கேடி லொருநாயகம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திருவாய்மொழி யுரையில் மூன்றும்பத்து முற்றுப்பெற்றது.

## நான்காம்பத்து—முதல் திருவாய்மொழி—ஒருநாயகம்

கீழ் மூன்றும்பத்தின் முடிந்த திருவாய்மொழி ஆழ்வார்க்கு அளவுகடந்த ஆனந்தமயமாய்ச் சென்றது. தமக்கு யாதொரு குறையுமில்லை யென்பதைப் பன்னிப் பன்னிப் பகர்ந்தருளினர். மற்றுமுள்ள ஸம்ஸாரிகளையும் தம்மைப் போலவே குறையற்றவர்களாக ஆக்குவதில் மிக்க குதூஹலமுடையரான ஆழ்வார் அவர்களையும் திருத்திப் பணிகொள்ள விரும்பி உபதேசம் செய்பவராய், பகவத்ப்ராப்தி தவிர மற்ற ப்ரயோஜனங்கள் யாவும் அல்பத்வம் அஸ்திரத்வம் முதலிய தோஷங்களினால் துஷடங்களாயிருக்குமாற்றை விரித்துரைக்கின்றார் இத்திருவாய்மொழியில். (*)

3007. ஒருநாயகமாய் ஓடவுலகுடனாண்டவர்*
கருநாய்கவர்ந்தகாலர் சிதைகியபானையர்*
பெருநாடுகாண இம்மையிலேபிச்சைதாம்கொள்வர்*
திருநாரணன்தாள் காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ. (க)

| | | | |
|---|---|---|---|
| ஒரு நாயகம் ஆய் | பூமண்டலம் முழுமைக்கும் அத்விதீய ப்ரபுவாய் | பெரு நாடு காண | உலகமெல்லாம் திரண்டு வந்து (பரிபவத்தைக்) காணும்படியாக |
| ஓட உலகு உடன் ஆண்டவர் | வெகுகாலமளவும் உலகங்களையெல்லாம் அரசாட்சி புரிந்தவர்கள் | இம்மையிலே நாம் பிச்சை கொள்வர் | இப்பிறவியிலேயே தாங்களே பிச்சையெடுப்பர்; |
| (ஒரு காலவிசேஷத்திலே தரித்ரர்களாகி) | | (செல்வத்தின் தன்மை இத்தகையதாதலால்) | |
| கரு நாய் கவர்ந்த காலர் | கரிய நாய்களால் கவ்வப்பட்ட கால்களையுடையவராயும் | திரு நாரணன் தாள் | ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை |
| சிதைகிய பானையர் | உடைந்த பிச்சைப்பாத்திரத்தை யுடையவர்களாயும் ஆகி | காலம்பெற சிந்தித்து உய்ம்மின் | விரைவாக தியானித்து உஜ்ஜீவியுங்கோள். |

* * *—உலகங்கட்கெல்லாம் ஓரரசாக வீற்றிருந்து வாழ்ந்தவர்களுங்கூட நாளடைவிலே தரித்ரர்களாய்த் தடுமாறும்படியைக் கட்கூடாகக் காணப்பெறலாயிருக்குமாகையாலே நித்ய ஸ்ரீமானான எம்பெருமானைப் பணிவதே பாங்கு என்கிறார்.

நன்றாகவாழ்ந்தவர்களுக்கும் ஒரு காலத்திலே ஏழைமை வந்து சேருமே; * ஒரு நாளுணவையொழியென்றாலொழியாத வயிற்றின் பசி ஆற்றவொண்ணாதே; 'நெடுநாள் மதிப்போடே ஜீவித்துக்கிடந்த நாம் பிச்சையெடுத்துப் பிழைப்பது முண்டோ? பட்டினிகிடப்போம்' என்று கிடக்கமுடியாதே; வயிறு வளர்க்கையிலுண்டான நசையாலே பிச்சையெடுக்கவே புறப்பட வேண்டிற்றாகும்: முன்பு குறைவின்றியே ஜீவித்துப் போந்தவர்களாகையாலே பலருங்காண வெளியில் புறப்படமாட்டாமல் இருட்டு வேளைகளிலே புறப்படுவர்கள்: இருளோடேயிருளாய்க் கறுத்த நாய்கள் தெருவிலே விழுந்துகிடக்கும்: பிச்சைக்கு இருளிலே செல்லுமிந்த மஹாப்ரபுக்கள் அவைகிடப்பதறியாதே அவற்றின் வாயிலே காலை வைத்திடுவர்கள். அதனால் அவை வருந்திக் கடித்திடும்; உடனே அந்தப் பாதை பொறுக்கமாட்டாமல், கையிலிருந்த பிச்சைப்பானையைக் கீழே நெகிழவிடுவர்கள்; நாய் கடித்த வலியைப் பொறுக்ககில்லாதே கதறவேண்டியிருந்தும், 'கதறினால் நம்மைப் பலரும் கண்டுபிடித்து ஏசுவார்களோ' என்கிற கூச்சத்தினால் வாய் திறவாதிருந்தாலும் பிச்சைப்பானை கீழே விழுந்து உடைந்த வோசைகேட்டும் நாய் கத்தின வொலி கேட்டும் ஓடிவந்து காணத்திரண்ட திரள் எண்ணிறந்ததாகும்; இங்ஙனம் பலரும் திரண்டு கண்டு ஏசும்படியாக இப்பிறப்பிலேயே பிச்சைபுகும்படியான நிலைமை நேர்ந்து விடுகின்றதென்பதை மூன்றடிகளாலே கூறி, இதனால் ஐச்வர்யம் அஸ்திரம் என்பதைக் காட்டி, ஈற்றடியினால் நித்யபுருஷார்த்தமான பகவத்ப்ராப்தியிலேயே ஊன்றிப் போரும்படி உபதேசித்தாராயிற்று.

**கருநாய்** என்பதற்கு—கருக்கொண்டிருந்த நாய் என்றும் பொருள் கூறுவர்; குட்டியிட்டநாய் என்றபடி. என்றும் குட்டியைக் காத்துக்கிடக்கிறதாகையாலே 'அதுக்கு ஏதேனும் தீங்கு வருகிறதோ' என்று கண்டாரையோடிக் கடிக்குமாம். 'வீரக்கழலிட்டகால்' என்று முன்பு விருதூதிக்கிடந்தது; இப்போது 'நாய்கடித்தகால்' என்னும்படியாயிற்று.

எம்பெருமானார் **திருநாரணன்தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ** என்கிற விதிலே நோக்காக இத்திருவாய்மொழியைத் திருநாராயணபுரத்துத் திருநாராயணப் பெருமானுக்கு ஸமர்ப்பித்ததாக ஸம்ப்ரதாயம்வல்ல பெரியோர் பகர்வர். (க)

3008. உய்ம்மின்திறைகொணர்ந்து என்றுலகாண்டவர்*இம்மையே
தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ளத்தாம்விட்டு*
வெம்மினொளிவெயில் கானகம்போய்க்குமைதின்பர்கள்*
செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மினோ. (உ)

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஐந்தாம்பத்து முதல்திருவாய்மொழி—கையார்சக்கரத்து.

---

கீழே * ஒன்றுந்தேவுமென்கிற திருவாய்மொழியில் பண்ணின வுபதேசம் கேட்டுத் திருந்தினவர்கள் இந்நிலத்திலே நிரம்பியிருக்கிறபடியைக் கண்டவாழ்வார் "பொலிக பொலிக" வென்று அவர்கட்கு மங்களாசாஸநம் பண்ணுவதாக இருக்குமளவிலே, தம்மைப்பற்றிச் சிறிது நினைத்துக் கொண்டார்; 'நாமும் இவர்களைப்போலே இன்னமும் ஸம்ஸாரத்திலே தோள் மாறிக்கிடவாதே இவர்களுக்கு உபதேசம்பண்ணும்படியாகவும் இவர்களைத் திருத்தும்படியாகவும் எம்பெருமான் நமக்கு அருள்புரிந்திருக்கின்றனே, இவ்வருளுக்கு நிதானம் ஏதேனுமுண்டோ?' என்று ஆராய்ந்து பார்த்தார்; அவ்வருள் நிர்ஹேதுகம் என்பதை நன்கறிந்தார்; உள்குழைந்து அதனைப் பேசியநுபவிக்கிறார் இத்திருவாய்மொழியில். சப்தாதிவிஷயங்களிலேயே நான் மண்டிக்கிடக்க, பகவத் விஷயத்தையும் வாயாலே சொல்லுபவன் போல் பாவனை செய்தவனேயல்லது உள்கனிந்த ப்ரேமம் சிறிதுமுடையேனல்லேன்; அப்படியிருந்தும், க்ருத்ரிமமான அந்த உக்திதன்னையே பற்றாசாகக் கொண்டு எம்பெருமான் என்னை விஷயீகரித்தவாறு என்னே! என்று ஆச்சரியப்படுகிறாராயிற்று. .... .... *

3117 கையார்சக்கரத்து என்கருமாணிக்கமேயென்றென்று *
பொய்யேகைம்மைசொல்லிப் புறமேபுறமேயாடி *
மெய்யேபெற்றொழிந்தேன் விதிவாய்க்கின்றுகாப்பாரார்? *
ஐயோ! கண்ணபிரான்! அறையோவினிப்போனாலே. (க)

- கை ஆர் சக்கரத்து — திருக்கையில் பொருந்திய திருவாழியாழ்வானையுடையவனும்
- என் கருமாணிக்கமே — எனக்கு போக்யமான கருமாணிக்கம் போன்றவனுமான பெருமானே!'
- என்று என்று பொய்யே கைம்மை சொல்லி — என்று பலகாலும் பொய்யாகவே கபடவார்த்தையைச் சொல்லி (அந்த வார்த்தைக்குத் தகுதியில்லாதபடி)
- புறமே புறமே ஆடி — விஷயாந்தரங்களிலேயே அவகாஹித்திருந்தும்
- மெய்யே பெற்றொழிந்தேன் — மெய்யன்பர் பெறும் பலனையே பெற்று விட்டேன்;
- விதி வாய்க்கின்று காப்பார் ஆர் — பகவத்க்ருபை பலிக்குமிடத்தில் அதைத் தடுக்கவல்லார் யார்?
- கண்ணபிரான் — ஸ்ரீ க்ருஷ்ணனே!
- இனி போனால் அறையோ — உன்கிருபை எனக்குப் பலிக்கப் பெற்றபின்பு என்னை விட்டு நீ போக விரும்பினாயாகில் தாராளமாகப்போகலாம்; (தடுப்பேனல்லேன்.)
- ஐயோ — (சந்தோஷக் குறிப்பு) [இனி உன்னால் பெயர்ந்துபோக முடியாதென்றபடி.]

* * *—நான் இதரவிஷயங்களிலே மிகவுமீடுபட்டவனாயிருந்து வைத்து, பகவத்விஷயத்திலீடுபட்டவன் போல நடித்துச் சில க்ருத்ரிமச் சொற்களைச் சொல்ல, அவ்வளவிலே எம்பெருமான் என்னை விஷயீகரித்தருளினனென்கிறார். எம்பெருமான் கையுந்திருவாழியுமாயிருக்கிற இருப்பு உண்மையிலே நெஞ்சை உருக்குமதாயிருந்தாலும் இரும்புபோல் வலிதான என்னுடைய நெஞ்சம் அதிலே ஈடுபட்டிலது; ஆனாலும் ஈடுபட்டவர்கள் பேசுகிற பாவனையிலே "கையார்சக்கரத்தென் கருமாணிக்கமே" என்று பேசினேன்; இப்படி ஒரு தடவை சொல்லி நிற்காதே பலதடவை சொன்னேன்; பல்லாயிரந்தடவை சொன்னாலும் உள் கனிந்து சொன்னால் அழகியதே; அப்படியன்றிக்கே எம்பெருமானையும் வஞ்சிப்பதற்காகச் சொன்னேனத்தனை. வாயாற்சொல்லுவதோ இது; நடத்தையோ விஷயப்ராவண்யமே

யாயிற்று. அப்படியிருந்தும் மெய்யன்பர் பெறும் பேற்றை நானும் பெற்றுவிட்டேன்: பொய்யான சொல்லுக்கு மெய்யான பலன் எங்ஙனம் பெறமுடியும் என்று சிலர் சங்கிக்கக்கூடும்; [விதிவாய்க்கின்று காப்பாரார்?] எம்பெருமானுடைய அருள்வெள்ளம் கரை யுடைந்து பெருகப்புகுந்தால் எம்பெருமான்றன்னாலும் அணைசெய்யமுடியாதன்றோ. ஆக மூன்றடிகளைத் தம்மிலேதாம் சொல்லிக்கொண்டு, நான்காமடியை எம்பெருமான்றன்னையே நோக்கிச் சொல்லுகிறார், "கண்ணபிரானே! இனி நீ என்னைவிட்டுப்போகத் திருவுள்ள மாகில் விட்டுப்போ பார்ப்போம்" என்று வீரவாதம் பண்ணுகிறார்; இனி உன்னாலும் விட்டுப் பெயரமுடியாதென்றவாறு. (க)

3118 போனாய்மாமருதின்நடுவே என்பொல்லாமணியே! *
தேனே! இன்னமுதே! என்றென்றேசிலகூத்துச்சொல்ல *
தானேயெம்பெருமான் அவனென்னாகியொழிந்தான் *
வானேமாநிலமே மற்றுமுற்றுமென்னுள்ளனவே. (உ)

| | | | |
|---|---|---|---|
| மா மருதின் நடுவே போனாய் | பெரிய மருதமரங்களினிடையே தவழ்ந்து சென்றவனே! | சில கூத்து சொல்ல | சில பொய்யுரைகளைச் சொல்ல, |
| என் பொல்லா மணியே | எனக்கு விதேயமான துளை படாத ரத்தினம்போன்றவனே! | எம்பெருமான் அவன் தான் என் ஆகி ஒழிந்தான் | அவ்வெம் பெருமானானவன் எனக்கு விதேயனாய் விட்டான்; |
| தேனே | தேன்போன்றவனே! | | (அன்றியும்) |
| இன் அமுதே | இனிமையான அம்ருதம் போன்றவனே! | வான் மா நிலம் மற்றும் முற்றும் என் உள்ளன | அவனுடைய விபூதிகளெல்லாம் என்னுள்ளே நடத்தும் படியாயின. |
| என்று என்றே | என்று இவ்வண்ணமாகவே | | |

* * *—கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் உரலை யிழுத்துக்கொண்டு இரட்டை மருதமரத்தின் நடுவே யெழுந்தருள, யசோதைப் பிராட்டிகண்டு, ஐயோ! பிள்ளைக்கு ஏதோ அனர்த்தம் வந்துவிட்டதென்று அஞ்சி "என்னப்பா! மாமருதின்நடுவே போனாயே!" என்று வயிறெரிந்து பேசினள்; உண்மையில் அவள் பரிவு உடையவளாகை யாலே அங்ஙனம் பேசத்தகும்; அவளுடைய பரிவில் ஆயிரத்திலொன்று கூட இல்லாத நான் அப்படிப்பட்ட பரிவு எனக்கு இருப்பதாகப் பாவனைகாட்டி "என்தேனே! என் இன்ன முதே! என் பொல்லாமணியே! மாமருதின்நடுவேபோனாயே!" என்று நானும் பேசினேன்; இது கபடமான உக்தியாயிருக்கச் செய்தேயும் இதையும் நெஞ்சு கனிந்து சொன்ன சொல் லாகக்கொண்டு எம்பெருமான் என்னுள்ளே ஸபரிகரமாக வந்து புகுந்தருளினானே! இது என்ன ஆச்சரியம்! என்று உள்குழைகின்றார். இரண்டாமடியில் 'கூற்று' என்பது பன்னீரா யிரப்படியின் பாடம்; கூத்து என்பது மற்ற வியாக்கியானங்களின் பாடம். கூறப்படுவது கூற்று; சொல் என்றபடி. 'கூத்து' என்னும் பாடத்தில், சிலருடைய செயலை வேறு சிலர் அநுகரிப்பது கூத்தாகையாலே கபடமென்றவாறு. (உ)

3119 உள்ளனமற்றுளவாப் புறமேசிலமாயம்சொல்லி *
வள்ளல்மணிவண்ணனே! என்றென்றேயுன்னையும்வஞ்சிக்கும் *
கள்ளமனம்தவிர்ந்தே உன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன் *
வெள்ளத்தணைக்கிடந்தாய்! இனியுன்னைவிட்டென்கொள்வனே! (ங)

| | | | |
|---|---|---|---|
| வெள்ளத்து அணை கிடந்தாய் | திருப்பாற்கடலிலே (திருவனந்தாழ்வானாகிற) படுக்கையின் மீது பள்ளிகொள்ளும் பெருமானே! | உள்ளன மற்று உளஆ | எனது நெஞ்சிலுள்ளே இருப்பவை உன்னைத் தவிர்ந்த விஷயாந்தரங்களாயிருக்கச் செய்தேயும் |

புறமே — வெளிவேஷமாக,

வள்ளல் மணி வண்ணனே என்று என்றே — வள்ளலே! மணிவண்ணனே! என்று பலகாலும்

சில மாயம் சொல்லி — சில பொய்யுரைகளைச் சொல்லி

உன்னையும் வஞ்சிக்கும் கள்ளம் மனம்தவிர்ந்து — (ஸர்வஜ்ஞனான) உன்னையும் வஞ்சனை பண்ணும் படியான கபடமான நெஞ்சு தவிரப்பெற்று

உன்னை கண்டு கொண்டு உய்ந்து ஒழிந்தேன் — உன்னை அநுபவிக்கப் பெற்று உஜ்ஜீவித்தவனாயினேன்;

இனி உன்னை விட்டு என்கொள்வன் — இனிமேல் பரமபோக்யனான உன்னைவிட்டு வேறு எதைக் கைக்கொள்ளுவேன்.?

* * *—மனத்தினுள் நடையாடுகின்ற எண்ணங்களோ வேறுபட்டவை; வெளியில் வாயாற் சொல்லுகிற வாசகங்களோ புறப்பூச்சான பொய்யுரைகளேயாம்; எம்பெருமானுடைய ஔதார்யம் முதலிய குணங்களிலும் வடிவழகிலும் மிக ஈடுபட்டவன்போல 'வள்ளலே! மணிவண்ணனே!' என்று பலகாலுஞ்சொல்லி * உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறியும் அப்பெருமானையும் வஞ்சிக்கும் படியான கள்ளமனமுடையவனாகவே யிருந்தேன்; அப்படிப்பட்ட நான் அந்தக் கள்ளமனம் தவிரப்பெற்று உஜ்ஜீவிக்கவல்லவனாயினேன். இனி வேறுவழிகளிலே செல்ல ப்ரஸக்தியில்லை என்றாராயிற்று. (௩)

3120 என்கொள்வனுன்னைவிட்டேன்னும் வாசகங்கள்சொல்லியும் *
வன்கள்வனேன்மனத்தைவலித்துக் கண்ணநீர்கரந்து *
நின்கண்நெருங்கவைத்தே எனதாவியைநீக்ககில்லேன் *
என்கண்மலினமறுத்து என்னைக்கூவியருளாய்கண்ணனே! (௪)

கண்ணனே — எம்பெருமானே!.

வன் கள்வனேன் — மிகக்கொடிய ஆத்மாபஹாரக் கள்வனாகிய நான்

உன்னை விட்டு என் கொள்வன் என்னும் வாசகங்கள் சொல்லியும் — உன்னைவிட்டு வேறு எதைக் கொள்வேன்!, என்கிற கபடவார்த்தைகளைச்சொல்லியும்

மனத்தைவலித்து — விஷயாந்தரங்களில் ஊன்றின நெஞ்சை பலாத்காரமாக மீட்டு

கண்ண நீர் கரந்து — அவ்விஷயாந்தரங்களை அநுபவிக்கப் பெறுமையாலாகும் துக்கத்தையும் மாற்றி

நின் கண் நெருங்க வைத்து — உன்னிடத்திலே மனத்தை ஊன்றவைத்து

எனது ஆவியை நீக்க கில்லேன் — என் ஆத்மாவை ஸம்ஸாரத்தில் நின்றும் விடுவிக்க முடியாதவனாயிருக்கின்றேன்;

என் கண் மலினம் அறுத்து — என் பக்கலிலுள்ள அவித்யா தோஷத்தைப் போக்கி

என்னை கூவி அருளாய் — என்னை உன்பக்கலிலே அழைத்துக் கொண்டருள வேணும்.

* * *—இதற்கு முன்பெல்லாம் இப்படி உன் பக்கல் பொய்யனாய்ப் போந்தது ப்ரக்ருதி ஸம்பந்தத்தாலேயாதலால் அந்த ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் போக்கித்தரவேணுமென்கிறார். [இப்பாட்டுக்கு மற்றொருவகையான அவதாரிகையும் உண்டு;] கீழ்ப்பாட்டில் "உன்னைக் கண்டு கொண்டுய்ந்தொழிந்தேன்" என்றார்; அந்தக் காட்சி மாநஸமான காட்சியாயிருந்தது; காட்சிக்குப் பிறகு பாஹ்ய ஸம்ச்லேஷத்திலே ருசி பிறக்குமாகையாலே கையை நீட்டினார்; கைக்கு அகப்படாமைக்குக் காரணம் தேஹஸம்பந்தமாயிருந்ததென்று உணர்ந்து, இவ்விரோதியை நீயேபோக்கி உன் திருவடிகளிலே அழைத்துக் கொண்டருளவேணுமென்கிறார்—என்று சில ஆசாரியர்கள் நிர்வஹிப்பர்கள். (௪)

3121 கண்ணபிரானை விண்ணோர்கருமாணிக்கத்தையமுதை *
நண்ணியும்நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு *
திண்ணமழுந்தக்கட்டிப் பலசெய்வினைவன்கயிற்றால் *
புண்ணைமறையவரிந்து என்னைப்போரவைத்தாய்புறமே. (௫)

கண்ணபிரானை { ஸ்ரீ கிருஷ்ணனாய் அவதரித்து மஹோபகாரங்கள் செய்தவனும்
விண்ணோர் கரு மாணிக் கத்தை { நித்யஸூரிகளுக்கு ஸேவ்யமான விலக்ஷண விக்ரஹத்தையுடையவனும்
அமுதை { அமிருதம் போன்றவனுமான உன்னை
நண்ணியும் நண்ண கில்லேன் { கிட்டியிருக்கச் செய்தேயும் கிட்டப்பெறுதார் கணக்கிலே யிராநின்றேன்;
(அதற்குக் காரணமேதென்னில்;)

நடுவே இடைச்சுவராக
ஓர் உடம்பில் இட்டு—ஒரு சரீரத்திலே சேர்ப்பித்து
பல செய் வினை வல் கயிற்றால் { பலவகைப்பட்ட கருமங்களாகிற வலிய பாசங்களாலே
திண்ணம் அழுந்த கட்டி { மிகவும் திடமாகக்கட்டி
புண்ணை மறைய வரிந்து { ஹேயதோஷங்களைத் தெரியாதபடியாகப் பண்ணி
என்னை புறமே போர வைத்தாய் { அசக்தனை என்னை உனக்குப் புறம்பான விஷயங்களிலே தள்ளிவைத்தாய்.

* * *—கீழ்ப்பாட்டில் மலினம் என்று ப்ரஸ்தாவிக்கப் பட்ட ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் பரக்க அருளிச்செய்கிறாரிதில். மிகவும் ஹேயமாய் ஜுகுப்ஸிக்கத்தகுந்ததான அந்த ப்ரக்ருதி ஸம்பந்தத்தைப்பற்றிப் பேசுவதற்குமுன்னே நெஞ்சுகுளிர பகவத்விஷயத்தைப் பேசுகிறார்—கண்ணபிரானை விண்ணோர்கருமாணிக்கத்தையமுதை என்று. 'விண்ணோர்கரு மாணிக்கத்தை' யென்பதை முந்துற அந்வயித்துக்கொள்ளவேணுமென்பது ஆசார்யர்களின் திருவுள்ளம். * சூட்டுநன்மாலைப் பாசுரப்படியே விண்ணோர்களை வஞ்சித்துவந்து கண்ண பிரானாகத்திருவவதரித்து, அப்போதைய அதிமாநுஷசீலவ்ருத்த வேஷங்களையெல்லாம் ப்ரத்ய க்ஷஸமாநாகாரமாக எனக்கு ஸேவைஸாதித்து ஆராவமுதமாயிருக்குமெம்பெருமானை என்றபடி. நண்ணியும் நண்ணகில்லேன்—பெற்று வைத்தும் பெறுதார்கணக்கானேன். ஞானலாபம் பெற்றது கொண்டு 'நண்ணியும்' என்றார்; சரீர ஸம்பந்தத்தோடேயிருக்கிற விருப்பைப்பற்ற 'நண்ணகில்லேன்' என்றார். அதுதன்னைத் தாமே விவரித்தருளுகிறார் நடுவேயோருடம்பிலிட்டு என்று தொடங்கி. (௫)

3122 புறமறக்கட்டிக்கொண்டு இருவல்வினையார்குமைக்கும் *
முறைமுறையாக்கைபுகலொழியக் கண்டுகொண்டொழிந்தேன் *
நிறமுடைநால்தடந்தோள் செய்யவாய்செய்யதாமரைக்கண் *
அறமுயலாழியங்கைக் கருமேனியம்மான்தன்னையே. (௬)

இரு வல் வினை யார் { புண்யபாபங்களென்று இருவகைப்பட்ட பிரபல கருமங்கள்
புறம் அற புச்சம் தோன்றுதபடி
கட்டிக் கொண்டு { ஒன்றோடொன்று பிசிறிக் கொண்டு
குமைக்கும் நலிவதற்கு இடமான
ஆக்கை சரீரத்திலே
முறை முறை தோள் மாறுங் கணக்கிலே
புகல் ஒழிய புகுவது தவிரும்படியாக
நிறம் உடை நால் தட தோள் { அழகுபொருந்திய விசாலமான நான்கு திருத்தோள்களையும்

செய்ய வாய் சிவந்த திருப்பவளத்தையும்
செய்ய தாமரை கண் { செந்தாமரைக் கண்களையும்
அறம் முயல் ஆழி அம் கை { ரக்ஷணமாகிற தருமத்திலே ஊக்கமுடைய திருவாழியினாலே அழகுபெற்ற திருக்கைகளையும் உடைய
கரு மேனி { கரிய திருமேனியை யுடையவனை
அம்மான் தன்னை எம்பெருமானை
கண்டு கொண்டு ஒழிந்தேன் { ஸேவித்து அநுபவித்து விட்டேன்.

* * *—கீழ்ப்பாட்டில் ப்ரக்ருதிஸம்பந்தத்தை நினைத்து வருத்தமுற்ற ஆழ்வாருடைய இழவு ஒருவாறு தீரும்படி எம்பெருமான் தன்வடிவழகைக் காட்டியருள, அதை ஸேவித்த வாறே தம் உடம்பை மறந்து மகிழ்ந்து பேசுகிறார். இவரை மெய்மறக்கப் பண்ணிற்று அவன் வடிவு. * நிறமுடை நால்தடந்தோள் செய்யவாய் செய்யதாமரைக்கண் அறமுய லாழியங்கைக் கருமேனியம்மான் தன்னையே கண்டுகொண்டொழிந்தேன் * என்று பெருங்

களிச்சியாகக் கூறுகின்றார். முடிபோட்ட விடத்தையறிந்து அவிழ்த்துக்கொள்ளமுடியாதபடி புச்சந்தோற்றுமே உள்முடியாக முடிந்து வைக்கப்பட்ட இரண்டு மஹாநுபாவர்கள் உண்டே; புண்யம் பாபம் எனப்படுமவர்கள்; அந்த முதலியார்கள் பிடிப்பதற்கிடமான சரீரங்களிலே, திறந்து கிடந்த வாசல்தோறும் நுழைந்து திரியும் ஜந்துபோலே புகுதல் தவிரும்படியாகக் கருமேனியம்மான் தன்னைக் கண்டு கொண்டேனென்கை. (சு)

3123 அம்மானாழிப்பிரான் அவனெவ்விடத்தான்யானார் *
எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்றுவாய்க்கும்கண்டீர் *
கைம்மாதுன்பொழித்தாயென்று கைதலைபூசலிட்டே *
மெய்ம்மாலாயொழிந்தேன் எம்பிரானுமென்மேலானே. (எ)

ஆழி பிரான் அம்மான் அவன் — திருவாழியாழ்வானையுடைய பிரபுவாகிய அவ்வெம்பெருமான்
எவ்விடத்தான் — எவ்வளவு பெரியவன்!
யான் ஆர் — நான் எவ்வளவு சிறியவன்;
(இப்படியிருக்க)
கைம்மா துன்பு ஒழித்தாய் என்று — கஜேந்திராழ்வானது துன்பத்தைத் தீர்த்தவனே! என்று
கை தலை பூசல் இட்டே — சிரஸ்ஸிலே அஞ்ஜலியைப் பண்ணி
மெய் மால் ஆய் ஒழிந்தேன் — ருஜுவான ப்ரேமமுடையவனாக ஆய் விட்டேன்;
எம் பிரானும் என் மேலான் — ஸர்வேச்வரனும் என்மீது அன்பு பூண்டவனாயினான்;
(ஆதலால்)
எம் மா பாவியர்க்கும் — எவ்வளவோ மஹாபாபிகளானவர்களுக்கும்
விதி வாய்க்கின்று — தப்பவொண்ணாத அருளாகிற விதி பலிப்பதாமளவில்
வாய்க்கும் கண்டீர் — பலித்தேவிடும்.

* * *—தம்முடைய சிறுமையையும் அவனுடைய ஒப்புயர்வற்ற பெருமையையும் நோக்குமிடத்து அவனுக்கும் நமக்கும் என்ன சேர்த்தியுண்டு! என்று பிற்காலிக்கவேண்டியிருக்கச் செய்தேயும் அவனுடைய க்ருபாரஸம் கரையழியப் பெருகினபடியாலே ஒருநீராய்க் கலக்க நேரிட்டது என்கிறார். கைம்மாதுன்பொழித்தாய்! என்று மெய்யன்புடையார் நெஞ்சுகனிந்து சொல்லும் சொல்லை நான் கபடபக்தியோடே சொன்னேன்; அது மெய்யான பக்தியாகவே பரிணமித்து எம்பெருமானுடைய விஷயீகாரம்பெற்றுவிட்டேனென்றாராயிற்று. (எ)

3124 மேலாத்தேவர்களும் நிலத்தேவரும்மேவித்தொழும் *
மாலார்வந்தினநாள் அடியேன்மனத்தேமன்னினார் *
சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும்நன்மக்களும் *
மேலாத்தாய்தந்தையும் அவரேயினியாவாரே. (அ)

மேல் ஆம் தேவர்களும் நிலம் தேவரும் மேவி தொழும் மாலார் — மிகச்சிறந்வர்களான நித்யஸூரிகளும் இவ்வுலகத்திலுள்ள பக்தர்களும் விரும்பி வணங்கநின்ற எம்பெருமான்
இன நாள் வந்து — இப்போது என்பக்கலிலே ஆபிமுக்கியம்பண்ணிவந்து
அடியேன் மனத்தே—எனது நெஞ்சினுள்ளே
மன்னினார் — பொருந்தினார்;
இனி — இது முதலாக,
சேல் ஏய் கண்ணியரும் — மீனேக்குடைய மாதர்களும்
பெரு செல்வமும் — மஹத்தான ஐச்வரியமும்
நல் மக்களும் — குணம்மிக்க பிள்ளைகளும்
மேல் ஆம் தாய் தந்தையும் — மேம்பட்ட மாதாபிதாக்களும்
அவரே ஆவார் — (எனக்கு) அப்பெருமானே யாவர்.

* * *—எம்பெருமான் தன்னை ஆதரிப்பாரில்லாமே என்னை விஷயீகரித்தானல்லன்; பரம விலக்ஷணரானவர்கள் தன்னை அநுபவியா நிற்கச்செய்தேயும் அவர்களிடத்திற் காட்டில் அதிகமான விருப்பத்தை என் பக்கலிலே பண்ணி வந்து என்னுள்ளே புகுந்தானாகையால் அவனையே நான் ஸகலவித போக்யவஸ்துவாகவும் கொண்டேனென்கிறார். (அ)

3125 ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும்
நாவாய்போல் * பிறவிக்கடலுள் நின்றுநான்துளங்க *
தேவார்கோலத்தோடும் திருச்சக்கரம்சங்கினோடும் *
ஆவாவென்றருள்செய்து அடியேனொடுமானானே. (௯)

| | | | |
|---|---|---|---|
| துணை ஆவார் ஆர் என்று | காப்பாரொருவருமில்லையே யென்று கதறிக்கொண்டு | தேவு ஆர் கோலத்தோடும் | திவ்யமான வடிவோடும் |
| அலை நீர் கடலுள் அழுந்தும் | அலையெறிகின்ற கடலினுள்ளே அமிழ்ந்துகிற | திரு சக்கரம் சங்கினொடும் | திருவாழி திருச்சங்குகளோடுங் கூடி |
| நாவாய் போல் | படகுபோலே | | |
| நான் பிறவி கடலுள் நின்று துளங்க | ஸம்ஸாரக்கடலினுள்ளே நின்று சிரமப்படா நிற்கையில், | ஆ ஆ என்று அருள் செய்து | ஐயோ ஐயோ வென்று க்ருபை பண்ணி |
| | (எம்பெருமான்) | அடியேனொடும் ஆனான் | என்னோடு கூடினான். |

* * *—இந்த ஸம்ஸார மண்டலத்திலே இதுகாறும் நான் பட்ட கிலேசங்களெல்லாம் தீர எம்பெருமான் தன்னுடைய பேரருளாலே அப்ராக்ருதமான வடிவோடேவந்து என்னோடே கலந்தானென்கிறார். நாவாய் என்று கப்பலுக்குப் பெயர்; இங்குக் கப்பலையே பொருளாகக் கொள்ளலாம்; இலக்கணையால் கப்பலிலுள்ளவர்களையும் பொருளாகக் கொள்ளலாம். கப்பலையே பொருளாகக்கொள்ளும்போது, கரையிலுள்ளவர்கள் ஆவாரார்துணையென்று கதறும்படியாக ஒரு கப்பல் கடலுள்ளே அழுந்துமாபோலே என்றதாகக்கொள்க. இப்பொருளில், துணையென்று என்றது 'துணையென்ன' என்றபடி. ஒரு கப்பலானது கடலுக்குள்ளே அழுந்திப்போகுங் காலத்தில் அதைக்காணும் தடஸ்தர்கள் 'ஐயோ! இப்படி நீரினுள்ளே அழுந்துகின்ற இக்கப்பலுக்குக் கைகொடுப்பார் யாருமில்லையே!' என்று கதறுவர்கள்; அவ்வண்ணமாக அழுந்துகின்ற கப்பல்போலே என்றபடி. நோவுபடுகிறேனென்கிற உணர்த்திகூட இல்லாமைக்காக இந்த த்ருஷ்டாந்தம். இனி நாவாயிலுள்ளாரைக் கொள்ளும்பக்ஷத்தில் ஆவாரார்துணை யென்கிற வாக்கியம் அவர்களுடையதே யாகக்கடவது. இப்படி நான் பிறவிக்கடலுள் துளங்காநிற்கையில், எம்பெருமான் அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தானத்தோடும் அவ்வடிவுக்குச் சேர்ந்த திவ்யாயுதங்களோடுங்கூடவந்து ஐயோ! ஐயோ!! என்று என் பக்கலிலே கருணை புரிந்து என்னோடேவந்து கலந்தான் என்றதாயிற்று. (௯)

3126 ஆனானுடையானென்று அஃதேகொண்டுகந்துவந்து *
தானேயின்னருள்செய்து என்னைமுற்றவும்தானானான் *
மீனாயாமையுமாய் நரசிங்கமுமாய்க்குறளாய் *
கானாரேனமுமாய் கற்கியாமின்னங்கார்வண்ணனே. (௰)

| | | | |
|---|---|---|---|
| மீன் ஆய் ஆமையும் ஆய் நரசிங்கமும் ஆய் குறள் ஆய் | மீனாகவும் ஆமையாகவும் நரசிங்கமாகவும் வாமனமூர்த்தியாகவும் அவதரித்தும் | ஆள் உடையான் ஆனான் என்று அஃதே கொண்டு | என்னை யடிமைகொள்ளவனானான் என்று நான் சொன்ன நன்றிமொழியையே பற்றிக் கொண்டு |
| கான் ஆர் ஏனமும் ஆய் இன்னம் | வனவராஹமாய் அவதரித்தும் இவ்வளவுமன்றி | உகந்து வந்து | உகப்போடேவந்து |
| கற்கி ஆம் | கல்கியாக அவதரிக்கப் போகிறவனும் | தானே இன் அருள் செய்து | தானாகவே இனிய கிருபையைப்பண்ணி |
| கார் வண்ணன் | காளமேகவண்ணனுமிருக்கிற எம்பெருமான் | என்னை முற்றவும் தான் ஆனான் | எனக்கு ஸகல போக்ய வஸ்துக்களும் தானேயானான். |

* * *—இப்படி நான் எம்பெருமான் திறத்திலே சிறிது க்ருதஜ்ஞதாநுஸந்தானம் பண்ண, இதற்காகவும் அவன் போரத்திருவுள்ளமுவந்து முன்னிலும் அதிகமான ஸம்

ச்லேஷத்தை என்னளவிலே பண்ணினனென்கிறார். 'என்னை முற்றவும் தானானான்' என்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் பணிப்பர்; (1) உள்ளோடு புறம்போடு வாசியறக் கலந்தான். (2) எனக்கு ஸகலவித போக்யமுமானான். இக்குணம் அவனிடத்து ஆச்சரியமன்று என்பதைப் பின்னடிகளாலே நிரூபிக்கிறார்போலும். மத்ஸ்ய கூர்ம வராஹாதிகளான அவதாரங்களைச்செய்து ஆட்படுத்திக்கொள்ள வழி தேடுவதையே இயல்வாகவுடையவனன்றோ என்க. இன்னங்கார்வண்ணனே—நீர்கொண்டெழுந்த காளமேகமானது மேன்மேலும் வர்ஷிக்க எழுச்சிகொண்டிருக்குமாபோலே எம்பெருமானும் பண்ணின அவதாரங்களில் த்ருப்திபெறாதே இன்னமும் அவதரிக்கவே திருவுள்ளம் பற்றியிருக்கிறபடியைச் சொன்னபடி. (ய)

3127 கார்வண்ணன்கண்ணபிரான் கமலத்தடங்கண்ணன்தன்னை *
ஏர்வளவொண்கழனிக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
சீர்வண்ணவொண்தமிழ்கள் இவையாயிரத்துளிப்பத்தும் *
ஆர்வண்ணத்தாலுரைப்பார் அடிக்கீழ்புகுவார்பொலிந்தே. (கக)

| | |
|---|---|
| கார் வண்ணன் | மேகவண்ணனும் |
| கண்ணபிரான் | ஸர்வஸுலபனும் |
| கமலம் தட கண்ணன் தன்னை | தாமரைபோன்று விசாலமான திருக்கண்களையுடையனுமான எம்பெருமானைக்குறித்து, |
| ஏர் வளம் ஒண் கழனி குருகூர் சடகோபன் சொன்ன | ஏர்களின்மிகுதியையுடைத்தாய் அழகியவான கழனிகளையுடைய திருநகரிக்குத்தலைவரான ஆழ்வார் அருளிச்செய்த |
| சீர் வண்ணம் ஒண் தமிழ்கள் | சீரும் வண்ணமும் குறையாத தமிழினாலான |
| இவை ஆயிரத்துள் இ பத்தும்—; | |
| ஆர் வண்ணத்தால் உரைப்பார் | அமிருதபானம் பண்ணுமாபோலே ஓதுமவர்கள் |
| பொலிந்து அடி கீழ் புகுவார் | ஸம்ருத்தியோடேயிருந்து அவ்வெம்பெருமான் திருவடிகளின் கீழே புகப்பெறுவர்கள். |

ஆர்வண்ணத்தால்....ஆர்தலாவது பானம் பண்ணுதல், பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்திலே "ஸூக்திம் ஸமக்ரயது........யாம் கண்டூல கர்ண குஹரா: கலயோயபஞ்சி" என்றார்; சொற்களைச் சொல்லும்போது ஏதேனுமொன்று சொல்லுகையன்றிக்கே நெஞ்சுகனிந்து சொல்லவேணும்; அம்ருதபானம் பண்ணுவதாகவே நினைக்கவேணும். (கக)

---

## ஐந்தாம்பத்து—இரண்டாந் திருவாய்மொழி பொலிகபொலிகபொலிக

இவ்விபூதியிலுண்டான ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ருத்திக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறது இத்திருவாய்மொழி. இப்போது இந்த மங்களாசாஸனத்திற்கு ப்ரஸக்தி ஏதென்னில்; கீழே நாலாம்பத்தில் *நண்ணாதார் முறுவலிப்ப வென்னும் பதிகத்திலே ஆழ்வார் ஸம்ஸாரிகளின் கிலேசங்களை அநுஸந்தித்து, அதற்குப் பரிஹாரமாக *ஒன்றுந்தேவு மென்கிற பதிகத்திலே எம்பெருமானுடைய பரத்துவத்தைப் பரக்கப்பேசித் திருத்த, அத்தாலே திருந்தி, ஸம்ஸாரம் பரமபதம் என்கிற வேற்றுமையற்று அங்குள்ளவரும் இங்கே வரலாம்படி இருக்கும் இவ்விருப்பைக்கண்டு மங்களாசாஸனம் பண்ணுகிறாராயிற்று. ஆசார்ய ஹ்ருதயத்தில் — அடிமைபுக்காரையும் ஆட்செய்வாரையுங் காண லோகத்வீபாந்தரங்களில் நின்றும்போந்த தேவர்குழாங்களைக் கண்டு காப்பிட்டு" என்றருளிச் செய்ததும் இங்கு அநுஸந்தேயம். (*)

3128 பொலிகபொலிகபொலிக போயிற்றுவல்லுயிர்ச்சாபம் *
நலியும்நரகமும்நைந்த நமனுக்கிங்குயாதொன்றுமில்லை *
கலியும்கெடும்கண்டுகொண்மின் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் *
மலியப்புகுந்திசைபாடி ஆடியுழிதரக்கண்டோம். (க)

பொலிக பொலிக பொலிக — வாழ்க! வாழ்க! வாழ்க!
உயிர் வல் சாபம் போயிற்று — ஜீவராசிகளுக்குண்டான வலி தான பாவமானது தொலைந்தது;
நலியும் நரகமும் — வருத்தத்தை விளைவிக்கக் கூடிய நரகலோகங்களும்
நைந்த — அழிந்துபோயின;
இங்கு நமனுக்கு யாது ஒன்றும் இல்லை — இவ்விபூதியில் யமனுக்கு ஒரு காரியமுமில்லை;
கலியும் கெடும் — கலிபுருஷனும் (விரைவில்) தொலையக்கூடும்;
கண்டு கொள்மின் — (அதை) ப்ரத்யக்ஷமாகக் காண்பீர்கள்;
கடல் வண்ணன் பூதங்கள் — கடல்போன்ற நிறத்தையுடையனை பகவானுடைய பக்தர்கள்
மண் மேல் மலிய புகுந்து — இந்நிலத்தில் நிரம்பி
இசை பாடி ஆடி உழிதர கண்டோம் — இனிய பாட்டுக்களைப் பாடிக் கொண்டு இங்குமங்கும் நடமாடக்காண்கிறோம்.

* * * இந்த ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ருத்திக்கு எப்போதும் ஒரு குறையில்லாமலிருக்க வேணுமென்று காப்பிடுகிறார். “ஶாந்திஶ்ஶாந்திஶ்ஶாந்தி:” என்று வேதம் மும்முறை ஓதுமாபோலே இங்கும் “பொலிக பொலிக பொலிக” என்று மும்முறை ஓதுகிறபடி. போயிற்று வல்லுயிர்ச் சாபம்= சாபம் என்கிறது பாபத்தை : அவசியம் அனுபவித்தே தீரவேண்டியவையாய் ஆத்மாவைப்பற்றிக் கிடக்கிற அவித்யை முதலானவை தொலைந்துபோயினவென்றபடி. நலியும் நரகமும் நைந்த= இனி நரகங்களை யநுபவிக்க ஆளில்லாமையாலே அவை புல்லெழுந்தொழிந்தனவென்கை. “நைந்த” என்றது நைந்தன என்றபடி; அன்சாரியை பெறாத பலவின்பால் இறந்தகால வினைமுற்று.

நமனுக்கு இங்கு யாதொன்றும் இல்லை=யமன் ஆராய்ச்சி செய்வதற்கு இங்கு விஷயமொன்றுமில்லை. யமலோகம் புகுவார் இருந்தாலன்றோ அவன் கணக்குப்பார்க்கவேண்டுவது: “சித்திரகுத்த னெழுத்தால் தென்புலக்கோன் பொறியொற்றி, வைத்தவிலச்சினை மாற்றித் தூதுவரோடி யொளித்தார்” என்னும்படி யாயிற்றென்கை. கலியுங்கெடும்=கலிபுருஷனும் விரைவில் தொலைந்திடுவானென்கிறார். ஆசார்ய ஹ்ருதயத்தில் இரண்டாம் பிரகரணத்தில் “தமிழ்மாமுனிதிக்கு சரண்ய மென்றவர்களாலே” என்கிற சூர்ணிகையில் “கலியுங்கெடும் போலே ஸூசிதம்.” என்றவிடத்திற்கு வியாக்கியான மருளிச்செய்யாநின்ற மணவாளமாமுனிகள் “இவர்தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே “கலியுங்கெடும்” என்று—திருமங்கையாழ்வார் உடையவர்போல்வார் அவதரித்துக் கலியுகஸ்வபாவமும் கழியுமென்று மேல் வரும் அம்சத்தை தரிசித்து அருளிச்செய்தாப்போலே” என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

பூதங்கள்= வடமொழியில் “பூ - ஸத்தாயாம்” [பூ—ஸத்தாயாம்] என்கிற தாதுவடியாகப் பிறந்தது பூதம் என்னுஞ்சொல்; ஸத்தை பெற்றது என்று பொருள். எம்பெருமானது திருக்குணங்களை யநுபவித்தே ஸத்தை பெற்றவர்கள் என்றவாறு. (க)

3129 கண்டோம்கண்டோம்கண்டோம் கண்ணுக்கினியனகண்டோம் *
தொண்டீர்! எல்லீரும்வாரீர் தொழுதுதொழுதுநின்றார்த்தும் *
வண்டார்தண்ணந்துழாயான் மாதவன்பூதங்கள்மண்மேல் *
பண்டான்பாடிநின்றாடிப் பரந்துதிரிகின்றனவே. (உ)

வண்டு ஆர் தண் அம் துழாயான் — (மதுபானத்திற்காக) வண்டுகள் பொருந்திய குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையை யணிந்தவனான
மாதவன் — திருமாலினது
பூதங்கள் — பக்தர்கள்
மண் மேல் — இந்நிலத்திலே
பண் பாடி நின்று ஆடி — இராகங்களைப் பாடிக் கொண்டு

| | | | |
|---|---|---|---|
| பரந்து திரிகின்றன | எங்கும் பரவி உலாவுகின்றனர்; | தொண்டீர் எல்லீரும் வாரீர் | பாகவதர்களான ஸகல பேர்களும் வாருங்கள்; |
| கண்ணுக்கு இனியன | (இப்படி) கண்ணுக்குப் பரம போக்யமான நிலைமைகளை | தொழுது தொழுது நின்று ஆர்த்தும் | நன்ருகவணங்கி ஆரவாரிப்போம். |
| கண்டோம் கண்டோம் கண்டோம் கண்டோம்—; | | | |

* * * ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ருத்தியைக்கண்ட ஆழ்வார் இந்த ஸம்ருத்தியை யநுபவிப்பதற்கு மற்றும் பல அநுகூலர்களையும் ஆதரத்தோடு அழைக்கிருர். தம்மால் அழைக்கப்படுகின்றவர்கள் விரைந்து ஓடிவர ஆசைப்படுதற்குறுப்பாக "கண்டோங் கண்டோங் கண்டோம்" என்று பெருமிடறு செய்கிருர்போலும். கீழே * நண்ணுதார் முறுவலிப்பவிலே "கொடுவுலகங் காட்டேலே" என்று சொல்லும்படியாக அபாகவதர்களைக்கண்ட கசப்புத்தீர ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியைக் கண்ணுரக் காணப்பெற்ருே மென்கிருர் கண்ணுக்கினியன கண்டோம் என்று.

3130 திரியும்கலியுகம்நீங்கித் தேவர்கள்தாமும்புகுந்து *
பெரியகிதயுகம்பற்றிப் பேரின்பவெள்ளம்பெருக *
கரியமுகில்வண்ணனெம்மான் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் *
இரியப்புகுந்திசைபாடி எங்குமிடம்கொண்டனவே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| திரியும் கலியுகம் நீங்கி | தருமங்கள் தலைகீழாக ஆரும்படியான கலியுகமானது தொலையப்பெற்று | கரிய முகில் வண்ணன் | காளமேகவண்ணனையும் |
| பெரிய கிதயுகம் பற்றி | தருமம் சிறந்த கிருதயுகமானது வந்துபுகுந்து | கடல் வண்ணன் எம்மான் | கடல் வண்ணனையுமுள்ள எம்பெருமானுடைய |
| தேவர்கள் தாமும் புகுந்து | தேவப் பிரகிருதிகளும் தாமாகவே நெருங்கி | பூதங்கள் | பக்தர்கள் |
| பேர் இன்பம் வெள்ளம் பெருக | மஹத்தான ஆனந்த வெள்ளம் பெருகும்படியாக | மண் மேல் இரிய புகுந்து | இவ்விபூதியிலே மிக்க கோலாஹலங்களுடன் வந்து |
| | | இசை பாடி எங்கும் இடம் கொண்டன | கீதங்களைப் பாடிக்கொண்டு எல்லா விடங்களிலும் வியாபித்து விட்டார்கள். |

* * * நித்யஸூரிகளும் இந்நிலத்திலே அடியிட்டு வந்து சேர்ந்து ஒன்றுகூடிப் பரிமாறலாம்படி ஸம்ஸார மண்டலம் முழுவதும் ஸ்ரீ வைஷ்ணவ மயமாயிற்றென்கிருர். திரியுங் கலியுகம் நீங்கி= கலிபிறந்த நாற்பத்துமூன்ரும் நாளிலேஆழ்வார் அவதரித்தாரென்று பெரியார் கூறுவர்; இன்னமும் நெடுங்காலம் தான் செங்கோல் செலுத்துவதாக வந்துபுகுந்த கலிபுருஷன் சிதையும்படியாயிற்று ஆழ்வாருடைய பெருமை. திரியுங் கலியுக மென்றது தருமமார்க்கம் ருஜுவாக இருக்கையன்றிக்கே தலைகீழாக இருக்கும்படியான கலியுகமென்றபடி. தேவர்கள் தாமும் புகுந்து—அனந்த கருடவிஷ்வக்ஸேநாதிகளான நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. இந்த கொடுவுலகத்திலே அவர்கள் அடியிடுதற்கே ப்ரஸக்தியில்லை. அப்படியிருந்தும் அவர்கள் இங்கே ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்தியைக்கண்டு இத்திரளிலே தாமுங்கலந்து பரிமாறி ஸத்தை பெறவேணுமென நினைத்து இங்கே புகுந்தார்களாயிற்று. பெரியகிதயுகம்பற்றி= பெரிய க்ருதயுகமென்ருல் சிறிய க்ருதயுகமும் ஒன்றுண்டோவென்று சங்கிக்கவேண்டா; த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் என்றிப்படி வேறு யுகங்களாலே விச்சேதமின்றிக்கே ஒரு போகியாக வளர்ந்த கிருதயுக மென்றபடி. ஆதி ஸ்ருஷ்டியில் கிருதயுகத்தைச் சொல்லுகிறது என்பாருமுண்டு. பேரின்பவெள்ளம் பெருக= 'பரமபதத்தில் ஆனந்தமும் சிற்றின்பம்' என்று சொல்லும்படியாக, பகவதநுபவ ஆனந்தம் இந்நிலத்திலே அதிசயித்ததாயிற்று. எதனாலே யென்ன; அதை விவரிப்பன பின்னடிகள். இரிய—ப்ரீதிகோலாஹலம் பிறக்கும்படியென்கை. இரிதலாவது — இருந்தவிடத்திலில்லாமை. (ரு)

3131 இடங்கொள்சமயத்தையெல்லாம் எடுத்துக்களைவனபோலே *
தடங்கடல்பள்ளிப்பெருமான் தன்னுடைப்பூதங்களேயாய் *
கிடந்துமிருந்துமெழுந்தும் கீதம்பலபலபாடி *
நடந்தும்பறந்துங்குனித்தும் நாடகம்செய்கின்றனவே. (௪)

| | |
|---|---|
| இடம் கொள் சமயத்தை எல்லாம் எடுத்து களைவன போலே | எங்கும் நிறைந்த துஷ்டமதங்களையெல்லாம் வேர்பறியாகப் பறித்துத் தொலைப்பாரைப்போலே |
| தட கடல் பள்ளி பெருமான் தன்னுடை பூதங்களே ஆய் | ஸமுத்ரசாயியான பகவானுடைய பக்தர்களே மலிந்து |
| கிடந்தும் இருந்தும் எழுந்தும் | படுத்துக்கொண்டும் உட்கார்ந்துகொண்டும் நின்றுகொண்டும் |
| பல பல கீதம் பாடி நடந்தும் | பல பல பாட்டுக்களைப் பாடிக்கொண்டே நடந்துகொண்டும் |
| பறந்தும் | தரையில் கால் பாவாதபடி |
| குனித்தும் | கூத்தாடிக்கொண்டும் |
| நாடகம் செய்கின்றன | களித்துத் திரியா நின்றார்கள். |

* * * ஸ்ரீ வைஷ்ணவ சிகாமணிகள் காணவினிய அழகிய லக்ஷணங்களில் குறைவின்றியே பளபளவென்று விளங்கும்படியைக் கண்டால், கண்டகாட்சியிலேயே அவைதிக மதங்கள் அவிந்துபோமத்தனை. விளக்கு வரக் கண்டவாறே இருள் தன்னடையே சிதைந்தொழியுமாபோலே ஸ்ரீ வைஷ்ணவர்களின் லக்ஷண அமைதியைக் கண்டவாறே அவலக்ஷண மதங்கள் அவிந்துபோகத் தட்டுண்டோ? (௪)

3132 செய்கின்றதென்கண்ணுக்கொன்றே ஒக்கின்றதிவ்வுலகத்து *
வைகுந்தன்பூதங்களேயாய் மாயத்தினலெங்கும்மன்னி *
ஐயமொன்றில்லை அரக்கரசுரர்பிறந்தீருள்ளீரேல் *
உய்யும்வகையில்லைதொண்டீர்! ஊழிபெயர்த்திடும்கொன்றே. (௫)

| | |
|---|---|
| செய்கின்றது | இவர்கள் செய்கிற காரியம் |
| என் கண்ணுக்கு | நான் பார்க்குமிடத்து |
| ஒன்றே ஒக்கின்றது | ஒன்றுபோலவேயிரா நின்றது; |
| இ உலகத்து | இவ்விபூதியிலே |
| வைகுந்தன் பூதங்களே | பகவத்பக்தர்களே |
| மாயத்தினல் | யதேஷ்டமாக |
| எங்கும் மன்னி | எல்லாவிடங்களிலும் நிறைந்து |
| ஆய் | இருக்கின்றார்கள்; |
| அரக்கர் | இராக்ஷசர்களாகவும் |
| அசுரர் | அசுரர்களாகவும் |
| பிறந்தீர் உள்ளீர் ஏல் | பிறந்தவர்களாயிருப்பீர்களாகில் |
| தொண்டீர் | இதர விஷயங்களிலே சபலர்களாயிருப்பவர்களே! |
| கொன்று | உங்களைக் கொலை செய்து |
| ஊழி பெயர்த்திடும் | யுகத்தையே மாற்றிவிடுவர்கள்; [கலியுகத்தைக் கிருதயுகமாகவே ஆக்கிவிடுவர்கள்] |
| | (ஆதலால் உங்களுக்கு) |
| உய்யும் வகை இல்லை | பிழைக்கும் வழி இல்லை; |
| ஐயம் ஒன்று இல்லை | (இதில்) சிறிதும் ஸந்தேஹமில்லை. |

* * * இவ்வுலகத்தில் பலபல காரியங்கள் நடைபெற்று வந்தாலும் அவையொன்றும் ஆழ்வாருடைய திருக்கண்ணில் படாமே ஒரே ஒரு விஷயந்தான் தமது திருக்கண்களுக்குப் புலப்படுகின்றதாக இதில் அருளிச் செய்கிறார். எங்குப்பார்த்தாலும் பாகவத கோஷ்டியொன்றே ஸேவை ஸாதிக்கின்றதாம் தமக்கு. மாயத்தினலெங்கும் மன்னி = ஸ்ரீ வைகுண்டநாதனுடைய பக்தர்களான நித்யரும் முக்தரும் ஆச்சரியமாக எங்கும் புகுந்திருக்கிறார்கள் என்கை. மாயம் என்று ஆச்சரியத்தைச் சொல்லுவதன்றிக்கே “ஸம்பவாம்யாத்மமாயயா— ஸம்பவாமி ஆத்மமாயயா” இத்யாதிஸ்தலங்களிற்போல இச்சையென்கிற பொருளையும் சொல்லுமாதலால் ‘இச்சையாலே’ என்று நம்பிள்ளையருளிச்செய்யும்படி. *[illegible] [illegible] * என்கிற உபநிஷத்தின்படி திருநாட்டிலுள்ளவர்கள் இந்நிலத்

திற்குத் திரும்புதல் இல்லையாயிருக்க, அவர்கள் இங்கு எப்படி வரக்கூடும்? என்று சங்கிக்க வேண்டா; கருமமடியாகத் திரும்புதல் இல்லையென்றதே தவிர, இச்சையாலே திருப்புதலும் இல்லையென்று சொல்லிற்றில்லை; * ஊாநுமொகாநு காஉாஹீ காஉாஉவெ௫நூலஸம௰ாநு * என்று உபநிஷத்துதானே ஓதிற்றுண்டே. இது தோன்றவே மாயத்தினால் என்பதற்கு 'இச்சையாலே' என்று பொருள் பணித்தது. கோன்று ஊழி பெயர்த்திடும் = வைகுந்தன் பூதங்கள் உங்களையுங்கொன்று ஊழியையும் பெயர்த்திடுவர்கள் என்கை. ஊழியைப் பெயர்த்திடுகை யாவது காலத்தையே மாற்றிவிடுகை. (ரு)

3133 கொன்றுயிருண்ணும்விசாதி பகைபசிதீயனவெல்லாம் *
நின்றிவ்வுலகில்கடிவான் நேமிப்பிரான்தமர்போந்தார் *
நன்றிசைபாடியும்துள்ளியாடியும் ஞாலம்பரந்தார் *
சென்றுதொழுதுய்ம்மின்தொண்டீர்! சிந்தையைச்செந்நிறுத்தியே. (சு)

| | |
|---|---|
| கொன்று உயிர் உண்ணும் | கொலை செய்து பிராணனை முடிக்குமதான |
| விசாதி பகை பசி தீயன எல்லாம் | வியாதியும் த்வேஷமும் பசியும் (முதலான) மற்றுமுள்ள கொடியவை எல்லாவற்றையும் |
| இ உலகில் நின்று கடிவான் | இவ்விபூதியிலே தொலைப்பதற்காக |
| நேமி பிரான் தமர் | சக்ரபாணியான எம்பெருமானது பக்தர்கள் |
| போந்தார் | வந்துள்ளார்கள்; |
| இசை | இசைகளை |
| நன்று பாடியும் | நன்றாகப்பாடியும் |
| துள்ளி ஆடியும் | துள்ளிக்குதித்தும் |
| ஞாலம் பரந்தார் | இந்நிலத்திலே பரவியுள்ளார்கள்; |
| தொண்டீர் | இதரவிஷயங்களில் சபலராயிருக்கின்றவர்களே! |
| சிந்தையை | உங்களது நெஞ்சை |
| செம் நிறுத்தி | செவ்வையாக (நல் விஷயத்திலே) ஸ்தாபித்து |
| சென்று | அப்படிப்பட்ட பக்தர்களிடத்தே போய் |
| தொழுது | வணங்கி |
| உய்ம்மின் | உஜ்ஜீவியுங்கோள். |

* * * இந்த ஸம்ஸார நிலத்திற்குரிய ஸகலக்லேசங்களும் தீரும்படி பாகவதர்கள் ஜகத்தெங்கும் பரந்தார்கள். அவர்களை ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கோள்! என்று, கீழ்ச் சொன்னவர்களை நோக்கியருளிச்செய்கிறார். விசாதியென்று வியாதியைச் சொல்லுகிறது. வியாதியென்றும் பகையென்றும் பசியென்றும் சில கெடுதல்களைத் தனித்தனியே பிரியச்சொல்லி வந்து தீயன வெல்லாம் என்று ஸமுதாயமாக அருளிச்செய்கிறார். இவ்வுலகில் கெடுதல்களாக எவ்வெவையுண்டோ அவையெல்லாவற்றையும் என்றபடி. *யத்ராஷாக்ஷரஸம்ஸிஜோ உஹாஹா ஜொ உஹீயதெ। ந தத்ர ஸஂசரிஷ்யந்தி வ்யாயிதுர்பிக்ஷதஸ்கரா: = யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே, ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்ப்பிக்ஷதஸ்கரா:* [திருவஷ்டாக்ஷரஸித்தியுடைய பஹாபாகவதர் ஒருவர் வாழுமிடத்தில் வியாதியோ பஞ்சமோ கள்வரோ தலைகாட்ட நேராது] என்கிற பிரமாணத்தின்படியே இப்பாட்டின் முன்னடிகள் அமைந்திருக்கின்றது. நேமிப்பிரான் தமர் என்கையாலே— திருவாழியாழ்வான் பகைவர்களைப் படுத்துகிற பாடு இவர்களும் படுத்தவல்லார்களென்பது விளங்கும். (சு)

3134 நிறுத்திநும்முள்ளத்துக்கொள்ளும் தெய்வங்களும்மையுய்யக்கோள் *
மறுத்துமவனோடேகண்டீர் மார்க்கண்டேயனும்கரியே *
கறுத்தமனமொன்றும்வேண்டா கண்ணனல்லால்தெய்வமில்லை *
இறுப்பதெல்லாம் அவன்மூர்த்தியாயவர்க்கேஇறுமினே. (எ)

நும் உள்ளத்து — உங்கள் நெஞ்சுக்குள்ளே
நிறுத்தி — வலியப்பிடித்து உட்கார வைத்து
கொள்ளும் — சிந்திக்கப்படுகின்ற
தெய்வங்கள் — தேவதைகள்
உம்மை — உங்களை
உய்யக்கோள் — உஜ்ஜீவிப்பித்துக்கொள்வதும்
அவனோடே — அந்த எம்பெருமான் தன்னோடே
மறுத்தும் கண்டீர் — மீண்டு சென்று கிட்டிக்கிடீர்; (இவ்விஷயத்தில்)
மார்க்கண்டேயனும்—மார்க்கண்டேயனும்
கரி — ஸாக்ஷியாவன்;
கறுத்தமனம்ஒன்றும் வேண்டா — (உங்களுக்கு) மலினமான நெஞ்சு சிறிதும் வேண்டியதில்லை;
கண்ணன் அல்லால் — ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்த ஸ்ரீமந் நாராயணனல்லது
தெய்வம் இல்லை — பரதெய்வம் வேறுகிடையாது; (ஆனபின்பு)
இறுப்பது எல்லாம் — நீங்கள் செலுத்தும் கடமைகளையெல்லாம்
அவன் மூர்த்தியாயவர்க்கே இறுமின் — அப்பெருமானுடைய சரீரபூதர்களுக்குச் செலுத்துகிறோமென்கிற பிரதிபத்தியுடனே செலுத்துங்கள்.

* * * எங்கும் பரமபாகவதர்களே மலிந்துவிட்டார்களென்று பரமஸந்தோஷம் பூரித்து நின்ற ஆழ்வார் காலதோஷத்தாலே சில அவைஷ்ணவர்களையும் கண்டார்; அவர்கள் பகவத்பாகவத ப்ரவணர்களாயன்றிக்கே தேவதாந்தர ஸமாராதன பரர்களாய் இருக்கிறபடியையுங் கண்டார்; அன்னவர்களையும் உபதேசத்தாலே திருத்தப்பார்த்து இப்பாசுரமருளிச் செய்கிறார். உங்கள் நெஞ்சுக்குள்ளே நீங்கள் கஷ்டப்பட்டு நிறுத்திக்கொள்ளுகிற தெய்வங்களானவை உங்களை அடியோடு ரக்ஷிக்கமாட்டா என்று நாம் சொல்லுகின்றிலோம்; அவை செய்யும் ரக்ஷணம் நாராயணன் வழியாகவேயன்றித் தாமாகவேயல்ல என்கிறோமத்தனை; இவ்விஷயத்திற்கு மார்க்கண்டேயனே ஸாக்ஷியாக இராநின்றான் என்கிறார் முன்னடிகளில். ஆழ்வார் இப்படிச்சொல்லக் கேட்டவாறே, தேவதாந்தரபஜனம் பண்ணித் திரிவாருடைய முகம் கறுத்து விட்டது; நம் தெய்வத்திற்கு இங்ஙனே குறை சொல்லுகிறாரேயென்று அவர்களுக்கு மனமும் கறுத்து முகமும் கறுத்தபடியைக்கண்ட ஆழ்வார் "கறுத்த மனமொன்றும் வேண்டா" என்று அவர்களுடைய கண்ணைத் துடைக்கிறார். க்ஷுத்ரதேவதைகள் பக்கலிலே பரத்வ ப்ரதிபத்தி பண்ணியிருக்கும் தண்ணிய நெஞ்சு உங்களுக்கு வேண்டா! என்று பொருள் கூறப்பட்டது. (அ)

3135 இறுக்குமிறையிறுத்துண்ண எவ்வுலகுக்கும்தன்மூர்த்தி *
நிறுத்தினான்தெய்வங்களாக அத்தெய்வநாயகன்தானே *
மறுத்திருமார்வனவன்தன் பூதங்கள்கீதங்கள்பாடி *
வெறுப்பின்றிஞாலத்துமிக்கார் மேவித்தொழுதுய்ம்மினீரே. (அ)

இறுக்கும் இறை — அவரவர்கள் செலுத்தவேண்டிய கடன்களைச்
இறுத்து உண்ண — செலுத்தி அவரவர்கள் வாழும்படி
எவ் வுலகுக்கும் — வேறுவேறு வகைப்பட்டருசியையுடைய ஸமஸ்தலோகத்துக்கும்
தன் மூர்த்தி — தன்னுடைய சரீரங்களை
தெய்வங்கள் ஆக — அந்தந்த கருமங்களினால் ஆராதிக்கைக்கு உரிய தேவதைகளாக
நிறுத்தினான் — ஏற்பாடு பண்ணினவன்
அத்தெய்வநாயகன் தானே — ஸர்வதேவதாநாயகனான அப்பெருமானே யாவன்;
(ஆகையால்)
மறு திருமார்வன் அவன் தன் பூதங்கள் — ஸ்ரீவத்ஸமென்னும் மறுவைத் திருமார்விலே உடையனான அப்பெருமானுடைய அடியவர்களான பாகவதர்கள்
கீதங்கள் பாடி — பலவகைப்பாட்டுக்களைப் பாடி
வெறுப்பு இன்றி — (இருள்தருமா ஞாலத்தில் இருக்கவேண்டியதாகிறதே! என்கிற) வெறுப்பு இல்லாமல்
ஞாலத்து — இந்நிலத்தில்
மிக்கார் — சிறப்புற வாழ்கின்றார்கள்;
நீர் மேவி தொழுது உய்மின் — நீங்கள் அவர்களைக்கிட்டி வணங்கி உஜ்ஜீவித்துப் போங்கள்.

* * * தேவதாந்தரங்களை ஆச்ரயித்து அபேக்ஷிதங்களைப் பெற்றவர்கள் இல்லையோ வென்ன, அந்த தேவதைகள் ஆச்ரிதர்களின் அபேக்ஷிதங்களைக்கொடுக்க சக்தர்களாம்படி பண்ணிவைத்தவன் எம்பெருமானே, ஆதலால் அவனை ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கோளென்கிறார். (அ)

3136 மேவித்தொழுதுய்ம்மினீர்கள் வேதப்புனிதவிருக்கை *
நாவில்கொண்டச்சுதன்தன்னை ஞானவிதிபிழையாமே *
பூவில்புகையும்விளக்கும் சாந்தமும்நீரும்மலிந்து *
மேவித்தொழுமடியாரும் பகவரும்மிக்கதுலகே. (கூ)

| | |
|---|---|
| வேதம் புனிதம் இருக்கை | வேதத்தினுள் பரமபவித்திரமான புருஷஸூக்தம் முதலியவற்றை |
| நாவில் கொண்டு | நாவினால் உச்சரித்துக்கொண்டு |
| ஞானம் விதி பிழையாமே | பக்திமார்க்கம் தவறாதபடி |
| பூவில் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து | மலரோடு கூடின தூபமும் தீபமும் சந்தனமும் திருமஞ்சனமும் பூர்ணமாகக்கொண்டு |
| அச்சுதன் தன்னை | எம்பெருமானை |
| மேவி தொழும் அடியாரும் | அடைந்து கைங்கர்யம் செய்கிற அடியார்களையும் |
| பகவரும் | குணாநுபவ நிஷ்டர்களையும் |
| உலகு மிக்கது | இவ்வுலகமானது அதிகமாகக் கொண்டது; (ஆனபின்பு) |
| நீர்கள் மேவி தொழுது உய்ம்மின் | நீங்கள் (அவர்களை) விரும்பி வணங்கி உஜ்ஜீவியுங்கள். |

* * * பகவத் பக்தர்கள் இருவகைப்படுவார்கள். பலவகைக் கைங்கரியங்களைச் செய்து போதுபோக்குவாரும், குணாநுபவத்திலே ஊன்றிப் போருவாரும். அப்படிப்பட்ட பக்தர்கள் பூமியெங்கும் பரந்தார்கள்; நீங்களும் அவர்களோடொக்க ஆச்ரயியுங்கோ ளென்கிறார். ஞான விதி யென்று பகவத்கீதையைச் சொல்லுகிறதாக ஸம்பிரதாயம். ஆசார்ய ஹ்ருதயத்தில் மூன்றும் பிரகரணத்தில் "பகவன் ஞானவிதி பணிவகை யென்று இவரங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்" என்ற சூர்ணிகை காண்க. "தொடர்ந்து அடிமைசெய்யும் இளையபெருமாளையும், கிடந்தவிடத்தே கிடந்து குணாநுபவம் பண்ணும் ஸ்ரீ பரதாழ்வானையும் போலே யிருப்பாரே யாயிற்று லோகமடைய" என்ற நம்பிள்ளை யீடுகாண்க. (கூ)

3137 மிக்கவுலகுகள்தோறும் மேவிக்கண்ணன்திருமூர்த்தி *
நக்கபிரானோடு அயனுமிந்திரனும்முதலாக *
தொக்கவமரர்குழாங்கள் எங்கும்பரந்தனதொண்டீர்! *
ஒக்கத்தொழகிற்றிராகில் கலியுகமொன்றுமில்லையே. (ய)

| | |
|---|---|
| நக்கன் பிரானோடு அயனும் இந்திரனும் முதல் ஆக தொக்க | சிவபிரானும் பிரமனும் தேவேந்திரனும் முதலாகத் திரண்ட |
| அமரர் குழாங்கள் | தேவவர்க்கங்கள் |
| கண்ணன் திரு மூர்த்தி | எம்பெருமானது திருவடிவத்தை |
| மேவி மிக்கஉலகுகள் தோறும் | ஆசிரயித்துப் பரம்பின லோகங்கள் தோறும் |
| எங்கும் பரந்தன | எவ்விடத்தும் நல்லபதவிகளைப் பெற்று வாழ்ந்தன; |
| தொண்டீர் ஒக்க | தொண்டர்களே! (நீங்களும்) அவர்களோடொக்க |
| தொழ கிற்றீர் ஆகில் | (எம்பெருமானைத்) தொழவல்லீர்களாகில் |
| கலியுகம் ஒன்றும் இல்லை | கலியுகதோஷம் சிறிதும் உங்களுக்கு இல்லாதபடியாகும். |

* * * நீங்கள் ஆராதிக்கிற தேவதைகளும் எம்பெருமானை ஆச்ரயித்தே தம் தம் பதவிகளைப் பெற்றார்கள்; நீங்களும் அவர்களைப்போலே எம்பெருமானை ஆச்ரயித்துப பிழையுங்கோளென்கிறார். சிவனும் பிரமனும் இந்திரனும் முதலாகத் திரண்ட தேவதாஸமூஹங்களானவை கண்ணபிரானை ஸ்ரீமந்நாராயணனுடைய அஸாதாரண விக்ரஹத்தை ஆச்ரயித்து, அதன்பலனாக லோகங்கள்தோறும் பரந்த செல்வமுடையரா யிருக்கின்றார்கள், அதாவது, ஒவ்வொருவர் ஒவ்வொரு பதவியிலே யிருக்கின்றார்களென்றவாறு. தொண்டீர்! ஒக்கத் தொழகிற்றிராகில் =

தேவதாந்தர சேஷபூதரான நீங்களும் அவர்களைப்போலே எம்பெருமானையே தொழவல்லீர்களாகில், கலியுகமொன்றுமில்லையாகும்; அதாவது—உங்களுக்கு தேவதாந்தர ப்ராவண்யமாகிற நீசத்தனத்திற்கு ஹேதுவான கலியுகதோஷம் தொலையுமென்கை. (ய)

3138 கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கருள்செய்யும் *
மலியும்சுடரொளிமூர்த்தி மாயப்பிரான்கண்ணன்தன்னை *
கலிவயல்தென்னன்குருகூர்க் காரிமாறன்சடகோபன் *
ஒலிபுகழாயிரத்திப்பத்து உள்ளத்தைமாசறுக்குமே. (கக)

| | | | |
|---|---|---|---|
| தன் அடியார்க்கு | தன் அடியவர்களுக்கு | கலி வயல் | நிறைந்த வயல்களையுடைய |
| கலியுகம் ஒன்றும் இன்றிக்கே | கலியுகதோஷம் ஒன்றும் தட்டாதபடி | தென் நல் குருகூர் | தென்திசையிலுள்ள அழகிய திருநகரிக்குத்தலைவரான |
| அருள் செய்யும் | க்ருபை பண்ணுகின்ற, | காரி மாறன் சடகோபன் ஒலி | ஆழ்வார் அருளிச்செய்த |
| மலியும் சுடர் ஒளி மூர்த்தி | மிகுந்த பிரகாசம் பொருந்திய தேஜோமய திவ்யவிக்ரஹத்தையுடையவனும் | புகழ் ஆயிரத்து இ பத்து | கீர்த்தி மிக்க ஆயிரத்தினுள் இத்திருவாய்மொழி |
| மாயம் பிரான் | ஆச்சரியமான குணசேஷ்டிதங்களையுடைய ப்ரபுவுமான | உள்ளத்தை மாசு அறுக்கும் | (கற்பாருடைய) நெஞ்சைக் கல்மஷமற்றதாகச் செய்யும். |
| கண்ணன் தன்னை | எம்பெருமானைக் குறித்து, | | |

* * * தேவதாந்தரங்களிலுண்டான பரத்வஜ்ஞானமும், எம்பெருமானைப் பணிந்தும் அற்பப்பிரயோஜனங்களில் விருப்புற்றிருக்கையும் முதலியன மனமாசு ஆகும்; இத்திருவாய்மொழியை ஓதவே அவை தீருமென்கிறது. (கக)

---

## ஐந்தாம்பத்து—மூன்றாந்திருவாய்மொழி—மாசறுசோதி.

---

இத்திருவாய்மொழி மடலூரவொருப்படுவதாயிருக்கும். கீழ் நாலாம்பத்திலே *ஏறாளுமிறையோனு மென்கிற திருவாய்மொழியில் உண்டாயிருந்த காதலே மீண்டும் கிளர்ந்து எம்பெருமானோடு ஸம்ச்லேஷிக்க விரும்பி, அந்த விருப்பம் நிறைவேறப் பெறாமையினாலே மடலூர்வேனென்று *அச்சமுறுத்திக் காரியங்கொள்ளப்பார்க்கிறார்.

3139 மாசறுசோதி என்செய்யவாய்மணிக்குன்றத்தை *
ஆசறுசீலனை ஆதிமூர்த்தியைநாடியே *
பாசறவெய்தி அறிவிழந்தெனைநாளையம்? *
ஏசறுமூரவர்கவ்வை தோழீ! என்செய்யுமே? (க)

| | | | |
|---|---|---|---|
| மாசு அறு சோதி | அழுக்கற்ற தேஜஸ்ஸையுடைய | நாடி | தேடி |
| செய்ய வாய் | சிவந்த திருப்பவளத்தையுடைய | பாசு அறவு எய்தி | உடம்பில் பசுமை அழிவடைந்து |
| என் மணி குன்றத்தை | மாணிக்கமலைபோல் எனக்கு போக்யனானவனும், | அறிவு இழந்து | அறிவும் இழக்கப்பெற்று |
| | | எனை நாளையம் | எத்தனை காலமிருப்போம்? |
| ஆசு அறு சீலனை | குற்றமற்ற சீலகுணத்தையுடையவனும் | தோழீ | தோழியே!, |
| ஆதி மூர்த்தியை | முழுமுதற்கடவுளுமான எம்பெருமானை | ஏசு அறும் ஊரவர் கவ்வை என் செய்யும் | ஏசுவதற்கென்றே அற்றுத்தீர்ந்த ஊராருடைய பழிமொழி யாது செய்யும்? |

* * * பராங்குச நாயகி மடலூர்வதாக எண்ணினபடியை அறிந்ததோழி அதனை விலக்கப்புகுந்து ‘ஊரார் பழிசொல்வர்காண்’ என்ன; அவனுடைய அழகு முதலியவற்றிலே

அகப்பட்டுக் கலங்கின நான் ஊரார் பழியை லக்ஷியம் பண்ணும் நிலைமையிலே இலேன் என்கிருள் தலைவி. பாசறவெய்தி=இதற்குப் பலவகையாகப் பொருள் கூறுவர். (1) பாசறவு என்று துக்கத்திற்குப் பெயர்; அதை எய்தி. (2) பாசு அறவு—என்று பிரித்து, பாசு—பசுமை நிறமானது, அறவு—அழிந்துபோவது; வைவர்ணியமடைந்து என்றபடி. (3) பாசு என்று பாசமாய், [அதாவது பற்று] பந்துக்கள் பக்கல் பாசம் நீங்கி. (4) அற என்பதற்கு 'முழுவதும்' என்றும் 'மிகவும்' என்றும் பொருளுண்டாகையாலே ஸ்நேஹம் முழுவதையும் அவன் பக்கலிலேயடைந்து என்னவுமாம். எம்பெருமான் நம்மை நாடிக்கொண்டு வரவேணுமேயன்றி நாமாக அவனை நாடுவது ஸ்வரூபஜ்ஞானத்திற்குப் போராதே யென்று சிலர் சொல்ல, அறிவிழந்து எனைநாளையம் என்கிருள். அறிவு [ஸ்வரூபஜ்ஞானம்] அடியோடே தொலைந்து எத்தனையோ நாள் ஆயிற்றே என்றபடி. ஆனாலும் ஊரார் சொல்லும்பழிக்கு அஞ்சவேண்டாவோ வென்ன, ஏசறு மூரவர்கவ்வை தோழீ யென்செய்யுமே என்கிருள். ஏசு அறும் ஊரவர்= ஏசுகையிலே அற்றுத் தீர்ந்திருக்கிற ஊரார் என்றபடி. ஏசுவதற்கென்றே பிறந்திருக்கிற ஊராருடைய பழிமொழிகள் நமக்கு அவத்யமோ? அதுவே நமக்குத் தாரகமன்றோ வென்கை. மடலெடுக்கிற ப்ரஸ்தாவம் இங்கு இல்லாமற் போனாலும் மேலே "மடலூர்துமே" என்றும் "யாமடலூர்ந்தும்" என்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லுகையாலே மடலூரும் நோக்கத்தையுட்கொண்டே இவையருளிச் செய்வதாகக் கொள்க. (க)

3140 என்செய்யுமூரவர்கவ்வை? தோழீ! இனிநம்மை *
என்செய்யதாமரைக்கண்ணன் என்னைநிறைகொண்டான் *
முன்செய்யமாமையிழந்து மேனிமெலிவெய்தி *
என்செய்யவாயுங்கருங்கண்ணும் பயப்பூர்ந்தவே. (உ)

என் செய்ய தாமரை கண்ணன் — சிவந்ததாமரை போன்ற திருக்கண்களை யுடையனை என்னுதன்
என்னை நிறை கொண்டான் — என்னுடைய அடக்கத்தைக் கொள்ளை கொண்டான்;
(அதனாலே)
முன் — முதன்முதலாக
செய்ய மாமை இழந்து — விலக்ஷணமான மேனி நிறம் அழியப்பெற்று
மேனி மெலிவு எய்தி — சரீரமும் மெலிந்து
என் செய்ய வாயும் கரு கண்ணும் பயப்பு ஊர்ந்த — எனது சிவந்தவாயும் கறுத்த கண்ணும் பசலை நிறம் படரப் பெற்றன;
தோழீ — தோழியே!,
இனி நம்மை ஊரவர் கவ்வை என் செய்யும் — இந்நிலைமை யானபின்பு நம் விஷயத்திலே ஊராருடைய பழிமொழி என்னபண்ணும்?

* * * கீழ்ப்பாட்டில், ஊரார் சொல்லும்பழி நமக்கென்ன செய்யப்போகிற தென்ருள்; 'இப்படியும் ஒரு வார்த்தையுண்டோ? பழிக்கு அஞ்சாதே யிருக்கவொண்ணுமோ? பழி பரிஹரிக்கவேண்டியது அவசியமாயிற்றே' என்ன, நான் பழி பரிஹரிக்க வேண்டா வென்று சொல்லுகின்றேனல்லேன்; பழி பரிஹரிக்கும்படியான நிலைமையில் இல்லையே! என்கிருளிப்பாட்டில்- என்செய்யுமூரவர்கவ்வை தோழீ! இனிநம்மை என்று தன் வடிவைக் காட்டுகிருள் போலும். இனி என்கிருயே, இதற்கு என்ன அர்த்தம்? என்று கேட்க, மேல்மூன்றடிகளும் அவ்வர்த்தம் கூறுவன. தோழீ! நான் இப்படி அவகாஹிப்பதற்கு முன்னே என்னை நீ இதில் நின்றும் மீட்டிருக்கலாமாயிற்று; எல்லைகடந்து விட்டதே யென்கிருள். (உ)

3141 ஊர்ந்தசகடம் உதைத்தபாதத்தன் * பேய்முலை
சார்ந்துசுவைத்தசெவ்வாயன் என்னைநிறைகொண்டான் *
பேர்ந்தும்பெயர்ந்தும் அவனேடன்றியோர்சொல்லிலேன் *
தீர்ந்தவென்தோழீ! என்செய்யுமூரவர்கவ்வையே? (௩)

ஊர்ந்த சகடம் உதைத்த பாதத்தன் — (நலிவதற்காக) ஊர்ந்து வந்த சகடத்தைப் பொடி படுத்தின திருவடிகளையுடையவனும்

பேய் முலை சார்ந்து சுவைத்த செம் வாயன் — பூதனையின் முலையை மனம் பொருந்தி பசையறவுண்ட செவ்விய வாயையுடையவனுமான எம்பிரான் (அந்தச் செயல்களாலே)

என்னை நிறை கொண்டான் — என்னுடைய ஸ்த்ரீத்வ பூர்த்தியை அபஹரித்தான்;

தீர்ந்த என் தோழீ — (எனக்கு நன்மைதேடுகையிலே) அற்றுத்தீர்ந்திருக்கின்ற என் தோழியே!

பேர்ந்தும் பெயர்ந்தும் — எந்தவிதத்திலும்

அவனோடு அன்றி ஓர் சொல் இலேன் — அவ்வெம் பெருமான் விஷயமான பேச்சன்றி வேறொரு பேச்சு உடையேனல்லேன்;

ஊரவர் கவ்வை என் செய்யும் — ஊரார் அலர்தூற்றுதல் என்னை என்ன பண்ணும்?.

* * * எம்பெருமானுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களிலே நெஞ்சைப் பறிகொடுத்த வென்னை ஊராருடைய பழிமொழி என்ன செய்யுமென்கிறாள். கண்ணபிரான் சகடாஸுர நிரஸனம் பண்ணினதும் பூதநாஸ்தந்யபானம் பண்ணி அவளை மாய்த்ததும் கம்ஸன் வரவிட்ட விரோதிவர்க்கங்களை மாய்த்தபடி என்று தோழி நினைத்திருந்தாள். இப்போது பராங்குச நாயகி சொல்லுகிறாள்—சகடாஸுரபஞ்ஜநாதிகள் என்னைத் தன் பக்கலிலே ஈடுபடுத்திக் கொள்ளுகைக்காகச் செய்தனவேயன்றி வேறில்லையென்கிறாள். பருவம் நிரம்பினபின்பு செய்திருந்தானாகில் இங்ஙனே சொன்னாலும் சொல்லலாம்; மிக்க இளம்பிராயத்திலே செய்த இவை இவளை யீடுபடுத்துகைக்கு உடலாவது எங்ஙனேயென்று நம்பிள்ளை சங்கித்துக்கொண்டு ஸமாதானமருளிச் செய்யுமழகு பாரீர்—"இவளுக்குத் தன் பக்கல் ப்ராவண்யத்தை விளைக்கை அவனுக்கு ஸத்தாப்ரயுக்தமென்கை" என்று. இப்படி உயிர்க்கொலையாகக் கொல்லும் விஷயத்திலே மேன்மேலும் வாஸனை பண்ணிப்போருவானேன்? அவ்விஷயத்தைவிட்டு வேறு விஷயங்களிலே போதுபோக்கிக் களிக்கலாகாதோ வென்ன, பேர்ந்தும் பெயர்ந்தும் அவனோடன்றி ஓர் சொல்லிலேன் என்கிறாள். போயும் வந்தும் அவன் திறமான சொற்களாலல்லது போது போக்குகைக்கு வேறு சொல்லுடையேனல்லேன் என்றவாறு. (௩)

3142 ஊரவர்கவ்வையெருவிட்டு அன்னைசொல்நீர்படுத்து *
ஈரநெல்வித்திமுளைத்த நெஞ்சப்பெருஞ்செயுள் *
பேரமர்காதல் கடல்புரையவிளைவித்த *
காரமர்மேனி நம்கண்ணன்தோழீ!கடியனே. (௪)

தோழீ — தோழியே!,

ஊரவர் கவ்வை எரு இட்டு — ஊராருடைய பழிமொழிகளை எருவாக இட்டு

அன்னைசொல் நீர் படுத்து — தாயின் ஹிதவசனமாகிய நீரைப்பாய்ச்சி

ஈரம் நெல் வித்தி — ஆசையாகிற நெல்லை விதைத்து

முளைத்த — முளைப்பித்த

நெஞ்சம் பெரு செயுள் — நெஞ்சாகிற பெரிய வயலிலே

பேர் அமர் காதல் — பெரிய ஊர்ப்பூசலை விளைவிப்பதான காதலாகிற பயிரை

கடல் புரைய விளைவித்த — கடல்போலே அபரிச்சிந்நமாகப் பலிக்கும்படி பண்ணின

கார் அமர் மேனி — கார்கால மேகத்தின் நிறம் பொருந்திய திருமேனியையுடைய

நம் கண்ணன் — எம்பெருமான்

கடியனே — கடியனோ? (கடியனல்லன்.)

* * *— தோழியானவள் தலைவியை நோக்கி, 'அம்மா! ஊரவர் சொல்லும் பழிமொழிகளை நாம் பொருள் படுத்தாமலிருப்பதும் நன்று தான்; ஆனால் எம்பெருமானால் உனக்கு ஏதேனும் லாபமுண்டாயிருந்தால் 'ஊரவர் கவ்வை கிடக்கட்டும்' என்றிருக்கலாம்; எம்பெருமானோ என்னை ஒரு சரக்காகவும் மதிக்கவில்லை; ஊரார் பழி சொல்வதொன்றுதானே மிகுகிறது; ஈரநெஞ்சு இள நெஞ்சு இல்லாதவனான அவனை விட்டிடுதலே நலம்' என்று சொன்னாள். அதைகேட்டதலைவி, "தோழீ! நீ சொல்லும் வார்த்தையா இது? நன்று சொன்னாய்; எம்பெருமான் எனக்கு என்ன குறை செய்தான், சொல்லிக்காண்" என்றாள். அதற்குத் தோழியானவள்

"அம்மா! ஊரவர் எவ்வளவு பழிமொழிகள் சொல்லினும் அவற்றை லக்ஷியம் பண்ணாதபடியான ப்ராவண்யம் உனக்கு இருக்கச் செய்தேயும் இந்நிலைமையிலும் அவன் வந்து உனக்கு முகங்காட்டவில்லையே! இதை விட வேறு என்ன குறைவேணும்" என்றாள். அதற்குத்தலைவி "அவன் இப்போது வந்து முகங்காட்டாவிட்டாலும், தன்னையொழிய நமக்கு மற்றொன்றால் பொருந்தாதபடி பண்ணினனே! அவனையா பொல்லாதவனென்று சொல்லுகிறது? என்கிறாள்.

எம்பெருமான் இப்பராங்குசநாயகிக்கு ப்ரேமத்தை விளைவித்தவாறு இப்பாட்டில் விசதமாகச் சொல்லப்படுகிறது. [ஊரவர் கவ்வை எருவிட்டு] ஒரு வயலிலே பயிர் செழிப்புற்றோங்கி விளங்கவேணுமானால் முன்னம் நல்ல எருவிடவேணும்; தண்ணீர்பாய்ச்சவேணும்; நெல்விதைக்கவேணும்; இத்தனை செய்தால் அது மூளைத்துச் செழிப்பான பயிராய் வளர்ந்து விளங்கும். அதுபோல இங்கு ஆழ்வாருடைய நெஞ்சாகிற பெரிய வயலுள் காதலாகிற பயிர் நன்கு வளர்வதற்கு * பத்தியுழவனென்று ப்ரஸித்தனை எம்பெருமான் செய்த காரியங்கள் இதில் ரூபகமரியாதையிலே கூறப்படுகின்றன. (சு)

3143 கடியன்கொடியன்நெடியமால் உலகம்கொண்ட
அடியன் *அறிவருமேனிமாயத்தன் *ஆகிலும்
கொடியவென்னெஞ்சம் அவனென்றேகிடக்குமெல்லே! *
துடிகொளிடைமடத்தோழீ! அன்னையென்செய்யுமே? (டு)

| | |
|---|---|
| கடியன் | தன் காரியத்தில் விரைகின்ற கடுமையையுடையவன்; |
| கொடியன் | அக்காரியம் தலைக்கட்டினால் திரும்பிப்பாராமல் போகிற கொடியவன்; |
| நெடிய மால் | போகத் தொடங்கினால் விலக்க அரிதாம்படி பெரிய மேன்மையையுடையவன்; |
| உலகம் கொண்ட அடியன் | உலகம் முழுவதையும் தன்னதேயாம்படி யளந்துகொண்ட திருவடியை யுடையவன்; |
| அறிவு அரு மேனி மாயத்தன் | நல்லவனோ தீயவனோ என்று விவேகிக்க அரிதாம்படி அழகாலே மயக்கும் மாயத்தை யுடையவன்; |
| ஆகிலும் கொடிய என் நெஞ்சம் | இங்ஙனேயானாலும் கொடிதான என்னுடைய மனமானது |
| அவனே என்று கிடக்கும் | அப்பெருமானே தஞ்சமென்று கிடக்கின்றது; |
| எல்லே | என்னே!; |
| துடி கொள் இடை | உடுக்கைபோன்ற இடையையும் |
| மடம் | மடப்பத்தையுமுடைய |
| தோழீ | தோழியே!; |
| அன்னை | என் தாய் |
| என் செய்யும் | என்ன செய்யக்கூடும்?. |

* * *—தோழீ! நான் சொல்லுகிறபடியே எம்பெருமான் குணசாலியாகவன்றிக்கே நீ சொல்லுகிறபடியே குணஹீநனானாலும் என்னெஞ்சம் அவனையல்லது அறியாது; இவ்விஷயத்தில் நின்றும் என்னை மீட்கைக்காகவன்றோ நீ அவனை குண ஹீநனென்பது; குணஹானியையிட்டே நான் அவனை விரும்பி மேல்விழுகிறேனாகக் கொள்ளாய்; ஆகவே உன்னுடைய சொல்லுக்கு ஒரு ப்ரயோஜன மில்லைகாண் என்கிறாள். ஸ்ரீவசநபூஷணத்தில்—"பகவத் விஷயத்தில் இழிகிறதும் குணங்கண்டன்று; ஸ்வரூபப்ராப்தமென்று. இப்படி கொள்ளாத போது குணஹீநமென்று நினைத்த தசையில் பகவத் விஷயப்ரவ்ருத்தியும் தோஷாநுஸந்தாந தசையில் ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியும் கூடாது. * கொடியவென்னெஞ்ச மவனென்றே கிடக்கும் * அடியேன் நான் பின்னுமுன்சேவடியன்றி நயவேன் * என்ற நின்றார்களிறே. குணக்ருததாஸ்யத்திலுங் காட்டில் ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமிறே ப்ரதாநம். அநஸூயைக்குப் பிராட்டியருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது." என்றுள்ள திவ்ய ஸூக்திகள் இங்கே அநுஸந்தேயங்கள். தலைவி சொன்ன வார்த்தையைக்கேட்ட தோழியானவள் "அம்மா! நீ சொல்லுமதை நான் அறியேனோ? நான் விலக்குகிறேனல்லேன்;

தாயார் வெறுக்கும் என்று சொல்லுகிறேன்'' என்ன; அன்னை என் செய்யுமே என்கிருள்;—உன் வார்த்தை கேளாத நாமே தாயார் வார்த்தை கேட்பேன்? அந்நிலை கழிந்ததில்லையோ வென்கிருள். (ரு)

3144 அன்னையென்செய்யிலென்? ஊரென்சொல்லிலென்?தோழிமீர்*
என்னையினியுமக்காசையில்லை அகப்பட்டேன் *
முன்னையமரர்முதல்வன் வண்துவராபதி
மன்னன் *மணிவண்ணன் வாசுதேவன்வலையுளே. (சு)

| | |
|---|---|
| தோழீமீர் | தோழிமார்களே! |
| முன்னை அமரர் முதல்வன் | நித்ய ஸூரிநாதனும் |
| வண் துவராபதி மன்னன் | அழகிய த்வாரகாபுரிக்கு அரசனும் |
| மணிவண்ணன் | நீலமணிவண்ணனுமான |
| வாசுதேவன் | கண்ணபிரானுகிற |
| வலையுள் | வலையினுள்ளே |
| அகப்பட்டேன் | சிக்கிக் கொண்டேன்; |
| இனி என்னை உமக்கு ஆசை இல்லை | ஆன பின்பு என்திறத்திலே நீங்கள் ஆசைவைக்க நியாயமில்லை; |
| அன்னை என் செய்யில் என் | தாய் எது செய்தால்தான் என்ன? |
| ஊர் என் சொல்வில் என் | ஊரார் எது சொன்னல்தான் என்ன?. |

* * *—நீ இங்ஙனே துணிவு கொண்டால் தாயார் ஜீவிக்கமாட்டாள்; அத்தாலே ஊராருடைய பழிப்பும் மிகும் என்று தோழி சொல்ல, கண்ணபிரானுடைய குணசேஷ்டிதாதிகளிலே நான் அகப்பட்டேன், இனி யார் என்செய்தாலென்ன என்கிருள். "வாசுதேவன்வலையுளே அகப்பட்டேன்'' என்றது — வாசுதேவனுகிற வலையிலேயகப்பட்டேன் என்றும், வாசுதேவனுடைய வலையிலே யகப்பட்டேன் என்றும் பொருள் பெறும். வலையாவது தன் பக்கலில் அகப்பட்டாரை வேறு இடத்திற்குப் போகவொட்டாமல் செய்வதாதலால் எம்பெருமானை வலையாகக் கூறுதல் பொருந்தும். "பாலாலிலையில் துயில்கொண்டபரமன் வலைப்பட்டிருந்தேனை'' என்ருள் ஆண்டாளும். எம்பெருமானுடைய வலை என்று பொருள் கொள்ளும்போது திருக்கண்களை வலையாகக் கொள்ளலாம். "உகவையால் நெஞ்சமுள்ளுருகி உன் தாமரைத் தடங்கண் விழிகளின் அகவலைப்படுப்பான்'' என்பர் மேலே. (சு)

3145 வலையுளகப்படுத்து என்னைநன்னெஞ்சம்கூவிக்கொண்டு *
அலைகடற்பள்ளியம்மானை ஆழிப்பிரான்தன்னை *
கலைகோளகலல்குல்தோழீ! நம்கண்களால்கண்டு *
தலையில்வணங்கவுமாங்கொலோ? தையலார்முன்பே. (எ)

| | |
|---|---|
| கலை கொள் அகல் அல்குல் தோழீ | சேலை யணிந்ததும் அகன்றது மான நிதம்பத்தையுடைய தோழியே!, |
| என்னை வலையுள் அகப்படுத்து | என்னை (தன்னுடைய குணசேஷ்டிதங்களாகிற) வலையிலே சிக்கிக் கொள்ளும் படி செய்து |
| நல் நெஞ்சம் கூவிக்கொண்டு | (எனது) நல்நெஞ்சையும் அடியறுத்து அழைத்துக்கொண்டு |
| அலை கடல் பள்ளி அம்மானை | அலை யெறிகின்ற கடலிலே (ஏகாந்தமாகப்) பள்ளி கொள்ளும் ஸ்வாமியாய் |
| ஆழி பிரான் தன்னை | திருவாழியாழ்வானை ஏந்தியுள்ள மஹோபகாரகனை எம்பெருமானை |
| நம் கண்களால் கண்டு | நமது கண்களாலே பார்த்து |
| தையலார் முன்பே | (பழிசொல்லுகிற) மாதர்களின் கண்வட்டத்தில் |
| தலையில் வணங்கவும் ஆம் கொலோ | தலையாலே வணங்கவும் கூடுமோ?. |

* * *—எம்பெருமான் பக்கலில் குணஹானி சொன்னவர்களுடைய வாய் அடங்கும் படி நாம் அவனைக் காணப்பெற்றுத் தலையாலே வணங்கலாம்படியான காலம் வாய்க்குமோ

தோழீ யென்கிறாள், என்னைத்தன்னுடைய குணசேஷ்டிதங்களாகிற வலையில் அகப்படுத்திக் கொண்டு *காற்றிற் கடியனாயோடித் திருப்பாற்கடலிலே புக்கொளித்த பெருமானைத் தோழீ! அவனுக்கு குணஹாநி சொல்லுகிற இந்தப்பெண்டுகள் கண்ணெதிரே நம் கண்களால் கண்டு தலையாலே வணங்கப் பெறுவோமே என்றாளாயிற்று. (எ)

3146 பேய்முலையுண்டுசகடம்பாய்ந்து மருதிடை
போய்முதல்சாய்த்து * புள்வாய்பிளந்து களிறட்ட *
தூமுறுவல்தொண்டைவாய்ப்பிரானை எந்நாள்கொலோ? *
யாமுறுகின்றதுதோழீ! அன்னையர்நாணவே. (அ)

| | |
|---|---|
| தோழீ | தோழியே!, |
| பேய் முலை உண்டு | பூதனையின் முலையைப் புசித்து |
| சகடம் பாய்ந்து | சகடத்தை முறித்துத் தள்ளி |
| மருது இடை போய் முதல் சாய்த்து | இரட்டை மருதமரங்களினிடையே தவழ்ந்துசென்று (அவற்றை) வேரோடே தள்ளி |
| புள் வாய் பிளந்து | பகாசுரனுடைய வாயைக்கிழித்து |
| களிறு அட்ட | குவலயாபீட யானையைக் கொன்று முடித்த |
| தூ முறுவல் தொண்டை வாய் பிரானை | பரிசுத்தமான மந்தஹாஸத்தையும் கொவ்வைக்கனி போன்ற திருப்பவளத்தையுமுடைய பெருமானை |
| அன்னையர் நாண | தாய்மார் தலைதொங்கும்படியாக |
| யாம் உறுகின்றது எ நாள் கொலோ | நாம் கிட்டுவது என்றைக்கோ?. |

* * *—மஹோபகார சீலனை எம்பெருமானை குணஹீநன் என்று குறைகூறின தாய்மார் "அந்தோ! இப்பெருமானையோ நாம் குணஹீநனென்று சொன்னது!" என்று வெட்கப்பட்டுக் கவிழ்தலையிடும்படி நாம் அப்பெருமானைக் காண்பது என்றைக்கோ? என்கிறாள். எம்பெருமானுக்குப் பரோபகார சீலத்வம் நேற்று இன்றைக்கு வந்ததன்றே, ஜன்மஸித்தமாயிற்றேயென்று நிரூபிக்கிறாள் பேய்முலையுண்டு இத்யாதியால். பூதனையால் வந்த ஆபத்தைப் போக்கி, சகடத்தினால் வந்த அனர்த்தத்தைத் தவிர்த்து, இரட்டை மருதமரங்களால் வந்த தீமையைத் தொலைத்து, பகாஸுரனால் வந்த வாதையை நீக்கி, குவலயாபீட யானையினால் நேர்ந்த விபத்தையும் தொலைத்து இப்படி ஆச்ரித விரோதி நிரஸநம் பண்ணி உபகரிக்கப் பெற்றோமே! என்று தூமுறுவல் செய்துநிற்கும் பெருமானை நம் தாய்மார் கண்டால் 'இவனிடத்திலோ நாம் குணஹாநி சொன்னது' என்று நாணிக் கவிழ்ந்திருப்பார்களே; அன்னவனை நாம் கிட்டுவது எந்நாள்கொலோ! என்றாளாயிற்று. (அ)

3147 நாணும்நிறையும்கவர்ந்து என்னைநன்னெஞ்சம் கூவிக்கொண்டு *
சேணுயர்வானத்திருக்கும் தேவபிரான்தன்னை *
ஆணையென்? தோழீ! உலகுதோறலர்தூற்றி * ஆம்
கோணைகள்செய்து குதிரியாய்மடலூர்துமே.

| | |
|---|---|
| என் தோழீ | எனது தோழியே!, |
| என்னை | என்பக்கலில் நின்றும் |
| நாணும் நிறையும் கவர்ந்து | நாணத்தையும் அடக்கத்தையும் கொள்ளை கொண்டு |
| நல் நெஞ்சம் கூவிக் கொண்டு | (எனது) நல்ல நெஞ்சையும் ஆகர்ஷித்துக்கொண்டு |
| சேண் உயர் வானத்து இருக்கும் | மிகவும் உயர்ந்த பரமபதத்திலெழுந்தருளியிருக்கிற |
| தேவபிரான்தன்னை | — நித்ய ஸூரி |
| உலகு தோறு அலர் தூற்றி | ஒவ்வோருலகத்திலும் பழி தூற்றி |
| ஆம் கோணைகள் செய்து | செய்யக்கூடிய மிறுக்குக்களைச் செய்து |
| குதிரி ஆய் மடல் ஊர்தும் | அடங்காத பெண்ணாய் மடலூரக் கடவோம் |
| ஆணை | இது திண்ணம். |

* * *—என்பக்கல் ஸர்வஸ்வமும் கொள்ளைகொண்டு எட்டா நிலத்திலிருக்கிறவனை ஸகலலோகமும் பழிக்கும்படி மடலூரக்கடவேனென்று தோழிக்குத் தனது நெஞ்சை வெளி

யிடுகிறுள். வாசல்விட்டுப் புறப்படமாட்டாதிருக்குமிருப்பு நாண்; நெஞ்சினுள்ளே யோடுவது தாய்மார்க்கும் சொல்லவொண்ணுத்படியிருக்குமடக்கம் நிறை; இவ்விரண்டையும் கொள்ளை கொண்டானென்றது அதிமாத்ர ப்ராவண்யத்தை விளைத்தானென்றபடி. நெஞ்சாவது ஸ்வாதீநமாக இருந்தால் குறையில்லையே, அதனையும் தன்பக்கலிலே நொடித்துக் கொண்டமை சொல்லிற்று நன்னெஞ்சம் கூவிக்கொண்டு என்றதனுல். கோணை—மிறுக்கு; ஆம் கோணை= எவ்வெவ்விதமாக மிறுக்குகள் செய்யமுடியுமோ அவ்வவ்விதமெல்லாம் செய்வேனென்கிருள். குதிரி—நாணுப்பெண், அடங்காப்பெண். கு-ஸ்த்ரீ (குஸ்த்ரீ) என்னும் வடசொல் குதிரியெனத் திரிந்ததென்னலாம். (க)

3148 யாமடலூர்ந்தும் எம்மாழியங்கைப்பிரானுடை *
தூமடல்தண்ணந்துழாய் மலர்கொண்டுசூடுவோம் *
யாமடமின்றித் தெருவுதோறயல்தையலார் *
நாமடங்காப்பழிதூற்றி நாடுமிரைக்கவே. (ம)

| | | | |
|---|---|---|---|
| யா மடம் இன்றி | ஏதேனும் ஒருபடியாலும் பெண்மைக்குரிய ஒடுக்கமில்லாமல் | மடல் ஊர்ந்தும் | மடலூர்ந்தாகிலும் |
| தெருவு தோறு | வீதிகள் தோறும்புகுந்து | ஆழி அம் கை எம் பிரானுடை | திருவாழியைத் தரித்த அழகிய திருக்கையையுடைய எம் பெருமானுடைய |
| அயல் தையலார் | அயல் பெண்களும் | | |
| நாடும் | ஸகல லோகமும் | | |
| நா மடங்கா பழி தூற்றி | நாக்கு இடைவிடாதே சொல்லுகிற பழிமொழிகளைத் தூற்றி | தூ மடல் தண் அம் துழாய் மலர் கொண்டு | பரிசுத்தமான இதழ்களையுடைய குளிர்ந்தழகிய திருத்துழாய் மலர் மாலையை அவன்கரப் பெற்று |
| இரைக்க | இரைச்சல் போடும்படி | | |
| யாம் | நாம் | சூடுவோம் | தலையில் அணிவோம். |

* * *—மடலூர்வதில் தனக்குள்ள உறுதியை நன்கு வெளியிடுகிறுள். பாட்டினடியில் யாம் என்றது ஸ்வஸ்வரூபத்தை உறுத்திக்காட்டுகிறபடி. திருவடி அசோகவனத்தில் பிராட்டியை நோக்கி 'தேவரீர் இவ்வளவு அல்லல் படுவானேன்? ஒரு நொடிப்பொழுதில் அடியேன் தேவரீரைப் பெருமாள் திருவடிவாரத்திலே கொண்டுசேர்க்குமாறு இசைந்தருளலாகாதோ?' என்று சொல்ல, அது கேட்ட பிராட்டி எம்பெருமானுடைய திருவுள்ளப்படியே என்ன ஆகிறதோ அதைப்பார்த்துக் கொண்டிருப்பது நமக்கு ஸ்வரூபமேயன்றி நாமாக ஒரு அதிப்ரவ்ருத்தி செய்யத்தகாது என்கிற கருத்துப்பட உத்தரமுரைத்தாள். இப்படி யிருக்க வேண்டிய ஸ்வரூபத்தையுடையேன்யான் என்று காட்டுகிறபடி. ஆனாலும் பதறுதிருக்க முடியவில்லை யென்கிருள் மடலூர்ந்தும் என்பதனுல். மடலூர்தல் என்பதற்குத் தமிழர்கள் சொல்லுகிறபடி பனைமட்டையைக் கையிலே கொள்ளுதல் முதலான காரியங்கள் இங்கு விவக்ஷிதமல்ல; ஸாஹஸமாக அதிப்ரவ்ருத்திகளைச் செய்தாகிலும் என்றபடி. அதாவது தன்னுடைய பதற்றத்தைக் காட்டுதல். (ம)

3149 இரைக்கும்கருங்கடல்வண்ணன் கண்ணபிரான்தன்னை *
விரைக்கொள்பொழில் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
நிரைக்கொளந்தாதி ஓராயிரத்துளிப்பத்தும் *
உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும்தம்மூரெல்லாம். (கக)

| | | | |
|---|---|---|---|
| இரைக்கும் கரு கடல் வண்ணன் கண்ணபிரான் தன்னை | கோஷிக்கின்ற கருங்கடல் போன்ற வடிவழகையுடையனை கண்ணபிரானை எம்பெருமானைக்குறித்து, | விரை கொள் பொழில் குருகூர் சடகோபன் சொன்ன | பரிமளம் மிக்க சோலைகளையுடைய திருநகரியில் அவதரித்த ஆழ்வார் அருளிச் செய்த |

| | | | |
|---|---|---|---|
| நிரை கொள் | சாஸ்த்ரமரியாதைப் படியே ஒழுங்குகளைக்கொண்ட | இ பத்தும் | இப்பதிகத்தை |
| அந்தாதி | அந்தாதித் தொடையாயமைந்த | உரைக்க வல்லார்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| ஓர் ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரங்களினுள்ளே | தம் ஊர் எல்லாம் வைகுந்தம் ஆகும் | தம்தம் இருப்பிடமெல்லாம் பரமபதம் போலே பேரின்ப நிலமாக விளங்கும் |

* * *—இத்திருவாய்மொழி சொல்லவல்லார் என்னைப்போலே மடலூர்வேனென்ன வேண்டாதே, தாங்களிருக்குமிடத்தே எம்பெருமான் தானே வந்து நித்யஸம்ச்லேஷம் பண்ணப்பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. (கக)

---

## ஐந்தாம்பத்து நான்காந் திருவாய்மொழி—ஊரெல்லாந்துஞ்சி.

கீழ்த் திருவாய்மொழியிலே மடலூரும் முயற்சி வலிதாய்ச் சென்றது. மடலூர வேண்டுமானால் நாயகனை ஒரு படத்திலே எழுதவேணுமே; அப்படி யெழுதுவதற்கு அவகாசமில்லாதபடி கங்குலிருள் வந்து புகுந்தது. * ஆழியாலன்றங்காழியை மறைத்தான் * என்றும் * ஆழிகொண்டன்று இரவிமறைப்ப * என்றும் சொல்லுகிறபடியே பண்டு பாரதப் போரிலே ஜயத்ரதனுடைய வதத்திற்காக ஸூர்யனை அஸ்தமிக்கச் செய்ததுபோல இப்போதும் அப்பெருமான்தானே ஸூர்யனை அஸ்தமிக்கும்படி பண்ணினான் போலும். இவள் மடலெடுத்தால் அது தனக்கு அவத்யமாகுமென்று நினைத்து அதற்கு இடையூறு செய்ய வொருப்படுவனே யெம்பெருமான். அல்லது தைவயோகத்தாலே அஸ்தமித்ததாகவும் இருக்கலாம். இரவு வந்து புகுந்தது. அதுதான் அந்தியம்போதன்றிக்கே சராசரங்களெல்லாம் ஒடுங்கும்படி நடுநிசியாயிருந்தது. பழிசொல்லுவாரோடு ஹிதஞ்சொல்லுவாரோடு வாசியற எல்லாரும் உறங்கிப்போய் உசாத்துணையற்றிருந்தது. இவ்வளவிலே ஸர்வரக்ஷகனை எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுஸந்தித்தாராழ்வார். இவ்வநுஸந்தானம் ஸம்ச்லேஷதசையிலன்றிக்கே விச்லேஷதசையிலே யாகையாலே மிகவும் ஆற்றாமைக்கு உறுப்பாயிற்று. அசோகவனத்திலே முடியத்தேடின பிராட்டியைப்போலே இவர்க்கும் முடியவேண்டுமளவாயிற்று. அந்த அவஸாதமெல்லாம் இத்திருவாய்மொழியாய் வெளிவருகின்றது. கீழ்த் திருவாய்மொழிபோலே இத்திருவாய்மொழியும் நாயகீஸமாதியாலே அருளிச்செய்கிறபடி.

3150 ஊரேல்லாம்துஞ்சி உலகெல்லாம்நள்ளிருளாய் *
நீரேல்லாம்தேறி ஓர்நீளிரவாய்நீண்டதால் *
பாரேல்லாமுண்ட நம்பாம்பணையான்வாரானால் *
ஆரெல்லே! வல்வினையேன் ஆவிகாப்பாரினியே. (க)

| | | | |
|---|---|---|---|
| ஊர் எல்லாம் துஞ்சி | ஊர் முழுவதும் உறங்கிப் போய் | பார் எல்லாம் உண்ட | பூமி முழுவதையும் (பிரளய காலத்திலே) வயிற்றிலே வைத்து ரக்ஷித்த |
| உலகு எல்லாம் நள் இருளாய் | உலகம் முழுவதும் காடாந்தகாரம்மிக்கு | நம் பாம்பு அணையான் | சேஷசாயியான எம்பெருமான் |
| நீர் எல்லாம் தேறி | நீர் நிலமெல்லாம் அலையடங்கித் தெளிந்து | வாரான் | வந்து முகங்காட்டுகின்றிலன்; |
| ஓர் நீள் இரவு ஆய் | (பகல் கலசாத) ஒரே காளராத்ரியாய் | இனி | இப்படியான பின்பு |
| நீண்டது | நெடுகிச் செல்கின்றது; | வல் வினையேன் ஆவி காப்பார் ஆர் | கொடும்பாவியான என்னுடைய உயிரை ரக்ஷிப்பவர் யாவர்? |
| ஆல் | அந்தோ!; (இந்நிலைமையில்) | எல்லே | என்னே!. |

* * *—ஜகத்தடங்கலும் இருள்மூடி நின்றது; ரக்ஷகரென்று பேர் பெற்றிருக்கும் ஸர்வேச்வரனோ வந்து ரக்ஷித்தருள்கின்றிலன்; இனி யென்னை ரக்ஷிப்பார் ஆரென்கிறாள். ஊராருடைய பழிமொழியே எருவாகத் தன்னுடைய காதல்வளருமதாகையாலே அந்த எருவுக்கு அவகாசமில்லாதபடி ஊரெல்லாம்துஞ்சிற்றே! என்று வருந்துகிறாள். இலங்கையினுள் திருவடி புகும்போது ராக்ஷஸிகளெல்லாரும் உறங்கிக்கிடந்தாப்போலே இங்குப் பழிசொல்லுவாரடங்கலும் உறங்கிப்போனார்கள். இவள் பிறந்த ஊராகையாலே இவளது நிலைமையைக் கண்டு சோகித்து, கோரைசாய்ந்தாற்போலே எல்லாருமொக்க உறங்கினபடியைச் சொல்லிற்றாகவுமாம். பண்டு ராமராவண யுத்தத்தில் நாகபாசபந்தத்தினன்று ஜாம்பவான், திருவடி முதலான சிலராவது உணர்ந்திருந்தார்கள், அப்படியுமில்லையாயிற்றிங்கு. ஊரைவிட்டு வெளியேசென்று தரிக்கைக்கும் அவகாசமில்லாமே உலகெல்லாம் நள்ளிருளாயிற்று. கண்ணாலே ஒருபொருளும் காணமுடியாத நிலைமையாயிற்று. நீர்நிலங்களிலுள்ள ஸாரஸபக்ஷி முதலானவைகளும் கோலாஹலமற்று ஓய்ந்துபோகையாலே அந்த நீர்நிலங்களெல்லாம் அலையடங்கித் தெளிந்து கிடக்கின்றன. இரவு பகல் என்கிற விபாகமின்றிக்கே ஒரேகாளராத்திரியாயிராநின்றது. மநுஷ்யர்களினுடைய ராத்திரியிற்காட்டில் தேவர்களினுடைய ராத்திரிக்கு அதிக நீட்சியுண்டு; அதனிலும் விஞ்சிய நீட்சியாயிற்று. இந்த நிலைமையில் பரமகாருணிகனான அந்தப் பாம்பணையானும் வாராதொழிந்தான். பிரளயாபத்து வந்தவாறே உலகங்களையெல்லாம் திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்குமெம்பெருமான் இவ்வாபத்திலே வந்து முகங்காட்டி உதவுகின்றிலன்; இப்படியானபின்பு தரிக்கும்வகை என்னோ! என்கிறாள். (க)

3151

ஆவிகாப்பாரினியார்? ஆழ்கடல்மண்விண்மூடி * மாவிகாரமாய் ஓர்வல்லிரவாய்நீண்டதால் *
காவிசேர்வண்ணன் என்கண்ணனும்வாரானால்*பாவியேன்னெஞ்சமே! நீயும்பாங்கல்லையே.(உ)

| பதம் | பொருள் |
|---|---|
| ஆழ் கடல் மண் விண் மூடி | ஆழ்ந்த கடலையும் பூமியையும் ஆகாசத்தையும் மறைத்து (இவ்வளவோடும் நில்லாமல் ஸகலலோகங்களையும் கபளீகரிக்கும்படி) |
| மா விகாரம் ஆய் | பெரிய விகாரத்தை யுடைத்தாய்க்கொண்டு |
| வல் ஓர் இரவு ஆய் நீண்டது | வலிதான ஒரேராத்திரியாய் நெடுகிச் செல்லா நின்றது; |
| ஆல் | அந்தோ!; |
| காவி சேர் வண்ணன் | நெய்தல் பூப்போன்ற நிறத்தை யுடையனான |
| என் கண்ணனும் | எனக்குத் தஞ்சமான கண்ணபிரானும் |
| வாரான் | வந்து முகங்காட்டுகின்றிலன்; |
| பாவியேன் நெஞ்சமே நீயும் பாங்கு அல்லை | பாவியான என்னுடைய மனமே! நீதானும் அனுகூலமாக இருக்கிறாயில்லை; |
| இனி ஆவி காப்பார் ஆர் | இப்படியான பின்பு பிராணனை ரக்ஷித்துத் தருவார் யாவர்? (ஒருவருமில்லை) |

* * *—இந்நிலைமையிலே கண்ணபிரானும் வந்து உதவுகின்றிலனே! என்று இன்னாதாகிறாள். ஆய்ச்சியரோடு குரவைகோத்தவன்று அந்த ரஸம் ஸாத்மிக்கைக்காக நெடும்போது மறைந்து நின்று அவர்களுக்கு மிகவும் அலமாப்பை விளைத்து, பின்னை * தாஸாமாவிரபூச்சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ:। பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத: * என்கிறபடியே புன்முறுவல் காட்டிவந்து புகுந்துநின்றாப்போலே நமக்கும் வந்து முகங்காட்டுவன் என்றிருந்தாள் போலும்; வரவில்லையே யென்று கதறுகின்றாள். (உ)

3152 நீயும்பாங்கல்லைகாண் நெஞ்சமே! நீளிரவும் *
ஓயும்பொழுதின்றி ஊழியாய்நீண்டதால் *
காயும்கடுஞ்சிலை என்காகுத்தன்வாரானால் *
மாயும்வகையறியேன் வல்வினையேன்பெண்பிறந்தே.

| பதம் | பொருள் |
|---|---|
| நெஞ்சமே | மனமே! |
| நீயும் பாங்கு அல்லே காண் | (எல்லாக் காரியங்களுக்கும் முதற்கருவியான) நீயும் எனக்கு விதேயமாக இருக்கிறாயில்லை; |
| நீள் இரவும் ஓயும் பொழுது இன்றி ஊழி ஆய் நீண்டது | ஏற்கனவே நீண்டு வருகின்ற ராத்திரியும் ஓயுங்காலம் இல்லாமல் ஒரு கல்பமாய்க் கொண்டு வளர்ந்துவிட்டது; |
| ஆல் | அந்தோ!; |
| காயும் கடு சிலை என் காகுத்தன் வாரான் | (விரோதிகளைக்) காய்கின்ற கடிய சார்ங்கவில்லையுடைய இராமபிரான் வந்து முகங் காட்டுகின்றிலன்; |
| வல்வினையேன் | வலிய பாபத்தை யுடையேனான நான் |
| பெண் பிறந்து | பெண்ணாய்ப் பிறந்து |
| மாயும் வகை அறியேன் | முடியும் வழியை அறிகின்றிலேன். |

* * *—அநிஷ்டங்களைத் தொலைக்கவல்லவனான இராமபிரானும் உதவ வருகின்றிலன்; முடியவும் வழிதெரியாமல் திகைக்கின்றேனென்கிறாள். பிராட்டியை அசோகவனத்திலே வைத்தபோது மாயாவியான இராவணன் 'இராமன் தலையறுப்புண்டு தொலைந்தான்' என்று தோன்றுமாறு ஒரு மாயா சிரஸ்ஸைக் கொண்டுவந்து பிராட்டிக்குக் காட்டி 'இதோபார் ஸீதே!, உன் கணவன் தலையறுப்புண்டு ஒழிந்தான்' என்ன, அதுகேட்டுப் பிராட்டி வருந்திக் கிடக்கும் க்ஷணத்திலே இராமபிரான் கடற்கரையிலே நின்று தனது சார்ங்கவில்லை ஒலிப்பிக்க, அவ்வொலியானது பிராட்டியின் செவியிலே புகுந்து ஆச்வஸிப்பித்ததென்று கேட்டிருந்த பராங்குச நாயகி, அப்படியாகத் தன்னையும் ஆச்வஸிப்பிக்க ஒரு விரகு செய்தருளவில்லையே! என்ற இன்னாப்புத் தோன்றக் காயுங்கடுஞ்சிலைஎன் காகுந்தன் வாரானால் என்கிறாள். "சார்ங்க வில் நாணொலியும் தலைப்பெய்வது எஞ்ஞான்றுகொலோ" என்ற ஆண்டாளுடைய நிர்வேதம் இங்கு நினைக்கத்தக்கது. (௩)

3153 பெண்பிறந்தாரெய்தும் பெருந்துயர்காண்கிலேனென்று *
ஒண்சுடரோன் வாராதொளித்தான் * இம்மண்ணளந்த
கண்பெரியசெவ்வாய் எங்காரேறுவாரானால் *
எண்பெரியசிந்தைநோய் தீர்ப்பாராரென்னையே? (௪)

| பதம் | பொருள் |
|---|---|
| பெண் பிறந்தார் எய்தும் | பெண்ணாய்ப் பிறந்தவர்கள் அடைகின்ற |
| பெரு துயர் | பெருந்துக்கத்தை |
| காண்கிலேன் என்று | காணமாட்டேன்' என்றெண்ணி |
| ஒண்சுடரோன் | ஸூர்யன் |
| வாராது ஒளித்தான் | வாராதே மறைந்து போனான் போலும்; |
| இ மண் அளந்த | இப்பூமியை யளந்துகொண்டவனும் |
| பெரிய கண் | பரந்த திருக்கண்களையுடையவனும் |
| செம் வாய் | சிவந்த அதரத்தையுடையவனும் |
| எம் கார் ஏறு | கறுத்த திருமேனியையுடையவனும் காளைபோன்றவனுமான எம்பெருமான் |
| வாரான் | வந்து முகங்காட்டுகின்றிலன்; |
| ஆல் | அந்தோ!; |
| எண் பெரிய | நினைக்கவும் முடியாத |
| சிந்தை நோய் | மநோவியாதியை |
| என்னை | என்னிடத்தில் நின்றும் |
| தீர்ப்பார் | நீக்கவல்லவர்கள் |
| ஆர் | யார் கொல்?. |

* * *—கண்டார்க்குப் பொறுக்க வொண்ணாதபடி நான் துன்பப்படாநிற்க, எல்லாருடைய ஆபத்துக்களையும் போக்குவானான த்ரிவிக்கிரமன் வருகின்றிலன்; என்னுடைய சிந்தை நோய் தீரும்வழி என்னோ! என்கிறாள். ஸூர்யன் வந்தாலென்ன, ஒளித்தாலென்ன? அவனைக்கொண்டு நமக்கொரு காரியமில்லையே. வடிவழகு முதலியவற்றால் என்னைத் தோற்பித்து எனக்குப் பரமபோக்யனாயிருந்தவன் எழுந்தருளிக் காட்சி தரவில்லையே; என் சிந்தை நோயைத் தீர்க்கவல்லவனான அவன் வராதிருக்கிறபடியாலே இனி என் சிந்தை நோய் அநுபவித்தே கழிக்குமித்தனைபோலும் என்றாளாயிற்று. (௪)

3154 ஆரென்னையாராய்வார்? அன்னையரும்தோழியரும் *
நீரென்னே? என்னாதே நீளிரவும்துஞ்சுவரால் *
காரன்னமேனி நங்கண்ணனும்வாரானால் *
பேரென்னைமாயாதால் வல்வினையேன்பின்னின்றே. (ரு)

| பதம் | பொருள் |
|---|---|
| அன்னையரும் | தாய்மாரும் |
| தோழியரும் | தோழிமாரும் |
| நீர் என்னே என்னாதே | 'இப்படியும் ஒரு நீர்மையுண்டாவதே!' என்று என்திறத்தில் இரங்காமல் |
| நீள் இரவும் துஞ்சுவர் | நீண்ட இராமுழுவதும் உறங்காநிற்பர்கள்; |
| ஆல் | அந்தோ!; |
| கார் அன்னமேனி | மேகத்தையொத்த திருமேனியையுடைய |
| நம் கண்ணனும் | நமது கண்ணபிரானும் |
| வாரான் | வந்து முகம் காட்டுகின்றிலன்; |
| வல் வினையேன் பின் நின்று | பெரும்பாவியான நான் முடிந்த பின்பும் நின்று கொண்டு |
| பேர் என்னை மாயாது | என் பேர் என்னை முடியவொட்டுகிறதில்லை; |
| என்னை ஆராய்வார் ஆர் | என்னைப்பற்றிச் சிந்திப்பார் ஆருமில்லையே! |

* * *—துயருறுங்காலத்திலே உதவக்கடவரான அன்னையரும் தோழிமாரும் ஆராயாதே கிடக்கின்றார்கள்; அவர்கள் உதவாதபோது வந்து உதவக் கடவனான கண்ணபிரானும் வருகின்றிலன்; இனி என் பெயரே மிக்கிருப்பது என்கிறாள். உலகத்தையெல்லாம் ஆராயப் பிறந்த ஆழ்வார் தமது திருவாக்காலே தம்மைப்பற்றி "ஆரென்னையாராய்வார்" என்னும்படியாவதே! இது ஒரு விலக்ஷணமான நோய்போலும். வல்வினையேன் பின்னின்று பேர் என்னை மாயாது—இது பரமபோக்யமான வார்த்தை; நான் முடிந்தாலும் என்பேர் முடிகிறதில்லையென்கிறாராழ்வார். அவருடைய திருமேனி என்றைக்கோ போனாலும் பல்லூழியூழி தோறும் போகாதே நிற்பதன்றோ திருநாமம். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;— "ஆழ்வாருடைய திருநாமம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸத்தா ஹேதுவானாப்போலே இவர் தமக்கும் ஸத்தா ஹேதுவானபடி. அடியுடைய பேராகையாலே ஸர்வர்க்கும் தாரகமாயிருக்குமே. இவினுடைய அடியுடைமையிறே எல்லாரும் சிரஸாவஹிக்கிறது." வல்வினையேனான என்னுடைய பேரானது நான் மாய்ந்துபோனாலும் எனக்குப் பின்னேயும் நின்றுகொண்டு என்னை மாய்ந்தேனாக வொட்டுகிறதில்லை என்றபடி. என் பெயரே மிச்சமாம்படி நான் முடிந்து போகா நின்றேனென்கை பரமதாற்பர்யம். "வல்வினையேன் பின்னின்று" என்பதை "ஆரென்னையாராய்வார்" என்றதோடேகூட்டி, எனக்குத் துணைநின்று என்னை ஆராய்வாரார் என்பதாகவும் உரைக்கலாமென்பர் பன்னீராயிரவுரைகாரர். (ரு)

3155 பின்னின்றகாதல்நோய் நெஞ்சம்பெரிதடுமால் *
முன்னின்றிராவூழி கண்புதையமூடிற்றால் *
மன்னின்றசக்கரத்து எம்மாயவனும்வாரானால் *
இந்நின்றநீளாவி காப்பாராரிவ்விடத்தே? (சு)

| பதம் | பொருள் |
|---|---|
| பின் நின்ற காதல் நோய் | பிடரிபிடித்துத்தள்ளுவதற்காகப்பின்தொடர்ந்து நிற்கிற ப்ரேம வியாதியானது |
| நெஞ்சம் பெரிது அடும் | (தனக்குப்பிறப்பிடமான) நெஞ்சை மிகவும் அழிக்கின்றது; |
| ஆல் | அந்தோ!, |
| இரா ஊழி | இரவாகிற கல்பமானது |
| முன் நின்று | முன்னேயிருந்து |
| கண் புதைய | கண்தெரியாதபடி |
| மூடிற்று | மறைத்தது; |
| ஆல் | அந்தோ; |
| மன் நின்ற சக்கரத்து | எப்போதும் கைகழலாது நின்ற திருவாழியாழ்வானையுடைய |
| எம் மாயவனும் | எம்பிரானும் |
| வாரான் | வருகின்றிலன்; |
| ஆல் | ஆதலால், |
| நின்ற நீள் இ ஆவி | முடியாதே நின்று நீள்கின்ற இவ்வுயிரை |
| இவ்விடத்து | இந்த நிலைமையில் |
| காப்பார் ஆர் | ரக்ஷிப்பாரார்?. |

* * *—முதலடிக்குப் பொருளருளிச்செய்யாநின்ற திருக்குருகைப்பிரான்பிள்ளான் ஆறாயிரப்படியில்—"முடிந்தபின்பும் செல்லுகிற விச்லேஷவ்யஸநம் ஒன்றும் பொறுக்கலாயிருக்கிறதில்லை" என்றருளிச்செய்திருக்கையாலே, பின்னின்ற என்பதற்கு, பின்னேயும் நிற்கின்ற (அதாவது) நான் மரணமடைந்த பின்னையும் நலிவதாக நிற்கின்ற என்று பொருள் திருவுள்ளம் பற்றியதாக விளங்குகின்றது. 'பிடரி பிடித்துத் தள்ளுவாரைப்போலே பின்னே நின்று குமுக்குகின்ற காதல் நோய் என்பது நம்பிள்ளையருளிச்செய்த பொருள். 'மரணமடைந்த பின்னையும் நிற்கின்ற காதல் நோய்' என்றால் இது எங்ஙனே பொருந்துமென்று சிலர் சங்கிக்கக்கூடும்; 'நான் முடிந்தாலும் என் காதல் முடியாது போலிருக்கிறது' என்று சொல்வது உலகத்திலுமுண்டே; அதுவாயிற்று இங்கு விவக்ஷிதம். (சு)

3156 காப்பாராரிவ்விடத்து? கங்கிருளின்நுண்துளியாய் *
சேட்பாலதூழியாய்ச் செல்கின்றகங்குல்வாய் *
தூப்பாலவெண்சங்கு சக்கரத்தன்தோன்றுனல் *
தீப்பாலவல்வினையேன் தெய்வங்காள்! என்செய்கேனே? (எ)

| | |
|---|---|
| இவ்விடத்து காப்பார் ஆர் | இந்நிலைமையில் ரக்ஷிப்பாரார்? |
| கங்கு இருளின் | நன்ருகச் செறிந்த இருளை யுடைத்தாயும் |
| நுண் துளி ஆய் | நுண்ணிதான பனித்துளியை யுடைத்தாயும் |
| சேண் பாலது ஊழி ஆய் | மிகநீண்டிருப்பதான கல்பமாய்க்கொண்டு |
| செல்கின்ற கங்குல் வாய் | செல்லாநிற்கிற ராத்திரியிடத்து |
| தூ பால வெண் சங்கு சக்கரத்தன் | அழுக்கற்ற ஸ்வபாவத்தையுடையதாய் வெளுத்ததான சங்கையும் சக்கரத்தையுமுடையனவன் |
| தோன்ருன் | தோன்றிக் காட்சி தருகின்றிலன்; |
| தெய்வங்காள் | தேவதைகளே! |
| தீ பால வல்வினையேன் | மிகக்கொடிய பாவங்களையுடையேனுன நான் |
| என் செய்கேன் | என்ன பண்ணுவேன்?. |

* * *—இப்பேரிருளிலே என்செய்வேனென்று, உறங்காத தெய்வங்களைக் குறித்து முறையிடுகின்ருள். காப்பாரார் இவ்விடத்து=ரக்ஷகனென்று பேர்பெற்றிருக்கும் பெருமான் தானும் ரக்ஷியாதே உபேக்ஷித்திருக்குமிக்காலத்திலே வேறு ரக்ஷகரைத் தேடப்போமோ? கங்கிருளின் நுண் துளியாய்=தடித்த இருளும் நுட்பமான பனித்துளியுமாய் என்றபடி. கங்கு என்று எல்லை நிலத்திற்குப் பேராகையாலே எல்லை நிலமாகச் செறிந்த இருள் என்றதாயிற்று. சேட்பாலது ஊழியாய்=நீண்டு பெருகிச் செல்லுந் தன்மையதான கல்ப காலமாகி என்றபடி. இப்படிச் செல்லா நின்ற காலத்திலே *சங்கும் சக்கரமும் சிரித்த முகமும் தொங்கும் பதக்கங்களுமாய் எங்குங் கண்டறியாத ஸேவையுடனே நங்கள் பிரான் தோன்றவேணுமே; அந்தோ! தோன்றியருளவில்லையே!, இங்ஙனே அவன் உபேக்ஷிக்கும்படி என்ன பாபம் பண்ணினேன்! தெய்வங்களே! என் செய்வேன்? சொல்லுங்கோளென்கிருள். தேவதைகள் உறங்காதவர்கள், தானும் உறங்காதவள்; இந்த ஸாம்யத்தையிட்டு அவர்களோடு உறவு கொண்டாடிக் கேட்கிருள் போலும். துயருற்ற காலத்திலே அம்மே! என்பாரைப் போலே தெய்வங்காளென்றதும் ஒரு வார்த்தைப்பாடு. (எ)

3157 தெய்வங்காள் என்செய்கேன்? ஓரிரவேழூழியாய் *
மெய்வந்துநின்று எனதாவிமேலிவிக்கும் *
கைவந்தசக்கரத்து என்கண்ணனும்வாரானல் *
தைவந்ததண்தேன்றல் வெஞ்சுடரில்தானடுமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| தெய்வங்காள் | தெய்வங்களே! | என் கண்ணனும் | எனது கண்ணபிரானும் |
| ஓர் இரவு ஏழ் ஊழி ஆய் | ஒரு இராப்பொழுதானது ஏழு கல்பமாய்க்கொண்டு | வாரான் | வருகின்றிலன்; |
| மெய் வந்து நின்று எனது ஆவிமெலிவிக்கும் | மெய்யே முன்னேவந்து நின்று என்னுடைய உயிரை இளைக்கப்பண்ணுகின்றது; | தைவந்த தண் தென்றல் | தடவுகிறாப்போலிருக்கின்ற குளிர்ந்த தென்றலானது |
| கை வந்த சக்கரத்து | கையிலே ஸஜ்ஜமாயிருக்கின்ற திருவாழியாழ்வானையுடைய | வெம் சுடரில் அடும் | வெவ்விய நெருப்பிற்காட்டிலும் அதிகமாகச் சுடா நின்றது. |
| | | என் செய்கேன் | என்னபண்ணுவேன்?. |

* * *—தென்றலோ நலியாநின்றது, கண்ணனோ வருகின்றிலன்; என் செய்வேனென்று மீண்டும் தெய்வங்களையே நோக்கி முறையிடுகின்றாள். ஓரிரவு ஏழூழியாய்= ஸௌபரி போகத்துக்காகப் பல வடிவுகள் கொண்டாப்போல இரவு நலிவதற்காகப் பல வடிவுகள் கொள்ளா நின்றது போலும். மெய் வந்து நின்று எனதாவிமெலிவிக்கும்=இராவணன் இடம் பார்த்து வந்து நலிந்தாப்போலே இதுவும் விரஹதசையறிந்து வந்து ஹிம்ஸிக்கின்றது. இவ்விடத்து ஈட்டில், "மோர்க்குழம்பு கொடுத்துத் தேற்றி விடுகங் கட்டி நலிவாரைப்போலே" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. முற்காலத்தில் பெருங்குற்றவாளர்களை முக்கோணங்கட்டியடிக்கும்போது அவர்கள் மிகவும் தணறிப்போனவாறே சிறிது ஸாத்மிக்கும்படி மோர்க்குழம்பு முதலியன கொடுத்துத் தேறுதலுண்டாக்கிப் பிறகு கிட்டிக்கோல் போட்டு ஹிம்ஸிப்பர்கள், அதைச் சொன்னபடி. விடுகம்—கிட்டிக்கோல்.

கைவந்த-விதேயமான என்றபடி. தைவந்த-தடவுகின்ற என்றபடி. (அ)

3158 வெஞ்சுடரில்தானடுமால் வீங்கிருளின்நுண்துளியாய் *
அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர்தோன்றாதால் *
செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனும்வாரானால் *
நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்? நின்றுருகுகின்றேனே, (கூ)

| | | | |
|---|---|---|---|
| வீங்கு இருளின் | மிகச் செறிந்த இருளையுடைத்தாய் | செம் சுடர் தாமரை கண் செல்வனும் வாரான் | சிவந்த காந்தியையுடைய தாமரை போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீமானும் வந்து தோன்றவில்லை; |
| நுண் துளி ஆய் | நுண்ணிய பனித்துளியையுடைத்தாய்க்கொண்டு | | |
| தான் வெம் சுடரில் அடும் | இராப்பொழுதானது வெவ்விய நெருப்பிற்காட்டில்சுடாநின்றது | ஆல் | ஆதலால் |
| ஆல் | அந்தோ!, (இந்த நிலைமையில்) | நின்று உருகுகின்றேன் | நிரந்தரமாக உருகா நின்றேன்; |
| அம் சுடர வெய்யோன் | அழகிய ஒளியையுடையனான ஸூரியனுடைய | | |
| அணி நெடு தேர் தோன்றாது | அழகிய பெரிய தேரும் தென்படவில்லை; | இனி நெஞ்சு இடர் தீர்ப்பார் ஆர் | இந்நிலைமையில் (எனது) மனத்துயரைப் போக்குவாரார்?. |

* * *—இரவோ மிகவும் நலியா நின்றது; ஆதித்யனும் ஆவிர்ப்பவிக்கின்றிலன்; எம்பெருமானும் வந்து தோன்றுகின்றிலன்; நான் நின்று நோவுபடுமித்தனை போக்கி என் பாதையைப் போக்குவார் ஆருமில்லையே யென்கிறாள். இராவணன் மாரீசனைத் துணை கொண்டு வந்து நலிந்தாப்போலே இராப்பொழுதானது நுண்ணிய பனித்துளியைத் துணை கொண்டு வந்து வெவ்விய நெருப்பிற்காட்டிலும் அதிகமாகவே நலியா நின்றது; எப்படிப் பட்ட துக்கமும் இரவி தோன்றினவாறே சிறிது மறைந்தொழியுமே; அந்த இரவியின் தேர் தானும் வந்து தோன்றக் காணோமே!. ஆர்த்திமிக்கால் செந்தாமரைக் கண்ணனான எம்பெருமான் வந்து தோன்றுவதென்று ஒரு முறைமையுண்டு; அப்படி அவனும் வந்து தோன்றிற்றிலன்; இனி எனது மனத்துயரை மாய்ப்பாரார்? நானோ நீர்ப்பண்டமாயுருகி யொழியா நின்றேன் என்கிறாள்.

(கூ)

3159 நின்றுருகுகின்றேனேபோல நெடுவானம் *
சென்றுருகிநுண்துளியாய்ச் செல்கின்றகங்குல்வாய் *
அன்றொருகால்வையம் அளந்தபிரான்வாரானென்று *
ஒன்றொருகால்சொல்லாது உலகோவுறங்குமே. (ம)

| | | | |
|---|---|---|---|
| நின்று உருகுகின்றேன் போல | நிரந்தரமாக உருகிக்கிடக்கிற என்னைப்போலே | அளந்த | அளந்து ஆக்ரமித்துக்கொண்ட |
| | | பிரான் | எம்பெருமான் |
| நெடு வானம் | பரந்த ஆகாசமானது | வாரான் என்று | வரமாட்டானென்றுகிலும் |
| உருகி சென்று | உருகிப்போய் (அதனால்) | ஒன்று | ஒரு வார்த்தையை |
| நுண் துளி ஆய் | நுண்ணிய பனித்துளியாய் | ஒருகால் சொல்லாது | ஒருதரமேனும் சொல்லாமல் |
| செல்கின்ற | நடந்து வருகின்ற | | |
| கங்குல் வாய் | இராப்பொழுதிலே, | | |
| அன்று ஒரு கால் | முன்பொரு காலத்திலே | உலகு உறங்கும் ஓ | லோகமானது உறங்குகின்றதே! ஐயோ! |
| வையம் | உலகத்தை | | |

* * *—அந்தோ! நான் இப்பாடுபடா நிற்க இவ்வுலகில் எனக்குத் தேறுதல் கூறுவாருமிலரே! எல்லாரு முறங்கா நின்றார்களே! என்கிறாள். ஆகாசமானது இடைவிடாமல் பனித்துளியாய் இற்று விழாநின்றதென்று சொல்லப்புகுந்து அதற்குத் தன்னையே த்ருஷ்டாந்தமாக்குகிறாள் 'நின்றுருகுகின்றேனே போல' என்று. கீழே * வாயுந்திரையுகளில் "தோழியரும் யாமும்போல் நீராய் நெகிழ்கின்ற—வானமே!" என்றதை இங்கு நினைப்பது. நீர்ப்பண்டமாக உருகுகின்ற என்னைப்போலே நுண் துளியாய் இற்று உருகா நின்றதாயிற்று நெடுவானம் என்கிறாள். இப்படிப்பட்ட காலத்திலே உசாத்துணையாவார் சிலரிருந்தால் ஒருவாறு கதைகேட்டுப் போதுபோக்கித் தரிக்கலாமே. உலகளந்த பெருமாள் கதையை யெடுத்துக்கூறித் தரிப்பிக்கவுமாம், அல்லது அந்த வஞ்சகன் நமக்கும் வஞ்சகனேயாவன் என்றுசொல்லி ஆசையையறுக்கவுமாம்; ஏதேனுமொன்றைச் சொல்லலாமே உலகம்; அந்தோ! ஒன்றும் சொல்லாதே உறங்கா நின்றதே!. (ம)

3160 உறங்குவான்போல் யோகுசெய்தபெருமானை *
சிறந்தபொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொல் *
நிறம்கிளர்ந்தவந்தாதி ஆயிரத்திப்பத்தால் *
இறந்துபோய்வைகுந்தம் சேராவாறெங்ஙனேயோ. (கக)

| | | | |
|---|---|---|---|
| உறங்குவான்போல் | நித்திரை செய்பவன்போல | நிறம் கிளர்ந்த அந்தாதி ஆயிரத்துள் இப் பத்தால் | பண்விஞ்சினஅந்தாதித் தொடையான ஆயிரம் பாசுரங்களுள் இப்பதிகத்தினால், |
| யோகு செய்த | ரக்ஷணோபாய சிந்தை பண்ணிக்கொண்டிருக்கிற | | |
| பெருமானை | எம்பெருமான் விஷயமாக, | இறந்து போய் | (அவரவர்கள்) சரீர வியோகம் பெற்றபின்பு |
| சிறந்த பொழில் சூழ் குருகூர் சடகோபன் | அழகிய சோலைகளாலே சூழப்பட்ட திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் | வைகுந்தம் சேரா ஆறு எங்ஙனே | பரமபதத்திலே புகாதொழிவது எவ்வண்ணம்? (புகவே புகுவர்களென்கை.) |
| சொல் | அருளிச் செய்த | | |

* * *—'இப்பத்தால் வைகுந்தம் சேராவாறு' என்று அந்வயித்துக்கொள்ளவேணும். அவரவர்கள் ப்ராப்த காலத்தில் இறந்துபோவது எப்படியுமுள்ளது; அப்படி இறக்க நேருங் காலத்தில் இப்பதிகத்தின் பயனாகப் பரமபத ப்ராப்தி தவிராதென்றவாறு. (கக)



# ஐந்தாம்பத்து ஐந்தாந் திருவாய்மொழி—எங்ஙனேயோவன்னைமீர்காள்.



உருவெளிப்பாடு என்பதொன்றுண்டு; அதாவது மாநஸ ஸாக்ஷாத்காரம். கண்ணுக்கு ப்ரத்யக்ஷமாகத் தோற்றுமே நெஞ்சுக்கு ஸாக்ஷாத்கார விஷயமாகை. அது இத்திருவாய் மொழியில் செல்லா நின்றது. இது பிராட்டி நிலைமையிலே நின்று பேசுந் திருவாய்மொழி. தாய்மார் தலைமகட்கு அடைவு சொல்லி மீட்கப்பார்க்க, தலைமகள் 'எனக்கோ நீங்கள் அடைவு சொல்லுவது? திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகிலே நெஞ்சு பறியுண்டு கிடக்கு மென்னை நீங்கள் அடக்கப்பார்ப்பது முறையல்ல' என்று சொல்லுகிறபடியைச் சொல்லுகிறது.

3161 எங்ஙனேயோவன்னைமீர்காள்! என்னைமுனிவதுநீர்? *
நங்கள்கோலத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
சங்கினோடும்நேமியோடும் தாமரைக்கண்களோடும் *
செங்கனிவாயொன்றினோடும் செல்கின்றதென்னெஞ்சமே. (க)

| பதம் | பொருள் |
|---|---|
| அன்னைமீர்காள் | தாய்மார்களே! |
| நீர் என்னை முனிவது | நீங்கள் என்னைச் சீறுவது |
| எங்ஙனேயோ | எப்படிப்பொருந்தும்? |
| நங்கள் | நாம் அனுபவிப்பதற்குரிய |
| கோலம் | அழகிய |
| திருக்குறுங் குடி நம்பியை | திருக்குறுங்குடிப் பெருமானை |
| நான் கண்ட பின் | நான் ஸேவிக்கப்பெற்ற பின்பு, |
| என் நெஞ்சம் | என் மனமானது |
| சங்கினோடும் நேமியோடும் | சங்கு சக்கரங்களோடும் |
| தாமரை கண்களோடும் | தாமரைபோன்ற திருக்கண்களோடும் |
| செம் கனி வாய் ஒன்றினோடும் | சிவந்த கனி போன்று ஒப்பற்ற தான அதரத்தோடும் |
| செல்கின்றது | நடவா நின்றது. [என்னெஞ்சில் இவையே திகழ்கின்றன வென்றபடி.] |

* * *—தாய்மார்களே! என்னை நீங்கள் சீறுவது எதற்கு? சீறிப்பயனென்? வேணு மாகில் திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகைச் சீறுங்கோள்; 'எதுக்கு நீ இப்படிப்பட்ட வடிவழகு கொண்டாய்?' என்று நம்பியைச் சீறில் சீறுமத்தனை யொழிய என்னைச் சீறுவது முறைமையன்று. நான் ஏதேனும் ஒரு காபுருஷனைக் கண்டு மோஹித்துப் படுகிறேனோ? அழகுதானே உருக்கொண்ட திருக்குறுங்குடி நம்பியையன்றோ நான் ஸேவிக்கப் பெற்றது. அப்படி ஸேவிக்கப்பெற்ற க்ஷணமே தொடங்கிச் சங்கும் சக்கரமும் செந்தாமரைக் கண் களும் செங்கனிவாயுமே என் முன்னே தோன்றுகிறக, நான் அவற்றை வாய் வெருவாதே பின்னை எதை வாய்வெருவுவேன்? ஆதலால் என்னை நீங்கள் முனிவது முறைமையன்று என்றாளாயிற்று. (க)

3162 என்னெஞ்சினால்நோக்கிக்காணீர் என்னைமுனியாதே *
தென்னன்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
மின்னுநூலும்குண்டலமும் மார்வில்திருமறுவும் *
மன்னுபூணும்நான்குதோளும் வந்தெங்கும்நின்றிடுமே. (உ)

| பதம் | பொருள் |
|---|---|
| (அன்னைமீர்காள்) | தாய்மார்களே! |
| என்னை முனியாதே | என்னை வீணாகச் சீறாமல் |
| என் நெஞ்சினால் | எனது நெஞ்சைக் கொண்டு |
| நோக்கி காணீர் | அநுபவித்துப் பாருங்கோள்; |
| தென் நல் சோலை திருக் குறுங்குடி நம்பியை நான் கண்டபின்—; | |
| மின்னும் நூலும் | பளபள வென்று ஜ்வலிக்கிற பூணூலும் |
| குண்டலமும் | மகர குண்டலமும் |
| மார்வில் திரு மறுவும் | திருமார்பிலே விளங்குகின்ற ஸ்ரீவத்ஸமும் |
| மன்னு பூணும் | எப்போதும் கழற்றாத ஆபரணங்களும் |
| நான்கு தோளும் | சதுர்ப்புஜமும் |
| எங்கும் வந்து நின்றிடும் | நான் போமிடமெங்கும் வந்து நிற்கின்றன. |

* * *—'பெண்ணே! திருக்குறுங்குடி நம்பியை நீ மாத்திரமேயோ கண்டது; நாங்கள் கண்டதில்லையோ? நாங்களும் ஸேவித்தே யிருக்கிறோம்; ஆனாலும் உனக்கு இப்படிப்பட்ட முறைகேடு ஆகாது' என்று தாய்மார் சொல்ல, அதற்குத் தலைமகள் கூறுகின்றாள். "என்னெஞ்சினால் நோக்கிக்காணீர்" என்று. என்னெஞ்சை இரவலாக வாங்கி வைத்துக்கொண்டு நீங்கள் நம்பியை ஸேவித்தீர்களாகில் இங்ஙனே என்னைப் பொடியமாட்டீர்களென்கை. நீ கண்ட காட்சிக்கு வாசியென்? என்று தாய்மார் கேட்க, நம்பியை நான் கண்டபின், மேகத்திலே மின்னினைப்போலேயிருக்கிற யஜ்ஞோபவீதமும், பரந்தமின் ஓரிடத்திலே சுழித்தாற்போலேயிருக்கிற மகர குண்டலமும், வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியிருக்கிற திருமார்பிலேகிடக்கிற ஸ்ரீவத்ஸமும் திருவாபரணங்களும் திருத்தோள்களும் சுற்றும் வந்து என்னை நெருக்கா நின்றனவே! இதுவாயிற்று நான் கண்ட காட்சிக்கு வாசியென்கிறாள். (உ)

3163 நின்றிடும்திசைக்கும்நையுமென்று அன்னையரும்முனிதிர் *
குன்றமாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
வென்றிவில்லும்தண்டும்வாளும் சக்கரமும்சங்கமும் *
நின்றுதோன்றிக்கண்ணுள்நீங்கா நெஞ்சுள்ளும்நீங்காவே. (ங)

அன்னையரும் — தாய்மாரான நீங்களும் (என்னைப்பற்றி)
நின்றிடும் என்று — இப்பெண் ஸ்தப்தையாய் நிற்கிறாளென்று சொல்லியும்
திசைக்கும் என்று — இப்பெண் அறிவழிந்து கிடக்கிறாளென்று சொல்லியும்
நையும் என்று — இப்பெண் நைகின்றாளென்று சொல்லியும்
முனிதிர் — வெறுத்துரைக்கின்றீர்கள்;
குன்றம் மாடம் — குன்றம்போன்ற மாடங்களணிந்த
திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—;
வென்றி வில்லும் — ஜயசீலமான சார்ங்கமும்
தண்டும் — கௌமோதகியென்கிற கதையும்
வாளும் — நந்தகவாளும்
சக்கரமும் சங்கமும் - திருவாழி திருச்சங்குகளும்
நின்று — நிரந்தரமாக நின்று
கண்ணுள்தோன்றி—என் கண்ணுள்ளே காணப்பட்டு
நீங்கா — நீங்குகின்றனவில்லை;
நெஞ்சுள்ளும் — நெஞ்சினுள்ளும்
நீங்கா — நீங்குகின்றனவில்லை.

* * *—நம்பியழகை நினைத்துச் சற்றுப்போது ஸ்தம்பித்து நிற்பது, பின்னை அறிவு கெட்டு அசேதநவஸ்துபோலே நிற்பது, உருகி நிற்பது இப்படியான நிலைமைகளைத் தலைமகள் அடைந்து வாரா நிற்க, தாய்மார் இதைச் சொல்லிச் சொல்லிப் பழிதூற்றத் தொடங்கினார்கள்; அதற்குத் தலைமகளுரைக்கின்றாள்; நான் ஒரு வ்யர்பாரக்ஷமையன்றியே ஸ்தப்தையாய் நிற்பது வாஸ்தவம்; அறிவழிந்து நிற்பதும் வாஸ்தவம்; நைந்து கிடப்பதும் வாஸ்தவம்' இதற்காக நீங்கள் சீறுகைக்கு என்ன ப்ரஸக்தியுண்டு? குன்றம்போல் மணிமாட நீடு திருக்குறுங்குடி நம்பியை நான் ஸேவித்தது போல நீங்களும் ஸேவிக்கப்பெற்றாலன்றோ தெரியும். * வ்ருக்ஷேவ்ருக்ஷே ச பஶ்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம்—வ்ருக்ஷே வ்ருக்ஷேச பச்யாமி சீரக்ருஷ்ணஜிநாம்பரம் * என்ற மாரீசனுடைய நிலைமையன்றோ எனக்குமாயிற்று. எம்பெருமானுடைய பஞ்சாயுதங்களே யன்றோ என்னைச் சூழ்ந்து கிடக்கின்றன. இந்த நிலைமை உங்களுக்கு உண்டானால் நீங்களும் நின்றிடுவீர், திசைப்பீர், நைவீர்; வீணாக என்னை ஏதுக்குப் பொடிகிறீர்கள்? என்றாளாயிற்று. (ங)

3164 நீங்கநில்லாகண்ணநீர்களென்று அன்னையரும்முனிதிர் *
தேங்கோள்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
பூந்தண்மாலைத்தண்துழாயும் பொன்முடியும்வடிவும் *
பாங்குதோன்றும்பட்டும்நாணும் பாவியேன்பக்கத்தவே (ச)

கண்ண நீர்கள் — '(இவளது) கண்ணீர்த் துளிகளானவை
நீங்க கில்லா என்று — துடைத்தாலும் நிற்கின்றன வில்லை' என்று சொல்லி
அன்னையரும் முனிதிர் — தாய்மார்களான நீங்களும் சீறுகின்றீர்கள்;
தேன் கொள் சோலைத் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—;
பூ — அழகிய
தண் — குளிர்ந்த
மாலை — மாலைவடிவமான
தண் துழாயும் — திருத்துழாயும்
பொன் முடியும் — திருவபிஷேகமும்
வடிவும் — திருமேனியும்
பாங்கு தோன்றும் — திருவரைக்குப் பொருத்தமாகக் காணப்படுகிற
பட்டும் — பட்டுப்பீதாம்பரமும்
நாணும் — திருவரைநாணும்
பாவியேன் பக்கத்த — பாவியான என்னுடைய பக்கத்திலேயேயுள்ளன.

* * *—கண்ணீர் ஆனந்தத்தாலுமாகலாம், சோகத்தாலுமாகலாம்; உரு வெளிப்பாடாய்த் தோற்றுகையாலே ஆனந்தமுள்ளது; அநுபவிக்கக்கிடையாமையாலே சோகமுமுள்ளது. அது தோன்றவே 'பாவியேன்' என்றது. (ச)

3165 பக்கம்நோக்கிநிற்கும்நையுமென்று அன்னையரும்முனிதிர் *
தக்ககீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
தொக்கசோதித்தொண்டைவாயும் நீண்டபுருவங்களும் *
தக்கதாமரைக்கண்ணும் பாவியேனுவியின்மேலனவே. (ரு)

பக்கம் நோக்கி நிற்கும் என்று — '(இவள்) அவன் எந்த பக்கமாக வருகின்றானென்று எதிர்பார்த்திருக்கின்றாளென்றும்,
நையும் என்று — (வரக்காணாமையாலே) நைகின்றாள் என்றும் சொல்லி
அன்னையரும் — தாய்மாரான நீங்களும்
முனிதிர் — முனிந்து பேசுகின்றீர்கள்;
தக்க கீர்த்தித் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின்—;
தொக்க சோதி தொண்டை வாயும் — ஒன்றாகத்திரண்ட சோதியையுடைய கொவ்வைக்கனி போன்ற அதரமும்
நீண்ட புருவங்களும் — நீண்டிருக்கின்ற புருவங்களும்
தக்க தாமரை கண்ணும் — தகுதியான தாமரைபோன்ற திருக்கண்களும்
பாவியேன் ஆவியின் மேலன — பாவியான என்னுடைய உயிர் நிலையிலே நின்று நலியாநின்றன.

* * *—எம்பெருமான் எழுந்தருள்வதற்கு ஸம்பாவனையுள்ள பக்கங்களிலேயே பராங்குச நாயகியின் கண்ணோக்கம் செல்லுகின்றபடியால் அதைக்கண்டு தாய்மார்கள் முனிகின்றார்கள்; அந்தோ! இப்படியும் முனியலாமோவென்கிறாள் தலைவி. (ரு)

3166 மேலும்வன்பழிநங்குடிக்கிவளென்று அன்னைகாணகொடாள் *
சோலைசூழ்தண்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
கோலநீள்கொடிமூக்கும் தாமரைக்கண்ணும்கனிவாயும் *
நீலமேனியும்நான்குதோளும் என்னெஞ்சம்நிறைந்தனவே. (சா)

இவள் — 'இப்பெண்பிள்ளை
நம் குடிக்கு — தமது ப்ரபந்நஸந்தானத்திற்கு
மேலும் — காலமுள்ளதனையும்
வன் பழி என்று — பெருத்த பழியாயிருப்பவள்' என்று சொல்லி
அன்னை — தாயானவள்
காண கொடாள் — நான் நம்பியைஸேவிக்கவொண்ணாதபடி தடைநிற்கின்றாள்!
சோலை சூழ் தண் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—;
கோலம் நீள் கொடி மூக்கும் — அழகியதாய் நீண்டதான கற்பகக் கொடிபோன்ற திருமூக்கும்
தாமரை கண்ணும் — தாமரை போன்ற திருக்கண்களும்
கனி வாயும் — பழுத்த பழம்போன்ற அதரமும்
நீலம் மேனியும் — நீலநிறத்ததான திருமேனியும்
நான்கு தோளும் — நான்கு திருத்தோள்களும்
என் நெஞ்சம் நிறைந்தன — எனது நெஞ்சிலே நிரம்பியிருக்கின்றன.

* * *—படி கடவாப் பத்தினியாயிருக்கவேண்டிய இவள் படிகடந்து நடக்கின்றாளாதலால் நம் குடிக்கு இவள் பெரும்பழியை விளைப்பவளாயிராநின்றாளென்று கருதித் தாய்மார்கள் 'இனி இவள் திருக்குறுங்குடி நம்பியைக் காணவொண்ணாதபடி செய்துவிடுவதே கருமம்' என்று பேசிக்கொள்ளுகின்றார்கள்: அந்தோ! தண்ணீர் பெருகிச் சென்றபின்பு அணைகட்டப் பாரிக்குமாபோலே யிராநின்றதாயிற்று இது; திருக்குறுங்குடி நம்பியை நான் காணப்பெறுவதற்கு முன்னே இவர்கள் சேமித்திருக்கவேணும்; அது செய்யாதே இன்று மறுக்கப் பார்க்குமிவர்கட்குப் பயன் யாதாகுமோ? நான் நம்பியை ஸேவிக்கப்பெற்ற நாள் தொடங்கி, அப்பெருமானது திருமூக்கும் திருக்கண்ணும் திருவாயும் திருமேனியும் திருத்தோள்களுமே என்னெஞ்சை இடமடைத்துக்கொண்டு கிடக்க இவர்களுடைய நிபந்தனைகள் இனி என்னாவது என்கிறாள். (சா)

3167 நிறைந்தவன்பழிநங்குடிக்கிவளென்று அன்னைகாணகொடாள் *
சிறந்தகீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
நிறைந்தசோதிவெள்ளம்சூழ்ந்த நீண்டபொன்மேனியோடும் *
நிறைந்தென்னுள்ளேநின்றொழிந்தான் நேமியங்கையுளதே. (எ)

| | |
|---|---|
| இவள் நம் குடிக்கு நிறைந்த வல் பழி என்று | 'இப்பெண்பிள்ளை நம்முடைய ப்ரபந்த ஸந்தானத்திற்கு நிலைத்து நிற்கக் கூடிய கொடியபழியாயிருப்பவள்; என்று சொல்லி |
| அன்னை காண கொடாள் | தாயானவள் நம்பியை ஸேவிக்க வொட்டுகிறதில்லை; |
| சிறந்த கீர்த்தித் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—; | |
| நிறைந்த | பரிபூர்ணமான |
| சோதி வெள்ளம் சூழ்ந்த | தேஜஸ்ஸமூஹத்தாலே சூழப்பட்டு |
| நீண்ட பொன் மேனியொடும் | உத்துங்கமான திருமேனியோடு கூட |
| என் உள்ளே நிறைந்து நின்று ஒழிந்தான் | எனது நெஞ்சுக்குள்ளே வியாபித்து நின்றுவிட்டான்; |
| நேமி அம் கை உளது | திருவாழியும் அழகிய திருக்கையிலே உள்ளதாயிருக்கின்றது. |

* * *—கீழ்ப்பாட்டிலே 'நம் குடிக்கு இவள் வன்பழி' என்று சொல்லித் தாய்மார் முனிந்தமை சொல்லிற்று. "மனக்குற்ற மாந்தர் பழிக்கில் புகழ்!' என்றபடியே பழியையே பரமபோக்யமாகக் கொள்ளுமவளாகையாலே, தாய்மார் பழிக்கப் பழிக்க, தலைமகளினுடைய அதிப்ரவ்ருத்தி அதிகரிக்கத் தொடங்கிற்று; அதனால் "நிறைந்த வன்பழி நங்குடிக்கு இவள் என்று பின்னையும் கைசுடுக்கி வையத் தொடங்கினாள் தாய்; அது கண்டு தலைவி சொல்லுகிறாள்; நிறைந்த சோதிவெள்ளஞ் சூழ்ந்த விலக்ஷணமான திருமேனியழகும், அல்லாத அழகிற்காட்டில் கையுந் திருவாழியுமான அழகும் என்னெஞ்சிலே வேர் விழுந்தனவானபின்பு, பழியென்றாலென்? பாவமென்றாலென்? நானேசிளைப்பது என்கிறாள். (எ)

3168 கையுள்நன்முகம்வைக்கும்நையுமென்று அன்னையரும்முனிதிர் *
மைகொள்மாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
செய்யதாமரைக்கண்ணுமல்குலும் சிற்றிடையும்வடிவும் *
மொய்யநீள்குழல்தாழ்ந்ததோள்களும் பாவியேன்முன்னிற்குமே. (அ)

| | |
|---|---|
| நல் முகம் கையுள் வைக்கும் என்று | '(இப்பெண்பிள்ளையானவள்) அழகிய முகத்தைக் கையிலே இட்டுவைக்கின்றாள்' என்றும் |
| நையும் என்று | நைகின்றாள் என்றும் சொல்லி |
| அன்னையரும் | தாய்மாரான நீங்களும் |
| முனிதிர் | சீறிப் பொடிகின்றீர்கள்; |
| மை கொள் மாடத் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—; | |
| செய்ய தாமரை கண்ணும் | செந்தாமரை போன்ற திருக்கண்களும் |
| அல்குலும் | கடிப்ரதேசமும் |
| சிறு இடையும் | சிறுகின இடையும் |
| வடிவும் | திருமேனியும் |

| | | | |
|---|---|---|---|
| மொய்ய நீள் குழல்தாழ்ந்த தோள்களும் | செறிந்து நீண்ட கேசபாசங்கள் தாழ்ந்துலாவப்பெற்ற திருத்தோள்களும் | பாவியேன் முன் நிற்கும் | பாவியான என்னுடைய கண் முன்னே புலப்படாநின்றன. |

* * *—உலகத்தில் துக்கம் விஞ்சினால் முகத்தைக் கைத் தலத்திலே வைத்துக்கொண்டு சிந்தை கலங்கிக் கிடப்பதென்று ஒன்றுண்டு; அந்த நிலைமை பராங்குசநாயகிக்கு முண்டா யிற்று; அங்ஙனே முகத்தைக் கையிலேயிட்டுக்கொண்டு நைந்துகிடந்தாள்; அதுகண்ட தாய் மார் 'சாண் நீளச்சிறுக்கிக்கு இப்படியும் ஒரு இருப்புண்டோ?' என்று முனிய, அதற்குத் தலைவிகூறும்பாசுரமிது. (ஏ)

3169 முன்னின்றாயென்றுதோழிமார்களும் அன்னையரும்முனிதிர் *
மன்னுமாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
சென்னிநீண்முடியாதியாய உலப்பிலணிகலத்தன் *
கன்னல்பாலமுதாகிவந்து என்னெஞ்சம்கழியானே. (க)

| | | | |
|---|---|---|---|
| முன் நின்றாய் என்று | '(சிறுக்கியான நீ) பலர் காண வந்து நிற்கின்றாய்' என்று என்னை நோக்கிச்சொல்லி | சென்னி நீள் முடி ஆதி ஆய | திருமுடியிலே நீண்டு தோன்றுகிற திருவபிஷேகம் முதலாக வுள்ள |
| தோழிமார்களும் அன்னையரும் | தோழிமார்களும் தாய்மார்களுமான நீங்கள் | உலப்பு இல் அணி கலத்தன் | எண்ணிறந்த சேர்த்தியழகு பொருந்திய திருவாபரணங்களையுடைய அப்பெருமான் |
| முனிதிர் | கண்டிக்கின்றீர்கள்; | கன்னல் பால் அமுது ஆகி வந்து | கன்னலும் பாலும் அமுதமும் போலே பரம போக்யனாய் வந்து |
| மன்னு மாடத் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—; | | என் நெஞ்சம் கழியான் | எனது நெஞ்சை விட்டுப் போகின்றிலன். |

* * *—மகளிர்க்கு நாணமே பெருஞ்செல்வமாதலால் ஒருவர் கண்ணிலும் புலப் படாமே மறைந்து நிற்கை முறைமையாயிருக்க, இப்பெண்பிள்ளை பலருங்காண முன்னிற்கை யாவதென்? என்று தோழியரும் அன்னையரும் சீறுபாறென்றிருப்பது கண்ட தலைவியுரைக் கின்றாள்; திருக்குறுங்குடி நம்பியுடைய திவ்யாபரணங்கள் என்னெஞ்சைவிட்டு இறைப் பொழுதுமகலாமல் முன்னே தோன்றா நிற்க, நான் பின்னே நிற்பது எங்ஙனம்? நாண் மடமச்சமெல்லாம் பெயர்ந்துபோம்படி அவை என்னெஞ்சை ஆக்கிரமித்த பின்பு நான் நாணங் காத்திருக்கவொண்ணுமோ வென்றாளாயிற்று. (க)

3170 கழியமிக்கதோர்காதலளிவளென்று அன்னைகாணகொடாள் *
வழுவில்கீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
குழுமித்தேவர்குழாங்கள் கைதொழச்சோதிவெள்ளத்தினுள்ளே *
எழுவதோருருவென்னெஞ்சுள்ளெழும் ஆர்க்குமறிவரிதே. (உ)

| | | | |
|---|---|---|---|
| இவள் | 'இப் பெண்பிள்ளை | கை தொழ | ஸேவிக்கும்படி |
| கழிய மிக்கது ஓர் காதலள் என்று | மிகவும் அதிசயித்த விலக்ஷணமான காதலை யுடையவள்' என்று சொல்லி | சோதி வெள்ளத்தின் உள்ளே | தேஜஸ்ஸமூஹத்தினிடையிலே |
| அன்னை காண கொடாள் | தாயானவள் நம்பியை ஸேவிக்கவொட்டுகிறதில்லை; | எழுவது | எழுகின்ற |
| வழு இல் கீர்த்தித் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்—; | | ஓர் உரு | விலக்ஷணமான விக்ரஹமானது |
| தேவர் குழாங்கள் | நித்ய ஸூரிகளின் திரள்கள் | என் நெஞ்சுள் எழும் | எனது நெஞ்சுக்குள்ளே பிரகாசிக்கின்றது; (அது) |
| குழுமி | நெருங்கி | ஆர்க்கும் அறிவு அரிது | எப்படிப்பட்டவர்கட்கும் அறிய முடியாததேயாகும். |

* * *—'லோகத்தில் அபிமத விஷயங்களைப் பிரிந்தால் நாட்செல்ல நாட்செல்ல ஸ்நேஹம் குறைந்து வருவதைக் காணாநின்றோம்; அப்படியிருக்கவும் இப்பெண்பிள்ளை தான் கலந்து பிரிந்த விஷயத்தில் மேன்மேலும் காதல்மையல் ஏறுகின்றாள், ஆதலால் இனி இவள் ஒருகாலும் திருக்குறுங்குடி நம்பியை ஸேவிக்கவொண்ணாமே செய்துவிடவேணும்' என்று அன்னை சொல்லிக்கொண்டிருக்க, அதுகேட்ட தலைவி கூறுகின்றாள்; உலகத்தாருடைய காதலின் நியாயமோ என்னிடத்தும் பார்ப்பது? லௌகிகர் ஈடுபடும் விஷயத்திலோ நான் ஈடுபட்டது; குறைவற்ற கீர்த்தியையுடைய திருக்குறுங்குடி நம்பி பக்கலிலன்றோ நான் ஈடுபடப்பெற்றது. நித்ய ஸூரிகளினுடைய திரளானவை பெரு வெள்ளத்திலிழிவாரைப் போலே கைகோத்துக்கொண்டு இழியவேண்டும்படி தேஜோராசிமயமானதோர் திருவுருவம் என்னெஞ்சினுள்ளே திகழா நின்றது; அதுதான் யார்க்கும் நிலமல்லாதது; அன்னதோருரு என்னெஞ்சினுள்ளே எழாநிற்க, தாய்மார் காணக்கொடுத்தாலென்ன? காணக்கொடாவிடிலென்ன? என்றாளாயிற்று. (ய)

3171 அறிவரியபிரானை ஆழியங்கையனையேயலற்றி *
நறியநன்மலர்நாடி நன்குருகூர்ச்சடகோபன்சொன்ன *
குறிகொளாயிரத்துள்ளிவைபத்தும் திருக்குறுங்குடியதன்மேல் *
அறியக்கற்றுவல்லார்வைட்டணவர் ஆழ்கடல்ஞாலத்துள்ளே. (கக)

| | |
|---|---|
| அறிவு அரிய பிரானை | ஒருவர்க்குமறிய வொண்ணாத ஸ்வாமியாயும் |
| ஆழி அம் கையனையே | திருவாழியை அழகிய திருக்கையிலே உடையவனாயு மிருக்கிற எம்பெருமானையே |
| அலற்றி | வாய்வெருவி, |
| நறிய | பரிமளம் மிக்க |
| நல் மலர் நாடி | நல்ல பூக்களை நாடுபவரான |
| நன் குருகூர் சடகோபன் சொன்ன—; | |
| ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரங்களுள் |
| திருக்குறுங்குடி அதன்மேல் | திருக்குறுங்குடி விஷயமாகப் பேசினதாய் |
| குறி கொள் | எம்பெருமானுடைய திவ்யாவயவ திவ்யாயுத திவ்யாபரண லாஞ்சனங்களை யுடையதான |
| இவை பத்தும் | இத்திருவாய்மொழியை |
| அறிய | பொருளும் தெரியும்படி |
| கற்று | ஓதி |
| வல்லார் | தேறினவர்கள் |
| ஆழ் கடல் ஞாலத்துள்ளே | ஆழ்ந்த கடல் சூழ்ந்த இந்நிலத்துள் |
| வைட்டணவர் | சிறந்த ஸ்ரீவைஷ்ணவர்களாகக் கொண்டாடப்படுவர்கள். |

* * *—அறியக்கற்று வல்லார் வைட்டணவர்=ஏடு பார்த்துக் கற்கையன்றிக்கே ஆசார்யோச்சாரண அநூச்சாரணமுகேந அப்யஸிக்கையாகிய அத்யயநத்தைப் பண்ணி, உபதேசமுகத்தாலே அர்த்தஜ்ஞானம் பிறந்து அதற்கேற்றவாறு அனுட்டிக்கவும் வல்லாராறல் ஸ்ரீவைஷ்ணவத்வஸித்தி யுண்டாகுமென்றதாயிற்று. இப்பத்துப் பாசுரங்களைக் கற்றதனாலேயே வைஷ்ணவத்வம் ஸித்தித்துவிடமாட்டாதென்றும், திருவாய்மொழியாயிரமும் கற்றதனாலாகும் பலனை இப்பதிகத்திற்குமாத்திரம் கூறினது ஒருவகையான அதிசயோக்தியென்றும் திருவுள்ளம்பற்றிய அழகியமணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்யஹ்ருதயத்திலே "சந்தங்களாயிரமும் அறியக்கற்று வல்லாராறல் வைஷ்ணவத்வஸித்தி" என்றருளிச்செய்தார். "ஆழ்கடல் ஞாலத்துள்ளே—வைட்டணவர்" என்றவிடத்து நம்பிள்ளையீடு;—"மருபூமியான ஸம்ஸாரத்திலிருக்கச்செய்தே நித்யஸூரிகளோடொக்கச் சொல்லலாம்படியாவர்கள் உகந்தருளின நிலங்களில் வாசியறியுமவர்கள்."

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து ஆறாந்திருவாய்மொழி—கடல்ஞாலஞ்செய்தேனும்.

பிரிந்து வருந்துங்காலத்திலே 'அநுகரித்துத் தரித்தல்' என்று ஒரு முறையுண்டு; அதாவது, எம்பெருமான்தானாகவே தன்னை யநுகரித்துப் பேசி இங்ஙனே யொரு போது போக்காலே தரித்திருக்கையாம். திருவாய்ப்பாடியில் திருக்குரவை கோத்தவன்று ப்ரீதிரஸம் தலைமண்டை கொண்டு செல்ல, அது ஸாத்மிக்கைக்காகக் கண்ணபிரான் பிரிந்து தன்னை மறைத்திட, அப்போது திருவாய்ப்பாடியிற் பெண்களெல்லாரும் அநுகரித்துத் தரித்தார்களென்னுமிடம் ஸ்ரீ விஷ்ணுபுராணப்ரஸித்தம். அங்ஙனே அநுகரித்துத் தரிக்கும் விதம் ஆண்டாள் பக்கலிலுங் கண்டதொன்றாகும். நோன்பு நோற்பதாகக் கொண்டு திருப்பாவை பாடியது ஆய்ச்சியர்களின் அனுட்டானத்தை அநுகரித்த படியத்தனையிறே. இத்தகைய அநுகார ப்ரகாரங்கள் உபநிஷத்துக்களிலும் காண்பனவாகும். ஆழ்வார்க்கும் அந்த அநுகார ப்ரகாரமே இத்திருவாய்மொழியில் செல்லாநின்றது. அதுதானும் தாய்பாசுரத்தாலே வெளிவருகின்றது.

பராங்குச நாயகியானவள் ஜ்ஞான முத்திரையுந்தானுமாய் கீதாசார்யனைப் போலேயிருந்து கொண்டு "கடல்ஞாலஞ் செய்தேனும் யானே, கடல் ஞாலமாவேனும் யானே, மலையெடுத்தேனும் யானே, இனத்தேவர் தலைவனும் யானே" என்றாற்போலே பாசுரங்களைச் சொல்லிக் கொண்டிருக்கக்கண்ட திருத்தாயார் 'இது என்ன நிலைமை!' என்று ஆராயத் தொடங்கினாள்; 'எம்பெருமானைப் பிரிகையாலுண்டான ஆற்றாமையினாலே அநுகரித்துத் தரிக்கின்றாள்' என்று அறியமாட்டாதவளாய்க் கலங்கிக்கிடந்தாள்; அப்போது சில பந்துவர்க்கங்கள் அங்கேவந்து சேர்ந்து, இது என்னென்று வினவ, 'ஸர்வேச்வரன் இவள் பக்கலிலே ஆவேசித்தான் போலேயிருக்கிறது' என்று விடைகூறுகிறபடியாய் இத்திருவாய்மொழி செல்லுகின்றது. (*)

3172 கடல்ஞாலம்செய்தேனும்யானேயென்னும் கடல்ஞாலமாவேனும்யானேயென்னும்*
கடல்ஞாலம்கொண்டேனும்யானேயென்னும் கடல்ஞாலம்கீண்டேனும்யானேயென்னும்*
கடல்ஞாலமுண்டேனும்யானேயென்னும் கடல்ஞாலத்தீசன்வந்தேறக்கொலோ*
கடல்ஞாலத்தீர்க்கிவையென்சொல்லுகேன்? கடல்ஞாலத்தென்மகள்கற்கின்றவே. (க)

| | |
|---|---|
| கடல் ஞாலத்து என் மகள் | கடல் சூழ்ந்த வுலகத்திலுள்ளவளான எனது பெண்பிள்ளை |
| கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும் | கடல்சூழ்ந்த இவ்வுலகத்தைப் படைத்தவனும் நானேயென்கிறாள்; |
| கடல் ஞாலம் ஆவேனும் யானே என்னும் | (படைக்கப்பட்ட) கடல் ஞாலத்திலே அநுப்ரவேசித்திருப்பவனும் நானே யென்கிறாள்; |
| கடல் ஞாலம் கொண்டேனும் யானே என்னும் | (மஹாபலியிடத்தில்) கடல் ஞாலத்தை இரந்து பெற்றுக் கொண்டவனும் நானே யென்கிறாள் |
| கடல் ஞாலம் கீண்டேனும் யானே என்னும் | (மஹாவராஹமாகிக்) கடல் ஞாலத்தை உத்தரித்தவனும் நானே யென்கிறாள்; |
| கடல் ஞாலம் உண்டேனும் யானே என்னும் | (ப்ரளயத்தில்) கடல் ஞாலத்தை உள்ளே வைத்து நோக்கினவனும் நானே யென்கிறாள்; |
| கற்கின்ற இவை | (இப்பெண்பிள்ளை) இங்ஙனம் பேசுகிற இப்பேச்சுக்கள் |
| கடல் ஞாலத்து ஈசன் வந்து ஏறகொலோ | கடல்சூழ்ந்த மண்ணுலகுக்குத் தலைவனான பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ! |
| கடல் ஞாலத்தீர்க்கு | இவ்வுலகிலுள்ள உங்களுக்கு |
| என் சொல்லுகேன் | என்ன வென்று சொல்லுவேன்?. |

*** என்வயிற்றிலேபிறந்த இப்பெண்பிள்ளை இங்ஙனே பேசுவது பொருத்தமற்றதாயிராநின்றது; விசிஷ்டாத்வைதஸம்ப்ரதாயத்திலே தலைநிற்குமிவள் அத்வைதம் பேசுகிறாளாக வொண்ணாது; பின்னை எதனாலே இங்ஙனே பேசுகிறாளென்று பார்க்குமிடத்து, எம்பெருமான் தானே இவளிடத்து ஆவேசித்தானாகவே வேணுமென்று தோன்றுகிறதென்று சொல்லுபவளாய் "கடல்

ஞாலத்தீசன்வந்து ஏறக்கொலோ'' என்கிருள் தாய். வினவவந்தவர்கள், இங்ஙனம் சொன்ன திருத்தாயை நோக்கி 'அம்மா! உன்னைக்கேட்டுத் தெளிந்து கொள்ளவந்தோம்; உனக்கும் ஒரு நிச்சயவுணர்ச்சி இல்லைபோல் காண்கிறதே, நாங்கள் தெளியும்படி ஆராய்ந்து சொல்லலாகாதோ?' என்ன; "கடல் ஞாலத்தீர்க்கு இவை யென் சொல்லுகேன் கடல் ஞாலத்தென்மகள் கற்கின்றவே'' என்கிருள். ஸம்ஸாரத்திலேயிருந்து வைத்து நித்யஸூரிகளின் யாத்திரையாய்ச் செல்லுகிற என்மகள்படியை, நித்யஸம்ஸாரிகளாய் பகவத் விஷயம் கனுக்கண்டறியாத உங்களுக்கு என் சொல்லுவது! என்றவாறு. (க)

3173 கற்கும்கல்விக்கெல்லையிலனேயென்னும் கற்கும்கல்வியாவேனும்யானேயென்னும்*
கற்கும்கல்விசெய்வேனும்யானேயென்னும் கற்கும்கல்விதீர்ப்பேனும்யானேயென்னும்*
கற்கும்கல்விச்சாரமும்யானேயென்னும் கற்கும்கல்விநாதன்வந்தேறக்கோலோ?*
கற்கும்கல்வியீர்க்கிவையென்சொல்லுகேன் கற்கும்கல்வியென்மகள்காண்கின்றவே. (உ)

| | |
|---|---|
| கற்கும் கல்வி என் மகள் | இன்று வார்த்தை கற்கும் பருவமாயிருக்கின்ற எனது பெண்பிள்ளை, |
| கற்கும் கல்விக்கு எல்லை இலன் என்னும் | நான் எல்லை யில்லாதபடி கல்விகள் கற்றிருக்கின்றேனென்கிருள்; |
| கற்கும் கல்வி ஆவேனும் யானே என்னும் | கற்கப்படுகிற கல்விகளெல்லாம் நானேயென்கிருள்; |
| கற்கும் கல்வி செய்வேனும் யானே என்னும் | கற்கப்படுகிற கல்விகளை நானே உண்டாக்கினேனென்கிருள்; |
| கற்கும் கல்வி தீர்ப்பேனும் யானே என்னும் | கற்கப்படுகிற கல்விகளை (ஸம்ஹார காலத்தில்) முடித்து நானே என்னெஞ்சிலிட்டு வைத்துக்கொண்டிருக்கிறேனென்கிருள்; |

| | |
|---|---|
| கற்கும் கல்வி சாரமும் யானே என்னும் | கற்கும் கல்விகளின் ஸாரமாகிய திருமந்திரம் முதலியனவும் நானே யென்கிருள்; |
| காண்கின்ற இவை | (இங்ஙனமாக இப்பிள்ளையிடத்துக்) காணப்படுகின்ற இந்த வாசகங்களானவை |
| கற்கும் கல்வி நாதன் வந்து ஏறகொலோ | கற்குங் கல்விகளால் பிரதிபாதிக்கப்படுகிற எம்பெருமான் வந்து! ஆவேசித்ததனுலோ (அறியேன்.) |
| கற்கும் கல்வியீர்க்கு | இனிக்கற்க வேண்டுங் கல்விகளையுடையீரான உங்களுக்கு |
| என் சொல்லுகேன் | என் னென்று செல்லுவேன்?. |

* * * கண்ணபிரான் ஸாந்தீபிநி பக்கலிலே அறுபத்திநன்கு நாளில் எல்லையிலாத நூல்களையெல்லாம் அதிகரித்தனனுதலால் அதைச் சொல்லிற்ருகக் கொள்ளலாம். * யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ * என்றபடியே வேதங்களுக்கும் நிலமல்லாதபடி நின்றமையைச் சொல்லிற்ருகவுமாம். (உ)

3174
காண்கின்றநிலமெல்லாம்யானேயென்னும் காண்கின்றவிசும்பெல்லாம்யானேயென்னும்*
காண்கின்றவெந்தீயெல்லாம்யானேயென்னும் காண்கின்றவிக்காற்றெல்லாம்யானேயென்னும்*
காண்கின்றகடலெல்லாம்யானேயென்னும் காண்கின்றகடல்வண்ணனேறக்கோலோ? *
காண்கின்றவுலகத்தீர்க்கென்சொல்லுகேன் காண்கின்றவென்காரிகைசெய்கின்றவே. (ங)

| | |
|---|---|
| காண்கின்ற என் காரிகை | பகவத்விஷயத்தை உள்ளபடி கண்டுபேசுகிற என்மகள் |
| காண்கின்ற நிலம் எல்லாம் யானே என்னும் | காணப்படுகிற பூமியெல்லாம் நானேயென்கிருள்; |
| காண்கின்ற விசும்பு எல்லாம் யானே என்னும் | காணப்படுகிற ஆகாசமெல்லாம் யானே யென்கிருள்; |

| | |
|---|---|
| காண்கின்ற வெம் தீ எல்லாம் யானே என்னும் | காணப்படுகின்ற தேஜஃபுஞ்சமும் யானே யென்கிருள்; |
| காண்கின்ற இ காற்று எல்லாம் யானே என்னும் | காணப்படுகின்ற வாயுக்களும் யானே யென்கிருள்: |
| காண்கின்ற கடல் எல்லாம் யானே என்னும் | காணப்படுகின்ற ஜலதத்துவமெல்லாம் யானே யென்கிருள்; |

(இப்படி இவள் சொல்லுவதானது)

காண்கின்ற கடல் வண்ணன் ஏற கொலோ { அழகிய கடல்போன்ற வடிவை யுடைய எம்பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ?

செய்கின்ற { (இப்பெண் பிள்ளை) செய்கிற வைகளை

காண்கின்ற உலகத்தீர்க்கு { இவ்வுலகமல்லது மற்றொன்று காணாதவுங்களுக்கு

என் சொல்லு கேன் { என்னவென்று எடுத்துக் கூறுவேன்?

[காண்கின்ற என் காரிகை.] பிறரால் காணமுடியாததையும் காண்பவராயிற்று ஆழ்வார். "எண்ணாதனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச் சிறப்ப" என்றவிடத்து ஈடு ஸேவிக்க. (௩)

3175 செய்கின்றகிதியெல்லாம்யானேயென்னும் செய்வானின்றனகளும்யானேயென்னும்*
செய்துமுன்னிறந்தவும்யானேயென்னும் செய்கைப்பயனுண்பேனும்யானேயென்னும்*
செய்வார்களைச்செய்வேனும்யானேயென்னும் செய்யகமலக்கண்ணனேறக்கோலோ?*
செய்யவுலகத்தீர்க்கிவையென்சொல்லுகேன் செய்யகனிவாயிளமான்திறத்தே. (௪)

(இப்பெண்பிள்ளையானவள்)

செய்கின்ற கிதி எல்லாம் யானே என்னும் { நிகழ்காலச் செய்கைகளெல்லாம் யானே யென்கிறாள்;

செய்வான் நின்றனகளும் யானே என்னும் { எதிர்காலச் செய்கைகளெல்லாம் யானே யென்கிறாள்;

செய்து முன் இறந்தவும் யானே யென்னும் { இறந்தகாலச் செய்கைகளெல்லாமும் யானே யென்கிறாள்;

செய்கை பயன் உண்பேனும் யானே என்னும் { செய்கைகளின் பலன்களை யனுபவிப்பதும் யானே யென்கிறாள்;

செய்வார்களை செய்வேனும் யானே என்னும் { செய்கைகளைச் செய்கின்ற கர்த்தாக்களைப் படைப்பதும் யானே யென்கிறாள்;

(இவள் இப்படியெல்லாம் சொல்லுவது)

செய்ய கமலம் கண்ணன் ஏற கொலோ { செந்தாமரைக் கண்ணனான எம்பெருமான் ஆவேசித்தத னாலோ?

செய்ய கனி வாய் இள மான் திறத்து { சிவந்தகனி போன்ற அதரத்தை யுடையளாய் இளமான் போன்றவளான இவள் விஷயத்தில்

செய்ய உலகத் தீர்க்கு { கபடமறியாத வுங்களுக்கு

இவை என் சொல்லுகேன்?.

3176
திறம்பாமல்மண்காக்கின்றேன்யானேயென்னும் திறம்பாமல்மலையெடுத்தேனேயென்னும் *
திறம்பாமலசுரரைக்கொன்றேனேயென்னும் திறம்காட்டியன்றைவரைக்காத்தேனேயென்னும் *
திறம்பாமல்கடல்கடைந்தேனேயென்னும் திறம்பாதகடல்வண்ணனேறக்கோலோ? *
திறம்பாதவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்? திறம்பாதேன்திருமகளெய்தினவே. (௫)

என் திரு மகள் { என் செல்வமகளான பராங்குசநாயகி,

திறம்பாமல் மண் காக்கின்றேன் யானே என்னும் { நீதிதவறாமல் இந்நிலவுலகத்தை நானே காக்கின்றேனென்கிறாள்;

திறம்பாமல் மலை எடுத்தேனே என்னும் { சலியாதபடி கோவர்த்தன மலையை நானே யெடுத்தேனென்கிறாள்;

திறம்பாமல் அசுரரை கொன்றேனே என்னும் { தப்பாதபடி (தேனுகன் முதலிய) அசுரர்களை நானே கொன்றிட்டேனென்கிறாள்;

அன்று அக்காலத்தில்

ஐவரை பஞ்ச பாண்டவர்களை

திறம் காட்டி காத்தேனே என்னும் { உபாயங்கள் காட்டி நானே ரக்ஷித்தேனென்கிறாள்;

திறம்பாமல் அபாயமொன்றுமின்றிக்கே

கடல் கடைந்தேனே என்னும் { நானே கடல் கடைந்தேனென்கிறாள்;

(இப்படி இவள் சொல்லுவதானது)

திறம்பாத கடல் வண்ணன் ஏற கொலோ { அடியாரை நோக்குவதில் சலியாதவனும் கடல்வண்ணனுமான எம்பெருமான் ஆவேசித்ததனாலோ?

| | | | |
|---|---|---|---|
| திறம்பாத உலகத்தீர்க்கு | இச்செய்தியை அவசியம் அறிந்தேதீரவேணுமென்று ஸ்திரமாயிருக்கிற உலகத்தீர்களான உங்களுக்கு | திறம்பாது எய்தினை | ஒழிந்துசொல்லி மீட்கவொண்ணுதபடி அடைந்திருக்கிற தன்மைகளைப் பற்றி |
| (இப்பெண் பிள்ளை) | | என் சொல்லுகேன் | என்ன வென்று சொல்லுவேன்?. |

* * *, கெடுதலொன்றும் வாராதபடி நிலவுலகத்தைக் காப்பவன் எம்பெருமானே; இந்திரன் பண்டு பசிக்கோபத்தினால் ஏழு நாள் இடைவிடாது மழை பெய்வித்தபோது அநாயாஸமாகக் கோவர்த்தனமலையைக் கொற்றக்குடையாகத் தாங்கி நின்றவனும் எம்பெருமானே. தேவாசுரயுத்தம் நடைபெறும்போதெல்லாம் அசுரர்களை மாய்ப்பவனும் எம்பெருமானே; பஞ்சபாண்டவர்களை ரக்ஷித்தருளினவனும் எம்பெருமானே; *மந்தரம் நாட்டி அன்று மதுரக் கொழுஞ் சாறுகொண்ட சுந்தரத் தோளுடையானும் எம்பெருமானே; உண்மை இங்ஙனமிருக்க, அக்காரியங்களெல்லாம் நானே செய்தேனென்கிறாள் இப்பராங்குச நாயகி; இங்ஙனேசொல்லுவது கடல் வண்ணன் வந்து இவளிடத்து ஆவேசித்ததனாலே போலும். 'கேட்டல்லது கால் வாங்கோம்' என்றிருக்கிற உங்களுக்கு நான் எத்தைச் சொல்லுவது? "ஆழங்காலிலே யிழிந்தார்படியைக் கரையிலே நின்றாராலே சொல்லப்போமோ?" என்பது நம்பிள்ளையீடு. (ரு)

3177

இனவேய்மலையேந்தினேன்யானேயென்னும் இனவேறுகள்செற்றேனும்யானேயென்னும் *
இனவான்கன்றுமேய்த்தேனும்யானேயென்னும் இனவாநிரைகாத்தேனும்யானேயென்னும் *
இனவாயர்தலைவனும்யானேயென்னும் இனத்தேவர்தலைவன்வந்தேறக்கொலோ? *
இனவேற்கண்ணல்லீர்க்கிவையென்சொல்லுகேன்? இனவேற்கண்ணியென்மகளுற்றனவே. (சு)

| | | | |
|---|---|---|---|
| இனம் வேல் கண்ணி என் மகள் | வேற்படையை யொத்திருக்கிற கண்ணழகையுடையளான என் மகள், | இனம் ஆ நிரை காத்தேனும் யானே என்னும் | திரளான பசுக்கூட்டங்களை ரக்ஷித்தேனும் நானே யென்கிறாள்; |
| இனம் வேய் மலை ஏந்தினேன் யானே என்னும் | திரள் திரளான மூங்கில்களையுடைய கோவர்த்தன மலையைக் குடையாகவெடுத்தேன் யானே யென்கிறாள்; | இனம் ஆயர் தலைவனும் யானே என்னும் | இடையர் கூட்டங்களுக்குத்தலைவனை கோபாலகிருஷ்ணனும் நானே யென்கிறாள்; |
| | | (இப்படி இவள் சொல்லுவதானது) | |
| இனம் ஏறுகள் செற்றேனும் யானே என்னும் | கூட்டமாகவந்த எருதுகளைக் கொன்றேனும் யானே யென்கிறாள்; | இனம் தேவர் தலைவன் வந்து ஏற கொலோ | நித்யஸூரிகள் குழாங்களுக்குத் தலைவனை ஸர்வேச்வரன் வந்து ஆவேசித்ததனாலோ? |
| | | உற்றன இவை | இவள் அடைந்த இத்தகைய விகாரங்களை |
| இனம் ஆன் கன்று மேய்த்தேனும் யானே என்னும் | கூட்டங்கூட்டமான கன்றுகளை மேய்த்ததும் நானே யென்கிறாள்; | இனம் வேல் கண் நல்லீர்க்கு | வேல்போன்ற கண்ணழகையுடையீரான உங்களுக்கு |
| | | என் சொல்லுகேன் | ஏதென்று சொல்லுவேன்?. |

* * * "திறம்பாமல் மலையெடுத்தேனேயென்னும்" என்று கீழ்ப்பாட்டிலும் கோவர்த்தநோத்தரணம் செய்தது நானே யென்று சொல்லியிருக்கச்செய்தேயும், மீண்டும் "இனவேய்மலை யேந்தினேன் யானே" என்கிறவிது என்னென்னில்; புநருக்தி முதலிய தோஷங்களைச் சங்கிக்க நிலமோ இது? * அத்யந்த பக்தியுக்தாநாம் ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம:* என்று நூல்வரம்பின்றியே பரிமாறும் முறைமை செல்லாநிற்க இங்ஙனே சங்கிக்க இடமில்லைகிடீர்.

3178

உற்றார்களெனக்கில்லையாருமென்னும் உற்றார்களெனக்கிங்கெல்லாருமென்னும் *
உற்றார்களைச்செய்வேனும்யானேயென்னும் உற்றார்களையழிப்பேனும்யானேயென்னும் *
உற்றார்களுக்குற்றேனும்யானேயென்னும் உற்றாரிலிமாயன்வந்தேறக்கோலோ? *
உற்றீர்கட்கென்சொல்லிச்சொல்லுகேன்யான்? உற்றென்னுடைப்பேதையுரைக்கின்றவே. (எ)

என்னுடை பேதை — என்னுடைய சிறு பெண்பிள்ளை
எனக்கு உற்றார்கள் ஆரும் இல்லை என்னும் — எனக்கு உறவினர் ஒருவருமில்லை யென்கிருள்;
இங்கு எனக்கு உற்றார்கள் எல்லாரும் என்னும் — இவ்வுலகில் எனக்கு யாவரும் உறவினர் என்கிருள்;
உற்றார்களை செய்வேனும் யானே என்னும் — (சிலரை) எனக்கு உற்றார்களாம்படி செய்வதும் நானே யென்கிருள்;
உற்றார்களை அழிப்பேனும் யானே என்னும் — (அற்பபலன்களுக்காகக்) கிட்டுமவர்களை (அந்த அற்பபலன்களைக்) கொடுத்து அகற்றுவதும் நானே யென்கிருள்;
உற்றார்களுக்கு உற்றேனும் யானே என்னும் — அநந்யப்ரயோஜநர்களாய்க் கிட்டுமவர்களுக்கு எல்லாவுறவுமுறையும் நானே யென்கிருள்;

(இவள் இப்படிச் சொல்லுவதானது)

உற்றார் இலி மாயன் வந்து ஏறகொலோ — தம்முயற்சியால் தன்னைக் கிட்டினாரில்லாத ஆச்சர்ய சக்தியுக்தனான எம்பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ?
உற்று உரைக்கின்ற — உள்ளுறக்கண்டு சொல்லும் வார்த்தைகளை
உற்றீர்கட்கு — உறவினரானவுங்களுக்கு
யான் என் சொல்லி சொல்லுகேன் — நான் என்ன பாசுரத்தையிட்டுச் சொல்லுவேன்?.

* * * உற்றார்களெனக்கில்லையாரும் = இதற்குப் பலபடியாகப் பொருள் கூறலாம்; 'உற்றார்களெனக்கில்லை' என்றது 'பகைவர்களுமெனக்கில்லை' என்பதற்கும் உபலக்ஷணமாகி, * ஸமோஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோஸ்தி நப்ரிய: நமே த்வேஷ்யோஸ்தி நப்ரிய:* என்று கீதையிலருளிச்செய்தபடியே ஸர்வஸாதாரணன் எம்பெருமான் என்றபடி. அன்றியே, என்னோடுண்டான ஸம்பந்தமறிந்து என்பக்கல் நேசிப்பார் ஆருமில்லை என்றதாகவுமாம். பலரும் தேவதாந்தர பஜனம்பண்ணித் தொலைகின்றார்களேயல்லது என்னளவில் வருவார் ஆருமில்லையென்றபடி. உற்றார்கள் எனக்கு இங்கெல்லாரும் = கீழே உற்றார்களில்லை யென்றது அவர்கள் கருத்தாலே; இது எம்பெருமான்றன் கருத்தாலே சொல்லுகிறது. "இராமட மூட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்" என்றும், "கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று ஸத்தையை நோக்கி உடன் கேடனாய்" என்றும் பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்தபடியே எம்பெருமான் எல்லாரையும் உற்றார்களாகவே நினைத்துக் காரியஞ் செய்கிறபடி. அன்றியே, எம்பெருமானைவிட்டுத் தேவதாந்தர பஜனம்பண்ணுமவர்களும் *யேப்யந்யதேவதாபக்தா: யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் = யேப்யந்யதேவதாபக்தா: யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய! யஜந்த்யவிதி பூர்வகம். * என்று கீதையிலருளிச்செய்தபடி எம்பெருமானையே பஜித்தார்களாகத் தேறுகிறபடியால் அதுதன்னைச் சொல்லுகிறதாகவுமாம். (எ)

3179

உரைக்கின்றமுக்கட்பிரான்யானேயென்னும் உரைக்கின்றதிசைமுகன்யானேயென்னும் *
உரைக்கின்றவமரரும்யானேயென்னும் உரைக்கின்றவமரர்கோன்யானேயென்னும் *
உரைக்கின்றமுனிவரும்யானேயென்னும் உரைக்கின்றமுகில்வண்ணனேறக்கோலோ? *
உரைக்கின்றவுலகத்தீர்க்கென்சொல்லுகேன் உரைக்கின்றவென்கோமளவொண்கொடிக்கே. (அ)

| | |
|---|---|
| உரைக்கின்ற முக்கண் பிரான் யானே என்னும் | (இப்பெண்பிள்ளை) ஈச்வரனைச் சொல்லப்படுகிற சிவபிரான் நானே யென்கிறாள்; |
| உரைக்கின்ற திசைமுகன் யானே என்னும் | ப்ரஸித்தனை பிரமனும் நானே யென்கிறாள்; |
| உரைக்கின்ற அமரரும் யானே என்னும் | ப்ரஸித்தனை தேவேந்திரனும் நானே யென்கிறாள்; |
| உரைக்கின்ற அமரர் கோன் யானே என்னும் | பேசுகின்ற தேவர்களும் யானே யென்கிறாள்; |
| உரைக்கின்ற முனிவரும் யானே என்னும் | ப்ரஸித்தர்களான நாரதாதி மஹரிஷிகளும் நானே யென்கிறாள்; |
| | (இப்படிச் சொல்லுவதானது) |
| உரைக்கின்ற முகில் வண்ணன் ஏற கொலோ | ப்ரஸித்தனை காளமேகவண்ணப் பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ? |
| உரைக்கின்ற உலகத்தீர்க்கு | சொல்லு சொல்லென்று கேட்கிற நாட்டாரான உங்களுக்கு. |
| உரைக்கின்ற என் கோமளம் ஒண் கொடிக்கு | விலக்ஷணமாகப் பேசுகின்ற எனது அழகிய சிறு பெண்ணைப் பற்றி |
| உரைக்கின்ற இவை | இவள்தான் சொல்லுகின்ற இப்பேச்சுக்களை |
| என் சொல்லு கேன் | என்னவென்று கூறுவேன்; |

உரைக்கின்ற முகில்வண்ணன்=‘உரைக்கின்ற’ என்ற அடைமொழி முகிலுக்குமாக லாம்; வார்த்தை சொல்லுவதொரு மேகம் போன்றவன் என்று இல்பொருளுவமை. (௫)

3180

கொடியவினையாதுமிலனேயென்னும் கொடியவினையாவேனும்யானேயென்னும் *
கொடியவினைசெய்வேனும்யானேயென்னும் கொடியவினைதீர்ப்பேனும்யானேயென்னும் *
கொடியானிலங்கைசெற்றேனேயென்னும் கொடியபுள்ளுடையவனேறக்கோலோ? *
கொடியவுலகத்தீர்க்கிவையென்சொல்லுகேன்? கொடியேன்கொடியென்மகள்கோலங்களே. (௬)

| | |
|---|---|
| கொடிய வினை யாதும் இலன் என்னும் | (இப்பெண்பிள்ளை) கொடிய கருமங்களின் பற்று சிறிதுமுடையேனல்லேன் நான் என்கிறாள்; |
| கொடிய வினை ஆவேனும் யானே என்னும் | அக்கொடியகருமங்களும் எனது நிக்ரஹஸ்வரூபம் என்கிறாள்; |
| கொடிய வினை செய்வேனும் யானே என்னும் | ஆச்ரிதவிரோதிகளுக்குக் கொடிய பாவங்களை விளைப்பதும் நானே என்கிறாள்; |
| கொடிய வினை தீர்ப்பேனும் யானே என்னும் | (அடியார்கட்குக்) கொடிய பாவங்களைத் தீர்த்துக் கொடுப்பதும் நானே யென்கிறாள்; |
| கொடியான் இலங்கை செற்றேனே என்னும் | கொடியவனை இராவணனுடைய இலங்காபுரியைத் தொலைத்ததும் நானே யென்கிறாள்; |
| | (இவள் இப்படிச் சொல்லுவது) |
| கொடிய புள் உடையவன் ஏற கொலோ | ஆச்ரித விரோதிகளுக்குக் கொடியவனை பெரிய திருவடியை த்வஜமாகவுடைய எம்பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ! |
| கொடியேன் கொடி என் மகள் கோலங்கள் இவை | கொடியேனை என்னுடைய கொடிபோன்ற இம்மகளின் அழகிய சேஷ்டைகளான இவற்றைப்பற்றி |
| கொடிய உலகத் தீர்க்கு என் சொல்லுகேன் | சொல்லு சொல்லென்று ஹிம்ஸிக்கிற உங்களுக்கு என்னவென்று சொல்லுவேன்?. |

*** கொடியவினை யாவேனும் யானே=எம்பெருமானுக்குக் கர்மஸம்பந்தமில்லையாகிலும் கருமங்கள்யாவும் அவனிட்ட வழக்கேயாதலால் ‘கொடியவினையாவேனும் யானே’ என்கிறது. கொடியவினை செய்தல்—ஆச்ரிதவிரோதிகளுக்கு; கொடியவினை தீர்த்தல்—ஆச்ரிதர்களுக்கு. முறையே * தாநஹம் த்விஷத: க்ரூராந் * ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி * என்கிற பிரமாணங்கள் காண்க. கோலம்=அழகியதன்மை. அன்றியே, ‘கோல்’ என்னும் வினைப்பகுதியடியாகப் பிறந்த சொல்லாகக்கொண்டு முயற்சியென்றும் பொருளுரைப்ப. கோலுதல்—முயலுதல். (௬)

3181

கோலங்கொள்சுவர்க்கமும்யானேயென்னும் கோலமில்நரகமும்யானேயென்னும்
கோலந்திகழ்மோக்கமும்யானேயென்னும் கோலங்கொளுயிர்களும்யானேயென்னும் *

கோலங்கோள்தனிமுதல்யானேயென்னும் கோலங்கோள்முகில்வண்ணனேறக்கோலோ?*
கோலங்கோளுலகத்தீர்க்கென்சொல்லுகேன்? கோலம்திகழ்கோதையென்கூந்தலுக்கே. (ம)

| | | | |
|---|---|---|---|
| கோலம் கொள் சுவர்க்கமும் யானே என்னும் | (என் மகளானவள்) அழகிய ஸ்வர்க்கலோகமும் நானிட்ட வழக்கென்கிறாள்; | கோலம் கொள் தனி முதல் யானே என்னும் | விசித்திரகாரியங்களைச் செய்ய வல்லதான மூலப்ரக்ருதியும் நானிட்ட வழக்கென்கிறாள்; (இப்படிச் சொல்லுவதானது) |
| கோலம் இல் நரகமும் யானே என்னும் | துக்கமே வடிவெடுத்த நரகமும் நானிட்ட வழக்கென்கிறாள்; | கோலம் கொள் முகில் வண்ணன் ஏற கொலோ | அழகிய காள மேகவண்ணப் பெருமான் வந்து ஆவேசித்ததனாலோ? |
| கோலம் திகழ் மோக்கமும் யானே என்னும் | இன்பமயமான மோக்ஷமும் நானிட்டவழக்கென்கிறாள்; | கோலம் திகழ் கோதை என் கூந்தலுக்கு | அழகியமாலையையுடைய மயிர் முடியையுடையளான என் மகள் விஷயமாக |
| கோலம் கொள் உயிர்களும் யானே என்னும் | பலபல சரீரங்களைப்பரிக்ரஹிக்கிற ஆத்மாக்களும் நானிட்ட வழக்கென்கிறாள்; | கோலம் கொள் உலகத்தீர்க்கு என் சொல்லுகேன் | அழகாகவந்து உட்கார்ந்திருக்கின்ற உங்களுக்கு என்ன சொல்லுவேன்?. |

* * * [கோலங்கோள்] ஞானிகளுக்கு நரகத்தோடு சுவர்க்கத்தோடு வாசியில்லை; இரண்டும் அநர்த்தமென்றேயிருப்பர்கள்; அப்படியிருக்க, சுவர்க்கத்திற்கு 'கோலங்கொள்' என்றும், நரகத்திற்கு 'கோலமில்' என்றும் இங்கு அடைமொழி கொடுத்தது என்? என்னில்; உலகத்தாருடைய கருத்தாலே சொல்லுகிறபடி. சுவர்க்கத்தில் மிக்க இன்பமுண்டென்று நினைத்து அதற்கு ஸாதநாநுஷ்டாநங்களும் பண்ணுவர்களே உலகர்கள். பெரிய திருமடலில் "அறத்தின்வழி முயன்ற அன்னவர்தாம் கண்டீர்கள் ஆயிரக்கண்வானவர்கோன்" என்று தொடங்கி அருளிச்செய்ததுகாண்க. சுவர்க்கமும் நரகமும் மீட்சியில்லாதவைகுந்தமாநகரும் ஜீவாத்மவர்க்கமுமெல்லாம் எம்பெருமானிட்ட வழக்கென்கிறது. (ம)

3182 கூந்தல்மலர்மங்கைக்கும்மண்மடந்தைக்கும் குலவாயர்கொழுந்துக்கும்கேள்வன்தன்னை *
வாய்ந்தவழுதிவளநாடன் மன்னுகுருகூர்ச்சடகோபன்குற்றேவல்செய்து *
ஆய்ந்ததமிழ்மாலை ஆயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லார் * உலகில்
ஏந்துபெருஞ்செல்வத்தராய்த் திருமாலடியார்களைப்பூசிக்கநோற்றார்களே. (கக)

| | | | |
|---|---|---|---|
| கூந்தல் | விலக்ஷணமான மயிர் முடியையுடையளான | குற்றேவல் செய்து | – அந்தரங்ககைங்கர்ய ரூபமாக |
| மலர் மங்கைக்கும் | பெரிய பிராட்டிக்கும் | ஆய்ந்த | ஆராய்ந்து அருளிச் செய்த |
| மண் மடந்தைக்கும் | பூமிப்பிராட்டிக்கும் | தமிழ் மாலை ஆயிரத்துள் இவையும் ஓர் பத்தும் வல்லார்—; | |
| குலம் ஆயர் கொழுந்துக்கும் | நல்லகுடிப்பிறப்பையுடைய நப்பின்னைப் பிராட்டிக்கும் | உலகில் | இவ்வுலகத்திலே |
| கேள்வன் தன்னை | நாயகனான எம்பெருமான் விஷயமாக, | ஏந்து பெரு செல்வத்தர் ஆய் | எல்லாரும் கொண்டாடும்படியான ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியையுடையராய்க் கொண்டு |
| வாய்ந்த வழுதி வளம் நாடன் மன்னு குருகூர் சடகோபன் | ஆழ்வார் | திரு மால் அடியார்களை | பகவத்பக்தர்களான ஸ்ரீவைஷ்ணவர்களை |
| | | பூசிக்க | ஆராதிக்க |
| | | நோற்றார்கள் | ஸுக்ருதம் பண்ணினவர்களாவர் |

* * * இத்திருவாய்மொழி ஓதவல்லவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமை செய்யப்பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றார்கள்=திருமாலைப் பூசிப்பதினுங்காட்டில் அவனடியார்களைப் பூசித்தலே சிறப்பாதலாலும் ஜந்மாந்தர ஸஹஸ்ர ஸுக்ருதத்தின் பயனாகவே அது நேரவேண்டுதலாலும் இங்ஙனேயருளிச் செய்யப்பட்டதென்க. (கக

# ஐந்தாம்பத்து ஏழாந்திருவாய்மொழி—நோற்றநோன்பு.

வானமாமலைப் பெருமாள் திருவடிகளிலே தம்முடைய அநந்யோபாயத்வம் முதலான வற்றை விண்ணப்பஞ்செய்து வேரற்ற மரம் போலே விழுந்து சரணம் புகுகிறாராயிற்று இத் திருவாய்மொழியில். சிரீவர மங்கை என்றும், சிரீவர மங்கலம் என்றும் வானமாமலை க்ஷேத் திரத்தின் திருநாமம். இது பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டினுள் ஒன்று. இத்திரு வாய்மொழியில் ஆறும்பாட்டில் "வானமாமலையே! அடியேன் தொழவந்தருளே" என்கிற ஸ்ரீஸூக்தியை நோக்குமிடத்தில் 'வானமாமலை, என்கிறதிருநாமம் எம்பெருமானுக்கே உள்ள தென்றும், அந்தத் திருநாமத்தையிட்டு திவ்யதேசம் வழங்கப்பட்டு வருகிறதென்றும் சொல் லும்படி யிராநின்றது. "பாதமே சரணாக்குமௌதார்யம் வானமாமலையிலே கொழுந்துவிடும்" என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தி இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

3183 நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன் ஆகிலுமினியுன்னைவிட்டொன்றும் *
ஆற்றகிற்கின்றிலேன் அரவினணையம்மானே! *
சேற்றுத்தாமரைசெந்நெலூடுமலர் சிரீவரமங்கலநகர் *
வீற்றிருந்தவெந்தாய்! உனக்குமிகையல்லேனங்கே. (க)

| | | | |
|---|---|---|---|
| சேறு | சேற்று நிலங்களிலே | ஆகிலும் | இங்ஙனே கைம்முதலற்றவனே யானாலும் |
| செந்நெலூடு | செந்நெற்பயிர்களினிடையே | இனி | இது முதலாக |
| தாமரை மலர் | தாமரைகள் மலரப்பெற்ற | உன்னை விட்டு | உன்னை யொழிய |
| சிரீவரமங்கலம் நகர் | சிரீவரமங்கை யென்னும் வானமாமலைப்பதியிலே | ஒன்றும் | சிறிதும் |
| வீற்றிருந்த எந்தாய் | இருந்தருளும் எம்பெருமானே! | ஆற்ற கிற்கின்றிலேன் | தரித்திருக்க மாட்டுகின்றிலேன்; |
| அரவின் அணை அம்மானே | சேஷசயனனான தலைவனே! | உனக்கு | ஸர்வரக்ஷகனென்று பேர் பெற்றிருக்கிற உனக்கு |
| நோற்ற நோன்பு இலேன் | நாளை அனுட்டித்த கருமயோக முடையேனல்லேன்; | அங்கே | அந்த வானமாமலைப் பதிதன்னிலே |
| நுண் அறிவு இலேன் | நுட்பமான ஞானயோகமும் உடையேனல்லேன்; | மிகை அல்லேன் | (ரக்ஷ்யவர்க்கத்தில்) வெளிப்பட்டவனல்லேன் [என்னை ரக்ஷித்தே தீரவேணுமென்றபடி. |

* * * நோன்பு என்று கர்மயோகத்தைச் சொல்லுகிறது; தமக்குக் கர்மயோகமில்லை யென்று சொல்லவேண்டில் "நோன்பிலேன்" என்றால் போதாதோ? 'நோற்ற நோன்பிலேன், என்னவேணுமோ? அதற்குக் கருத்து என்? என்னில்; ஒருபடியாலும் நோன்பு இல்லை என்று சொல்லப்போகாது; யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகம் என்றாப்போலே சில ஸுக்ருத விசேஷங்கள் இல்லையென்னப்போமோ? 'என் கைப்பாடாகச் செய்ததொரு கருமமில்லை' என்று சொல்லுவதே யுக்தமாதலால் நோன்புக்கு 'நோற்ற' என்று அடைமொழி கொடுக்கப் பட்டது. அரவினணையம்மானே ! = "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம்" இத்யாதிப்படியே ஸகலவித கைங்கரியங்களையும் செய்யுமாறு கைக்கொண்ட திருவனந்தாழ் வான் எங்களிலே ஒருவனன்றோ? அவனைப்போலே என்னையும் அடிமைகொண்டருளவேண் டாவோ? என்பது குறிப்பு. அரவினணையம்மானே! ஒன்றுமாற்றகிற்கின்றிலேன் = நான் படுக்கை யில் கண்ணுறங்கப்பொறாதே "உள்ளஞ்சோர வுகந்தெதிர்விம்மி உரோமகூபங்களாய்க்கண்ண நீர்கள், துள்ளஞ்சோரத் துயிலணை கொள்ளேன்" என்னும்படி கிடவா நிற்க, நீ மெல்லிய படுக்கைபார்த்துக் கண்ணுறங்குவதைக் கண்டு என்னால் ஆற்றமுடியவில்லையே! என்பதாகவுங் கொள்ளலாம். (க)

3184 அங்குற்றேனல்லேனிங்குற்றேனல்லேன் உன்னைக்காணுமவாவில்வீழ்ந்து * நான்
எங்குற்றேனுமல்லேன் இலங்கைசெற்றவம்மானே! *
திங்கள்சேர்மணிமாடநீடு சிரீவரமங்கலநகருறை *
சங்குசக்கரத்தாய்! தமியேனுக்கருளாயே. (உ)

இலங்கை செற்ற அம்மானே — லங்காபுரியைத் தொலைத்த ஸ்வாமியே!
திங்கள் சேர் மணி மாடம் — சந்திரனளவும் சேர்ந்திருக்கிற மணி மயமான மாடங்களை யுடைத்தாய்
நீடு — விசாலமான திருவீதிகளை யுடைத்தாயிருக்கிற
சிரீவரமங்கலம் நகர் உறை — சிரீவரமங்கையிலே நித்ய வாஸம் செய்தருளுகிற
சங்கு சக்கரத் தாய் — சங்க சக்ரபாணியான ஸர்வேச்வரனே!
நான் — அடியேன்
அங்குற்றேன் அல்லேன் — நித்யஸேவை பண்ணுகிற நித்ய ஸூரிகளிலே சேர்ந்தவனல்லேன்
இங்குற்றேன் அல்லேன் — உன்னைக் கனவிலுமறியாத ஸம்ஸாரிகள் படியுமுடையேனல்லேன்,
உன்னை காணும் அவாவில் வீழ்ந்து — உன்னைக் காணவேணுமென்கிற ஆசையில் படிந்தவனாகி
எங்குற்றேனும் அல்லேன் — ஒருவர் படியிலும் சேராதவனாயிரா நின்றேன்,
தமியேனுக்கு — இப்படித் தனிப்பட்டிருக்கிற என் விஷயத்தில்
அருளாய் — அருள் புரியவேணும்.

* * * பரமபதத்திலுள்ளாரில் சேர்ந்தவனல்லேன், இந்நிலத்திலுள்ளாரிலும் சேர்ந்தவனல்லேன் என்கிறவிதற்குக் கருத்து என்னென்னில்; பரமபதத்திலுள்ள நித்யமுக்தர்கள் க்ருதக்ருத்யர்களாய்ப் பலன் கைபுகுந்தவர்களாகையாலே அன்னவர்களது வகுப்பிலே நான் சேர்ந்தவனல்லேன்; தம் தலையாலே ஸாதநாநுஷ்டாநம் பண்ணிக்கிடக்கிற இந்நிலத்திலுள்ளார் வகுப்பிலும் சேர்ந்தவனல்லேன்; இதுவரையிலும் ஒரு ஸாதனமும் அனுட்டியாமற் போனாலும் இனிமேலாவது ஸாதநாநுஷ்டானம் பண்ண யோக்யதையுண்டன்றோ என்னில்; [உன்னைக் காணுமவாவில் வீழ்ந்து நான் எங்குற்றேனுமல்லேன்] மேலும் ஸாதநாநுஷ்டானம் பண்ணவொண்ணாதபடி வடிவழகு முதலானவற்றிலே யீடுபட்டு உன்னைக் காணவேணுமென்னும் ஆசையாலே தளர்ந்து கிடக்கிறேனாகையாலே எவ்விதமான உபாயத்தையும் அநுஷ்டிக்க க்ஷமனல்லேன் என்கை. நீ இருந்தவிடத்தே வந்து கிட்டி உன்னை அநுபவிக்கிறவனல்லேன்; உன்னை ஒரு பொருளாகவே மதியாத ஸம்ஸாரிகளின் திரளிலே சேர்ந்தவனுமல்லேன்; உன்னையொழியவும் தரித்திருக்கிறவர்களின் திரளிலும் சேர்ந்தவனல்லேன் என்றுமாம். (உ)

3185 கருளப்புட்கொடிசக்கரப்படை வானநாட! எங்கார்முகில்வண்ணா !*
பொருளல்லாதவென்னைப்பொருளாக்கி அடிமைகொண்டாய் ! *
தெருள்கொள்நான்மறைவல்லவர்பலர்வாழ் சிரீவரமங்கலநகர்க்கு *
அருள்செய்தங்கிருந்தாய்! அறியேனொருகைம்மாறே. (ங)

கருளன் புள் கொடி — கருடப்பறவையைக் கொடியாகவுடையவனாய்
சக்கரம் படை — திருவாழியை ஆயுதமாக வுடையவனாய்
வானம் நாட — பரமபதத்தை நாடாகவுடையவனான பெருமானே!,
எம் கார் முகில் வண்ணா — எமக்குக் காளமேகம் போன்ற திருவுருவைக் காட்டி உபகரிக்குமவனே!
தெருள் கொள் நால் மறை வல்லவர் பலர் வாழ் — மிகுந்த ஞானத்தை யுடையராய் நான்கு வேதங்களிலும் வல்லவர்களான பல ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழப்பெற்ற
சிரீவரமங்கலம் நகர்க்கு — வானமாமலைப்பதிக்கு
அருள் செய்து — கிருபைபண்ணி
அங்கு இருந்தாய் — அத்திருப்பதியிலே நித்யவாஸம் செய்யுமவனே!
பொருள் அல்லாத என்னை — அபதார்த்தமாய்க் கிடந்தவென்னை
பொருள் ஆக்கி — ஸ்வரூபம் பெற்றவனாம் படி அங்கீகரித்து

| | |
|---|---|
| அடிமை கொண்டாய் | (திருவாய்மொழிபாடுகையாகிற இக்) கைங்கரியத்தை என் பக்கலிலே திருவுள்ளம்பற்றினை; |
| | (இப்படியாகச்செய்த மஹோபகாரத்திற்கு) |
| ஒரு கைம்மாறு அறியேன் | நானொரு கைம்முதலுடையேனாக அறிகின்றிலேன். |

* * * கீழ்ப்பாட்டில் * சங்கு சக்கரத்தாய்! தமியேனுக்கு அருளாயே * என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், 'ஆழ்வீர்! அருள் செய்யவேணுமென்கிறீர்; அப்படியே அருள் செய்வோம்; அதில் ஒரு குறையில்லை: ஆனால் நாம் அருள்செய்யவேணுமானால் உம்மிடத்தில் ஏதேனும் ஒரு கைம்முதல் இருக்கவேணுமே; அப்படி ஏதேனுமுண்டாகில் சொல்லிக்காணீர்' என்ன; பிரானே! இனிமேல் நீ செய்கிற அருள் இருக்கட்டும்; இதுவரையில் உன் பக்கலில் நான் பெற்றிருக்கிற அருள் அபலபிக்கமுடியாததன்றோ; ஒரு வஸ்துவாக எண்ணத்தகுந்தவனல்லாதபடி யிருந்தவென்னை வஸ்துவாக்கி இவ்வளவு அதிகாரியாம்படி செய்தருளினாயே!, இது என் பக்கலில் என்ன கைம்முதலைக்கண்டு? கீழ்க்காலத்தில் செய்த அருள் நிர்ஹேதுகமானாப்போலே மேற்காலத்திலும் செய்யுமருள் நிர்ஹேதுகமாயிருக்கத் தடையுண்டோ?; இனி அருள்செய்கிறாய் செய்யாதொழிகிறாய்; அதில் விசாரமில்லை; இதுவரை நான் பெற்றிருக்கிற அருளுக்கு என்னிடத்தில் ஒரு கைம்முதலிருந்ததாக அறிகின்றிலேனே! என்கிறார். (௫)

3186 மாறுசேர்படைநூற்றுவர்மங்க ஓரைவர்க்காயன்றுமாயப்போர்பண்ணி *
நீறுசெய்தவெந்தாய்! நிலங்கீண்டவம்மானே! *
தேறுஞானத்தர்வேதவேள்வியறாச் சிரீவரமங்கலநகர் *
ஏறிவீற்றிருந்தாய்! உன்னையெங்கெய்தக்கூவுவனே? (௬)

| | |
|---|---|
| மாறு சேர் படை நூற்றுவர் மங்க | விரோதிகளாய்க்கொண்டு சேர்ந்த ஸேனையையுடைய துரியோதநாதிகள் நூறுபேர்களும் தொலையும்படி |
| அன்று | அக்காலத்தில் |
| ஓர் ஐவர்க்கு ஆய் மாயம் போர் பண்ணி | பஞ்சபாண்டவர்களுக்குத் துணைவனாயிருந்துகொண்டு ஆச்சரியமானயுத்தத்தைநடத்தி |
| நீறு செய்த எந்தாய் | நீறுபடுத்தின ஸ்வாமியே! |
| நிலம் கீண்ட அம்மானே | பூமியை ப்ரளயாபத்தில் நின்றும் இடந்தெடுத்த பெருமானே! |
| தேறு ஞானத்தர் வேதம் வேள்வி அறா சிரீவரமங்கலம் நகர் | தெளிந்த ஞானத்தையுடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களினுடைய வைதிகஸமாராதனம் இடைவிடாமல் நடக்குமிடமான வானமாமலைப்பதியிலே |
| ஏறி வீற்றிருந்தாய் | குடியேறிப் பெருமை தோற்ற எழுந்தருளியிருக்குமவனே! |
| உன்னை எங்கு எய்த கூவுவன் | உன்னை எங்கே வந்து கிட்டுவதாக நான் கூப்பிடுவேன்? |

[உன்னை நான் நிர்ப்பந்திப்பதென்றொரு பொருளுண்டோ? என்றவாறு.]

* * * அடியார்களை ரக்ஷிப்பதையே தொழிலாகவுடையவனல்லையோ நீ; என்னை ரக்ஷிப்பது உனக்கு மிகையோவென்கிறார். பஞ்சபாண்டவர்களுக்குப் பக்ஷபாதியாயிருந்து பாரதயுத்தத்தை நடத்தித் துரியோதநாதியரைத் தொலைத்த செய்தியை ஒன்றரையடிகளாலே அநுஸந்திக்கிறார். [தேறு ஞானத்தர் இத்யாதி.] தெளிந்த ஞானம்பெற்ற மஹா விவேகிகளின் வைதிக ஸமாராதனங்கள் இடைவிடாது செல்லப்பெற்ற சிரீவரமங்கல நகரிலே அவர்களோடொக்கக் குடியேறிப் பெரும்பேறு பெற்றானாயிருக்கிற பெருமானே! நீயே விஷயீகரிக்குமித்தனையல்லது நான் உன்னைப்பெறுகைக் கீடான முயற்சி பண்ணுகையென்று ஒரு பொருளுண்டோ?. நீ கூவுதல் வருதல் செய்வதன்றோ தகுந்தது என்றபடி. (௬)

3187 எய்தக்கூவுதலாவதேயெனக்கு எவ்வதெவ்வத்துளாயுமாய்நின்று *
கைதவங்கள்செய்யும் கருமேனியம்மானே! *

செய்தவேள்வியர்வையத்தேவரறாச் சிரீவரமங்கலநகர் *
கைதொழவிருந்தாய் அதுநானுங்கண்டேனே. (ரு)

எய்த கூவுதல் — உன்னைப் பெறுவதற்காகக் கூப்பாடு போடுவதானது
எனக்கு ஆவதே — எனக்குத் தகுமோ?
எவ்வ தெவ்வத்துளாயும் ஆய் நின்று — எப்படிப்பட்ட சத்ருஸமூஹத்தினுள்ளும் கலந்திருந்து
கைதவங்கள் செய்யும் — க்ருத்ரிமங்களைச் செய்யுமவனை [அதாவது, அஸுரவர்க்கத்தினுள்ளே புத்தவிக்ரஹ பரிக்ரஹம் பண்ணிக் கலந்து நின்று வைதிகருசியைக் குலைத்து வியாமோஹிப்பித்தவனை]
கரு மேனி அம்மானே — கரியதிருமேனி கொண்ட ஸ்வாமியே!,
செய்த வேள்வியர் — க்ருதக்ருத்யர்களான
வையம் தேவர் அறா — நிலத் தேவர்கள் இடைவிடாமல் வர்த்திக்கிற
சிரீவரமங்கலம் நகர் — வானமாமலைப் பதியிலுள்ளாரெல்லாரும்
கை தொழ — ஸேவிக்கும்படி
இருந்தாய் — எழுந்தருளி யிருப்பவனே!
நானும் — அடியேனும்
அது கண்டேன் — அவ்விருப்புக் காணப் பெற்றேன்.

* * * கீழ்ப்பாட்டில் "உன்னை யெங்கெய்தக் கூவுவனே!" என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! ஒன்றும் பெறாதவர்போலே கூப்பிடாநின்றீரே; சிரீவரமங்கல நகரிலிருப்பை உமக்குக் காட்டித்தரவில்லையோ நான்?" என்றருளிச்செய்ய, அதற்கு ஆழ்வார், அது இல்லையென்று நான் சொன்னேனோ? அவ்வளவால் த்ருப்தி பிறக்கவில்லையே! என்கிறார். எய்தக் கூவுதல் எனக்கு ஆவதே!=என்னைப் பெறுவதற்கு நீ முயற்சி பண்ண வேண்டியிருக்க, உன்னைப் பெறுவதற்கு நான் முயற்சிபண்ணவேண்டும்படியாவதே! இது தகுதியோ? என்றவாறு. சேதநலாபம் எம்பெருமானுக்கா? எம்பெருமானுடைய லாபம் சேதநனுக்கா? என்று பார்க்குமளவில், சேதநலாபம் ஈச்வரனுக்கு என்பது சாஸ்த்ரார்த்தமாகத் தேறி நிற்கும். தன்னுடைய ஸொத்துக் கைதவறிப்போனால் அதைப் பெறுதற்கு ஸ்வாமியானவன் முயலவேண்டியிருக்குமேயல்லது, ஸொத்து ஸ்வாமியைப் பெறுதற்கு முயல்வதென்பது கிடையாது; இது இங்கே தலைகீழாயிற்றே! என்கிறார். "அது நானும் கண்டேனே" என்று இப்பாசுரம் முடிந்திருந்தாலும் வாக்ய சேஷங்கொண்டு பூரிக்கவேணுமென்று நம்பிள்ளை திருவுள்ளம் பற்றுகிறார். ஈடு;—["அது நானும் கண்டேனே] தேவர் செய்தருளின அம்சம் இவ்வளவுண்டு; அதில் குறையில்லை எனக்கு அவ்வளவால் போராது. திருவடிகளில் கைங்கர்யமே யாத்ரையாகப் பெறவேணுமென்று வாக்ய சேஷமாய்க் கிடக்கிறது." (ரு)

3188 ஏனமாய்நிலங்கீண்டவென்னப்பனே! கண்ணா! என்றுமென்னையாளுடை *
வானநாயகனே! மணிமாணிக்கச்சுடரே! *
தேனமாம்பொழில்தண்சிரீவரமங்கலத்தவர் கைதொழவுறை *
வானமாமலையே! அடியேன்தொழவந்தருளே. (சா)

ஏனம் ஆய் நிலம் கீண்ட என் அப்பனே — மஹாவராஹரூபியாய் பூமியைக்குத்தி யெடுத்து வந்து ஸ்வஸ்தானத்திலே சேர்த்த எம்பெருமானே!
கண்ணா — கண்ணபிரானே!
என்றும் என்னை ஆள் உடை வானம் நாயகனே — எந்நாளும் என்னை அடிமை கொள்கிற நித்யஸூரிநாதனே!
மணி மாணிக்கம் சுடரே — மணி மாணிக்கம் போன்ற தேஜஸ்ஸை யுடையவனே!
தேன மா பொழில் தண் சிரீவரமங்கலத்தவர் — தேனையுடைய மாந்தோப்பு சூழ்ந்த குளிர்ந்த சிரீவரமங்கையிலுள்ளவர்கள்
கை தொழ — வணங்கும்படியாக
உறை — அங்கு நித்யவாஸம் பண்ணுகிற
வானமாமலையே — வானமாமலைப் பெருமானே
அடியேன் தொழ வந்தருள் — அடியேன் தொழும்படியாக இங்கே யெழுந்தருளாய்.

* * * பிரளயத்துக்குள்ளான பூமியை வராஹவுருக்கொண்டு எடுத்தாப்போலே ஸம்ஸார வெள்ளத்துக்குள்ளே "ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய் போல், பிறவிக்கடலுள் நின்று நான் துளங்க" என்கிறபடியே அலைந்துழல்கின்ற என்னையும் எடுத்தருளவேணுமென்னுங் கருத்துப்பட 'ஏனமாய் நிலங்கீண்டவென்னப்பனே!' என்கிறார். 'வானமாமலை' என்பது திவ்யதேசத்தின் திருநாமமாக வழங்கி வந்தாலும் இது எம்பெருமானுடைய திருநாமமேயென்பது இங்கு ஸ்பஷ்டமாகிறது. ஆகாசத்தளவும் சென்று கிட்டும்படி ஓங்கின மலைபோலே யிராநின்ற எம்பெருமானை மலையாகவே கூறுதல் லக்ஷணையென்க. (௬)

3189 வந்தருளியென்னெஞ்சிடங்கொண்ட வானவர்கொழுந்தே! * உலகுக்கோர்
முந்தைத்தாய்தந்தையே! முழுவேழுலகுமுண்டாய்! *
செந்தொழிலவர்வேதவேள்வியறாச் சிரீவரமங்கலநகர் *
அந்தமில்புகழாய்! அடியேனையகற்றேலே. (௭)

| | | | |
|---|---|---|---|
| வந்தருளி என் நெஞ்சு இடம் கொண்ட | (பரமபதம் முதலியவற்றை விட்டு) எழுந்தருளி எனது நெஞ்சை இருப்பிடமாகக் கொண்ட | செம் தொழிலவர் | சிறந்த அனுட்டானங்களையுடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களினுடைய |
| வானவர் கொழுந்தே | நித்ய ஸூரிநாதனே! | வேதம் வேள்வி அறு | வைதிகஸமாராதனம் இடையறுமல் நடக்கப்பெற்ற |
| உலகுக்கு | இவ்வுலகத்துக்கு | சிரீவரமங்கலம் நகர் | வானமாமலைப்பதியிலே |
| ஓர் முந்தை தாய் தந்தையே | அநாதிஸித்த மாதாபிதாவானவனே! | அந்தம் இல் புகழாய் | முடிவில்லாத புகழையுடையவனாய் எழுந்தருளியிருப்பவனே! |
| முழு ஏழ் உலகும் உண்டாய் | ஸகல லோகங்களையும் திருவயிற்றிலே வைத்து நோக்கினவனே! | அடியேனை அகற்றேல் | என்னைப் புறம்புபடுத்தாதொழிய வேணும், |

* * * கீழ்ப்பாட்டில் "அடியேன் தொழவந்தருளே" என்றாரே; அர்ச்சாவதார ஸமாதியைக் குலைத்துக்கொண்டு சிரீவரமங்கல நகரிலிருந்து திருக்குருகூரிலே திருப்புளியடியிலே வந்து காட்சிதரவேணுமென்றாயிற்று ஆழ்வாருடைய கோரிக்கை; அங்ஙனே வரக் காணாமையாலே 'உபேக்ஷித்தான் போலும்' என்றஞ்சி "பிரானே! என்னை உபேக்ஷியாதொழிய வேணும்" என்கிறார். பாசுரம் தொடங்கும்போதே 'வந்தருளி' என்றிருக்கின்றபடியாலே உபேக்ஷித்தானென்று நினைப்பது எங்ஙனே பொருந்தும்? என்னில்; கீழ்ப்பாட்டிலே அபேக்ஷித்தபடியே வந்தருளினபடியைச் சொல்லுகிறதன்று இது. "வடதடமும் வைகுந்தமும் மதிள்துவராபதியும் இடவகைகளிகழ்ந்திட்டு என்பாலிடவகை கொண்டனையே" என்னுமா போலே பரமபதம் முதலானவிடங்களை விட்டுத் தம் ஹ்ருதயத்திலே வந்து குடிகொண்டிருக்கிறபடியைச் சொன்ன வித்தனை. "வந்தருளி யென்னெஞ்சிடங்கொண்ட" என்கிறவிடத்திலே நம்பிள்ளையீட்டு ஸ்ரீஸூக்தி பரமபோக்யமானது. அது வருமாறு;— "பட்டர் ஸ்ரீ புஷ்பயாகம் அணித்தானவாறே நஞ்சீயரைப் பலகாலும் இயல் கேட்டருளுவர்; ஒரு கோடையிலே திருவீதியிலே நீரைவிட்டு எழுந்தருளியிருந்து இப்பாட்டை இயல் சொல்லுமென்று ஜீயரை அருளிச்செய்து தாம் இத்தை அநுஸந்தித்திருந்து அனந்தரத்தே தாமும் இப்பாட்டை இயல் சொல்லி 'யமநியமாதி க்ரமத்தாலே ஜ்ஞேய வஸ்துவை மநநம்பண்ணிப் புறம்புள்ள பராக்கையறுத்து அநுஸந்திக்கப்புக்காலும் சுக்கான்பரல்போலேயிருக்கக்கடவ நெஞ்சுகள் பதஞ் செய்யும்படி, தார்மிகராயிருப்பார் இவை சில ஈரச்சொற்களைப் பொகட்டுப் போவதே!' என்றருளிச்செய்தார்; நஞ்சீயர் இவ்வார்த்தையை உருத்தோறுமருளிச்செய்வர் என்றருளிச் செய்வர். (௭)

3190 அகற்றநீவைத்தமாயவல்லைம்புலன்களாமவை நன்கறிந்தனன் *
அகற்றியென்னையும்நீ அருஞ்சேற்றில்வீழ்த்திகண்டாய் *
பகர்க்கதிர்மணிமாடநீடு சிரீவரமங்கைவாணனே! * என்றும்
புகற்கரியவெந்தாய்! புள்ளின்வாய்பிளந்தானே! (௫)

பகர் கதிர் மணி மாடம் நீடு சிரீ வரமங்கை வாழ் நனே — மிகுந்த ஒளியை யுடைத்தான மணிமாடங்கள் ஓங்கியிருக்கப்பெற்ற வானமாமலைப் பதியிலே வாழுமவனே!
என்றும் புகற்கு அரிய எந்தாய் — ஒருநாளும்(உகவாதவர்களுக்கு) ப்ராபிக்கவொண்ணாதஸ்வாமியே!
புள்ளின் வாய் பிளந்தானே — பகாசுரனது வாயை இரு துண்டமாக்கி அவனை முடித்தவனே!
அகற்ற நீ வைத்த — ஒதுக்குகைக்காக நீ உண்டாக்கி வைத்த
மாயம் வல் ஐம் புலன்கள் ஆம் அவை நன்கு அறிந்தனன் — ஆச்சரியமான செய்கைகளையுடைய பலிஷ்டங்களான பஞ்சேந்திரியங்களை உள்ளபடியே அறியப்பெற்றேன்;
நீ — பரம காருணிகனான நீ
என்னையும் அகற்றி — அடியேனையும் உன் பக்கலில் நின்றும் அகலச் செய்து
அரு சேற்றில் வீழ்த்தி கண்டாய் — கால்வாங்கிக் கரையேற முடியாத விஷயங்களாகிற சேற்றிலே தள்ளிவைக்கின்றாயே?.

* * * கீழ்ப்பாட்டில் * அடியேனையகற்றேலே * என்று ஆழ்வார் பிரார்த்திக்கக் கேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! உம்மை அகற்றுவதற்கு என்ன ப்ரஸக்தியுண்டாயிற்று? அப்ரஸக்தமாக எதுக்கு இரக்கிறீர்?' என்றருளிச்செய்ய, பிரானே! அடிமைக்கு விரோதியான ஸம்ஸாரத்திலே என்னை வைத்திருப்பது அகற்றினபடியன்றோ; அப்ரஸக்தமாயோ என் பேச்சிருப்பது? என்கிறார். மூன்றாமடியில் "பகர்க்கதிர்" என்றும், "பகற்கதிர்" என்றும் பாட பேதமுள்ளதாக வியாக்கியானங்களில் காட்டப்படுகிறது. இடையின ரகரமான பாடத்தில், பகர் என்றும், கதிர் என்றும் ஒளியாய், மிக்க வொளியையுடைய என்றபடி: வல்லின றகரமான பாடத்தில் பகல் என்று ஸூரியனுக்குப் பேராகையாலே ஸூர்யமண்டலத்தளவுஞ் செல்லவுயர்ந்து ஒளியையுடைய மணிமாடங்கள் என்றபடி. (௫)

3191 புள்ளின்வாய்பிளந்தாய்மருதிடைபோயினாய்! எருதேழடர்த்த * என்
கள்ளமாயவனே! கருமாணிக்கச்சுடரே! *
தெள்ளியார்திருநான்மறைகள்வல்லார் மலிதண்சிரீவரமங்கை *
உள்ளிருந்தவெந்தாய்! அருளாயுய்யுமாறெனக்கே. (௬)

புள்ளின் வாய் பிளந்தாய் — பகாசுரனையழித்தவனே!
மருது இடை போயினாய் — இரட்டை மருதமரங்களினிடையே தவழ்ந்து சென்றவனே!
ஏழ் எருது அடர்த்த — ஏழு ரிஷபங்களையும் வலி தொலைத்தவனாயும்
என் — என் திறத்திலே
கள்ளம் மாயவனே — கள்ள மாயங்களைச் செய்து போருமவனே!
கரு மாணிக்கம் சுடரே — கரியமாணிக்கத்தின் ஒளி போன்ற வடிவையுடையவனே!
தெள்ளியார் திரு நால் மறைகள் வல்லார் மலி தண் சிரீவரமங்கை உள் — தெளிந்தவர்களாயும் விலக்ஷணமான நான்கு வேதங்களிலும் வல்லவர்களாயுமிருப்பார் நிறைந்திருக்கப்பெற்ற குளிர்ந்த வானமாமலைப்பதியிலே
இருந்த எந்தாய் — எழுந்தருளியிருக்கும் ஸ்வாமியே!
எனக்கு உய்யும் ஆறு அருளாய் — அடியேனுக்கு உஜ்ஜீவனோபாயத்தை அருளிச்செய்யவேணும்.

* * * கீழ்ப்பாட்டில் "அகற்றியென்னையும் நீ அருஞ்சேற்றில் வீழ்த்திகண்டாய்" என்னக்கேட்ட எம்பெருமான், 'ஆழ்வீர்! உம்முடைய வினைகளாகிற பிரபல விரோதிகள் காரணமாக நீர் அருஞ்சேற்றில் விழுந்து கிடந்தீராகில் இதற்கு நான் என் செய்வது?' என்ன; அதற்கு ஆழ்வார், 'பிரானே! இதற்கு மேற்பட்ட பிரபல விரோதிகளையெல்லாம் அநாயாஸமாக அழித்திருக்கிறவுனக்கு இது ஒரு வார்த்தையோ? இப்படியும் ஒரு கள்ளத்தனமான பேச்சுண்டோ?' என்கிறார். (௬)

3192 ஆறெனக்குநின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய் * உனக்கோர்கைம்
மாறுநானொன்றிலேன் எனதாவியுமுனதே *
சேறுகொள்கரும்பும்பெருஞ்செந்நெலும் மலிதண்சிரீவரமங்கை *
நாறுபூந்தண்டுழாய்முடியாய்! தெய்வநாயகனே! (௰)

| | | | |
|---|---|---|---|
| சேறு கொள் கரும்பும் பெரு செந்நெலும் மலி தண் சிரீவரமங் கை | சேற்று நிலங்களிலே வளர்கின்ற கரும்புகளும் பெரிய செந்நெற் பயிர்களும் மலிந்திருக்கப்பெற்ற குளிர்ந்த வானமாமலைப்பதியிலே (எழுந்தருளியிருக்கிற) | ஆறு | உபாயமோவென்றால் |
| நாறு பூ தண் துழாய் முடியாய் | பரிமளம் மிக்க திருத்துழாய் மாலையணிந்த திருமுடியையுடையவனே! | நின் பாதமே சரண் ஆக | உன் திருவடிகளே உபாயமாக |
| தெய்வநாயகனே | தெய்வநாயகப் பெருமானே! | தந்தொழிந்தாய் | அநுக்ரஹித்து விட்டாய்; (இந்த மஹோபகாரத்திற்கு) |
| எனக்கு | அடியேனுக்கு | உனக்கு ஓர் கைம் மாறு ஒன்று நான் இலேன் | உன் விஷயத்திலே ஒரு ப்ரதியுபகாரமுமுடையேனல்லேன்; |
| | | எனது ஆவியும் | என்னுடைய ஆத்மாவும் |
| | | உனதே | ஏற்கனவே உன்னுடைய தாயிராநின்றது. |

* * *ஏற்கனவே தமக்குக் கிடைத்திருக்கிற அத்யவஸாய விசேஷத்திற்கு க்ருதஜ்ஞதாநுஸந்தாநம் பண்ணுகிறாரிப்பாட்டில். ஆறு என்று வழிக்குப் பெயர்; அதாவது உபாயத்தைச் சொன்னபடி. மேலே, சரணாக என்றவிடத்தில் சரண் என்ற சொல் 'சரண்ய:' என்ற வடசொல்லின் விகாரமாய் உபேயத்தைச் சொல்லிற்றாகும். ஆக, "எனக்கு நின் பாதமே ஆறு சரணாகத் தந்தொழிந்தாய்" என்று அந்வயித்து "ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் உன் திருவடி மலர்களே யென்றிருக்கும் இவ்வத்யவஸாயத்தை எனக்கு ஸ்வபாவமாம்படி தந்தருளினாய்" என்றருளிச்செய்வர் பிள்ளான். பட்டர், ஆறு என்பதற்கும் சரண் என்பதற்கும் உபாயமென்கிற பொருளையே கொள்வர். உபாயப் பொருளதான சரணம் என்கிற வடசொல் சரணென்று திரிந்ததாகக் கொண்டபடி. உபாயமென்னும் பொருளிலே இரண்டு சொற்கள் கிடந்தனவாகில் எங்ஙனே அந்வயிக்கிறதென்னில்; பதவுரையிற் காண்க. (௰)

3193 தெய்வநாயகன்நாரணன் திரிவிக்கிரமனடியிணைமிசை *
கொய்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன் *
செய்தவாயிரத்துள்ளிவை தண்சிரீவரமங்கைமேயபத்துடன் *
வைகல்பாடவல்லார் வானோர்க்காராவமுதே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| தெய்வநாயகன் நாரணன் திரிவிக்கிரமன் | எம்பெருமானுடைய | ஆயிரத்துள் | ஆயிரத்தினுள்ளே |
| அடி இணை மிசை | உபய பாதங்களிலே | இவை | இந்த |
| கொய் கொள் பூ பொழில் சூழ் குருகூர் சடகோபன் | ஆழ்வார் | தண் சிரீவரமங்கை மேய பத்து | வானமாமலைப்பதி விஷயமான பதிகத்தை |
| செய்த | அருளிச் செய்த | உடன் வைகல் பாட வல்லார் | கருத்துடனே எப்போதும் பாட வல்லவர்கள் |
| | | வானோர்க்கு ஆரா அமுது | நித்ய ஸூரிகளுக்கு ஆராவமுதமாயிருப்பர்கள். |

## ஐந்தாம்பத்து—எட்டாந் திருவாய்மொழி ஆராவமுதே.

கீழ்த் திருவாய்மொழியிலே வானமாமலை யெம்பெருமான் திருவடிகளிலே வேரற்ற மரம்போலே விழுந்து மிகப்பெரிய ஆர்த்தியோடே சரணம் புகச்செய்தேயும் அப்பெருமான் முகங்காட்டிற்றிலன்; இன்னார்க்கு இன்னவிடத்திலே முகங்காட்டுவது என்றொரு நினைப்பு

உண்டே எம்பெருமானுக்கு; அதனாலே இவர்க்குத் திருக்குடந்தையிலே முகங்காட்டுவதாக அவன் நினைப்பிட்டிருக்கவுங்கூடுமே; ஆழ்வார் அப்படியே கருதினார். நமக்குத் திருக்குடந்தையிலே காட்சி தந்தருள்வதாக எம்பெருமான் ஸங்கல்பித்திருக்கக் கூடுமென்று எண்ணினார். எண்ணி, 'அங்குச் சென்று புகவே நம் அபேக்ஷிதம் தலைக்கட்டும்; குறைகளெல்லாம் தீரும்' என்று கனக்கப் பாரித்துக்கொண்டு திருக்குடந்தையிலே சென்று புகுந்தார். சித்திரகூட மலைச்சாரலிலே வந்து சேர்ந்த பரதாழ்வான் தான் நினைத்தபடியான பரிமாற்றம் ஒன்றும் பெறாதாப்போலே, ஆழ்வாரும் புக்கவிடத்தில் திருக்கண்களை அலரவிழித்துக் குளிர நோக்கியருளுதல் திருப்பவளத்தைத் திறந்து ஒரு வார்த்தையருளிச் செய்தல் அணைத்தல் முதலானவற்றிலே ஒன்றுஞ் செய்யக்கண்டிலர். அக்ரூரன் கண்ணபிரானிடத்து வரச்செய்தே * மாம் அக்ரூரேதி வக்ஷ்யதி * என்று கனக்கப் பாரித்துக்கொண்டுவந்து மனோரதித்தபடியே பெற்றானென்று கேட்டிருந்தோம்; அங்ஙனே ஒன்றும் தாம் பெறாமையாலே மிகவருந்தி, ஸ்தநந்தய ப்ரஜையானது தாய்பக்கலிலே கிட்டி முகம் பெறாவிட்டால் அலமந்து நோவுபடுமாபோலே அவன் ஸந்நிதியிலே தளர்ந்து கிடந்து கூப்பிட்டு இன்னும் எத்தனை திருவாசல் தட்டித்திரியக் கடவேன்! என்னுமார்த்தியோடே தலைக்கட்டுகிறார்.

3194. ஆராவமுதேயடியேனுடலம் நின்பாலன்பாயே *
நீராயலைந்துகரையவுருக்குகின்ற நெடுமாலே! *
சீரார்செந்நெல்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை *
ஏரார்கோலந்திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே! (க)

| | | | |
|---|---|---|---|
| ஆரா அமுதே | எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்திபிறவாத அம்ருதமாகிய | சீர் ஆர் செந் நெல் கவரி வீசும் | சீர்மைமிக்க செந்நெற்பயிர்கள் சாமரம்போல் வீசப்பெற்று |
| எம்மானே | எம்பெருமானே! | செழு நீர் | செழுமைதங்கிய தீர்த்தங்களையுடைத்தான |
| அடியேன் உடலம் நின் பால் அன்பு ஆய் ஏ | என்னுடைய சரீரமானது உன் திறத்தில் அன்புதானே வடிவெடுத்ததாகி | திரு குடந்தை | திருக்குடந்தையிலே |
| நீர் ஆய் அலைந்து | நீர்ப்பண்டமாக உருகி வியாகுலப்பட்டு | ஏர் ஆர் கோலம் திகழ | அழகு பொருந்திய திருமேனி விளங்க |
| கரைய | கரையும்படியாக | கிடந்தாய் | சாய்ந்தருளினாய் (அவ்வழகை) |
| உருக்குகின்ற நெடுமாலே | உருகப்பண்ணுநிற்கிற ஸர்வேச்வரனே! | கண்டேன் | ஸேவிக்கப்பெற்றேன். |

* * * இத்திருவாய்மொழியிலே நம் பூருவர்கள் போரவும் ஈடுபட்டிருப்பர்களாயிற்று. இங்கு ஈட்டில் நம்பிள்ளை அருளிச்செய்வது பாரீர்;— "உத்தரபூமியிலே லோகஸாரங்க மஹாமுனிகள் வர்த்தியாநிற்க, இங்குத்தையானொருவன் அங்கேறச்செல்ல, 'பிள்ளாய் தக்ஷிண பூமியில் விசேஷமென்?' என்றுகேட்க, 'திருவாய்மொழியென்றொரு பிரபந்தமவதரித்து சிஷ்டர்கள் பரிக்ரஹித்துப் போரக் கொண்டாடிக்கொடு போராநின்றார்கள்' என்ன, 'அதிலே உனக்குப் போவதொரு சந்தை சொல்லிக்காணாய்' என்ன, '*ஆராவமுதே* என்கிற வித்தனையும் எனக்குப்போம்' என்ன, 'நாராயணாதி நாமங்கள்கிடக்க இங்ஙனேயொரு நிர்த்தேசமுண்டாவதே! இச்சொல் நடையாடுகிற தேசத்தேறப் போவோம்' என்று அப்போதே புறப்பட்டுப் போந்தார்." [சீரார் செந்நெல்] "செந்நெலுக்குச் சீர்மையாவது—ஆராவமுதாழ்வார்க்கு அமுதுபடியாகப்பெறுகிற சீர்மை" என்பர் நம்பிள்ளை. அர்ச்சாவதாரத்திலே எம்பெருமானுடைய திருப்பவளத்துக்குப் பாங்காக நிவேதனமாகப்பெறுகிற சீர்மை செந்நெற்பயிர்களுக்காம். (க)

3195 எம்மானே! என்வெள்ளைமூர்த்தி என்னையாள்வானே!*
எம்மாவுருவும்வேண்டுமாற்றால் ஆவாயெழிலேறே!*

செம்மாகமலம்செழுநீர்மிசைகண்மலரும் திருக்குடந்தை*
அம்மாமலர்க்கண்வளர்கின்றானே என்னான்செய்கேனே? (உ)

| | |
|---|---|
| எம்மானே | எல்லாவிதத்திலும் மஹானானவனே! |
| என் வெள்ளை மூர்த்தி | என்னை ஈடுபடுத்திக்கொண்ட பரிசுத்தஸ்வரூபனே! |
| என்னை ஆள்வானே | என்னை அடிமை கொள்பவனே! |
| வேண்டும் ஆற்றால் | திருவுள்ளமான படியே |
| எம் மா உருவும் ஆவாய் | எப்படிப்பட்ட அவதார விக்ரஹங்களையும் பரிக்ரஹிப்பவனே! |
| எழில் ஏறே | அழகிற்சிறந்தவனே! |
| மா செம் கமலம் | பெரிய செந்தாமரைகள் |
| செழு நீர் மிசை | அழகிய நீரினிடத்து |
| கண் | கண்டவிடமெங்கும் |
| மலரும் | மலரப்பெற்ற |
| திரு குடந்தை | திருக்குடந்தையிலே |
| அ மா மலர் கண் வளர்கின்றானே | அப்படிப்பட்டசிறந்த மலர் போன்ற திருக்கண்கள் துயில்பவனே! |
| நான் என் செய்கேன் | நான் என்ன பண்ணுவேன்! [இவ்வழகுகண்டு என்னால் தரிக்கப்போகிறதில்லையே!.] |

***எனக்கு ஸ்வாமியானவனே! அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநமான திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையவனே! அப்படிப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்தின் அழகைக்காட்டி என்னை ஆட்படுத்திக்கொண்டவனே!, என்னைப் போன்ற ஸம்ஸாரிகள் நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு பலவகைப்பட்ட சரீரங்களைப் பரிக்ரஹிக்குமாபோலே, நிர்ஹேதுக கருணையினாலும் திவ்யஸங்கல்பத்தாலும் வேண்டினபடியெல்லாம் அவதார ரூபங்களைப் பரிக்ரஹித்துப் பேரருள் செய்பவனே!, இங்ஙனே உபகாரமே வடிவாயிருக்கின்ற நீ இன்னமும் எனக்குச்செய்ய வேண்டிய உபகாரங்களைச் செய்யத்தவறலாமோ? ஒன்றும் செய்யவேண்டா; திருக்கண்களைத் திறந்து கடாக்ஷித்தருளுமித்தனை போராதோ அடியேனுக்கு என்கிறார். (உ)

3196 என்னான்செய்கேன்யாரேகளைகண் என்னைஎன்செய்கின்றாய் ?
உன்னாலல்லால்யாவராலும் ஒன்றும்குறைவேண்டேன் *
கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தாய் அடியேனருவாணாள் *
சென்னாளெந்நாளந்நாள் உனதாள்பிடித்தேசெலக்காணே. (௩)

| | |
|---|---|
| நான் என் செய்கேன் | அடியேன் என்ன செய்வேன்! |
| களைகண் யாரே | ரக்ஷகராவார் யாவர்? |
| என்னை என் செய்கின்றாய் | என்னை என்னசெய்வதாக இருக்கிறாய்! |
| உன்னால் அல்லால் | உன்னைத் தவிர்த்து |
| யாவராலும் | வேறு ஒருவிதமான உபாயத்தாலும் |
| குறை ஒன்றும் வேண்டேன் | சிறிதும் அபேக்ஷையுடையேனல்லேன்; |
| கன் ஆர் மதில் சூழ் குடந்தை கிடந்தாய் | வேலைப்பாடு பொருந்திய மதிள்சூழ்ந்த திருக்குடந்தையிலே சயனித்தருள்பவனே! |
| அடியேன் அரு வாழ் நாள் செல் நாள் எ நாள் | அடியேனாகிற ஆத்மாவானது வாழும் காலத்தில் கழிகின்ற நாள்கள் எத்தனைநாளோ |
| அ நாள் | அந்த நாள்களெல்லாம் |
| உன தாள் பிடித்தே செல காண் | உனது திருவடிகளைப் பற்றிக் கொண்டே நடக்கும்படி கடாக்ஷித்தருளவேணும். |

* * * இப்படி துடித்துக் கூப்பிட்ட விடத்திலும் குளிர நோக்குதல் குசலப்ரச்னம் பண்ணுதல் ஒன்றும் செய்யாமையாலே, 'நாம் பேற்றுக்கு ஏதேனும் உபாயம் அனுட்டிக்க வேணும் என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றியிருக்கிறான் போலும்' என்று கொண்டு 'பிரானே! நான் என் காரியம் செய்கையென்று ஒன்றுண்டோ? நீயேசெய்து தலைக்கட்டித் தரவேணும்' என்கிறார். முதலடியில் மூன்றுவகையான கேள்விகள் அடங்கியிருக்கின்றன;

என்தலையிலே ஏதேனும் காரியம் ஏறிடுவதாக எண்ணியிருக்கிறாயோ? பிறரை ரக்ஷகராகத் தேடியோடும்படிசெய்ய நினைத்திருக்கிறாயோ? நீயே செய்வதாக நினைத்திருக்கிறாயோ? என்று கேள்விகள். உன் திருவடிகளைப் பெறுகைக்கு என்னால் செய்யலாவ தில்லாமையாலே என் தலையிலே ஒன்று ஏறிடவேண்டா; நீ உன்னைத் தரப் பார்த்தாயோ? உபாயாந்தரங்களைக்காட்டி அகற்றப்பார்த்தாயோ? "என்னான் செய்கேன்" என்பதனால் 'நான் என்ன செய்வது?' என்று கேட்கிறாரல்லர்; என்னாலே ஒன்றும் செய்யமுடியாதேஎன்று கையைவிரித்துச்சொல்லுகிறபடி. உன்னாலல்லால் யாவராலு மொன்றுங் குறைவேண்டேன் = உன்னுடைய க்ருபையாலே உன் திருவடிகளைப் பெறுகையொழிய வேறோருபாயத்தால் பெறுவதானாலும் வேண்டா என்றபடி. உபேயமும் உபாயமும் ஒன்றேயாயிருக்கவேணு மென்கை. 'யாவராலும்' என்று உயர்திணையாயிருந்தாலும் அஃறிணையாகவே பொருள் விவக்ஷிதம். எந்தக்ரியா கலாபமும் உபாயமாக வேண்டிற்றில்லை என்றபடி. இங்கே ஈடு;—"யாவையாலு மென்னாதே யாவராலு மென்கிறது உபாயபாவம் ஒருசேதநனாலே யென்றிருக்கையாலே" என்று. (௩)

3197 சேலக்காண்கிற்பார்காணுமளவும் செல்லும்கீர்த்தியாய் !*
உலப்பிலானே யெல்லாவுலகுமுடையவொருமூர்த்தி !*
நலத்தால்மிக்கார்குடந்தைக்கிடந்தாய் ! உன்னைக்காண்பான்நான்
அலப்பாய் * ஆகாசத்தைநோக்கி அழுவன்தொழுவனே. (௪)

| | |
|---|---|
| செல காண்கிற் பார் | மேலே மேலே காண வல்லவர்கள் |
| காணும் அளவும் | எவ்வளவு காண்பர்களோ அவ்வளவும் |
| செல்லும் கீர்த்தியாய் | வளர்ந்து செல்லுகின்ற திருக்குணங்களையுடையவனே! |
| உலப்பு இலானே | அந்தத் திருக்குணங்கட்கு முடிவு இல்லாதவனே |
| எல்லா உலகும் உடைய | எல்லாவுலகங்களுக்கும் ஸ்வாமியான |
| ஒரு மூர்த்தி | ஒப்பற்ற தலைவனே! |
| நலத்தால் மிக்கார் குடந்தை | பக்திமிகுந்தவர்கள் வாழ்கிற திருக்குடந்தையிலே |
| கிடந்தாய் | சயனித்தருள்பவனே! |
| நான் உன்னை காண்பான் அலப்பு ஆய் | நான் உன்னைக் காண வேண்டி அலமந்து |
| ஆகாசத்தை நோக்கி | (நீ வருதற்குரிய) வானத்தைப் பார்த்து |
| அழுவன் தொழுவன் | அழுவதும் தொழுவதும் செய்யாநின்றேன். |

* * * பிரானே! என்போல்வார்க்காக நீ திருக்குடந்தையிலே ஸன்னிதி பண்ணியிருந்தும் நினைத்தபடி பரிமாற்றம் கிடையாமையாலே நான் நோவுபடாநின்றேனென்கிறார். முதலடியினால், நீ படைத்த புகழெல்லாம் பாழாய்ப்போகிறதேயென்று வயிறு பிடிக்கிறார். தமக்கு உதவாமையினாலே இங்ஙனே சொல்லுகிறபடி. எம்பெருமானுடைய கீர்த்திகளை [அதாவது ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை] யார் யார் எவ்வளவு பேசுகிறார்களோ அவை அவ்வவ்வளவாயிருக்கும். மந்தமதிகள் பேசப்புக்காலும் அவர்களது வாக்கிலே அடங்கி நிற்கும்; மஹாமதிகள் பேசப்புக்காலும் அவர்களது திறமைக்குத் தக்கபடி கரை கட்டாக்காவேரி போலே பெருகிச் சென்றிருக்கும். (௪)

3198 அழுவன்தொழுவனாடிக்காண்பன் பாடியலற்றுவன் *
தழுவல்வினையால்பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன் *
செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய்! செந்தாமரைக்கண்ணா !*
தொழுவனேனையுனதாள் சேரும்வகையேசூழ்கண்டாய். (௫)

| | |
|---|---|
| செழு ஒண் பழனம் | செழுமைதங்கிய அழகிய நீர்நிலங்களை யுடைய |
| குடந்தை கிடந்தாய் | திருக்குடந்தையிலே சயனித்தருள்பவனே! |

| | | | |
|---|---|---|---|
| செம் தாமரை கண்ணு | செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடையவனே! | பக்கம் நோக்கி | (எந்தப்பக்கமாக நீவருகிறுயோ வென்று) பக்கந்தோறும் பார்த்து (எங்கும் வரக்காணுமை யாலே) |
| அழுவன் தொழு வன் | அழுவேன் தொழுவேன்; | நாணி கவிழ்ந்து இருப்பன் | வெட்கப்பட்டுத் தலைகவிழ்ந் திருப்பேன்; |
| ஆடி காண்பன் | நடனம் செய்து பார்ப்பேன்; | தொழுவனேனை | மிகுந்த அருவருப்பையுடைய ஞன என்னை |
| பாடி அலற்று வன் | வாயாரப்பாடிப் பிரலாபனம் செய்வேன்; | உன தாள்சேரும் வகையே | உன் திருவடியடையுமாறு |
| தழு வல் வினை யால் | என்னைத் தழுவிக்கொண்டிருக் கிற வலிய பாவத்திலை | சூழ் கண்டாய் | உபாயசிந்தை பண்ணவேணும். |

* * * பிரானே! உன் கண்ணழகிலே யீடுபட்டுப் பலவகை ப்ரவ்ருத்திகளும் பண்ணின விடத்திலும் பயன் பெற்றிலேன்; உன் திருவடிகளைச் சேரும்படி நீயே பார்த்தருளவேணுமென்கிறுர். அழுவன் தொழுவன்—சிறுவர் அழுகையினுலேயே எதையும் ஸாதிப்பர்கள்; அறிவுடையார் தொழுகையினுலேயே எதையும் ஸாதிப்பர்கள்; இருவர் படியையும் நான் ஏறிட்டுக்கொண்டு அழுவதும் தொழுவதும் செய்தாயிற்று. ஆடிக்காண்பன்— "இத்தனை சோறிடுகிறேம்; ஆடுகிறுயா?" என்றுல், பெரும் பசியாளர் ஆடுவதுண்டே; அப்படி ஆடியும் பார்ப்பேன். பாடியலற்றுவன்=சித்தப்ரமம் கொண்டவன் பாடுவதும் அலற்றுவதும் செய்யுமாபோலே அவையும் செய்யாநின்றேன். தழுவல்வினையால் பக்கம் நோக்கி நாணிக் கவிழ்ந்திருப்பன்=இங்கே வல்வினையென்று காதலைச் சொல்லுகிறது; வல்வினையின் பயனுக வுண்டான காதல் என்றபடி. அபேக்ஷித்தபடி ஸித்தியாமையாலே காதலை வல்வினையாகக் கருதிஞராயிற்று. என்னைத் தழுவி விடாதே நிற்கிற காதலாகிற ப்ரபல பாபத்தாலே, நீவருவதாக நினைத்துப் பக்கங்களிலே பார்த்து, வந்து காட்சிதராக் காணுமையாலே லஜ்ஜையோடே கவிழ் தலையிட்டிருப்பேன். தலைகவிழ்ந்து நிற்பேன் என்று சொல்லி, தமக்கு ஆகவேண்டிய காரியத்தைப் பின்னடிகளால் விண்ணப்பஞ் செய்கிறுர். (ரு)

3199 சூழ்கண்டாயென்தொல்லைவினையையறுத்து உன்னடிசேரும்
ஊழ்கண்டிருந்தே* தூராக்குழிதூர்த்து எனைநாளகன்றிருப்பன்?
வாழ்தொல்புகழார்குடந்தைக்கிடந்தாய்! வானேர்கோமானே!*
யாழினிசையே! அமுதே! அறிவின்பயனே! அரியேறே! (சு)

| | | | |
|---|---|---|---|
| வாழ் தொல் புகழார் குடந்தை | விளங்குகின்ற அநாதியான புகழையுடையார் வர்த்திக்கிற திருக்குடந்தையிலே | உன் அடி சேரும் ஊழ் கண்டு இருந்தே | நான் உனது திருவடிகளை யடையும்படியான முறைமையைக் கண்டிருந்தும் |
| கிடந்தாய் | சயனித்தருள்பவனே! | தூரா குழி தூர்த்து | ஒருநாளும் தூர்க்கவொண்ணுத இந்திரியக்குழிகளை நிறைத்துக் கொண்டு |
| வானேர் கோமானே | நித்யஸூரிநாதனே! | எனை நாள் | எத்தனைகாலம் |
| யாழின் இசையே | வீணுகானம்போலே பரம போக்யனுனவனே! | அகன்று இருப்பன் | உன்னைவிட்டுப் பிரிந்திருப்பேன்? |
| அமுதே | அமிருதம் போன்றவனே! | என் தொல்லை வினையை அறுத்து | (இப்படி அகன்றிருக்கைக்குக் காரணமான) என்னது அநாதி பாபங்களைத் தொலைத்து |
| அறிவின் பயனே | அறிவுக்குப் பலனுனவனே! | சூழ் கண்டாய் | என்னை ஸ்வீகரித்தருளவேணும். |
| அரி ஏறே | சிங்கமும் இடபமும் போன்று சிறந்தவனே! | | |

* * * பிரானே! உன்னுடைய போக்யதையிலே அகப்பட்டிருந்துள்ள வெனக்கு ஓர் உபகாரம் செய்தருளவேணும்; உன்னைப் பெறுதற்கு இடையூருன தொல்லைவினைகளை யெல்லாம் தொலைத்தருளி உன்னைப் பெறுவதொரு நல்விரகு பார்த்தருள வேணும் என்கிருர். (௬)

3200 அரியேறேயென்னம்பொற்சுடரே! செங்கண்கருமுகிலே!*
எரியேபவளக்குன்றே! நால்தோளெந்தாயுனதருளே*
பிரியாவடிமையென்னைக்கொண்டாய்! குடந்தைத்திருமாலே!*
தரியேனினியுன்சரணம்தந்து என்சன்மங்களையாயே. (எ)

அரி ஏறே — சிறந்த சிங்கமே!
என் அம் பொன் சுடரே — நான் அனுபவித்தற்குரிய அழகிய பொன்போன்ற ஒளியுருவனே!
செம் கண் கரு முகிலே — சிவந்த கண்களையுடைய காளமேகம் போன்றவனே!
எரி ஏய் பவளம் குன்றே — நக்ஷத்திர மண்டலத்தளவும் ஓங்கின பவளமலைபோன்றவனே!
நால் தோள் எந்தாய் — சதுர்ப்புஜ ஸ்வாமியே!
உனது அருளே — உனது கிருபையினுல்
என்னை பிரியா அடிமை கொண்டாய் — என்னை அத்தாணிச் சேவகங் கொண்டவனே!
குடந்தை திருமாலே — திருக்குடந்தையில் வாழும் திருமாலே!
இனி தரியேன் — இனிமேல் நான் தரித்திருக்ககில்லேன்;
உன் சரணம் தந்து — உனது திருவடிகளைக் கொடுத்தருளி
என் சன்மம் களையாய் — எனது சரீரத்தொடர்பைத் தவிர்த்தருளவேணும்.

* * * பிரானே! உன்னுடைய வைலக்ஷண்யத்தை நீயே காட்டித்தந்து அடிமையிலே என்னை ஊன்றவைத்தாயானபின்பு உன் திருவடிகளைத்தந்து தீரவேணுமன்றோ; தந்து பின்னை ஸம்ஸாரத்தைக் களைந்தொழியாய் என்கிருர். மேனுணிப்புத்தோற்ற விருக்குமிருப்பை அரியேறே! என்ற விளி காட்டும். அந்த மேனுணிப்புக்குத் தகுதியான வடிவுபடைத்தவனென்கிறது அம்பொற்சுடரே! என்பது. விலக்ஷணமான பொன்போலே ஸ்ப்ருஹணீயமான ஒளியையுடையவனே! என்றபடி. வடிவின் புகரைக்காட்டி என்னை யீடுபடுத்திக்கொண்டவனே! என்றவாறு. செங்கட்கருமுகிலே!—வாத்ஸல்யமாகிற அம்ருதத்தை வர்ஷிக்கிற திருக்கண்களையுடையவனே! என்றபடி. எரியேபவளக்குன்றே! = எரியென்று கேட்டை நக்ஷத்ரத்திற்கு வாசகமாய் நக்ஷத்ரஸாமாந்யத்தைச் சொல்லி நிற்கும். நக்ஷத்ரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கிற பவளக்குன்றுபோலே [பவழமயமான மலைபோலே] விலக்ஷணமான வடிவு படைத்தவனே! உகவாதார்க்கு அபிபவிக்க வொண்ணுமையும் உகந்தார்க்குப் பரமபோக்யனுயிருக்கையும் இத்தால் நினைக்கிறது. (எ)

3201 களைவாய்துன்பங்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்*
வளைவாய்நேமிப்படையாய்! குடந்தைக்கிடந்தமாமாயா!*
தளராவுடலமெனதாவி சரிந்துபோம்போது*
இளையாதுனதாளொருங்கப்பிடித்துப் போதவிசைநீயே. (அ)

வளை வாய் நேமி படையாய் — வளைந்த வாயையுடைய திருவாழியை ஆயுதமாகவுடையவனே!
குடந்தை கிடந்த — திருக்குடந்தையிலே சயனித்தருள்கின்ற
மா மாயா — மஹாச்சர்யரூபனே!
துன்பம் களைவாய் — எனது துன்பங்களை நீ களைந்தாலும் சரி;
களையா தொழிவாய் — களையாவிட்டாலும் சரி;
களைகண் மற்று இலேன்; — வேறு சரணமுடையேனல்லேன்;
உடலம் தளரா — உடல் தளர்ந்து
எனது ஆவி — என் உயிரானது
சரிந்து போம் போது — நிலைகுலைந்து உத்க்ரமணமடையும்போது

| | | | |
|---|---|---|---|
| இளையாது | மெலியாமல் | ஒருங்க பிடித்து போத | ஒருமிக்கப் பிடித்துப் போகும்படி |
| உன தாள் | உன் திருவடிகளையே | நீயே இசை | நீயே திருவுள்ளம்பற்றவேணும். |

* * * ப்ரபந்நர்கட்கு ஆகிஞ்சந்யம், அநந்யகதித்வம் என்ற இரண்டும் குலையா திருக்கவேணும். உபாயாந்தரங்களில் அந்வயலேசமும் அற்றிருக்கை ஆகிஞ்சந்ய மெனப் படும். எம்பெருமான் பக்கலில் முகம் பெறுதொழியினும் பிறர்மனைதேடி யோடப்பாராதே "ரக்ஷித்தபோதோடு ரக்ஷியாதபோதோடு வாசியற இவ்விடமொழிய வேறுபுகலில்லை" என்கிற திண்ணிய அத்யவஸாயத்துடனிருக்கை அநந்யகதித்வமெனப்படும். அது இப்பாட்டின் முத லடியில் தெளிவாகிறது. எனக்கு உன்னுடைய அநுபவம் கிடையாமற்போனாலும் உன் திரு வடியே தஞ்சமென்று பிறந்த விச்வாஸம் குலையாதபடி பார்த்தருளவேணுமென்கிறார். தளரா வுடலம்='உடலம் தளரா' என்று அந்வயிப்பது. தளரா வென்பது செய்யாவென்னும் வாய் பாட்டிறந்தகாலவினையெச்சம்; தளர்ந்து என்றபடி. எனது சரீரமானது கட்டுக்குலைந்து என் பிராணன் முடிந்து போமளவு இதுவாயிற்று. [இளையாது இத்யாதி.] அபேக்ஷிதம் பெறு கிறேன், இல்லை, அது தனிப்பட்ட விஷயம். நான் உன் திருவடிகளைப் பற்றின பற்று நெகி ழாமற் பண்ணியருளவேணும். அநுபவம் பெறுமையாலே அதுக்கடியான உபாயாத்யவஸா யமும் குலைகிறதோவென்று அஞ்சி அது குலையாதபடி பார்த்தருள வேணுமென்றாராயிற்று. ஒருங்க—நிரந்தரமாக என்றபடி. (அ)

3202 இசைவித்தென்னையுன்தாளிணைக்கீழ் இருத்துமம்மானே !*
அசைவிலமரர்தலைவர்தலைவா! ஆதிப்பெருமூர்த்தி !*
திசைவில்வீசும்செழுமாமணிகள்சேரும் திருக்குடந்தை *
அசைவிலுலகம்பரவக்கிடந்தாய்! காணவாராயே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| என்னை | நெடுநாள் விமுகனாயிருந்த வென்னை | ஆதி பெரு மூர்த்தி | ஸகலஜகத்காரணபூதமான திவ்ய விக்ரஹத்தையுடைய வனே! |
| இசைவித்து | அடிமைக்கு இசையும்படிசெய்து | திசை வில் வீசும் செழு மா மணி கள் சேரும் | எங்கும் ஒளிவீசுகின்ற மிகச் சிறந்த ரத்னங்கள் சேருமிட மான |
| உன் தாள் இணை கீழ் | உனது உபய பாதங்களின் கீழே | திரு குடந்தை | திருக்குடந்தையிலே |
| இருத்தும் அம் மானே | தங்கும்படி செய்தருளின ஸ்வாமியே! | அசைவு இல் | ஓய்வில்லாதபடி [அநவரதம்] |
| அசைவு இல் அமரர் தலைவர் | நித்யஸூரிகளுக்குள் தலைவ ரான அநந்தகருடவிஷ்வக் ஸேனர்களுக்கும் | உலகம் பரவ | உலகமெல்லாம் துதிக்கும்படி |
| | | கிடந்தாய் | சயனித்தருள்பவனே! |
| தலைவா | முதல்வனே! | காண வாராய் | நான் கண்டு அநுபவிக்கும்படி வரவேணும். |

இசைவித்து என்னை என்கையாலே நெடுநாள் திருவடிஸேவைக்கு இசையாதிருந்த தம்மை எம்பெருமான்தானே வருந்தி யிசைவித்தமை ஸ்பஷ்டமாக விளங்கும். திசைவில் வீசும் செழுமாமணிகள் என்று திருமழிசை யாழ்வார்போல்வாரைச் சொல்லுகிறதென்று ஸம் ப்ரதாயம். திசைகள்தோறும் பரந்த புகழையுடைய மஹாஜ்ஞாதாக்கள் சேருமிடமான திருக் குடந்தை யென்கை. இங்கே ஈட்டுஸ்ரீஸூக்தி:—"ஆராவமுதாழ்வார் திருமழிசைப்பிரான் போல்வார் புருஷரத்னங்கள் சேரும் திருக்குடந்தை யென்று நிர்வஹிப்பர்கள்" என்று. (கூ)

3203 வாராவருவாய்வருமென்மாயா! மாயாமூர்த்தியாய் !*
ஆராவமுதாயடியேனுவி அகமேதித்திப்பாய்*

தீராவினைகள்தீரவென்னையாண்டாய்! திருக்குடந்தை
யூரா!* உனக்காட்பட்டும் அடியேனின்னமுழல்வேனோ? (ய)

| | |
|---|---|
| வாரா | திருவுருவத்தோடு வாராமல் |
| அருஆய் வரும் | அருபியாய் உள்ளே வந்து தோன்றுகின்ற |
| என் மாயா | என் மாயவனே! |
| மாயா மூர்த்தி யாய் | ஒருகாலும் அழியாத திவ்ய மங்களவிக்ரஹத்தையுடையவனே! |
| ஆரா அமுது ஆய் | எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்தி பிறவாத அமிருதமாய்க்கொண்டு |
| அடியேன் ஆவி அகமே தித்திப் பாய் | என் உள்ளுக்குள்ளே தித்தித்திருக்குமவனே! |
| தீரா வினைகள் தீர | தொலையாத பாவங்களும் தொலையும்படியாக |
| என்னை ஆண் டாய் | அடியேனை ஆண்டருளினவனே! |
| திரு குடந்தை ஊரா | திருக்குடந்தைப்பதியோனே! |
| அடியேன் | அடியேன் |
| உனக்கு ஆள் பட்டும் | உனக்கு அடிமைப் பட்டும் |
| இன்னம் உழல் வேனோ | இன்னமும் கிலேசப்படு வேனோ! |

அநுபவித்தே தொலைக்கவேண்டிய வினைகளும் தொலையுமாறு என்னையடிமை கொள்ளுகைக்குத் திருக்குடந்தையிலே வந்து நித்ய ஸன்னிதி பண்ணியிருக்குமவனே! ஸம்ஸாரிகளை அநுபவிப்பிக்கவந்து கிடக்கிறவுனக்கு ஆட்பட்டும் இன்னும் என் ஆர்த்தி தீரப்பெற்றதில்லையே. இன்ன மெத்தனை திருப்பதிகள் புக்குத் தட்டித் திரியக்கடவேனாகத் திருவுள்ளமோ? தெரியவில்லையே என்கிறார். நான்காமடியின் முதற்சொல் ஊரா! என்றும் ஊராய்! என்றும் இருவகையிலும் பொருந்தும். ஊரன் என்பது விளியுருபு ஏற்றால் 'ஊரா' என்றாகும்; ஊரான் என்பது விளியுருபு ஏற்றால் ஊராய் என்றாகும். (ய)

3204

உழலையென்பின்பேய்ச்சிமுலையூடு அவளையுயிருண்டான் *
கழல்களவையேசரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன் *
குழலின்மலியச்சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும் *
மழலைதீரவல்லார் காமர்மானேய்நோக்கியர்க்கே. (கக)

| | |
|---|---|
| உழலை என் பின் பேய்ச்சி | உழல்தடிபோன்ற எலும்புகளையுடையளானபூதனையினுடைய |
| முலை ஊடு | முலைவழியாக |
| அவள் உயிரை உண்டான் | அவளது உயிரைமுடித்த பெருமானுடைய |
| கழல்கள் அவையே | திருவடிகளையே |
| சரண் ஆக கொண்ட | சரணமாகப்பற்றின |
| குருகூர் சடகோ பன் | ஆழ்வார் |
| குழலில் மலிய | குழலோசையிற் காட்டிலும் இனிதாக |
| சொன்ன | அருளிச்செய்த |
| ஓர் ஆயிரத்துள் | ஒப்பற்ற ஆயிரத்தினுள்ளே |
| இ பத்தும் | இப்பதிகத்தை |
| மழலை தீர | தமது அறியாமை தொலையும்படி |
| வல்லார் | அதிகரிக்கவல்லவர்கள் |
| மான் ஏய் நோக் கியர்க்கு | மான்போன்ற நோக்கையுடைய திவ்யாப்ஸரஸ்ஸுக்களுக்கு |
| காமர் | ஆதரிக்கத்தக்கவராவர். |

எட்டாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஸ்ரீ:

# அஞ்சாம்பத்து—ஒன்பதாந் திருவாய்மொழி மானேய்நோக்குநல்லீர்.



கீழ்த்திருவாய்மொழியில் திருக்குடந்தையிலே தளர்ந்தார். அங்குநின்றும் திருவல்லவாழென்கிற மலைநாட்டுத் திருப்பதியேறப் போகவொருப்பட்டு, அங்குப் போகவும்முடியாமே அவ்வூர்க்கு அருகிலிருந்தவூரில், சோலைகளும் அங்குள்ள பரிமளத்தைக்கொய்து கொண்டு புறப்படுகிறதென்றலும் வண்டுகளின் இனிதான மிடற்றோசைகளும் வைதிகாநுஷ்டான கோலாஹலங்களும் மற்றுமுண்டான ஸம்ப்ரமங்களுமெல்லாம் தம்மை மிகவும் நலிய, அவற்றாலுண்டான நோவுபாட்டைத் தோழிமாரைக் குறித்துத் தலைவி சொல்லும் பாசுரமாகப் பேசுகிறது இத்திருவாய்மொழி.

3205 மானேய்நோக்குநல்லீர்! வைகலும்வினையேன்மெலிய *
வானார்வண்கமுகும் மதுமல்லிகைகமழும் *
தேனார்சோலைகள்சூழ் திருவல்லவாழுறையும்
கோனாரை * அடியேன் அடிகூடுவதென்றுகொலோ ? (க)

| | | | |
|---|---|---|---|
| மான் ஏய் நோக்கு நல்லீர் | மான் போன்ற நோக்கையுடைய பெண்களே! | தேன் ஆர் சோலைகள் சூழ் | தேன் நிரம்பிய சோலைகளால் சூழப்பட்ட |
| வினையேன் வைகலும் மெலிய | பாவியான நான் எப்போதும் இளைக்கும்படியாக, | திரு வல்லவாழ் | திருவல்லவாழிலே |
| வான் ஆர் வண் கமுகும் | ஆகாசத்தை யளாவிய அழகிய பாக்கு மரங்களும் | உறையும் | நித்யவாஸம் பண்ணுகிற |
| மது மல்லிகை | மது வொழுகுகின்ற மல்லிகை மலர்களும் | கோனாரை அடி | ஸ்வாமியின் திருவடிகளை |
| கமழும் | வாஸிக்கப்பெற்ற | அடியேன் கூடுவது என்று கொல் | அடியேன் கூடப்பெறுவது என்றைக்கோ?. |

* * * அழகிய நோக்குடைய தோழிகளே! பிரிந்து வருந்துவதற்கே ஹேதுவான மஹாபாபத்தைப் பண்ணின நான் நாடோறும் வ்யஸநங்களால் மெலிவதற்காகவே நித்யவஸந்தமான சிறந்த பொழில்களால் சூழப்பட்ட திருவல்லவாழிலே நித்யவாஸம் பண்ணுகின்ற ஸ்வாமியின் திருவடிகளிலே சேரப்பெறுவது என்றைக்கோ வென்கிறாள். (க)

3206 என்றுகொல்தோழிமீர்காள்! எம்மைநீர்நலிந்தென்செய்தீரோ?*
பொன்திகழ்புன்னைமகிழ் புதுமாதவிமீதணவி*
தென்றல்மணங்கமழும் திருவல்லவாழ்நகருள்
நின்றபிரான்* அடிநீறு அடியோங்கொண்டுசூடுவதே. (உ)

| | | | |
|---|---|---|---|
| தோழிமீர்காள் | தோழிகளே! | மகிழ் | மகிழமரங்களென்ன |
| நீர் எம்மை நலிந்து | நீங்கள் எம்மை வருத்தப் படுத்தி | புது மாதவி | புதியகுருக்கத்திகளென்ன |
| என் செய்தீர் | என்ன காரியம் செய்தீர்கள்! | மீது அணவி | ஆகிய இவற்றின் மேலேபடிந்து |
| தென்றல் | தென்றல் காற்றானது | மணம் கமழும் | பரிமளத்தை வீசி உலாவுமிடமான |
| பொன் திகழ் புன்னை | பொன்போல் விளங்குகிற தாதுகளையுடைய புன்னை மரங்களென்ன | திருவல்லவாழ் நகருள் | திருவல்லவாழ்ப்பதியிலே |

| | | | |
|---|---|---|---|
| நின்ற பிரான் | நிலைபெற்றிருக்கிறஸ்வாமியினுடைய | அடியோம் கொண்டு சூடுவது | அடியோம் ஸ்வீகரித்து அணிந்து கொள்வது |
| அடி நீறு | ஸ்ரீபாத ரேணுவை | என்று கொல் | என்றைக்கோ?. |

* * * தோழிகாள்! என்ப்ரக்ருதியை அறிந்திருக்கிறநீங்கள் எனக்கு ப்ரியமானவற்றைச் சொல்லி என்னைத் தேற்ற வேண்டியது ப்ராப்தமாயிருக்க, என்னைக்கண்டிப்பதிலே ஒருப்பட்டிருப்பதனால் உங்கட்கு என்ன பயனுண்டாகும். உங்கள்வழியிலே நான் மீளப் போகிறேனென்று எண்ணமோ; அது ஒருநாளுமில்லை. திருவல்லவாழ்நகர்ச் சோலைகளிலிருந்து வீசுகின்ற நறுமணம் மிக்க தென்றலானது என்னை அவ்வழியே இழுக்க நான் உங்கள் வழியே வருவதற்கு ப்ரஸக்தியுண்டோ; அத்தலத்துப் பெருமானுடைய பாதாரவிந்த ரேணுவைச் சிரமீது அணியப்பெறவேணு மென்றன்றோ எனக்கு ஆவலிருப்பது; அதுபற்றி ஏதேனும் சொல்லவல்லிகோளாகில் சொல்லுங்கோள்; வீணாக என்னை நலிவது வேண்டாளன்றாளாயிற்று.

3207 சூடுமலர்க்குழலீர்! துயராட்டியேனைமெலிய *
பாடுநல்வேதவொலி பரவைத்திரைபோல்முழங்க *
மாடுயர்ந்தோமப்புகைகமழும் தண்திருவல்லவாழ் *
நீடுறைகின்றபிரான் கழல்காண்டுங்கொல்நிச்சலுமே? (௩)

| | | | |
|---|---|---|---|
| மலர் சூடும் குழலீர் | பூக்களணிந்த கூந்தலையுடைய மாதர்களே! | ஓமம் புகை கமழும் | ஹோமதூமங்கள் பரிமளிக்கப் பெற்ற |
| துயராட்டியேன் மெலிய | துக்கங்களை யனுபவிக்கின்ற நான் இளைக்கும்படியாக | தண் திருவல்ல வாழ் | குளிர்ந்த திருவல்ல வாழிலே |
| பாடு நல்வேதம் ஒலி | பாடப்படுகின்ற ஸாமவேத கோஷமானது | நீடு உறைகின்ற பிரான் | நித்யவாஸம் பண்ணுகின்ற எம்பிரானுடைய |
| பரவை திரை போல் முழங்க | கடலின் அலைக்கிளர்ச்சிபோல் முழங்கா நிற்க. | கழல் | திருவடிகளை |
| | | நிச்சலும் | எப்போதும் |
| மாடு உயர்ந்து | பக்கங்களிலே ஓங்கி | காண்டும் கொல் | காணப்பெறுவோமா?. |

3208 நிச்சலும்தோழிமீர்காள்! எம்மைநீர்நலிந்தென்செய்தீரோ?*
பச்சிலைநீள்கமுகும் பலவும்தேங்கும்வாழைகளும் *
மச்சணிமாடங்கள்மீதணவும் தண்திருவல்லவாழ் *
நச்சரவினணைமேல் நம்பிரானதுநன்னலமே. (௪)

| | | | |
|---|---|---|---|
| தோழிமீர்காள் | தோழிகளே! | மச்சு அணி மாடங்கள் மீது அணவும் | மச்சுகளின் நிரையையுடைய மாடங்களின் மேலே தழைத்துப்பொருந்தும்படியான |
| நீர் எம்மை நிச்சலும் நலிந்து என் செய்தீர் | நீங்கள் எம்மை எப்போதும் ஹிம்ஸித்து என்ன லாபமடைந்திகோள்? | தண் திருவல்ல வாழ் | குளிர்ந்த திருவல்ல வாழிலே |
| பச்சிலை நீள் கமுகும் | பசுத்த இலைகளையுடைய நீண்ட பாக்கு மரங்களும் | நஞ்சு அரவு இன் அணைமேல் | (ஆச்ரித விரோதிகளின் மேலே) நஞ்சை யுமிழ்கிற அரவாகிய இனிய படுக்கையின் மேலே சயனித்திருக்கிற |
| பலவும் | பலாமரங்களும் | | |
| தெங்கும் | தென்னை மரங்களும் | நம் பிரானது | எம்பெருமானுடையதாக ஆய் விட்டது (எதுவென்றால்) |
| வாழைகளும் | வாழைமரங்களும் | நல் நலம் | (எனது) நற் சீவன். |

திருவல்லவாழில் எம்பெருமான் நின்ற திருக்கோலமேயன்றி சயனத்திருக்கோலமன்று; *திருவல்லவாழ்நகருள் நின்றபிரான்* என்று கீழே இரண்டாம் பாட்டிலு மருளிச் செய்துள்ளது. இப்பாட்டு "திருவல்லவாழ் நச்சரவினணைமேல் நம்பிரான்" என்று சயனத்

திருக்கோலமாகக் கூறுகின்றாரென்று நினைக்க வேடண்டா: நச்சரவினணை மேல்நம்பிரானென்றது அத்தலத்து ஸ்திதியைச் சொன்னபடியன்று; எம்பெருமானுடைய பொதுவிசேஷண மிருக்கிறபடி. *அத்தியூரான்....அணிமணியின் துத்திசேர் நாகத்தின்மேல் துயில்வான்* என்ற விடம்போல. (ரு)

3209 நன்னலத்தோழிமீர்காள்! நல்லவந்தணர்வேள்விப்புகை *
மைந்நலங்கொண்டுஉயர்விண்மறைக்கும் தண்திருவல்லவாழ் *
கன்னலங்கட்டிதன்னைக் கனியையின்னமுதந்தன்னை *
என்னலங்கொள்சுடரை என்றுகொல்கண்கள்காண்பதுவே ? (சு)

| | |
|---|---|
| நல் நலம் தொழி மீர்காள் | சிறந்த நேசமுள்ள தோழிகளே! |
| நல்ல அந்தணர் வேள்வி புகை | வைதிக ப்ராம்மணர்கள் செய்யும் யாகங்களிலுண்டான புகை |
| மை நலம் கொண்டு | மையினுடைய நல்ல நிறத்தைக் கொண்டு |
| உயர் விண் மறைக்கும் | உயர்ந்த ஆகாசத்தை மறைக்குமிடமான |
| தண் திருவல்ல வாழ் | குளிர்ந்த திருவல்லவாழிலே எழுந்தருளியிருப்பவனும் |
| கன்னல் அம் கட்டி தன்னை | கோதற்ற கன்னற்கட்டி போன்றவனும் |
| கனியை | பரிபக்குவமான பழம் போன்றவனும் |
| இன் அமுதம் தன்னை | இனிய அமுதமாயிருப்பவனும் |
| என் நலம் கொள் | என்னுடைய ஸர்வஸ்வத்தையும் கொள்ளை கொண்டவனும் |
| சுடரை | (அத்தாலே) ஒளிபெற்று விளங்குபவனுமான எம்பெருமானை |
| கண்கள் காண்பது என்று கொல் | எனது கண்கள் காணப் பெறுவது எந்நாளோ?. |

3210 காண்பதெஞ்ஞான்றுகோலோ? வினையேன்கனிவாய்மடவீர் !*
பாண்குரல்வண்டினொடு பசுந்தென்றலுமாகியெங்கும் *
சேண்சினையோங்கு மரச்செழுங்கானல்திருவல்லவாழ் *
மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்களே. (சா)

| | |
|---|---|
| கனி வாய் மடவீர் | கனிபோன்ற வாயையுடைய தோழிகளே! |
| எங்கும் | எங்குப்பார்த்தாலும் |
| பாண் குரல் வண்டினொடு | கானரூபமான மிடற்றோசையையுடைய வண்டுகளும் |
| பசு தென்றலும் ஆகி | புதுத்தென்றலுமாய் |
| சேண் சினை ஓங்கு மரம் | உயர்ந்தபணைகளையுடைத்தாய்க்கொண்டு வளருகிற மரங்களையுடைய |
| செழு கானல் திரு வல்ல வாழ் | அழகிய கடற்கரைச்சோலையையுடைத்தான திருவல்லவாழிலே நிற்கிற |
| மாண் குறள் கோலம் பிரான் தாமரை மலர் பாதங்கள் | சிறந்த ப்ரஹ்மசாரி வேஷத்தையுடையனான எம்பிரானுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளை |
| வினையேன் காண்பது எஞ்ஞான்றுகொலோ | பாவியாகிய நான் ஸேவிக்கப்பெறுவது என்றைக்கோ. |

*** நல்லமிடற்றோசையையுடைய வண்டுகளும் இளந்தென்றலும் பொருந்தியசோலைகளால் சூழப்பட்ட திருவல்லவாழ்ப்பதியிலே வாமநாவதார ஸௌந்தர்யத்தை நினைப்பூட்டிக் கொண்டு ஸேவைதந்தருள்நின்ற எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளை நான் காண்பது என்றைக்கு? நீங்கள் விரைவாகக் கூட்டிவைக்கவேணு மென்றபடி. (சா)

3211 பாதங்கள்மேலணி பூந்தொழக்கூடுங்கொல்? பாவைநல்லீர் !*
ஓதநெடுந்தடத்துள் உயர்தாமரைசெங்கழுநீர் *
மாதர்கள்வாண்முகமும் கண்ணுமேந்தும்திருவல்லவாழ் *
நாதனிஞ்ஞாலமுண்ட நம்பிரான்தன்னைநாடோறுமே. (எ)

| | |
|---|---|
| பாவை நல்லீர் | பாவைபோலே அழகிய தோழிகளே! |
| ஓதம் நெடு தடத்துள் | கடல்போன்றுபெரிய தடாகங்களுக்குள்ளே |
| உயர் தாமரை செங்கழுநீர் | உயர்ந்த தாமரைப்பூக்களும் செங்கழுநீர்ப்பூக்களும் |
| மாதர்கள் வாள் முகமும் கண்ணும் ஏந்தும் | ஸ்த்ரீகளின் ஒளிபொருந்திய முகத்தழகையும் கண்ணழகையும் தாங்கும்படியான |
| திருவல்லவாழ் நாதன் | திருவல்லவாழ்நகருக்கு தலைவனாய் |
| இ ஞாலம் உண்ட | இவ்வுலகங்களை யெல்லாம் பிரளயங்கொள்ளாதபடி காத்தவனை |
| நம் பிரான் தன்னை | எம்பெருமானுடைய |
| பாதங்கள் மேல் அணி | திருவடிகளின் மேலே சாத்தின |
| பூ | புஷ்பங்களையாவது |
| நாள் தொறும் தொழ கூடும் கொல் | நாடோறும் தொழ நேருமோ? |

✣ ✣ ✣ இப்பாட்டில் பாவைநல்லீர்! என்று தோழிகளை உகந்து விளித்திருக்கின்றது; ஆறுயிரப்படி யருளிச்செயல்—"தன் மநோரதத்தை நிஷேதியாமையாலே தோழிமாரை உகந்து ஸம்போதிக்கிறாள்" என்று. ஈட்டு ஸ்ரீஸூக்தி— "இவளை நிஷேதிக்கைக்கு க்ஷமைகளன்றிக்கே ஸ்திமிதைகளா யிருந்தபடி; எழுதின பாவைபோலே யிருந்தார்கள்" என்று. கடல்போலே பெருத்திருந்துள்ள பொய்கைகளிலே வளர்ந்த தாமரைப்பூக்களும் செங்கழுநீர்ப்பூக்களும் ஸ்த்ரீகளுடைய அழகிய முகங்களோடும் கண்களோடும் ஒக்கும்படியாகவுள்ள திருவல்லவாழ்நகருக்கு நாயகனாய் ஸமயவிசேஷங்களிலே ஸகல ஜகத்துக்கும் ரக்ஷகனானவனுடைய திருவடிகளிலே சாத்தின புஷ்பத்தையாகிலும் ஸேவிக்கப்பெறுவோமோ வென்கிறாள். (எ)

3212 நாடோறும்வீடின்றியே தொழக்கூடுங்கோல்? நன்னுதலீர் !✣
ஆடுறுதீங்கரும்பும் விளைசெந்நெலுமாகியெங்கும் ✣
மாடுறுபூந்தடம்சேர் வயல்சூழ்தண்திருவல்லவாழ் ✣
நீடுறைகின்றபிரான் நிலம்தாவியநீள்கழலே. (அ)

| | |
|---|---|
| நல் நுதலீர் | அழகிய நெற்றியையுடைய தோழிகளே! |
| எங்கும் | எவ்விடத்திலும் |
| ஆடு உறு தீம் கரும்பும் | ஆலையிலிட்டு ஆடுதற்குரிய இனிமையான கரும்புகளும் |
| விளை செந் நெலும் ஆகி | முதிர விளைந்த செந்நெற் பயிர்களுமாய் |
| மாடு உறு பூ தடம் சேர் | பக்கங்களில் நெருங்கிய பூத்த தடாகங்களை யுடைத்தாய் |
| வயல் சூழ் | கழனிகளாலே சூழப்பட்ட |
| தண் திருவல்லவாழ் | குளிர்ந்த திருவல்லவாழிலே |
| நீடு உறைகின்ற பிரான் | நித்யவாஸம் செய்தருளாநின்ற எம்பெருமானுடைய |
| நிலம் தாவிய நீள் கழல் | பூமிமுழுவதையு மொருகால் அளந்துகொண்ட நீண்ட திருவடிகளை |
| நாள்தொறும் வீடு இன்றியே | நாடோறும் விச்சேதமில்லாமல் |
| தொழ கூடும் கொல் | தொழ நேருமோ? |

✣ ✣ ✣ இப்பாட்டில் நன்னுதலீர் என்கிறவிளியின் கருத்தாவது — திருவல்லவாழ் நாதனுக்கு நீங்கள் புருஷகாரம்பண்ணி அவன் இங்கே யெழுந்தருளினால் அவன் திருவடிகளிலே தெண்டனிட்டு அதனால் நெற்றிக்கு அலங்காரமாகப்பெறும் ஸ்ரீபாத ரேணுவையுடையீர்களாக உங்களைக் காண்பேனோ? என்பதாம். ஈட்டு ஸ்ரீஸூக்தி—"அவன் வந்த வுபகாரத்துக்கு அவன் திருவடிகளிலேவிழுந்து ப்ரணாமபாம்ஸுல பரார்த்த்ய லலாடைகளாக உங்களைக் காணவல்லேனோ" என்பதாம். (அ)

3213 கழல்வளைபூரிப்பயாம்கண்டு கைதொழக்கூடுங்கொலோ ?✣
குழலென்னயாழுமென்னக் குளிர்சோலையுள்தேனருந்தி ✣

மழலைவரிவண்டுகளிசைபாடும் திருவல்லவாழ் *
சுழலின்மலிசக்கரப்பெருமானது தொல்லருளே. (கூ)

| | |
|---|---|
| குளிர் சோலையுள் | குளிர்ந்த சோலைகளிலே |
| தேன் அருந்தி | மதுவைப் பருகி |
| மழலை வரி வண்டுகள் | மழலைத் தொனியையுடைய அழகியவண்டுகள் |
| குழல் என்ன யாழ் என்ன | வேணுகானமோ வீணுகானமோ என்னும்படியாக |
| இசை பாடும் | இசைபாடப்பெற்ற |
| திருவல்லவாழ் | திருவல்லவாழிலே |
| சுழலில் மலி சக்கரம் | சுழற்சி பொருந்திய திருவாழியையுடையனுன |
| பெருமானது | ஸர்வேச்வரனுடைய |
| தொல் அருள் | இயற்கையான திருவருளாலே |
| கழல் வளை பூரிப்ப யாம் கண்டு கை தொழ கூடும் கொல் | கழல் வளைகள் பூரிக்கும் படியாக யாம் கண்டு கைதொழ நேருமோ? |

* * * குளிர்ந்தசோலைகளிலே தேனைப்பருகி 'இது வேணுகானமோ? அல்லது வீணுகானமோ? என்று சந்தேகிக்குமாறு வண்டுகள் இசைபாடுமிடமான திருவல்லவாழிலே கையுந் திருவாழியுமாகக் காட்சி தாராநின்றுள்ள எம்பெருமானை அவன்றன்னுடைய திருவருளாலே யாம் கண்டு கை தொழ நேருமோ? என்கிருள். பிரிவாற்றுமையால் கைவளை கழலுமென்றும் கலவியின்பத்தால் மேனி தடித்து வளை பூரிக்குமென்றும் அநுபவமாதலால் "கழல்வளை பூரிப்ப" எனப்பட்டது. பாட்டு முடிவிலுள்ள அருள் என்பதை எழுவாயாகவைத்து, அருளானது யாம் கைதொழும்படியாக, கூடுங்கொலோ என்னவுமாம். (கூ)

3214 தொல்லருள்நல்வினையால் சொலக்கூடுங்கொல்தோழிமீர்காள் !*
தொல்லருள்மண்ணும்விண்ணும் தொழநின்றதிருநகரம் *
நல்லருளாயிரவர் நலனேந்தும்திருவல்லவாழ் *
நல்லருள்நம்பெருமான் நாராயணன்நாமங்களே. (ய)

| | |
|---|---|
| தோழிமீர்காள் | தோழிகளே!, |
| மண்ணும் விண்ணும் | உபயவிபூதியிலுள்ளாரும் |
| தொல் அருள் தொழ நின்ற திருநகரம் | தனது இயற்கைத் திருவருளைக் கொண்டாடும்படி நிற்குமிடமாய் |
| நல் அருள் ஆயிரவர் நலன் ஏந்தும் | மஹாதயாளுக்களான ஆயிரக்கணக்கான சிஷ்டர்கள் நன்மையோடு வர்த்திக்கு மிடமான |
| திருவல்லவாழ் | திருவல்லவாழிலே நிற்கிற |
| நல் அருள் நம் பெருமான் நாராயணன் | மஹாக்ருபாளுவாய் அஸ்மத் ஸ்வாமியான நாராயணனுடைய |
| நாமங்கள் | திருநாமங்களை |
| தொல் அருள் நல் வினையால் | (அவனது) இயற்கைத்திருவருளாகிற ஸுக்ருதவிசேஷத்தாலே |
| சொல கூடும் கொல் | நாம் சொல்ல நேருமோ? |

*** எம்பெருமானைக்காட்டிலும் அருள்மிக்கவரான ஆயிர மந்தணாளர்கள் மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு வாழுமிடமான திருவல்லவாழிலே நல்ல அருளையுடையனுய் நமக்கு ஸ்வாமியாயிருக்குமவனுடைய திருநாமங்களையாவது, தோழிகளே! அவனுடைய கருணையாகிற ஸுக்ருதவிசேஷத்தாலே நாம்சொல்லி வாழக்கூடுமோ வென்ருளாயிற்று. * நல னேத்தும்'' என்கிற பாடமுமுண்டென்பர். (ய)

3215 நாமங்களாயிரமுடைய நம்பெருமானடிமேல் *
சேமங்கொள்தென்குருகூர்ச் சடகோபன்தெரிந்துரைத்த *
நாமங்களாயிரத்துள் இவைபத்தும்திருவல்லவாழ் *
சேமங்கொள்தென்னகர்மேல் செப்புவார்சிறந்தார்பிறந்தே. (கக)

| | | | |
|---|---|---|---|
| நாமங்கள் ஆயிரம் உடைய நம் பெருமான் அடிமேல் | ஸஹஸ்ரநாமங்களையுடைய னை எம்பெருமானுடைய திருவடிகளின்மேலே | திரு வல்லவாழ் சேமம் கொள் தென் நகர் மேல் இவை பத்தும் | திருவல்லவாழாகிற—அரணமைந்த அழகிய திருப்பதி விஷயமான இப்பத்தையும் |
| சேமம் கொள் தென் குருகூர் சடகோபன் | திண்ணிய அத்யவஸாயமுடையவரான ஆழ்வார் | செப்புவார் | ஓதவல்லவர்கள் |
| தெரிந்து உரைத்த | ஆராய்ந்து அருளிச்செய்த | பிறந்தே | இவ்விருள் தருமாஞாலத்தில் பிறந்துவைத்தே |
| நாமங்கள் ஆயிரத்துள் | அவனது திருநாமம் போன்றதான ஆயிரத்தினுள்ளே | சிறந்தார் | சிறந்தவராவர். |

✦ ✦ ✦ இவை பத்தையும் திருவல்லவாழ் விஷயமாகச் சொல்லவல்லவர்கள் சரீரஸம்பந்தத்தோடே யிருந்துவைத்தும் பகவதநுபவமாகிற சிறப்பையுடையராவர் என்றதாயிற்று. **சேமம்**—க்ஷேமமென்ற வடசொல் விகாரம். (கக)

ஐந்தாம்பத்தில் ஒன்பதாந் திருவாய்மொழியுரை முற்றிற்று.

---

## அஞ்சாம்பத்து—பத்தாந் திருவாய்மொழி—பிறந்தவாறும்.

பிரானே! உன்னைப்பிரிந்து நோவுபட்டாலும் தரித்துநின்று குணாநுபவம் பண்ணவல்லேனும்படி பண்ணியருளவேணுமென்று அவன் திருவடிகளிலே சரணம் புகுகிறார் இத்திருவாய்மொழியில்.

3216 பிறந்தவாறும்வளர்ந்தவாறும் பெரியபாரதம்கைசெய்து ✦ ஐவர்க்குத்
திறங்கள்காட்டியிட்டுச் செய்துபோனமாயங்களும் ✦
நிறந்தனூடுபுக்கெனதாவியை நின்றுநின்றுருக்கியுண்கின்ற ✦ இச்
சிறந்தவான்சுடரே! உன்னையென்றுகொல்சேர்வதுவே? (க)

| | | | |
|---|---|---|---|
| பிறந்த ஆறும் | ஸம்ஸாரிகளைப்போலே தானும் வந்து பிறந்தபடியும் | நிறம் தன் ஊடு புக்கு | மருமமான ஹ்ருதய ப்ரதேசத்தினுள்ளே புகுந்து |
| வளர்ந்த ஆறும் | தன்னை மறைத்துக்கொண்டு வளர்ந்தபடியும் | எனது ஆவியை | என் ஆத்மாவை |
| பெரிய பாரதம் கை செய்து | மஹாபாரத யுத்தத்திலே சேனைகளை அணி வகுத்து | நின்று நின்று | இடைவிடாதே நின்று |
| ஐவர்க்கு திறங்கள் காட்டி யிட்டு | பஞ்சபாண்டவர்களுக்கு வெற்றி வழிகளைக் காட்டிக்கொடுத்து | உருக்கி உண்கின்ற – சிதிலமாக்கி நலியா நின்றன; | |
| செய்து போன மாயங்களும் | ஆக இப்படிப்பட்ட காரியங்களைச்செய்து முடித்துத் தன் தாமமே சென்று சேர்ந்த மாயங்களும் | இ சிறந்த வான் சுடரே | இப்படிப்பட்ட சிறப்புப் பொருந்திய அபரிச்சேத்ய தேஜோரூபனே! |
| | | உன்னை சேர்வது என்று கொல் | உன்னை நான் கிட்டப்பெறுவது என்றைக்கோ?. |

✦ ✦ ✦ கண்ணபிரானுடைய அவதாராதிகளைச் சுருங்கவருளிச்செய்து 'அந்தோ' இவை என்னை மருமத்திலே நலியாநின்றனவே; தரித்து உன்னையநுஸந்திக்க முடியவில்லையே! என்று தளர்கின்றார். கர்மவச்யரான ஸம்ஸாரிகள் கர்ப்பவாஸம் பண்ணிப் பிறக்குமாபோலே தானும் க்ருபாவச்யனாய் கர்ப்பவாஸம் பண்ணிப் பிறந்தமை என்னே! என்று பிறந்தவாறும்! என்று சொல்லி ஆறுமாதம் மோஹித்துக்கிடந்தாராக ப்ரஸித்தம். முன்னடிகளில் அநுஸந்திக்கப்பட்டதெல்லாம் தம்முடைய ஆத்மாவை மருமத்திலே புக்கு விடாதேநின்று சிதில

மாக்கி முடிக்கிறபடியைப் பேசி, பிரானே! உருகாதே கரையாதே தரித்துநின்று உன்னைப் பேசி மகிழும்வகை சொல்லாயென்கிறார் பின்னடிகளில். (க)

3217 வதுவைவார்த்தையுளேறுபாய்ந்ததும் மாயமாவினைவாய்பிளந்ததும்*
மதுவைவார்குழலார் குரவைபிணைந்தகுழகும் *
அதுவிதுவுதுவென்னலாவனவல்ல என்னையுன்செய்கைநைவிக்கும்*
முதுவையமுதல்வா ! உன்னையென்றுதலைப்பெய்வனே ? (உ)

- வதுவை வார்த்தையுள் ஏறு பாய்ந்ததும் — விவாஹப்ரஸ்தாவத்திலே விருஷபங்களை மேல் விழுந்து கொன்றதும்
- மாயம் மாவினை வாய் பிளந்ததும் — கபடமாகக் குதிரையுருக்கொண்டுவந்த அசுரனை வாய்கீண்டு ஒழித்ததும்
- மதுவை வார் குழலார் — மதுவைப் பெருக்குகின்ற கூந்தலையுடைய இடைப்பெண்களோடு
- குரவை பிணைந்த குழகும் — ராஸக்ரீடை பண்ணி ஒரு நீராக்கலந்திருந்ததும்
- அது இது உது என்னல் ஆவன அல்ல — ஒருபடியும் விசேஷித்துச் சொல்ல முடியாதவை;
- வையம் முது முதல்வா — உலகங்கட்கெல்லாம் மூல காரணபூதனே!
- உன் செய்கை என்னை நைவிக்கும் — உனது சேஷ்டிதங்கள் என்னைச் சிதிலமாக்குகின்றன
- உன்னை என்று தலைப்பெய்வன் — உன்னை என்றைக்குக் கிட்டுவேன்?.

* * * நப்பின்னைப்பிராட்டியை முன்னே நிறுத்தி, ஒருவர்க்குமடங்காத எழு ரிஷபங்களைக்காட்டி 'இவற்றை வலியடக்குமவர்க்கு இவளைக்கொடுக்கிறோம்' என்று ஒரு வார்த்தை விளைந்தவாறே தன்னைப்பேணாதே சென்று அந்தக் காளைகளின்மேலே பாய்ந்தபடி என்!, கறுக்கொண்ட கம்ஸனாலேவப்பட்டுக் குதிரைவடிவுகொண்டு நலியவந்த கேசியென்னுமசுரனுடைய வாயைப்பிளந்து முடித்தபடி என்! ✝ அங்கநாமங்கநாமந்தரே மாதவோ மாதவம் மாதவஞ்சாந்தரேணாங்கநா.✝ என்கிறபடியே ஒவ்வொரு கோபியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாக வடிவெடுத்து நின்று ராஸக்ரீடை பண்ணி ஸௌசீல்யம் காட்டின அழகு என்!; இன்ன சரித்திரம் இன்ன சரித்திரம் என்று நான் எடுத்தெடுத்துச் சொல்ல வேணுமோ? உன்னுடைய செய்கை எதுவானாலென்ன? 'நீ செய்த செயல்' என்னுமளவே போதுமானது. அவையெல்லாம் என்னை மிகவும் சிதிலமாக்கா நின்றன; பிரளயத்திலே அழுந்தின ஜகத்தை உண்டாக்கினாப்போலே என்னைத் தரிப்பித்து உன்னையநுபவிக்க வல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்கிறார். ✝இங்கிதம்ஙிமிஷிதஞ்ச தாவகம் ரம்யமத்புத மதிப்ரியங்கரம்✝ என்ற ஸுந்தரபாஹுஸ்தவஸ்ரீஸூக்தி இதில் மூன்றாமடிக்குச் சேர அநுஸந்தேயம். (உ)

3218 பெய்யும்பூங்குழல்பேய்முலையுண்ட பிள்ளைத்தேற்றமும் * பேர்ந்தோர்சாடிறச்
செய்யபாதமொன்றால் செய்தநின்சிறுச்சேவகமும் *
நெய்யுண்வார்த்தையுளன்னைகோல்கொள்ள நீயுன்தாமரைக்கண்கள்நீர்மல்க *
பையவேநிலையும்வந்து என்னெஞ்சையுருக்குங்களே. (ந)

- பெய்யும் பூ குழல் பேய் முலை உண்ட — வைக்கப்பட்ட பூக்களையுடைய கூந்தலையுடையளான பூதனையின் முலையைச் சுவைத்துண்ட
- பிள்ளை தேற்றமும் — இளமைத்தெளிவும்,
- ஓர் சாடு பேர்ந்து இற — (அஸுராவேசங்கொண்ட) ஒருசகடம் பேர்ந்து முறிந்து போம்படி
- செய்ய பாதம் ஒன்றால் செய்த — சிவந்த திருவடியொன்றாலே செய்தருளின
- நின் சிறு சேவகமும் — உன்னுடைய இளவீரமும்
- நெய் உண் வார்த்தையுள் — நெய்யை உண்ட விஷயம் ப்ரஸ்தாவத்திற்கு வந்தவளவிலே
- அன்னை கோல் கொள்ள — தாயானவள் கையிலே கோலையெடுத்துக்கொள்ள,
- நீ — எல்லாரையும் நியமிக்கப்பிறந்த நீ
- உன் தாமரை கண்கள் நீர் மல்க — உனது தாமரைபோன்ற திருக்கண்கள் நீர் நிரம்பும்படி
- பையவே நிலையும் — அஞ்சி நடுங்கி நிற்கும் நிலையும்
- வந்து — எப்போதும் என்னெஞ்சிலே வந்து தோன்றி
- என் நெஞ்சை உருக்குங்கள் — எனது உள்ளத்தை உருக்குகின்றன.

*** பிள்ளைத் தேற்றம்=பச்சுங்குழந்தையாயிருக்கச்செய்தேயும் தாய்முலை யென்றும் வேற்று முலை யென்றும் அறியுந் தெளிவு. சிறுச் சேவகம்=இளம்பிராயத்திலே காட்டின விக்கிரமம். (ரு)

3219 கள்ளவேடத்தைக்கொண்டுபோய்ப் புரம்புக்கவாறும் * கலந்தசுரரை
உள்ளம்பேதம்செய்திட்டு உயிருண்டவுபாயங்களும் *
வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடைவேறலாமைவிளங்கநின்றதும் *
உள்ளமுள்குடைந்து என்னுயிரையுருக்கியுண்ணுமே. (சா)

கள்ளம் வேடத்தை கொண்டு போய் — வேதபாஹ்ய புத்தரூப வேஷத்தைப் பரிக்ரஹித்து
புரம் புக்க ஆறும் — த்ரிபுரத்திலே ப்ரவேசித்த படியும்
அசுரரை கலந்து — அசுரரோடேசெறிந்து
உள்ளம் பேதம் செய்திட்டு — மனவேறுபாட்டையுண்டாக்கி
உயிர் உண்ட உபாயங்களும் — அவர்களுடைய உயிரைக் கவர்ந்த விரகுகளும்,
வெள்ளம் நீர் சடையானும் நின்னிடை வேறு அலாமை விளங்க நின்றதும் — கங்கா ப்ரவாஹத்தைச் சடையிலே தாங்கியுள்ள சிவனும் உன்பக்கல் வேறுபாடின்றி ஒற்றுமைபெற்று விளங்க நின்றதும் (ஆகிய இவை)
உள்ளம் உள் குடைந்து — என்னெஞ்சுக்குள்ளே அவகாஹித்து
என் உயிரை உருக்கி உண்ணும் — என் ஆத்மாவை நீராகவுருக்கியுண்கின்றன.

*** ஸ்ரீராமாயணத்தில் (அயோத்யா காண்டத்தில்) சித்ரகூடபரிஸரத்தில் பரதாழ்வானுக்குப் பரிந்து நாஸ்திகவாதம் பண்ணின ஜாபாலியை நோக்கி ஸ்ரீராமன் * யதா ஹி சோரஸ் ஸ ததா ஹி புத்த: * என்கிறான்; அதையுட்கொண்டு இங்கு ஆழ்வார் கள்ளவேடமென்கிறார். எம்பெருமான் புத்தமுநிவேஷங்கொண்டு அசுரர்களின் பட்டணங்களிலே புகுந்தபடியை * புரம்புக்கவாறும் * என்கிறது. ஆஸுரப்ரக்ருதிகளான அவர்களுக்கு அவைதிகமதத்தை உபந்யஸித்து வைதிக ச்ரத்தையைப்போக்கி அவ்வழியாலே அவர்களைக் கொன்றொழித்தபடியை * கலந்தசுரரை * இத்யாதியாலே சொன்னாரென்க. * விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ: * என்கிற ப்ரமாண ப்ரஸித்தியின்படி எம்பெருமான் சிவனுக்கு அந்தராத்மாவாக இருந்து த்ரிபுரஸம்ஹாரத்தை நிறைவேற்றியதுபற்றி * வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும் * என்கிறார். இவ்வாழ்வார் தாமே முதல் திருவாய்மொழியில் * புரமொரு மூன்றெரித்து * என்று த்ரிபுரஸம்ஹாரத்தைத் திருமாலின் காரியமாகவே அருளிச்செய்தமையுங்காண்க. (சா)

3220 உண்ணவானவர்கோனுக்கு ஆயரொருப்படுத்தவடிசிலுண்டதும் *
வண்ணமால்வரையையெடுத்து மழைகாத்ததும் *
மண்ணைமுன்படைத்துண்டுமிழ்ந்து கடந்திடந்துமணந்தமாயங்கள் *
எண்ணுந்தோறுமென்னெஞ்சு எரிவாய்மெழுகொக்கும்நின்றே. (ரு)

வானவர் கோனுக்கு உண்ண — தேவேந்திரனுடைய ஆராதனைக்காக
ஆயர் ஒருப்படுத்த — இடையர்கள் ஸந்நாஹஞ் செய்த
அடிசில் உண்டதும் — ப்ரஸாதங்களை யெல்லாம் தானே அமுதுசெய்ததும்
வண்ணம் மால் வரையை எடுத்து மழைகாத்ததும் — அழகிய பெருமலையைக் குடையாக வெடுத்து மழையைத் தடுத்ததும்
மண்ணை முன் படைத்து — பூமியை ஆதிகாலத்திலே ஸ்ருஷ்டித்து
உண்டு உமிழ்ந்து கடந்து இடந்து மணந்த மாயங்கள் — (ஸமய விசேஷங்களிலே) உண்டது உமிழ்ந்தது அளந்தது இடந்தது மணந்தது ஆக இப்படியான மாயங்களுமாகிற விவற்றை
எண்ணுந்தோறும் — சிந்திக்கிற போதெல்லாம்
என் நெஞ்சு — என் மனமானது
நின்று — எப்போதும்
எரி வாய் மெழுகு ஒக்கும் — நெருப்பருகிலுள்ள மெழுகையொத்திரா நின்றது.

3221 நின்றவாறுமிருந்தவாறும் கிடந்தவாறும்நினைப்பரியன +
ஒன்றலாவுருவாய் அருவாயநின்மாயங்கள் +
நின்றுநின்றுநினைகின்றேன் உன்னையெங்ஙனம்நினைகிற்பன்? + பாவியேற்கு
ஒன்றுநன்குரையாய் உலகமுண்டவொண்சுடரே. (சு)

நின்ற ஆறும் இருந்த ஆறும் கிடந்த ஆறும் — ஆங்காங்கு நிற்கிறபடிகளும் வீற்றிருக்கிற படிகளும் சயனித்திருக்கிறபடிகளும்

நினைப்பு அரியன — நெஞ்சாலும் நினைக்கமுடியாதவையாயிருக்கின்றன;

ஒன்று அலா உரு ஆய் — (இங்ஙனே) பலபடியாய்

அரு ஆய — (எனக்கு அநுபவிக்கைக்கு) உருத்தெரியாத

நின் மாயங்கள் — உனது அற்புதச் செயல்களை

நின்று நின்று நினைகின்றேன் — சிறிது சிறிதாக நினைக்கப் பார்க்கின்றேன்;

உலகம் உண்ட ஒண் சுடரே — உலகங்களை அமுதுசெய்த ஒளியுருவனே!

உன்னை எங்ஙனம் நினைகிற்பன் — உன்னை எப்படி நினைக்கவல்லேனுவேன்?

பாவியேற்கு ஒன்று நன்கு உரையாய் — தரித்து நின்று நினைக்க முடியாத பாவத்தைப் பண்ணினவெனக்கு ஒரு நல்விரகு அருளிச்செய்யவேணும்.

+ + + நின்றது மிருந்ததும் கிடந்ததும் இன்ன இன்னவிடங்களிலேயென்று வகுத்துக்கூறுமையாலே ஆசாரியர்கள் பலபடியும் ஈடுபட்டு நிர்வஹிப்பர்கள். கச்சிப்பதியில் ஊரகத்தில் நின்று, பாடகத்தில் இருந்து, வெஃகாவில் கிடந்தபடியுமாம். * புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கை யிருந்து வைகுந்தத்துள் நின்று + என்றபடியேயாகவுமாம். அன்றிக்கே, + நின்று மிருந்துங் கிடந்தும்........என்னெஞ்சு அகலான் + என்று இவ்வாழ்வார் தாமே பெரிய திருவந்தாதியில் அருளிச்செய்தபடியே இவைமூன்றும் இவருடைய திருவுள்ளத்திலேயாகவுமாம். ஆழ்வார் என்கிற அரையர் இப்பாசுரத்தைப் பாடுகையில் "இவையெல்லாம் தொட்டிலிலே" என்று எம்பெருமானுர் அருளிச்செய்தாராம். தொட்டிற் பழுவைப் பிடித்துக்கொண்டு நிற்கும்படியும், தரித்து நிற்கமாட்டாமை விழுந்திருக்கும்படியும், அதுதானும் பொறுக்கமாட்டாமே சாய்ந்து கிடக்கும்படியும். நினைப்பு அரியன = இவை என்றைக்கோ செய்து போகச் செய்தேயும் இன்று நினைப்பார்க்கு நினைக்கக் குறையில்லையே; ஆனாலும் தமக்கு நினைக்கப் போகாமை கூறுகின்றார். + நெஞ்சால் நினைப்பரிதால். + நினைக்க முடியாமையென்ன? எங்களைப்போல் நீரும் நினைக்கலாகாதோ? என்று சிலர் சொல்வதாகக்கொண்டு, மேலே கூறுகின்றார். பிரானே! ஒன்றோ இரண்டா? பல்லாயிரம்படிகளன்றோ உன்னுடையவை. எனக்கு அநுபவிக்கைக்கு உருத்தெரியாமலிருக்கிற உன்னுடைய ஆச்சர்ய சேஷ்டிதங்களானவற்றை எப்படியாவது நினைக்கவே நான் பாரிக்கின்றேன்; அந்தோ! எப்படி நினைக்கவல்லேனுவேன்? நெஞ்சு சிதிலமாகாம லிருந்தாலன்றோ நினைக்க முடியும் நீயே உபாயம் சொல்லியருளவேணுமென்கிறார். (சு)

3222 ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறும் உண்மையோடின்மையாய்வந்து + என்
கண்கொளாவகை நீகரந்தென்னைச்செய்கின்றன +
எண்கொள்சிந்தையுள்நைகின்றேன் என்கரியமாணிக்கமே! + என்கண்கட்குத்
திண்கொள்ளவொருநாள் அருளாயுன்திருவுருவே. (எ)

உண்மையோடு இன்மை ஆய் வந்து — மெய்யனாய்த் தோற்றுகை பொய்யனாய்த் தோற்றுகை ஆகிற இரண்டுபடியோடுங்கூடி

ஒண் சுடரோடு இருளும் ஆய் நின்ற ஆறும் — ஒண் சுடராயும் இருளாயும் நிற்கிறபடிகளும்

என் கண் கொளா வகை — என்கண் உன்னையநுபவியாதபடி

கரந்து — உள்ளேமறைந்து நின்று

நீ என்னை செய்கின்றன — நீ என்னைப் படுத்துகிறபாடுகளும் ஆகிறவிவற்றை

எண் கொள் சிந்தையுள் — எண்ண வேணுமென்கிற அபிநிவேசங்கொண்ட சிந்தையோடே
நைகின்றேன் — சிதிலனாகாநின்றேன்;
என் கரிய மாணிக்கமே — என்னை யீடுபடுத்தின நீலமணியுருவனே!
உன் திரு உரு — உனது திவ்யரூபத்தை
என் கண்கட்கு திண் கொள்ள — என்கண்களாலே திண்ணமாகக்காணும்படி
ஒரு நாள் அருளாய் — ஒருநாளாகிலும் கிருபை செய்தருளவேணும்.

✣ ✣ ✣ பிரானே! என்னளவில் நீ ஒண்சுடராகவோ இருளாகவோ ஏதேனுமொரு படி திண்ணமாக இருந்துவிட்டால் குறையில்லை. கண்ணுக்கு விஷயமாகாதபடி யிருக்கையாலே இருளாய், மறக்கவொண்ணாதபடி நெஞ்சிலே விசதமாக நிற்கையாலே சுடராய் இவ்விருபடியுமாக நின்று என்னை நீ செய்கிறவற்றை எண்ணநினைக்கிற நெஞ்சோடே நான் சிதிலனாகாநின்றேன்; உன்வடிவழகை எனக்கு புஜிக்கத்தந்தருளின நீ நான் திடமாகக் காணலாம்படி என்னுடைய கண்களுக்கு உன்னுடைய திருவுருவை ஒருநாளாகிலும் அருளவேணுமென்றாராயிற்று. (எ)

3223 திருவுருவுகிடந்தவாறும் கொப்பூழ்ச்செந்தாமரைமேல் ✣ திசைமுகன்
கருவுள்வீற்றிருந்து படைத்திட்டகருமங்களும் ✣
பொருவிலுன்தனிநாயகமவை கேட்குந்தோறுமென்னெஞ்சம்நின்றுநெக்கு ✣
அருவிசோருங்கண்ணீர் என்செய்கேனடியேனே ? (அ)

திரு உருவு கிடந்த ஆறும் — அழகிய திருமேனிகண்வளர்ந்தருளின படியும்
கொப்பூழ் செந்தாமரைமேல் — திருநாபிக் கமலத்திலே
திசைமுகன் கருவுள் — நான்முகனாகிற கருவுக்குள்ளே
வீற்றிருந்து — அந்தராத்மாவாக எழுந்தருளியிருந்து
படைத்திட்ட கருமங்களும் — ஸ்ருஷ்டித்த வியாபாரங்களுமாகிற
பொரு இல் — எதிரில்லாத
உன் தனி நாயகம் அவை — உன்னுடைய பரத்வ ப்ரகாசகமான அவற்றை
கேட்கும் தோறும் — (வேதாந்திகள் சொல்லக்) கேட்கிறபோதெல்லாம்
என் நெஞ்சம் — என் நெஞ்சானது
நின்று நெக்கு — கட்டுக்குலைந்து நெகிழ்ந்து நின்று
கண் நீர் அருவி சோரும் — கண்ணீர் அருவியாகப் பெருகாநின்றது;
அடியேன் என் செய்கேன் — தரித்திருக்க மாட்டாத அடியேன் என்ன பண்ணுவேன்?

✣ ✣ ✣ காரணமான ஏகார்ணவஜலத்திலே அழகிய திருமேனியோடே கண்வளர்ந்தருளினது ஸ்ருஷ்டிக்காக. பிறகு அந்தத் திருமேனியில் திருநாபிக்கமலத்திலுண்டான நான்முகனை அதிஷ்டித்து நின்று ஸத்வாரகமாக ஸகலஸ்ருஷ்டியும் செய்தபடி. இப்படிப்பட்டவிலக்ஷணகுண சேஷ்டிதங்களைக் கேட்குந்தோறும் என்னெஞ்சம் நெகிழ்ந்து நின்று கண்ணீர் அருவிபோலே சோரநின்றது; இதனால் ஒன்றும் ஒழுங்குபட நினைக்கமுடிகிறதில்லையே! என்றாராயிற்று. (அ)

3224 அடியைமூன்றையிரந்தவாறும் அங்கேநின்றாழ்கடலும்மண்ணும்விண்ணும்
முடிய ✣ ஈரடியால் முடித்துக்கொண்ட முக்கியமும் ✣
நொடியுமாறவைகேட்குந்தோறும் என்னெஞ்சம்நின்தனக்கேகரைந்துகும் ✣
கொடியவல்வினையேன் உன்னையென்றுகொல்கூடுவதே ? (கூ)

மூன்று அடியை இரந்த ஆறும் — (மாவலியிடத்தே) மூவடி நிலத்தை யாசித்தபடியும்
அங்கு நின்றே — யாசித்த அவ்விடத்தில் நின்று கொண்டே
ஆழ் கடலும் மண்ணும் விண்ணும் முடிய — ஆழ்ந்தகடல்களையும் மண் விண்ணுலகங்களையுமெல்லாம்
ஈர் அடியால் — இரண்டடியாலே
முடித்துக்கொண்ட முக்கியமும் அவை — ஆக்ரமித்துக்கொண்ட தனி வீரமுமாகிய அவற்றைக் குறித்து
நொடியும் ஆறு கேட்கும் தோறும் — (ஞானிகள்) சொல்லுகிறபடியைக் கேட்கும் போதெல்லாம்

என் நெஞ்சம் — எனது நெஞ்சு
நின் தனக்கே — உன் திறத்திலேயே
கரைந்து உகும் — சிதிலமாகாநின்றது;
கொடிய வல் வினையேன் — மிகக்கொடிய பாபத்தைப் பண்ணின நான்
உன்னை கூடுவது என்று கொல் — உன்னோடே கூடப்பெறுவது என்றைக்கோ?.

✢ ✢ ✢ மாவலி பக்கலிலே மாணுருவாய்ச்சென்று மூவடிநிலம் இரந்தபடியும், அந்நிலையில்நின்றே இரண்டடியாலே மூவுலகையும் அகப்படுத்திக்கொண்டு நீ நினைத்தகாரியத்தை முடித்துக்கொண்ட அதிசயமும் ஆகிய விவற்றைச் சொல்லக் கேட்குந்தோறும் என்னுடைய நெஞ்சு கரைந்து உருகின்றதே!; உன்னையநுஸந்தித்தால் இங்ஙனே சிதிலனாகும்படி மஹாபாபத்தைப் பண்ணின நான் தரித்து நின்று உன்னையநுபவிப்பது என்றைக்கோ? [நொடிதல்—சொல்லுதல். (௯)

3225 கூடிநீரைக்கடைந்தவாறும் அமுதம்தேவருண்ண ✢ அசுரரை
வீடும்வண்ணங்களே செய்துபோனவித்தகமும் ✢
ஊடுபுக்கெனதாவியை உருக்கியுண்டிடுகின்ற ✢ நின்தன்னை
நாடும்வண்ணம்சொல்லாய் நச்சுநாகணையானே! (௰)

நஞ்சு நாகம் அணையானே — சேஷசயனனே!
கூடி நீரை கடைந்த ஆறும் — தேவாசுரர்களோடுகூடித் திருப்பாற் கடலைக் கடைந்தபடியும்
அமுதம் தேவர் உண்ண — அம்ருதத்தைத் தேவர்கள் புஜிக்க
அசுரரை வீடும் வண்ணங்களே செய்து போன வித்தகமும் — அசுரர்கள் அந்த அம்ருதத்தை விடும்படியாக ஸ்த்ரீ வேஷ பரிக்ரஹம் பண்ணிப்போன விஸ்மயநீயாகாரமும்
ஊடு புக்கு எனது ஆவியை உருக்கி உண்டிடுகின்ற நின் தன்னை — உள்ளே புகுந்து என் ஆத்மாவை நீர்ப்பண்டமாக வுருக்கிக் கபளீகரிக்கநின்ற உன்னை
நாடும் வண்ணம் சொல்லாய் — நித்யாநுபவம் பண்ணும் வழியை அருளிச் செய்யவேணும்.

✢ ✢ ✢ அமரர்களுக்கு அமுதங்கொடுக்கக் கடல்கடைந்த செய்தியிலே எனது நெஞ்சு உருகாநின்றது; உன்னை நிலைநின்றுஅநுபவிக்கும்படியருளிச்செய்யவேணுமென்கிறார். அஸுரர்களோடே கூடி நின்று கடலைக்கடைந்தருளினபடியும், அதின் பலனான அம்ருதத்தைத் தேவர்கள் புஜிக்க, அஸுரர்கள் அதிலே ஆசையறும்படியாக ஒருவடிவை [அதாவது, மோஹிநீரூபத்தை]க் கொண்டு போந்தபடியும் உள்ளேபுக்கு என்னாத்மாவை யுருக்கி முடிக்கின்றன; திருவனந்தாழ்வான் உன்னோடு நித்யஸம்ச்லேஷம் பண்ணுமாபோலே நான் தரித்து நின்று உன்னைப்பூர்ணமாக அநுபவிக்கும் விரகுசொல்லவேணுமென்றாராயிற்று. (௰)

3226 நாகணைமிசைநம்பிரான் சரணேசரண்நமக்கென்று ✢ நாடொறும்
ஏகசிந்தையனாய்க் குருகூர்ச்சடகோபன்மாறன் ✢
ஆகநூற்றவந்தாதி ஆயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லார் ✢
மாகவைகுந்தத்து மகிழ்வெய்துவர்வைகலுமே. (௧௧)

நாகணைமிசை நம்பிரான் சரணே நமக்கு சரண் என்று — சேஷசாயியான எம்பெருமானுடைய திருவடிகளே நமக்குத்தஞ்சமென்று
நாள் தொறும் ஏக சிந்தையன் ஆய் — ஸ்திரமான அத்யவஸாயத்தையுடையராய்க் கொண்டு
குருகூர் சடகோபன் மாறன் — ஆழ்வார்
ஆக — தாம் ஸத்தை பெறுவதற்கு
நூற்ற — அருளிச்செய்த
அந்தாதி — அந்தாதித் தொடையான
ஆயிரத்துள் — ஆயிரத்தினுள்ளே
இவையும் ஓர் பத்தும் வல்லார் — இத்திருவாய்மொழியை ஓத வல்லவர்கள்
மாகம் வைகுந்தத்து — பரமாகாசமான ஸ்ரீவைகுண்டத்திலே
வைகலும் — ஆத்மாவுள்ளதனையும்
மகிழ்வு எய்துவர் — ஆனந்திகளாயிருப்பர்கள்.

ஐந்தாம் பத்து முற்றிற்று.

# ஆறாம்பத்து முதல் திருவாய்மொழி—வைகல்பூங்கழிவாய்.

திருவண் வண்டூரெம்பெருமான் திறத்தில் தூதுவிடுந்திருவாய்மொழி.



3227 வைகல்பூங்கழிவாய் வந்துமேயுங்குருகினங்காள் *
செய்கொள்செந்நெலுயர் திருவண்வண்டூருறையும் *
கைகொள்சக்கரத்து என்கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
கைகள்கூப்பிச்சொல்லீர் வினையாட்டியேன்காதன்மையே. (க)

| | |
|---|---|
| வைகல் | எப்போதும் |
| பூ கழி வாய் | அழகிய நீர் நிலத்திலே |
| வந்து மேயும் | வந்திருந்து இரையுண்கிற |
| குருகு இனங்காள் | கொக்கின் கூட்டங்களே! |
| செய் கொள் செந்நெல் உயர் | கழனி நிரம்பிய செந்நெற்பயிர்கள் ஓங்கிவளர்ந்திருக்கப்பெற்ற |
| திரு வண்வண்டூர் உறையும் | திருவண் வண்டூரிலே நித்யவாஸம் பண்ணு நிற்பவனும் |
| கை கொள் சக்கரத்து | திருக்கையிலே திருவாழியாழ்வானைக் கொண்டவனும் |
| கனி வாய் | கனிபோன்ற திருவதரத்தையுடையவனுமான |
| என் பெருமானை | எம்பெருமானை |
| கண்டு | நேரில் பார்த்து |
| கைகள் கூப்பி | அஞ்ஜலி செய்து |
| வினையாட்டியேன் காதன்மை சொல்லீர் | இங்ஙனே பிரிந்திருக்கும் பாவமுடையளான என்னுடைய ஆவலைச் சொல்லுங்கோள். |

*** தங்களைப்பிரியில் தரியாத ப்ரேமமுடைய சிஷ்யர்களுடனேகூட மனத்துக்கினிய காலக்ஷேப கூடங்களிலேசென்று பகவத்குணநுபவம் பண்ணுகின்ற சுத்தஸ்வபாவரான ஆசார்ய ரொருவரை விளித்து எனக்கு பகவத்ஸம்ச்லேஷம் பண்ணுவிக்கவேணுமென்று ப்ரார்த்தித்தல் இதற்கு உள்ளுறை பொருள். ஆசார்யஹ்ருதயத்தில் "ஆசறு தூவியென்னும் பாஹ்யாப்யந்தரசுத்தியோடே" இத்யாதி சூர்ணையின் வியாக்கியானத்திலே ஸ்வாபதேசார்த்த விரிவுகாண்க. (க)

3228 காதல்மென்பெடையோடு உடன்மேயுங்கருநாராய் ! *
வேதவேள்வியொலிமுழங்கும் தண்திருவண்வண்டூர் *
நாதன்ஞாலமெல்லாமுண்ட நம்பெருமானைக்கண்டு *
பாதங்கைதொழுதுபணியீர் அடியேன்திறமே. (உ)

| | |
|---|---|
| காதல் மென் பெடையோடு உடன் மேயும் கரு நாராய் | காதலையே நிரூபகமாகவுடைய அழகியபேடையோடு கூட இரை தேர்கின்ற நல்லவர்ணமுடைய நாரையே! |
| வேதம் வேள்வி ஒலி முழங்கும் | வேதகோஷமும் வைதிகக்ரியைகளின் கோலாஹலமும் முழங்கப் பெற்ற |
| தண் | குளிர்ச்சி பொருந்திய |
| திருவண்வண்டூர் | திருவண்வண்டூரிலே |
| நாதன் | ஸர்வேச்வரனும் |
| ஞாலம் எல்லாம் உண்ட | (பிரளயகாலத்தில்) ஸகல ஜகத்தையும் விழுங்கினவனுமான |
| நம் பெருமானை | எம்பெருமானை |
| கண்டு | நேராகக் கண்டு |
| பாதம் கை தொழுது | அவனது திருவடிகளை நோக்கி அஞ்ஜலி பண்ணி |
| அடியேன் திறம் பணியீர் | அடியேன் விஷயமாக ஒரு வார்த்தை சொல்ல வேணும். |

* * * ஆர்த்தர்களுக்கு ஆர்த்தியைப் பரிஹரித்து ரக்ஷணம் செய்வதிலேயே தீக்ஷை கொண்டிருக்கின்ற எம்பெருமான் திருவண்வண்டூரிலே வேதவொலியையும் வேள்வியொலியையும் காதாரக்கேட்டுக்கொண்டு தன்னுடைய ஆர்த்தரக்ஷண தீக்ஷையையும் மறந்து அங்கே தங்கிக்கிடக்கிறான்; அவனுடைய பாதாரவிந்தங்களிலே சென்று அஞ்ஜலிபண்ணி நின்று என் விஷயமாகச் சில வார்த்தைகள் சொல்லவேணுமென்று நாரையை இரக்கிறாள். (உ)

3229 திறங்களாகியெங்கும் செய்களூடுழல்புள்ளினங்காள்! *
சிறந்தசெல்வம்மல்கு திருவண்வண்டூருறையும் *

| | | | |
|---|---|---|---|
| திறை கொணர்ந்து உய்ம்மின் என்று | ‘செலுத்தவேண்டிய கப்பத்தைக் கொண்டுவந்து கட்டி பிழைத்துப்போங்கள்’ என்று கட்டளையிட்டுக் கொண்டு | பிறர் கொள்ள விட்டு | அயலார் கவர்ந்து கொள்ளும்படி கையிழந்து |
| உலகு ஆண்டவர்தாம் | இவ்வுலகத்தை அரசுபுரிந்த பிரபுக்கள்தாம் | வெம்மின் ஒளி வெயில் கானகம்போய் குமை தின்பர்கள் | கொடிதாய் மின்னொளி பரக்கின்ற வெயிலையுடைய காட்டிலே சென்று திண்டாடுவர்கள்; (ஆதலால்) |
| இம்மையே | இப்பிறப்பிலேயே | | |
| தம் இன்சுவை மடவாரை | தங்களுடைய பரமபோக்யைகளான ஸ்த்ரீகளை | செம்மின் முடி திருமாலை விரைந்து அடி சேர்மின் | செவ்விய காந்திபெற்ற திருமுடியையுடைய திருமகள் கொழுநனை விரைவாக அடிபணியுங்கோள். |

* * *—மஹாப்ரபுக்களாயிருந்து நெடுங்காலம் தாங்கள் ஆண்ட ராஜ்யங்களையிழப்பர் என்றது கீழ்ப்பாட்டில்; அரசாளுகிற நாளில் போக்யைகளாகக் கைக்கொண்ட மடவார்களையும் பகைவர்க்குப்பறி கொடுத்துப் பரிதாபப்படுவார்க ளென்கிறுரிதில். **உய்ம்மின் திறைகொணர்ந்து என்று உலகாண்டவர்—** எதிரிகளின் ராஜ்யங்களைத் தாங்கள் ஆக்ரமிக்க நினைத்தால் யானை குதிரைபடை திரட்டிக்கொண்டு சென்று பொருது பரிச்ரமப்பட்டு ஆக்ரமித்துக் கொள்ளுகையன்றிக்கே ஒரு கட்டளை மாத்திரத்தாலேயே க்ருதக்ருத்யர்களாக ஆய்விடுவார்களாம்; அதாவது—உயிர்தப்பிப் பிழைக்கவேண்டியிருந்தீர்களாகில் நம் பக்கலில் கப்பஞ்செலுத்தி வாழ்ந்துபோங்கள்’ என்று ஒரு கட்டளை தெரிவித்த மாத்திரத்திலேயே பகைவர்கள் பணிந்து நிற்பார்களாயிற்று; இவ்வளவு பெருமிடுக்காக உலகத்தை ஆண்ட ஸார்வபௌமர்கள் என்றபடி. **திறை** என்று கப்பத்திற்குப் பெயர்; இங்ஙனே வாழ்ந்த மஹாப்ரபுக்கள் ஸமயவிசேஷங்களிலேபடும் எளிவரவை மேல்இரண்டடிகளால் அருளிச்செய்கிறுர். தாம் அரசாட்சிபுரிகிற நாளில் பல திசைகளிலிருந்தும் சிறந்த மாதர்களைத் திரட்டிக்கொணர்ந்து சேமித்துவைப்பதுண்டே; அவர்களையெல்லாம் பகைவர் வந்துபுகுந்து கைக்கொள்ளும்படியாகும்.

**கானகம்போய்க் குமை தின்பர்கள்—**காடேற வோடினாலும் அங்குந்தொடர்ந்து நலியப்பகைவருடைய ஆட்கள் வந்தே தீருவார்களாதலால் காட்டிலும் கொலை தப்பாது என்கிறுர். **குமை தின்பர்கள்—** ஹிம்ஸைப்படுவர்களென்றபடி. (உ)

3009. அடிசேர்முடியினராகி அரசர்கள்தாம்தொழ*
இடிசேர்முரசங்கள் முற்றத்தியம்பவிருந்தவர்*
பொடிசேர்துகளாய்ப்போவர்கள் ஆதலில்நொக்கென*
கடிசேர்துழாய்முடிக் கண்ணன்கழல்கள்நினைமினே. (ங)

| | | | |
|---|---|---|---|
| அடிசேர் முடியினர் ஆகி | தமது காலிலே படிந்த கிரீடத்தையுடையவராகி | பொடி சேர் துகள் ஆய் போவர்கள் | பொடியோடு பொடியாய்த் தொலைந்துபோவர்கள்; |
| அரசர்கள் தாம் தொழ | மஹாப்ரபுக்கள் வணங்கும்படியாகவும், | ஆதலின் நொக்கென | ஆதலால் விரைவாக |
| இடிசேர் முரசங்கள் முற்றத்து இயம்ப | இடியோடு ஒத்த பேரிகைகள் தம்தம் மாளிகை முற்றத்திலே முழங்கும்படியாகவும் | கடிசேர் துழாய் முடி கண்ணன் கழல்கள் நினைமின் | நறுமணம்மிக்க திருத்துழாய் மாலையணிந்த திருமுடியையுடைய கண்ணபிரானுடைய திருவடிகளைச் சிந்தியுங்கள். |
| இருந்தவர் | வாழ்ந்தவர்கள் | | |

* * *—மற்றுள்ள அரசர்கள் தங்களையடிபணிந்து நிற்க அவர்களை மதியாதே வாழ்ந்தவர்கள் அந்தச் செல்வக்கிடப்பை யிழந்து ஒருவரும் மதியாதபடி யாவர்களென்கிறுர். “[illegible] ” என்று ஸ்ரீ குணரத்ந கோசத்திலே பட்டர் அருளிச்செய்தது இங்கே முதலடிக்கு அநுஸந்திக்கத்தக்கது. மஹாராஜர்களுக்கு ஸ்துதிபாடகர்கள் துதிமொழிகள் சொல்லும்போது “[illegible] ” என்று சொல்லி ஏத்துவர்கள்; அப்படியாக விளங்கியிருந்த அரசர்கள்.

**பொடிசேர்துகளாய்ப் போவர்கள்**=தம் காலிலே குனிந்தவர்களை லக்ஷியம் பண்ணுதிருக்கும்படியான மதிப்பையுடையராயிருந்தவர்கள், தம்தலையிலே ஒருவன் அடியிட்டால் ‘நாம் இவன்தலையிலே அடியிட்டோம்’ என்று நினைக்கவேண்டாதபடி அற்பமான துகளாய்ப்போவர்கள்என்றபடி. ஆதலால் * சுடர்முடி மேல்புனைந்த தண்ணந்துழாயுடையம்மானது திருவடிகளை விரைவாக நினையுங்கள் என்கிறுர்.

**முரசம்**—[illegible] என்ற வடசொல் விகாரம். (ங)

**3010.** நினைப்பான்புகில்கடலெக்கலில் நுண்மணலிற்பலர்*
எனைத்தோருகங்களும் இவ்வுலகாண்டுகழிந்தவர்*
மனைப்பால்மருங்கற மாய்தலல்லால்மற்றுக்கண்டிலம்*
பனைத்தாள்மதகளிறட்டவன் பாதம்பணிமினே. (ச)

| | | | |
|---|---|---|---|
| நினைப்பான் புகில் | ஆலோசித்துப்பார்க்குமிடத்து, | மருங்கு அற | சுற்றுப்பக்கங்களோடுங் கூடத் தொலையும்படி |
| எனைத்தோர் உகங்களும் இஉலகு ஆண்டு கழிந்தவர் | அனேகயுகங்கள் இவ்வுலகத்தையாண்டு முடிந்து போனவர்கள் | மாய்தல் அல்லால் | அழிந்து போவது தவிர |
| | | மற்று கண்டிலம் | வேறொன்றும் பார்த்ததோமில்லை; (ஆதலால்) |
| கடல் எக்கலில் நுண் மணலில் பலர் | கடலில் எக்கலிட்ட நொய் மணலிற்காட்டிலும் அதிகமான தொகையுள்ளவர்களாவர்; | பனை தாள் மத களிறு அட்டவன் பாதம் பணிமின் | பனைமரம் போன்ற அடியையுடைய (குவலயாபீடமென்னும்) மத யானையைக் கொன்றொழித்த கண்ணபிரானுடைய திருவடிகளை வணங்குங்கள். |
| (எப்படிப்பட்ட பிரபுக்களும்) மனைப்பால் | தாங்களிருந்த வீட்டின் இடம் | | |

* * *—மதிப்பு கெடுவது மாத்திரமன்றிக்கே ஆயுளும் நிலைநில்லாதாகையாலே எம்பெருமான் திருவடிகளை வணங்குங்களென்கிறார். நெடுநாள் இவ்வுலகையாண்டு கழிந்துபோனவர்களான ப்ரபுக்கள் எத்தனைபேர்கள் இருப்பார்களென்று நினைக்கத் தொடங்கினால், கடலில் எக்கலிடுகிற நுண்ணிய மணல்களை எண்ணி முடித்தாலும் முடிக்கலாம்; அவர்களை எண்ணிமுடிக்கப்போகாது என்னுமித்தனை.— “ഷഡ്വിംശതി സഹസ്രാണി കാലേ സന്തതയായിനി | ന തത്ര ബ്രഹ്മസൃഷ്ടി സ്ഥിതിയം സൃഷ്ടൌ ധൃത്വാ || സംസാരാശ്ചാകൃതായാമാ യഥാ വൃഷ്ടിർവാസവേ | ശക്യാ ഗണയിതും ലോകേ ന വൃത്താഃ പിതാമഹാഃ || ഗണ്യന്തേ പാംസവോ ഭൂമേഃ ഗണ്യന്തേ ദിവി താരകാഃ | ഗണ്യന്തേ വർഷധാരാശ്ച ന വൃത്താഃ പിതാമഹാഃ ||” என்ற ப்ரமாணம் இங்கு அநுஸந்தேயம். நிலத்திலுள்ள புழுதிகளை எண்ணிவிடலாம்; விண்ணிலுள்ள நக்ஷத்திரங்களை யெண்ணிவிடலாம்; பெய்யும் மழைத்தாரைகளையும் எண்ணிவிடலாம்; ஆண்டு கழிந்த பிரமர்களை எண்ணித் தலைக்கட்டப் போகாது என்றவாறு.

**மனைப்பால் மருங்கற மாய்தலல்லால் மற்றுக்கண்டிலம்** = கீழ்ச்சொல்லப்பட்டவர்கள் முடியுமளவில் தாங்கள் இருந்த மனைக்கும் அதன் சுற்றுப்பக்கங்களுக்கும் வாசி தெரியாதபடி அழிந்துபோவது தவிர, வேறுமிருந்திருப்பது ஒன்றுண்டாகக் கண்டிலோம் என்றபடி. பெருமரம் விழும்போது அருகு நிற்கும் மரங்களையும் அழிக்குமாபோலே அக்கம்பக்கத்திலுள்ளவர்களையும் அடியறுத்துக்கொண்டு போகின்றமையைச் சொன்னபடி. ஆதலால், குவலயாபீட மதயானையைக்கொன்றொழித்த பெருமானுடைய திருவடிகளைப் பணியுங்கள் என்கிறார். (ச)

**3011.** பணிமின்திருவருளென்னும் அஞ்சீதப்பைம்பூம்பள்ளி*
அணிமென்குழலார் இன்பக்கலவியமுதுண்டார்*
துணிமுன்புநாலப் பல்லேழையர்தாமிழிப்பச்செல்வர்*
மணிமின்னுமேனி நம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| அம் சீதம் பை பூ பள்ளி | ‘அழகும் குளிர்ச்சியும் விஸ்தாரமுமுள்ள பூம் படுக்கையிலே | துணி முன்பு நால | அரைத்துணி (பின்பக்கத்திற்கு எட்டம் போராமல்) முன்புறத்தில் மாத்திரம் தொங்கும்படியான ஏழைமையை யடைந்து |
| திரு அருள் பணிமின் என்னும் | (மாதர்காள்!) கிருபை பண்ணவேணும்’ என்று பிரார்த்திப்பவர்களாய் | பல் ஏழையர் தாம் இழிப்ப | பல மாதர்கள் இழிவாகக் கூறி யேசும்படி |
| | | செல்வர் | (பிச்சையெடுக்கப்) போவர்கள்; (ஆதலால்) |
| அணி மென் குழலார் இன்பம் கலவி அமுது உண்டார் | அழகிய மெல்லிய கூந்தலையுடைய மாதர்களின் சிற்றின்பக் கலவியமுதத்தை அனுபவித்தவர்களானவர்கள் | மணி மின்னு மேனி நம் மாயவன் பேர் சொல்லி வாழ்மின் | நீலமணிபோல் மின்னுகின்ற திருமேனியையுடைய எம்பெருமானுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தனம் பண்ணி வாழுங்கள். |

* * * சிற்றின்பத்தின் நுகர்ச்சியும் அஸ்திரமாதலால் எம்பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லி வாழுங்களென்கிறார். இப்பாட்டின் முன்னடியை அந்வயிப்பதில் நிர்வாஹ பேதமுண்டு

அம்சீதப் பைம்பூம் பள்ளியிலே திருவருள்பணிமின் என்று அன்புடன் வேண்டுகின்றவர்களான அணி மென் குழலாருடைய இன்பக் கலவி யமுதத்தை யுண்டவர்கள்—என்பது பூருவர்களின் நிர்வாஹம். இப்போது, **"பணிமின் திருவருளென்னும்"** என்பது அணிமென் குழலாருக்கு விசேஷணமாயிற்று. "பணிமின் திருவருள்" என்பதற்கு—கிருபை பண்ணவேணும் என்று பொருள். இங்ஙனே ஸ்த்ரீகள் ப்ரார்த்திக்கும்படியாக இருந்து இன்புற்றவர்கள் என்றதாயிற்று.

"பணிமின் திருவருள்" என்று சொல்லுகிற வார்த்தை ஸ்த்ரீகளினுடையது என்று நிர்வஹிப்பதிற் காட்டிலும் அநுபோக்தாக்களான புமான்களுடையது என்றே நிர்வஹிப்பது அழகியது என்று திருவுள்ளம் பற்றிய பட்டர் "பணிமின் திருவருளென்னும்" என்பதை *இன்பக்கலவி யமுதுண்டார்க்கு விசேஷணமாக்கி யுரைப்பராம். கீழே "அடிசேர் முடியினராகி அரசர்கள் தாந்தொழு" என்று மஹாராஜர்களால் தொழுநிறைஞ்சப்படுமவராகக் கூறப்பட்டவர்களுக்கு ஸ்த்ரீகளால் *பணிமின் திருவருளென்னப் பெறுகை ஓர் ஏற்றமல்லாமையாலே, ஸ்த்ரீகளிடத்திலே இவர்கள் 'பணிமின் திருவருள்' என்று விநயந்தோற்றப் பேசி யிருந்தபடியாகக் கொள்வது நன்று என்று பட்டர் திருவுள்ளம் போலும். "பணிமின் திருவருள்" என்று கைகூப்பிக்கொண்டு விண்ணப்பஞ் செய்பவர்களும், அஞ்சீதப் பைம்பூம்பள்ளி அணிமென்குழலா ரின்பக்கலவி யமுதுண்டவர்களுமான அரசர்கள்—என்று பொருள் காண்க. "மங்கைமீர்! கிருபை பண்ணியருள வேணும், நங்கைமீர்! அருள்செய்யவேணும்" என்று பல்பன்னிரண்டையும் காட்டிக்கொண்டு விஷயபோகங்களை யநுபவித்தவர்கள், **துணிமுன்பு நாலவும் பல்லேழையர்தா மிழிப்பவும் செல்வர்**—; (அதாவது) தாம் அநுபவித்த மாதர்களை வேறு சிலர் கைப்பற்றிக் கிடப்பர்கள்; இவர்கள் தங்களுடைய தேஹ யாத்திரைக்காக அவர்களிடத்தே போய் யாசிக்கப் புகுவர்கள்; ஏழைமைக் கொடுமையும் உடன் சேர்ந்து அரையில் துணி எட்டம் போராதே கிடக்கும்; முன்பக்கத்திலே மாத்திரம் குஹ்யத்திற்கு ஆவரணமாகச் சிறிது துணி தொங்கா நிற்கும்; இந்த எளிவரவைக்கண்டு அவர்கள் அப்போது தங்களை அபிமானித்திருக்கு மவர்களுடைய முகமலர்த்திக்காக ஏளனம் செய்வார்கள்; அதையும் பரமபோக்யமாகக் கொண்டு அவ்விடத்தே நடந்துசெல்வர்களாம்.

"ஜீயூஞி ஜீயூதஃ கெஶாஃ உஞா ஜீயூஞி ஜீயூதஃ | வக்ஷுஃ ஶ்ரோத்ரெவ ஜீயெதெ த்ருஷ்ணைகா நிருபஷுவா = ஜீர்யந்தி ஜீர்யதஃ கேஶாஃ தந்தா ஜீர்யந்தி ஜீர்யதஃ, சக்ஷுச்ச்ரோத்ரே ச ஜீர்யேதே த்ருஷ்ணைகா நிருபத்ரவா" என்ற ச்லோகம் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. தலை நரைத்தாலும் பற்கள் விழுந்தொழிந்தாலும் கண் இடுங்கிப் போனாலும் காது செவிடாகி யொழிந்தாலும் நப்பாசை யொன்று மாத்திரம் குறையொன்று மின்றி வளர்ந்து செல்லும்—என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. ஆக இவ்வளவாலும் ஹேயமாகச் சொல்லப்பட்ட விஷய போகங்களிலே நசையற்று, விலக்ஷண திவ்யமங்கள விக்ரஹம் படைத்த பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லி அது போதுபோக்காக உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார் ஈற்றடியால். (ரு)

3012. வாழ்ந்தார்கள்வாழ்ந்தது மாமழைமொக்குளின்மாய்ந்துமாய்ந்து*
ஆழ்ந்தாரென்றல்லால் அன்றுமுதலின்றறுதியா*
வாழ்ந்தார்கள்வாழ்ந்தேநிற்பர் என்பதில்லைநிற்குறில்*
ஆழ்ந்தார்கடற்பள்ளி அண்ணலடியவராமினே. (சா)

| | |
|---|---|
| வாழ்ந்தார்கள் வாழ்ந்தது | நன்றாக வாழ்ந்தவர்களென்று நினைக்கப்படுகிறவர்கள் வாழ்ந்த வாழ்வைப் பேசப் புகுந்தால். |
| மா மழை மொக்குளின் | பெருமழையில் தோற்றும் நீர்க்குமிழிபோலே |
| மாய்ந்து மாய்ந்து | அழிந்தழிந்து |
| ஆழ்ந்தார் என்று அல்லால் | அதோகதியை யடைந்தனர் என்று சொல்லப்படுவது தவிர, |
| அன்று முதல் | ப்ரஹ்ம ஸ்ருஷ்டி காலம் தொடங்கி |
| இன்று அறுதி ஆ | இன்று வரையில் |
| வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பர் என்பது இல்லை | வாழ்ந்தவர்கள் ஒரு தன்மையாக வாழ்ந்தே யிருத்தல் கிடையாது; |
| நிற்குறில் | நிலைநின்ற வாழ்வை யடைய வேண்டில், |
| ஆழ்ந்து ஆர் கடல் பள்ளி | ஆழமாகி நிறைந்த திருப்பாற்கடலில் துயில்கின்ற |
| அண்ணல் | ஸ்வாமிக்கு |
| அடியவர் ஆமின் | அடிமைப்பட்டிருங்கள். |

* * * உலகில் வைத்யர்களுக்கு ஒரு வழக்கமுண்டு; அதாவது—தாம் சிகித்ஸை செய்த விடங்களில் நூற்றுக்கணக்கான பேர்கள் மாண்டு போயிருந்தாலும், தெய்வவசமாக நாலைந்து பேர்கள் தப்பிப் பிழைத்தவர்களிருந்தால் அவர்களை மாத்திரம் விரலிட்டு எண்ணிக்காட்டி 'அவன் பிழைத்தான், இவன் பிழைத்தான்' என்று சொல்லுவதுண்டு; அதுபோலே, இவ்வுலகில் நன்றாக நெடுக வாழ்ந்தவர்களும் பலர் இருக்க அவர்களைவிட்டு, முடிந்தவர்களை எண்ணுகிறதென்? நீடூழி ஜீவித்தவர்களும் இல்லையோ? என்ன; அதற்கு விடை கூறுகின்றா ரிப்பாட்டில்—ஸ்ருஷ்டிகாலந் தொடங்கி இன்றளவும் செல்வம் குன்றாமே ஜீவித்தார் ஒருவரையும் கண்டிலோமென்கிறார். (சா)

**3013.** ஆமின்சுவையவை ஆறோடடிசிலுண்டார்ந்தபின்*
தூமென்மொழிமடவாரிரக்கப் பின்னும்துற்றுவார்*
ஈமினெமக்கொருதுற்றென்று இடறுவராதலின்*
கோமின்துழாய்முடி ஆதியஞ்சோதிகுணங்களே. (எ)

ஆம் இன் சுவை அவை அடிசில் ஆறோடு — பரமபோக்யமாய் ஷட்ரஸோபேதமான அன்னத்தை
உண்டு ஆர்ந்த பின் — வயிறார வுண்டு தீர்ந்தபின்பும்
தூ மெல் மொழி மடவார் இரக்க — வெகு அழகாகப் பேசவல்ல மாதர்கள் வேண்டிக் கொள்ள
(அந்த வேண்டுகோளை மீற முடியாமல்)
பின்னும் துற்றுவார் — மேலும் தின்றுகொண்டிருந்தவர்கள்
(அப்படி யிருப்பதற்கான செல்வம் அழிந்த வளவிலே)
எமக்கு ஒரு துற்று ஈமின் என்று இடறுவர் — 'எமக்கு ஒரு கவளம் கொடுங்கள்' என்று சொல்லிக்கொண்டு தடுமாறிச் செல்வர்கள்;
ஆதலின் — ஆதலால்,
துழாய் முடி ஆதி அம் சோதி குணங்கள் கோமின் — திருத்துழாயை யணிந்த திருமுடியையுடைய ஸர்வேச்வரனுடைய திருக்குணங்களையே சேர்த்து அனுபவியுங்கள்.

* * * தேஹ போஷணத்திற்கு ஹேதுவான அன்னபானம் முதலிய போகமும் அநித்யமாகையாலே ஸகல காரணபூதனான ஸர்வேச்வரனுடைய திருக்குணங்களை அநுஸந்தியுங்கோளென்கிறார். ஷட்ரஸங்களோடுங் கூடிப் பரமபோக்யமான அடிசிலை வயிறாரவுண்டு தீர்ந்தபின்பும் உடனே இனிய மாதர் வந்து ப்ரீதிபாவனை தோற்ற, பின்னையும் உண்ணவேணுமென்று நிர்ப்பந்திக்க, அவர்களுக்காகப் பின்னும் உண்பவர்களாய் இங்ஙனே வயிறு வாழ்ந்தவர்கள் தாங்களே பின்னையொரு காலத்தில் 'எனக்கு ஒருபிடி சோறு இடுவீர்களா?' என்றுஒரு கவளத்திற்கு மன்றாடும்படியாவர்கள்; ஆதலால், திருத்துழாய் மாலையனான எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுபவித்து நித்ய ஸுகிகளாயிருக்கப் பாருங்களென்றதாயிற்று. (எ)

**3014.** குணங்கொள்நிறைபுகழ்மன்னர் கொடைக்கடன்பூண்டிருந்து*
இணங்கியுலகுடனாக்கிலும் ஆங்கவனையில்லார்*
மணங்கொண்டபோகத்துமன்னியும் மீள்வர்கள்மீள்வில்லை*
பணங்கொளரவணையான் திருநாமம்படிமினே. (அ)

குணம் கொள் நிறை புகழ் மன்னர் — குணசாலிகளும் நிறைந்த கீர்த்தியை யுடையருமான ராஜகுமாரர்களாய்
கொடை கடன் பூண்டு இருந்து — ஔதார்யத்தைக் கடமையாக ஏறிட்டுக்கொண்டிருந்து
இணங்கி — சீலகுணத்தோடுங்கூடி
உலகு உடன் ஆக்கிலும் — உலகங்களை ஸ்வாதீனப் படுத்தி ஆண்டாலும்
ஆங்கு — அவ்விஷயத்தில்
அவனை இல்லார் — அந்த ஸர்வேச்வரனை ஆச்ரயித்தலில்லாதவர்கள்
மணம் கொண்ட போகத்து மன்னியும் மீள்வர்கள் — மிக நல்ல போகங்களில் பொருந்தியிருந்தும் அதோகதியடைவர்கள்,
பணம் கொள் அரவு அணையான் திருநாமம் படிமின் — படமெடுத்தாடுகின்ற ஆதிசேஷனைப் படுக்கையாக வுடைய ஸர்வேச்வரனது திருநாமங்களைப் படியுங்கள்; (படித்தால்)
மீள்வு இல்லை — மீட்சியில்லாத பெருஞ் செல்வம் கிடைக்கும்.

* * *—அரசாட்சி புரிவதாகிய போகமும் எம்பெருமானருளாலன்றிக் கிடைக்கமாட்டாதென்றும், அங்ஙனே கிடைக்கின்ற அதுதானும் நிலைநில்லாததென்று மருளிச்செய்கிறார். அரசர்களின் மேன்மையை ஒன்றரையடியால் விரித்துரைக்கின்றார். அமையவேண்டிய குணங்கள் யாவும் அமையப்பெற்றவர்களாயும், உலகமெல்லாம் கொண்டாடும்படியான புகழையுடையவராயும், பரம்பரையாகவே ப்ரபுக்களின் புத்திரர்களாயும், வேண்டினார் வேண்டியபடியே பொருள்களைக் கொடுப்பதாகிற ஔதார்யத்தைக் கடமையாகக் கொண்டவர்களாயும், மேன்மை பாராட்டி இறுமாப்புடனிராதே சீலவான்களாய் உலகத்தோடு பொருந்துமவர்களாயும் வாழ்வர்களெனினும் எம்பெருமானை ஆச்ரயிக்கப்பெறாதவர்கள் கீழ்ச்சொன்ன போகத்திலிருந்து சரிந்துபோவர்; ஆதலால் சேஷசாயியான எம்பெருமானுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தநம் பண்ணுங்கள்; அப்படியாகில் மீட்சியின்றியே நித்யஸ்ரீயாக வாழலாம் என்றதாயிற்று. (அ)

**3015.** படிமன்னுபல்கலன்பற்றோடறுத்து ஐம்புலன்வென்று*
செடிமன்னுகாயம்செற்றார்களும் ஆங்கவனையில்லார்*
குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியும் மீள்வர்கள்மீள்வில்லை*
கொடிமன்னுபுள்ளுடை அண்ணல்கழல்கள்குறுகுமினே.

| | |
|---|---|
| படி மன்னு பல் கலன் பற்றோடு அறுத்து | பரம்பரையாக வருகின்ற பலபல ஆபரணங்களையும் ஸ்வாஸ்யமாக விட்டவர்களாய் |
| ஐம்புலன் வென்று | பஞ்சேந்திரியங்களையும் வசப்படுத்தினவர்களாய் |
| செடி மன்னு காயம் செற்றார்களும் | தூறுமண்டிக்கிடக்கும்படியாக சரீரத்தைத் தவவிரதங்களால் வெறுக்கின்றவர்களும் |
| ஆங்கு | அவ்விஷயத்தில் |
| அவனை இல்லார் | அந்த எம்பெருமானை ஆச்ரயித்தலில்லாதவர்கள் |
| குடி மன்னும் இன் சுவர்க்கம் எய்தியும் மீள்வர்கள் | வெருகாலம் நிலைபெற்றிருக்கும்படியான இனிமையான சுவர்க்கத்தை அடைந்தும் திரும்புவர்கள்; (ஆதலால்) |
| கொடி மன்னு புள் உடை அண்ணல் கழல்கள் குறுகுமின் | கருடத்வஜனான ஸ்வாமியினுடைய திருவடிகளைக் கிட்டுங்கள்; (அப்படியாயின்) |
| மீள்வு இல்லை | என்றும் மீட்சியில்லாத பெருஞ்செல்வமுண்டாகும். |

* * *—கீழ்ப்பாசுரங்களில் இஹலோகஸுகங்களின் ஹேயத்வத்தை அருளிச் செய்துவந்தார். இனி இரண்டு பாசுரங்களில், ஸ்வர்க்கலோக போகத்தினுடையவும் கைவல்யபோகத்தினுடையவும் ஹேயத்வத்தை அருளிச்செய்வாராய், இப்பாட்டில் ஸ்வர்க்கபோகமும் நிலைநில்லாதென்கிறார். சுவர்க்கம் பெறுதற்காகக் கடுந்தவம் புரிவதுண்டு; அந்தவம்புரியுங்காலை நிலைமையை ஒன்றரையடியாலருளிச்செய்கிறார்.

**செடிமன்னு காயம் செற்றார்கள்**—உடம்பிலே தூறுமண்டும்படியிருப்பவர்கள் என்றபடி. தவத்திற்காக நெடுங்காலம் ஒவ்வொரு ஆஸனத்திலிருந்தால் சலியாமையாலே உடம்பிலே தூறுமண்டிவிடும்.

இவ்வண்ணமாகக் கடுந்தவம் புரிந்தவர்கள் பகவத்ப்ராப்தியையே உத்தேச்யமாகக்கொண்டு தவம்புரிந்தவர்களாயின் நன்றே; இல்லையேல் சுவர்க்கம் சென்றிருந்து "[illegible]—க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி" என்கிறபடியே புண்யம் க்ஷயித்தவுடனே கீழே தலைகீழாகத் தள்ளப்பட்டு விழுந்தொழிவர்கள். "பின்னையித்திசைக்கென்றும் பிணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே" (372) என்னும்படி மீள்வில்லாத மஹாபுருஷார்த்தத்தைப் பெறவேண்டியிருந்தீர்களாயின் கருளக்கொடி யொன்றுடைய பெருமானது திருவடிகளைப் பணிவது நன்று என்றாராயிற்று. **குறுகுதல்**—அணுகுதல். (க)

3016\. குறுகமிகவுணர்வத்தொடுநோக்கி எல்லாம்விட்ட*
இறுகலிறப்பென்னும்ஞானிக்கும் அப்பயனில்லையேல்*
சிறுகநினைவதோர்பாசமுண்டாம் பின்னும்வீடில்லை*
மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில்வீடஃதே. (௰)

| | |
|---|---|
| குறுக | பட்டிமேயாதபடி மனத்தைக் குறுக்கி |
| உணர்வத்தொடு | ஜ்ஞாநஸ்வரூபனான ஆத்மாவோடு |
| மிக நோக்கி | நன்றாகச் சேர்த்து (ஆத்ம ஸாக்ஷாத்காரத்தைப் பண்ணி) |
| எல்லாம் விட்ட | (ஐச்வர்யம், பகவதநுபவம் முதலிய) எல்லாவற்றையும் வெறுத்தவனாய் |
| இறுகல் இறப்பு என்னும் | ஸங்கோச மோக்ஷமாகிய கைவல்ய மோக்ஷத்தில் விருப்பங்கொண்டவனான |
| ஞானிக்கும் | ஜ்ஞாநயோக நிஷ்டனுக்கும் |
| அப் பயன் இல்லை ஏல் | அந்த பகவதுபாஸநம் இல்லையாகில், |
| சிறுக நினைவது ஓர் பாசம் உண்டாம் | அற்பமாக நினைப்பதற்குறுப்பான அவித்யாதி பந்தம் உண்டாகும்; |
| பின்னும் வீடு இல்லை | அவனைப்பற்றினாலும் (அந்திம ஸ்மிருதியில்லையாகில்) அந்த மோக்ஷ ஸித்தியுமில்லை;; |
| மறுகல் இல் ஈசனை பற்றி விடாவிடில் | ஹேயப்ரதிபடனான எம்பெருமானை ஆச்ரயித்து நீங்காவிடில் |
| அஃதே வீடு | அதுவே பரமபுருஷார்த்தம். |

* * *—கீழ்ப்பாட்டிற் சொன்ன சுவர்க்கம்போலே அஸ்திரமல்லாமல் நிலைநின்ற மோக்ஷமான கைவல்யத்திலும் ஊற்றத்தைவிட்டு பகவத்கைங்கரியத்தையே பரமப்ராப்யமாகப் பற்றுங்களென்கிறார். "மிகவுணர்வத்தொடு எல்லாம் குறுகநோக்கிவிட்ட இறுகலிறப்பென்னும் ஞானிக்கும் அப்பயன் இல்லையேல்" என்றும் அந்வயிப்பது. சிறந்த ஞானத்தையுடையனாய்க்கொண்டு ப்ராக்ருத போகங்களெல்லாவற்றையும் அற்பங்களாகக்கண்டு அவற்றில் ஆசையைவிட்ட = என்பது முதலடியின் கருத்து. மற்றொரு வகையாகவுமுரைக்கலாம்;—**குறுக**—மனம் கண்டவிஷயங்களிலும் பரந்து செல்லாதபடி அதனைக் குறுக்கி; ஜிதேந்திரியனாகி என்றவாறு. **உணர்வத்தொடு**—ஜ்ஞாநஸ்வரூபனான ஆத்மாவோடே **மிக நோக்கி**—நன்றாக ப்ரவணமாக்கி; **எல்லாம்விட்ட**—பகவத்ப்ராப்தியுட்பட எல்லாவற்றையும் வெறுத்த—என்றபடி. ஆத்மாநுபவமொன்று தவிர மற்ற எந்த புருஷார்த்தத்தையும் கணிசியாத—என்றதாயிற்று.

**இறுகலிறப்பு**—இறப்பு என்பது இங்கே மோக்ஷத்தைச் சொல்லுகிறது. **இறுகல்**—ஸங்கோசம்; பகவதநுபவமாகிற மோக்ஷமானது விகாஸ மோக்ஷமென்றும், ஆத்மாநுபவமாகிற மோக்ஷமானது

ஸங்கோச மோக்ஷமென்றும் கொள்ளக்கடவது. ஸ்வரூபாநுரூபமான பகவத் கைங்கர்யங்களெல்லாம் நன்றாகச் செய்வதற்கு உறுப்பான மோக்ஷம் விகாஸமோக்ஷம். ஆத்மாநுபவ மோக்ஷத்தில் அந்த விகாஸத்திற்கு அவகாசமில்லையன்றோ. "ஜராமரணமோக்ஷாய" என்கிறபடியே மறுபடியும் பிறப்பதும் இறப்பதும் கிடையாது என்கிற இவ்வளவே பயனாதலால் இது ஸங்கோச மோக்ஷமெனத் தகுதியுடையதென்று திருவுள்ளம்பற்றிய ஆழ்வார் **இறுகலிறப்பு** என்று வெகு அழகாக அருளிச்செய்தார்.

**என்னும் ஞானிக்கும்** = (இறுகலிறப்பையே) புருஷார்த்தமென்றிருக்கும் ஜ்ஞாநிக்கும் என்றபடி. [ஞானிக்கும்] என்றது—ஜ்ஞாநயோக நிஷ்டனுக்கும் என்றபடி.

**அப்பயன் இல்லையேல்** = எம்பெருமானை உபாயமாகப் பற்றுதல் இல்லையாகில் என்றபடி. **சிறுக நினைவதோர் பாசமுண்டாம்** = இழிவான புருஷார்த்தங்களை நினைப்பதற்குறுப்பான கர்மபாசமே மேலிடும் என்றபடி. இங்கே ஆறாயிரப்படி காண்மின்; "ப்ராக்ருத விஷய வைராக்ய பூர்வகமாக ஜ்ஞாநயோக நிஷ்டனானவனுக்கும் எம்பெருமானை ஆச்ரயித்தாலல்லது ஆத்மாவலோகந விரோதி கர்மம் போகாது; பகவத் ஸமாச்ரயணத்தாலேயாயிற்று ஆத்மாவலோகநம் பிறப்பது."—என்று. (க0)

**3017.** அஃதேஉய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல்*
கொய்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்குற்றேவல்*
செய்கோலத்தாயிரம் சீர்த்தொடைப்பாடலிவைபத்தும்*
அஃகாமல்கற்பவர் ஆழ்துயர்போயுய்யற்பாலரே. (கக)

| | | | |
|---|---|---|---|
| உய்யப் புகும் ஆறு அஃதே என்று | உஜ்ஜீவநோபாயம் திருநாரணன் தாள்களே யென்று அறுதியிட்டு | செய்கோலத்து ஆயிரம் | ஸர்வாலங்கார ஸம்பந்நமாயிருக்கிற ஆயிரந்தொகையுள்ள |
| கண்ணன் கழல்கள் மேல் | எம்பெருமானுடைய திருவடிகள் விஷயமாக, | சீர் தொடை பாடல் இவை பத்தும் | திருக் குணங்களையிட்டுத் தொடுத்த மாலைபோன்ற இப்பாடலில் இப்பத்துப் பாசுரங்களையும் |
| கொய் பூ பொழில் சூழ் குருகூர் சடகோபன் குற்றேவல் | கொய்வதற்குரிய பூக்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட திருநகரிக்குத் தலைவரான ஆழ்வாருடைய வாசிக கைங்கர்ய ரூபமாயும் | அஃகாமல் கற்பவர் | குறைவின்றி ஓதுமவர்கள் |
| | | ஆழ் துயர் போய் உய்யற்பாலர் | ஆழ்ந்ததுயர் நீங்கப்பெற்று உஜ்ஜீவிக்குந் தன்மையையுடையராவர். |

* * * **அஃதே** என்றது—இப்பதிகத்தின் முதற்பாட்டிலும் இப்பாட்டிலும் ப்ரஸ்துதமான திருவடியைக் குறிக்கும். (கக)

---

ஸ்ரீ:

## இரண்டாந் திருவாய்மொழி—பாலனாய்

கீழ் மூன்றாம்பத்தில் ***முடியானே** யென்னும் திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு உண்டான அவஸ்தை ப்ராஸங்கிகமான மூன்று திருவாய்மொழிகளாலே ஒருவாறு தலைமடிந்து கிடந்தது இப்போது தலையெடுத்து நிற்கின்றது.

ஆழ்வார் செய்தருளும் பரோபதேசங்கள் பிறர்க்கு உறுப்பன்றிக்கே தமக்கு எம்பெருமான் பக்கலிலே அபிநிவேசம் மீதூர்ந்து செல்வதற்கே ஹேதுவாயிற்று. ஆகவே என்றைக்கோ கழிந்துபோன எம்பெருமான்படிகளை அக்காலத்திற் போலவே இன்று அனுபவிக்கப் பெறவேணும் என்கிற விடாய் பிறந்தது; ஆசைப்பட்டபடியே கிடையாமையாலே, எம்பெருமானோடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டியின் நிலைமையை யடைந்து தான் மோஹித்துக்கிடக்க, அவள்படியை அநுஸந்தித்த திருத்தாயார் பெண்பிள்ளையின் நிலைமையைப் பேசுகிற முகத்தாலே ஸ்வதசையை வெளியிடுவதாய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி. (*)

**3018.**
பாலனாய் ஏழுலகுண்டுபரிவின்றி* ஆலிலை அன்னவசஞ்செய்யுமண்ணலார்*
தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றேமாலுமால்* வல்வினையேன்மடவல்லியே.

| | | | |
|---|---|---|---|
| பாலன் ஆய் பரிவு இன்றி ஏழ் உலகு உண்டு | சிறு குழவியாகி அநாயாஸமாக ஏழுலகங்களையும் திருவயிற்றிலே வைத்து | ஆல் இலை அன்ன வசம் செய்யும் அண்ணலார் | ஆலந்தளிரிலே நித்திரை செய்தருளின ஸ்வாமியினுடைய |

தாள் இணைமேல் அணி — உபய பாதங்களின்மீது சாத்தப்பெற்ற
தண் அம் துழாய் என்றே — குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையென்றே வாய் வெருவிக்கொண்டு
வல் வினையேன் மடவல்லி — வலிய பாபத்தைப் பண்ணின என்னுடைய இளங்கொடி போன்ற மகள்
மாலும் — வ்யாமோஹிக்கின்றாள் ;
ஆல் — அந்தோ !.

* * *—பண்டு ஆலிலையில் பள்ளிகொண்ட எம்பெருமானுடைய திருவடிகளிலே சாத்தின திருத்துழாயை இப்போது பெறவேணுமென்று என்மகள் [பராங்குசநாயகி] ஆசைப்படுகின்றாளென்று திருத்தாயார் கூறுகின்றாள். இவ்வுலகமெல்லாம் பிரளய வெள்ளத்தில் அழுந்தி அழியப்புகுங்கால் எம் பெருமான் இவற்றையெல்லாம் தனது திருவயிற்றிலே வைத்து ஒரு சிறிய ஆலந்தளிரிலே கண்வளர்ந்த தாக நூற்கொள்கை. அது என்றைக்கோ நடந்த விஷயம். அப்போது அந்த வடதளசாயிப் பெருமா னுடைய தாளிணைமே லணிந்த தண்ணந்துழாய் மாலையை இப்போது என்மகள் அபேக்ஷிக்கின்றாளே யென்கிறாள். (க)

## 3019.

வல்லிசேர்நுண்ணிடை ஆய்ச்சியர்தம்மொடும்* கொல்லைமைசெய்து குரவைபிணைந்தவர்*
நல்லடிமேலணி நாறுதுழாயென்றேசொல்லுமால்* சூழ்வினையாட்டியேன்பாவையே. (உ)

சூழ் வினை யாட்டியேன் பாவை — மிகுந்த தீவினையை யுடையேனாகிய என்னுடைய பதுமை போன்ற பெண்ணானவள்,
வல்லி சேர் நுண் இடை ஆய்ச்சியர் தம்மொடும் — கொடிபோன்று நுட்பமான இடுப்பையுடைய கோபிமார்களோடு கூடி
கொல்லைமை செய்து குரவை பிணைந்தவர் — வரம்புகடந்த செயல்களைச் செய்து ராஸக்ரீடை செய்த கண்ணபிரானுடைய
நல் அடி மேல் அணி — அழகிய திருவடிகளின்மீது சாத்தின
நாறு துழாய் என்றே — நறுமணம் மிக்க திருத்துழாயென்றே
சொல்லும் — சொல்லுகின்றாள் ;
ஆல் — அந்தோ !.

* * *—கண்ணபிரான் ஆய்ச்சிகளோடுகூடிக் குரவை கோத்த காலத்துத் திருவடியிலணிந்து கொண்டிருந்த திருத்துழாய்மாலையை என்மகள் வாய்வெருவுகின்றாளென்கிறாள்.

**கொல்லைமை** = வரம்புகடந்த செயல்; 'கொல்லை' என்னும் சொல்லின்மீது மைவிகுதி ஏறிக் கிடக்கிறது. "கொல்லை யரக்கியை மூக்கரிந்திட்ட" (600) என்ற ஆண்டாள் பிரயோகமும் "கொல்லை யென்பர் கொலோ" (3296) என்ற நம்மாழ்வார் பிரயோகமும் காணத்தக்கன. (உ)

## 3020.

பாவியல்வேத நன்மாலைபலகொண்டு* தேவர்கள்மாமுனிவர் இறைஞ்சநின்ற*
சேவடிமேலணி செம்பொன்துழாயென்றேகூவுமால்* கோள்வினையாட்டியேன்கோதையே.

பா இயல் வேதம் — சந்தஸ்ஸுக்கள் பொருந்திய வேதங்களாகிற
நல் பல மாலை கொண்டு — திவ்யமான பல மாலைகளைக் கொண்டு
தேவர்கள் மா முனிவர் இறைஞ்ச நின்ற சே அடி மேல் அணி — தேவர்களும் மஹா முநிகளும் ஆராதிக்கும்படி (உலகங்களை யளந்து) நின்ற திருவடிகளின் மேலே அணிந்த
செம் பொன் துழாய் என்றே கூவும் — செவ்வியதாய் விரும்பத் தக்கதான திருத்துழா யென்றே கூப்பிடா நின்றாள்
(யாரென்னில்)
கோள் வினை யாட்டியேன் கோதை — வலிய பாபத்தைப் பண்ணினவளான என்னுடைய சிறந்த கூந்தலையுடையளான பெண்பிள்ளை.

* * *—உலகளந்தருளின எம்பெருமான் திருவடிகளில் திருத்துழாயை என்மகள் ஆசைப் படா நின்றாளென்கிறாள். மூலத்தில் "தேவர்கள் மாமுனிவ ரிறைஞ்சநின்ற சேவடி" என்றிவ்வளவே யுள்ளது: "உலகளந்த திருவடி" என்று வ்யக்தமாக இல்லை; "பாற்கடல் சேர்ந்த பரமனுடைய அழகிய திருவடிகளிலே அணிந்த செம்பொற்றுழாயென்று இவள் கூப்பிடா நிற்குமென்கிறாள்" என் றருளிச் செய்தார் ஆறுயிரப்படியில் பிள்ளான். மற்ற வியாக்கியானங்களில்—"உலகளந்தருளினவன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படா நின்றாளென்கிறாள்" என்றுள்ளது.

**கோள்வினையாட்டியேன்** என்று சொல்லிக்கொள்ள வேண்டும்படி இங்கு என்ன விஷய முள்ளது? தன் மகள் இங்ஙனே வாய்வெருவுவது புண்யபலன் என்று நினைக்கத்தட்டில்லையே; "ப்ரபல மான பாபத்தைப்பண்ணின என்னுடைய மகள்" என்று சொல்லிக்கொள்வானேன்? என்று சங்கை பிறக்கும்; எதிர்மறையிலக்கணையால் இதற்குப் பொருள் கொள்ளவேணும். பகவத் விஷயத்திலே இவ் வண்ணம் ஈடுபட்ட பெண்பிள்ளையைப் பெற்ற என்னுடைய பாக்கியமே பாக்கியம் என்று சொல்லிக் கொள்வதே தாற்பரியமாகும். அன்றியே, தாய் என்பது உபாயாத்யவஸாயஸ்தானமாதலால் மகளுடைய பதற்றத்தைக்கண்டு வருத்தப்பட்டுச் சொல்லுகிற பாசுரமாகவே தாய் பாசுரம் அமைகின்றபடியால்

"வல்வினையேன்" என்றும் "கோள்வினையாட்டியேன்" என்றும் தன்னைச் சொல்லிக்கொள்வதும் பொருந்தும் என்னலாம்.

**கோள்வினை**—முடித்தல்லது விடாத பாபம். அநுபவித்தே அறவேண்டிய பாபம் என்னவுமாம்.

**கோதை** என்று மயிர்முடிக்கும் பூமாலைக்கும் பெயர். சிறந்த மயிர்முடியை யுடையவள், (அல்லது) அழகிய பூமாலையை யணிந்தவள் என்கிற பொருளில் இங்குக் **கோதை** என்ற சொல் பிரயோகிக்கப்பட்டுள்ளது; ஆகு பெயர். (௩)

3021

**கோதிலவண்புகழ் கொண்டுசமயிகள்* பேதங்கள்சொல்லிப் பிதற்றும்பிரான்பரன்***
**பாதங்கள்மேலணி பைம்பொன் துழாயென்றேஓதுமால்* ஊழ்வினையேன் தடந்தோளியே. (௪)**

ஊழ் வினையேன் தட தோளி — பெரும்பாவத்தை யுடையேனாகிய எனது பெருந் தோள்களையுடையளான பெண்பிள்ளை
சமயிகள் — சமயவாதிகள்
கோது இல வண் புகழ் கொண்டு — குற்றமற்ற விலக்ஷணமான குணங்களைக்கொண்டு
பேதங்கள் சொல்லி — தாம்தாம் பற்றிய குணங்களின் ஏற்றங்களைச் சொல்லி
பிதற்றும் பிரான் பரன் — பிதற்றும்படியாகவுள்ள ஸ்வாமியான பரம புருஷனுடைய
பாதங்கள் மேல் அணி — திருவடிகளின் மேலே (நித்ய முக்தர்கள்) சாத்தின
பைம்பொன் துழாய் என்றே ஓதும் — பசும்பொன்போல் விரும்பத்தக்க திருத்துழாயென்றே சொல்லுகின்றாள்.
(ஆல்—அந்தோ)

* * *—திருநாட்டி லெழுந்தருளியிருக்கிற பராத்பரனுடைய திருவடிகளில் திருத்துழாயை என் மகள் ஆசைப்படாநின்றாளென்கிறாள். முன்னிரண்டடிகள் பரமபதநாதனை வருணிப்பன. எம்பெருமானது திருக்குணங்களிலே புகுந்துவிட்டால் ஒவ்வொரு குணத்தினுடைய அதிசயமும் எல்லைகாணவொண்ணுததாயிருக்கும்; பரத்வத்திற்கு ஈடான குணங்களும் ஸௌலப்யத்திற்கு ஈடான குணங்களுமாக வகுக்கப்பட்டுள்ள குணங்களிலே ஒருவர் ஒரு குணத்தை அநுபவித்து அதன் அருமைபெருமைகளையெடுத்துரைத்துக்கொண்டாட, இங்ஙனே வாதவிவாத கலஹங்கள் ஏற்பட்டுவிடும்; இத்தகைய குணநுபவ விவாதமேயாய்ச் செல்லுமாம் பரமபதத்தில். "பிணங்கியமரர் பிதற்றுங்குணங்கெழு கொள்கையினனே" என்று (1-6-4) கீழேயுமருளிச் செய்யப்பட்டது. (௪)

3022.

**தோளிசேர்பின்னைபொருட்டு எருதேழ்தழீஇக்கோளியார்*கோவலனார் குடக்கூத்தனார்***
**தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றேநாளுநாள்* நைகின்றதால் என்றன்மாதரே. (௫)**

என் தன் மாதர் — எனது பெண்பிள்ளை,
தோளி சேர் பின்னை பொருட்டு — அழகிய தோள்களையுடையவளும் அநுரூபையுமான நப்பின்னைப் பிராட்டிக்காக
ஏழ் எருது — ஏழு எருதுகளையும்
தழீஇக் கோளியார் — தழுவிக்கொண்டவரும் [அதாவது நிரஸித்தவரும்)
கோவலனார் — கோபால க்ருஷ்ணனாய் அவதரித்தவரும்
குடம் கூத்தனார் — குடக்கூத்தாடினவருமான கண்ணபிரானுடைய
தாள் இணைமேல் அணி — உபய பாதங்களின்மேலே சாத்தின
தண் அம் துழாய் என்றே நாளும் நாள் நைகின்றது — குளிர்ந்தழகிய திருத்துழாயென்றே சொல்லி நாள் தோறும் சிதிலையாகின்றாள்.

* * *—நப்பின்னைப் பிராட்டிக்காக எருதேழடர்த்த கண்ணபிரானுடைய திருவடிகளில் சாத்தின திருத்துழாய் விஷயமாகவே என் மகள் நைகின்றாளென்கிறாள்.

**தோளி** என்பதும் **சேர்** என்பதும் பின்னைக்குத் தனித்தனி விசேஷணங்கள். அழகிய தோளையுடையவளும் தனக்குத்தகுந்திருப்பவளுமான நப்பின்னையென்றபடி. "**தழீஇக்கோளியார்**" என்றவிது ஒரு முழுச்சொல்லு; தழுவிக்கொண்டவர் என்று பொருள். இதனை இரண்டு சொல்லாக மயங்கி 'எருதேழ்தழீஇ' என்று நிறுத்தி, 'கோளியார் கோவலனார்' என்று பாடஞ்செய்து வருவது பாங்கன்று. 'எருதுகளை முடித்தவர்' என்னவேண்டுமிடத்துத் தழுவினவர் என்றது மங்கலவழக்கு. (௫)

3023.

**மாதர்மாமண்மடந்தைபொருட்டு ஏனமாய்* ஆதியங்காலத்து அகலிடம்கீண்டவர்***
**பாதங்கள்மேலணி பைம்பொன்துழாயென்றே* ஓதுமாலெய்தினள் என்தன்மடந்தையே. (௬)**

மா மாதர் — சிறந்த அழகுடைய
மண் மடந்தை பொருட்டு — பூமிப்பிராட்டிக்காக
ஆதி அம் காலத்து — முன்னொரு காலத்தில்
ஏனம் ஆய் அகல் இடம் கீண்டவர் — வராஹமூர்த்தியாய் விபுலமான பூமண்டலத்தைப் பிளந்தெடுத்துக் கொணர்ந்த பெருமானுடைய

| | | | |
|---|---|---|---|
| பாதங்கள் மேல் அணி பைம் பொன் துழாய் என்றே | திருவடிகளின்மீது சாத்தின மிகவழகிய திருத்துழா யென்றே | ஓதும் மால் என் தன் மடந்தை எய்தினள் | ஓதும்படியான வியா மோஹத்தை எனது பெண் பிள்ளை அடைந்தாள். |

* * *—ஸ்ரீ வராஹமூர்த்தியாய் ப்ரளயார்ணவத்தில் பூமியை யெடுத்தருளினபோது திருவடிகளிலணிந்திருந்த திருத்துழாயைப் பெறவேணுமென்று ஆசைப்படுகிறாளென்மகளென்கிறாள்.

"அகலிடங்கீண்டவர் பாதங்கள் மேலணி பைம்பொற்றுழாய்" என்கிறாரே; அகலிடங்கீண்டபோது திருவடிகளில் திருத்துழாய் அணியப்பெற்றதுண்டோ வென்னில், உண்டு; "உத்திஷ்டதஸ்தஸ்ய ஜாநுமத்யாத் மஹாவராஹஸ்ய மஹீம் ப்ரக்ருஹ்ய | விதூந்வதோ வேதமயம் சரீரம் ரோமாந்தரஸ்தா முநய: ஸ்துவந்தி" என்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் (1-4-29) கூறப்பட்டிருத்தலால் அப்போதும் ஸநகாதி மஹர்ஷிகள் இட்ட திருத்துழாய் உண்டு என்றுணர்க. மேற்காட்டிய ச்லோகத்தில் "**ஸ்துவந்தி**" எனறு ஸ்துதியைச் சொல்லியிருப்பது **புஷ்பாஞ்ஜலி** ஸமர்ப்பணத்திற்கும் உபலக்ஷணமாகும்.

இப்பதிகத்தில் பெரும்பாலும் பாசுரந்தோறும் "மாலுமால்" "கூவுமால்" "ஓதுமால்" "மடங்குமால்" "நம்புமால்" என்றிங்ஙனே வருகின்றது; இச்சொற்றொடர்களில் **ஆல்** என்பது அசையாகும். இப்பாசுரத்தில் மாத்திரம் **ஓதுமால்** என்ற சொற்றொடரில் **ஆல்** என்று இல்லை; '**ஓதும் மால்**' என்று பிரியும்; ஓதும்படியான பைத்தியததை யடைந்தாளென்றபடி.

**மடந்தை**—மகளிர் பருவம் ஏழனுள் பதினன்கு முதல் பத்தொன்பது வயது வரையுள்ள பருவத்துப் பெண்; இச்சொல் பெண் பொதுப்பெயராகவே பெரும்பாலும் வழங்கும். (சு)

3024\. மடந்தையை வண்கமலத்திருமாதினை*
தடங்கொள்தார்மார்பினில் வைத்தவர்தாளின்மேல்*
வடங்கொள்பூந்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
மடங்குமால்* வாணுதலீர்! என்மடக்கொம்பே. (எ)

| | | | |
|---|---|---|---|
| வாள் நுதலீர் | ஒளி பொருந்திய நெற்றியை யுடைய பெண்காள்! | வைத்தவர் | (பாற்கடல் கடைந்த காலத்து) ஏற்றுக்கொண்ட பெருமானுடைய |
| என் மட கொம்பு இவள் | இளங்கொடி போன்ற எனது இப்பெண் பிள்ளை, | தாளின் மேல் | திருவடிகளின்மீது (சாத்தின) |
| மடந்தையை | இளமைப் பருவமுள்ள | வடம் கொள் பூ தண்ணம் துழாய் மலர்க்கே | செறியத் தொடுக்கப்பட்டதும் அழகியதும் குளிர்ச்சி பொருந்தியதுமான திருத்துழாயின் பொருட்டே |
| வண் கமலம் திரு மாதினை | அழகிய தாமரைப் பூவிற் பிறந்த பிராட்டியை | | |
| தடம் கொள் தார் மார்பினில் | விசாலமானதும் மாலை யணிந்ததுமான திருமார்பிலே | மடங்கும் | சுருண்டு விழுகின்றாள். |

* * * அமுதமளிக்கக் கடல்கடைந்த காலத்துப் பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே வைத்தருளின எம்பெருமானுடைய திருவடிகளில் திருத்துழாயை என்மகள் ஆசைப்படுகின்றாளென்கிறாள்.

மூலத்தில், அம்ருதமதன காலமென்பதற்கு வாசகமான சொல் இல்லையாகிலும் "திருமாதினை மார்பினில் வைத்தவர்" என்கிற சொல்லமைப்பை நோக்கி "**அம்ருதமதந தசையிலே**" என்று பூர்வாசாரியர்கள் உரைத்தருளினர். பிராட்டியைத் திருமார்பிலே கொண்டிருப்பவன் என்னுமல் '**வைத்தவர்**' என்கையாலும், ஒவ்வொரு பாசுரத்திலும் ஒவ்வொரு அவதாரம் ப்ரஸ்துதமாகி வருகிற அடைவுக்குச் சேரவேண்டுகையாலும் இங்ஙனமுரைத்தல் மிகப் பொருந்தும். (எ)

3025\. கொம்புபோல்சீதைபொருட்டு இலங்கைநகர்*
அம்பெரியுய்த்தவர் தாளிணைமேலணி*
வம்பவிழ்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
நம்புமால்* நானிதற்கென்செய்கேன்? நங்கைமீர்! (அ)

| | | | |
|---|---|---|---|
| நங்கைமீர் | பெண்காள்! | தாள் இணை மேல் அணி | உபய பாதங்களின்மீது சாத்தின |
| கொம்பு போல் சீதை பொருட்டு | பூங்கொடி போன்ற ஸீதா பிராட்டியின் பொருட்டு | வம்பு அவிழ் தண் அம் துழாய் மலர்க்கே | பரிமள ப்ரசுரமாய்க் குளிர்ந்தழகிய திருத்துழாயின் மீதே |
| இலங்கை நகர் அம்பு எரி உய்த்தவர் | இலங்காபுரியில் அம்புகளில் நின்றும் கிளம்பும் அக்னியைச் செலுத்தின இராமபிரானுடைய | இவள் நம்பும் | இவள் ஆசைப்படா நின்றாள்! |
| | | இதற்கு நான் என் செய்கேன் | இதற்கு நான் என்ன பரிஹாரம் செய்வது. |

* * * ஸீதாபிராட்டிக்காக இலங்கை பாழாளாகப் படைபொருத பெருமானது திருவடிகளில் திருத்துழாயை என்மகள் விரும்பாநின்ருளென்கிருள். கொம்புபோல் சீதைபொருட்டு=ஸ்த்ரீகளைக் கொம்பனுர் என்று கூறுவது தமிழர் மரபு; வஞ்சிக்கொம்புபோல் மிக்க மென்மைத்தன்மை பொருந்தியிருக்கும்படியைக் கூறியவாறு. கொம்புபோல் என்பதற்கு மற்ெருரு பொருளும் நம்பிள்ளை அருளிச் செய்வதுண்டு; "ஈ௩௩௵ா என்கிறபடியே ஏகவஸ்துவில் ஏகதேசமென்னுதல்; என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. கொம்பானது வ்ருக்ஷத்தின் ஏகதேசமாகவுள்ளது; எம்பெருமான் "வாஸுதேவதரு" என்றும், "எனக்கே தன்னைத்தந்த கற்பகம்" என்றும் வ்ருக்ஷமாகச் சொல்லப்படுகிறபடியால் அதில் ஏகதேசமான கொம்பாகப் பிராட்டியைச் சொல்லுதல் பொருந்தும். (அ)

**3026.** நங்கைமீர்! நீரும்ஓர்பெண்பெற்றுநல்கினீர்*
எங்ஙனேசொல்லுகேன்? யான்பெற்றவேழையை*
சங்கென்னும்சக்கரமென்னும் துழாயென்னும்*
இங்ஙனேசொல்லும் இராப்பகலென்செய்கேன்? (கூ)

| | |
|---|---|
| நங்கைமீர் நீரும் ஓர் பெண் பெற்று நல்கினீர் | மாதர்காள்; நீங்களும் ஒவ்வொரு பெண்ணைப் பெற்று அன்போடு வளர்த்திருக்கின்றீர்கள்; |
| யான் பெற்ற ஏழையை எங்ஙனே சொல்லுகேன் | நான் பெற்றிருக்கின்ற இப் பேதையை எப்படியென்று சொல்லுவேன்? (ஆகிலும் சொல்லுகிறேன்;) |
| சங்கு என்னும் சக்கரம் என்னும் துழாய் என்னும் | சங்கு என்கிருள்; சக்கரமென்கிருள்; திருத்துழாயென்கிருள்; |
| இராப் பகல் இங்ஙனே சொல்லும் | இரவும் பகலும் இப்படியே சொல்லுகின்ருள்; |
| என் செய்கேன் | யாது செய்வேன்? |

* * * என் மகள் எம்பெருமானுடைய திவ்யாயுதங்களைச் சொல்லுவதாகத் தொடங்கி முற்றமுடியச் சொல்லமாட்டாதே இடையிடையே தளர்ந்து நோவுபடுகின்ருளென்கிருள். பராங்குச நாயகியின் திருத்தாய் தனது தோழிமார்களை **நங்கைமீர்** என்று விளித்து 'நீங்களும் ஒவ்வொரு பெண்பிள்ளை பெற்று வளர்க்கிறீர்களே, என் பெண்மகளின் தன்மை உங்கள் பெண்களுக்கு உண்டோ?' சங்கு சக்கரம் திருத்துழாய் என்றிப்படி பகவத் வஸ்துக்களைச் சொல்ல நினைத்தவிவள் அவற்றை ஒரு சேர்த்தியாகச் சொல்லமாட்டாமல் 'சங்கு' என்று சொல்லி, அதுதான் மலையெடுத்தாப்போலேயிருக்கையாலே பெருவருத்தத்தோடே நின்று, மீண்டும் ஒருநாழிகை கழித்து 'சக்கரம்' என்று சொல்லி, அதன்பிறகு ஒருநாழிகை கழித்து 'துழாய்' என்று சொல்லி ஆக இப்பாடுபடா நின்ருள் என்கிருள். (கூ)

**3027.** என்செய்கேனென்னுடைப்பேதை என்கோமளம்*
என்சொல்லும் என்வசமுமல்லள்நங்கைமீர்!*
மின்செய்பூண்மார்பினன் கண்ணன்கழல்துழாய்*
பொன்செய்பூண்மென்முலைக்கென்று மெலியுமே. (ய)

| | |
|---|---|
| நங்கைமீர் | பெண்காள்! |
| என்னுடை பேதை என் கோமளம் | பேதைத்தனமும் ஸௌகுமாரத் தன்மையும் பொருந்திய என் மகளானவள் |
| என் சொல்லும் என் வசமும் அல்லள் | என் சொல்லிலும் நிற்பதில்லை, என்வசத்திலும் நிற்பதில்லை; |
| மின் செய் பூண் மார்பினன் கண்ணன் கழல் துழாய் | ஒளியைச் செய்கின்ற திருவாபரண மணிந்த திருமார்வையுடையவனை கண்ணபிரானுடைய திருவடிகளிலுள்ள திருத்துழாயை |
| பொன் செய் பூண் மென் முலைக்கு என்று | பசலை நிறம் பூத்ததும் ஆபரணங்களணிந்ததும் பிரிவாற்ற கில்லாததுமான முலையில் அணிந்துகொள்ள வேணுமென்று விரும்பி |
| மெலியும் | (அது கிடையாமையாலே) உடம்பு இளைக்கப்பெறுகின்ருள்; |
| என் செய்கேன் | இதற்கு யான் யாது செய்வேன்? |

* * * கீழ்ப்பாட்டில் 'நங்கைமீர்!' என்று விளிக்கப்பட்ட நங்கைகள் பராங்குச நாயகியின் தாயை நோக்கி 'அம்மா! உன்மகள் நீயிட்ட வழக்கன்ருே; அவளுக்கு ஹிதம் சொல்லலாகாதோ?' என்ன, அவர்களுக்கு விடை கூறுகின்ருள்; அந்தோ! இப்பெண்பிள்ளை எனக்கு விதேயையன்றிக்கே கண்ணபிரானுடைய ஆபரண சோபையிலே அகப்பட்டு அவனது திருவடிகளில் திருத்துழாய் தன் முலைக்கு அலங்காரமாக வேணுமென்று உடம்பு இளைக்கின்ருளே! என்கிருள், 'அந்தோ! இவளுடைய நிலைமையை நோக்குங்கால் இவளை இழக்க நேரும்போல் தோன்றுகின்றதே!' என்ற கருத்துப்பட **'என்செய்கேன்'** என்றது. நான் சொல்லும் ஹிதவசனம் கேட்கும் பருவமன்று என்பாள் **'என்னுடைப்பேதை'** என்கிருள். 'இவளையோ நாம் தண்டிப்பது' என்று இருக்கவேண்டும்படியான ஸௌகுமார்ய முடையவள் என்ற கருத்துப்பட **'என்கோமளம்'** என்கிருள்.

**என் சொல்லுமல்லள், என் வசமுமல்லள்**—நான் சொல்லும் ஹிதவசனம் கேட்பதுமில்லை, நான் ஹிதமுரைக்க நினைக்கும்படியான நிலைமையிலுமில்லை என்றபடி.

"மென்முலைக்கு வேணும்" என்று சொல்லத் தொடங்கி வினைமுற்றுக் கூறி முடிக்கமாட்டாதே இடையிலே மெலிந்து நின்றுளென்க. (௰)

3028. மெலியுநோய்தீர்க்கும் நம்கண்ணன்கழல்கள்மேல்*
மலிபுகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல்*
ஒலிபுகழாயிரத்து இப்பத்தும்வல்லவர்*
மலிபுகழ்வானவர்க்காவர் நற்கோவையே. (கக)

| | |
|---|---|
| மெலியும் நோய் தீர்க்கும் நம் கண்ணன் கழல்கள் மேல் | மெலிவை விளைக்கும்படியான பிரிவுநோயைப் போக்க வல்லவனை நமது கண்ண பிரானுடைய திருவடி விஷயமாக, |
| மலி புகழ் வண் குருகூர் சடகோபன் சொல் | வளர்ந்த புகழையுடைய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் அருளிச்செய்த |
| ஒலி புகழ் ஆயிரத்து இ பத்தும் வல்லவர் | கொண்டாடப்பட்ட குண பூர்த்தியையுடைய ஆயிரத்திலும் இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் |
| மலி புகழ் வானவர்க்கு நல் கோவை ஆவர் | மிக்க புகழையுடைய நித்ய ஸூரிகளுக்கு நல்ல சேர்த்தியாவர். |

---

## நான்காம்பத்து—மூன்றாந்திருவாய்மொழி—கோவைவாயாள்

கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார் ஆசைப்பட்டபடியே எல்லாம் பெறும்படி எம்பெருமான் இவரோடே கலந்து, தன்னுடைய பரம ப்ரணயித்வத்தை வெளியிட்டுக் கொண்டான்; அதுகண்டு மிகவும் உவந்த ஆழ்வார் அந்த பிரணயித்வ குணத்தை இத்திருவாய்மொழியிலே பேசுகிறார்.

3029. கோவைவாயாள்பொருட்டு ஏற்றினெருத்தமிறுத்தாய்!*மதிளிலங்கைக்
கோவைவீயச்சிலைகுனித்தாய்! குலநல்யானைமருப்பொசித்தாய்!*
பூவைவீயாநீர்தூவிப் போதால்வணங்கேனேலும்*நின்
பூவைவீயாம்மேனிக்குப் பூசும்சாந்தென்னெஞ்சமே. (க)

| | |
|---|---|
| கோவை வாயாள் பொருட்டு | கோவைக்கனிபோற் சிவந்த அதரத்தையுடையளான நப்பின்னைப்பிராட்டி நிமித்தமாக |
| ஏற்றின் எருத்தம் இறுத்தாய் | எருதுகளினுடைய பிடரியை முறித்தவனே!, |
| மதிள் இலங்கை கோவை வீய சிலை குனித்தாய் | மதிள் சூழ்ந்த லங்காபுரிக்கு அரசனான ராவணன் முடியும்படியாக சார்ங்க வில்லை வளைத்தவனே! |
| குலம் நல் யானை | நல்ல ஜாதியிலே பிறந்து அழகியதான குவலயாபீட யானையினுடைய |
| மருப்பு ஒசித்தாய் | கொம்பை முறித்தொழித்த வனே! |
| பூவை வீயா நீர் தூவி | புஷ்பத்தைவிட்டு நீங்காத தீர்த்தத்தை [புஷ்பத்தையும் தீர்த்தத்தையும் என்றபடி] பணிமாறி |
| போதால் வணங்கேன் ஏலும் | உரிய காலங்களில் உன்னைப் பணிந்திலேனாகிலும் |
| நின் பூவை வீ ஆம் மேனிக்கு | உன்னுடைய காயாம் பூப் போன்ற திருமேனிக்கு |
| பூசும் சாந்து என் நெஞ்சமே | சாத்தத் தகுதியான சந்தனம் எனது நெஞ்சமேயாகும். |

* * * நப்பின்னைப் பிராட்டி நிமித்தமாக எருதுகளை அடர்க்கும்போதும், ஸீதா பிராட்டி நிமித்தமாக இராவணனை யழிக்கும்போதும் அந்தந்த ஸமயங்களிலுண்டான சிரமம் தீரும்படி அடியேன் அவ்வப்போதுகளில் ஸந்நிஹிதனாயிருந்து உபசாரங்கள் செய்யப் பெற்றிலேன்; அப்படியிருந்தும் என்னுடைய ஹ்ருதயத்தையே உனக்குப் பரம போக்யமாகக் கொண்ட விதம் என்னே! என்று ஈடுபடுகிறார். அந்தந்த ஸமயங்களில் சிசிரோபசாரம் பண்ணப்பெறாத குறைதீர இப்போது என்னெஞ்சுதானே உனக்கு சிசிரோபசாரமாக நின்றது என்கை பரம தாத்பர்யம்.

**பூவைவீ**—பூவைப்பூ; காயாம்பூ. **வீ** என்று பூவுக்குப் பெயர். "வீகமழ் நெடுஞ்சினை" (36) என்ற புறநானூறுங் காண்க. பூவை வீ ஆம்—பூவைப்பூப் போன்றதான என்றபடி. (க)

3030. பூசும்சாந்தென்னெஞ்சமே புனையும்கண்ணியெனதுடைய*
வாசகம்செய்மாலையே வான்பட்டாடையுமஃதே*
தேசமானவணிகலனும் என்கைகூப்புச்செய்கையே*
ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்த எந்தையேகமூர்த்திக்கே.

| | |
|---|---|
| ஈசன் | ஸர்வேச்வரனையும் |
| ஞாலம் உண்டு உமிழ்ந்த எந்தை | (ஒரு காலத்திலே) உலகங்களை யுண்டு (மற்றொரு காலத்திலே) வெளிப்படுத்தின ஸ்வாமியாயும் |
| ஏக மூர்த்திக்கு | ஒப்பற்ற திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனாயுமிருக்கிற பெருமானுக்கு |
| பூசும் சாந்து என் நெஞ்சமே | பூசுவதற்குரிய சந்தனம் என் மனமேயாகும் ; |
| புனையும் கண்ணி | அணிந்து கொள்ளுதற்கு உரிய மாலை |
| எனதுடைய வாசகம் செய் மாலையே | என்னுடைய வாக்கினால் தொடுக்கப்படுகிற சொல் மாலையேயாம் ; |
| வான் பட்டு ஆடையும் அஃதே | சிறந்த திருப்பரிவட்டமும் அந்தச் சொல்மாலையேயாம்; |
| தேசம் ஆன அணி கலனும் என் கை கூப்பு செய்கை ஏ | தேஜஸ்கரமான அணியப்படும் ஆபரணமும் எனது அஞ்சலிபந்தமேயாம். |

* * * தமது மனமொழி மெய்களாகிற முக்கரணங்களும் எம்பெருமானுக்குப் பரம போக்யமாகின்றமையை வியந்து கூறுகின்றார். எம்பெருமானது திருமேனியின் வைலக்ஷண்யத்தையும், அவன்றனக்குத் தம்மிடத்து உண்டான விருப்பத்தையும் சிந்தனைசெய்து, முன்சொன்னதையே மீண்டும் வாய் வெருவுகிறபடி. **எனதுடைய வாசகஞ் செய்மாலையே புனையுங்கண்ணி** = எம்பெருமான் பூமாலைகள் அணிந்துகொண்டால் என்ன ஔஜ்ஜ்வல்யமிருக்குமோ அது தமது சொல்மாலைகளை ஏற்றுக் கொண்டதனால் இருக்கின்றதென்றபடி.

**வான்பட்டாடையும் அஃதே** = தமது அருளிச்செயலே எம்பெருமானுக்குப் பீதாம்பரமென்கிறார். அழகிய வஸ்த்ரமில்லாதவனுக்கு உலகில் மதிப்பு ஏற்படுவதில்லை ; எம்பெருமானுக்கு ஆழ்வாரருளிச் செயல் இல்லையாமாகில் மதிப்பு ஏற்படாதென்பது உய்த்துணரத்தக்கது.

**என்கைகூப்புச் செய்கையே தேசமான வணிகலனும்** = ஆழ்வார்தாம் ஓர் அஞ்ஜலி பண்ணினால் அதுதன்னால் எம்பெருமான் தன்னை ஸர்வாபரண பூஷிதனாகக் கருதுகின்றான்போலும். (௨)

3031. ஏகமூர்த்தியிருமூர்த்தி மூன்றுமூர்த்திபலமூர்த்தி
யாகி*ஐந்துபூதமாய் இரண்டுசுடராயருவாகி*
நாகமேறிநடுக்கடலுள் துயின்ற நாராயணனே!*உன்
ஆகமுற்றுமகத்தடக்கி ஆவியல்லல்மாய்த்ததே. (௩)

| | |
|---|---|
| ஏகம் மூர்த்தி | காரணபூதமான ஒரு மூர்த்தியாய் |
| இரு மூர்த்தி | (ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலே) ப்ரக்ருதி மஹான்களைச் சரீரமாகக்கொண்டு நிற்கும் மூர்த்தியாய் |
| மூன்று மூர்த்தி | ஸாத்விகமாயும் ராஜஸமாயும் தாமஸமாயும் மூன்று வகைப்பட்ட அஹங்காரத்தை வடிவாகக்கொண்ட மூர்த்தியாய் |
| பல மூர்த்தி ஆகி | மநஸ் முதலிய கரணங்களை வடிவாக வுடையனாய் |
| ஐந்து பூதம் ஆய் | பஞ்ச பூதங்களை வடிவாக வுடையனாய் |
| இரண்டு சுடர் ஆய் | ஸூர்ய சந்திரர்களிருவரையும் வடிவாக வுடையனாய் |
| அரு ஆகி | ஸர்வாந்தர்யாமியாய், |
| நடு கடலுள் நாகம் ஏறி | திருப்பாற் கடல் நடுவே திருவனந்தாழ்வான்மீது ஏறி |
| துயின்ற நாராயணனே | திருக்கண் வளர்ந்தருளின நாராயணனே ! |
| உன் ஆகம் முற்றும் அகத்து அடக்கி | உன்னுடைய திருமேனியையும் அதற்கு வேண்டிய மற்றெல்லாவற்றையும் எனது நெஞ்சினுள்ளே அடங்க வைத்து |
| ஆவி அல்லல் மாய்த்ததே | உன் திருவுள்ளம் இடர் நீங்கப் பெற்றதே ! |

* * * கீழ்த் திருவாய்மொழியில் தமக்குண்டான ஆற்றாமை தீரப்பெற்றமையை அருளிச் செய்கிறார்.

[**நாகமேறி** யித்யாதி.[ ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிரமன் முதலியோர் வந்து அடிபணிதற்குப் பாங்காகத் திருப்பாற்கடலி னிடையே திருவனந்தாழ்வான்மீது சாய்ந்தருளினவனே !

[**உன் ஆக முற்றும்** இத்யாதி.] **ஆகம்**—உடம்பு ; உடம்புக்கு வேண்டியவைகளான சாந்து, பூமாலை, திருப்பரிவட்டம், ஆபரணம் ஆகிய இவற்றை (இலக்கணையால்) சொல்லுகிறது. **உன் ஆகம் முற்றும்**—உன் திருமேனிக்கு வேண்டியவற்றை யெல்லாம் ; **அகத்து அடக்கி**—என்னுள்ளே உண்டாம்படி பண்ணி ; (அதாவது, கீழிரண்டு பாட்டுக்களிற் கூறியபடியே அமைத்துக்கொண்டு.) **ஆவி**—உன் ஹ்ருதயத்திலிருந்த, **அல்லல்**—துயரம், **மாய்த்தது**—போக்கிக் கொள்ளப்பெற்றது.

'என் ஆவி' என்றாவது 'உன் ஆவி' என்றாவது சொல்லாமையாலே இரண்டு வகையாகவுங் கொள்ளப் பொருந்தும். இங்கே நம்பிள்ளையீடு :—"உன் திருவுள்ளத்திலுண்டான அல்லல் ஒருபடி நசிக்கப் பெற்றதே !, இத்தலையை ஒருபடி கரைமரஞ்சேர்த்து நீ க்ருதக்ருத்யனானாயே ! அன்றிக்கே, என்னாவியானது நிர்த்துக்கமாயிற்று என்றுமாம்." (௩)

3032. மாய்த்தலெண்ணிவாய்முலைதந்த மாயப்பேயுயிர்
மாய்த்த*ஆயமாயனே! வாமனனே! மாதவா!*
பூத்தண்மாலைகொண்டு உன்னைப்போதால்வணங்கேனேலும்*நின்
பூத்தண்மாலைநெடுமுடிக்குப் புனையும்கண்ணியெனதுயிரே. (௪)

| | | | |
|---|---|---|---|
| மாய்த்தல் எண்ணி வாய் முலை தந்த மாயம் பேய் உயிர் மாய்த்த | முடிப்பதாக நினைத்து வாயிலே நஞ்சு தீற்றிய முலையை வைத்த பூதனையினுடைய பிராணனை முடித்துவிட்ட | பூ தண் மாலை கொண்டு போது வணங் கேன் ஏலும் | பூக்கள் தொடுத்துக் குளிர்ந்த மாலைகளைக் கொண்டு அவ்வப்போதுகளில் வழி பாடு செய்யப்பெற்றிலே னகிலும் |
| ஆய! மாயனே! | வாமனனே! மாதவா!—; | நின் பூ தண் மாலை நெடு முடிக்கு | உன்னுடைய புஷ்பமயமாய்ச் செவ்விய மாலையாலே அலங்கரிக்கப்பட்ட நீண்ட திருமுடிக்கு |
| உன்னை | உன்னை | புனையும் கண்ணி எனது உயிரே | அலங்காரமாய்ச் சாத்துகின்ற மாலை என் பிராண னவதே! |

* * * பூதனையை முடித்தல் முதலான ஸமயங்களில் விடாய்தீர வந்துநின்று சிசிரோப சாரம் பண்ணப்பெற்றிலேனே யாகிலும் உன் திருமேனிக்கு என்னுயிரே உபசாரமாய்விட்டதே யென் கிறார். கம்ஸன், தன்னைக் கொல்லப் பிறந்த தேவகீபுத்திரன் ஒளித்து வளர்தலையறிந்து, அக்குழந்தையை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுப் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத் தூங்கிக்கொண்டிருந்த ஸ்ரீ க்ருஷ்ண சிசுவை யெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்ல முயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவ ளுயிரையும் உறிஞ்சி, அவள் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கிவிழுந்து இறக்கும்படி செய்தனன் என்ற வரலாறு இங்கு அறியத்தக்கது.

பாற்கடல் கடைந்த காலத்தில் பிராட்டி திருமார்பிலே வந்துசேரும்போதும், வாமனனாய் மாவலி பக்கல் எழுந்தருளினபோதும், பேய்ச்சிமுலை சுவைத்தபோதும் உடனிருந்து உபசாரம் செய்யப்பெற் றிலேனாகிலும், உன்னுடைய திருமுடிக்கு அலங்காரமாகச் சாத்தும் மாலை என்னுடைய ப்ராணனவதே! என்கிறார். தம்முடைய ஸத்தையையே இங்கு ப்ராணனாகச் சொல்லுகிறபடி. (௪)

3033. கண்ணியெனதுயிர் காதல்கனகச்சோதிமுடிமுதலா*
எண்ணில்பல்கலன்களும் ஏலுமாடையுமஃதே*
நண்ணிமூவுலகும் நவிற்றும்கீர்த்தியுமஃதே*
கண்ணனெம்பிரானெம்மான் காலசக்கரத்தானுக்கே. (௫)

| | | | |
|---|---|---|---|
| காலம் சக்கரத் தான் எம்மான் எம்பிரான் கண்ணனுக்கு | காலத்தை நடத்துகிற திரு வாழியை யுடையனாய் எனக்கு ஸ்வாமியாய் எனக்கு மஹோபகாரகனை ஸ்ரீ க்ருஷ்ணபகவானுக்கு | கனகம் சோதி முடிமுதல் ஆ | பொன்மயமாய் ஒளியை யுடைத்தான திருவபிஷே கம் முதலாக |
| | | எண் இல் பல் கலன்களும் | கணக்கற்ற பலதிருவாபரணங் களாக ஆகா நின்றது; |
| எனது உயிர் | என் ஆத்மவஸ்து | ஏலும் ஆடையும் அஃதே | ஏற்றதான பீதாம்பரமும் அந்தக் காதலேயாம்; |
| கண்ணி | மாலைபோல் போக்யமாகா நின்றது; | மூஉலகும் நண்ணி நவிற்றும் கீர்த்தியும் அஃதே | மூவுலகங்களும் கிட்டி துதிக் கின்ற புகழும் அந்தக் காதலேயாம். |
| காதல் | எனது ஆசையானது | | |

* * *—தம்முடைய உயிரையும் காதலையும் எம்பெருமான் போரப்பொலிய அபிமானித்தபடி யைப் பேசுகிறார். **எனது உயிர் கண்ணி**—என்னுடையதாக அபிமானித்திருக்கிற உயிரை எம்பெருமான் தனக்கு மாலையாகக் கொண்டானென்கை. இங்கே ஈடு:—"*மார்வத்து மாலை* என்கிறவளைத் தனக்கு மாலையாகக் கொள்ளுகை ப்ராப்தம்; அதொழிய என்ஸத்தையைக்கிடீர் தனக்கு மாலையாகக்கொள்ளு கிறது" என்பதாம். மாலையணிந்துகொண்டால் என்ன ஆனந்தமுண்டாகுமோ அந்த ஆனந்தம் என் ஸத்தையினால் எம்பெருமானுக்கு உண்டாகிறது என்றபடி. **கனகச்சோதி முடிமுதலா எண்ணில் பல் கலன்களும் எனது காதல்**=ஸுவர்ணமயமாய் ஒளிமிக்க கிரீடம் முதலாகிய எண்ணிறந்த பல திருவா பரணங்களும் என்னுடைய காதல் என்றபடி. அதாவது இவருடைய காதலுக்குத்தான் இலக்காகப் பெற்றதுண்டே, அதுதன்னையே தனக்குப் பல திருவாபரணங்கள் சாத்தினதாக அவன் திருவுள்ளம் பற்றியிருக்கிறபடி. **ஏலுமாடையும்அஃதே**=அந்தக் காதலையே பீதாம்பர மணிந்ததாகவும் எம்பெருமான்

அபிமானிக்கிறானென்கை. ஆடைக்கு ஏலும் என்று விசேஷணமிட்டது எம்பெருமான் தனக்கும் பீதாம் பரத்திலே மிக்க விருப்பமுடைமையைக் காட்டும். தான் உகந்து ஏற்றுக்கொள்ளுகிற என்றபடி.

**மூவுலகும் நண்ணி நவிற்றும் கீர்த்தியும் அஃதே**—தம்முடைய காதலையே எம்பெருமான் மூவுலகிலுள்ளாரும் தன்னைக் குறித்துப் பண்ணுகிற ஸ்துதியாகத் திருவுள்ளம்பற்றினனென்க. ஆழ்வாரொருவர் கடல்புரைய விளைந்த காதலோடு எம்பெருமானைத் துதிப்பதானது மூவுலகும் ஒன்றுசேர்ந்து துதித்தாப்போலுள்ளது என்றவாறு. (ரு)

**3034.** காலசக்கரத்தொடு வெண்சங்கம்கையேந்தினாய் !*
ஞாலமுற்றுமுண்டுமிழ்ந்த நாராயணனே !என்றென்று*
ஓலமிட்டுநானழைத்தால் ஒன்றும்வாராயாகிலும்*
கோலமாமென்சென்னிக்கு உன்கமலமன்னகுரைகழலே. (சு)

| | | | |
|---|---|---|---|
| காலன் சக்கரத் தொடு வெண் சங்கு அம் கை ஏந்தினாய் | (பகைவரையழிப்பதில்) யமன் போன்ற திருவாழியோடு கூட வெளுத்த சங்கத்தை அழகிய திருக்கையிலே தரித்திருப்பவனே ! | ஓலம் இட்டு நான் அழைத்தால் | கூப்பிட்டு நான் அழைக்க |
| | | ஒன்றும் வாராய் ஆகிலும் | நீ சிறிதும் வந்தருளாமற் போனாலும் |
| ஞாலம் முற்றும் உண்டு உமிழ்ந்த நாராயணனே என்று என்று | உலக முழுவதையும் ஒருகால் விழுங்கி மற்றொருகால் வெளிப்படுத்தின நாராயணா என்று பலகால் சொல்லி | கமலம் அன்ன உன் குரை கழல் | தாமரை மலர்போன்று, ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த உனது திருவடிகள் |
| | | என் சென்னிக்கு | எனது தலைக்கு |
| | | கோலம் ஆம் | அலங்காரமாகாநின்றது. |

* * "—கீழ்ப்பாசுரங்களில் எம்பெருமானுடைய ப்ரணயித்வம் சொல்லிற்று: இப்பாசுரத்தில் தம்முடைய ப்ரணயித்வம் சொல்லுகிறது. பெருமிடறு செய்து நான் அழைக்கச்செய்தே, நீ இங்கு விரைந்து ஓடிவரவேண்டியிருந்தும் வாராதிருந்தாயாகிலும் என்தலைக்கு ஆபரணமாவது உன் திருவடிகளேயென்கிறார்.

எம்பெருமான் இவர் பக்கலிலே வந்துசேர்ந்தாலன்றோ அவனுடைய திருவடிகள் இவரது சென்னிக்கு ஆபரணமாகும்; அவன் வாராதேயிருந்தால் அவன் திருவடிகள் இவரது சென்னிக்கு எங்ஙனே கோலமாகும்? என்று கேள்வி பிறக்கும்; இதற்கு ஸமாதானமான ஈட்டு ஸ்ரீ ஸூக்தி காண்மின் :—"**வாராயாகிலும் கோலமாம்** என்பானென்னென்னில்; வாராதொழியக்கூடாது; கூடாதது கூடிலும் என்னினைவு இதுவென்கிறார். என்னை அடியிலே இப்படி ஆக்கினையே யென்று கருத்து."

உன் திருவடிகளிலே எனக்கு ப்ரேமம் ஸத்தாப்ரயுக்தமென்பது பரமதாத்பர்யம், (சு)

**3035.** குரைகழல்கள்நீட்டி மண்கொண்டகோலவாமனா !*
குரைகழல்கைகூப்புவார்கள் கூடநின்றமாயனே !*
விரைகொள்பூவும்நீரும்கொண்டு ஏத்தமாட்டேனேலும்*உன்
உரைகொள்சோதித்திருவுருவம் என்னதாவிமேலதே. (எ)

| | | | |
|---|---|---|---|
| குரை கழல்கள் நீட்டி மண் கொண்ட கோலம் வாமனா | (வீரக்கழல்) ஒலிக்கப்பெற்ற திருவடிகளைப் பரப்பி ஜகத்தை அளந்துகொண்ட வடிவழகிய வாமன மூர்த்தியே ! | விரை கொள் பூவும் நீரும் கொண்டு | பரிமளம் மிக்க புஷ்பங்களையும் (பாத்யம் முதலிய வற்றுக்கான) தீர்த்தத்தையும் ஏந்திக்கொண்டு |
| | | ஏத்தமாட்டேன் ஏலும் | உன்னைத் துதிக்கவல்லேனல்லேனெனினும், |
| குரைகழல் கை கூப்புவார்கள் | அத்திருவடிகளைக் குறித்து ஓர் அஞ்ஜலி பண்ணுமவர்கள் | உரை கொள் சோதி உன் திரு உருவம் | வாய்கொண்டு சொல்லவொண்ணாதபடி வாக்கை மீறியிருக்கின்ற சோதியையுடைய உன்னுடைய திருமேனியானது |
| கூட நின்ற மாயனே | தன்னையே வந்து அடையும்படி நின்ற ஆச்சரிய பூதனே ! | என்னது ஆவி மேலது ஏ | என்னுடைய ஸத்தையைப் பற்றியிரா நின்றதே ! இது என்ன அற்புதம் ! |

* * *—நான் ஒருவிதமான கிஞ்சித்காரமும் செய்யப்பெற்றிலேனாகிலும், அநந்யார்ஹமாக்கி அடிமைகொள்ளுமியல்வினனான வுன்னுடைய வடிவு என் ஆத்மாவை விஷயீகரித்திராநின்றதென்கிறார்.

[**விரைகொள் பூவும் இத்யாதி.**] ஓர் அஞ்ஜலி மாத்திரத்தினால் அடையலாம்படி எளியனாயிருக்கிற உன் விஷயத்திலே சில புஷ்பங்களையும் தீர்த்தத்தையுங்கொண்டு வழிபாடு செய்து ஸ்வரூபம் நிறம் பெற ப்ராப்தமாயிருக்க, அங்ஙனம் பெற்றிலேனேயாகிலும், உன்னுடைய திருவடிவுக்கு என் ஆத்மஸத்

தையே தாரகமாயிற்றே! இதென்ன ஆச்சரியமென்கிறார். "ஆழ்வாருண்டானால் நானுண்டு" என்று எம்பெருமான் திருவுள்ளம்பற்றியிருக்கிறபடியை ஆழ்வாரறிந்து அருளிச்செய்தாராயிற்று.

**உரைகொள் சோதித் திருவுருவம்**=இங்கே ஈடு:—"உரைகொள்ளுகையாவது, அது அது என்று வாய் புலற்றும்படியாயிருக்கை. *ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா: | ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி" என்று நிற்பர்களிறே. அன்றிக்கே, பேச்சுக்கு அவிஷயமான திருமேனியென்னுதல். மாற்றுமுரையுமற்ற திருமேனியென்னுதல்." (எ)

3036. என்னதாவிமேலையாய் ஏர்கொளேழுலகமும்*
துன்னிமுற்றுமாகிநின்ற சோதிஞானமூர்த்தியாய்*
உன்னதென்னதாவியும் என்னதுன்னதாவியும்*
இன்னவண்ணமேநின்றாய் என்னுரைக்கவல்லேனே? (அ)

| | |
|---|---|
| என்னது ஆவி மேலையாய் | என் ஆத்மவஸ்துவிலே அபிநிவேச முடையனாய்க் கொண்டு |
| ஏர்கொள் ஏழ் உலகமும் | அழகிய ஸகல லோகங்களிலும் |
| துன்னி | பூர்ணமாக வியாபித்து |
| முற்றும் ஆகி நின்ற | ஸகல பதார்த்தங்களும் தனக்கு ப்ரகாரமாம்படி நின்ற |
| சோதி ஞானம் மூர்த்தியாய் | சோதிமயமான ஞானத்தை ஸ்வரூபமாக வுடையவனே! |
| என்னது ஆவி உன்னதும் | என் ஆத்மஸ்வரூபம் நீயிட்ட வழக்காகவும் |
| உன்னது ஆவி என்னதும் | உன் ஆத்மஸ்வரூபம் நானிட்ட வழக்காகவுமான |
| இன்ன வண்ணமே நின்றாய் | இப்படியிலே நின்றாய்; |
| என் உரைக்க வல்லேன் | இதற்கு என்ன பாசுரமிட்டுச் சொல்லுவேன்? |

* * *—எனக்காக ஸகலலோகங்களையும் வியாபித்து என்னையங்கீகரித்த உன் படி பேச்சுக்கு நிலமன்று என்கிறார்.

[**உன்ன தென்ன தாவியும் இத்யாதி.**] என் ஸ்வரூபம் நீ இட்ட வழக்கு, உன்ஸ்வரூபம் நானிட்ட வழக்கு என்பது தேர்ந்தபொருள். இவ்விடத்தை ஆளவந்தார் அருளிச்செய்யும்போது கேட்டிருந்த முதலிகளிலே சிலர் ஜீவாத்மாவின் ஸ்வரூபம் பரமாத்மா இட்ட வழக்கு என்றால் இதில் பொருந்தாமை யொன்றுமில்லை; பரமாத்மாவின் ஸ்வரூபம் ஜீவாத்மா இட்டவழக்கு என்கிறதே, இதுவென்? இது பொருந்துமோ? என்றார்களாம்; அப்போது ஆளவந்தார் அருளிச்செய்தபடி—"இவன் அவனிட்ட வழக்கு என்கிற விஷயத்தில் கர்மம் தடையாக நிற்கவுங்கூடும்; ஸர்வேச்வரன் தன்னை இவனிட்ட வழக்காக்குமிடத்தில் தடை செய்வாரில்லை; ஆனபின்பு 'உன்னதாவி என்னது' என்பதுதான் நிர்விவாதம்; 'என்னதாவி உன்னது' என்றதில் நீங்கள் விவாதப்பட்டால் படலாமேயல்லது 'உன்னதாவி என்னது' என்றதில் விவாதப்பட நியாயமில்லை" என்றாராம்.

இப்படி ஒருநீராகக் கலந்து பரிமாறும் ப்ரணயித்வகுணம் என்னால் பேசித் தலைக்கட்டலா யிருந்ததோவென்று முடித்தாராயிற்று. (அ)

3037. உரைக்கவல்லேனல்லேன் உன்னுலப்பில்கீர்த்திவெள்ளத்தின்*
கரைக்கணென்றுசெல்வன்நான் காதல்மையலேறினேன்*
புரைப்பிலாதபரம்பரனே! பொய்யிலாதபரஞ்சுடரே!*
இரைத்துநல்லமேன்மக்களேத்த யானுமேத்தினேன். (கூ)

| | |
|---|---|
| புரைப்பு இலாத பரம்பரனே | புரையற்ற பரத்வம் பொருந்திய எம்பெருமானே! |
| பொய் இலாத பரம் சுடரே | (என்னோடுண்டான கலவியில்) பொய்யில்லாத பரஞ்சோதிப் பெருமானே! |
| உரைக்க வல்லேன் அல்லேன் | நான் ஒன்றும் சொல்ல சக்தியுடையேனல்லேன்; |
| உலப்பு இல் உன் கீர்த்தி வெள்ளத்தின் கரைக்கண் | முடிவில்லாத உனது ப்ரணயித்வ குணக்கடலினுடைய கரையிடத்து |
| நான் என்று செல்வன் | நான் என்றைக்கு அடியிடுவேன்? (ஒருநாளும் அடியிடமாட்டேன்;) |
| காதல் மையல் ஏறினேன் | ப்ரேமத்தினால் பிச்சேறிக் கிடக்கிறேனத்தனை; |
| நல்ல மேல் மக்கள் இரைத்து ஏத்த | விலக்ஷணர்களான நித்யஸூரிகள் பேராரவாரஞ் செய்து துதிக்க (அவ்வழியைப்பின்பற்றி) |
| யானும் ஏத்தினேன் | நானும் சிறிது துதித்தேனித்தனை. |

* * *—எம்பெருமானுடைய ப்ரணயித்வகுணம் தம்முடைய பேச்சுக்கு நிலமன்று என்பதை அழகுபட அருளிச்செய்கிறார். **உரைக்கவல்லேனல்லேன்**—உன்னுடைய ப்ரணயித்வகுணத்தை அநுபவித்தநுபவித்து உள்ள முருகுவே னத்தனையொழிய இன்னபடியென்று பேசவல்லேனல்லேன் என்றபடி.

முழுதும் பேசமுடியாமற்போனாலும் பேசலாமளவு பேசினாலோவென்ன, **உன் உலப்பில் கீர்த்தி வெள்ளத்தின் கரைக்கண் என்று செல்வன் நான்** என்கிறார்; உன்னுடைய ப்ரணயித்வ குணஸமுத்ரத்தின் கரையிலேதான் என்றால் அடியிட முடியுமோ? என்கை. கடலினுள்ளே இறங்கமுடியுமா முடியாதா என்கிற விசாரம் ஒருபுறமிருக்கட்டும்; கடற்கரைதன்னில் சென்று நிற்கவும் ப்ரஸக்தியில்லையே என்கிற இச்சொல்லழகு சாலவும் ரஸிக்கத்தக்கது.

இங்ஙனே கரையருகும் செல்லப்போகாத விஷயத்தில் நீர் ஏதோ பேசிக்கொண்டிருக்கிறீரே, இஃது என்ன? என்று எம்பெருமான் கேட்டனனாகக்கொண்டு **காதல் மையலேறினேன்** என்கிறார். ப்ரேமத்தாலே கலங்கினேன்; கலங்கினவர்களின் செயலுக்கு ஓர் அடைவுமுண்டோ என்றவாறு.

ஆழ்வீர்! உம்முடைய சொற்களை நோக்குமிடத்து, நீர் என்னுடைய குணக்கடலைக் கரை கண்டவராகத் தோற்றுகின்றீர்; இல்லையாகில் பெரிய பெரிய துதிமொழிகளைப் பேசப்புறப்பட்டிருக்கமாட்டீரே யென்று எம்பெருமான் திருவுள்ளம்பற்றினதாகக்கொண்டு, **இரைத்து நல்லமேன்மக்களேத்த யானுமேத்தினேன்** என்கிறார். (௯)

3038. யானுமேத்தி ஏழுலகுமுற்றுமேத்தி*பின்னையும்
தானுமேத்திலும் தன்னையேத்தவேத்தவெங்கெய்தும்?*
தேனும்பாலும்கன்னலும் அமுதுமாகித்தித்திப்ப*
யானுமெம்பிரானையேயேத்தினேன் யானுய்வானே. (௧०)

| | | | |
|---|---|---|---|
| யானும் ஏத்தி | எம்பெருமானருளால் அறிவு பெற்ற நானும் துதித்து, | எங்கு எய்தும் | முடிவு பெறுவது ஏது? (ஆகிலும்) |
| முற்றும் ஏழ் உலகும் ஏத்தி | எல்லாவுலகங்களும் ஒன்று கூடி யேத்தி, | யான் உய்வான் | நான் தரித்திருப்பதற்காகவே, |
| பின்னையும் தானும் ஏத்திலும் | அதற்குமேலே ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனான தானுங்கூடி ஏத்தினாலும் | தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகி தித்திப்ப | தேனும் பாலும் கன்னலும் அமுதும்போலே ரஸிக்க, |
| தன்னை ஏத்த ஏத்த | தன்னைத் துதிக்கத்துதிக்க | எம்பிரானையே ஏத்தினேன் | எம்பெருமானையே ஏத்தினேன். |

* * *—ஒருவராலும் எல்லைகாணவொண்ணாதபடி அளவிறந்த பெருமையையுடைய பெருமானை நான் ஸத்தை பெறுவதற்காக ஏத்தினேனத்தனை யென்கிறார். **யானுமேத்தி** என்ற விடத்துள்ள உம்மையை உயர்வுசிறப்பும்மையாகக்கொள்ளலாம்; "மயர்வற மதிநலமருளினன்" என்று முதலடியிலே சொல்லும்படி அருள்பெற்ற நானும் என்றபடி. **ஏழுலகும் முற்றும்**—பேரறிவுடையார் சிற்றறிவுடையார் என்கிற வாசியில்லாமல் எல்லாரும் ஏத்துவது. **பின்னையும் தானுமேத்திலும**=ஸர்வஜ்ஞனென்றும் ஸர்வசக்தனென்றும் பேர்பெற்றிருக்கின்ற எம்பெருமான் தானும் ஏத்துவது. இங்ஙனே எல்லாருங்கூடி யேத்ினாலும் முடிவு காண்பதென்பதுண்டோ?

இப்படியறிந்து வைத்தும் ஏத்துகையிலே நீர் பிரவர்த்தித்தது ஏன்? என்ன, விஷயம் பரமரஹஸ்யமாக இருப்பதனாலும், இதிலே கைவைக்கும்படி அவன் பண்ணின மஹோபகாரத்தை சிந்தை செய்ததனாலும் ஏத்தப்புகுந்தேனென்கிறார்—பின்னடிகளினால். ஏத்தாதிருக்கில் பிழைத்திருக்கமாட்டாமையாலும் ஏத்தினேனென்கிறார் **யான் உய்வான்** என்பதனால். (௧०)

3039. உய்வுபாயம்மற்றின்மைதேறிக் கண்ணனொண்கழல்கள்மேல்*
செய்யதாமரைப்பழனத் தென்னன்குருகூர்ச்சடகோபன்*
பொய்யில்பாடலாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள்*
வையம்மன்னிவீற்றிருந்து விண்ணுமாள்வர்மண்ணூடே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| மற்று உய்வு உபாயம் இன்மை தேறி | வேறு வழியினால் தரிசிக்க விரகில்லாமையைத் துணிந்து | சடகோபன் | ஆழ்வார் (அருளிச்செய்த தான) |
| கண்ணன் கழல்கள் மேல் | எம்பெருமானுடைய அழகிய திருவடிகள் விஷயமாக, | பொய்இல் பாடல் ஆயிரத்துள் | யதார்த்தம் பொருந்திய ஆயிரத்தினுள்ளும் |
| செய்ய தாமரை பழனம் தென் நன் குருகூர் | செந்தாமரைகள் நிறைந்த நீர்நிலங்களையுடைய தென் திசையிலுள்ள அழகிய திருக்குருகூர்க்குத் தலைவரான | இவை பத்தும் வல்லார்கள் | இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் |
| | | வையம் மன்னி வீற்றிருந்து | இப்பூமண்டலத்திலே நெடுங்காலம் பொருந்தியிருந்து |
| | | மண்ணூடே | இந்நிலத்திலேயே |
| | | விண்ணும் ஆள்வர் | பரமபதத்தையும் ஆளப் பெறுவர்கள். |

**வையம்மன்னி வீற்றிருந்து மண்ணூடே விண்ணுமாள்வர்**—"பூமியிலே எம்பெருமானாரை போலே ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயோடே நெடுங்காலமிருந்து இங்கே யிருக்கச்செய்தே பரமபதம் தங்க

சிறுமுறிப்படி செல்லும்படி ஆள்வர்கள்; அங்கேபோனல் ‘ஆண்மின்கள் வானகம் ஆழியான்தமர்’ என்கையன்றிக்கே இங்கேயிருக்கச்செய்தே தாங்களிட்ட வழக்காகப்பெறுவர்" என்பது நம்பிள்ளையீடு.

நஞ்சீயர் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்த பின்பு நெடுங்காலம் பட்டர்பாடே அர்த்த விசேஷங்கள் கேட்டு இன்புறவேணுமென்று இருந்தார்; இருக்கையில் பட்டர் திருநாட்டுக்கெழுந்தருள நேர்ந்து விட்டது; இந்த வருத்தத்திஞல் நஞ்சீயர் "**வையம்மன்னி வீற்றிருந்து**" என்ற இவ்விடத்தை அருளிச் செய்யும்போது உருத்தோறும் வெகு நிர்வேதப்படுவராம்.

பட்டர் இருபத்தெட்டு (அல்லது 32) பிராயத்திலே திருநாட்டுக்கெழுந்தருளினுரென்று சிலர் கூறுவதுண்டு. இதற்குப் போதுமான பிரமாணம் கிடைத்திலது, ஆராய்ந்து பார்க்குமளவில், பட்டர் ஐம்பது ஐம்பத்தைந்து பிராயம் எழுந்தருளியிருந்தார் என்று சொல்வதற்குச் சான்றுகள் உளள்ன. நூற்றிருபது திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்த எம்பெருமானுரை நோக்குமிடத்து பட்டர் எழுந்தருளி யிருந்தது மிகவும் ஸ்வல்பகாலம் என்று சொல்லலாம்படியுள்ளது. (கக)

---

## நான்காம்பத்து—நான்காந்திருவாய்மொழி—மண்ணையிருந்துதுழாவி

ஆழ்வாருடைய பரம வைஷ்ணவத்வத்தை வெளியிடுவதாயிற்று இத் திருவாய்மொழி. எம்பெருமானுடைய ஸம்பந்தம்பெற்ற பொருள்களையும் எம்பெருமானுக்குப் போலியான பொருள்களையுங்கண்டு அப்பெருமான் றன்னையே கண்டதாகக் கொண்டு களிக்கையே பரம வைஷ்ணவத்வமாகும். அந்த நிலைமையே ஆழ்வார்க்கு இத் திருவாய்மொழியில் உண்டாயது.

3040. மண்ணையிருந்துதுழாவி வாமனன்மண்ணிதுவென்னும்*
விண்ணைத்தொழுதவன்மேவு வைகுந்தமென்றுகைகாட்டும்*
கண்ணையுண்ணீர்மல்கநின்று கடல்வண்ணனென்னுமன்னே!*என்
பெண்ணைப்பெருமயல்செய்தாற்கு என்செய்கேன்? பெய்வளையீரே! (க)

| | | | |
|---|---|---|---|
| பெய் வளையீர் | கையில் வளையணிந்த மாதர்காள்!, | கை காட்டும் | தன் கைகளாலே (பிறர்க்கும்) காட்டா நின்ருள்; |
| மண்ணை இருந்து துழாவி | (என் மகளானவள்) பூமியைத் துழாவி | உள் நீர் கண்ணை மல்க நின்று | அகவாயில் கண்ணீரானது கண்ணையும் விஞ்சிப் புறப்படும்படி நின்று |
| இது வாமனன் மண் என்னும் | ‘இது (எம்பெருமான்) வாமனனுய் அளந்து கொண்ட மண்’ என்று கூறுகின்ருள்; | கடல் வண்ணன் என்னும் | கடல்போலும் நிறத்தை யுடையவன் என்று சொல்லுகின்ருள்; |
| விண்ணை தொழுது | ஆகாசத்தை (நோக்கி) அஞ்சலி பண்ணி | அன்னே | அம்மே! |
| அவன் மேவு வைகுந்தம் என்று | ‘அவ்வெம்பெருமான் நித்ய வாஸம் பண்ணுகிற ‘ஸ்ரீ வைகுண்டம்’ என்று சொல்லி | என் பெண்ணை பெரு மயல் செய்தார்க்கு | என்னுடைய மகளை இப்படி அதிசயமான பிச்சேறும்படி பண்ணினவருக்கு |
| | | என் செய்கேன் | யாது செய்வேன்? |

* * * பராங்குசநாயகியின் திருத்தாயார் மகளுடைய செய்தியை வினவ வந்தவர்களுக்கு அறிவியா நின்றுகொண்டு ‘இப்படி யிவளை எம்பெருமான் பிச்சேற்றினனே! இதற்கு நான் என் செய்வே’னென்கிருள். ‘பண்டு எம்பெருமான் இவ்வுலகத்தை அளந்தருளினபோது அவன் திருவடிகளோடே ஸம்பந்தம் பெற்றது இந்த மண்’ என்றுசொல்லி ஆழ்வார் போதுபோக்குகிறபடியை முதலடி தெரிவிக்கும். உலகத்தில் எல்லாரும் மண்ணை மண்ணுகவே நினைத்துக் கிடப்பார்கள்; ஆழ்வார் அங்ஙனன்றிக்கே அதுதன்னிலே ஒரு விசேஷ ப்ரதிபத்தி பண்ணுகிறபடி.

**விண்வணத்தொழுது அவன் மேவு வைகுந்தமென்று கைகாட்டும்**—ஆகாசத்தை நோக்கித் தொழுது ‘எம்பெருமான் நித்யவாஸம் பண்ணுகிற திருநாடு அதோ பாருங்கள்’ என்று சொல்லிக் கை காட்டுகின்ருளென்கை.

[**கண்வணயுள் இத்யாதி**] ஹஸ்த சேஷ்டையாலே திருநாட்டைக் காட்டின வத்தனையொழிய, திருநாட்டில் அவனிருக்கிறபடியைக் காணப் பெருமையாலே **கண்ணீர்மல்க** நின்று தன்னுற்ருமையாலே திருவடிவத்தை நினைத்துக் **கடல்வண்ணனே** யென்கின்ருள். கடல்போன்ற திருமேனியைக் காட்டியன்ருே என்னை இங்ஙனே வியாமோஹிக்கச் செய்தது என்று தெரிவித்தவாறு. [**என்பெண்வண இத்யாதி.**] இங்ஙனே **என்மகளுக்கு** லோக விலக்ஷணமான வியாமோஹத்தை உண்டுபண்ணின மஹாநுபாவன் **விஷயத்தில்** நான் செய்யக்கூடியது யாது? அவரை இங்குவந்து சேரும்படி செய்யவல்லேனே? அவர் வருமளவும ஆறியிருக்கும்படி இவளுக்குச் சொல்லவல்லேனே? ஒன்றும் மாட்டுகிறிலேன் என்று கருத்து. (க)

3041. பெய்வளைக்கைகளைக்கூப்பிப் பிரான்கிடக்கும்கடலென்னும்*
செய்யதோர்ஞாயிற்றைக்காட்டிச் சிரீதரன்மூர்த்தியீதென்னும்*
நையும்கண்ணீர்மல்கநின்று நாரணனென்னுமன்னே!*என்
தெய்வவுருவிற்சிறுமான் செய்கின்றதொன்றறியேனே. (உ)

(என் மகளானவள்)

பெய் வளை கைகளை கூப்பி — (பலகாலும் கழன்று பிறகு) இடப்படாநிற்கிற வளைகளையுடைய தனது கைகளைக் குவித்து அஞ்சலிபண்ணி

(கடலைப் பார்த்து)

பிரான் கிடக்கும் கடல் என்னும் — உபகார சீலனான எம்பெருமான் (எனக்கு முகங்காட்டப்) பள்ளிகொண்டிருக்கிற கடல் (இது) என்று சொல்லுவாள் ;

செய்யது ஓர் ஞாயிற்றை காட்டி — சிவந்த ஒளியில் ஒப்பற்றவனான சூரியனைச் சுட்டிக் காட்டி

சிரீதரன் மூர்த்தி ஈது என்னும் — 'பெரிய பிராட்டியாரோடே கூடியுள்ள எம்பெருமானது வடிவு இது' என்று சொல்லுவாள் ;

நையும் — (தான் அவனைக்கிட்டி அநுபவிக்கப் பெறுமையாலே) வாடுவாள் ;

கண் நீர் மல்க நின்று நாரணன் என்னும் — (அந்த வாட்டத்தினாலே) கண்ணீர் பெருக நின்று 'நாராயணன்' என்று வாய் வெருவுவாள் ;

அன்னே — அம்மே !

என் தெய்வம் உருவில் சிறு மான் — என்னுடைய (நித்ய ஸூரிகள் வடிவுபோல) அப்ராக்ருதமான வடிவை யுடையளாய் மான் போல இளைய பருவத்தை யுடையளான இவள்

செய்கின்றது ஒன்று அறியேன் — செய்கின்ற காரியங்கள் ஒன்றும் அறிகிலேன்.

* * * எம்பெருமானோடு ஸம்பந்தமுடைய கடலையும் ஸூர்யனையுங் கண்டு பராங்குசநாயகி சொல்லும்வற்றைத் திருத்தாயார் கூறுகின்றார். திவ்யமான வடிவுபடைத்த விவள் செய்வதொன்றும் எனக்கு இன்னதென்று தெரிகின்றதில்லை யென்கிறாள்.

அஞ்ஜலி மாறாதே யிருந்தாள் ; கடலோசைவந்து செவிப்பட்டது ; கண்ணுக்கு இலக்காக வேண்டிய எம்பெருமான் காதுக்கு இலக்கானதாகக் கருதினாள் ; கடலோசை வழியாய்க் கடலை நினைத்துக் கடல்வண்ணனை எம்பெருமானை நினைத்து, அப்பெருமான் பள்ளிகொண்டருளுங் கடலன்றோ இது ! என்னாநின்றாள்.

எம்பெருமானுக்குப் போலியான பொருள்களையும் அவனோடு தொடர்புள்ள பொருள்களையும் அநுஸந்திக்க வநுஸந்திக்க, நித்யாநுபவசாலிகளான நித்ய ஸூரிகளின் வடிவில் பிறக்கும் புகர் இவட்குப் பிறக்கின்றமையைத் தாய் தெரிவிக்கின்றாள் என் தெய்வவுருவிற் சிறுமான் என்பதனால். செய்கின்ற தொன்று அறியேன் = இவள் தொடங்குவது என்ன ? தலைக்கட்டுவது என்ன ? என்பதொன்று மறிகின்றிலே னென்றபடி. (உ)

3042. அறியும்செந்தீயைத்தழுவி அச்சுதனென்னும்மெய்வேவாள்*
எறியும்தண்காற்றைத்தழுவி என்னுடைக்கோவிந்தனென்னும்*
வெறிகொள்துழாய்மலர்நாறும் வினையுடையாட்டியேன்பெற்ற*
செறிவளைமுன்கைச்சிறுமான் செய்கின்றதென்கண்ணுக்கொன்றே. (ங)

வினையுடையாட்டியேன் பெற்ற — கொடுவினையேனாகிய நான் பெற்ற

செறி வளை முன் கை சிறு மான் — நெருங்கின வளையல்களை யணிந்த முன் கைகளை யுடைய இவ்விளம் பெண்ணானவள்,

அறியும் செம் தீயை தழுவி — சுடுமென்று எல்லாராலும் அறியப்பட்ட சிவந்த நெருப்பைத் தழுவி

அச்சுதன் என்னும் — 'எம்பெருமான்' என்கிறாள் ;

மெய் வேவாள் — உடம்பு வேகின்றிலள் ;

எறியும் தண் காற்றை தழுவி — வீசுகின்ற குளிர்ந்த காற்றைத் தழுவி

என்னுடை கோவிந்தன் என்னும் — 'என்னுடைய கண்ணன்' என்கிறாள் ;

வெறிகொள் துழாய் மலர் நாறும் — பரிமளம் மிக்க திருத்துழாய் மலர்கள் மணக்கப் பெற்றிருக்கின்றாள் ;

செய்கின்றது — (இங்ஙனே இவள்) செய்கின்ற தொழில்கள்

என் கண்ணுக்கு ஒன்றே — என் கண்களுக்கு ஒன்று தானோ ?

* * * மகளுடைய அதிப்ரவ்ருத்திகளைச் சொல்லப் புகுந்து, இவற்றுக்குக் கணக்கில்லை யென்கிறாள். எம்பெருமானுடைய திருவடிவைச் சொல்லுமிடங்களில் "**தேஜஸாம் ராசிம் ஊர்ஜிதம்**"

என்றும், "குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு" (3170) என்றும் தேஜஃபுஞ்சமாகவே சொல்லுவர்கள். பராங்குச நாயகியானவள் செவ்விய தீயைக் காணும்போது அதனை அச்சுதனாகவே ப்ரதிபத்தி பண்ணித் தழுவுகின்றாள்; அந்த ப்ரதிபத்தியின் சுத்தியாலே, **மெய்வேவாள்**—உடல் தாஹமுண்டாவது கிடையாது. அக்நி தேவதை தன் காரியத்தைச் செய்யாதிருக்குமோ வென்னில், ப்ரஹ்லாதாழ்வானுக்குச் செய்தாலன்றோ பராங்குச நாயகிக்குச் செய்வது. "**தாதைஷ வஹ்நிஃ பவநேரிதோऽபி நமாம் தஹதி, அத்ரஸமந்ததோऽஹம், பச்யாமி பத்மாஸ்தரணாஸ்த்ருதாநி சீதாநி ஸர்வாணி திசாம் முகாநி**" என்றானிறே ப்ரஹ்லாதாழ்வான். என்னை நெருப்புச் சுடுகின்றதில்லையே யென்றான்; அதுபோலேயாயிற்று இதுவும். **ஒன்றே?** — ஒன்றல்ல, பல என்றபடி. (௩)

**3043.** ஒன்றியதிங்களைக்காட்டி ஒளிமணிவண்ணனேயென்னும்*
நின்றகுன்றத்தினைநோக்கி நெடுமாலே!வாவென்றுகூவும்*
நன்றுபெய்யும்மழைகாணில் நாரணன்வந்தானென்றாலும்*
என்றினமையல்கள்செய்தார் என்னுடைக்கோமளத்தையே. (௪)

| | | | |
|---|---|---|---|
| ஒன்றிய திங்களை காட்டி | (எல்லாக் கலைகளும்) பொருந்திய பூர்ண சந்திரனை (அருகில் நின்றார்க்குக்) காட்டி | நெடுமாலே வா என்று கூவும் | 'நெடுமாலே! வாராய்' என்று அழைக்கிறாள்; |
| ஒளி மணிவண்ணனே என்னும் | ஒளியையுடைத்தான நீலமணிபோன்ற வடிவை யுடையவனே! என்று கூப்பிடுகிறாள்; | நன்று பெய்யும் மழை காணில் | நன்றாகப் பொழியும் மேகத்தைக் கண்டால் |
| நின்ற குன்றத்தினை நோக்கி | (அந்தச் சந்திர மண்டலத்தளவும் உயர்ந்து) நிற்கிற மலையைப் பார்த்து (ஸகல உலகங்களையும் அளக்கைக்கு வளர்ந்தருளின எம்பெருமான் என்று நினைத்து) | நாரணன் வந்தான் என்று | நாராயணன் வந்தான் என்று கூறி |
| | | ஆலும் | மேகத்தைக் கண்ட மயில் போலே கூத்தாடுகின்றாள்; |
| | | என்னுடை கோமளத்தை | மெல்லியலாளான எனது மகளுக்கு |
| | | என்று இன மையல்கள் செய்தார் | இப்படிப்பட்ட மயக்கங்களை பண்ணினார். |

* * * எல்லாக்கலைகளும் நிரம்பப்பெற்ற சந்திரனைச் சுட்டிக்காட்டி 'நீலமணிவண்ணனே!' என்று அழைக்கின்றாள். உயரநின்றவொரு மலையைப் பார்த்து, உலகங்களை அளந்தருள்வதற்காக நிமிரவளர்ந்து நிற்கிற ஸர்வேச்வரனென்று கொண்டு 'என் ஆர்த்தி தீர வாராய்' என்றழைக்கின்றாள். நன்றாகப் பெய்யும் மேகத்தைக் கண்டால் 'நாராயணன் நம் உருவுதல் தீர வந்தான்' என்று சொல்லி, மேகத்தைக் கண்டு மயில் கூத்தாடுமாபோலே கூத்தாடுகின்றாள். அந்தோ! இப்படிப்பட்ட வியாமோஹங்களை எனது பெண்பிள்ளைக்கு உண்டுபண்ணிவிட்டாரே! என் செய்வேன்! என்கிறாள் திருத்தாய்.

**இன மையல்கள்**—இப்படிப்பட்ட மயக்கங்கள். இன்ன என்பது 'இன' என்று தொக்கிக் கிடக்கிறது. **என்று** என்பதற்கு 'என்றைக்கு' என்று பொருளுரைத்தார் பன்னீராயிர வுரைகாரர். (௪)

**3044.** கோமளவான்கன்றைப்புல்லிக் கோவிந்தன்மேய்த்தனவென்னும்*
போமிளநாகத்தின்பின்போய் அவன்கிடக்கையீதென்னும்*
ஆமளவொன்றுமறியேன் அருவினையாட்டியேன்பெற்ற*
கோமளவல்லியைமாயோன் மால்செய்துசெய்கின்றகூத்தே. (௫)

| | | | |
|---|---|---|---|
| கோமளம் வான் கன்றை புல்கி | இளைய பெரிய கன்றுகளைத் தழுவி (இவை) | ஈது என்னும் | இது என்று சொல்லுவாள்; |
| கோவிந்தன் மேய்த்தன என்னும் | பசு மேய்க்க முடிசூடின கண்ணன் (இனிது உகந்து) மேய்த்தவை என்று கூறுவாள்; | அரு வினையாட்டியேன் பெற்ற | (அநுபவித்து முடிக்க) அரிய பாபத்தை யுடையேனான நான் பெற்ற |
| போம் இளம் நாகத்தின் பின் போய் | இஷ்டப்படி ஓடுகின்ற இளைய நாகத்தின் பின்னே (இது போன விடத்தில் அவனையும் காணலாம் என்று நினைத்துச்) சென்று | கோமளம் வல்லியை | ம்ருது ஸ்வபாவையாய், கொடிபோன்ற இவளை |
| அவன் கிடக்கை | அவன் பள்ளிகொள்ளும் படுக்கை | மாயோன் | எம்பெருமான் |
| | | மால் செய்து | பிச்சேற்றி |
| | | செய்கின்ற கூத்து | பண்ணுகிற இந்தகைய கூத்தாட்டு |
| | | ஆம் அளவு | எவ்வளவில் ஆகும் என்று |
| | | ஒன்றும் அறியேன் | ஒன்றும் அறிகிலேன். |

* * * இங்கு '**ஆன் கன்றை**' என்றும் '**வான் கன்றை**' என்றும் பிரியும். "**ஆண் கன்றை** என்று பாடமாகவுமாம்" என்று பன்னீராயிரத்திலுள்ளது. பசுக்களை மேய்ப்பதிற் காட்டிலும் **கன்றுகளை மேய்ப்பதில் கண்ணபிரானுக்கு மிக்க ஆவலுண்டு; "திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி**

செங்கனிவா யெங்களாயர்தேவே " (3698) என்று பசுக்கூட்டங்களை மேய்ப்பதில் வெறும் உவப்பு உள்ளதாகச் சொல்லப்பட்டது; " கன்று மேய்த்து இனிது உகந்தகாளாய் " (2067) என்று கன்றுகளை மேய்ப்பதில் இனிதுவப்பு உள்ளதாகச் சொல்லப்பட்டது. பிறர்கை பார்த்திருக்கும் அசக்தர்களை ரக்ஷிப்பதிலேயே ஊக்கமுடையவன் எம்பெருமான் என்பது உள்ளுறை பொருள்.

[போம் இளநாகத்தின் இத்யாதி.] ஸர்ப்பம் ஓடக்கண்டால் அஞ்சாதே அதன் பின்னேயோடி 'எம்பெருமானுடைய திருப்பள்ளி மெத்தை இது' என்கின்றாள். " ஐந்து பைந்தலையாடரவணை மேவிப் பாற்கடல் யோகநித்திரை சிந்தைசெய்த வெந்தாய் உன்னைச் சிந்தைசெய்து செய்தே " (2844) என்கிறபடியே அவனுடைய சேஷசயன வைபவத்தையே இடைவிடாது சிந்திப்பவராதலால் அதுவே நினைவான படி. அவனோடே கூடித் தானும் படுக்கலாமென்ற ஆசையோடே நாகத்தின் பின்னே நடந்தாள்போலும்.

3045. கூத்தர்குடமெடுத்தாடில் கோவிந்தனாமெனாவோடும்*
வாய்த்தகுழலோசைகேட்கில் மாயவனென்றுமையாக்கும்*
ஆய்ச்சியர்வெண்ணெய்கள்காணில் அவனுண்டவெண்ணெயீதென்னும்*
பேய்ச்சிமுலைசுவைத்தாற்கு என்பெண்கொடியேறியபித்தே! (சு)

| | | | |
|---|---|---|---|
| கூத்தர் குடம் எடுத்து ஆடில் | யாரேனும் கூத்தாடுமவர்கள் குடத்தை எடுத்து ஆடினார்களாகில் | வெண்ணெய்கள் காணில் | வெண்ணெயைக் கண்டாளாகில் |
| கோவிந்தன் ஆம் எனா ஓடும் | (குடக்கூத்தாடுதலை ஸ்வபாவமாகவுடைய) க்ருஷ்ணன் ஆம் என்று கருதி (காண்கைக்கு) ஓடுவாள்; | அவன் உண்ட வெண்ணெய் ஈது என்னும் | அவன் அமுது செய்தருளின வெண்ணெய் இது என்கிறாள்; |
| வாய்த்த குழல் ஓசை கேட்கில் | இனிய குழலின் ஓசையைக் கேட்டாளாகில் | பேய்ச்சி முலை சுவைத்தாற்கு | பூதனையினுடைய முலையை ப்ராணனோடே சுவைத்து முடித்த கண்ணபிரானுக்கு |
| மாயவன் என்று மையாக்கும் | க்ருஷ்ணன் என்று நினைத்து மோஹியா நிற்பாள்; | கொடி என் பெண் | கொடி போன்றவளான என்னுடைய மகள் |
| ஆய்ச்சியர் | இடைச்சிகள் கையிலே | ஏறிய பித்து ஏ | தலை மண்டையிடும்படி கொண்ட பிச்சு இருந்தபடி ஆச்சரியம். |

* * * ஜீவனத்திற்காகக் குடக்கூத்தாடித் திரிகிறவர்களுண்டே; அவர்கள் வந்து குடங்களை வீசியெறிந்து ஆடுமதுகண்டால் *குடங்களெடுத் தேறவிட்டுக் கூத்தாடவல்ல கோவாகிய கோவிந்தனே ஆடுவதாக ப்ரதிபத்திபண்ணி அதனை அருகேயிருந்து காண ஓடுகின்றாள். எப்படிப்பட்டவர்களையு மீடுபடுத்தவல்ல புல்லாங்குழலின் இசைவந்து செவிப்பட்டால், கண்ணபிரானென்று சொல்லி வியாமோஹிக்கின்றாள். இடைச்சிகள் கொணர்ந்து விற்கும் வெண்ணெயைக் கண்டால், அன்று அவன் திருவாய்ப்பாடியில் களவுகண்டு அமுதுசெய்த வெண்ணெயோடொத்த வெண்ணெய் இது என்று சொல்லா நின்றாள்; தாய் உதவாத தனிமையிலே பூதனையென்பவள் தாய்வடிவு கொண்டுவந்து நலியப்புக, அவளை முடித்துத் தன்னைச் சேமமாகத் தந்த உபகாரத்துக்குத் தோற்று இவள் பித்தேறினளாயிற்று; இப்படியும் ஒரு விலக்ஷணமான பிச்சு உண்டோ வென்கிறாள் திருத்தாய்.

" ஆய்ச்சியர் வெண்ணெய் " என்றவிடத்து, பிராமண ஸ்த்ரீகள் கடைந்து திரட்டிய வெண்ணெய் கண்டால் ஒன்றும் பேசாள்; இடைச்சிகள் கையில் முடை நாற்றம் பெற்ற வெண்ணெய் கண்டால்—என்று இன்சுவைப் பொருளுரைப்பர் நம்பிள்ளை.

3046. ஏறியபித்தினொடு எல்லாவுலகுகண்ணன்படைப்பென்னும்*
நீறுசெவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்*
நாறுதுழாய்மலர்காணில் நாரணன்கண்ணியீதென்னும்*
தேறியுந்தேறாதும்மாயோன் திறத்தனளேயித்திருவே. (எ)

| | | | |
|---|---|---|---|
| ஏறிய பித்தினொடு | மிகுந்த மயக்கத்தோடே கூடியிருக்கச் செய்தே (வேதாந்த வித்துக்கள் சொல்லுமாபோல) | நாறு துழாய் மலர் காணில் | பரிமளம் வீசும் திருத்துழாயின் பூந்தாரைக் கண்டாளாகில் |
| எல்லா உலகு | ஸகல லோகங்களும் | நாரணன் கண்ணி ஈது என்னும் | ஸர்வ ஸ்வாமியான நாராயணனுடைய மாலை இது என்கிறாள்; |
| கண்ணன் படைப்பு என்னும் | க்ருஷ்ணனுடைய ஸ்ருஷ்டி என்று கூறுகிறாள்; | தேறியும் தேறாதும் | தேறினவளவிலும் கலங்கின வளவிலும் |
| நீறு செவ்வே இட காணில் | பஸ்மத்தை மேல்நோக்கி இடக் கண்டாளாகில் | இத் திரு | திருமகள் போல்வாளான இப் பெண்பிள்ளை |
| நெடுமால் அடியார் என்று ஓடும் | ஸர்வேச்வரனுடைய அடியார் என்று கொண்டு (அவர்களைத் தொடர்ந்து) ஓடுகிறாள்; | மாயோன் திறத்தனள் | எம்பெருமான் விஷயமல்லது வேறொன்றறியாள். |

* * * "என்பெண்கொடி யேறியபித்தே" என்று கீழ்ப்பாட்டில் தலைக் கட்டிற்று. உலகில் பித்துக்கொள்ளிகளா யிருக்குமவர்கள் வாயில் வந்தபடி எதையேனும் தப்புந் தவறுமாய்ப் பேசுவ துண்டே; அப்படி இவள் ஏதேனும் பேசுகின்றாளோ என்ன; பித்து ஏறின நிலைமையிலும் பகவத் விஷ யத்தில் தெளிவு சிறிதும் மாறிற்றில்லை யென்கிறாள். பராசர மஹர்ஷி முதலானோர் தெளிந்திருந்து என்ன வார்த்தை சொல்லுவர்களோ அந்த வார்த்தை இவள் சொல்லுகின்றாள் காண்மின். நன்கு வேதமோதிய அந்தணன் பித்தேறினாலும் வேத வாக்கியங்களையே சொல்லித் திரியுமாபோலே இவளும் வாஸநாபலத் தாலே பகவத் விஷயமல்லது பேசாளென்கை.

**நீறு செவ்வே யிடக்காணில் நெடுமாலடியா ரென்றோடும்** = திருமா லடியார்களுக்கு பஸ்மதார ணம் சாஸ்த்ர நிஷித்தம் என்னுமிடம் ஆழ்வாரறியாத தன்று; நீறு இடுமவர்களை நெடுமாலடியாரென்று பிரதிபத்தி பண்ண ப்ரஸக்தியில்லை; அப்படியிருக்க இங்கு அருளிச் செய்வதற்குக் கருத்தென்னென் னில்; "த்ரவ்யம் ஏதேனுமாகிலும் ஊர்த்த்வமாக இடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்" என்பது ஆறாயிரப்படி யருளிச்செயல். இதனை அடியொற்றியே மற்ற வியாக்கியானங்களு முள்ளன. பஸ்ம தாரணம் பண்ணினவர்களேயாயினும் அந்த பஸ்மத்தைக் குறுக்கே பூசாதே நெடுக இட்டால் 'ஊர்த்த்வ புண்ட்ரதாரிக ளிவர்கள்' என்று அவ்வளவுக்காக ப்ரதிபத்தி பண்ணுமென்றபடி. (ஏ)

3047\. திருவுடைமன்னரைக்காணில் திருமாலைக்கண்டேனேயென்னும்*
உருவுடைவண்ணங்கள்காணில் உலகளந்தானென்றுதுள்ளும்*
கருவுடைத்தேவில்களெல்லாம் கடல்வண்ணன்கோயிலேயென்னும்*
வெருவிலும்வீழ்விலுமோவாக் கண்ணன்கழல்கள்விரும்புமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| திரு உடை மன்னரை காணில் | பூர்ணமான செல்வத்தை யுடைய அரசர்களைக் கண்டால் | கரு உடை தேவு இல்கள் எல்லாம் | விக்ரஹயுக்தமான தேவா லயங்கள் யாவும் |
| திரு மாலை கண்டேனே என்னும் | திருமகள் கொழுநனான எம் பெருமானைக் கண்டேனே! என்று கூறுவாள்; | கடல்வண்ணன் கோயிலே என்னும் | எம்பெருமான் (எழுந்தருளி யுள்ள) கோவில்களே என்று கூறுவாள்; |
| உரு உடை வண்ணங்கள் காணில் | விலக்ஷண வடிவங்களையுடைய (காயாம்பூ முதலிய) பதார்த் தங்களைக் கண்டால் | வெருவிலும் வீழ் விலும் | அஞ்சினபோதும் (ஆர்த்தி யாலே) மோஹித்தபோதும் |
| உலகளந்தான் என்று துள்ளும் | (இச் செவ்வியுள்ளது) திரு வுலகளந்தருளின எம்பெரு மானுக்கு என அத்யவ ஸித்து ப்ரீதியோடே ஆடுவாள்; | ஓவாள் | ஒழியாதவளாகி |
| | | கண்ணன் கழல்கள் விரும்பும் | க்ருஷ்ணன் திருவடிகளையே பேணா நின்றாள். |

* * * செல்வம் மிக்க அரசர்களைக் கண்டால் திருமாலைக் கண்டதாகவே சொல்லுவளாம். ஏனென்னில்; "नाविष्णुः पृथिवीपतिः நாவிஷ்ணுః ப்ருதிவீபதிః" என்று சாஸ்த்ரம் கூறுகின் றது; விஷ்ணுவின் அம்சமில்லாமல் அரசனாக அமைய முடியாதென்பது இந்த ப்ரமாணத்தின் கருத்து. பூதத்தாழ்வார் தமது திருவந்தாதியில்—"கோவாகி மாநிலங்காத்து நண்கண் முகப்பே, மாவேகிச் செல் கின்ற மன்னவரும்—பூமேவுஞ் கசங்கமல நாவியான் சேவடிக்கே யேழ்பிறப்பும், தண்கமல மேய்ந்தார் தமர்." என்றருளிச் செய்கிறார். பலகாலம் பகவானை ஆராதித்து அதன்பலனாகவே அரசர்களாகிச் சீரிய சிங்காசனம் ஏறுகின்றார்களென்கை. **உருவுடை வண்ணங்கள் காணில் உலகளந்தானென்று துள்ளும்**= விலக்ஷண ரூபங்களையுடைய பதார்த்தங்களைக் கண்டால் (அதாவது, நீலம் குவளை காயா முதலிய உரு வழகிய பொருள்களைக் கண்டால் 'உலகளந்த என்னையன்' என்று சொல்லித் துள்ளுகின்றாள். கல் புதைத்துக் கிடக்கும் ஸ்தானங்களைக் கண்டால் அவையெல்லாம் பெரிய பெருமாள் பள்ளிகொண்டருளு கிற கோயிலே யென்று சொல்லுகின்றாள். எந்த ப்ரதிமையிலும் எம்பெருமானுடைய ஆவேசம் இருந்தே தீருமென்பது கருத்து.

**வெருவிலும் வீழ்விலும்** = வெருவுதலாவது அஞ்சுதல்; வீழ்தலாவது மோஹித்தல். தெளி வோடே கூடியிருந்து பந்துக்களைக் கண்டு அஞ்சி யிருக்கும்போதும், அறிவழிந்து மோஹித்துக் கிடக்கும் போதும் இடைவிடாதே கண்ணன் கழல்களில் விருப்பமே இவளுக்குச் செல்லா நின்றது என்றதா யிற்று. (அ)

3048\. விரும்பிப்பகவரைக்காணில் வியலிடமுண்டானேயென்னும்*
கரும்பெருமேகங்கள்காணில் கண்ணனென்றேறப்பறக்கும்*
பெரும்புலவாநிரைகாணில் பிரானுளனென்றுபின்செல்லும்*
அரும்பெறல்பெண்ணினைமாயோன் அலற்றியயர்ப்பிக்கின்றானே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| பகவரை காணில் | ஸந்நியாஸிகளைக் கண்டால் | பெரு புலம் ஆநிரை காணில் | பருத்து அழகிய பசுக்களைக் கண்டால் |
| விரும்பி | ஆதரவு கொண்டு பேணி | | |
| வியல் இடம் உண்டானே என்னும் | அகன்ற உலகத்தை ப்ரள யாபத்திலே உண்டு திரு வயிற்றிலே வைத்து ரக்ஷித்த ஸர்வ ரக்ஷகனே என்பாள் ; | பிரான் உளன் என்று பின் செல்லும் | (அவற்றை மேய்த்து ரக்ஷிப் பவனை) உபகாரகன் கூட வருகிறான் என்று நினைத்து அப்பசுக்களின் பின்னே போகிறாள் ; |
| கரு பெரு மேகங்கள் காணில் | கறுத்துப்பெருத்த மேகங் களைக் கண்டால் | பெறல் அரு பெண்ணினை | பெறுதற்கு அரியளான இப் பெண்ணை |
| | | மாயோன் | எம்பெருமான் |
| கண்ணன் என்று ஏற பறக்கும் | கண்ணபிரான் என்று நினைத்து (அங்கே செல்ல) மேலே யெழுந்து பறப்ப தற்கு அலமரா நிற்பாள் ; | அலற்றி அயர்ப் பிக்கின்றான் | வாய்விட்டு அலறும்படி பண்ணி (அதற்குமேலே) மோஹிக்கும்படி பண்ணு கிறான். |

* * * **பகவர்** என்றது பரமைகாந்திகள் என்றபடி. ஜ்ஞாநாநுஷ்டான பரிபூர்ணர்களான உத்தமாச்ரமிகள் என்று கொள்க. பகவானைச் சொல்லுகிற சொல்லைவிட்டே அவர்களைக் கூறினது—அவர்கள் பகவானில் வேறுபடாதவர்கள் என்பதைக் காட்டுதற்கென்க.

அப்படிப்பட்டவர்களைக் கண்டால், உலகங்களை யெல்லாம் திருவயிற்றிலே வைத்து நோக்கின பெருமானாகவே பிரதிபத்தி பண்ணுவள். ***ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்*** என்கிற பகவத் கீதையிலே நோக்குப் போலும்.

**புலம்** என்றது இந்திரியங்களை அபஹரிக்குமதான என்றபடி ; அழகிய என்பது தேர்ந்த பொருள்.

எப்போதும் தன்னையே வாய் வெருவும்படியாகவும் மோஹிக்கும்படியாகவும் இப்படி எம்பெருமான் செய்துவிட்டானே ! என்கிறாள் ஈற்றடியில். ஆழ்வார் இவ்வுலகில் திருவவதரித்தது மிக்க தவப் பயன் என்பது **அரும்பெறல் பெண்ணினை** என்பதனால் தெரிவிக்கப்பட்டது. "அருவினையேன் நெடுங் காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்ற திருவிருத்தமும் இங்கு அநுஸந்தேயம். (௬)

**3049.** அயர்க்கும்சுற்றும்பற்றிநோக்கும் அகலவேநீணோக்குக்கொள்ளும்*
வியர்க்கும்மழைக்கண்துளும்ப வெவ்வுயிர்க்கொள்ளும்மெய்சோரும்*
பெயர்த்தும்கண்ணாவென்றுபேசும் பெருமானேவாவென்றுகூவும்*
மயல்பெருங்காதலென்பேதைக்கு என்செய்கேன்?வல்வினையேனே. (௭)

| | | | |
|---|---|---|---|
| அயர்க்கும் | மோஹியா நிற்பள் ; | பெயர்த்தும் | பின்னையும் (ஆசைமிகுதியின லே) |
| சுற்றும் பற்றி நோக்கும் | (கண்ணன் தன்னிடத்து வாரா தொழியான் என்றுநினைத்து அவன் வருகையை) சுற்றி லும் பலகாலும் பார்ப்பள் ; | கண்ணா என்று பேசும் | க்ருஷ்ணனே ! என்று கூப் பிடுவாள் ; |
| | (அவ்வளவிலும் காணாமையினாலே அவன் தூரத்திலே நிற்கிறானாகவெண்ணி) | | (அவ்வளவிலே வந்தானாகவெண்ணி) |
| அகல நீள்நோக்கு கொள்ளும் | பார்த்த கண்ணை ஓட்டி நெடும் போது பாராநிற்பள் ; | பெருமானே வா என்று கூவும் | என்னுடையஸ்வாமியே ! வர லாகாதோ ? என்று அழைப் பாள் ; |
| | (அங்கும் காணாமையினாலே) | | |
| வியர்க்கும் | வேர்த்து நீராக நிற்கும் ; | மயல் பெரு காதல் என் பேதைக்கு | (இப்படிப்) பிச்சேறும்படி பெரிய காதலையுடையளான என் சொற் கேளாப்பெண் ணுக்கு |
| மழை கண் துளும்ப | மழைபோலக் கண்களில் நீர் துளும்பும்படி | | |
| வெம் உயிர்க் கொள்ளும் | வெவ்விதாக நெடுமூச்செறிகின்றாள் ; | | |
| மெய் சோரும் | (இத்தகைய பரிதாபத்தாலே) சரீரம் தரிக்க மாட்டாமல் வாடுவாள் ; | வல்வினையேன் என் செய்கேன் | (இவளை இப்படிக் காணும்படி) கொடிய பாபத்தையுடைய நான் என்ன செய்வேன் ? |

* * *—பராங்குசநாயகியின் பலவகைப்பட்ட நிலைமைகளை யெடுத்துரைக்கின்றாள் திருத்தாய். **அயர்க்கும்**=சிலகாலங்களிலே அறிவழிந்து கிடக்கின்றாள். **சுற்றும் பற்றிநோக்கும்**—சிலகாலங்களிலே அறிவு குடிபுகுந்திருந்து, தனக்குக் காட்சி தருவதற்காக எம்பெருமான் அருகே வந்திருந்தானாகக்கொண்டு மிக்க ஆவலுடனே சுற்றும் நோக்குகின்றாள். **அகலவே நீள்நோக்குக்கொள்ளும்**—சுற்றும் பார்த்தும் காணாதொழிந்தவாறே, "பரமபதத்தில் நின்றும் இப்போதே புறப்பட்டிருக்கக் கூடும் ; அங்கிருந்து எழுந் தருளுகிற அழகைக் காண்போம்" என்று நெடுந்தூரத்திலே கண்ணைவிட்டுப் பாராநின்றாள். **வியர்க்கும்**= அங்கும் காணப்பெறாமையாலே இளைப்பாலே வியர்வை மிகும். [**மழைக்கண் இத்யாதி.**] வேர்வை

யாய்ப் புறப்பட்டதுபோக மிகுந்தது கண்ணீராய்ப் புறப்படும்; அதிலும் மிகுந்தது நெடு மூச்சாய்ப் புறப்படும். அந்த பரிதாபத்தாலே சரீரம் தரிக்கமாட்டாமல் சோரும்; பின்னையும் ஆசை பேசாதிருக்க வொட்டாமையாலே, பெண்களுக்கு அற்றுத் தீர்ந்த க்ருஷ்ணனே! என்று கூவுகின்றாள். அங்ஙனம் கூவினவாறே உருவெளிப்பாட்டாலே அவன்றான் வந்து தோன்றினனாகக் கொண்டு 'பெருமானே' வா என்று அன்புதோற்ற அழைக்கின்றாள். (கo)

3050. வல்வினைதீர்க்குங்கண்ணனை வண்குருகூர்ச்சடகோபன்*
சொல்வினையால்சொன்னபாடல் ஆயிரத்துள்ளிவைபத்தும்*
நல்வினையென்றுகற்பார்கள் நலனிடைவைகுந்தம்நண்ணி*
தொல்வினைதீரவெல்லாரும் தொழுதெழவீற்றிருப்பாரே. (கக)

| | | | |
|---|---|---|---|
| வல் வினை தீர்க்கும் கண்ணனை | ஸகல பாபங்களையும் போக்குமியல்வினனான க்ருஷ்ணனை | நலன் உடை | (பகவதநுபவமாகிற) ஆனந்தத்தை யுடைத்தான |
| வண் குருகூர் சடகோபன் | வளப்பமுடைய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் | வைகுந்தம் நண்ணி | பரமபதத்தைக்கிட்டி |
| சொல் வினையால் சொன்ன பாடல் ஆயிரத்துள் இவை பத்தும் | சொல்லுந் தொழில் வன்மையால் அருளிச்செய்த பாட்டுக்கள் ஆயிரத்துள் இவை பத்துப் பாட்டுக்களையும் | தொல் வினை தீர | அநாதியான பாபங்கள் மறுவலிடாதபடி ஒழிய |
| | | எல்லாரும் தொழுது எழ | அங்குள்ள நித்யஸூரிகள் எல்லாரும் வணங்கிப் பெரிய கிளர்த்தியை யுடையராம்படியாக |
| நல்வினை என்று கற்பார்கள் | இது நல்ல செய்கை என்று கருதிக் கற்குமவர்கள் | வீற்றிருப்பார் | இருக்கப்பெறுவர்கள். |

* * *—கீழ்ப்பாட்டிற் கூறியபடி ஆழ்வார்க்கு ஆற்றாமை மீதூர்ந்தவாறே இனியிவரை இங்ஙனே துடிக்கவிட வொண்ணாதென்று திருவுள்ளம்பற்றிய எம்பெருமான் பதறி ஓடிவந்து ஸேவை ஸாதித்து இவருடைய துயரங்களைப் போக்கியருளினனென்பது விளங்க **வல்வினை தீர்க்குங் கண்ணனை** யென்கிறார். இங்கு நம்பிள்ளை யீட்டில்—"பெற்றவர்கள் கைவிட்டால் பிடித்தவர்கள் கைவிடார்களே" என்றுள்ள ஸ்ரீஸூக்தி மிகவும் ரஸிக்கத்தக்கது. கீழ்ப்பாட்டில் "மயற்பெருங்காதலென் பேதைக்கு என் செய்கேன் வல்வினையேனே" என்று தாய் சொல்லித் தலைக்கட்டுகையாலே பெற்றவர்கள் கைவிட்டமை விளங்கிற்று. உடனே "வல்வினை தீர்க்குங் கண்ணனை" என்கையாலே பிடித்தவர்கள் கைவிட்டிலாமை விளங்கிற்று. பிடித்தவர்கள் என்றது—பரகத ஸ்வீகாரமாகப் பற்றின எம்பெருமான் என்றபடி.

**சொல்வினையால் சொன்னபாடல்** என்றது—வாசிக கைங்கர்யமாகப் பாடின பாசுரம் என்றபடி. **நல்வினையென்று கற்பார்கள்**—இப்பாசுரங்களின் இனிமை நெஞ்சிலே பட்டால் இவற்றையொழிய வேறொன்றால் போதுபோக்க வரிது; அப்படி இனிமையிலே தோற்றுக் கற்காவிடினும் 'இது நமக்கு நன்மை பயக்குமது' என்று கொண்டாகிலும் கற்பவர்கள் என்றபடி.

"நலனிடை, நலனுடை" என்று இருவகையான பாடம் காண்கிறது. பொருள் ஒக்கும். ஆனந்த ப்ரசுரமான வென்றபடி. (கக)

---

## நான்காம்பத்து ஐந்தாந்திருவாய்மொழி—வீற்றிருந்தேழுலகும்

இத்திருவாய்மொழியில் ஆழ்வார்க்குச் செல்லுகிற ஆனந்தம் பேச்சுக்கு நிலமன்று. "இனி யென்னகுறை யெழுமையுமே?" என்றும் "இனியாவர் நிகரகல் வானத்தே" என்றும் மார்பு தட்டிப் பேசலாம்படி யாக்கியருளினான் எம்பெருமான். இத்திருவாய்மொழியின் அமைப்பை நோக்குமிடத்து இதற்கு மேற்பட்ட பரிபூர்ணாநுபவம் வேறில்லை என்றே சொல்லலாம்படியிராநின்றது. ஆனதுபற்றியே இத்திருவாய்மொழி * சூழ்விசும்பணி முகிலுக்கு அடுத்த திருவாய்மொழியாக இருந்திருக்கலாம் என்று நஞ்சீயர் ரஸோக்தியாக அருளிச்செய்வராம்.

3051. வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல்செல்ல,வீவில்சீர்*
ஆற்றல்மிக்காளுமம்மானை வெம்மாபிளந்தான்தன்னை*
போற்றியென்றேகைகளாரத் தொழுதுசொல்மாலைகள்*
ஏற்றநோற்றேற்கு இனியென்னகுறையெழுமையுமே? (க)

| | | | |
|---|---|---|---|
| வீற்றிருந்து | (பரமபதத்திலே) எழுந்தருளியிருந்து | தனி கோல் செல்ல | அத்விதீயமான செங்கோல் நடக்கும்படி, |
| ஏழ் உலகும் | எவ்வுலகங்களிலும் | வீவு இல் சீர் | முடிவில்லாத கல்யாண குணங்களை யுடையவனாய் |

| | | | |
|---|---|---|---|
| ஆற்றல் மிக்கு ஆளும் அம்மானை | சாந்தியுடனே ஆள்கின்ற ஸ்வாமியாய், | சொல் மாலைகள் | சொற்களாகிற மாலைகளை |
| வெம் மா பிளந் தான் தன்னை | கொடிய (கேசி என்னும் அஸுரனை) குதிரையை வாய் பிளந்துகொன்ற பெருமானை | ஏற்ற | (அவன் உகக்கும்படி) ஸமர்ப்பிக்கைக்கு |
| போற்றி என்றே | போற்றி போற்றி என்று வாழ்த்திக்கொண்டே | நோற்றேற்கு | புண்ணியஞ் செய்துள்ள எனக்கு |
| கைகள் ஆர தொழுது | கைகளின் விடாய் தீரும்படி அஞ்சலிபண்ணி | இனி | இனிமேல் |
| | | எழுமையும் | ஏழேழுபடியான ஜன்மங்களிலும் |
| | | என்ன குறை | என்ன குறையுண்டாம்? |

* * *—எல்லாவுலகங்களையும் நிர்வஹிக்கவல்லவனை எம்பெருமானை ஏத்தப்பெற்றவெனக்கு ஒருகாலத்திலும் ஒரு குறையுமில்லை யென்கிறார்.

திருநாட்டில் அநுபவத்தையும் இங்கிருந்தே யநுபவிக்கப் பெற்ற நான் 'அங்கே போகப்பெற்றிலேன்' என்கிற குறையுடை யேனல்லேன் என்றவாறு. (க)

3052. மையகண்ணாள்மலர்மேலுறைவாள் உறைமார்பினன்*
செய்யகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை*
மொய்யசொல்லாலிசைமாலைகளேத்தி உள்ளப்பேற்றேன்*
வெய்யநோய்கள்முழுதும் வியன்ஞாலத்துவீயவே. (உ)

| | | | |
|---|---|---|---|
| மைய கண்ணாள் | மை யெழுதப்பட்ட கண்ணை யுடையளாய் | மொய்ய சொல்லால் | செறிந்த சொற்களாலே சமைந்ததாய் |
| மலர் மேல் உறைவாள் | தாமரை மலரிலே வஸிப்பவளான லக்ஷ்மி | இசை மாலைகள் | இசையை யுடைத்தான மாலைகளாலே |
| உறை மார்பினன் | நித்யவாஸம் பண்ணப்பெற்ற மார்பையுடையனாய் | வியல் ஞாலத்து | அகன்ற புவியிலே யிருக்கச் செய்தே |
| செய்ய கோலம் தட கண்ணன் | சிவந்து அழகையுடைத்தாய் விசாலமான திருக்கண்களை யுடையனாய் | வெய்ய நோய்கள் முழுதும் வீய | கொடிய க்லேசங்கள் அனைத்தும் நசிக்கும்படியாக |
| | | ஏத்தி | துதித்து |
| விண்ணோர் பெருமான் தன்னை | நித்யஸூரி நாதனை எம்பெருமானை | உள்ள பெற்றேன் | என்னெஞ்சாலே அநுபவிக்கப் பெற்றேன். |

* * *—கீழ்ப்பாசுரத்திற் சொன்ன மேன்மைக்கு அடியான பிராட்டி ஸம்பந்தத்தை யுடையவனை ஸகலதாபங்களும் தீரும்படி புகழப்பெற்றே னென்கிறார்.

எம்பெருமானைத் தொடையழகு பொருந்திய சொல்மாலைகளைக்கொண்டு துதிக்கவே, அநுபவித்தே அறவேண்டும்படியான கருமபந்தங்களடங்கலும் தொலைந்தொழிந்தன வென்கிறார் பின்னடிகளில். இன்னாருடைய கருமபந்தங்கள் என்று பிரித்துச் சொல்லாமையாலே, உலகத்திலேயே கருமபந்தங்கள் இல்லையாம்படி செய்துவிட்டமை தோன்றுகின்றது. நம்பிள்ளை யீடு:—"பனை நிழல்போலே என்னை யொருவனையும் நோக்கிக்கொள்ளுகையன்றிக்கே *ஊரும்நாடு முலகமும் தன்னைப்போலேயாம்படி நானிருந்த விபூதியிலுண்டான கருமங்களுமடைய நசித்ததென்கை." (உ)

3053. வீவிலின்பம்மிக எல்லைநிகழ்ந்தநம்மச்சுதன்*
வீவில்சீரன்மலர்க்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை*
வீவில்காலமிசைமாலைகளேத்தி மேவப்பெற்றேன்*
வீவிலின்பம்மிக எல்லைநிகழ்ந்தனன்மேவியே. (௩)

| | | | |
|---|---|---|---|
| வீவு இல் இன்பம் | அழிவில்லாத ஆனந்தமானது | வீவு இல் காலம் | ஒழிவில்லாத காலமெல்லாம் |
| மிக எல்லை நிகழ்ந்த | மிகுதியான எல்லையிலே வர்த்திக்கிற (படியினாலே) | இசைமாலைகள் | இசைமிக்க சொல்மாலைகளாலே |
| நம் அச்சுதன் | அச்சுதன் என்னும் திருநாமத்தையுடையனாய் | ஏத்தி | துதித்து |
| | | மேவ பெற்றேன் | கிட்டப்பெற்றேன் ; |
| வீவு இல் சீரன் | முடிவில்லாத வைலக்ஷண்யத்தையுடையனாய் | மேவி | கிட்டி |
| | | வீவு இல் | முடிவில்லாத |
| மலர் கண்ணன் | தாமரை மலர்போன்ற கண்களையுடையனாய், | இன்பம் | ஆனந்தத்தினுடைய |
| விண்ணோர் பெருமான் தன்னை | விண்ணோர்க்குத் தலைவனானவனை | மிக எல்லை | முடிவான எல்லையிலே |
| | | நிகழ்ந்தனன் | இராநின்றேன், |

* * *—திருவாய்மொழிபாடி அடிமை செய்யப்பெறுகையால் தமக் குண்டான ஆனந்தம் எம்பெருமானுடைய ஆனந்தத்தையும் அதிசயித்தது என்கிறார். முதலடி ஆனந்தவல்லியையடியொற்றி அருளிச்செய்ததென்று ஆசாரியர்கள் திருவுள்ளம்பற்றுகிறார்கள். ஆநந்தவல்லியாவது தைத்திரீயோப நிஷத்தில் ஒரு பகுதி. அது எம்பெருமானுடைய திருக்குணங்களுள் ஒன்றான ஆனந்த குணத்தைப் பற்றிப் பேசுகின்றது. அந்த ஆனந்தம் இவ்வளவு கொண்டதென்று சொல்ல முடியாதென்பதைக் காட்டுவது.

அபரிச்சேத்யமான ஆனந்த முடையவனெம்பெருமான் என்று இப்பாட்டில் முதலடியில் அருளிச்செய்து, ஈற்றடியில் "வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனன்" என்கையாலே எம்பெருமானுடைய ஆனந்தவல்லியிற்காட்டிலும் ஆழ்வாருடைய ஆனந்தவல்லி மேம்பாடுடையதாகக் கொள்ள இடமுண்டு. (௩)

3054. மேவிநின்றுதொழுவார் வினைபோகமேவும்பிரான்*
தூவியம்புள்ளுடையான் அடலாழியம்மான்தன்னை*
நாவியலாலிசைமாலைகளேத்தி நண்ணப்பெற்றேன்*
ஆவியென்னாவியை யானறியேன்செய்தவாற்றையே. (௪)

| | | | |
|---|---|---|---|
| மேவி நின்று தொழுவார் வினை போக | நெஞ்சு பொருந்தியிருந்து அநுபவிப்பாருடைய பாபங்கள் யாவும் நசிக்கும்படி | நா இயலால் | நாவினுடைய தொழிலாலே |
| மேவும் பிரான் | தான் அவர்களோடே கலக்கின்ற மஹோபகாரகனாய் | இசை மாலைகள் | இசைரூபமான மாலைகளை யிட்டு |
| தூவி அம் புள் | சிறகுகளையுடைய அழகிய பெரியதிருவடியை | ஏத்தி நண்ண பெற்றேன் | ஏத்துகையாகிற நண்ணுதலைப் பெற்றேன் |
| உடையான் | ஊர்தியாகவுடையனாய் | ஆவி | எனக்கு அந்தராத்ம பூதனான எம்பெருமான் |
| அடல் ஆழி | போர்வல்ல திருவாழியை யுடையனை | என் ஆவியை | என்னுடைய ஆத்மாவை |
| | | செய்த ஆற்றை | இங்ஙனம் செய்த ப்ரகாரத்தை |
| அம்மான் தன்னை | ஸர்வேச்வரனை | யான் அறியேன் | நான் அறியமாட்டேன். |

* * *—நித்ய ஸூரிநாதனாயிருந்துவைத்து நித்யஸம்ஸாரியான என்பக்கலில் பண்ணியருளின மஹோபகாரம் என்னே ! என்று ஈடுபடுகிறார். எம்பெருமானுக்கு ப்ரணதார்த்திஹரன் என்று ஒரு திருநாமமுண்டு; அதன் பொருளை முதலடியில் அநுஸந்திக்கிறார். மேவி நின்றுதொழுகையாவது தன்னையே விரும்பித் தொழுகை; ப்ரயோஜநாந்தரங்களுக்கு மடியேலாதே அநந்யப்ரயோஜநர்களாய்த் தொழுகை. "நம்பும் மேவும் நசையாகும்மே" என்கிறபடியே மேவுதலாவது ஆசைப்படுகை; தன்னையே ஆசைப்பட்டு என்றபடி. ப்ரயோஜநாந்தரங்களை ஆசைப்பட்டுத் தொழுவாருடைய வினைகளைப் போக்க மாட்டானோ? என்று கேட்கவேண்டா.

**அடலாழியம்மான்**=அடல்—கொல்லுகை, வலிமை, போர், வெற்றி எனநான்கு பொருள்களுண்டு.

**நாஇயலால் இசைமாலைகளேத்தி**—நாப்புரட்டினதெல்லாம் இயலும் இசையுமாயிற்றென்பர். கவிபாடவேணுமென்கிற முயற்சியின்றியே நாக்கு இயம்பிற்றெல்லாம் நல்லிசை மாலைகளாயினவாம். திருவாய்மொழியைக் கொண்டு அவனையேத்தி அநுபவிக்கப் பெற்றேனென்கை.

[**ஆவி என்னாவியை இத்யாதி.**] ஆவி என்கிறது எம்பெருமானை; உலகுக்கு ஓருயிராயிருக்கையாலும், வேதாந்தங்களிலே **ஆத்மா** என்று எம்பெருமானை வழங்கியிருக்கையாலும் ஆவியென்னத் தட்டில்லை. [**என்ஆவியைச் செய்தவாற்றை யானறியேன்**] விபுவான தான் அணுவான வென்னைத் தன்னிலும்மேற்பட்ட (அல்லது, தன்னோடொத்த) ஆனந்தத்தையுடையேனும்படி பண்ணினவிதம் ஆச்சரியம் என்றவாறு. (௪)

3055. ஆற்றநல்லவகைகாட்டும் அம்மானை*அமரர்தம்
ஏற்றை எல்லாப்பொருளும்விரித்தானையெம்மான்தன்னை*
மாற்றமாலைபுனைந்தேத்தி நாளும்மகிழ்வெய்தினேன்*
காற்றின்முன்னம்கடுகி வினைநோய்கள்கரியவே. (௫)

| | | | |
|---|---|---|---|
| ஆற்ற | பொறுக்கப்பொறுக்க | அம்மானை | ஸர்வேச்வரனாய் |
| நல்ல வகை | விலக்ஷணமாயுள்ள (ஜ்ஞாந பக்திகள் பரபக்தி பரஜ்ஞாந பரம பக்திகளாகிற) ப்ரகாரங்களை | அமரர் தம்ஏற்றை | நித்யஸூரி நாதனாய் |
| | | எல்லாப் பொருளும் | எல்லா அர்த்த விசேஷங்களையும் (கீதோபநிஷத் முகத்தாலே) |
| காட்டும் | அடியார்களுக்குக் காட்டிக் கொடுக்கின்ற | விரித்தானை | விரிவாக உபதேசித்தவனை |
| | | எம்மான் தன்னை | எம்பெருமானை, |

| | | | |
|---|---|---|---|
| வினை | பாபங்களும் | மாற்றம் மாலை புனைந்து | சொல்மாலையைத் தொடுத்து |
| நோய்கள் | பெரியவ்யாதிகளும் | ஏத்தி | துதித்து |
| காற்றின் முன்னம் கடுகி | காற்றிலும் வேகமாய் ஓடிப் போய் | நாளும் | ஸர்வகாலமும் |
| கரிய | வெந்துபோம்படியாக | மகிழ்வு எய்தினேன் | மகிழ்ச்சியைப்பெற்றேன் |

* * *—எம்பெருமான் அடியார்களுக்குச் செய்தருள நினைக்கும் நன்மைகளை ஒருகாலே செய்து முடிப்பதில்லை; பொறுக்கப் பொறுக்கச் சிறிது சிறிதாகச் செய்தருள்வன். ஆசார்யஹ்ருதயத்தில் இரண்டாவது ப்ரகரணத்திலுள்ள * புணர்ந்தாறு பென்னைக் கலந்துபிரிந்து * இத்யாதி சூர்ணிகை இங்கு அநுஸந்தேயம். அதன் கருத்தாவது— * பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமிந் நின்ற நீர்மையினி யாமுறாமை யென்று ப்ரார்த்தித்தபோதே ஆழ்வாருடைய அபேக்ஷிதம் செய்துவிடலாமாயிருக்க இவரை இந்நிலத்திலே வைத்துத் தன்னுடைய ஸம்ச்லேஷ விச்லேஷங்களாலே ஜ்ஞானபக்திகளை வளர்த்தது ஏதுக்காக வென்னில்; கனமான கர்ணபூஷணமிடுதற்கு இடமாம்படி நூலிட்டுத் திரியிட்டுக் குதம்பையிட்டுக் காது பெருக்குமாபோலவும், ஒருமாஸம் உபவாஸமிருந்தவர்களுக்கு முதலிலே போஜனமிட்டால் பொருதென்று சோற்றையரைத்து உடம்பிலே பூசிப்பொரிக்கஞ்சி கொடுத்துப் பொரிக்கூழ் கொடுத்து நாளடைவிலே போஜனம் பொறுப்பிக்குமா போலவும், பகவத்துபவம் கனக்கண்டறியாத விவர்க்கு அதிசலாக்யமாய் நித்யஸூரிகள் அநுபவிக்கிற போகத்தை முதன் முதலிலே கொடுத்தால் ஸாத்மியாதென்று கருதி அது ஸாத்மிக்கைக்காக ச்ரமம் செய்வித்தபடி என்கை.

ஆற்ற நல்லவகை இன்னாருக்குக் காட்டும் என்னுமையாலே இது பொதுவிலே சொன்னதித்தனை. ஆழ்வாரிடத்திலே ஸமந்வயம் காணலாம்.

இப்படி எம்பெருமான் பண்ணின வுபகாரத்திற்குக் கைம்மாறு காணமையாலே ஏத்தினேன், அதுதிருவாய்மொழியாய்த் தலைக்கட்டிற்று; துக்கங்களும் துக்கஹேதுவான கருமங்களுமெல்லாம் விரைவாகவே தொலைந்தன வென்கிறார்.

காற்றில் முன்னங்கடுகி என்றது—விரைவின்மிகுதியைச் சொன்னபடி. (ரு)

3056. கரியமேனிமிசை வெளியநீறுசிறிதேயிடும்*
பெரியகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை*
உரியசொல்லாலிசைமாலைகளேத்தி உள்ளப்பெற்றேற்கு*
அரியதுண்டோவெனக்கு? இன்றுதொட்டுமினியென்றுமே. (சு)

| | | | |
|---|---|---|---|
| கரிய மேனிமிசை | (திருக்கண்ணின்) கரிய விழியின் மேலே | இசை மாலைகள் | இசைவடிவான மாலைகளையிட்டு |
| வெளிய நீறு | அஞ்சன நீற்றினை | ஏத்தி | துதித்து |
| சிறிதே இடும் | அளவாக அணிகிற | உள்ள | அநுபவிக்க |
| பெரிய கோலம் | அளவிறந்த அழகினையுடைய | பெற்றேற்கு எனக்கு | பெற்றவனான எனக்கு |
| தடம் கண்ணன் | விசாலமான திருக்கண்களையுடையவனாய் | இன்று தொட்டும் | இன்று தொடங்கி |
| விண்ணோர் பெருமான் தன்னை | நித்யஸூரிகளுக்குத் தலைவனான ஸர்வேச்வரனை | இனி என்றும் | இனிமேலுள்ள காலம் எல்லாம் |
| உரிய சொல்லால் | (இவ்வழகுக்குத்) தகுதியான சொற்களாலே | அரியது உண்டோ | துர்லபமாயிருப்பது ஒன்றுண்டோ |

* * * 'ஆழ்வீர்! உமக்கு வேண்டுவது என்?' என்று எம்பெருமான் கேட்க, இதுவரையில் நான் பெறாதே இனி ஸாதித்துத் தரவேண்டுவதொரு பொருளுண்டோ வென்கிறார். [கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதே யிடும்] இதற்குப் பலவகையாகப் பொருள் பணிப்பர்கள். மேலே "பெரிய கோலத்தடங்கண்ணன்" என்று திருக்கண்களின் ப்ரஸ்தாவ மிருக்கையாலே கரியமேனி மிசை என்றது—திருக்கண்களில் கருவிழியினுடைய கறுத்த நிறத்தால் வந்த அழகுக்கு மேலே என்றபடி. வெளிய நீறு சிறிதேயிடும்—அஞ்ஜன சூர்ணத்தை மங்கலமாகச் சிறிது அணிந்து கொள்ளுகிற என்றபடி. "வெளியம்—அஞ்ஜனம்" என்று பன்னீராயிரம்.

கரி அம்மேனி மிசை வெளிய, நீறு சிறிதேயிடும் என்றுகொண்டு, கரி—குவலயாபீட யானையானது, அம்மேனிமிசை கண்ணபிரானது அந்தத் திருமேனியிலே, வெளிய—சீறிப்பாய்ந்த வளவிலே, சிறிதே—க்ஷண காலத்திற்குள், நீறு இடும்—அந்த யானையைப் பொடிபடுத்தின—என்றும் ஒருதமிழன்.

3057. என்றுமொன்றாகி ஒத்தாருமிக்கார்களும்* தன்தனக்கு
இன்றிநின்றானை எல்லாவுலகுமுடையான்தன்னை*
குன்றமொன்றால்மழைகாத்தபிரானைச் சொல்மாலைகள்*
நன்றுசூட்டும்விதியெய்தினம் என்னகுறைநமக்கே? (எ)

| | |
|---|---|
| என்றும் | பரத்வம் முதலான ஸர்வா வஸ்தைகளிலும் |
| ஒன்று ஆகி | ஒரே ப்ரகாரமுடையனாய்க் கொண்டு |
| ஒத்தாரும் மிக்கார்களும் | ஸமராயும் அதிகராயும் இருப்பார் |
| தன் தனக்கு | தனக்கு |
| இன்றி நின்றானை | இல்லாமலிருப்பவனாய் |
| எல்லா உலகும் உடையான் தன்னை | எல்லா வுலகத்தையும் தனக்கு ஶேஷமாக வுடையனாய், |
| மழை | மழையை |
| குன்றம் ஒன்றால் | மலை ஒன்றினாலே |
| காத்த பிரானை | நடத்த மஹோபகாரகனானவனைக் குறித்து |
| சொல் மாலைகள் | சொல் மயமான மாலைகளை |
| நன்று சூட்டும் விதி | அவன் ஆதரித்துச் சூடும்படி சூட்டுகைக்குற்ற பாக்கியத்தை |
| எய்தினம் | கிட்டப் பெற்றோம்; (ஆதலால்) |
| நமக்கு என்ன குறை | நமக்கு ஒருகுறை யுண்டோ? |

* * * கீழ்ப்பாட்டில் "அரியதுண்டோ வெனக்கு இன்று தொட்டு மினி யென்றுமே" என்று செருக்குத் தோற்றப் பேசினார். இத்தகைய செருக்கு எத்தாலே வந்ததென்ன, எம்பெருமானருளாலே வந்ததென்கிறாரிப்பாட்டில். பரமபத நிலயனாய் நிற்கும் நிலைமையோடு, மநுஷ்யாதி ஸஜாதீயனாய் அவதரிக்கு மவதாரங்களோடு வாசியற எல்லா நிலைமைகளிலும் தன்னோடு ஒத்தவர்களும் மேம்பட்டவர்களு மின்றிக்கே யிருப்பவனாய், ஸகல லோகங்களையும் தனக்கு சேஷமாகவுடையனாய், அந்த சேஷ வஸ்துக்களுக்கு இந்திரனால் நேர்ந்த ஆபத்தை, கண்டதொரு மலையாலே போக்கினவனான ஸர்வேச்வரனைத் திருவாய் மொழியாகிற சொல் மாலைகளாலே அழகாக அலங்கரிக்கும்படியான பாக்கியம் பெற்றோம்; ஆனபின்பு நமக்கு ஒரு குறையுண்டோ வென்கிறார்.

இங்ஙனம் பூர்ணமான விஷயத்தை நாம் எங்ஙனம் பேசுவது! என்று கொண்டு மீளாமல், துணிந்து ஊடுருவப் பேசப் புகுந்த என்னுடைய பாக்கியமே பாக்கியம் என்றாராயிற்று. (எ)

3058. நமக்கும்பூவின்மிசைநங்கைக்கும் இன்பனை*ஞாலத்தார்
தமக்கும் வானத்தவர்க்கும்பெருமானை*தண்டாமரை
சுமக்கும்பாதப்பெருமானைச் சொல்மாலைகள்*சொல்லுமாறு
அமைக்கவல்லேற்கு இனியாவர்நிகரகல்வானத்தே? (அ)

| | |
|---|---|
| நமக்கும் பூவின் மிசை நங்கைக்கும் இன்பனை | நித்ய ஸம்ஸாரிகளான நமக்கும் தாமரை மலரில் வசிக்கும் பெரியபிராட்டியாருக்கும் இன்பமளிப்பவனும் |
| ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானை | லீலாவிபூதியி லுள்ளார்க்கும் பரமபத வாஸிகளுக்கும் தலைவனும் |
| தண் தாமரை சுமக்கும் பாதம் பெருமானை | குளிர்ந்த தாமரை மலர் சுமக்கும்படியான திருவடிகளை யுடையனுமான ஸர்வேச்வரன் விஷயத்தில் |
| சொல்மாலைகள் சொல்லும் ஆறு | திருவாய்மொழியைச் சொல்லும்படியாக |
| அமைக்க வல்லேற்கு | அமைதியைப்பெற்ற எனக்கு |
| அகல்வானத்து | அகன்ற நித்ய-விபூதியிலும் |
| யாவர் இனி நிகர் | யார்தான் இனி ஒப்பாவார்? |

* * * ஆழ்வார், தம் பக்கலிலே எம்பெருமானுக்குண்டான அபிநிவேசத்தைக் கண்டு, இப்படிப்பட்ட எம்பெருமானைக் கவிபாட வல்ல எனக்குப் பரமபதத்தில் ஸூரிகளும் நிகரல்லர் என்கிறார்.

பெரியபிராட்டியா ரிடத்திலும், அவளுடைய பரிகரமான நம்மிடத்திலும் ஸ்நேஹித்திருப்பவன் எம்பெருமான் என்று இந்த முறையிலே யிட்டுப் பாசுர மருளிச்செய்ய வேண்டியிருக்க, "நமக்கும் பூவன்மிசை நங்கைக்கும்" என்று தம்மை முந்துறச் சொல்லிப் பிறகு பிராட்டியைச் சொல்லியிருப்பது கொண்டு ஒரு விசேஷார்த்தம் சிக்ஷிக்கப்படும். [ஆசார்ய ஹ்ருதயத்தில் இரண்டாம் பிரகரணத்தில்— "இன்பு மன்பும் முற்படுவது கொழுந்து விடுவதாகிறது" இத்யாதி சூர்ணிகை இங்கே அநுஸந்தேயம்.] எம்பெருமான் ப்ரீதிபண்ணுமிடத்தில், நித்யாநபாயிநியான பிராட்டியிற் காட்டிலும் அதிகமாகவே நம்மிடத்தில் பண்ணுவனென்னுமிடம் இதனால் அறியத்தக்கது. இங்கே ஈட்டு ஸ்ரீ ஸூக்தி காண்மின்:— "இன்பனை மிடத்தில் முற்பாடு இங்கேயாய்ப் பின்பாயிற்று அவளுக்கு ஸ்நேஹித்திருப்பது" என்று.

**தண்தாமரை சுமக்கும் பாதப்பெருமானை** = குளிர்ந்த ஆஸநபத்மத்தாலே தரிக்கப்பட்ட திருவடிகளையுடையவனென்கை. எம்பெருமானுடைய திருவடிகளின் கீழே பத்மாஸந மிருப்பது அறியத்தக்கது. "அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ" என்றதும் இங்கு அநுஸந்தேயம். தண்டாமரையின்மீது விளங்குகின்ற பாதங்களையுடையவன் என்ன வேண்டுமிடத்தில் "தண்டாமரை **சுமக்கும்** பாதன்" என்றது ஒரு உத்ப்ரேக்ஷையில் நோக்காக. அதாவது—குளிர்த்தியிலும் பரிமளத்திலும் செவ்வியிலும் தாமரைப் பூவானது திருவடிக்குத் தோற்றுப்போயிற்றாம்; தோற்றவர்கள் வென்றவர்களைச் சுமப்பது என்கிற ஒரு வியவஸ்தை உலகிற் காண்பதாதலால், தோல்வியடைந்த தாமரைப்பூ வெற்றிபெற்ற திருவடியைச் சுமக்கவேண்டியதாயிற்றுப்போலு மென்கை. இக்கருத்தை அமைத்து **ஆழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் ஒரு ச்லோகமருளிச் செய்தார்.** (அ)

3059. வானத்தும்வானத்துள்ளும்பரும் மண்ணுள்ளும்மண்ணின்கீழ்த்
தானத்தும்* எண்டிசையும்தவிராதுநின்றான் தன்னை*
கூனற்சங்கத்தடக்கையவனைக் குடமாடியை
வானக்கோனை*கவிசொல்லவல்லேற்கு இனிமாறுண்டே? (கூ)

| | | | |
|---|---|---|---|
| வானத்தும் | ஸ்வர்க்கத்திலும் | கூன்நல் சங்கம் தட கையவனை | வளைந்த வடிவால் அழகிய ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை பெரிய திருக்கையிலுடையவனும் |
| உள்வானத்து உம்பரும் | அதுக்குள்ளாய்ப் பெரியதாயிருக்கிற மஹர்லோகாதிகளிலும் | குடம் ஆடியை | குடக்கூத்தினாலே ஸகல ஜனங்களையும் வசீகரித்தவனும் |
| மண்ணுள்ளும் | பூமிக்குள்ளும் | வானம் கோனை | நித்ய ஸூரிகளுக்கும் தலைவனுமான ஸர்வேச்வரன் விஷயத்திலே |
| மண்ணின் கீழ் தானத்தும் | பூமியின்கீழ் இருக்கிற பாதாள உலகத்திலும், | கவி சொல்ல வல்லேற்கு | கவி பாடவல்ல எனக்கு |
| எண் திசையும் | இவற்றிலுண்டான எட்டு விதமான பதார்த்தங்களிலும் | இனி மாறு உண்டே | இனி எதிர் உண்டோ? |
| தவிராது நின்றான் தன்னை | ஒன்றிலும் நழுவாதபடி வ்யாபித்து நிற்பவனும் | | |

* * * இப்பாட்டு ஆழ்வாருடைய ஸர்வ விலக்ஷணமான பெருமையைக் காட்டுகின்றது. பரமபதத்திலுள்ள நித்யர்களென்ன, முக்தர்களென்ன, இவ் விபூதியிலுள்ள பராசர பாராசர்ய வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகளென்ன, ஆகிய இவர்களெல்லாரிற் காட்டிலும் ஆழ்வார்க்குண்டான வைலக்ஷண்யம் இப் பாசுரத்தில் வெளியாகின்றது. எம்பெருமானுடைய பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென்ற எல்லா நிலைமைகளிலும் புக்குக் கவி சொல்லவல்ல வெனக்கு எதிருண்டோ வென்கிறார்.

"எம்பெருமான்றன்னைக் கவிசொல்லவல்ல என்னோ டொக்குமோ ஸர்வேச்வரனான எம்பெருமான்தானும்" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல். (கூ)

3060. உண்டுமுமிழ்ந்துங்கடந்துமிடந்தும் கிடந்துநின்றும்*
கொண்டகோலத்தொடுவீற்றிருந்தும் மணங்கூடியும்*
கண்டவாற்றால் தனதேயுலகெனநின்றான் தன்னை*
வண்டமிழ்நூற்கநோற்றேன் அடியார்க்கின்பமாரியே. (ய)

| | | | |
|---|---|---|---|
| உண்டும் | (ப்ரளயத்திலே) உண்டு வயிற்றிலே வைத்தும் | மணம் கூடியும் | பதினோராயிரம் ஆண்டு பூமியை ரக்ஷிக்கையாலே பூமிப்பிராட்டிவிரும்பி யணைக்க அவளோடே ஸம்ச்லேஷித்தும் |
| உமிழ்ந்தும் | பிறகு வெளிநாடுகாண உமிழ்ந்தும் | கண்ட ஆற்றால் | இப்படி ப்ரத்யக்ஷமாகக் கண்ட சேஷ்டிதங்களால் |
| கடந்தும் | [மற்றொருகால்] அளந்து காற்கீழேயிட்டும் | உலகு தனதே என | உலகம் தனக்கே சேஷம் என்றுநாடாகச் சொல்லும்படி |
| இடந்தும் | [அவாந்தர ப்ரளயத்திலே வராஹ ரூபியாய்] இடந்தெடுத்தும் | நின்றான் தன்னை | நின்ற ஸர்வேச்வரன் விஷயத்தில் |
| கிடந்தும் | [ஸ்ரீராமவதாரத்திலே] கடற்கரையிலே கிடந்தும் | வண் தமிழ் நூற்க நோற்றேன் | அழகிய தமிழ்ப்பிரபந்தத்தைத் தொடுக்கைக்குப் புண்ணியம் பண்ணினேன்; [இத்திவ்யப்ரபந்தமானது] |
| நின்றும் | இராவணவதத்தின் பிறகு தேவர்கட்குக் காட்சி கொடுத்து நின்றும் | அடியார்க்கு | எம்பெருமானடியார்கட்கு |
| கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தும் | மீண்டுவந்து பட்டாபிஷேகம் பண்ணின கோலத்தோடே எழுந்தருளி யிருந்தும் | இன்பம் மாரி | ஆனந்த மழைபொழியும் மேகமாயிரா நின்றது. |

* * * தாம் பாடுகிற கவிகளின் இனிமையைத் தாம் அநுஸந்தித்து, எம்பெருமானுக்கு நல்லராயிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் இவற்றைக் கேட்டால் எங்ஙனே இனியராகிறரோ வென்கிறார். எம்பெருமானுடைய சேஷ்டிதங்களடங்க என் சொல்லுக்குள்ளேயாம்படி கவிபாட வல்லேனுப் ப்ராப்த விஷயத்திலே வாசிகமாக அடிமைசெய்யப்பெற்றது மாத்திரமன்றிக்கே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆனந்த

மளிக்கவல்லவனானே னென்கிறார். எம்பெருமானுடைய சேஷ்டிதங்கள் பலவற்றையும் முன்னடிகளில் கங்காப்ரவாஹம்போல் அருளிச்செய்கிறார். உண்டது ப்ரளயாபத்தில்; உமிழ்ந்தது ப்ரளயம் நீங்கின வாறே; கடந்தது வாமநாவதாரத்தில். இடந்தது வராஹாவதாரத்தில். கிடந்தது கடற்கரையிலே: ஸேது பந்தனத்திற்கு முன்னே ஸமுத்ரராஜனை நோக்கி அஞ்ஜலிபண்ணிக்கிடந்தகிடை. நின்றது-ராவண ஸம்ஹாரம் ஆனபிறகு தேவர்களுக்குக் காட்சிகொடுத்து நின்றது. கொண்டகோலத்தொடு வீற்றிருந்தது-ஜடா வல்கலதாரியாய்ப் பர்ணசாலைகளிலே இருந்த இருப்பாதல்: மகுடாபிஷேகஞ் செய்து கொண்டு பதினோ ராயிரமாண்டு இருந்த இருப்பாதல். (தச வர்ஷஸஹஸ்ராணி தச வர்ஷசதாநி ச, ராமோ ராஜ்யமுபாஸித்வா-) * என்கிறபடியே பதினோராயிரமாண்டு பூமியை ரக்ஷிக்கையாலே பூமிக்கு அபிமாநிநியான பிராட்டி விரும்பியணைக்க, அவளோடே ஸம்ச்லேஷித்தமை சொல்லுகிறது மணங்கூடியும் என்று. (கo)

3061. மாரிமாறாததண்ணம்மலை வேங்கடத்தண்ணலை*
வாரிமாறாதபைம்பூம்பொழில்சூழ் குருகூர்நகர்*
காரிமாறன்சடகோபன் சொல்லாயிரத்திப்பத்தால்*
வேரிமாறாதபூமேலிருப்பாள் வினைதீர்க்குமே. (கக)

| | | | |
|---|---|---|---|
| மாரி மாறாத தண் அம் வேங்கடம் மலை அண்ணலை | மழை தப்பாதபடியினாலே குளிர்ந்து அழகிய திருவேங்கடமலையிலேயுள்ள ஸ்வாமி விஷயமாக, | காரி மாறன் சடகோபன் | ஆழ்வார் |
| | | சொல் ஆயிரத்து இப்பத்தால் | அருளிச்செய்த ஆயிரத்தில் இப்பத்துப் பாசுரங்களினால், |
| வாரி மாறாத பை பூ பொழில்சூழ் குருகூர் நகர் | ஜல ஸம்ருத்தி குறையாத பரந்தபூஞ்சோலைகளாலே சூழப்பட்ட திருநகரியில் (அவதரித்த) | வேரி மாறாத பூ மேல் இருப்பாள் | பரிமளம் அறாத தாமரை மலரிலே நித்யவாஸம் பண்ணுகிற பிராட்டி |
| | | வினைதீர்க்கும் | எல்லாப்பாபங்களையும் போக்கியருளவள். |

## நான்காம்பத்து ஆறாந்திருவாய்மொழி—தீர்ப்பாரையாமினி

கீழில் சென்ற திருவாய்மொழிக்கு அடுத்தபடியாக இந்தத் திருவாய்மொழி இருக்கத்தகுதியில்லை யென்று நம்முதலிகள் கூறுவர்களாம். கீழ்த்திருவாய்மொழி எல்லை கடந்த ப்ரீதியோடே சென்றது; அதற்கு எதிர்த்தட்டாய்ச் செல்கிறது இத்திருவாய்மொழி. கீழ்ப்பதிகத்திற்கும் இப்பதிகத்திற்கும் ஸங்கதி அருளிச்செய்யவேணுமென்று எம்பாரைச் சிலர் கேட்டார்களாம்; அதற்கு எம்பார் "இதற்கு நான் என்னசொல்லுவேன்? **அஸங்கதிரேவ ஸங்கதி:** என்று கொள்ளுங்கோள்" என்றாராம். இது இன்சுவையே வடிவெடுத்த வார்த்தையாகும். ஸங்கதி சொல்ல முடியாதென்று ஆபாத ப்ரதீதியிலே பொருளாம்; **அஸங்கதி:** என்றது அஸம்ச்லேஷமென்றபடியாய் விச்லேஷத்தைச் சொல்லிற்றாய், விச்லேஷந் தான் இதற்கு ஸங்கதி என்கை பரமார்த்தம்.

தேவதாந்தர ஸம்பந்த கந்தத்தையும் ஸஹியாத ஆழ்வாருடைய பரமவைஷ்ணவத்வம் சொல்லுகிறது இத்திருவாய்மொழி.

3062. தீர்ப்பாரையாமினி எங்ஙனம்நாடுதுமன்னைமீர்!*
ஓர்ப்பாலிவ்வொண்ணுதல் உற்றநல்நோயிதுதேறினோம்*
போர்ப்பாகுதான்செய்து அன்றைவரைவெல்வித்த*மாயப்போர்த்
தேர்ப்பாகனார்க்கு இவள்சிந்தைதுழாய்த்திசைக்கின்றதே. (க)

| | | | |
|---|---|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! | நல் நோய் | விலக்ஷணமான நோயாகும்; |
| இனி | இப்படிப்பட்ட நிலைமையான பின்பு | தேறினோம் | திண்ணமாக அறிந்தோம். |
| | | அன்று | முன்பொருகாலத்திலே |
| தீர்ப்பாரை | இந்தநோயைத் தீர்க்க வல்லவர்களை | போர் | பாரதப்போரிலே |
| யாம் எங்ஙனம் நாடுதும் | நாம்எவ்விதமாகத் தேடிப் பிடிக்க முடியும்? (முடியாது) | பாகு | பாகனாயிருந்து செய்யவேண்டிய காரியங்களை |
| | | தான் செய்து | தானேமுன்னின்று நடத்தி |
| ஓர்ப்பால் | நன்கு நிரூபிக்குமளவில் | ஐவரை | பஞ்சபாண்டவர்களை |
| இ ஒள் நுதல் | அழகிய நெற்றியையுடைய இப்பெண்பிள்ளை | வெல்வித்த | ஜயம்பெற்றவர்களாகச் செய்வித்த |
| உற்ற இது | அடைந்திருக்கின்ற இந்த நோயானது | மாயம் | ஆச்சரிய சக்தியுக்தரும் |

| | |
|---|---|
| போர் தேர் பாகனுர்க்கு | யுத்தபூமியில் தேர்செலுத்த வல்லவருமான பெருமாள் விஷயத்திலே |
| இவள் | இப்பராங்குசநாயகியினுடைய |
| சிந்தை | மனமானது |
| துழாய் | துழாவப்பெற்று |
| திசைக்கின்றது ஏ | அறிவழியா நின்றதே! |

* * *—பராங்குசநாயகியின் தோழியானவள், 'இந்நோய் பாண்டவபக்ஷபாதியான கண்ணபிரானடியாக வந்ததாகையாலே இதற்கு நீங்கள் பரிஹாரமாக நினைத்துச் செய்கிறவை பரிஹாரமல்ல' என்று க்ஷேபிக்கிறாள். **அன்னைமீர்! யாம் இனித்தீர்ப்பாரை எங்ஙனம் நாடுதும்?**=இச்சொல்தொடர் பலவகைக் கருத்துக்களைக் கொண்டது; இவ்வாழ்வாருடைய அருகிலே வருமவர்களெல்லாம் இவரோடொப்ப மோஹிப்பவர்களேயன்றி, உணர்ந்திருந்து பரிஹாரமுறைமைகளை ஆராயவல்லார் ஒருவருமில்லையே! என்கை. நோய்க்குப் பரிஹாரம் பண்ணிக்கொண்டிருக்குமவர்களை நோக்கித் "தீர்ப்பாரையாமினி யெங்ஙனம் நாடுதும்" என்கையாலே நீங்கள் செய்கிறவை பரிஹாரமல்ல என்றவாறுமாம். "கடல் வண்ணரிது செய்தார் காப்பாராரே?" (2062) என்கிறபடியே* நோய்களறுக்கும் மருந்தான எம்பெருமான்தானே இங்ஙனே நோய் செய்தானான பின்பு இனி இந்நோயைத் தீர்க்கவழியுண்டோ? என்றபடியுமாம்.

**இவள் சிந்தை துழாய் திசைக்கின்றது மாயப்போர்த் தேர்ப்பாகனார்க்கு**=கண்ணபிரானுடைய ஆச்ரிதபக்ஷபாதம், ஆச்ரிதஸௌலப்யம் முதலிய திருக்குணங்களில் ஈடுபட்டதனாலுண்டான நோய்காண்மின் இது என்று தெரிவித்தாளாயிற்று. துழாய்—துழாவி; ப்ரமித்து என்றபடி. (க)

3063. திசைக்கின்றதேயிவள்நோய் இதுமிக்கபெருந்தெய்வம்*
இசைப்பின்றிநீரணங்காடும் இளந்தெய்வமன்றிது*
திசைப்பின்றியே சங்குசக்கரமென்றிவள்கேட்க*நீர்
இசைக்கிற்றிராகில் நன்றேயில்பெறுமிதுகாண்மினே. (உ)

| | |
|---|---|
| (அன்னைமீர்) | தாய்மார்களே! |
| திசைக்கின்றதே | நீங்கள் இப்படியும் அறிவுகெடலாகுமோ? |
| இவள் நோய் இது | இப்பெண்பிள்ளைக்கு உண்டாகி யிருக்கின்ற நோயானது |
| மிக்க பெரு தெய்வம் | பராத்பரமான தெய்வமடியாக வந்தது; |
| இசைப்பு இன்றி | தகுதியில்லாதபடி |
| நீர் அணங்கு ஆடும் இள தெய்வம் அன்று இது | நீங்கள் வெறியாடுவிக்கின்ற க்ஷுத்ர தெய்வமடியாக வந்ததன்று இது; (ஆதலால்) |
| திசைப்பு இன்றியே | மனக்குழப்பம் தவிர்ந்து |
| நீர் | நீங்கள் |
| இவள் கேட்க | இப்பெண்பிள்ளையின் காதில் விழும்படியாக |
| சங்கு சக்கரம் என்று | சங்கென்றும் சக்கரமென்றும் |
| இசைக்கிற்றிர் ஆகில் | சொல்ல வல்லீர்களானால் |
| நன்றே | நலமாகவே |
| இல் பெறும் | (இவ்ள்) இல்லிருப்புப் பெறும்படியாகும்; |
| இது காண்மின் | இங்ஙனே நடத்திப் பாருங்கள். |

* * *—க்ஷுத்ர தெய்வங்களைக் குறித்துப்பண்ணும் சாந்திகளால் இவளுடைய நோய் போக்கவரிது; எம்பெருமானுடைய லக்ஷணங்களைச் சொல்லில் இவளைப்பெறலாமென்கிறாள். **திசைக்கின்றதே** என்பது மிக வருந்திச் சொல்வதாகும். இப்படியும் ப்ரமிக்கலாகுமோ? என்று க்ஷேபிக்கிறபடி. **இவள் நோயிது மிக்க பெருந்தெய்வம்**=திருவிருத்தத்தில் "வானோர்தலைமகனும் சீராயின தெய்வநன்னோய் இது" என்றும் "சின்மொழிநோயோ கழிபெருந்தெய்வம்" என்றும் உள்ள பாசுரங்கள் இங்கே அநுஸந்திக்கத்தக்கன. ஸ்ரீமந்நாராயணனாலே உண்டுபண்ணப்பட்ட நோய் இது என்றபடி.

நன்றே இல்பெறும், நன்று ஏயில்பெறும்—என்று இரண்டுவகையாகப் பிரிப்பர்கள்; இரண்டாவதில், நன்று—நன்றாக, ஏயில்பெறும்—வார்த்தைசொல்லப்பெறுவள் என்றவாறு. மயக்கம் நீங்கி உணர்த்தியுண்டாகுமென்கை. (உ)

3064. இதுகாண்மினன்னைமீர் இக்கட்டுவிச்சிசொற்கொண்டு*நீர்
எதுவானும்செய்து அங்கோர்கள்ளுமிறைச்சியும்தூவேல்மின்*
மதுவார்துழாய்முடி மாயப்பிரான்கழல்வாழ்த்தினால்*
அதுவேயிவளுற்றநோய்க்கும் அருமருந்தாகுமே. (ந)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே!, |
| இது காண்மின் | நான் சொல்லுகிற இக்காரியத்தைச் செய்து பாருங்கள்; |
| நீர் இ கட்டுவிச்சி சொல்கொண்டு | நீங்கள் இந்தக் குறத்தியின் பேச்சைக் கேட்டு |
| எதுவானும் செய்து | ஸ்வரூப விருத்தமானதைச் செய்து |
| அங்கு ஓர் கள்ளும் இறைச்சியும் தூவேல்மின் | அவ்விடத்திலே ஹேயமான மதுவையும் மாம்ஸத்தையும் ஆராதனையாக வைக்க வேண்டா; |
| மது ஆர் துழாய் முடி | தேன் பொருந்தின திருத்துழாய் மாலையை திருமுடியிலணிந்துள்ள |

| | | | |
|---|---|---|---|
| ாயம் பிரான் | ஆச்சர்ய சக்தியுக்தனை ப்ரபுவினுடைய | அதுவே | அதுதானே |
| ழல் வாழ்த்தி னுல் | திருவடிகளை நோக்கி மங்களா சாஸனம் பண்ணினல் | இவள் உற்ற நோய்க்கும் அரு மருந்து ஆகும் | இப் பெண்பிள்ளை யடைந் திருக்கிற நோய்க்கும் அருமையான மருந்தாகும். |

* * * தவறுதலான செயல்களைச் செய்யாமல் எம்பெருமான் திருவடிகளை வாழ்த்துவ ாகிற பரிஹார முறைமையை யனுட்டித்தால் இவளுடைய நோய் தீருமென்கிருள். நான் சொல்லுகிற ார்த்தை விரைவில் பயன் தருகின்றதா இல்லையா என்பதை நீங்கள் கைமேலே காணுங்கோளென்பாள் துகாண்மி னன்னைமீர் என்கிருள். காண்மின் என்றது 'கேண்மின்' என்ற பொருளில் வந்ததாகவும் காள்ள இடமுண்டு. அன்னைமீர்! என்கையாலே நீங்கள் மிகவும் மூத்தவர்களேயானாலும், சொல்லு 'ற நான் சிறுமியேயானாலும் சொல்லும் பேச்சு நல்லதாயிருக்குமாகில் ஆதரிக்க வேண்டாவோ? என் 'ற கருத்துத்தொனிக்கும். "வளர்த்ததனல் பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி ணங்கினளே" என்கிறபடியே என்போல்வாருடைய பேச்சுக்கு உபசார விசேஷங்கள் செய்யவேண்டி ிருக்க, அவை செய்யாவிடினும் காதுகொடுத்துக் கேட்கத்தா னகாதோ என்கிற கருத்தும் தொனிக்கும். ட்டுவிச்சி—குறி சொல்லுகிறவள். இகரச்சுட்டு—அவளுடைய இழிவைப் புலப்படுத்தும். "காணிலு ருப்பொலார் செவிக்கினதை கீர்த்தியார், பேணிலும் வரந்தரமிடுக்கிலாத தேவர்" என்கிறபடியே மிகவும் 'சமான தெய்வத்தை வழிபடுகின்ற இவளை எங்கே தேடிப் பிடித்தீர்கள்! என்று க்ஷேபிக்கிறபடி. கண் 'காண்டு காணவொண்ணுத விவளை அழைத்து எதிரே யிருத்தினதுமல்லாமல் இவளுடைய கடியகொடிய 'பச்சுக்களுக்குக் காது கொடுப்பதுஞ் செய்தீர்களே! என்று இடித்துக் கூறுகிறபடி. இகரச்சுட்டு 'சால்லில் அந்வயிக்கவுமாம்: கட்டுவிச்சியின் இச்சொல் என்க.

ஆழ்வாருடைய பரிஸரத்திலே கள்ளும் இறைச்சியும் தூவ ப்ரஸக்தி லேசமுமில்லையே; இங் ்னே அப்ரஸக்த ப்ரதிஷேதம் பண்ணலாமோவென்னில்; கேண்மின்; திருவாய்மொழி பக்தி சாஸ்த்ரமா ிருப்பதுபோலவே தர்மசாஸ்த்ரமுமா யிருக்கும். ஸ்ரீ வைஷ்ணவ தர்மங்களைத் தெரிவிக்கின்றவத்தனை ிலே நோக்கு; ஆஹாரநியம ப்ரகரணத்திலே இவை பரிஹரணீயங்கள் என்னுமிடத்தை வற்புறுத்துகிற டி. இனி, ஸ்வரூபாநுரூபமான பரிஹார க்ரமத்தைச் சொல்லுகின்றன பின்னடிகள். *தோளிணை 'மலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மானது ிருவடிகளை ஸ்மரித்து "உன்சேவடி செவ்வி திருக்காப்பு" என்று பல்லாண்டு பாடுமளவே போதும் ன்கிருள். (௩)

3065. மருந்தாகுமென்று அங்கோர்மாயவலவைசொற்கொண்டு*நீர்
கருஞ்சோறும்மற்றைச்செஞ்சோறும் களனிழைத்தென்பயன்*
ஒருங்காகவேயுலகேழும் விழுங்கியுமிழ்ந்திட்ட*
பெருந்தேவன்பேர்சொல்லகிற்கில் இவளைப்பெறுதிரே. (௪)

| | | | |
|---|---|---|---|
| அன்னைமீர்!) | தாய்மார்களே! | என் பயன் | என்ன பலனுண்டாம்? (இது வீணை காரியம்;) |
| ருந்து ஆகும் என்று | நோய்க்குப் பரிஹாரமாகு மென்றெண்ணி | உலகு ஏழும் ஒருங்கு ஆக ஏ விழுங்கி உமிழ்ந்திட்ட | ஸப்த லோகங்களையும் ஒரு காலே (பிரளயம் கொள் ளாதபடி) உட்கொண்டு பிறகு வெளிப்படுத்தின |
| ர் மாயம் அலவை சொல் கொண்டு | வஞ்சகச் செய்கைகளை யுடையளாயும் தோன்றின படியே சொல்லுபவளாயு மிருக்கின்ற ஒருத்தியின் பேச்சைக் கொண்டு | பெரு தேவன் பேர் சொல்ல கிற்கில் | பரதேவதையான ஸ்ரீமந் நாராயணனுடைய திரு நாமங்களை (இவளது காதிலே படும்படி) சொல்ல வல்லீர்களானல் |
| ீர் கரு சோறும் மற்றை செம் சோறும் | நீங்கள் கருஞ்சோற்றையும் மற்றுள்ள செஞ்சோற்றை யும் | இவளை பெறுதிர் | இவளை இழவாமே பெறு வீர்கள். |
| களன் இழைத்து | நாற்சந்தியிலே இடுவதனல் | | |

* * * எம்பெருமானுடைய திருநாமங்களை இப்பெண்பிள்ளை செவிப்படச் சொல்லுவதே இந்நோய்க்குப் பரிஹாரமென்கிருள். யுக்தா யுக்த நிரூபணம் பண்ணுமல் கண்டபடியே சொல்லு கிறவளுக்கு அலவை என்று பெயர்; இங்கே கட்டுவிச்சியைக் குறிக்கின்ற சொல் இது, பரி ஹார முறைமை சொல்லவந்து தோன்றினபடியே பிதற்றுநின்ற இக்கட்டுவிச்சியின் சொல்லை நம்பி நீங்கள் க்ஷுத்ரதெய்வங்கள் வந்து ஸந்நிதிபண்ணுமிடமான நாற்சந்தி முதலானவற்றிலே செஞ்சோறு கருஞ்சோறுகளை யிடுவதனல் என்ன பயனுண்டு? பின்னை என் செய்யவேணுமென்னில்; ஆச்ரிதர் அநாச்ரிதர் என்கிற வாசிபாராமல் ஸகல லோகங்களையும் பிரளயம் விழுங்காதபடி தான்விழுங்கி ரக்ஷித்து, ப்ரளயம் கழிந்தவாறே வெளிப்படுத்தின பரதேவதையின் திருநாமம் சொல்லவல்லீர்களாகில் இவள் உய்யப்பெறலாம். வேறுவகையான காரியங்கள் செய்வது இவளை இழப்பதற்கே உறுப்பா மென்றவாறு. (௪)

3066. இவளைப்பெறும்பரிசு இவ்வணங்காடுதலன்றந்தோ!*
குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும்பயந்தனள்*
கவளக்கடாக்களிறட்டபிரான் திருநாமத்தால்*
தவளப்பொடிக்கொண்டு நீரிட்டிடுமின் தணியுமே (௫)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| இவளை பெறும் பரிசு | இப் பெண்பிள்ளையை (நோய் தீர்ந்து) நாம் பெறுதற்குரிய மார்க்கம் |
| இ அணங்கு ஆடுதல் அன்று | வெறியாடுதலாகிற இக்காரியமன்று; |
| அந்தோ | ஐயோ! |
| | (இப்பெண்பிள்ளை) |
| குவளை தட கண்ணும் | குவளை மலர்போன்றதாய் விசாலமான கண்களும் |
| கோவை செம் வாயும் | கோவைக் கனிபோன்று சிவந்த அதரமும் |
| பயந்தனள் | வைவர்ணியமடையப் பெற்றாள்; |
| | (இதற்குத்தகுந்த பரிஹாரமென்னவென்றால்) |
| கவளம் கடா களிறு அட்ட பிரான் | மதகரமான மருந்துகளைக் கவளங் கொண்டதாய் மதம் பெற்றதான (குவலயாபீடமென்னும் யானையை தொலைத்தருளின ஸ்வாமியினுடைய |
| திரு நாமத்தால் | திருநாமோச்சாரண பூர்வகமாக |
| தவளம் பொடி கொண்டு | பரிசுத்தமான (ஸ்ரீ வைஷ்ணவ பாத) தூளியைக் கொண்டு வந்து |
| நீர் இட்டிடுமின் | நீங்கள் (இவள்மேல்) தூவுங்கோள்; |
| தணியும் | (இவளது நோய்) தீரும். |

* * * மகளுடைய நோய் தீரவேணுமென்று நீங்கள் பண்ணுகிற பரிஹாரம் நோயை இன்னமும் அதிகப்படுத்தாநின்றதேயன்றித் தீரச்செய்கின்றதில்லையே; ஆனபின்பு இந்த முறைமைகளை விட்டு நோயின் ஸ்வரூபத்திற்கு யோக்யமான பரிஹாரமுறையை அனுட்டிக்கப் பாருங்களென்கிறாள்.

இந்த நல்ல சரக்கை இழவாமல் பெறவேண்டி யிருந்தீர்களாகில் இப்படி விபரீதமான செயல்களைச் செய்வீர்களோ? பெறுதற்கு ஹேதுவென்று நினைத்து நீங்கள் செய்கிற காரியம் இழத்தற்கன்றோ ஹேதுவாகின்றது. வேலனைக்கொண்டு வெறியாடுவிக்கின்றவிது இவளைப் பெறுதற்கு ஹேதுவாகுமோ? இவளது உயிர் மாய்வதற்கன்றோ இது ஹேது! அநியாயமாய் இப்பெண்பிள்ளையை இழந்துவிடப் பாராகின்றீர்களே! அந்தோ! இப்படியும் ஒரு காரியம் செய்யலாமோ! என்கிற நிர்வேதம் முதலடியாக வடிவெடுத்திருக்கின்றது. (௫)

3067. தணியும்பொழுதில்லை நீரணங்காடுதிரன்னைமீர்!*
பிணியுமொழிகின்றதில்லை பெருகுமிதுவல்லால்*
மணியினணிநிறமாயன் தமரடிநீறுகொண்டு*
அணியமுயலில் மற்றில்லைகண்டீரிவ்வணங்குக்கே. (௬)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| தணியும் பொழுது இன்றி | சிறிதும் ஓய்வு இல்லாமல் |
| நீர் அணங்கு ஆடுதிர் | நீங்கள் வெறியாடுதலைச் செய்வியா நின்றீர்கள்; |
| | (இவ்வெறியாடலினால்) |
| பிணியும் ஒழிகின்றது இல்லை | நோயோ தீர்கின்றதில்லை; |
| இது அல்லால் | நோய் தீராத மாத்திரமேயன்றிக்கே |
| பெருகும் | மேன்மேலும் வ்ருத்தியுமடைந்து வருகின்றது; |
| இ அணங்குக்கு | இப் பெண்பிள்ளைக்கு |
| மணியில் அணி நிறம் | நீலமணியிற் காட்டிலும் அழகிய நிறம்படைத்த |
| மாயன் | எம்பெருமானுடைய |
| தமர் | பக்தர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களினுடைய |
| அடி நீறுகொண்டு | பாததூளியைக் கொண்டுவந்து |
| அணிய முயலில் | இடுவதற்கு முயற்சி செய்தால் |
| மற்று இல்லை கண்டீர் | (இத்தோடொத்த பரிஹாரம்) வேறெதுவுமில்லைகிடீர். |

* * * கீழ்ப்பாட்டில் "தவளப்பொடிக் கொண்டு நீரிட்டிடுமின் தணியுமே" என்று கூறின தோழியை நோக்கித் தாய்மார் "நீ சொல்லுகிற பொடி இன்னதென்று தெரியவில்லையே! விளங்கச் சொன்னால் நலம்" என்ன; அதனை விளங்க வுரைக்கின்றாளிப்பாட்டில்.

அந்தோ! சிறுபிள்ளைகள்போலே நீங்கள் செய்கின்றீர்களே! (அதாவது) ஏதாவதொரு காரியத்தைச் சிறுபிள்ளைகள் செய்யாநின்றால் அதில் தகுதியின்மை கண்டு பெரியார் மறுத்தால், அப்பிள்ளைகள் அக்காரியத்தையே மேன்மேலும் பிடிவாதமாய் வலிந்து செய்து போருவது வழக்கம். அப்படியே நீங்களும் நான் மறுப்பதே ஹேதுவாகப் பிடிவாதங்கொண்டு வெறியாட்டந் தன்னையே விடாது செய்விக்கின்றீர்களே! இதனால் பிணி ஒழியாததோடு பெருகிச் செல்லவுங் காணாநின்றோமே! என்கிறாள் முன்னடிகளில். நீலமணிவண்ணனான எம்பெருமானுடைய வடிவழகில் ஈடுபாடுகொண்ட பரமபாகவதர்களின்

ஸ்ரீபாததூளியைக் கொண்டுவந்து......என்று இவள் சொல்லத் தொடங்கும்போதே தாய்மார்கள் ‘இவ்வரும் பெரும்பொருள் நமக்குக் கிடைக்க வழி ஏது? மிகவும் துர்லபமான வஸ்துவைச் சொல்லுகின்றயே! இது ஸம்பாதிப்பது கஷ்டமாயிற்றே!’ என்று சொல்ல; அன்னைமீர்! மாயன்தமரடி நீறுதன்னைக் கொண்டு வரவேண்டா; ‘அதைக் கொண்டுவரவேணும்; இவளுக்கு அதை யிடவேணும்’ என்று மநோரதித்தாலும் போதும்; அவ்வளவிலேயே நோய் தீர்ந்ததாகும், பாருங்கோள் என்கிறாள். (௬)

3068. அணங்குக்கருமருந்தென்று அங்கோராடும்கள்ளும்பராய்*
சுணங்கையெறிந்து நும்தோள்குலைக்கப்படுமன்னைமீர்?*
உணங்கல்கெடக் கழுதையுதடாட்டம்கண்டென்பயன்?*
வணங்கீர்கள்மாயப்பிரான்தமர் வேதம்வல்லாரையே. (எ)

| | | | |
|---|---|---|---|
| அணங்குக்கு அரு மருந்து என்று | இப்பெண்பிள்ளைக்கு அருமையான மருந்தென்று சொல்லி | உணங்கல்கெட | உலர்த்தின நெல் பாழாய்ப் போக |
| அங்கு ஓர் ஆடும் கள்ளும் பராய் | தேவதாந்தரத்திற்கு ஆடறுக்கவும் கள்நிவேதனம் செய்யவும் பாரித்து | கழுதை உதடு ஆட்டம் கண்டு என் பயன் | (அதனை மேய்கிற) கழுதையின் உதடு அசைகின்ற அழகைக் கண்டு கொண்டிருப்பதனால் ஒரு பயனுண்டோ? |
| சுணங்கை எறிந்து | ஒருவகைக் கூத்தாடுதலையும் செய்வித்துக் கொண்டு | | |
| நும்தோள் குலைக்க படும் அன்னைமீர் | தோள்கள் துடிக்கக் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கின்ற தாய்மார்களே! (இந்தக் கூத்தாடுதலைக் கண்டுகொண்டிருப்பதும் ஒரு வேடிக்கையோ?) | மாயன் பிரான் தமர் வேதம் வல்லாரை வணங்கீர்கள் | ஆச்சரிய சக்தியையுடையனை எம்பெருமானுடைய பக்தர்களான வைதிகர்களை வணங்குங்கள். |

* * * இவளது நோய்க்குப் பரிஹாரமாக தேவதாந்தர பஜனம் பண்ணினால் இவளுக்கு இழவேயாம்: இவள் பிழைக்கவேணு மென்றிருந்தீர்களாகில் ஸ்ரீ வைஷ்ணவர்களைப் பணிவதே பாங்கு என்கிறாள். ஆடு அறுக்கவும் மது நிவேதனம் பண்ணவும் பாரிக்கின்ற பரிஹாரமுறையை வாய்விட்டு நிந்திக்கின்றாள். **பராய்** என்றது பராவியென்றபடி. பராவுதலாவது பாரித்தல்.

இரண்டாமடியில் “சுணங்கை=எறிந்து” என்றும் “சுணம்—கையெறிந்து” என்றும் கொண்டு பொருள் கூறுவர். சுணங்கையென்பது சுணங்கைக்கூத்தைச் சொன்னபடி; அதாவது கையைத்தட்டி ஆடுவதொருகூத்து; தேவதாந்தர ஸமாராதனமாகச்செய்யும் செய்கைகளிலே இந்தக் கூத்தாட்டமும் ஒன்றாகக் கொள்ளத்தக்கது. “**துணங்கை** யென்று பாடமாய் துணங்கையென்ற கூத்தாகவுமாம்” என்பர் பன்னீராயிரவுரைகாரர். சுணம், கையெறிந்து என்று பிரிக்குமளவில், சூர்ணமென்னும் வடசொல் சுண்ணமென்றாகி, அது **சுணம்** என்று தொக்கிக்கிடப்பதாகக்கொண்டு மஞ்சட் பொடியென்று பொருள்கொள்க. மஞ்சள்பொடியை ஒருவர்மேலே ஒருவரெறிந்து ஆடுவதென்பர். **நும் தோள் குலைக்கப் படும் அன்னைமீர்!**=வெறி யாடுகிற காலத்தில் தோள்கள் அசைத்தாடப் படுவதுண்டே, அதனைக்கூறியவாறு. அன்னையருடைய தோள்களுக்கு ஒரு வியாபாரமுமில்லையே: அப்படியிருக்க “**நும்தோள்** குலைக்க’ என்று சொல்லிற்று என்னென்னில்; ப்ரயோஜ்யகார்த்தாக்களிடம் காணப்படும் செயலை ப்ரயோஜக கர்த்தாக்களிடத்திலும் ஏறிட்டுச் சொல்லுவதுண்டாதலால் அந்த முறையிற் சொன்னபடி. (எ)

3069. வேதம்வல்லார்களைக்கொண்டு விண்ணோர்பெருமான்திருப்
பாதம்பணிந்து*இவள்நோயிது தீர்த்துக்கொள்ளாதுபோய்*
ஏதம்பறைந்தல்லசெய்து கள்ளூடுகலாய்த்தூய்*
கீதமுழவிட்டு நீரணங்காடுதல்கீழ்மையே. (அ)

| | | | |
|---|---|---|---|
| (அன்னைமீர்) | தாய்மார்களே! | ஏதம் பறைந்து | இழிவான பேச்சுக்களைப் பேசி |
| வேதம்வல்லார்களை கொண்டு | வைதிகர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக் கொண்டு | அல்ல செய்து | ஸ்வரூபத்திற்குத் தகாத காரியங்களைச் செய்து |
| | | ஊடு | நடுநடுவே |
| விண்ணோர் பெருமான் திரு பாதம் பணிந்து | நித்ய ஸூரிநாதனை எம்பெருமானுடைய திருவடிகளை ஆச்ரயித்து | கள் கலாய் தூய் | கள்ளைக் கலர்து தூவி |
| | | கீதம் முழவு இட்டு | வாத்ய கோஷங்களைப் பண்ணி |
| இவள் நோய் இது தீர்த்துக்கொள்ளாதுபோய் | இவளுடைய இந்த நோயைப் போக்கிக்கொள்ளாமல் | நீர் அணங்கு ஆடுதல் | நீங்கள் வெறியாடுவிக்கின்ற விது |
| | | கீழ்மையே | (இக்குடிக்கு) அவத்யமேயாம். |

* * * வேதவித்துக்களான ஸ்ரீ வைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக் கொண்டு எம்பெருமான் திருவடிகளைப் பணிந்து இவளுடைய நோயைத் தீர்த்துக்கொள்ளாதே அற்பதெய்வங்களைப்பணிதல் உங்களுக்குக் கீழ்மையென்கிறாள்.

இதில் முதலடியில், சிறந்த சாஸ்த்ரார்த்தமொன்று வெளியிடப்படுகிறது; யானையின்மீது ஏற விரும்புமவர்கள் யானைப்பாகனுடைய அநுமதிகொண்டு புகவேண்டுமாபோலே ஸ்ரீ வைஷ்ணவர்களைப் புரஸ்கரித்துக்கொண்டே எம்பெருமானைப்பணிதல் வேண்டுமென்பது ஸத்ஸம்ப்ரதாயம்.

**ஏதம் பறைந்து**=வெறியாடுகிற வேலன் வாயாற் சொல்லுகிற வார்த்தைகளெல்லாம் அநுவதிக்கவும் தகாதாகையாலே ஏதமென்று பொதுவிலே சொன்னபடி. அவன் செய்கிற காரியங்களும் அப்படியே மிகவும் ஆபாஸங்களாகையாலே அல்லசெய்து எனப்பட்டது; ஸ்வரூபாநுரூப மல்லாதவற்றைச் செய்து என்றபடி. அதை விவரிக்கிறது—**கள் ஊடு கலாய்த் தூய்** என்றும் **கீதமுழவிட்டு அணங்காடுதல்** என்றும்.

நிஹீநத்ரவ்யங்களைக் கலந்து தூவி, பொல்லாத பாட்டோடுங்கூடின வாத்யங்களை ப்ரவர்த்திப்பித்து நீங்கள் தைவாவேசத்தாலே ஆடுகிறவிது இக்குடிக்கே இழுக்கு என்றதாயிற்று. (அ)

3070. கீழ்மையினலங்கோர் கீழ்மகனிட்டமுழவின்கீழ்*
நாழ்மைபலசொல்லி நீரணங்காடும்பொய்காண்கிலேன்*
ஏழ்மைப்பிறப்புக்குஞ்சேமம் இந்நோய்க்குமீதேமருந்து*
ஊழ்மையில்கண்ணபிரான் கழல்வாழ்த்துமினுன்னித்தே. (௯)

(அன்னைமீர்) — தாய்மார்களே!
கீழ்மையினால் — உங்கள் நீசத்தனத்தினால்
அங்கு ஓர் கீழ் மகன் இட்ட முழவின் கீழ் — நீசனான சண்டாளனொருவன் நடத்திப்போரும் வாத்ய கோஷத்தின் சார்பாக
பல நாழ்மை சொல்லி — தப்புவார்த்தைகள் பலவற்றையுஞ் சொல்லி
நீர் அணங்கு ஆடும் பொய் — நீங்கள் வெறியாடுகின்ற விந்த வம்புவேலையை
காண்கிலேன் — நான் கண்கொண்டு காணமாட்டேன்;
(கிரமமாகச் செய்யவேண்டிய காரியம் என்னவென்றால்)
ஊழ்மையின் — முறைப்படியே
கண்ணபிரான் கழல் உன்னித்து வாழ்த்துமின் — க்ருஷ்ணபகவானுடைய திருவடிகளைச் சிந்தித்துமங்களாசாஸநம் பணணுங்கள்;
ஈதே ஏழ்மை பிறப்புக்கும் சேமம் — இந்த மங்களாசாஸநமே ஏழேழ் பிறவிக்கும் க்ஷேமகரம்;
இ நோய்க்கும் ஈதே மருந்து — இந்த நோய் தீருவதற்கும் இது தான் மருந்து.

* * * நீங்கள் அணங்காடுவதை நான் கண்கொண்டு காணமாட்டேன்; இவள் பிழைக்க வேணுமென்றிருந்தீர்களாகில் கண்ணபிரானுடைய திருவடிகளை நினைத்துவாழ்த்துங்கோள் என்கிறாள். ஒரு சண்டாளன் ஏதோ வாத்யம் முழங்குவதாம்; அவ்விடத்தைச் சுற்றிப் பலர் இருந்துகொண்டு தேவதாந்தரங்களின்மேலே சில கட்டுக்கதைகளைச் சொல்லிப்பாடுவதாம்: இதனிடையே வேலன் தலை விரித்தாடுவதாம்; ஆகவிப்படி நீங்கள் செய்து போருகிற தப்புக்காரியங்களை என்கண்ணால்பார்க்க ஸஹிக்கின்றிலேன் என்கிறாள் முன்னடிகளில். ரஜோகுணத்திற்கும் தமோகுணத்திற்கும் வசப்பட்டிருக்குந்தன்மையை இங்குக் கீழ்மை என்கிறது. நாழ்மைபல சொல்லுவதாவது—அவற்றுக்கு இல்லாத ஏற்றங்கள் பலவும் சொல்லுகை. **நாழ்**—அவத்யம். (௯)

3071. உன்னித்துமற்றொருதெய்வந்தொழாள் அவனையல்லால்*
நும்மிச்சைசொல்லி நுந்தோள்குலைக்கப்படுமன்னைமீர்!*
மன்னப்படுமறைவாணனை வண்துவராபதி
மன்னனை*ஏத்துமின் ஏத்துதலுந்தொழுதாடுமே. (௧௦)

அவனை அல்லால் — எம்பெருமானைத் தவிர்த்து
மற்று ஒரு தெய்வம் — வேறொரு தெய்வத்தை
உன்னித்து தொழாள் — ஒருவஸ்துவாக நினைத்து (இப் பெண் பிள்ளை) தொழுவது கிடையாது;
(இப்படியிருக்க)
நும் இச்சை சொல்லி — உங்களுடைய மனம் போன படியே (நான் அநுவாதம் செய்யவும் தகாத சொற்களைச்) சொல்லி
நும் — உங்களுடைய
தோள் குலைக்கப் படும் அன்னைமீர் — தோள் அசையநிற்கிற தாய்மார்களே;
மன்னப்படும் மறைவாணனை — நித்யமாக விளங்குகின்ற வேதங்களினால் பிரதிபாதிக்கப்படுகிறவனும்
வண் துவராபதி மன்னனை — அழகிய துவாரகாபுரிக்கு அதிபதியுமான எம்பெருமானை
ஏத்துமின் — துதியுங்கோள்;
ஏத்துதலும் — துதித்தவுடனே
தொழுது ஆடும் — (இப்பெண்பிள்ளை உணர்த்திபெற்று, அவனைத்)தொழுது களித்துக் கூத்தாடுவாள்.

* * * இப்பராங்குச நாயகிக்குக் கண்ணபிரான் பக்கலிலுள்ள அளவுகடந்த ப்ராவண்யத்தையறிந்து நீங்கள் அதற்குத் தகுதியாக நடந்துகொள்வதே யுக்தமென்கிறாள் தோழி.

ஒழுங்குபடச் செய்யவேண்டிய பரிஹார முறையை உணர்த்துவன பின்னடிகள். வேதாந்த விழுப்பொருளான வண்துவராபதி மன்னனுடைய திருநாமத்தைச் சொல்லி யேத்துதல் செய்யவே இந்நோய் தீருமென்றாளாயிற்று. ஏத்துதலும்—ஏத்தினவுடனே, தொழுது ஆடும—இப்பெண்பிள்ளை உஜ்ஜீவனம் பெற்றுவிடுவள் என்றபடி. ஆடும் என்பதை ஏவற்பன்மை வினைமுற்றாகக்கொண்டு, நீங்கள் தொழுதாடுங்கோள் என்றதாகவுமுரைக்கலாம். (கo)

3072. தொழுதாடித்தூமணிவண்ணனுக்கு ஆட்செய்துநோய்தீர்ந்த*
வழுவாததொல்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்*சொல்
வழுவாதவாயிரத்துள் இவைபத்துவெறிகளும்*
தொழுதாடிப்பாடவல்லார் துக்கசீலமிலர்களே. (கக)

| | | | |
|---|---|---|---|
| தொழுது ஆடி | வணங்குதலும் கூத்தாடுதலுஞ் செய்து | சடகோபன் | ஆழ்வார் |
| தூ மணி வண்ணனுக்கு | அழகிய நீலமணிபோன்ற நிறமுடையனான எம்பெருமானுக்கு | சொல் | அருளிச்செய்த |
| ஆள் செய்து | அடிமைத்தொழில் செய்து | வழுவாத | குறையற்றதான |
| நோய் தீர்ந்த | நோய் தீரப்பெற்றவரும், | ஆயிரத்துள் | ஆயிரத்தினுள்ளே |
| வழுவாத | அவத்யமடையாத | வெறிகள் | வெறிவிலக்கு விஷயமான |
| தொல் புகழ் | இயற்கையான புகழையுடையவரும் | இவை பத்தும் | இப்பதிகத்தை, |
| வண் குருகூர் | அழகிய திருநகரிக்குத் தலைவருமான | தொழுதும் ஆடி | தொழுவதும் ஆடுவதுமாய்க் கொண்டு |
| | | பாட வல்லார் | பாடவல்லவர்கள் |
| | | துக்க சீலம் இலர்கள் | துக்கப்படுந்தன்மை யில்லாதவராவர். |

ஆக இப்படிப்பட்ட வெறிவிலக்குத் துறையிலே அமைந்த இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாக அநுஸந்திக்க வல்லவர்கள் எம்பெருமானைப் பிரிந்து படுகிற துயரமும் அதற்குப் பரிஹாரமாக தேவதாந்தர ஸமாராதனம் பண்ணத்தேடுகையாகிற துயரமும் ஸம்பந்திக்கப்பெறுதே வாழ்வர்கள் என்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. (கக)

---

## நான்காம்பத்து ஏழாந்திருவாய்மொழி—சீலமில்லாச்சிறியன்

உலகத்திலே நோயாளிகள் மயக்க முற்றிருக்கும்போதுகளிலே பாதை தெரியாதேயிருந்து, மயக்கம் தெளிந்தவாறே பாடாற்றவொண்ணுமல் துடிப்பர்களே! அந்த நிலைமையேயாயிற்று ஆழ்வார்க்கு இப்பதிகத்தில்.

அவனே ஆபத்துக்கு உதவுமியல்வினன்; ஆபத்துக்கு நிதானமறிந்து பரிஹரிக்கவும் வல்லன்; பிரிந்தால் பொறுத்திருக்க வொண்ணாதபடியான அழகு படைத்தவன்; ஆபத்துக்களிலே விரோதியைப் போக்கி உதவுகைக்குப் போதுமான சக்திபடைத்தவன்; இப்படியிருந்தும் நம் ஆற்றாமைக்கு உதவவில்லையே என்று கனத்த ஆர்த்தியோடே, கேட்டாரெல்லாரும் நீராய்க்கரையும்படி கூப்பிடுகிறார்.

3073. சீலமில்லாச்சிறியனேலும் செய்வினையோபெரிதால்*
ஞாலமுண்டாய்! ஞானமூர்த்தி!நாராயணா!என்றென்று*
காலந்தோறும்யானிருந்து கைதலைபூசலிட்டால்*
கோலமேனிகாணவாராய் கூவியும்கொள்ளாயே. (க)

| | | | |
|---|---|---|---|
| சீலம் இல்லா சிறியன் ஏலும் | நன்மை யொன்று மில்லாத சிறியவனா யிருந்தேனாகிலும் | காலம் தோறும் | எல்லாக்காலத்திலும் |
| செய்வினையோ பெரிது ஆல் | செய்த பாபமோ பெரிதாயிருக்கின்றது; அந்தோ! | யான் இருந்து | நான் ஆசையோடிருந்து கொண்டு |
| ஞாலம் உண்டாய் | (பிரளயத்தில்) உலகங்களை உண்டவனே! | கை தலை பூசல் இட்டால் | கையைத் தலையிலே வைத்துக் கூப்பிட்டால், |
| ஞானம் மூர்த்தீ | விலக்ஷண ஜ்ஞானத்தை வடிவாகவுடையவனே! | கோலம் மேனி காண வாராய் | அழகிய திருமேனியை நான் ஸேவிக்குமாறு வருகிறுயில்லை; |
| நாராயணா | நாராயணனே! | | |
| என்று என்று | என்றிப்படிப் பலகாலும் சொல்லி | கூவியும் கொள்ளாய் | கூவிக்கொள்வதும் செய்கின்றிலை. |

* * *—ஆழ்வார் சில ஞானிகளைச் **சிறுமாமனிசர்** என்று அருளிச்செய்வதுண்டு; வடிவு சிறுத்து ஞானம்பெருத்தவர்கள் என்கிற காரணத்தாலே அவர்களைச் சிறுமாமனிசரென்கிறது. இப்பாட்டின் முதலடியில் ஒரு விதத்திலே தம்மையும் சிறுமாமனிசராகச் சொல்லிக்கொள்கிறார் போலும். நற்குணமொன்றுமில்லாததனால் சிறியவன்; பண்ணின பாபங்களில் பெரியவன் என்கிறார். சீலமாவது நன்னடத்தை, அஃதில்லாமைபற்றித் தம்மை நீசராக அநுஸந்தித்துக்கொள்ளுகிறார். **செய்வினையோ பெரிதால்** என்றவிடத்திற்கு நம்பிள்ளையீடு;—"பண்ணின பாபத்தைப் பார்த்தவாறே சிதசிதீச்வர தத்வ த்ரயத்தையும் விளாக்குலைகொள்ளும்படி பெருத்திருந்தது. ஸம்ஸாரிகளுடைய குற்றங்களைப்பொறுக்கு மீச்வரனுடைய குணங்களிலும், அவன்தந்த பக்திரூபாபந்நஜ்ஞானத்திலுங்காட்டில் பெரிதாயாயிற்றிருக்கிறது."

**கைதலைபூசலிடுவதாவது**—"மத்தகத்திடைக் கைகளைக்கூப்பி" (372) என்றும் "ஶிரஸ்யஞ்ஜலிமாதாய—சிரஸ்யஞ்ஜலிமாதாய" என்றும் சொல்லுகிறபடியே தலைமேல் கரங்குவிக்கை. ஆற்றாமையினால் தலைமேல்மோதிக்கொள்ளும்படியைச் சொல்லுகிறதென்றுங் கூறுவர்.

**கோலமேனி காணவாராய்**=ஆசைப்பட்டவர்கள்கண்டு அநுபவிப்பதற்காகவன்றோ இத்திருமேனி படைத்தது. "**பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே**" என்று சொல்லியிருக்க இப்படியும் உபேக்ஷிப்பதுண்டோ? "வாசிவல்லீரிந்தளூரீர்! வாழ்ந்தேபோம் நீரே" (1331) என்று வயிறெரிந்து சொல்லும்படியாகவைத்துக்கொள்வது தகுதியோ? பரிமளப்ரசுரமான தீர்த்தத்தை சேகரித்துவைப்பது விடாயர் விடாய் கெடுவதற்காகவன்றோ; அதனை அவர்கட்கு எட்டாதே வைப்பது முண்டோ? என்கிறார். **காணவாராய்** என்றது காணவரவேணுமென்றபடியன்று; காணவருகின்றிலையே! என்றபடி. நித்ய விபூதியிற்சென்று ஸேவிப்பதிலுங்காட்டில் இவ்விபூதியிலேயே ஸேவிக்கப்பெறுதல் பரமோத்தேச்யமாகையாலே இக்கருத்துத்தோன்ற "**கூவியுங்கொள்ளாயே**" என்கிறார். (க)

3074. கொள்ளமாளாவின்பவெள்ளம் கோதிலதந்திடும்*என்
வள்ளலேயோ! வையங்கொண்டவாமனாவோ!என்றென்று*
நள்ளிராவும்நன்பகலும் நானிருந்தோலமிட்டால்*
கள்ளமாயாவுன்னை என்கண்காணவந்தீயாயே. (உ)

| | | | |
|---|---|---|---|
| கொள்ள மாளா இன்பம் வெள்ளம் | அநுபவிக்கவநுபவிக்க எல்லை காணவொண்ணாத ஆனந்தப்பெருக்கை | ஓ ஓ என்று | என்று ஆர்த்தியோடேசொல்லி |
| கோது இல தந்திடும் என் வள்ளலே | குறையற உபகரிக்கின்ற என் உதாரனே! | நள் இராவும் நன் பகலும் | இரவும் பகலும் |
| வையம் கொண்ட வாமனா | (மாவலிபக்கல் நீரேற்றுப் பெற்று) உலகங்களை யெல்லாம் அளந்துகொண்ட வாமனமூர்த்தியே! | நான் இருந்து ஓலமிட்டால் | நான் ஆசையோடிருந்து கூப்பிட்டால் |
| | | கள்ளம் மாயா | க்ருத்ரிமனான ஆச்சர்யபூதனே! |
| | | உன்னை | உன்னை |
| | | என் கண் காண | என் கண்கள் காணுமாறு |
| | | வந்து ஈயாய் ஏ | வந்து ஸேவை ஸாதிக்கின்றிலையே!. |

* * *—ஏற்கனவே தம் திறத்தில் எம்பெருமான் செய்தருளியிருக்கிற உபகாரங்கள் சிலவற்றைச் சொல்லி 'இப்படி உபகாரம் செய்தருளின நீ இப்போது உபேக்ஷிப்பது தகுதியோ?' என்கிறார். *தீர்ப்பாரையாமினிக்கு முன்னே * வீற்றிருந்தேழுலகில் "வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனன்" என்று சொல்லும்படியாக அப்போது எம்பெருமான் தந்த பரமாநந்த ஸந்தோஹத்தைத் திருவுள்ளம் பற்றிக் "கொள்ளமாளா வின்பவெள்ளம் கோதில தந்திடும் என் வள்ளலே!" என்கிறார். கொள்ளக் கொள்ள மாளாத இன்பவெள்ளமாவது மேன்மேலும் பெருகிச்செல்கின்ற இன்பவெள்ளம். அதனைக் கோதில்லாதபடி தருகையாவது என்னென்னில்; பகவத் விஷயத்தை அநுபவித்துக்கொண்டே வரும்போது 'அநுபவித்தது போதும்' என்று தோன்றினாலும், 'இதைவிட்டு இன்னொரு விஷயத்தை அநுபவிப்போம்' என்று ஆசை பிறந்தாலும் அது இன்பத்திற்குக் கோது; அத்தகைய கோது இல்லாதபடி தந்தனனென்றது. "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழிபூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே' (2832) என்னும்படியாகத் தந்தருளினனென்றபடி. (உ)

3075. ஈவிலாததீவினைகள் எத்தனைசெய்தனன்கொல்?*
தாவிவையங்கொண்டவெந்தாய்! தாமோதரா!என்றென்று*
கூவிக்கூவிநெஞ்சுருகிக் கண்பனிசோரநின்றால்*
பாவிநீயென்றொன்றுசொல்லாய் பாவியேன்காணவந்தே. (ங)

| | | | |
|---|---|---|---|
| தீ வினைகள் ஈவு இலாத எத்தனை செய்தனன் கொல் | பாவங்களை முடிவில்லாதபடி எவ்வளவு செய்தேனோ? | தாவி வையம் கொண்ட எந்தாய் | திருவடிகளாலே வியாபித்து உலகங்களை ஸ்வாதீனப்படுத்திக்கொண்ட ஸ்வாமியே! |

| | | | |
|---|---|---|---|
| தாமோதரா | தாம்பால்ஆப்புண்ட தழும்பை உதரத்திலுடையவனே ! | பாவியேன் காண வந்து | பாபியான நான் கண்ணாலே ஸேவிக்கும்படியாக எழுந்தருளி |
| என்று என்று கூவி கூவி | என்று பலகால் சொல்லி இடைவிடாதே கூப்பிட்டு | நீ பாவி என்று ஒன்று சொல்லாய் | ‘(ஆழ்வாரே !) நீர் பாபி காணும்’ என்று ஒரு வார்த்தையும் சொல்லுகின்றாயில்லை. |
| நெஞ்சு உருகி | நெஞ்சு நீராயுருகி | | |
| கண் பனி சோர நின்றால் | கண்ணீர் பெருக நின்றால், | | |

* * *—நான் விரும்புகிறபடி என் கண் முன்னே வந்து காட்சி தந்தருளத் திருவுள்ளமில்லை யாகிலும் “நீ பாவி, உனக்கு நான் காட்சி தரமாட்டேன்” என்கிறவொரு வார்த்தையையாவது என் கண் வட்டத்திலே வந்து சொல்லிப்போனாலாகாதோவென்கிறார்.

அவனோட்டைக் கலவியையே அல்லும் பகலும் ஆசைப்பட்டுக்கொண்டு கிடக்கிற ஆழ்வார் ‘பாவி நீ யென்றொன்று சொல்லாய்’ என்கைக்குக் கருத்து யாதெனில்; ‘ஆழ்வீர்! நீர் பாவமே செய்து பாவியானவராகையாலே உம்மோடு கலப்பதற்கு எனக்கு விருப்பமில்லை’ என்று சொல்லுகிற இந்த வார்த்தையையாவது தமது முகத்தை நோக்கி அவன் சொல்லுவானாகில் அப்போதைய ஸேவையாவது கிடைக்குமே என்றும், கண்ணிலே தென்பட்டானாகில் பிறகு அவனை உபாயங்களால் கவர்ந்து கொள்ள லாமென்றும் நினைத்துச் சொன்னதத்தனை. ஆண்டாளும் “மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி விடை தான் தருமேல் மிக நன்றே” (635) என்றது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. (௩)

3076. காணவந்தென்கண்முகப்பே தாமரைக்கண்பிறழ*
ஆணிசெம்பொன்மேனியெந்தாய்! நின்றருளாயென்றென்று*
நாணமில்லாச்சிறுதகையேன் நானிங்கலற்றுவதென்?*
பேணிவானோர்காணமாட்டாப் பீடுடையப்பனையே. (௪)

| | | | |
|---|---|---|---|
| வானோர் பேணி காணமாட்டா பீடு உடை அப்பனை | பிரமன் முதலிய தேவர்கள் விரும்பியும் காணமுடியாத படி பெருமைவாய்ந்த ஸ்வாமியை நோக்கி, | காணவந்து என் கண் முகப்பே நின்றருளாய் என்று என்று | நான் காணுமாறு வந்து என் கண்முன்னே நின்றருள வேணும்” என்று ஓயாதே சொல்லி |
| ஆணி செம்பொன் மேனி எந்தாய் | “மாற்றுயர்ந்த பொன்போலே விரும்பத்தகுந்த திருமேனி படைத்தபிரானே ! | சிறு தகையேன் நான் | நீசனாகிய நான் |
| தாமரை கண் பிறழ | தாமரைப்பூப்போன்ற திருக் கண்கள் விளங்கும்படி (என்னைப் பார்த்துக் கொண்டு) | நாணம் இல்லா | வெட்கம் கெட்டவனாய்க் கொண்டு |
| | | இங்கு அலற்றுவது என் | இங்கே அலற்றுவதற்கு ஒரு பிரயோஜனமுமில்லையே ! |

* * *—பிரமன் முதலிய தேவர்களுக்கும் காணக்கிடைக்காத பெருமானை வடிவழகு காண விரும்பி வெட்கமற்று நான் கூப்பிடாநின்றேனே ! இதற்கு என்ன பலனுண்டு ! என்கிறார். (௪)

3077. அப்பனே! அடலாழியானே! ஆழ்கடலைக்கடைந்த
துப்பனே !*உன்தோள்கள்நான்கும் கண்டிடக்கூடுங்கொலென்று*
எப்பொழுதும்கண்ணநீர்கொண்டு ஆவிதுவர்ந்துதுவர்ந்து*
இப்பொழுதேவந்திடாயென்று ஏழையேன்நோக்குவனே. (௫)

| | | | |
|---|---|---|---|
| அப்பனே | உபகாரம் செய்யுமியல் வினனே ! | எப்பொழுதும் | எப்போதும் |
| அடல் ஆழியானே | வீரத்தன்மை வாய்ந்த திரு வாழியை யுடையவனே ! | கண்ணநீர் கொண்டு | கண்ணீரோடிருந்து |
| ஆழ் கடலை கடைந்த துப்பனே | ஆழமான கடலைக் கடைந்து அன்பர்கட்கு அமுதமளித்த ஸமர்த்தனே ! | ஆவி துவர்ந்து துவர்ந்து | பிராணன் மிகவும் உலர்ந்து |
| உன் நான்கு தோள்களும் | உனது திருத்தோள்கள் நான்கையும் | இப்பொழுதே வந்திடாய் என்று | உடனே எழுந்தருள வேணு மென்று அபேக்ஷித்து |
| கண்டிட கூடும் கொல் என்று | ஸேவிக்க நேருமோ ! என்று எண்ணி | ஏழையேன் | சபலனான நான் |
| | | நோக்குவன் | சுற்றும் பாராநின்றேன். |

* * * பிரமன் முதலானோர்க்கும் காணமுடியாதிருக்கிற உன்னுடைய அழகைக் காண வேணுமென்று ஆசைப்பட்டு ‘இப்பொழுதே வந்திடாய்’ என்று அபேக்ஷித்து, நாம் அபேக்ஷித்தபடியே வந்தருள்வன் என்று நம்பி, வரும்போதை யழகைக் காணவேணுமென்று பாரித்திருக்கின்றேனே ! என்னுடைய சாபல்யத்தை என் சொல்லுவேன் ! என்கிறார். (௫)

3078. நோக்கிநோக்கியுன்னைக்காண்பான் யானெனதாவியுள்ளே*
நாக்குநீள்வன் ஞானமில்லை நாள்தோறுமென்னுடைய*
ஆக்கையுள்ளுமாவியுள்ளும் அல்லபுறத்தினுள்ளும்*
நீக்கமின்றிஎங்கும்நின்றாய் நின்னையறிந்தறிந்தே. (சு)

| பதம் | பொருள் |
|---|---|
| நாள் தோறும் | ஸர்வ காலத்திலும் |
| என்னுடைய | என்னுடைய |
| ஆக்கை உள்ளும் | சரீரத்தினுள்ளும் |
| ஆவி உள்ளும் | ஆத்மாவினுள்ளும் |
| அல்ல புறத்தின் உள்ளும் | மற்றுமுண்டான இந்த்ரியம் முதலானவற்றிலும் |
| நீக்கம் இன்றி | நீங்காமல் (ஒன்றையும் விடாமல்) |
| எங்கும் நின்றாய் | எங்கும் வியாபித்திருக்கின்ற பெருமானே ! |
| நின்னை | உன்னை |
| அறிந்து அறிந்தே | (அருள்செய்யத் திருவுள்ள மில்லாதவன் என்று) நன்றாக நான் அறிந்து வைத்தும் |
| யான் | நான் |
| உன்னை காண்பான் | உனது திவ்யமங்கள விக்ர ஹத்தை ஸேவிக்கவேண்டி |
| நோக்கி நோக்கி | எல்லாத் திசைகளிலும் பார்த்து |
| எனது ஆவி உள்ளே | எனது நெஞ்சுக்குள்ளே |
| நாக்கு நீள்வன் | நாக்கை நீட்டுகின்றேன் (ஆசைப்படுகின்றேன்) |
| ஞானம் இல்லை | இப்படிப்பட்ட நான் விவேக மற்றவனத்தனை. |

* * * எம்பெருமானே ! என்னுள்ளே நீ நிறைந்திருந்தும் எனக்கு நீ உன்னைக் காட்டாம லிருப்பது திருவுள்ளமில்லாமையாலன்றோ என்று நான் அறிந்து வைத்தும் அவிவேகத்தாலே காண வாராய் ! காணவாராய் ! என்று கதறுகின்றேன் என்கிறார்.

"நீக்கமின்றி யெங்கும் நின்றாய்" என்றவிடத்திலே நம்பிள்ளையீடு :—"கிழிச்சீரையிலே தனங் கிடக்கப் புறங்கால் வீங்குவாரைப்போலே காணும் இவர்படி" என்று. (அதாவது) உள்ளே நிதி கிடக்கச் செய்தேயும் சிலர் வெளியிலே செல்வம் பெறவேணுமென்று பாரிப்பர் ; அதுபோலே ஆழ்வார் தம்மிடத் திலே அந்தர்யாமியாய்ப் பூர்ணனாயிருக்கின்ற பரம புருஷனை அநுபவித்து த்ருப்திபெறமாட்டாதே பாஹ் யாநுபவத்திலே மனோரதத்தைப் பெருக்கித் துவள்கின்றார் என்கை. (சு)

3079. அறிந்தறிந்துதேறித்தேறி யானெனதாவியுள்ளே*
நிறைந்தஞானமூர்த்தியாயை நின்மலமாகவைத்து*
பிறந்தும்செத்தும்நின்றிடறும் பேதைமைதீர்ந்தொழிந்தேன்*
நறுந்துழாயின்கண்ணியம்மா ! நானுன்னைக்கண்டுகொண்டே. (எ)

| பதம் | பொருள் |
|---|---|
| நறு துழாயின் கண்ணி அம்மா | பரிமளம் மிக்க திருத்துழாய் மாலையையுடைய |
| நான் உன்னை கண்டுகொண்டு | நான் உன்னை (மாநஸ ஸாக்ஷாத் காரமாக) ஸேவிக்கப்பெற்று |
| அறிந்து அறிந்து | உன்னுடைய உபாயத்வத்தை யும் உபேயத்வத்தையும் நன்றாக அறிந்து |
| தேறி தேறி | மிக்க தெளிவை யுடையேனாகி |
| யான் | இப்படித் தெளிவுபெற்ற நான் |
| எனது ஆவி உள்ளே | என் நெஞ்சுக்குள்ளே |
| நிறைந்த ஞானம் மூர்த்தியாயை | பரிபூர்ண ஜ்ஞானஸ்வரூபனான உன்னை |
| நின்மலம் ஆக வைத்து | விசதமாக அநுபவித்து |
| பிறந்து செத்தும் நின்று இடறும் பேதைமை தீர்ந்து ஒழிந்தேன் | பிறப்பதும் சாவதுமாயிருந்து படுகிற அஜ்ஞான ஸம்ஸா ரத்தைத் தவிர்த்துக்கொள் ளப் பெற்றேன். |

* * * 'ஆழ்வீர் ! *நாக்கு நீள்வன் ஞானமில்லை* என்று உம்மை நீர் நிந்தித்துக்கொள்வ தானது என்னுடைய நிந்தையிலன்றோ முடிந்து நிற்கிறது ; உமக்கு நான் ஒரு உபகாரமும் செய்யவில்லை போலே வருந்துகின்றீரே ; நன்கு ஆராய்ந்து பாரும் ; எத்தனை உபகாரங்கள் என்னால் பெற்றிருக்கிறீ ரென்பதை அறிந்து சொல்லும்' என்று எம்பெருமான் அருளிச்செய்ய, 'பிரானே ! சில உதவிகளை நீ செய்ய நான் பெற்றதுண்டு ; அடியோடு ஒன்றுமில்லையென்று சொல்லுகின்றிலேன் ; பெற்றவளவு போராது என்கிறேனத்தனை' என்று சொல்லத் தொடங்கி, பெற்ற அளவு இன்னதென்கிறார் இப்பாட் டில் ; பெறவேண்டியதை மேற்பாட்டிலே சொல்ல விருக்கிறார். (எ)

3080. கண்டுகொண்டென்கைகளார நின்திருப்பாதங்கள்மேல்*
எண்டிசையுமுள்ளபூக்கொண்டு ஏத்தியுகந்துகந்து*
தொண்டரோங்கள்பாடியாடச் சூழ்கடல்ஞாலத்துள்ளே*
வண்டுழாயின்கண்ணிவேந்தே ! வந்திடகில்லாயே. (அ)

| | | | |
|---|---|---|---|
| வண் துழாயின் கண்ணி வேந்தே! | அழகிய திருத்துழாய்மாலையை யுடைய நாயனே! | ஏத்தி | தோத்திரஞ்செய்து பரிமாறி |
| கண்டுகொண்டு | (நெஞ்சினால் காண்கை யன்றிக்கே) கண்ணாரக் கண்டு | உகந்து உகந்து | மிகவும் உகந்து |
| என் கைகள் ஆர | எனது கைகள் ஆவல் தீரும்படி | தொண்டரோங்கள் | அடியோமான நாங்கள் |
| நின் திரு பாதங்கள்மேல் | உனது திருவடிகளின்மீது | பாடி ஆட | பாடுவதாடுவதாம்படி |
| எண் திசையும் உள்ள பூ கொண்டு | எங்குமுள்ள புஷ்பங்களை சேகரித்துக்கொண்டு | கடல்சூழ் ஞாலத்துள்ளே | கடல்சூழ்ந்த இந்நிலவுலகுக்குள்ளே |
| | | வந்திட கில்லாயே | (என்கண் முகப்பே) வந்து நிற்கமாட்டேனென்கிறாயே! |

* * * காணப்பெறாமல் பட்டினி கிடக்கின்ற கண்கள் பட்டினி தீரும்படி காணவேணும்; கைகளின் விடாய்தீர உன் திருவடிகளிலே எண்டிசையுமுள்ள பூக்களையுங் கொண்டு தூவவேணும்; அத்தாலே உன்னுடைய திருவுள்ளம் உகக்க, அவ்வுகப்புக்கண்டு அடியோங்கள் உகந்து, அவ்வுகப்புக்குப் போக்குவீடாகப் பாடவும் ஆடவும் வேணும். இப் பரிமாற்றங்களுக் கெல்லாம் ஏகாந்தமாகத் திருநாட்டிலே கொண்டுபோகிறேனென்னவொண்ணாது; இப்பேறு கடல்சூழ் ஞாலத்துள்ளே யாகவேணும்; அங்கு நித்ய ஸூரிகளுக்கு ஸேவை ஸாதிக்கிறபடியே *தோளிணைமேலும் நன்மார்பின் மேலும் சுடர்முடி மேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையோடே வந்து காட்சி தந்தருளவேணும்; இப்படி எத்தனைநாள் ப்ரார்த்தித்த விடத்திலும் வந்தருள்கின்றிலையே. நான் பெறாதது இத்தனையே யென்றாராயிற்று. (அ)

3081. இடகிலேனொன்றட்டகில்லேன் ஐம்புலன்வெல்லகில்லேன்*
கடவனாகிக்காலந்தோறும் பூப்பறித்தேத்தகில்லேன்*
மடவல்நெஞ்சம்காதல்கூர வல்வினையேனயர்ப்பாய்*
தடவுகின்றேனெங்குக்காண்பன் சக்கரத்தண்ணலையே? (கூ)

| | | | |
|---|---|---|---|
| | | (இப்படி அகிஞ்சநனாயிருக்கச் செய்தேயும்) | |
| ஒன்று இடகிலேன் | (இரந்தார்க்கு) ஒரு பிச்சையும் இட்டறியேன்; | மடம் வல் நெஞ்சம் | மூர்க்கத்தனமும் கடினத்தன்மையும் பொருந்தின நெஞ்சானது |
| ஒன்று அட்டகில்லேன் | (தாஹித்தவர்களுக்குச்) சிறிது (தண்ணீரும்) வார்த்தறியேன்; | காதல் கூர | ஆசை விஞ்சிவரப்பெற்று |
| ஐம் புலன் | இந்திரியங்களைந்தையும் | வல் வினையேன் | மஹாபாபியான நான் |
| வெல்ல கில்லேன் | பட்டிமேயாதபடி அடக்கியாண்டறியேன்; | அயர்ப்பு ஆய் | அவிவேகியாய் |
| கடவன் ஆகி | நியதியுடையவனாகி | சக்கரத்து அண்ணலை | சக்கரபாணியான எம்பெருமானை |
| காலம் தோறும் | உரிய காலங்களிலே | | |
| பூ பறித்து ஏத்த கில்லேன் | புஷ்பங்களை ஸம்பாதித்து அர்ச்சித்துத் துதித்தறியேன்; | தடவுகின்றேன் | காணத் தேடுகின்றேன்; |
| | | எங்கு காண்பன் | எங்கே காணக்கடவேன்? |

* * * எம்பெருமான்மேலே பழியிட்டுப் பயன் என்? அவனைக் காண்கைக்கு உபாயமாக பகவத்கீதை முதலான சாஸ்த்ரங்களிலே கூறப்பட்ட கர்மயோகாதிகளுள் ஒன்றிலும் அந்வயமில்லாதிருக்கின்ற நான் கிடந்து கூப்பிடுவதில் என்ன ப்ரயோஜநம்? என்று தம்மில்தாம் சொல்லிக்கொள்ளுகிறாரா யிருக்கிறது. இடகிலேன் என்றது—" ஐயமும் பிச்சையும் ஆந்தனையுங் கைகாட்டி " (475) என்கிறபடியே ஒருவர்க்கு ஒரு பிச்சையிட்டறியேன் என்றபடி. அட்டகில்லேன் என்றது தாஹித்து வந்தவர்களுக்குத் தண்ணீர் வார்த்தறியேன் என்றபடி. இங்ஙனே சில காரியங்கள் செய்திருந்தால் கர்மயோகத்திலே கணக்கடைக்கலாம்; அதற்கு வழியில்லையாயிற்று என்கை. (கூ)

3082. சக்கரத்தண்ணலேயென்று தாழ்ந்துகண்ணீர்ததும்ப*
பக்கம்நோக்கிநின்றலந்தேன் பாவியேன்காண்கின்றிலேன்*
மிக்கஞானமூர்த்தியாய வேதவிளக்கினை*என்
தக்கஞானக்கண்களாலே கண்டுதழுவுவனே. (ய)

| | | | |
|---|---|---|---|
| சக்கரத்து அண்ணலே என்று | கையும் சக்கரமுமான அழகைக் காட்டி என்னை யீடுபடுத்திக் கொண்டவனே! என்று சொல்லி | தாழ்ந்து | அநுபவம் கிடைக்கப்பெறாத க்லேசத்தை யடைந்து |
| | | கண் நீர் ததும்ப | கண்ணீர் மல்க |

| | | | |
|---|---|---|---|
| பக்கம் நோக்கி நின்று | சுற்றும் பார்த்து நின்று | வேதம் விளக்கினை | வேதமாகிற தீபத்தாலே காணப்படுமவனை எம்பெருமானை |
| அலந்தேன் பாவியேன் | தளர்ந்தவனான பாவியான நான் | என் தக்க | எனக்கேற்ற |
| காண்கின்றிலேன் | காணப்பெறுகின்றிலேன்; (காணக் கிடைக்காதவனை மறந்துவிடலாமென்று பார்த்தாலோ) | ஞானம் கண்களாலே | ஞானமாகிற கண்ணாலே |
| மிக்க ஞானம் மூர்த்தி ஆய | மிகுந்த ஞானஸ்வரூபனாய் | கண்டு தழுவுவனே | கண்டு தழுவிக்கொண்டேயிருக்கிறேனே! (எப்படி மறக்கமுடியும்?) |

* * * கையுந்திருவாழியுமான அழகைக்காட்டி என்னையீடுபடுத்திக்கொண்டவனே! என்று சொல்லித் தரைப்பட்டுக் கண்களில் நீர் பெருகப்பெற்றேன்; எந்தப் பக்கமாக வருகின்றானோவென்று பக்கந்தோறும் நோக்கினேன்; மஹாபாபியாகையாலே காணப்பெற்றிலேன். காணவிட்டால் மறந்து பிழைக்கலாமே; நெஞ்சில் பிரகாசியாமலிருந்தாலன்றோ மறக்கலாம்; பரிபூர்ணமான ஞானத்தையே வடிவாகவுடையனாய் வேதவேத்யனாயிருக்கிற அப்பெருமானை மறவாமலிருப்பதற்குறுப்பாக எனக்குத் தருந்தாப்போலே ஒரு ஜ்ஞான த்ருஷ்டியுண்டாகி அத்தாலே கண்டுதழுவும்படியாயேயுள்ளது; மறக்கவும் வழியில்லை, தரிக்கவும் வழியில்லை என்றாராயிற்று. (௧௦)

3083. தழுவிநின்றகாதல்தன்னால் தாமரைக்கண்ணன்தன்னை*
குழுவுமாடத்தென்குருகூர் மாறன்சடகோபன் * சொல்
வழுவிலாதவொண்தமிழ்கள் ஆயிரத்துளிப்பத்தும்*
தழுவப்பாடியாடவல்லார் வைகுந்தமேறுவரே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| தழுவி நின்ற | விட்டு நீங்காத | வழு இலாத | குறையற்ற |
| காதல் தன்னால் | (பகவதநுபவத்திலுள்ள) ஆசையினாலே, | ஒண் தமிழ்கள் | அழகிய தமிழ்ப்பாஷையினாலாகிய |
| தாமரைகண்ணன் தன்னை | செந்தாமரைக் கண்ணனான எம்பெருமானைக் குறித்து | ஆயிரத்துள் | ஆயிரம் பாட்டினுள் |
| | | இ பத்தும் | இத்திருவாய்மொழியை |
| குழுவு மாடம் தென் குருகூர் | திரண்ட மாடங்களையுடைய திருநகரிக்குத் தலைவரான | தழுவ | கருத்தோடுகூட |
| | | பாடி | இசைபாடி |
| மாறன் சடகோபன் | ஆழ்வார் | ஆட வல்லார் | களித்துக்கூத்தாடவல்லவர்கள் |
| சொல் | அருளிச்செய்த | வைகுந்தம் ஏறுவர் | திருநாட்டில் ஏறப்பெறுவர்கள். |

## நான்காம்பத்து எட்டாந்திருவாய்மொழி—ஏருளுமிறையோனும்

கேட்டாரெல்லாரும் நீராம்படியாகக் கீழ்த்திருவாய்மொழியிலே ஆழ்வார் கூப்பிடச் செய்தேயும் எம்பெருமான் வந்து முகங்காட்டிற்றிலன். அதனால் எம்பெருமான் தம்மை வேண்டாவென்று வெறுத்திருப்பதாக நிச்சயித்தார். அவனுடைய வெறுப்புக்கு இலக்கான இந்த ஆத்மாவும் ஆத்மீயங்களும் நமக்கு ஏதுக்கு? அவனுக்கு வேண்டாதவை நமக்குத்தான் வேணுமோவென்று ஆத்மாத்மீயங்களையெல்லாம் உபேக்ஷிக்கிறார் இத்திருவாய்மொழியில்.

3084. ஏறாளுமிறையோனும் திசைமுகனும்திருமகளும் *
கூறாளும்தனியுடம்பன் குலங்குலமாஅசுரர்களை *
நீறாகும்படியாக நிருமித்துப்படைதொட்ட *
மாறாளன்கவராத மணிமாமைகுறைவிலமே. (௧)

| | | | |
|---|---|---|---|
| ஏறு ஆளும் இறையோனும் | விருஷபவாஹனனான சிவபிரானும் | நீறு ஆகும்படி ஆக | சுடுநீறாகி யொழியும்படியாக |
| திசைமுகனும் | நான்முகனும் | நிருமித்து | ஸங்கல்பித்து (அவ்வளவேயன்றிக்கே) |
| திருமகளும் | பெரிய பிராட்டியாரும் | | |
| கூறு ஆளும் | 'இன்ன இடம் இன்னாருடையது' என்று பங்கிட்டுக் கொண்டு வஸிக்கப்பெற்ற | படை தொட்ட | ஆயுதங்கொண்டும் காரியஞ் செய்த |
| தனி உடம்பன் | விலக்ஷணமான திருமேனியையுடையவனும் | மாறு ஆளன் | எதிர்த்தலையுடையனுமான எம்பெருமான் |
| | | கவராத | விரும்பாத |
| அசுரர்களை | அசுரர்களை | மணி மாமை | அழகிய நிறத்தில் |
| குலம் குலம் ஆ | கூட்டங்கூட்டமாக | குறைவு இலம் | அபேக்ஷையுடையோமல்லோம். |

* * * ஸௌசீல்யமே வடிவெடுத்த எம்பெருமான் விரும்பாத அழகிய நிறம் எனக்கு ஏதுக்கு? என்கிறாள். ஆரம்பிக்கும்போதே "ஏறாளுமிறையோன் கூறுளுந் தனியுடம்பன்" என்றது ஒரு தாமஸ தெய்வத்துக்கு எளிதான திருமேனி எனக்கு அரிதாவதே! என்ற வருத்தத்தைக் காட்டுமென்க. "வேதாத்மா விஹகேச்வர:" என்கிறபடியே வேதஸ்வரூபியான பக்ஷிராஜனை வாஹனமாகக் கொண்ட எம்பெருமான் முன்னே மூடஜந்துவானவொரு எருதை வாஹனமாகக்கொண்டு திரிகின்ற உருத்திரனும், நான்முகனும், ஸ்ரீமஹாலக்ஷ்மியும் ஆகிய இவர்கள் கூறிட்டு ஆளும்படி அத்விதீயமான திருமேனி படைத்த பெருமான் என்றது—அவனுடைய ஸௌசீல்யமென்னும் மஹாகுணத்தை யநுபவித்துப் பேசினபடி.

**கவராததணிமாமை** = அப்படிப்பட்ட பெருமான் ஓடிவந்து மேல்விழுந்தாலன்றோ இவ்வழகிய நிறம் எனக்கு உத்தேச்யமாவது; அல்லாதபோது இது எனக்கு ஹேயமேயாகும். இந்த நிறமில்லையென்று நான் அழுகிறேனோ வென்கை.

குறைவு என்பதற்கு லக்ஷணையால் அபேக்ஷிதம் என்று பொருளாகும். குறைவிலம்—அபேக்ஷையுடையோமல்லோம்; வேண்டியதில்லை என்றவாறு. (க)

3085. மணிமாமைகுறைவில்லா மலர்மாதருறைமார்பன்*
அணிமானத்தடவரைத்தோள் அடலாழித்தடக்கையன் *
பணிமானம்பிழையாமே அடியேனைப்பணிகொண்ட*
மணிமாயன்கவராத மடநெஞ்சால்குறைவிலமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| மணிமாமை குறைவு இல்லா | அழகிய நிறம் நிரம்பி யிருக்கப்பெற்ற | பணி மானம் பிழையாமே | கைங்கர்ய வ்ருத்திகள் தப்பாதபடி |
| மலர் மாதர் | பூமகளான பெரியபிராட்டியார் | அடியேனை | அடியேனை |
| உறை மார்பன் | நித்யவாஸம் பண்ணப்பெற்ற திருமார்பையுடையவனும் | பணிகொண்ட | கிங்கரனாக ஆக்கிக்கொண்டவனும் |
| அணி மானம் தட வரைதோள் | அழகியதாய்ப் பெருத்து உருண்டு மலைபோன்றுள்ள திருத்தோள்களையுடையவனும் | மணி மாயன் | நீலமணிவண்ணனுமான எம்பெருமான் |
| | | கவராத | விரும்பாத |
| அடல் ஆழி தட கையன் | தீக்ஷ்ணமான திருவாழியைப் பெரியதிருக் கையிலேயுடையவனும் | மட நெஞ்சால் குறைவு இலம் | விதேயமான நெஞ்சில் அபேக்ஷையுடையோமல்லோம். |

* * * "மணிமாமை குறைவிலமே" என்று நான் வெறுத்ததுபோலே வெறுக்கவேண்டாமல் நித்யஸம்ச்லேஷம் பெற்றிருக்கிறவளும், புஷ்பத்தில் பரிமளத்தையே வடிவாக வகுத்தாற்போலே ஸௌகுமார்யத்தில் சிறந்திருக்கிறவளுமான பெரியபிராட்டி நித்யவாஸம் பண்ணப்பெற்ற திருமார்பையுடையவனும், அழகிய பருத்த திருத்தோள்களையுடையவனும், பிராட்டியும் தானுமான சேர்த்திக்கு அஸ்தானே பயசங்கை பண்ணி மங்களாசாஸநபரனாயிருக்கும் திருவாழியாழ்வானைக் கையிலேந்தினவனும், இளையபெருமாளை அடிமைகொண்டாப்போலே ஏற்கனவே என்னையு மடிமைகொண்டவனும், நீலமணிபோன்றழகிய வடிவு படைத்தவனுமான பெருமான் விரும்பாத நெஞ்சு எனக்கு வேண்டாவென்கை. (உ)

3086. மடநெஞ்சால்குறைவில்லா மகள்தாய்செய்தொருபேய்ச்சி*
விடநஞ்சமுலைசுவைத்த மிகுஞானச்சிறுகுழவி*
படநாகத்தணைக்கிடந்த பருவரைத்தோள்பரம்புருடன்*
நெடுமாயன்கவராத நிறைவினால்குறைவிலமே. (ங)

| | | | |
|---|---|---|---|
| மட நெஞ்சால் குறைவு இல்லா | நெஞ்சில் நெகிழ்ச்சியைப் பரிபூர்ணமாகக்கொண்ட | படம் நாகம் அணை கிடந்த | படமெடுத்த நாகமாகிற படுக்கையிலே சயனிப்பவனும் |
| தாய் மகள் செய்த | யசோதையாகிய தாயாகத் தன்னையாக்கிக் கொண்ட | பருவரை தோள் | பெரியமலைபோலே வளர்ந்த தோள்களை யுடையவனும் |
| ஒரு பேய்ச்சி | பூதனையென்கிறவொரு பேய்ச்சியினுடைய | பரம்புருடன் | புருஷோத்தமனாக ப்ரஸித்தி பெற்றவனும் |
| விடம் நஞ்சம் முலை | கொடியவிஷம் பொருந்திய முலையை | நெடு மாயன் | எல்லைகடந்த ஆச்சர்ய குண சேஷ்டிதங்களை யுடையவனுமான எம்பெருமான் |
| சுவைத்த | உறிஞ்சியுண்டவனும் | கவராத | விரும்பாத |
| மிகு ஞானம் சிறு குழவி | மிக்க ஞானத்தையுடைய சிறுகுழந்தையானவனும் | நிறைவினால் குறைவு இலம் | அடக்கத்தில் அபேக்ஷையுடையோமல்லோம். |

ஆஸுரப்ரக்ருதியான பூதனைக்கு "மடநெஞ்சால் குறைவில்லா" என்று விசேஷணமிட்டது ஏன்? என்னில்; அப்பூதனை தன்னுருவத்தை மறைத்து யசோதைப் பிராட்டிபோல் பாவனைகாட்டி வந்தாளாகையாலே தாய்போலப் பரிவை ஏறிட்டுக்கொண்டு வந்தாளென்றவாறு. "பெற்றதாய்போல் வந்த பேய்ச்சி பெருமுலையூடு உயிரை வற்றவாங்கியுண்டவாயான்" என்றார் திருமங்கை யாழ்வாரும்.

**நிறைவினால் குறைவிலம்**=நிறைவு என்பது பூர்த்தி; இங்கு ஸ்த்ரீத்வ பூர்த்தியைச் சொல்லுகிறது. அதாவது அடக்கம். எம்பெருமானாகவே வந்து திருவுள்ளம் பற்றுவனென்று எண்ணி இதுவரை அடக்கத்தோடிருந்தேன்; இனி அதை விட்டுத் தொலைக்கவேண்டியதேபோலும் என்றவாறு. (௩)

3087. நிறைவினால்குறைவில்லா நெடும்பணைத்தோள்மடப்பின்னை*
பொறையினால்முலையணைவான் பொருவிடையேழடர்த்துகந்த*
கறையினார்துவருடுக்கை கடையாவின்கழிகோல்கை*
சறையினார்கவராத தளிர்நிறத்தால்குறைவிலமே. (௪)

| | | | |
|---|---|---|---|
| நிறைவினால் குறைவு இல்லா | குறையற்ற ஸ்த்ரீத்வ பூர்த்தி யுடையவளும் | கறையின் ஆர் துவர் உடுக்கை | (நாவல்முதலிய காட்டுப் பழங்களின்) கறை மிகுந்த துவர் நிறமான வஸ்த்ரத்தையும் |
| நெடு பணை தோள் | நீண்டு பணைத்த தோள்களை யுடையவளும் | கடையா | பால்கறக்கும் மூங்கிற் குழாயையும் |
| மடம் | அறிந்தும் அறியாமையாகிற மடப்பம்பொருந்தியவளுமான | கழிகோல் | வீசுகோலையும் |
| பின்னை | நப்பின்னையினுடைய | கை | கையிலே உடையவனும் |
| முலை அணைவான் | திருமுலைத்தடத்தோடு சேருகைக்காக [மணப்பதற்காக] | சறையினார் | தன்உடம்பைப்பேணாதவனுமான எம்பெருமான் |
| பொறையினால் | வருத்தங்களைப்பொறுத்திருந்து | கவராத | விரும்பாத |
| பொரு விடை ஏழ் அடர்த்து உகந்த | கொடிய விருஷபங்களேழையும் நெரித்து மகிழ்ந்தவனும் | தளிர் நிறத்தால் குறைவு இலம் | தளிர்போலே செவ்வி தான நிறத்தில் விருப்பமுடையோமல்லோம். |

* * *—நப்பின்னைப் பிராட்டியைப் பெறுதற்காக எருதேழடர்த்த பெருமான் விரும்பாத செவ்வியநிறம் எனக்கு ஏதுக்கென்கிறாள். பலபல காட்டுப்பழங்களைப் பறித்துத் துணியிலே கட்டிக்கொண்டு தின்பனாதலால் **கறையினார்துவருடுக்கை** எனப்பட்டது. இங்கே ஈட்டு ஸ்ரீ ஸூக்திகாண்மின்; "இடையர் காட்டுக்குப் போம்போது முள்கிழியாமைக்கு உடுக்கும் உடைந் தோலைச் சொல்லுகிறது. ......காட்டில் பழங்களைப் பறித்திடுகையாலே கறைமிக்கிருக்கும்; அத்தாலே கறைமிக்க துவராயிற்று உடுக்கை."

**கடையாவின் கழிகோல்**=கடையாவோடு சேர்ந்த கழிகோல் என்றபடியாய், கடையாவும் கழிகோலும் என்றதாம். பால்கறப்பதற்குக் கொள்ளும் மூங்கிற் குழாய்ப் பாத்திரம் **கடையா** எனப் பெயர் பெறும். கழிகோல்—ஸ்வாதீனப்படாத பசுக்களை நியமிப்பதற்காக வைத்துக்கொள்ளும் கோல் அன்றிக்கே, முன்னணைக்கன்று பசுக்களோடே போனால் முலையுண்ணாமைக்கு, கொறுக்கோலென்று அதன் மூஞ்சியிலே கட்டிவிடுவர்கள்: அதைச் சொன்னதாகவுமாம்.

**சறையினார்**=இடையர்கள் அரையிலே கட்டிக்கொள்வதொரு மணி யுண்டு; சறைமணி யென்று அதற்குப் பெயர். "இடையர் அரையிலே கோத்துக் கட்டி முன்னே போகாநின்றால் அந்த த்வநிவழியே பசுக்களெல்லாம் ஓடிவரும்படியா யிருப்பதொன்று'; என்கிற ஈட்டு ஸ்ரீ ஸூக்தியும் காண்க. அந்த மணியை யுடையவன் என்கை. அன்றிக்கே, **சறை** என்று தாழ்வு; இடக்கை வலக்கையறியப் பெறுமே தாழ்ந்த இடைக்குலத்திலே பிறந்தவன் என்றதாகவுமாம். அன்றிக்கே, சறை யென்று சரும்பியிருக்கையாய், உடம்பைப் பேணாதிருக்கிறவன் என்றதாகவுமாம். (௪)

3088. தளிர்நிறத்தால்குறைவில்லாத் தனிச்சிறையில்விளப்புற்ற*
கிளிமொழியாள்காரணமாக் கிளரரக்கன்நகரெரித்த*
களிமலர்த்துழாயலங்கல் கமழ்முடியன்கடல்ஞாலத்து*
அளிமிக்கான்கவராத அறிவினால்குறைவிலமே. (௫

| | | | |
|---|---|---|---|
| தளிர் நிறத்தால் குறைவு இல்லா | தளிர்போன்றழகிய நிறத்தால் பரிபூர்ணையாய் | கிளி மொழியாள் காரணம் ஆ | கிளியினதுபோன்ற இனிய மொழியை யுடையவளான ஸீதாபிராட்டி நிமித்தமாக |
| தனி சிறையில் விளப்புற்ற | தனிச்சிறையிருந்ததனால் ப்ரஸித்தி பெற்றவளாய் | | |

| | | | |
|---|---|---|---|
| கிளர் அரக்கன் நகர் எரித்த | செருக்கனை இராவணனுடைய பட்டணத்தை நெருப்புக்கு இரையாக்கினவனும் | கடல் ஞாலத்து | கடல்சூழ்ந்த மண்ணுலகில் |
| | | அளி மிக்கான் | மிகுந்த அன்பையுடையவனுமான எம்பெருமான் |
| களி மலர் துழாய் அலங்கல் கமழ் முடியன் | தேனையுடைய மலரோடு கூடின திருத்துழாய் மாலையாலே பரிமளிக்கின்ற திருமுடியை யுடையவனும் | கவராத | விரும்பாத |
| | | அறிவினால் குறைவு இலம் | அறிவில் அபேக்ஷையுடையோமல்லோம். |

* * *—இராமபிரானுடைய சேஷத்வத்திற்கு உறுப்பல்லாத அறிவு எனக்கு வேண்டாவென்கிறாள். ஸீதாபிராட்டியைக் குறிக்கவேண்டு மிவ்விடத்தில் தனிச்சிறையில் விளப்புற்ற என்றருளிச்செய்தது அப்பிராட்டியினுடைய ஒப்புயர்வற்ற பிரபாவாதிசயத்தை வெளியிடுதற்கேயாம். தேவதேவ திவ்யமஹிஷியான தன் பெருமையையும் சிறையிருப்பின் தண்மையையும் பாராத, தேவஸ்த்ரீகளின் சிறையை விடுவிக்கைக்காகப் பிராட்டி தான் சிறையிருந்தது கருணையின் மிகுதியாலாகுமத்தனை.

**கடல் ஞாலத்து அளிமிக்கான்** = இந்த ஸம்ஸார மண்டலத்திலே மிகுந்த அருளையுடையவன் என்கை. பரமபதவாஸத்திற்காட்டிலும் இந்நிலவுலகில் வஸிப்பதே எம்பெருமானுக்கு மிகவும் ப்ரியம் என்றவாறு. (ரு)

3089. அறிவினால்குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய*
நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி*
குறியமாணுருவாகிக் கொடுங்கோளால்நிலம்கொண்ட*
கிறியம்மான்கவராத கிளரொளியால்குறைவிலமே. (சு)

| | | | |
|---|---|---|---|
| அறிவினால் குறைவு இல்லா | 'நமக்கு அறிவுஇல்லையே!' என்று குறைபடமாட்டாத | கொடு கோளால் | (மாவலியை வஞ்சிக்கையாகிற கொடியவழியினால் |
| அகல் ஞாலத்தவர் அறிய | விரிவான நிலவுலகிலுள்ளாரனைவரும் அறியும்படியாக | நிலம் கொண்ட | பூமியைத் தன்னதாக்கிக் கொண்ட |
| நெறி எல்லாம் | (கருமயோகம் முதலிய) ஸகலோபாயங்களையும் | கிறி | உபாயஜ்ஞனை |
| எடுத்து உரைத்த | ஸாரமாகவெடுத்தருளிச்செய்த | அம்மான் | எம்பெருமான் |
| நிறை ஞானம் ஒரு மூர்த்தி | பரிபூர்ண ஞானத்தையுடைய விலக்ஷணஸ்வாமியாய். | கவராத | விரும்பாத |
| குறிய மாண் உரு ஆகி | வாமந ப்ரஹ்மசாரி வேஷத்தையுடையனாய் | கிளர் ஒளியால் குறைவு இலம் | மிகுந்த லாவண்யத்தில்விருப்பமுடையோமல்லோம். |

* * *—தன்னைப் பெறுதற்கு உபாயமானவற்றை யெல்லாம் தானே அருளிச்செய்து, ஹிதோபதேசத்திற்குப் பாங்கல்லாதவர்களைத் தன் அழகாலே வசப்படுத்திக் கொள்பவனை பெருமான் விரும்பாத லாவண்யம் எனக்கு எதற்காக? என்கிறாள். "அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவர்" என்பதற்கு 'அறிவினால் பரிபூர்ணர்களான இவ்வுலகத்தவர்கள்' என்று பொருளன்று. 'நமக்கு அறிவு இல்லையே!' என்று குறைபட அறியாதவர்கள் என்றபடி. 'நமக்குச் சோறில்லையே, தண்ணீரில்லையே, துணிமணியில்லையே!' என்று குறைபடுவர்கள்; அறிவு இல்லையே' என்றுமாத்திரம் குறைவுபடுவதில்லை ஸம்ஸாரிகள்.

பகவத்கீதை அர்ஜுநனை நோக்கி அவதரித்ததாயினும், அவனை ஒரு வியாஜமாக நிறுத்தி அஸ்மதாதிகளுக்குமாக அது அருளிச்செய்யப்பட்டதாகையாலே "அகல் ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத்துரைத்த" என்றாள். கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்திகளும், அவதாரரஹஸ்யஜ்ஞானம், புருஷோத்தம வித்யை முதலானவைகளுமான உபாயங்களெல்லாவற்றையும் திருவுள்ளம்பற்றி "நெறி யெல்லாம்" என்கிறாள். (சு)

3090. கிளரொளியால்குறைவில்லா அரியுருவாய்க்கிளர்ந்தெழுந்து*
கிளரொளியஇரணியனது அகல்மார்பம்கிழித்துகந்த*
வளரொளியகனலாழி வலம்புரியன்,மணிநீல*
வளரொளியான்கவராத வரிவளையால்குறைவிலமே. (எ)

| | | | |
|---|---|---|---|
| கிளர் ஒளியால் குறைவு இல்லா | கிளர்கின்ற தேஜஸ்ஸு நிரம்பப்பெற்ற | அகல் மார்பம் | விசாலமான மார்பை |
| அரி உரு ஆய் | நரசிங்கமூர்த்தியாய் | கிழித்து உகந்த | இருபிளவாக்கித் திருவுள்ளமுகந்தவனும், |
| கிளர்ந்து எழுந்து | சீறிக்கொண்டு தோன்றி, | | |
| கிளர் ஒளிய **இரணியனது** | மிக்கதேசு பொருந்திய இரணியனுடைய | வளர் ஒளிய | வளர்கின்ற ஜ்வாலையை **யுடைய** |

| | | | |
|---|---|---|---|
| கனல் ஆழி | நெருப்புப் போலே யிருக்கிற சக்கரத்தையும் | கவராத | விரும்பாத |
| வலம்புரியன் | சங்கையுமுடையவனும், | | |
| நீலம் மணி வளர் ஒளியான் | நீலரத்னம் போன்று விளங்குகின்ற திருமேனி விளக்கத்தையுடையனுமான பெருமான் | வரி வளையால் குறைவு இலம் | அழகிய வளையில் அபேக்ஷையுடையோமல்லோம். |

* * *—கிளர்ந்த வொளி குறைவின்றிக்கேயிருக்கிற நரஸிம்ஹமூர்த்தியாய்ச் சிறிக்கொண்டு தோற்றி இரணியனுடைய அகன்ற மார்வைக்கிழித்து 'சிறுக்கனுடைய விரோதி தொலையப் பெற்ரும்' என்று திருவுள்ளமுவந்தவன். வளரொளிய கனலாழி வலம்புரியன் = இரணியனது உடல் நரஸிம்ஹனுடைய திருநகங்களுக்கே இரைபோரப் பெருமையாலே திவ்யாயுதங்களுக்கு இங்குக் காரியமேயில்லையாயிற்று: 'இங்கு நமக்கு ஒன்றும் இரை கிடைக்கவில்லையே!' என்கிற சீற்றத்தினுல் சங்கும் சக்கரமும் கதகதென்று வயிறெரிகிறபடி. அப்படிப்பட்ட எம்பெருமான் விரும்பாத—(அதாவது) அவன் வாங்கித் தன் கையில் இட்டுக்கொள்ளாத வளை எனக்கு வேண்டா என்ருளாயிற்று. (எ)

3091. வரிவளையால்குறைவில்லாப் பெருமுழக்காலடங்காரை*
எரியழலம்புகவூதி இருநிலமுன்துயர்தவிர்த்த*
தெரிவரியசிவன்பிரமன் அமரர்கோன்பணிந்தேத்தும்*
விரிபுகழான்கவராத மேகலையால்குறைவிலமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| முன் | முன்பொருகாலத்தில் | துயர் | (பெரும்பாரத்திஞலுண்டான) கஷ்டத்தை |
| வரி வளையால் | வரிகளையுடைய சங்கில் நின்றுமுண்டான | தவிர்த்த | போக்கினவனும். |
| குறைவு இல்லா பெரு முழக்கால் | மிகப்பெரிய கோஷத்தினுலே | தெரிவு அரிய சிவன் பிரமன் அமரர் கோன் | (இவ்வுபகாரத்திற்காக) அறிய முடியாத சிவன் பிரமன் இந்திரன் ஆகிய இவர்கள் |
| எரி அழலம் | கிளர்ந்தெரிகிற (பயமாகிற) அக்நியானது | பணிந்து ஏத்தும் விரி புகழான் | வணங்கித் துதிக்கப்பெற்ற பரந்த புகழையுடையனுமான எம்பெருமான் |
| அடங்காரை புக | பகைவர்களிடத்துப் புகும்படியாக | | |
| ஊதி | (சங்கை) ஊதி | கவராத | விரும்பாத |
| | | மேகலையால் | அரைவடத்தில் |
| இரு நிலம் | விசாலமான பூமண்டலத்தினுடைய | குறைவு இலம் | அபேக்ஷையுடையோமல்லோம். |

* * *—மண்ணின்பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்து விரோதிகளைத் தொலைத்து அமரர்கள் துதிக்க நின்ற பெருமான் விரும்பாத மேகலை எனக்கு ஏதுக்கென்கிருள். வரிவளையால் என்கிற பதம் 'குறைவில்லா' என்பதில் அந்வயிப்பதன்று, 'பெருமுழக்கால்' என்பதில் அந்வயிப்பதாகும்; ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலுண்டானமஹாகோஷத்தாலே' என்றபடி. "படைபோர்புக்கு முழங்குமப் பாஞ்சசன்னியம்" என்கிறபடியே பாஞ்சசன்னியம் முழங்கினவளவிலேயே எதிரிகள் குடல்குழம்பிக் குமுறிப் போவர்கள். பாரதயுத்தம் முதலிய பிரகரணங்களில் இதன் பெருமை அறியத்தக்கது.

[தெரிவரிய இத்யாதி.] எம்பெருமான் எங்கெங்கு வெற்றிபெற்று நிற்கின்ருனே அங்கங்கெல்லாம் சிவனும் பிரமனுமிந்திரனும் முதலானவர்கள் பணிந்து ஏத்துவர்கள்; அப்படி அவர்கள் ஏத்துவது பரபரனை எம்பெருமானுக்கு ஒரு பெருமையன்ருகிலும், துர்மானங் கொண்டாடித்திரியும் அத்தெய்வங்கள் அந்த துர்மானந் தவிர்ந்து காலவிசேஷங்களிலே எம்பெருமானைப் பணிந்தேத்துகை அவர்களுக்கும் ஸ்வரூபலாபமாய் எம்பெருமானுக்கும் ஒருவாறு ஸந்தோஷகரமாயிருக்கையாலே ஆழ்வார்கள் அதனை ஒரு பொருளாக எடுத்துக் கூறுவர்கள். மேகலை—மேகலா என்ற வடசொல் திரிபு. (அ)

3092. மேகலையால்குறைவில்லா மெலிவுற்றவகலல்குல்*
போகமகள்புகழ்த்தந்தை விறல்வாணன்புயம்துணித்து*
நாகமிசைத்துயில்வான்போல் உலகெல்லாம்நன்கொடுங்க*
யோகணைவான்கவராத உடம்பினல்குறைவிலமே* (கூ)

| | | | |
|---|---|---|---|
| மேகலையால் குறைவு இல்லா | உடையழகினுல் குறையற்றவளும் | அகல் அல்குல் | அகன்ற நிதம்ப ப்ரதேசத்தையுடையவளும் |
| மெலிவு உற்ற | ஸௌகுமார்யத்தன்மை பொருந்தியவளும் | போகம் | போகத்திற்குரியவளுமான |
| | | மகள் | உஷையென்னும் பெண்ணுக்கு |

| | | | |
|---|---|---|---|
| தந்தை | தகப்பனென்கிற | உலகு எல்லாம் | ஸகலலோகமும் |
| புகழ் | புகழையுடையனாய் | நன்கு ஒடுங்க | நன்மையிலே சேரும்படி |
| விறல் | பலிஷ்டனான | யோகு அணைவான் | உபாயசிந்தை பண்ணுமவனான எம்பெருமான் |
| வாணன் | பாணாஸுரனுடைய | | |
| புயம் | தோள்களை | கவராத | விரும்பாத |
| துணித்து | அறுத்தொழித்தவனாய், | உடம்பினால் குறைவு இலம் | உடம்பில் அபேக்ஷையுடையோமல்லோம். |
| நாகம் மிசை | ஆதிசேஷன்மீது | | |
| துயில்வான்போல் | உறங்குவான்போலே | | |

* * *—வாணனாயிரம் தோள்துணித்த பெருமான் விரும்பாத உடம்பு எனக்கு ஏதுக்கு? என்கிறான். "மேகலையால் குறைவில்லா" என்பது பாணாஸுரபுத்ரியான உஷைக்கு அடைமொழி. மேகலை என்பதைக் கீழ்ப்பாசுரத்திற்போலே மேகலா என்னும் வடசொல்லின் திரிபாகக்கொள்ளவுமாம்; அன்றி, 'மே-கலையால்' என்று இரண்டு சொல்வடிவமாகக்கொண்டு, விரும்பத்தக்க [கலை] வஸ்த்ரத்தினால் என்று கொள்ளவுமாம். மேம்பாடுடைய கலையினால் என்னவுமாம்.

அல்குல்—மத்யப்ரதேசம். அல்குலென்று பெண்குறியையே சொல்லுவதாகப் பலர் பிரமித்திருப்பதுண்டு. திருக்கோவையார் முதலிய நூல்களில் சிற்சிலவிடங்களில் அப்பொருளில் பிரயோகம் கண்டாலும் அருளிச்செயல்களில் காண்கிற பிரயோகம் அப்பொருளில் அல்ல. "திருமலிந்து திகழ் மார்வு தேக்கவந்தென்னல்குலேறி" என்ற பெரியாழ்வார் திருமொழியும் "பூந்துகில் சேரல்குல்" என்ற பெருமாள் திருமொழியும் முதலாயின காண்க. (கூ)

3093. உடம்பினால்குறைவில்லா உயிர்பிரிந்தமலைத்துண்டம்*
கிடந்தனபோல்துணிபலவா அசுரர்குழாம்துணித்துகந்த*
தடம்புனலசடைமுடியன் தனியொருகூறமர்ந்துறையும்*
உடம்புடையான்கவராத உயிரினால்குறைவிலமே. (ω)

| | | | |
|---|---|---|---|
| உடம்பினால் குறைவு இல்லா | பெரியவுடம்பு படைத்த | ஒரு கூறு | (தனது திருமேனியின்) ஒரு பக்கத்திலே, |
| அசுரர் குழாம் | அசுரக்கூட்டங்களை | தடம் புனல சடை முடியன் தனி அமர்ந்து உறையும் | பரந்தகங்காதீர்த்தத்தைத்தரித்த ஜடாமகுடத்தை யுடையனான சிவபிரான் பொருந்தி வாஸம் பண்ணப்பெற்ற |
| உயிர் பிரிந்த மலை துண்டம் கிடந்தன போல் | உயிரைவிட்டு நீங்கின பர்வத கண்டங்கள் கிடந்தாற்போலே | | |
| பல துணி ஆ துணித்து | பலபல கண்டங்களாம்படி துண்டித்து | உடம்பு உடையான் | திருமேனியை யுடையவனான எம்பெருமான் |
| உகந்த | (ஆச்ரிதவிரோதிகள் தொலைந்தனவென்று)திருவுள்ள முவந்தவனாய், | கவராத | விரும்பாத |
| | | உயிரினால் குறைவு இலம் | ஆத்மாவில் அபேக்ஷையுடையோமல்லோம். |

* * *—முன்னடிகளால் எம்பெருமானுடைய விரோதிநிரஸந ஸாமர்த்தியம் பேசப்படுகிறது. "உடம்பினால் குறைவில்லா" என்கிற அடைமொழி அசுரர்குழாத்திலே அந்வயிக்கும். "ஊன்மல்கி மோடுபருப்பார்" என்கிறபடி கண்ட பொருள்களையும் தின்று உடம்பை வளர்த்திருப்பர்கள் அசுரர்கள். ஆத்மாவைப் போஷியாதே தேஹபோஷணத்திலேயே நோக்குடையவர்கள் என்றபடி.

பண்டொருகாலத்தில் மலைகளெல்லாம் இறகுகளோடு கூடி வானத்திலெழுந்துதிரிந்து நாடுநகரங்களுக்கு விநாசங்களை விளைத்திட்டனவென்றும், அப்போது தேவேந்திரன் தனது வஜ்ராயுதத்தினால் அம்மலைகளின் இறகுகளைத் துணித்து வீழ்த்தனன் என்றும் இதிஹாஸங்கள் கூறும். எம்பெருமானால் துணித்து வீழ்த்தப்பட்ட அசுரர்கள் அம்மலைகளோடு ஒப்பிடத்தக்கவர்களெனக்கொண்டு "உயிர்பிரிந்த மலைத்துண்டம் கிடந்தனபோல்" எனப்பட்டது. (ω)

3094. உயிரினால்குறைவில்லாஉலகேழ்தன்னுள்ளொடுக்கி*
தயிர்வெண்ணெயுண்டானைத் தடங்குருகூர்ச்சடகோபன்*
செயிரில்சொல்லிசைமாலை ஆயிரத்துளிப்பத்தால்*
வயிரம்சேர்பிறப்பறுத்து வைகுந்தம்நண்ணுவரே. (கக)

| | | | |
|---|---|---|---|
| உயிரினால் குறைவு இல்லா | எண்ணிறந்த ஆத்மாக்களை யுடைய | தயிர்வெண்ணெய் உண்டானை | தயிரும் வெண்ணெயும் அமுது செய்தவனான எம்பெருமான் விஷயமாக |
| ஏழ் உலகு | ஸமஸ்த லோகங்களையும் | | தடம் குருகூர்சடகோபன்—; |
| தன்னுள் ஒடுக்கி | தன்னுடைய ஸங்கல்பத்திலே யடக்கிவைத்து | செயிர் இல் | குற்றமற்ற |

| | | | |
|---|---|---|---|
| இசை | இசையோடு கூடின | வயிரம் சேர் பிறப்பு அறுத்து | உரமேறின ஸம்ஸாரத்தை அடியறுத்து |
| சொல்மாலை | சொல்மாலையாகிய | வைகுந்தம் | பரமபதத்தை |
| ஆயிரத்துள் | ஆயிரம்பாட்டினுள்ளே | நண்ணுவர் | கிட்டப்பெறுவர். |
| இ பத்தால் | இந்தப்பதிகத்தினால் | | |

* * *—இருள் தருமாஞாலத்தில் பிறப்பையறுத்துப் பரமபதம் பெறுதற்கு இத்திருவாய்மொழி ஸாதனமாயிருக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது.

வயிரம்சேர் பிறப்பு = வேண்டாவென்று கழித்தாலும் விடாதபடிகாழ்ப்பு ஏறிக்கிடக்கிற ஸம்ஸாரம்.

செயிர் இல் = சொற்குற்றமும் பொருட்குற்றமும் இல்லாத என்றபடி. (கக)

---

## நான்காம்பத்து ஒன்பதாந் திருவாய்மொழி—நண்ணாதார் முறுவலிப்ப

கீழ்த்திருவாய்மொழியில், உடம்பு வேண்டா, உயிர்வேண்டா, அது வேண்டா, இது வேண்டா என்று ஆத்மாத்மீயங்களையெல்லாம் வெறுத்து உதறித் தள்ளப்பார்த்தார். தள்ளினால் தள்ளுண்டுபோமவையோ அவை? பேறுபெறுவதற்கு எப்படி அவன்கைபார்த்திருக்கவேணுமோ, அப்படியே முடிகைக்கும் அவன்கைபார்த்திருக்கவேண்டுமாகையாலே 'எம்பிரானே! என்னை நீதானே முடித்திடாய்' என்கிறார். ஆழ்வாருடைய ஆர்த்தி பேச்சுக்கு நிலமல்லாதபடி பெருகினமை இத்திருவாய்மொழியிலே விளங்காநின்றது.

3095. நண்ணாதார்முறுவலிப்ப நல்லுற்றார்கரைந்தேங்க*
எண்ணாராத்துயர்விளைக்கும் இவையென்னஉலகியற்கை?*
கண்ணாளா!கடல்கடைந்தாய்! உனகழற்கேவரும்பரிசு*
தண்ணாவாதடியேனைப் பணிகண்டாய்சாமாறே. (க)

| | | | |
|---|---|---|---|
| நண்ணாதார் முறுவலிப்ப | பகைவர்கள் மகிழ்ந்து சிரிக்கவும் | கடல் கடைந் தாய் | (தேவர்களுக்கு அமுதமளிக்கக்) கடலைக் கடைந்தவனே! |
| நல் உற்றார் கரைந்து ஏங்க | நல்ல உறவினர்கள் மன முருகி வருந்தவும் | உன கழற்கே வரும் பரிசு | உனது திருவடிவாரத்திலேயே நான் வந்து சேரும்படி |
| எண் ஆரா துயர் விளைக்கும் | எண்ணமுடியாத துன்பங்களைவிளைக்கின்றவையான | தண்ணவாது | காலதாமதமின்றியில் |
| இவை உலகு இயற்கை | இந்த லோகயாத்ரைகள் | அடியேனை சாம் ஆறு பணி | அடியேனை மரணமடையும்படி அருள் செய்யவேணும்; |
| என்ன | என்னே!; | | |
| கண் ஆளா | தயாளுவே! | கண்டாய்—முன்னிலையசை | |

* * *—எம்பெருமானே ஸர்வரக்ஷண ஸமர்த்தனாய் ஸர்வநிர்வாஹகனாய் நீ யிருக்க, இந்த ஸம்ஸாரிகள் அளவுகடந்த துயரங்களை யநுபவித்துக்கொண்டிருக்குமிருப்பு கண்டு என்னால் பொறுத்திருக்க முடியவில்லை; இவர்களுடைய ஆர்த்தியைத் தீர்ப்பதோ, அன்றி இவர்களுடைய இழவை நான் சிந்திக்கவொண்ணாதபடி என்னை முடிப்பதோ செய்யவேணும்—என்கிறார். (க)

3096. சாமாறும்கெடுவாறும் தமருற்றார்தலைத்தலைப்பெய்து*
ஏமாறிக்கிடந்தலற்றும் இவையென்னஉலகியற்கை*
ஆமாறென்றறியேன்நான் அரவணையாயம்மானே!
கூமாறேவிரைகண்டாய் அடியேனைக்குறிக்கொண்டே. (உ)

| | | | |
|---|---|---|---|
| சாம் ஆறும் | சிலரென்று மரணமடைவதும் | ஏமாறி கிடந்து அலற்றும் இவை உலகு இயற்கை என்ன | ஏங்கிக்கிடந்து கதறும்படியான இந்த லோகயாத்ரைகள் என்னே! |
| கெடும் ஆறும் | பலவகைக் கஷ்டங்களையடைவதும் | | |
| (இது காரணமாக) | | | |
| தமர் உற்றார் தலைத்தலைப் பெய்து | தாயாதிகளும் உறவினர்களும் ஒருவர்க்கொருவர்மேல் விழுந்து | அரவு அணையாய் அம்மானே! | சேஷசாயியான ஸ்வாமியே! |
| | | நான் | அடியேன் |

| | | | |
|---|---|---|---|
| ஆம் ஆறு ஒன்று அறியேன் | உய்யும்வகையைச் சிறிது மறிகின்றிலேன்; | குறிக்கொண்டு | திருவுள்ளம்பற்றி |
| அடியேனை | இப்படிப்பட்ட அடியேனை | கூம் ஆறு | (திருவடிவாரத்திலே) அழைத்துக்கொள்ளும்படி |
| | | விரை | விரைந்தருளவேணும். |

* * *—கீழ்ப்பாட்டில் "எண்ணாராத்துயர்" என்று ஸமுதாயமாகச் சொன்னதைச் சிறிது விவரித்து, இப்படி இவர்கள் படுகிற துக்கங்களைப் போக்கியருளமாட்டாயாகில், என்னையாவது உன் திருவடிவாரத்திலே அழைத்துக்கொண்டருளவேணுமென்கிறார்.

**கூமாறு**—கூவுமாறு என்றபடி, என்னை நீ அழைத்துக்கொள்ளும்படியாக என்கை. இவ் விபூதியிலே இங்ஙனே கதறுகிறவன் நானொருவனேயல்லது வேறொருவருமில்லை; ஆகையாலே என்னைப் பற்றி விசேஷித்துத் திருவுள்ளம் பற்றவேணுமென்கிறார் **அடியேனைக் குறிக்கொண்டே** என்று. (உ)

3097. கொண்டாட்டும்குலம்புனைவும் தமருற்றார்விழுநிதியும்*
வண்டார்பூங்குழலாளும் மனையொழியஉயிர்மாய்தல்*
கண்டாற்றேனுலகியற்கை கடல்வண்ணா!அடியேனை*
பண்டேபோல்கருதாது உன்னடிக்கேகூய்ப்பணிகொள்ளே. (௩)

| | | | |
|---|---|---|---|
| கொண்டாட்டும் | (புதிதாகச் சிலர் ஏறிட்டுச் செய்கிற) கொண்டாட்டமும் | உயிர் மாய்தல் | (திடீரென்று) இறந்து போவதாகிற |
| குலம் புனைவும் | இல்லாத குலத்தை ஏறிட்டுக் கொண்டு அஹங்கரிப்பதும் | உலகு இயற்கை கண்டு | இந்த லோகயாத்திரையைக் கண்டு |
| தமர் | தாயாதிகளும் | ஆற்றேன் | ஸஹிக்கமாட்டேன்; |
| உற்றார் | உறவினரும் | கடல் வண்ணா | கடல்வண்ணனான எம்பெருமானே! |
| விழு நிதியும் | அளவற்ற செல்வமும் | அடியேனை | அடியனான என்னை |
| வண்டு ஆர் பூ குழலாளும் | வண்டுகள் படிந்த பூக்கள் நிறைந்த கூந்தலையுடைய மனைவியும் | பண்டேபோல் கருதாது | இத்தனை நாளும்போல் நினைத்திராமல் |
| மனை | வீடும் (ஆகிய இவை) | உன் அடிக்கே கூய் | உன் திருவடிவாரத்திலே அழைத்துக்கொண்டு |
| ஒழிய | தன்னைவிட்டு நீங்க | பணி கொள் | அடிமை கொண்டருள வேணும். |

**கொண்டாட்டும்**=முன்பு இன்னானென்று தெரிந்துகொள்ள முடியாதபடி அபதார்த்தமாய்க் கிடந்தவொருவன் நாலுகாசு கைப்பட்டவாறே நாலுபேர்களால் கொண்டாடப்படுபவனும்; அப்படிப்பட்ட கொண்டாட்டமும். **குலம்புனைவும்**=நாலுபேர்கள் கொண்டாடத்தொடங்கினபோதே தாம் அநாதியாகவே பெரிய நற்குடிப்பிறப்புடையார் என்று காட்டிக்கொள்வதற்காக 'இன்ன திருவம்சம்' என்று ஏறிட்டுக் கொள்ளப் புகுவர்களாம்; அங்ஙனேயொரு குலத்தைத் தொடுத்துக்கொள்வதும். **தமர்**—ஏற்கனவே தாயாதிகளாயிருந்தாலுங்கூட 'இவனுடைய தாயாதியாக நம்மைச் சொல்லிக்கொள்வது நமக்கு நிறக் கேடு' என்று விட்டுத்தொலைவர்கள்; அப்படி விடப்பட்டவன்தானே சிறிது செல்வம் பெற்றவாறே தாயாதிகளல்லாதாருங்கூட 'இவனுடைய ஞாதிகளாக நம்மைச்சொல்லிக்கொள்ளுதல் நமக்கு மேன்மை' என்று நினைத்து 'இவரும் நாங்களும் ஒரே குடும்பம்' என்று சொல்லி அணுகிப்போருவார்கள். **உற்றார்**=பெண் கொடுத்தல் கொள்ளுதல் முதலிய ஸம்பந்தங்கள் செய்துகொள்வதற்குத் தகுதியற்றவன் என்று முன்னம் கைவிடப்பட்டிருந்தாலும் இப்போதாக உறவுக்கு மேல்விழா நிற்பர்களாம். **விழுநிதியும்**=நாலுகாசு சேர்ந்தவிடத்தே பின்னையும் பத்தெட்டு காசுகள் வந்துசேருமே; அப்படியே சேர்ந்து சேர்ந்து சீரிய செல்வமாகும். அந்தச் செல்வத்திற்கு ஒரு விநியோகம் வேணுமே—அத்தையிட்டு ஒரு ஸ்த்ரீயை ஸ்வீகரிக்கும்; அவள்தான் * வண்டார் பூங்குழலாளாயிற்று; இவள் செவ்வியை வண்டே புஜித்துப் போமித்தனை போக்கித் தான் புஜிக்கமாட்டானென்கை.

[**மனையொழிய உயிர்மாய்தல் கண்டு**]=அவளும் தானுமாய் ஏகாந்தமாக இருக்கைக்கென்று ஒரு மாடமாளிகையைப் பல நிலமாகக்கட்டுவிப்பன்; ஆக இவையெல்லாவற்றையும் விட்டு ஒருநாள் திடீரென்று மரணம் நேர்பட, அப்போதைய நிர்வேதங்கள் கண்டு பொறுக்கவொண்ணாதவை, இதுவரையில் ஒருவாறு இவ்விளிம்புகளையெல்லாங் கண்டு பொறுத்திருந்தேனாகிலும் இனி ஒரு நொடிப்பொழுதும் ஆற்றகில்லேனாதலால் விரைந்து அடியேனைத் திருவடி சேர்த்துக்கொள்ளவேணுமென்றாராயிற்று. (௩)

3098. கொள்ளென்றுகிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம்நெருப்பாக*
கொள்ளென்னுதமம்மூடும் இவையென்னஉலகியற்கை ?*
வள்ளலே!மணிவண்ணா! உனகழற்கேவரும்பரிசு*
வள்ளல்செய்தடியேனை உனதருளால்வாங்காயே. (௪)

| | |
|---|---|
| கொள் என்று கிளர்ந்து எழுந்த | 'என்னைக்கொள் என்னைக் கொள்' என்று மேன் மேலும் பெருகித் தோற்றுகிற |
| பெரு செல்வம் | பெரிய செல்வமானது |
| நெருப்பு ஆக | நெருப்புப்போல் ஸமூல நாசம் பண்ணு நிற்கச் செய்தேயும் |
| (அதில் நசையொழியாமல்) | |
| கொள் என்று | அந்தச் செல்வத்தையே மேன்மேலும் கொள்ளும் படியாக |
| தமம் மூடும் இவை உலகு இயற்கை என்ன | தமோ குணம் மேலிட்டுச் செல்லுகின்ற இந்தலோக ஸ்வபாவமிருந்தபடி என்னே! |
| வள்ளலே | மஹோதாரனே! |
| மணிவண்ணா | நீலமணிவண்ணனே! |
| உன கழற்கே வரும் பரிசு | உன் திருவடிவாரத்திலேயே வந்து சேரும்படி |
| அடியேனை | அடியேன் விஷயத்தில் |
| வள்ளல் செய்து | ஔதார்யத்தைக் காட்டி |
| உனது அருளால் | உனது பரம க்ருபையாலே |
| வாங்காய் | கைக்கொண்டருளவேணும். |

* * *—ஐச்வர்யமானது அநர்த்தஹேது என்பதைக் கட்கூடாகக் காணுநிற்கச் செய்தேயும், பின்னையும் மேல்விழுந்து அதிலே நசைபண்ணிப் போருகிற லோகயாத்ரையைக் காணப்போகிற தில்லையே! என்கிறார். நெருப்புக்கு ஆச்ரயாசம் என்று பெயர்; தனக்குப் பற்றுக்கோடான இடத்தையே கபளீகரிப்பது நெருப்பின் இயல்பு; அதுபோலவே செல்வமும் தான் பற்றுகிற இடத்தை வேரோடே அழிக்கவல்லது என்பதைக் கண்ணாரக் காணுநிற்கச் செய்தேயும்—என்பது முதலடியின் கருத்து. செல்வம் விஞ்சி ஜீவிக்கப் பெறுமவர்களை அச்செல்வமே காரணமாகப் பொறாமையாளர்கள் சித்ரவதம் செய்வது உலகவியற்கையாதலால் ஆழ்வார் இங்ஙனே யருளிச்செய்தது மிகப்பொருந்தும். நெருப்பாக என்றவிடத்தில் உம்மை தொக்கியிருப்பதாகக் கொள்ளவேணும்.

கொள்ளென்று தமமூடும்="பகல்கண்ட குழியிலே இரா விழுவாரைப்போலே" என்று ஒரு த்ருஷ்டாந்தம் அடிக்கடி ஆசாரியர்கள் ஸாதிப்பதுண்டு; அதாவது, ஓரிடத்தில் ஒரு பெரிய பள்ளமிருக்கும்; அதனைப் பகலில் நன்றாகக் கண்டிருக்கச் செய்தேயும் இரவில் இருளிலே செல்லும்போது ஸஹஸா அதிலே விழுந்துபடுவர்களாம்; அப்படியே செல்வம் விநாசஹேது என்பதை ஸ்பஷ்டமாகக் காணுநிற்கச் செய்தேயும் மீண்டும் அதனையே கொள்ளும்படியாக இப்படியும் ஒரு தமோகுணம் வந்து மூடுமோ வென்று ஆழ்வார் வியக்கிறார். (ச)

3099. வாங்குநீர்மருலகில் நிற்பனவும்திரிவனவும்*
ஆங்குயிர்கள்பிறப்பிறப்புப் பிணிமூப்பால்தகர்ப்புண்ணும்*
ஈங்கிதன்மேல்வெந்நகரம் இவையென்னஉலகியற்கை?*
வாங்கெனைநீமணிவண்ணா; அடியேனைமறுக்கேலே. (ரு)

| | |
|---|---|
| வாங்கும் | உலகங்களையெல்லாம் பிறகு தன் பக்கலிலே ஸம்ஹரித்துக்கொள்ள வல்லதான |
| நீர் | நீரிலே |
| மலர் | மலர்ந்த |
| உலகில் | பூமியின்கண் |
| நிற்பனவும் | ஸ்தாவரங்களும் |
| திரிவனவும் | ஜங்கமங்களுமான |
| ஆங்கு | அவ்வவ்விடங்களிலுள்ள |
| உயிர்கள் | பிராணிகள் |
| ஈங்கு | இப்புவியில் |
| பிறப்பு இறப்பு பிணி மூப்பால் | பிறப்பது இறப்பது வியாதி கொண்டிருப்பது கிழத் தனமடைவது ஆகிய இவற்றாலே |
| தகர்ப்புண்ணும் | வருந்திக்கிடக்கும்; |
| இதன் மேல் | இறந்தொழிந்தபின்போ வென்னில் |
| வெம் நரகம் | கொடிய நரக வேதனையாம்; |
| இவை என்ன உலகு இயற்கை!—; | |
| மணி வண்ணா | நீலமணிவண்ணனே! |
| நீ | நீ |
| எனை | இத்துயரம் பொறுக்க மாட்டாத என்னை |
| வாங்கு | அங்கீகரித்தருளவேணும் |
| அடியேனை | உன்னடியனான என்னை |
| மறுக்கேல் | கலங்கப் பண்ணவேண்டா. |

* * * பிறப்பது மிறப்பதுமாய் நோவுபட்டுத் திரிகிற இந்த ஸம்ஸாரிகள் நடுவில் நின்றும் இத்துன்பம் நடையாடாத தேச விசேஷத்திலே யென்னை யழைத்துக் கொண்டருளவேணுமென்கிறார். (ரு)

3100. மறுக்கிவல்வலைப்படுத்திக் குமைத்திட்டுக்கொன்றுண்பர்*
அறப்பொருளையறிந்தோரார் இவையென்னவுலகியற்கை?*
வெறித்துளவமுடியானே! வினையேனையுனக்கடிமை
அறக்கொண்டாய்*இனியென்னாரமுதே! கூயருளாயே. (சா

மறுக்கி — பயமூட்டி
வல் வலை படுத்தி — தங்களது கொடிய வலையிலே சிக்கிக்கொள்ளும்படி செய்து
குமைத்திட்டு கொன்று — சித்ரவதம் பண்ணி
உண்பர் — தங்கள் வயிற்றை வளர்ப்பர்கள் ;
அறம் பொருளை அறிந்து ஓரார் — தரும தத்துவத்தை யறிந்து கவனிப்பாரில்லை ;
இவை என்ன உலகு இயற்கை !—;
வெறி துளவம் — பரிமளம் மிக்க திருத்துழாயை
முடியானே — திருமுடியிலணிந்துள்ளவனே)
(இப்படிப்பட்ட ஒப்பனையழகைக்காட்டி)
வினையேனை — பாவியான என்னை
உனக்கு அற — உன் விஷயத்திலேயே அற்றுத்தீரும்படி
அடிமை கொண்டாய் — ஏற்கனவே அடிமைகொண்டிருப்பவனே !
என் ஆர் அமுதே — எனக்குப் பரிபூர்ணமான அமுதமே !
இனி — உடனே
கூய் அருளாய் — அழைத்துக் கொண்டருளவேணும்.

* * * பரஹிம்ஸையே போதுபோக்கான இந்த லோகயாத்ரையை நான் காணுதபடி என்னை யழைத்துக் கொண்டருளவேணு மென்கிறார். ஆழ்வார் திருப்புளியாழ்வாரடியிலே திருக்கண்களை மூடிக்கொண்டு எழுந்தருளியிராநிற்கச் செய்தேயும் லோகயாத்ரை உள்ளது உள்ளபடி யுணர்ந்து பேசுகிறவிது என்னே ! என்று வியக்கவேண்டும்படியிராநின்றது. (கூ)

3101. ஆயேயிவ்வுலகத்து நிற்பனவும்திரிவனவும்*
நீயேமற்றொருபொருளும் இன்றிநீநின்றமையால்*
நோயேமூப்பிறப்பிறப்புப் பிணியேயென்றிவையொழிய*
கூயேகொள்ளடியேனைக் கொடுவுலகம்காட்டேலே. (எ)

இ உலகத்து — இந்த லோகத்தில்
நிற்பனவும் — ஸ்தாவரப் பொருள்களும்
திரிவனவும் — ஜங்கமப் பொருள்களும்
நீயே ஆய் — நீயாகவே யிருந்து
மற்று ஒரு பொருளும் இன்றி — நீயல்லாத பொருள் வேறொன்று மில்லாதபடி
நீ நின்றமையால் — நீ யிருப்பதனாலே
நோய் மூப்பு — மனோவியாதி, கிழத்தனம்
பிறப்பு இறப்பு பிணி என்ற இவை ஒழிய — ஜனன மரணங்கள், சரீர பீடைகள் எனப்படுகிற இவை தொலையும்படி
அடியேனை — அடியனான வென்னை
கூயே கொள் — அழைத்துக் கொண்டருளவேணும் ;
கொடு உலகம் — கொடிய இவ்வுலகத்தை
காட்டேல் — இனிமேலும் காட்டவேண்டாம்.

* * * "ஆழ்வீர் ! உம்மை நானழைத்துக் கொள்வதென்று ஒன்றுண்டோ? பேறு உம்மதான பின்பு நீர்தாமே முயற்சிசெய்து வந்து சேரக்கடவீரத்தனை" என்று எம்பெருமான் திருவுள்ளமானதாகக் கொண்டு, ஸகல பதார்த்தங்களும் நீ யிட்ட வழக்கான பின்பு நீயே யுன்னைக் கிட்டும்வழி பார்த்தருள வேணுமென்கிறார். ஆயே! என்பதற்கு மூன்றுபடியாகப் பொருள் கொள்ளலாம்; தாயே! என்று எம்பெருமானை விளிக்கிறபடி; அந்தோ என்றபடி; "இவ்வுலகத்து நிற்பனவுந் திரிவனவும் நீயே ஆய்" என்று மேலே கூட்டுகிறபடி.

கொடுவுலகம் காட்டேல்=இவ் வுலகத்தின் கொடுமையைத் தவிர்த்து இவ் விபூதி தன்னையே நித்ய விபூதியாக்கிக் காட்டித் தரவல்லையேல் காட்டுவாயாக, என்பது உட்கருத்து. (எ)

3102. காட்டிநீகரந்துமிழும் நிலநீர்தீவிசும்புகால்*
ஈட்டிநீவைத்தமைத்த இமையோர்வாழ்தனிமுட்டை*
கோட்டையினில்கழித்து என்னையுன்கொழுஞ்சோதியுயரத்து*
கூட்டரியதிருவடிக்கள் எஞ்ஞான்றுகூட்டுதியே? (அ)

(எம்பெருமானே) நீ
ாட்டி — படைக்கும்போது பிரகாசிப்பித்து
ரந்து — (பிரளய காலத்திலே) உள்ளே மறைத்து
டமிழும் — மறுபடியும் வெளிப்படுத்துகின்ற
ிலம் நீர் தீ விசும்பு கால் — பஞ்ச பூதங்களையும்
ீட்டி வைத்து — ஒன்றாகத்திரட்டி வைத்து
அமைத்த — ஒழுங்கு படுத்திய
இமையோர் வாழ் தனிமுட்டை — பிரமாண்டமாகிற
கோட்டையினில் — கோட்டையில்நின்றும்
என்னை கழித்து — என்னை அப்புறப்படுத்தி
உன் — உன்னுடைய
கொழு சோதி உயரத்து — மிக்கவொளி யுருவமாய் எல்லாவற்றினும் உயர்ந்ததான திருநாட்டிலே
கூட்டு அரிய — கூடுதற்கரிதான
திருவடிக்கண் — திருவடிகளிலே
எஞ்ஞான்று — என்றைக்கு
கூட்டுதி — கூட்டிக்கொள்வாய்?

* * * 'ஆழ்வீர்! நீர் விரும்பியபடியே நாம் செய்கிறோம்' என்று எம்பெருமான் அருளிச் செய்ய, அது என்றைக்குச் செய்வதாகத் திருவுள்ளமோ? என்கிறார்.

ஆயிபாட்டி வீட்டிலே ஒரு வார்த்தை :—" பிள்ளை திருநறையூரரையர், ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கவொண்கிறதில்லை ; ஒரு ஸர்வ சக்தி, கர்மாநுகூலமாகப் பிணைத்த பிணையை அவனைக் கால்கட்டாதே இவ்வெலி பெறும்பனை ஸம்ஸாரியால் அவிழ்த்துக் கொள்ளப்போமோவென்று பணிப்பர் " என்பதாம்.

இமையோர்வாழ் தனிமுட்டை = பிரமன் முதலிய க்ஷேத்ரஜ்ஞவர்க்கங்கள் நிறைந்த அண்டம் என்றபடி. (அ)

**3103.** கூட்டுதிநின்குரைகழல்கள் இமையோருந்தொழாவகைசெய்து*
ஆட்டுதிநீயரவணையாய்! அடியேனுமஃதறிவன்*
வேட்கையெல்லாம்விடுத்து என்னையுன்திருவடியேசுமந்துழல*
கூட்டரியதிருவடிக்கள் கூட்டினைநான்கண்டேனே. (கூ)

| | |
|---|---|
| அரவு அணையாய் | சேஷசாயியான பெருமானே!, |
| நீ | நீ (அபிமதரான சிலரை) |
| நின் குரை கழல்கள் | ஆபரணத்வநி பொருந்திய உனது திருவடிகளிலே |
| கூட்டுதி | சேர்த்துக் கொள்ளுகிறாய் ; |
| | (திருவுள்ள மில்லையாகில்) |
| இமையோரும் | (ஞான சக்திகள் நிறைந் திருக்கப்பெற்ற) தேவர்களும் |
| தொழா வகை செய்து | கண்டு அநுபவியாதபடி பண்ணி |
| ஆட்டுதி | அலைக்கின்றாய் ; |
| அஃது | இப்படி எளியனாயும் அரியனாயு மிருக்கும் தன்மையை |
| அடியேனும் | நானும் |
| அறிவன் | அறிந்தே யிருக்கின்றேன் ; |
| என்னை | எனக்குண்டான |
| வேட்கை எல்லாம் விடுத்து | விஷயாந்தர விருப்பங்க ளெல்லாவற்றையும் கழித்து |
| உன் திரு அடியே | உனது திருவடிகளையே |
| சுமந்து உழல | நான் தலையால் சுமந்து திரியும்படி |
| கூட்ட அரிய திரு அடிக் கண் | துர்லபமான திருவடிகளிலே |
| கூட்டினை | சேர்த்துக் கொண்டாய் ; |
| நான் கண்டேன் | இதை ப்ரத்யக்ஷமாக அநுப வித்தேன். |

* * * ஆழ்வாருடைய ஆர்த்தி தீரும்படி பரமபதத்திலிருப்பைக் காட்டிக்கொடுக்க, அது கண்டு தாம் களித்தமை கூறுகின்றது இப்பாசுரம். **கூட்டுதிநின் குரைகழல்கள்** = சிலரைத் திருவடி சேர்த்துக்கொள்ளத் திருவுள்ளம்பற்றினால், அவர்கள் எவ்வளவு தண்ணியர்களா யிருந்தாலும் தன்னுடைய சக்தியே காரணமாக அவர்களைத் திருவடி சேர்த்துக்கொள்ளுகிறாயென்கை. இன்னாரினையா ரென்று பாராமல், உகந்தாரைத் திருவடி சேர்த்துக்கொள்ளுதல் உன்னுடைய இயல்பு என்றபடி.

**இமையோரும் தொழாவகைசெய்து ஆட்டுதி** = பிரமன் முதலிய பெரியார்களே யாகிலும் உகப்புக்கு இலக்கு ஆகாதவர்களை வந்து கிட்டாதபடி பண்ணி அலைக்கின்றாயென்றபடி.

வேட்கையெல்லாம் விடுத்து = இவ்வுலகில் என்னுடைய ஆசைக்கு இலக்காகாத பொருளே இல்லை ; கண்ட பொருள்களிலெல்லாம் 'எனக்கு, எனக்கு' என்றே ஆசைவைத்துப் போந்தேன் ; அந்த ஆசைகளையெல்லாம் விடுவித்தருளினாய். அதுவன்றியும், [உன் திருவடியே சுமந்துழல] பரதாழ்வானுக்கு மரவடியைக் கொடுத்து உபச்சந்தனம் பண்ணினாப்போ லன்றிக்கே ஸாக்ஷாத் திருவடிகளையே என் தலைமீது வைத்தருளினாய் ; இதைக் கேட்டார்வாய்க் கேட்கையன்றிக்கே நான் அநுபவிக்கப் பெற்றேனாகையாலே அறிந்தேன்—என்றாராயிற்று! (கூ)

**3104.** கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலும் ஐங்கருவி
கண்டவின்பம்*தெரிவரிய அளவில்லாச்சிற்றின்பம்*
ஒண்டொடியாள்திருமகளும் நீயுமேநிலாநிற்ப*
கண்டசதிர்கண்டொழிந்தேன் அடைந்தேனுன்திருவடியே. (ய)

| | |
|---|---|
| ஒண் தொடியாள் | அழகிய கைவளைகளையுடையளாகிய |
| திரு மகளும் | பெரிய பிராட்டியாரும் |
| நீயுமே | அவளுடைய நாயகனான நீயுமே |
| நிலா நிற்ப கண்ட சதிர் | களித்து வாழ்கிற அழகிய இருப்பை |
| கண்டு | இப்போது காணப்பெற்று |
| கண்டு கேட்டு உற்று மோந்து | காண்பது கேட்பது தொடுவது மோருவது |
| உண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்பம் | உட்கொள்ளுவதாகிற வேலைகளைச் செய்துகொண்டு அலைகின்ற பஞ்சேந்திரியங்களுக்கும் வாய்த்த விஷய சுகங்களையும் |
| தெரிவு அரிய அளவு இல்லா சிறு இன்பம் | கைவல்ய ஸுகத்தையும் |
| ஒழிந்தேன் | தவிர்க்கப் பெற்றேன் ; |
| உன் திரு அடியே அடைந்தேன் | உனது திருவடிகளை அடையவும் பெற்றேன். |

* * * கீழ்ப் பாசுரத்தில் ப்ரஸங்கித்தபேற்றை உகப்பின் மிகுதியாலே இன்னமும் பன்னியுரைக்கின்றாரிதில். ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்ட சதிர்கண்டு—கண்டு கேட்டுற்று மோந்துண் டுழலுமைங் கருவிகண்ட வின்பமும் தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பமும் ஒழிந்தேன், உன் திருவடியே அடைந்தேன்—என்று அந்வயிப்பது.

தன் திருமாதுடனே தான்தனியரசா யுறைகின்ற விருப்பை எம்பெருமான் ஆழ்வார்க்குக் காட்டிக் கொடுத்தருளின தாதலால் "ஒண்தொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்ட சதிர்கண்டு" என்கிறார். தொடி என்று கைவளைக்குப் பெயர்; ஒளிபொருந்திய கைவளைகளை யுடையவள்என்று பிராட்டிக்கு இவ்வடைமொழி கொடுத்ததனால், க்ஷணகாலமும் விட்டுப் பிரியாதவள் என்பது பெறப்படும்.

"திருமகளும் நீயுமே நிலாநிற்ப" என்கிறது பொருந்துமோ? பலகோடி நூறாயிரம் நித்ய முக்தர்களும் அங்கு இருக்கும்போது "திருமகளும் நீயுமே" என்று பிரிநிலையேகாரம் இட்டுப்பேசுவது கூடாதே என்று சங்கைபிறக்கும். அங்கு நித்ய முக்தர்கள் சேஷத்வாநுஸந்தான வுறைப்பினால் தனிப்பட்டுத் தோன்றாமே திவ்ய தம்பதிகளின் அபிமானத்துக்குள்ளே அடங்கிக் கிடக்கின்றமையாலே அவர்களைப் பிரித்துச் சொல்லவேண்டிய அவசியமில்லை; இந்நிலத்தில் மனைதோறும் 'நானே கடவுள், நானே கடவுள்' என்றிருப்பதுபோல, திருநாட்டில் அஹம்பாவமடித்துத் திரிகிறவர் ஒருவருமில்லையாதலால் திவ்ய தம்பதிகளைச் சொன்னதுவே போதுமென்க. (௰)

3105. திருவடியைநாரணனைக் கேசவனைப்பரஞ்சுடரை*
திருவடிசேர்வதுகருதிச் செழுங்குருகூர்ச்சடகோபன்*
திருவடிமேலுரைத்ததமிழ் ஆயிரத்துளிப்பத்தும்*
திருவடியேயடைவிக்கும் திருவடிசேர்ந்தொன்றுமினே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| திரு அடியை | ஸர்வ ஸ்வாமியாய் | திரு அடி மேல் | அவனது திருவடிகளின்மீது |
| நாரணனை | நாராயணனாய் | உரைத்த | அருளிச்செய்த |
| கேசவனை | கேசவனாய் | | தமிழ் ஆயிரத்துள் இப் பத்தும்—; |
| பரம் சுடரை | பரஞ்சோதியா யிருக்கிற எம்பெருமானை | திரு அடியே | அந்தத் திருவடிகளையே |
| திருஅடி சேர்வது கருதி | கிட்டி யநுபவிக்க விரும்பி | அடைவிக்கும் | அடையப்பண்ணும்; |
| | செழு குருகூர் சடகோபன் ;— | | (ஆதலால், நீங்கள்) |
| | | திரு அடி சேர்ந்து | அந்தத் திருவடிகளைக் கிட்டி |
| | | ஒன்றுமின் | பொருந்தியிருக்கப் பாருங்கள். |

## நான்காம்பத்து பத்தாந்திருவாய்மொழி—ஒன்றுந்தேவுமுலகும்

உலகர் பெரும்பாலும் எம்பெருமானுடைய பரத்வத்தை அறியப்பெறாதவர்களாயும் தேவதாந்தரங்கள் பக்கலிலே வியாமோஹம் கொண்டவர்களாயும் காணப்படுகையாலே இவர்களுக்கு எம்பெருமானுடைய பரத்வத்தையும் இதர தெய்வங்களின் நிஹீநத்வத்தையும் நன்கு உணர்த்தினோமாகில் இவர்கள் திருந்தி ஸம்ஸாரம் அடியறக்கூடும் என்று திருவுள்ளம்பற்றி அங்ஙனே உபதேசித்தருளுகிறார் இத்திருவாய்மொழியாலே.

உலகத்தில் பலர் பல சாஸ்த்ரங்களையும் கற்றுவைத்தும் 'பரதத்துவமின்னது' என்று துணியமாட்டாமல் கண்ட தெய்வங்களின் காலிலும் குனிகின்றார்கள்; நம் எம்பெருமானுடைய திருவடி ஸம்பந்தம் பெற்றவர்கள் எத்தனையேனும் கல்வியறிவு இல்லாதவர்களாயிருந்தாலுங்கூட தேவதாந்தரங்களை அடுப்பிடுகல்லாக நினைத்திருப்பார்கள்; இதற்குக் காரணம்—பரமகாருணிகரான நம்மாழ்வார் * ஒன்றுந்தேவு மென்கிற இத்திருவாய்மொழியை அருளிச்செய்து வைத்ததேயாம்—என்று எம்பார் அருளிச்செய்வராம். (*)

3106. ஒன்றுந்தேவுமுலகுமுயிரும்மற்றும் யாதுமில்லா
வன்று*நான்முகன்தன்னொடு தேவருலகோடுயிர்படைத்தான்*
குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள்*
நின்றவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்நாடுதிரே. (௧)

| | | | |
|---|---|---|---|
| தேவும் | தேவர்களும் | படைத்தான் | படைத்தவனும் |
| உலகும் | அவர்களுக்கிருப்பிடமான உலகங்களும் | நின்ற | சாஸ்த்ரங்களில் நிலைத்திருப்பவனுமான |
| உயிரும் | மனிதர் முதலிய பிராணிகளும் | ஆதி பிரான் | ஆதிநாதனென்னும் எம்பெருமான் |
| மற்றும் யாதும் | மற்றுமுள்ள எல்லாமும் | குன்றம்போல் | மலைபோன்ற |
| ஒன்றும் இல்லா அன்று | சிறிதுமில்லாத அந்த ஊழிக்காலத்திலே | மணி மாடம் நீடு | திருமாளிகைகள் உயர்ந்திருக்கப்பெற்ற |
| நான்முகன் தன்னொடு | பிரமனையும் | திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே |
| தேவர் | தேவதைகளையும் | நிற்க | காட்சி தந்துகொண்டிருக்கும்போது |
| உலகு | உலகங்களையும் | மற்றை தெய்வம் | வேறு தெய்வங்களை |
| உயிர் | பிராணிகளையும் | நாடுதிர் ஏ | தேடியோடுகின்றீர்களே. |

* * *—ஸகலஜகத்காரணபூதனை ஸர்வேச்வரன் திருநகரியிலே எளியனாய்க் காட்சிதந்தருளாநிற்க, வேறு தெய்வத்தைத் தேடியோடுகிறீர்களே! இது என்ன அறிவு கேடு! என்று வெறுக்கிறார்.

திருக்குருகூர்—இது பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டில் ஒன்று: ஆழ்வார் திருநகரியென வழங்கப்படுவது. [Grantha text] (குருகாபுரீ] என்பது வடமொழி வழக்கு. (௧)

3107. நாடிநீர்வணங்குந்தெய்வமும் உம்மையும்முன்படைத்தான்*
வீடில்சீர்புகழாதிப்பிரான் அவன்மேவியுறைகோயில்*
மாடமாளிகைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை*
பாடியாடிப்பரவிச்சென்மின்கள் பல்லுலகீர்!பரந்தே. (௨)

| | |
|---|---|
| பல் உலகீர் | பலவகைப்பட்ட உலகர்களே! |
| நீர் நாடி வணங்கும் தெய்வமும் | நீங்கள் தேடி வணங்கும் படியாயுள்ள தேவதைகளையும் |
| உம்மையும் | உங்களையும் |
| முன் படைத்தான் | முன்னம் படைத்தவனும் |
| வீடு இல் சீர் | நித்யஸித்தங்களான திருக்குணங்களாலுண்டான |
| புகழ் | புகழையுடையவனுமான |
| ஆதிபிரான் அவன் மேவி | ஆதிநாதன் விரும்பி |
| உறை கோயில் | யெழுந்தருளியிருக்குமிடமான |
| மாடம் மாளிகை சூழ்ந்து அழகு ஆய திருகுருகூர் அதனை | மாடமாளிகைகளால் சூழப்பட்டு அழகு வாய்ந்த திருநகரியை |
| பாடி ஆடி | பாடுதலும் ஆடுதலும் செய்துகொண்டு |
| பரவி | துதித்து |
| பரந்து செல்மின்கள் | எல்லாவிடத்திலும் பரவி நடவுங்கள். |

* * *—உலகர்களே! நீங்கள் எந்த தெய்வங்களைப் பணிகின்றீர்களோ, அந்த தெய்வங்களோடு உங்களோடு ஒரு வாசியில்லை; நீங்கள் எப்படி கார்யபூதர்களோ அப்படியே அவர்களும் கார்யபூதர்களேயல்லது காரணபூதர்களல்ல; ஆகையாலே அவர்களை நீங்கள் ஆச்ரயிப்பதுபோல உங்களையும் அவர்கள் ஆச்ரயிக்கலாம். உங்களைக்காட்டிலும் அவர்களுக்குச் சிறிது ஞானமும் சக்தியும் ஏறியிருக்கிறது என்கிற இவ்வளவேயல்லது வேறொரு வாசியில்லைகிடீர்; உங்களோடு அவர்களோடு வாசியற அனைவர்க்கும் காரணபூதனை ஸ்ரீமந்நாராயணன் காட்சி தந்தருளுமிடமாகிய திருநகரியைப் பணியுங்கோளென்கிறார்.

3108. பரந்ததெய்வமும்பல்லுலகும்படைத்து அன்றுடனேவிழுங்கி*
கரந்துமிழ்ந்துகடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர்*
சிரங்களாலமரர்வணங்கும் திருக்குருகூரதனுள்*
பரன்திறமன்றிப்பல்லுலகீர்! தெய்வம்மற்றில்லைபேசுமினே. (௩)

| | |
|---|---|
| பரந்த | விஸ்தீர்ணமான |
| தெய்வமும் | தேவதாவர்க்கங்களையும் |
| பல் உலகும் | (அவர்களுக்குப்) பல உலகங்களையும் |
| படைத்து | ஸ்ருஷ்டித்தும், |
| அன்று | பிரளயம் வந்த காலத்திலே |
| உடனே விழுங்கி | எல்லாவற்றையும் ஒரு சேர விழுங்கி |
| கரந்து | உள்ளே யொளித்து வைத்தும், |
| உமிழ்ந்து | பிறகு வெளிப்படுத்தியும் |
| கடந்து | (மஹாபலியிடத்தில் தானம் பெற்று) அளந்து கொண்டும் |
| இடந்தது | (மஹாவராஹமாய்) இடந்தெடுத்தும் ஆக இப்படிச் செய்த காரியங்களை |
| கண்டும் | பிரமாணங்களாலே கண்டறிந்து வைத்தும் |
| தெளியகில்லீர் | தெளியமாட்டாத |
| பல் உலகீர் | பலவகைப்பட்ட உலகத்தவர்களே! |
| அமரர் | தேவர்கள் |
| சிரங்களால் வணங்கும் | தலையால் வணங்கப்பெற்ற |
| திரு குருகூர் அதனுள் | திருநகரியில் எழுந்தருளியிருக்கிற |
| பரன் | பரமபுருஷனுக்கு |
| திறம் அன்றி | பிரகாரமாயல்லது |
| மற்று | வேறு ஸ்வதந்திரமாயிருப்பதொரு |
| தெய்வம் இல்லை | தேவதை கிடையாது; |
| பேசுமின் | அப்படிப்பட்ட தேவதையொன்று உண்டாகில் சொல்லுங்கள். |

* * *—உலகங்களை ரக்ஷித்தருள்வதற்காக எம்பெருமான் செய்து போரும் செயல்களை ஆராய்ந்து பார்த்தாலும் இவனே பரமபுருஷனென்று அறியப்போதுமென்கிறார்.

எந்த தெய்வங்களை நீங்கள் சென்று பணிகின்றீர்களோ அந்த தெய்வங்களும் வந்து தலையாலே வணங்கும் திருக்குருகூரில் பரத்வம் பொலிய நிற்கும் பெருமானுக்குச் சரீரமல்லாத ஒரு தெய்வம் உண்டோ? * [Grantha text] என்னும்படியாகவன்றோ ஸகல தெய்வங்களுமிருக்கின்றன. ஸ்ரீமந்நாராயணனைப்போலே ஸ்வதந்த்ரமான தெய்வம் ஒன்றுண்டாகில் எடுத்துப் பேசுங்களென்றாராயிற்று. (௩)

**3109.** பேசநின்றசிவனுக்கும்பிரமன்தனக்கும் பிறர்க்கும்
நாயகனவனே*கபாலநன்மோக்கத்துக்கண்டுகொண்மின்*
தேசமாமதிள்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள்*
ஈசன்பாலோரவம்பறைதல் என்னாவதிலிங்கியர்க்கே? (௪)

| | | | |
|---|---|---|---|
| பேச நின்ற | உங்களால் பரதெய்வமாகப் பேசப்படுகின்ற | தேசம் | தேஜஸ்ஸு பொருந்திய |
| சிவனுக்கும் | ருத்ரனுக்கும் | மா | சிறந்த |
| பிரமன் தனக்கும் | (அவனது தந்தையான) பிரமனுக்கும் | மதிள் சூழ்ந்து | மதிள்களால் சூழப்பட்டு |
| பிறர்க்கும் | மற்றுமுள்ள தேவதைகளுக்கும் | அழகு ஆய | அழகு பெற்றதான |
| நாயகன் அவனே | தலைவன் ஸ்ரீமந்நாராயணனே என்னுமிடத்தை | திரு குருகூர் அதனுள் | திருநகரியில் எழுந்தருளியிருக்கிற |
| கபாலம் நல் மோக்கத்து | கபால மோக்ஷக் கதையினால் | ஈசன்பால் | ஸர்வேச்வரன் விஷயத்திலே |
| கண்டு கொண்மின் | தெரிந்துகொள்ளுங்கள்; | ஓர் அவம்பறைதல் | தப்பான பேச்சுக்களைப் பேசுவது |
| | | இலிங்கியர்க்கு | லிங்கப்ரமாண வாதிகளுக்கு |
| | | என் ஆவது | என்ன பலனைத்தரும்? |

* * *—அநுமானத்தாலே ஈச்வரனை ஸாதிக்க விரும்புமவர்களும் பசுபதியே ஸர்வேச்வரனென்று கூறுபவர்களுமான சிலரை இப்பாசுரத்தாலே நிராகரித்தருளுகிறார். இலிங்கியர்க்கு என்றது ஹேதுவாதிகளுக்கு என்றபடி; அநுமானத்தைக் கொள்பவர்களே ஹேதுவாதிகளாவர்கள். சப்த ப்ரமாணமான சாஸ்த்ரத்தின்முன்னே வேறு எந்தப்ரமாணமும் நிற்கமாட்டாதாகையாலே அந்த சாஸ்த்ர ப்ரமாண விருத்தமாக இலிங்கியர் பேசுவது பொருளற்றது என்று நிரூபிக்கிறார். இலிங்கியர்—லிங்க வாதிகள்; லிங்கமாவது ஹேது: அநுமானமென்கை. (௪)

**3110.** இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும்சாக்கியரும்*
வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந்தெய்வமுமாகிநின்றான்*
மலிந்துசெந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள்*
பொலிந்துநின்றபிரான்கண்டீர் ஒன்றும்பொய்யில்லைபோற்றுமினே. (௫)

| | | | |
|---|---|---|---|
| இலிங்கத்து இட்ட புராணத்தீரும் | லிங்கமாஹாத்மியவிஷயமாகக் கல்பிக்கப்பட்ட புராணத்தைப்பற்றினவர்களாயும் | பொலிந்து நின்ற பிரான் | பொலிந்து நின்ற பிரானென்கிற எம்பெருமானை |
| சமணரும் | ஜைநர்களாயும் | செந்நெல் | செந்நெற் பயிர்களானவை |
| சாக்கியரும் | பௌத்தர்களாயும் | மலிந்து | ஸம்ருத்திபெற்று |
| வலிந்து வாது செய்வீர்களும் | விதண்டாவாதம் செய்பவர்களாயுமிருக்கிற நீங்களாகவும் | கவரி வீசும் | சாமரை வீசப்பெற்ற |
| மற்றும் நும் தெய்வமும் ஆகி நின்றான் | தேவதாந்தரங்களாகவும் [இப்படி ஸர்வசரீரகனான] | திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே |
| | | கண்டீர் | ஸேவியுங்கோள்; |
| | | ஒன்றும் | எள்ளளவும் |
| | | பொய் இல்லை | அஸத்யமில்லை; |
| | | போற்றுமின் | துதியுங்கோள். |

* * *—லிங்கபுராணம் முதலாகச் சில குத்ருஷ்டி ஸ்ம்ருதிகளையும் பிரமாணமாகக்கொண்டு பேசவந்தவர்களை நிராகரித்தருளுகிறார்.

ஸர்வாந்தராத்மாவாக இருக்கும் ஸர்வேச்வரன் ப்ரத்யக்ஷபூதனல்லன் என்று கண்ணழிவு சொல்லவொண்ணாதபடி திருநகரியிலே ஸந்நிஹிதனாய், பரமபதத்திலுங் காட்டில் இங்கேதன் திருக்குணங்கள் நன்கு விளங்கப்பெற்றதனால் பொலிந்துநின்ற பிரானென்று திருநாமம் அணிந்து விளங்கும் பெருமானை ஸேவித்து, நாம் உபபாதிக்கும் எல்லாக்குணங்களையும் அந்தத் திருமூர்த்தியிலே அநுபவித்து மங்களாசாஸனம் பண்ணுங்கோளென்கிறார் பின்னடிகளால். (௫)

**3111.** போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டு*உம்மையின்னே
தேற்றிவைத்தது எல்லீரும்வீடுபெற்றால்உலகில்லையென்றே*
சேற்றில்செந்நெல்கமலமோங்கு திருக்குருகூரதனுள்*
ஆற்றவல்லவன்மாயம்கண்டீர் அதறிந்தறிந்தோடுமினே. (௬)

| | | | |
|---|---|---|---|
| மற்று ஓர் தெய்வம் | வேறொரு தேவதையை | இன்னே | இப்போது நீங்களிருக்கிற விதமாக |
| போற்றி | துதித்து | தேற்றி வைத்து | தேவதாந்தரங்களை நம்பும்படியாக (எம்பெருமான்) செய்து வைத்ததானது |
| பேண | ஆதரிக்கும்படியாக | | |
| புறத்து இட்டு | வேறுபடுத்தி | | |
| உம்மை | உங்களை | | |

| | |
|---|---|
| எல்லீரும் | (எதற்காகவென்றால்) எல்லாரும் |
| வீடுபெற்றால் | முக்தியடைந்தால் |
| உலகு இல்லை என்றே | புண்யபாப விஷயமான சாஸ்த்ரமரியாதை குலைந்து போகுமென்கிற காரணத்தாலேயாகும்; |
| சேற்றில் | சேற்று நிலத்தில் |
| செந்நெல் | செந்நெற் பயிர்களும் |
| கமலம் | தாமரையும் |
| ஓங்கு | ஓங்கி வளரப்பெற்ற |
| திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே எழுந்தருளியிருக்கின்ற |
| ஆற்ற வல்லவன் | பரம சக்தியுக்தனான பெருமானுடைய |
| மாயம் கண்டீர் | மாயையேயாமத்தனை; |
| அது | மாயையென்பதை |
| அறிந்து | தெரிந்துகொண்டு |
| அறிந்து | ‘அது தப்பும் வழி அவன் திருவடிகளைப் பற்றுவதே’ என்றும் தெரிந்துகொண்டு |
| ஓடுமின் | திருவடியே சென்று சேரப்பாருங்கள். |

* * *—ஸ்ரீமந்நாராயணனே ஸர்வேச்வரனாகில் அவன் தன்னையே ஆச்ரயிக்கும்படி எங்களைப் பண்ணாமல் இதர தெய்வங்களைத் தொழுமாறு எங்களைச் செய்துவைத்தது ஏன்? என்று சிலர் கேட்பதாகக்கொண்டு அவர்களுக்கு உத்தரமளிக்கும் பாசுரம் இது. உங்கள் பாபந்தான் அதற்குக் காரணம் என்று விடை கூறிற்றாகிறது.

இப்பாசுரத்தில் **எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லையென்றே** என்பதுதான் மருமமாகவுள்ளது. ஆபாதப்ரதீதியில் இதற்கு என்ன பொருள் தோன்றுமென்றால், எல்லாரும் ஸ்ரீமந்நாராயணனையே தொழப்பெற்றால், எல்லாருமே வீடுபெற்றுவிட்டால் லீலாவிபூதி அடியற்றுப் போய்விடும்; அங்ஙனம் போகாமைக்காகவே எம்பெருமான் உங்களை இதர தேவதாபஜநம் பண்ணி ஸம்ஸாரிகளாய்த் தொலைந்து போம்படி செய்துவைத்தான்—என்பதாகப் பொருள்தோன்றும். இப்படிப்பட்ட பொருள் எம்பெருமானுக்கு மிக்க அவத்யத்தை விளைக்குமதாகையாலே ஆழ்வார் இப்பொருள்பட அருளிச்செய்ய ப்ரஸக்தியில்லை; ஆறாயிரப்படி முதலிய வியாக்கியானங்களில் இங்ஙனே பொருள் நெஞ்சாலும் நினைக்கப்படவில்லை.

**உலகில்லையென்றே** என்றவிடத்தில் உலகு என்பதற்கு சாஸ்த்ரமர்யாதை என்று பொருள். அவரவர்கள் பண்ணின புண்யபாபரூப கருமங்களுக்குத் தக்கபடியே பலன் கொடுப்பதென்று ஒரு சாஸ்த்ரமரியாதை ஏற்பட்டிருக்கிறது; நீங்கள் முற்பிறவிகளில் பிரபலமான தீவினைகளைச் செய்திருந்தபடியால் அவற்றின் பலனாக இப்பிறப்பில் உங்களை க்ஷுத்ரதேவதாபஜநம் பண்ணும்படியாக உபேக்ஷித்திடலாயிற்று. கொடிய பாவங்கள் செய்த உங்களை புண்யாத்மாக்களைப்போலே ஸ்ரீமந்நாராயண ஸமாச்ரயணமே செய்யும்படி பண்ணிவிடுவதானால் அப்போது முன்சொன்ன சாஸ்த்ரமரியாதை அழிந்துவிடுமன்றோ. அங்ஙனம் அழியாமைக்காகவே உங்களை இங்ஙனே நிறுத்திவைத்தது—என்கை.

* மம மாயா துரத்யயா * என்று அவன்தானே கீதையில் சொல்லிவைத்தபடி தப்பவொண்ணாத இந்த மாயையை அவன் திருவடிகளைக் காட்டியே தப்பப்பாருங்களென்கிறார் பின்னடிகளில். (கூ)

3112. ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து மற்றோர்தெய்வம்
பாடியாடிப்பணிந்து* பல்படிகால் வழியேறிக்கண்டீர்*
கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள்*
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக்கு அடிமைபுகுவதுவே. (எ)

| | |
|---|---|
| ஓடி ஓடி | ஸம்ஸார சக்கரத்தில் ஓடியோடி |
| பல பிறப்பும் பிறந்து | பலபல யோனிகளிலே பிறந்து |
| பல் படிகால் | வம்ச பரம்பரையாக |
| மற்று ஓர் தெய்வம் வழி ஏறி | தேவதாந்தரங்களை அந்த நூல்களிலே சொல்லியிருக்கிறபடி |
| பாடிஆடி பணிந்து | பலபடியாக வழிபட்டு |
| கண்டீர் | பலன் கைபுகுந்தமை கண்டீர்களே; |
| வானவர் கூடி ஏத்த நின்ற | தேவர்கள் திரண்டு துதிக்கும்படி நின்ற |
| திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே எழுந்தருளியிருக்கின்ற |
| ஆடு புள்கொடி ஆதி மூர்த்திக்கு | ஆடுங்கருளக்கொடியுடைய ஆதிநாதப் பெருமானுக்கு |
| அடிமை புகுவது | அடியராயிருக்கத் தகுதி. |

* * *—தேவதாந்தரங்களை ஆச்ரயிப்பதனால் என்ன பலன் உண்டாகுமோ அது உங்களுக்கு இதுவரையில் தெரியாமையில்லை; இந்நாள்வரையிலே கைகண்ட பலன்தான் இனிமேலும் காணக்கடவதாயிருக்கும்; ஆனபின்பு கருளக்கொடியுடையானுக்கு அடிமை புகுவதுவே உறுவதென்கிறார்.

தேவதாந்தரபஜனத்தின் பலனை முன்னடிகளில் அருளிச்செய்கிறார். மற்றோர் தெய்வம் பாடியாடிப்பணிந்ததற்குப் பலன் ஓடியோடிப் பல பிறப்பும் பிறப்பதேயத்தனை என்றாராயிற்று.

நீங்கள் தொழுநிற்கிற தெய்வங்களும் வந்து தொழுது தத்தம் வாய்படைத்த பலன் பெறுமாறு தோத்திரம் செய்யுமிடமான திருக்குருகூரிலே ஸேவைஸாதிக்கின்ற பறவையேறு பரம்புருடனுக்கு அடிமை செய்வதே ஸ்வரூபப்ராப்தமென்றாராயிற்று.

**ஆடுபுள்**=‘ஆடு’ என்று வெற்றிக்கும் பெயராதலால் வென்றிக்கருடன் என்னவுமாம். (எ)

3113. புக்கடிமையினால்தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை*
நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே*

கொக்கலர்தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள்*
மிக்கவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்விளம்புதிரே. (அ)

| | | | |
|---|---|---|---|
| அடிமையினல் புக்கு தன்னை கண்ட | அடிமை செய்து உள் புகுந்து தன்னைக் காணப்பெற்ற | கொக்கு அலர் | கொக்குப்போலே வெண்ணிறமாக அலர்கின்ற |
| மார்க்கண்டேய்னவனை | மார்க்கண்டேயனென்று ப்ரஸித்தனானவனை | தட தாழை | பெரிய தாழைகளை |
| அன்று | அக்காலத்தில் | வேலி | வேலியாகவுடைய |
| நக்கபிரான் | திகம்பரச்சாமியான ருத்ரன் | திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே |
| உய்யக் கொண்டதும் | ரக்ஷித்ததும் | மிக்க | மேம்பாடுடைய |
| நாராயணன் அருளே | நாராயணனுடைய அருளின் பயனேயாகும்; | ஆதி பிரான் நிற்க | ஆதிநாதப் பெருமானிருக்க |
| | | மற்று தெய்வம் விளம்புதிர் | வேறு எந்த தேவதைகளை பேசுகிறீர்கள்? |

* * *—மார்க்கண்டேயன் ருத்ரனை ஆராதித்துத் தன் அபேக்ஷிதம் பெற்றானே யென்று சிலர் சொல்ல, அந்தக்கதையின் மருமமும் கேட்கலாகாதோவென்கிறார்.

சிவபிரான் மார்க்கண்டேயனுக்கு அருள் செய்தது திருமாலினருளால் தான் பெற்ற சக்தியினாலேயென்பதும், அச்சிவபிரானுக்கு அந்தராத்மாவாய் நின்று தொழில் செய்தவன் ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணனே என்பதுமாகிய உண்மை உணரத்தக்கது. சில புராணங்களில் மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது பரமசிவனே மார்க்கண்டேயனுக்கு அபயமளித்ததாகக் காணப்படினும், மஹாபாரதத்தில் ஆரண்ய பருவத்தில் நூற்றுத் தொண்ணூற்றிரண்டா மத்யாயத்தில் மார்க்கண்டேயன் தானே தருமபுத்திரரை நோக்கிச் சொல்லுமளவில் ஸ்ரீமந்நாராயணனுடைய வார்த்தைகளை அநுவதிக்குமிடத்து, *[illegible] பித்ருபக்தோஸி விப்ரர்ஷே! மாஞ்சைவ சரணம் கதঃ* என்றுள்ள ச்லோகத்தினால் இவன் ஸ்ரீமந்நாராயணனை சரணம் புகுந்தவனென்பது நன்கு விளங்கும்,

ஸ்ரீ பாகவதத்திலும் பன்னிரண்டாம் ஸ்கந்தத்தில் எட்டாமத்தியாயத்தில் *[illegible]—ஆராதயந் ஹ்ருஷீகேசம் ஜிக்யே ம்ருத்யும் [illegible]துர்ஜயம் * [ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்து வெல்லவொண்ணாத யமனைவென்றொழித்தான்] என்று ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று. (அ)

3114. விளம்புமாறுசமயமும் அவையாகியமற்றும்தன்பால்*
அளந்துகாண்டற்கரியனாகிய ஆதிப்பிரானமரும்*
வளங்கொள்தண்பணைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை*
உளங்கொள்ஞானத்துவைம்மின் உம்மையுய்யக்கொண்டுபோகுறிலே. (௯)

| | | | |
|---|---|---|---|
| விளம்பும் | கண்டபடி சொல்லுவது தவிரப் பொருட் பொருத்தம் சிறிது மில்லாதவைகளான | அமரும் | நித்யவாஸம் பண்ணுமிடமாய் |
| ஆறு சமயமும் | ஆறுவகைப்பட்ட பாஹ்ய மதங்களும் | வளம் கொள் தண் பணை சூழ்ந்து அழகு ஆய | வளம் மிக்க குளிர்ந்த நீர் நிலங்களாலே சூழப்பட்டு அழகியதான |
| அவை ஆகிய | அந்த பாஹ்யமதங்கட்குப் பரியாயமான | திரு குருகூர் அதனை | திருநகரியை, |
| | | | (நீங்கள்) |
| மற்றும் | குத்ருஷ்டி மதங்களும் | உம்மை | உங்களை |
| தன்பால் | தன் விஷயத்திலே | உய்யக் கொண்டு போகுறில் | உஜ்ஜீவிப்பித்துக்கொண்டு நடக்கவேண்டி யிருந்தீர்களாகில் |
| அளந்து காண்டற்கு அரியன் ஆகிய | எல்லை காணவொண்ணாதவனாயிருக்கிற | உளம் கொள் ஞானத்து | அந்தரங்க ஜ்ஞானத்துக்குள்ளே |
| ஆதி பிரான் | ஸகல ஜகத்காரணபூதனான ஸர்வேச்வரன் | வைம்மின் | வைத்துச் சிந்தனை செய்யுங்கள். |

* * *—வேதபாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் பண்ணுகின்ற துஸ்தர்க்கங்களால் அழிக்கவொண்ணாத ஐச்வர்யத்தையுடையனான எம்பெருமானெழுந்தருளியிருக்கிற திருநகரியை ஆச்ரயியுங்கோள் பிழைக்கவேண்டியிருந்தீர்களாகில் என்கிறார்.

விளம்பும் ஆறு சமயமும் = சாக்ய, உலூக்ய, அக்ஷபாத, க்ஷபண, கபில, பதஞ்சலி மதங்கள் எனப்படுகிற ஆறும் பாஹ்யஸமயங்களாம்; சாக்யர்—பௌத்தர்; உலூக்யர்—சார்வாகர்; அக்ஷபாதரென்று கௌதமரைச் சொல்லி நையாயிக வைசேஷிகர்களை நினைக்கிறது. க்ஷபணர்—ஜைநர்.

அவையாகிய மற்றும் = மற்றும் அவற்றோடொத்த குத்ருஷ்டிகளும் என்றபடி. "அவையாகியும்" என்பது பன்னீராயிரப்படி யுரைக்கு மாத்திரம் பாடம். (௯)

**3115.** உறுவதாவதெத்தேவும் எவ்வுலகங்களும்மற்றும்தன்பால்*
மறுவில்மூர்த்தியோடொத்து இத்தனையும்நின்றவண்ணம்நிற்கவே*
செறுவில்செந்நெல்கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள்*
குறியமாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே. (௧௦)

| | |
|---|---|
| எத்தேவும் | எல்லாத் தேவதைகளும் |
| எ உலகங்களும் | எல்லாவுலகங்களும் |
| மற்றும் | மற்றுமுண்டான சேதநா சேதநங்களுமாகிய |
| இத்தனையும் | இவையடங்கலும் |
| தன்பால் | தன்னுடையதான |
| மறுஇல் மூர்த்தியோடு ஒத்து | நிஷ்கலங்கமான அஸாதாரண விக்ரஹம் போன்று [ஸகலவிதத்தாலும் விதேயங்களாகி யென்றபடி] |
| நின்றவண்ணம் நிற்க | குறையற நிற்குமிருப்பிலே— |
| செறுவில் | விளைநிலங்களில் |
| செந்நெல் | செந்நெற் பயிர்களும் |
| கரும்பொடு | கருப்பஞ் சோலைகளும் |
| ஓங்கு | வளரும்படியான |
| திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே |
| குறிய மாண் உரு ஆகிய | வாமநப்ரஹ்மசாரி வேஷமெடுத்தவனும் |
| நீள் குடக்கூத்தனுக்கு | (க்ருஷ்ணனைப்) பெரிய குடக்கூத்தாடினவனுமான பெருமானுக்கு |
| ஆள் செய்வதே | அடிமை செய்வதே |
| உறுவது ஆவது | உற்றதாம். |

* * *—பாட்டினடியிலுள்ள உறுவதாவது என்பதை, முடிவிலுள்ள ஆட்செய்வதே என்பதனோடு கூட்டுக; ஆட்செய்வதே உறுவதாவது என்றபடி. எத்தேவும் எவ்வுலகங்களும் மற்றும் இத்தனையும் தன்பால் மறுவில் மூர்த்தியோடொத்து இத்யாதி. இந்திரன் சந்திரன் குபேரன் என்று சொல்லப்படுகிற ஸகல தேவதாவர்க்கமும், ஸமஸ்தலோகங்களும், மற்றுமுண்டான சேதநாசேதநவர்க்கமுமான இவையித்தனையும் தன்னுடைய அஸாதாரண விக்ரஹம்போலே தனக்கு விதேயமாயிருக்கும்படியாகப் பெற்ற எம்பெருமான் திருக்குருகூரிலே நின்றருளுகிறுகையாலே அவனுக்கு ஆட்செய்வதே உறுவது என்றபடி.

**3116.** ஆட்செய்தாழிப்பிரானைச்சேர்ந்தவன் வண்குருகூர்நகரான்*
நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன் மாறன்சடகோபன்*
வேட்கையால்சொன்னபாடல் ஆயிரத்துளிப்பத்தும்வல்லார்*
மீட்சியின்றிவைகுந்தமாநகர் மற்றதுகையதுவே. (௧௧)

| | |
|---|---|
| ஆள் செய்து | (உபதேச முகத்தாலே ஸம்ஸாரிகளைத் திருத்திப்பணி கொள்ளுகையாகிற) கைங்கரியத்தைப் பண்ணி |
| ஆழி பிரானை சேர்ந்தவன் | ஆழியங்கையனை பெருமானை அடைந்தவரும் |
| வண் குருகூர் நகரான் | திருநகரிக்குத் தலைவரும் |
| நாள் கமழ் மகிழ் மாலை மார்பினன் | பரிமளம் மாருத மகிழ் மாலையைத் திருமார்பிலே அணிந்தவருமான |
| மாறன் சடகோபன் | ஆழ்வார் |
| வேட்கையால் | ஆதரத்தோடு |
| சொன்ன | அருளிச் செய்ததான |
| பாடல் ஆயிரத்துள் | ஆயிரம் பாட்டினுள்ளே |
| இ பத்தும் | இப்பதிகத்தை |
| வல்லார் | ஓதவல்லவர்களுக்கு |
| மீட்சி இன்றி | மீண்டும் திரும்புதலில்லாத |
| வைகுந்தம் மாநகர் மற்றது | ஸ்ரீ வைகுண்ட மஹாநகரமாகிய அவ்விடம் |
| கையது | கரஸ்தம். |

* * *—இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டும் பாசுரம் இது. [**ஆட்செய்து ஆழிப்பிரானைச்சேர்ந்தவன்**] ஆட்செய்கையாவது கைங்கரியம் பண்ணுதல்; இது மானஸிகமென்றும் வாசிகமென்றும் காயிகமென்றும் மூவகைப்பட்டிருக்கும். இங்கு வாசிககைங்கரியம் கொள்ளத்தகும். செவிக்கினிய செஞ்சொற்களைப் பாடுவதே கைங்கரியமாகும் எம்பெருமான் கையுந்திருவாழியுமான அழகைக்காட்டித் தம்மை ஆட்படுத்திக் கொண்டானென்பது தோன்ற **ஆழிப்பிரானை** என்றார்.

இந்த நன்மைக்கு அடி நல்லார்நவில் குருகூரிலே பிறப்பு, என்பது தோன்ற **வண்குருகூர் நகரான்** என்கிறார்.

"வைகுந்தமாநகர்மற்றது" என்றவிடத்தில் மற்று என்பது அசைச்சொல்லாய் வைகுந்தமாநகராகிற அவ்விடம் என்று பொருள்படும்; அன்றியே, வைகுந்தமாநகராகிய நித்யவிபூதியும் மற்றதாகிய லீலாவிபூதியும் என்றும் பொருள் கொள்ளலாம். உபயவிபூதி ஸாம்ராஜ்யமு முண்டாகுமென்று பலன் சொல்லிற்றாயிற்று. (௧௧)

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திருவாய்மொழி யுரையில் நான்காம்பத்து முற்றுப்பெற்றது.

கறங்குசக்கரக்கைக் கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
இறங்கிநீர்தொழுதுபணியீர் அடியேனிடரே. (௩)

| | |
|---|---|
| திறங்கள் ஆகி | திரள் திரளாக |
| எங்கும் | பார்த்தவிடமெல்லாம் |
| செய்களூடு | விளைநிலங்களிலே |
| உழல் | உலாவுகின்ற |
| புள் இனங்காள் | பறவைக் கூட்டங்களே! |
| சிறந்த செல்வம் மல்கு | உயர்ந்த ஐச்வரியம் விஞ்சியிருக்கிற |
| திருவண்வண்டூர் | திருவண்வண்டூரிலே |
| உறையும் | நித்யவாஸம் பண்ணுமவனும் |
| கறங்கு சக்கரம் கை | சுழன்று வருகிற திருவாழியைக் கையிலேயுடையவனும் |
| கனி வாய் | கனிபோன்ற அதரத்தையுடையவனுமான |
| பெருமானை கண்டு | எம்பெருமானை ஸேவித்து |
| நீர் இறங்கி தொழுது அடியேன் இடர் பணியீர் | நீங்கள் தாழ்ந்து தொழுது அடியேன் படுகிற கஷ்டத்தைச் சொல்லுங்கள். |

*** பக்ஷிகள் கூட்டங்கூட்டமாக உலாவுவது வழக்கம். அங்ஙனே கூட்டமாக அவை இருப்பது தன் காரியம் செய்தற்காகவேயென்று பராங்குச நாயகியின் கருத்துப் போலும். அவை செய்களூடு உழல்வது தங்கட்கு இரை தேடுகைக்காகவாகிலும், தலைவி தான் ஈடுபட்டிருக்கிற எம்பெருமானைத் தேடிக்கொண்டு அவை உழல்கின்றனவாகக் கருதி, பறவைகாள்! செய்களூடு எதற்காக உழல்கின்றீர்கள்? எனக்காக நீங்கள் தேடும் எம்பெருமான் திருவண்வண்டூரிலன்றோ உறைகின்றான் என்கிறாள். அவன் உன்னை மறந்து அங்கே உறைவதற்கு யாதுகாரணம்? என்று பறவைகட்கு நினைவாக, "சிறந்த செல்வம்மல்கு திருவண்வண்டூர்" என்கிறாள். அத்தலத்துள்ள செல்வச்சிறப்பானது அவனை அங்கே கால்தாழப் பண்ணிற்று என்றவாறு. (௩)

3230 இடரில்போகம்மூழ்கி இணைந்தாடும்மடவன்னங்காள் *
விடலில் வேதவொலிமுழங்கும் தண்திருவண்வண்டூர் *
கடலமேனிப்பிரான் கண்ணனைநெடுமாலைக்கண்டு *
உடலம்நைந்தொருத்தி உருகுமென்றுணர்த்துமினே. (௪)

| | |
|---|---|
| இடர் இல் போகம் மூழ்கி | பிரிந்துபடும் துக்கமில்லாத இன்பத்திலே அவகாஹித்து |
| இணைந்து ஆடும் மடம் அன்னங்காள் | கலந்து வாழ்கின்ற மடமை தங்கிய அன்னங்களே! |
| விடல் இல் வேதம் ஒலி முழங்கும் தண் திருவண்வண்டூர் | இடைவீடில்லாத வேதகோஷம் நிரம்பிய குளிர்ந்த திருவண்வண்டூரிலே |
| கடல மேனி பிரான் கண்ணனை நெடுமாலை கண்டு | கடல்போன்ற திருமேனியையுடையவனும் மஹோபகாரகனும் ஆச்ரித ஸுலபனுமான ஸர்வேச்வரனைக் கண்டு |
| ஒருத்தி | ஒரு பெண்பிள்ளை |
| உடலம் நைந்து | சரீரம் தளர்ந்து |
| உருகும் என்று | உருகாநின்றாள் என்று |
| உணர்த்துமின் | அறிவியுங்கள்!. |

*** ஒரு நொடிப்பொழுதும் பிரியாமே இடைவீடின்றிக் கலந்து வாழ்கின்ற அன்னப்பறவைகளை நோக்கி, திருவண்வண்டூரிலே நிரந்தரமாக நடைபெறும் வேதவொலியைத் திருச்செவி சாத்திக்கொண்டு அங்கே கால்தாழ்ந்து வர்த்திக்கிற கடல் வண்ணனை பெருமானைக்கண்டு என்பேரைச்சொல்லாதே ஒருத்தி உடல்நைந்து உருகுகின்றாளென்று சொல்லுங்கோளென்கிறாள். (௪)

3231 உணர்த்தலூடலுணர்ந்து உடன்மேயும்மடவன்னங்காள் *
திணர்த்தவண்டல்கள்மேல் சங்குசேருந்திருவண்வண்டூர் *
புணர்த்தபூந்தண்டுழாய்முடி நம்பெருமானைக்கண்டு *
புணர்த்தகையினராய் அடியேனுக்கும்போற்றுமினே. (௫)

| | | | |
|---|---|---|---|
| ஊடல் உணர்த்தல் உணர்ந்து | (பிரிவு சிறிது உண்டானாலும்) ஊடலும் உணர்த்தலுமாகிய சிரமங்கள் நேருமென்றறிந்து | புணர்த்த பூ தண் துழாய் முடி | தொடுக்கப்பட்ட அழகிய செவ்வித்துழா யணிந்த திருவபிஷேகத்தையுடையனை |
| உடன் மேயும் | கணப்பொழுதும் விட்டுப்பிரியாமல் கூடவே திரிகின்ற | நம் பெருமானை கண்டு | நமது ஸ்வாமியைக் கண்டு |
| மடம் அன்னங்காள் துவண்ட அன்னங்களே! | | புணர்த்த கையினர் ஆய் | கைகூப்பினவர்களாய்க் கொண்டு |
| திணர்த்த வண்டல்கள் மேல் | கொழுத்த வண்டல் மணல்களின் மேலே | அடியேனுக்கும் | அடியேனுக்காகவும் |
| சங்கு சேரும் | சங்குகள் சேருமிடமான | போற்றுமின் | அத்தலைக்கு மங்களாசாஸனம் பண்ணுங்கோள். |
| திரு வண்வண்டூர் | திருவண்வண்டூரிலே | | |

* * * இப்பாட்டின் ஈட்டில்— "ஹோம (போக) ப்ரகாரந்தான் மூன்றுவகைப்பட்டாயிற்றிருப்பது; அவையாவன-* ஊடலுணர்தல் புணர்தலிவைமூன்றும், காமத்தாற்பெற்ற பயன் * என்று மூன்றையும் பிரயோஜனமாகச்சொன்னார்கள் தமிழர்; இதிலே ஊடலாவது— எதிர்த்தலையோடே கூடினால் அஹேதுகமாக விளைவதொன்று. அதுதான் 'என்னையொழியக் குளித்தாய், என்னையொழியப் பூவைப்பார்த்தாய்; உன் உடம்பு பூநாறிற்று' என்றாற்போலே வருமவை. உணர்(த்)தலாவது— 'உனக்கென்று குளித்தேன்' என்கையும் 'உனக்கு ஆம்' என்று பார்த்தேன் என்கையும் 'உன்வரவுக்கு ஒப்பித்தேன்' என்றாற்போலே சொல்லுமிவை. இவையிரண்டின் அனந்தரத்தே வருவது கலவி" என்றருளிச்செய்யப்பட்டுள்ளது. இந்த ஸ்ரீஸூக்தியில் உதாஹரிக்கப்பட்டுள்ள தமிழ்ச் செய்யுள் திருவள்ளுவர் குறள். அது "ஊடலுணர்தல் புணர்தலிவை காமம்—கூடியார்பெற்றபயன்" என்னும் பாடமாகவே குறளிற் காண்கிறது. [புணர்ச்சிமகிழ்தல் என்ற அதிகாரத்தில் ஒன்பதாவது குறள் இது.] உணர்தல் என்பதற்கு—'தலைமகன் தன்னுடைய தவறில்லாமையைச்சொல்லி நாயகியினுடைய ஊடலை நீக்குதல்' என்று பொருளுரைக்கப்பட்டிருக்கின்றது. உணர்த்தல், உணர்தல் இவையிரண்டும் இங்குப் பரியாயமே யென்க. மூலத்தில் "உணர்த்தலூடலுணர்ந்து" என்றிருந்தாலும் பாடக்ரமத்திற்காட்டிலும் அர்த்தக்ரமம் வலிது என்ற நியாயத்தினால் "ஊடல் உணர்த்தல் உணர்ந்து" என்று அடைவுபடுத்திக்கொள்ளலாம். ஊடல் உண்டான பிறகே உணர்த்தல் நேருமாதலால் அதற்குச் சேர இங்ஙனம் கொள்ளக்கடவது. ஊடல் என்கிற ப்ரணய ரோஷமும் அதற்குப்பரிஹாரமான உணர்த்தலும் நேருவதற்குப் பிரிவுகாரணமாகும்; பிரிவின்றிக்கே கூடியேயிருந்துவிட்டால் அவை நேரமாட்டா. ஆகவே, நாம் பிரியவும் வேண்டா, பிரிந்து ஊடலுணர்த்தல் ஆயாஸங்களை அநுபவிக்கவும் வேண்டா என்று கொண்டு கூடியேயிருக்கின்ற அன்னங்களே! என்றதாயிற்று.

புணர்த்த பூந்தண்டுழாய்முடி யென்றது—அப்பெருமான் ஆச்ரிதரக்ஷணத்திற்கென்றே தனி மாலை முடிசூடியிருத்தலால் நீங்கள் கூசாதேசென்று காணலாமென்று காட்டுகிறபடி. "அடியேனுக்கும் போற்றுமினே" என்கிற விப்பாசுரம் திவ்யதேச யாத்திரை செல்கின்றவர்களனைவரையும் நோக்கி அந்த பாக்கியமில்லாதவர்கள் சொல்லுதற்குரியது, தேவரீர்கள் திவ்யதேசங்களிலே சென்று ஸேவிக்கும்போது அடியேனுக்காகவும் ஸேவிக்கவேணுமென்கிற பாவனை. (ரு)

3232 போற்றியானிரந்தேன் புன்னைமேலுறைபூங்குயில்காள் !*
சேற்றில்வாளைதுள்ளும் திருவண்வண்டூருறையும் *
ஆற்றலாழியங்கை அமரர்பெருமானைக்கண்டு *
மாற்றங்கொண்டருளீர் மையல்தீர்வதொருவண்ணமே. (சு)

| | |
|---|---|
| புன்னை மேல் உறை பூ குயில்காள் | புன்னைமரங்களின் மேலே வாழ்கிற அழகிய குயில்களே ! |
| யான் போற்றி இரந்தேன் | அடியேன் துதித்து வேண்டுகின்றேன்; |
| வாளை சேற்றில் துள்ளும் திருவண்வண்டூர் உறையும் | வாளை மீன்களானவை சேற்று நிலங்களிலே களித்து உகளப்பெற்ற திருவண்வண்டூரிலே வாழ்பவனும் |
| ஆற்றல் ஆழி அம் கை | சக்திமிகுந்த திருவாழியை அழகிய கையிலே உடையவனுமான |
| அமரர் பெருமானை கண்டு | தேவாதிதேவனைக் கண்டு |
| மையல் தீர்வது ஒரு வண்ணம் | என்னுடைய வியாமோஹம் தீரும்படியான |
| மாற்றம் கொண்டு அருளீர் | ஒரு நல்லவார்த்தை கொண்டு வந்து உதவவேணும். |

* * * சில குயில்களைக்குறித்து, திருவண்வண்டூரிலே சென்று எம்பெருமானைக் கண்டு எனக்குள்ள நிலைமையை அறிவித்து அத்தலையில் நின்றும் ஒருவார்த்தை கொண்டுவந்து எனக்குரைத்து என் மையலைத் தீர்க்கவேணுமென்று இரக்கிறாள். போற்றி என்பதை "போற்றியாம் வந்தோம்" என்றவிடத்திற்போல வினையெச்சமாகக்கொண்டால் 'மங்களாசாஸனம் பண்ணி' என்று பொருளாய், மேலே இரந்தேனென்பதில் அந்வயிக்கிறது. அங்ஙனன்றிக்கே *அன்றிவ்வுலகமளந்தாயடி போற்றி * என்றவிடத்திற்போலே கொண்டால் 'மங்களமுண்டாகுக' என்று பொருள்பட்டுத் தனியேநிற்கும். வடமொழியில் 'ஸ்வஸ்தி' என்று முதலிட்டுப்பேச ஆரம்பிப்பது போலாமிது. யான் இரந்தேன் = தூது போகவேணுமென்று இரப்பவன் அவனென்று ஸ்ரீராமாயணாதிகளில் ப்ரஸித்தமாயிருக்க, இப்போது நான் இரக்கும்படியாவதே! என்கிற அவஸாதம் தோன்றும். புன்னைமேலுறை பூங்குயில்காள்! = "வளர்த்ததனால் பயன் பெற்றேன்" என்னும்படியாக ஆசிரியர் பக்கலிலேயே வளருமவர்கள் (ஸ்வாபதேசத்தில்) குயிலாகச் சொல்லப்படுவர்கள். *வநப்ரியः பரப்ருதः கோகிலः பிகः— வநப்ரிய : பரப்ருத : கோகில : பிக: * என்கிற அமரகோசத்தின்படி குயில்களுக்கு வடமொழியில் பரப்ருத மென்றுபெயர்; காக்கையின் கூட்டிலே கொண்டுவிடப்பெற்று அவற்றால் போஷிக்கப்பட்டு வளருமவை என்றபடி: அதுபோலே பரனை ஆசார்யனால் போஷிக்கப்பட்டு வளரும் குருகுலவாஸிகளைச் சொல்லிற்றாகிறது. (௬)

3233 ஒருவண்ணஞ் சென்றுபுக்கு எனக்கொன்றுரையொண்கிளியே !*
செருவொண்பூம்பொழில்சூழ் செக்கர்வேலைத்திருவண்வண்டூர் *
கருவண்ணஞ்செய்யவாய் செய்யகண்செய்யகைசெய்யகால் *
செருவொண்சக்கரஞ்சங்கு அடையாளம்திருந்தக்கண்டே. (௭)

| | |
|---|---|
| ஒண் கிளியே | அழகிய கிளியே! |
| செரு ஒண் பூ பொழில் சூழ் | ப்ரணயகலஹாஸ்பதமான அழகிய பூஞ்சோலைகளாலே சூழப்பட்டதும் |
| செக்கர் வேலை | செந்நிறமான பக்கப் பிரதேசங்களை யுடையதுமான |
| திருவண்வண்டூர் | திருவண்வண்டூரிலே |
| ஒரு வண்ணம் சென்று புக்கு | ஒருவிதமாகச் சென்று புகுந்து |
| கரு வண்ணம் | கரிய வடிவமும் |
| செய்ய வாய் செய்ய கண் செய்ய கை செய்ய கால் செரு ஒண் சக்கரம் சங்கு | சிவந்த அதரமும் சிவந்த திருக்கண்களும் சிவந்த திருக்கைகளும் சிவந்த திருவடிகளும் போர்க்களத்திலே ஒண்மை பெற்று விளங்குகிற சக்கரமும்(கையை விட்டு அகலாத) சங்குமான |
| அடையாளம் | லக்ஷணங்களை |
| திருந்த கண்டு | நன்றாகப் பார்த்து |
| எனக்கு ஒன்று உரை | எனக்காக வொரு வார்த்தை சொல்லு. |

* * * ஒரு கிளியை விளித்து அவனுடைய அடையாளங்களைச் சொல்லி இவ்வடையாளப்படியே அவனை அழகிதாகக்கண்டு எனக்காக அவனுக்கொரு வார்த்தை அறிவிக்கவேணுமென்கிறாள். ஒரு வண்ணம் சென்றுபுக்கு = இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி:— "இதுக்கு இரண்டுபடியாக அருளிச்செய்வர்; இத்தலையில் தனிமை நினையாதே போய்நிற்கையாலே போர முதலி

களாயிருப்பர்; மேன்மேலனப் பிரம்புகள் விழும்; அத்தைப்பொறுத்துப் போய்ப் புகுங்கோள். அன்றியே, வழி நெஞ்சையபஹரிக்கும் போக்யதையையுடைத்து; அதில் கால்தாழாதேவருந்தி ஒருபடி சென்றுபுக்கு.'' என்பதாம். எம்பெருமான் ஸௌசீல்யமே வடிவெடுத்தவனாயினும் பரத்வம் பாராட்டி நிற்பது முண்டாகையாலே அதற்கேற்ப அருகே அணுகவொண்ணாதபடி நேரவுங்கூடும்; அப்படி நேர்ந்தாலும் அதை ஒருவாறு ஸஹித்துக்கொண்டு உள்ளே புகுங்கோள் என்பது முதற்பொருள். மலைநாடாகையாலே வழியெல்லாம் பூவியல் பொழிலும் தடமுமாயிருக்கும்; அவற்றிலே கண் செலுத்தினால் ஆங்காங்கு லயிக்கவேண்டிற்றாகுமேயல்லது எம்பெருமானிடம் சென்று சேரமுடியாது; ஆகவே வழியில் கண் செலுத்தாதே ஒருவாறு வழியைக்கடந்து போங்கள் என்பது இரண்டாவது பொருள். "சொல்லிற்றுச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை" என்னுமாபோலே * முன்னோர் மொழிந்தமுறை தப்பாமற்கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப்பேசும் ஏககண்டர்களான ஆசிரியர்களைக் கிளி யென்கிறது. (எ)

3234 திருந்தக்கண்டெனக்கொன்றுரையாய் ஒண்சிறுபூவாய் !*
செருந்திஞாழல்மகிழ் புன்னைசூழ்தண்திருவண்வண்டூர் *
பெருந்தண்டாமரைக்கண் பெருநீண்முடிநால்தடந்தோள் *
கருந்திண்மாமுகில்போல் திருமேனியடிகளையே. (அ)

| | |
|---|---|
| ஒண் சிறு பூவாய் | அழகிய சிறிய வடிவை யுடைய பூவையே ! |
| செருந்தி ஞாழல் மகிழ் புன்னை சூழ் | சுரபுன்னை, ஞாழல், மகிழமரம், புன்னை மரம் ஆகிய இவற்றால் சூழப்பட்ட |
| தண் திருவண் வண்டூர் | குளிர்ந்த திருவண்வண்டூரிலே (எழுந்தருளியிருக்கின்ற) |
| பெரு தண் தாமரை கண் | பெரிய தண்டாமரை போன்ற திருக்கண்களையுடையவரும் |
| பெரு நீள் முடி | மிகப்பெரிய திருவபிஷேகத்தையுடையவரும் |
| நால் தட தோள் | நான்கு தடந்தோள்களையுடையவரும் |
| கரு திண் மா முகில் போல் திரு மேனி | கறுத்துத் திண்ணிய மஹாமேகம் போன்ற திருமேனியையுடையவருமான |
| அடிகளை | ஸ்வாமியை |
| திருந்த கண்டு | நன்றாக ஸேவித்து |
| எனக்கு ஒன்று உரையாய் | எனக்கொரு வார்த்தை சொல்லவேணும். |

* * * திருவண்வண்டூரிலே சென்று அங்குறையும் எம்பெருமானுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்தை நன்றாகக் கண்டு மீண்டுவந்து எனக்கொன்று சொல்லவேணுமென்று பூவைப்பறவையைக்குறித்துச் சொல்லுகிறாள். காண்பது இரண்டு விதம்; தன் மனத்துக்கு மாத்திரம் தெரிந்ததாம்படி காண்கை ஒன்று; பிறர்க்கும் விசதமாகச் சொல்லலாம்படி காண்கை மற்றொன்று. இங்கே திருந்தக்கண்டு என்றது—ஏதோ சாதாரணமாகக்கண்டு விடுகையன்றிக்கே எனக்கு விசதமாகச் சொல்லலாம்படி காணவேணுமென்றவாறு. எதைக்காண்பது? என்ன; திருக்கண் திருவபிஷேகம் திருத்தோள்கள் திருமேனி ஆகிய இவற்றைக்கண்டு அவற்றிலுள்ள அதிசயங்களை வந்து சொல்லவேணுமென்கிறாள். தூதர் செய்யவேண்டிய காரியங்களில் இதுவும் ஒன்றேயாம்; இதனாலும் தலைவிக்குத் தரிப்பு உண்டாகுமென்க. அடிகள் என்று ஸ்வாமிக்கு வாசகம். (அ)

3235 அடிகள்கைதொழுது அலர்மேலசையுமன்னங்காள் *
விடிவைசங்கொலிக்கும் திருவண்வண்டூருறையும் *
கடியமாயன்தன்னைக் கண்ணனைநெடுமாலைக்கண்டு *
கொடியவல்வினையேன்திறம் கூறுமின்வேறுகொண்டே. (கூ)

| | |
|---|---|
| அலர்மேல் அசையும் அன்னங்காள் | பூவின் மேலேயிருந்து உலாவுகின்ற அன்னங்களே! |
| விடிவை | ஸுப்ரபாதகாலத்திலே |
| சங்கு ஒலிக்கும் | சங்கு முழங்கப்பெற்ற |
| திருவண்வண்டூர் | திருவண்வண்டூரிலே |
| உறையும் | எப்போதும் வாழ்கின்ற |
| கடிய மாயன் தன்னை | கடுமையான மாயச் செயல்களையுடையனாய் |
| கண்ணனை | அடியார்களுக்கு விதேயனாய் |
| நெடு மாலை | அடியார்பக்கலிலே மிகவும் வியாமோஹமுடையவனாயிருக்கிற எம்பெருமானை |
| கண்டு | சேவித்து |
| அடிகள் கை தொழுது | திருவடிவாரத்திலே அஞ்ஜலி பண்ணி |
| கொடிய வல் வினையேன் திறம் | மிகக்கொடிய பாபத்தையுடையேனான என் விஷயமாக |
| வேறு கொண்டு | ஏகாந்தமாக |
| கூறுமின் | புருஷகாரமான வார்த்தைகளைச்சொல்லுங்கள். |

*** வேறு கொண்டு என்றது— ஏகாந்தத்திலே என்றபடி. பிராட்டியும் தானுமாயிருக்கிற இருப்பிலே என்கை. (௯)

3236 வேறுகொண்டும்மையானிரந்தேன் வெறிவண்டினங்காள் !*
தேறுநீர்ப்பம்பை வடபாலைத்திருவண்வண்டூர் *
மாறில்போரரக்கன் மதிள்நீறெழச்செற்றுகந்த *
ஏறுசேவகனார்க்கு என்னையுமுளளென்மின்களே. (௰)

| | |
|---|---|
| வெறி வண்டு இனங்காள் | பரிமளம் மிக்க வண்டினங்களே! |
| உம்மை வேறு கொண்டு | உங்களிடத்திலே விலக்ஷண ப்ரதிபத்தி பண்ணி |
| யான் இரந்தேன் | அடியேன் ஒன்று வேண்டுகின்றேன்; |
| தேறு நீர் பம்பை வடபால் திருவண்வண்டூர் | தெளிந்த நீரையுடைய பம்பை யாற்றின் வடபக்கத்திலுள்ளதான திருவண்வண்டூரிலே (எழுந்தருளியிருக்கின்ற) |
| மாறு இல் போர் அரக்கன் | நிகரற்ற யுத்தம் செய்வதில் வல்லவனான இராவணனுடைய |
| மதிள் | மதிள்முதலிய யாவும் |
| நீறு எழ | பொடிபொடியாம்படி |
| செற்று | இலங்கையையழித்து (அதனால்) |
| உகந்த | திருவுள்ளமுவந்த |
| ஏறு சேவகனார்க்கு | மஹாவீரனான ஸ்ரீராமபிரானிடத்திலே |
| என்னையும் உளள் என் மின்கள் | ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தி இருப்பதாகச் சொல்லுங்கோள். |

*** சிலவண்டுகளைக் குறித்துக் கூறுகின்றாள். "எமது தலைவர் பெண்பிறந்தார் காரியமெல்லாம் செய்து தலைக்கட்டிவிட்டோமென்றிருப்பர்; அப்படியன்றிக்கே, ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தி யிருக்கின்றதாகச் சொல்லுங்கோள்" என்கிறாள். என்னையுமுள ளென்மின்கள் =‘இன்னமும் பிழைத்திருக்கிறேனென்று சொல்லுங்கோள்’ என்றும் பொருள் கொள்ளலாமாயினும் அப்பொருளில் சுவையில்லையென்பது எம்பெருமானார் திருவுள்ளம். (௰)

3237 மின்கொள்சேர்புரிநூல்குறளாய் அகன்ஞாலங்கொண்ட *
வன்கள்வனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பண்கொளாயிரத்துள்ளிவைபத்தும் திருவண்வண்டூர்க்கு *
இன்கொள்பாடல்வல்லார் மதனர்மின்னிடையவர்க்கே. (௧௧)

| | |
|---|---|
| மின் கொள் சேர் புரிநூல் குறள் ஆய் | ஒளியை யுடைத்தாய்; திருமேனிக்குச் சேர்ந்ததான யஜ்ஞோபவீதமணிந்த வாமனமூர்த்தியாகி |
| அகல் ஞாலம் கொண்ட | விசாலமான பூமி முழுவதையும் அளந்து கொண்ட |
| வன் கள்வன் | மஹாவஞ்சகனான எம்பெருமானுடைய |
| அடி மேல் | திருவடிகள் விஷயமாக |
| குருகூர் சடகோபன் சொன்ன | நம்மாழ்வார் அருளிச்செய்த |
| பண் கொள் ஆயிரத்துள் | பண்மிகுந்த ஆயிரத்தினுள்ளே |
| திரு வண்வண்டூர்க்கு | திருவண்வண்டூர் விஷயமா |

| | | | |
|---|---|---|---|
| இன் கொள் பாடல் | பரமபோக்யமான பாடலான | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| இவை பத்தும் | இப்பத்துப்பாசுரங்களையும் | மின் இடைய வர்க்கு மதனர் | காமினிகளுக்குக் காமுகர் போல் எம்பெருமானுக்கு ஸ்ப்ருஹணீயராவர்கள். |

* * * இத்திருவாய்மொழி கற்பார் எம்பெருமானுக்கும் அவனடியார்கட்கும் விரும்பத்தக்கவராவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. "மதனர்மின்னிடையவர்க்கு" என்றதில் இங்ஙனே பலச்ருதி காண்கிறதோ வென்னில்; அது உபமான மாத்திரத்தைச் சொன்னபடி. காமினிகளுக்குக் காமுகர் எப்படி விரும்பத்தக்கவர்களோ அப்படி என்றவாறு. திருநாட்டிலுள்ள திவ்யாப்ஸரஸ்ஸுக்களை மின்னிடையவர் என்றதாகக் கொள்ளவுமாம். "நிதியும் நற்சுண்ணமும் நிறைகுட விளக்கமும் மதிமுகமடந்தையர் ஏந்தினர்வந்தே" என்கிற உபசாரங்கள் செய்யப்பெறுவார் என்கை. "இன்கொள்பாடவல்லார்" என்ற பாடம் மறுக்கத்தக்கது. (கக)

முதல் திருவாய்மொழி உரை முற்றிற்று.

---

## ஆறும்பத்து—இரண்டாந் திருவாய்மொழி—மின்னிடைமடவார்கள்.

கீழ்த்திருவாய்மொழியில், ஆழ்வார் எம்பெருமானுடைய பிரிவுக்கு ஆற்றமாட்டாது தூது விட்டார். அந்த வ்யஸநத்தை யறிந்த எம்பெருமான் ஆனைக்கு உதவவந்தாப்போலே அரை குலையத் தலைகுலைய ஓடிவந்து ஆழ்வார்க்குக் காட்சிதரப் பார்த்தான்; அவ்வளவிலே ஆழ்வார் ப்ரணயரோஷம் தலையெடுக்கப்பெற்று "ஸ்வாமிந்! இங்கே உமக்குப் பணியில்லை; பணி போரு மிடத்தேற எழுந்தருளீர்" என்று கதவடைத்துத் தள்ளுகிறார் இத்திருவாய்மொழியில்.

க்ருஷ்ணாவதாரத்திலே கண்ணபிரானோடு பரிமாறின கோபஸ்த்ரீகள் இங்ஙனே ப்ரணய ரோஷத்தாலே ஊடல் செய்தமையுண்டு. அவர்களுடைய பாவபந்தமே இப்போது ஆழ்வார்க்கும் ஆகி அவ்வநுகாரமே முற்றியிருக்கிறதாயிற்று. பெருமாள் திருமொழியிலே * ஏர்மலர்ப் பூங்குழல் என்கிற திருமொழியும், பெரிய திருமொழியிலே * காதில் கடிப்பிட்டு என்கிற திருமொழியும் இந்த நடையிலே அவதரித்தவை யென்றுணர்க.

3238 மின்னிடைமடவார்கள்நின்னருள்சூடுவார் முன்புநானதஞ்சுவன் *
மன்னுடையிலங்கை அரண்காய்ந்தமாயவனே ! *
உன்னுடைய சுண்டாயம்நானறிவன் இனியதுகோண்டுசெய்வதேன் ? *
என்னுடையபந்துங்கழலும் தந்துபோகுநம்பீ !. (க)

| | | | |
|---|---|---|---|
| மன் உடை இலங்கை அரண் காய்ந்த மாயவனே | அரசனையுடைத்தா யிருந்த லங்காபுரியினுடைய கோட்டைகளையெல்லாம் சிறியழித்த ஆச்சரியசேஷ்டிதங்களையுடையவனே! | மின் இடை மடவார்கள் முன்பு | மின்னற்கொடிபோன்ற இடையை யுடையவர்களானமாதர்களின் முன்னிலையில் |
| நம்பீ | ஸகலகுணபரிபூர்ணனே! | நான் அது அஞ்சுவன் | நான் அதைப்பற்றி அஞ்சாநின்றேன்; (அவர்கள் உன்னை உபேக்ஷிக்க நேருமென்பது பற்றி அஞ்சுகின்றேனென்கை.) |
| நின் அருள் சூடுவார் | உனது கிருபையை அநுபவிப்பவர்களான | | |

| | | | |
|---|---|---|---|
| உன்னுடைய சுண்டாயம் நான் அறிவன் | உன்னுடைய க்ருத்ரிமமெல்லாம் நானறிவேன்; | என்னுடைய பந்தும் கழலும்தந்து | எனது பந்தையும் அம்மானை யையும் திருப்பிக் கொடுத்து விட்டு |
| இனி அது கொண்டு செய்வது என் | உனக்கும் எனக்கும் ஸம்பந்த மற்றபின்பு உன்னுடைய க்ருத்ரிமத்தால் உனக்கு ஸாத்ய மானது என்ன இருக்கிறது? | போகு | உனக்கு விருப்பமான விடத்தே போய்ச் சேர். |

* * *—இப் பாசுரத்தில் "என்னுடைய பந்துங்கழலும் தந்துபோகு நம்பீ!" என்றிருக்கையாலே பந்தும் கழலுமாகிற சில லீலோபகரணங்கள் எம்பெருமான் கையில் இருப்பதாகவும் அவற்றைப் பராங்குச நாயகி அபேக்ஷிப்பதாகவும் தெரிகிறது. பந்து கழல்கள் எம்பெருமான் கையில் இருக்கக் காரணமென்னென்னில்; இதற்கு முன்னே இவளும் தானுமாக லீலைகள் செய்துகொண்டிருந்தார்கள். அப்படியிருக்கையில் திடீரென்று பிரிந்து போனான்; போனவன் சிறிதுகாலம் கழித்து மீண்டு வந்து நின்றான். அப்போது நாயகிக்கு ப்ரணயரோஷம் தலையெடுத்திருந்ததனால் பேசாதே கிடந்தாள். எப்படியாவது இவளைப் பேசச்செய்ய வேணுமென்று கருதிய அவன் பல விலாஸ சேஷ்டிதங்கள் செய்து பார்த்தும் ஒன்றும் பலியாமையாலே, லீலோபகரணமாகக் கீழேவைத்திருந்த பந்து கழல்களை யெடுத்துக்கொண்டு அவற்றிலேயே அளவுகடந்த அபிநிவேசம் காட்டினான்; பந்தே! நாயகிதான் பேசாவிட்டாலும் நீயாவது என்னோடு பேசுவாயன்றோ; கழலே! நாயகியின் கழல் எனக்குக் கிடைக்காவிட்டாலும் நீயாவது கிடைத்தாயன்றோ? என்றிப்படிப் பலவுஞ் சொல்லித் தன்னுடைய வியாமோஹாதிசயத்தை வெளிக்காட்டத் தொடங்கினான்; அப்போது நாயகி பேசாதிருக்க முடியாமல் பேசத்தொடங்கி இங்ஙனே கூறுகின்றாளென்க.

பராங்குச நாயகியை நோக்கி "மின்னல்போலே இதொரு நுண்ணிய இடையழகு இருந்தபடி என்!" என்றுவருணித்துப் பேசினான் பெருமான்; இதுகாறும் நம்மை மதியாதே இதர ஸ்த்ரீகளுடன் கலந்து போந்தவிவர் இப்போது இங்கே வந்து நம்மை வருணிப்பது நன்றாயிருக்கிறது! என்று சீறி, மின்னிடை மடவார் நானல்லேன்; நின்னருள் சூடும் மின்னிடை மடவார் வேறேயுண்டு என்கிறாள்.

முன்பு நான் அதஞ்சுவன் = நீ இங்கே வந்து செய்கின்ற பிரணய விலாஸ சேஷ்டிதங்கள் உன்னுடைய மின்னிடை மடவார்கட்குத் தெரிந்தால் அவர்கள் உன்னைமாத்திரம் தண்டியாதே என்னையும் சேர்த்துத் தண்டிப்பார்களே யென்று அஞ்சுகின்றேனென்றவாறு. மற்றும் பலவாறு கருத்துக்கூறலாம்.

உன்னுடைய சுண்டாயம் நான் அறிவன் = சுண்டாயமாவது ஸ்வார்த்த பரத்துவம். நீ செய்கிற காரியமெல்லாம் உன்னுடைய க்ருத்ரிமமான எண்ணங்களுக்கு இணங்கியவையேயல்லது ருஜுவான எண்ணத்தோடு நீ ஒருகாரியமும் செய்பவனல்லை யென்பதை நான் அறிவேன் என்றபடி. நான் அறிந்தாலென்ன? அறியாவிடில் என்ன? இனி உனக்கும் எனக்கும் ஏதேனுமொரு தொடர்பு வைத்துக்கொள்வதாக இருந்தாலன்றோ இந்த விசாரம் — என்னுங் கருத்துத் தோன்ற இனி அது கொண்டு செய்வதென்? என்கிறாள்.

ஆகில் நான் போகிறேனென்று பந்துகழல்களோடு போகப்புறப்பட்டான்; போனால் போகிறானென்று இருக்கவல்லளோ இவள்? * ஆகிலும் கொடியவென்னெஞ்சம் அவனென்றே கிடக்கு மெல்லே * என்கிறவளாகையாலே விடமாட்டாதே மீண்டும் வார்த்தைக்கு இடம் வைக்கிறாள் என்னுடைய பந்துங்கழலும் தந்து போகு நம்பீ என்று.—இவை உன்னுடையவை எப்படி? என்னுடையவையே யென்று அவன் பிணக்குச் செய்ய இடம் தந்தபடி. (க)

3238 போகுநம்பீ! உன்தாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய்முறுவலும் *
ஆகுலங்கள்செய்ய அழிதற்கேநோற்றோமேயாம் *
தோகைமாமயிலார்கள்நின்னருள்சூடுவார் செவியோசைவைத்தெழ *
ஆகள்போகவிட்டுக் குழலூதுபோயிருந்தே. (௨)

| | |
|---|---|
| நம்பீ போகு உன் தாமரை புரை கண் இணையும் செம் வாய் முறுவலும் | பிரானே! அப்பால்போ; உன்னுடைய தாமரைபோன்ற கண்களிரண்டும் சிவந்த அதரத்தில் நின்றும் தோன்றுகிற சிரிப்பும் |
| ஆகுலங்கள் செய்ய | வீணாக எங்களை ஆகுலப்படுத்த |
| அழிதற்கே | அதனால் சிதிலப்பட்டுப் போவதற்கே |
| நோற்றோமே யாம் | இட்டுப் பிறந்தவர்களன்றோ நாங்கள்; |
| நின் அருள் சூடுவார் | உனது அருளை அநுபவிக்கப் பிறந்த |
| தோகை மா மயிலார்கள் | தோகைவிரித்த நல்ல மயில்போன்ற கூந்தலையுடைய மாதர்கள் |
| ஓசை செவி வைத்து எழ | (வேணுகானத்தின்) ஓசையைக் கேட்டு எழுந்து வரும்படியாக |
| ஆகள் போக விட்டு | பசுக்களை மேய்க்கப் போகவிட்டு |
| போய் இருந்து | அங்கேறப் போயிருந்து |
| குழல் ஊது | புல்லாங்குழலை ஊதிக்கொண்டு கிட. |

***—கீழ்ப்பாட்டில் 'போகுநம்பீ' என்று சொல்லியிருக்க, மறுபடியும் 'போகுநம்பீ' என்கிறவிதற்கு ஒரு ப்ரஸக்திவேணுமே. போகு என்னச்செய்தேயும் அவன் போகாதே சில பிணக்குச்செய்து அணுகிவந்தான்; நங்காய்! என்னுடைய பந்தும் கழலும் என்றாயே; நீயோ ஸ்த்ரீயாயிராநின்றாய்; உனக்கு ஸ்வாதந்திரியமில்லை; உனக்கென்று தனியே ஒரு பொருளில்லை; இந்தப் பந்தையும் கழலையும் நீ ஏதேனும் காசுகொடுத்து வாங்கிற்றுண்டோ? என்னுடையவைகளை உன்னுடையவைகளாக நீ சொல்வது வழக்கோ? என்று சில பேசிக்கொண்டு புன்முறுவல் செய்துகொண்டு அணுகிவந்தானாக, இங்ஙனே சொல்லுகிறாள்.

நங்காய்! உன்னிடத்தில் எவ்வளவோ அன்புகொண்டு அணுகிவந்திருக்கின்ற என்னை 'போகு' என்று சொல்லி அப்பால் தள்ளுகின்றனையே, இஃது உனக்குத் தருமமா? என்றான் கண்ணன். அதற்குப் பராங்குசநாயகி 'ஆமாம், என்மீது உனக்கு அளவுகடந்த அன்புதான்; உன் அன்பை நீயேதான் மெச்சிக்கொள்ளவேண்டும்' என்றாள். அதற்குக் கண்ணபிரான் 'அம்மா! இப்படியும் சொல்லலாகுமோ? உன்னிடத்து எனக்கு அன்பு மிகமிகவுள்ளதென்பதில் இவ்வளவு ஸந்தேஹமா? எனது கண்ணிணையில் என் அன்பு முழுவதும் உனக்கு விளங்கவில்லையா?' என்று சொல்லிக்கொண்டே புன்முறுவல் செய்துகொண்டு அணுகிவந்தான்; அப்போது சொல்லுகிறாள் "உன் தாமரைபுரை கண்ணிணையும் செவ்வாய் முறுவலும் ஆகுலங்கள் செய்ய அழிதற்கே நோற்றோமேயாம்" என்று. இங்ஙனே கண்ணழகையும் முறுவலழகையுங்காட்டி எம்மை அழிக்கிறாயத்தனை; இப்படி அழிவதற்கு நாங்கள் பெண் பிறந்தோமேயல்லது, உன்னை யநுபவிக்கப் பிறந்தோமல்லோங்காண் என்றபடி.

இப்படி பராங்குசநாயகி சொன்னவாறே அவன் மேன்மேலும் சில விலாஸ சேஷ்டிதங்களைச் செய்யப்புக, இவற்றுக்கு நாம் முகங்கொடுப்போமல்லோம் என்று முகத்தை மாற வைத்தாள்; அப்போது பின்புறத்து அளகபாரங்களைக் கண்டு கண்ணபிரான் "மயில்தோகை போலே இதுவொரு கூந்தல் கற்றை இருந்தபடியென்!" என்று சில வருணனைகளைப் பேசிக்கொண்டு, புல்லாங்குழலோசையாலே இவளை வசப்படுத்திக் கொள்வோமென்று பார்த்து வேணுகானம் பண்ணத்தொடங்கினான்; அதன்மேல் பின்னடிகள் கூறுகின்றாள்; நானன்று கூந்தலழகி; உன் திருவருளுக்குப் பாத்ரபூதைகளான கூந்தலழகிகள் திருவாய்ப்பாடியிலே பலருண்டுகாண்; அங்கே சென்று பசுக்களை மேயவிட்டுக்கொண்டு இந்த வேணுகானத்தை அங்கே செய்வாயாகில் அவர்கள் திருவுள்ள முகப்பர்கள்; அங்கே சென்று ஊதுகிடாய். என்றாளாயிற்று. (௨)

3239 போயிருந்துநின்புள்ளுவமறியாதவர்க்கு உரைநம்பீ! * நின்செய்ய
வாயிருங்கனியுங்கண்களும் விபரீதமிந்நாள் *
வேயிருந்தடந்தோளினார் இத்திருவருள்பெறுவார்யவர்கொல்? *
மாயிருங்கடலைக்கடைந்த பெருமானாலே. (ரு)

- நம்பி — பிரானே!
- போய் இருந்து — எங்களைவிட்டு அப்பால் போயிருந்து
- நின் புள்ளுவம் அறியாதவர்க்கு உரை — உனது வஞ்சகங்களை அறியாதவர்களான சிலர் பக்கலிலே உன் மெய் போலும் பொய்களைச் சொல்லிக் கொண்டிரு;
- நின் செய்ய வாய் இரு கனியும் கண்களும் இந்நாள் விபரீதம் — உனது சிவந்த அதரமாகிற சிறந்த கனியும் திருக்கண்களும் இப்போது முன்போல் அல்லகிடாய்;

(இதற்குமேல் முகத்தை மாற வைத்துக்கொண்டு சொல்லுகிறாள்.)

- மா இரு கடலை கடைந்த பெருமானாலே — அகாதமாய் விசாலமான கடலைக்கடைந்தவனை இப் பெரியோன் பக்கலிலே
- இத் திரு அருள் பெறுவார் — இப்படிப்பட்ட திருவருளைப் பெறுமவர்களான
- வேய் இரு தட தோளினார் — வேய்போன்று பருத்து நெடிய தோள்படைத்தவர்கள்
- யவர் கொல் — யாவரோ?

* * *—கீழ்ப்பாட்டிலே "ஆகள் போகவிட்டுக் குழலூதுபோயிருந்தே" என்ற பராங்குசநாயகியை நோக்கிக் கண்ணபிரான் 'நங்காய்! நான் எங்கேயோ போயிருந்து குழலூது வானேன்? காதலிகள் உள்ளவிடத்தேயன்றோ குழலூதத் தகுவது; என் காதலுக்கு முக்கியமான கொள்கலமாகிய நீ யிருந்த இவ்விடத்தேயன்றோ நான் குழலூத வேண்டுவது' என்று சில வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு நெருங்கிவர, "போயிருந்து நின் புள்ளுவமறியாத வர்க்கு உரைநம்பீ!" என்கிறாள். உன் பொய்யிலே பழகின என் பக்கலிலே உன்பொய் விலை செல்லாதுகிடாய்; உன் பொய் அறியாதவர்களின் கோஷ்டியிலே போயிருந்து இத்தகைய வஞ்சக வார்த்தைகளைச் சொல்லிக்காணாய் என்றபடி.

அதுகேட்ட கண்ணபிரான் 'நங்காய்! உன்வாயமுதம் பருக என் செய்யவாய் துடிக்கிறபடி கண்டாயே; வாயமுதம் பருகக் கிடையாதொழியினும் கண்களாரளவும் நின்று காணவாவது பெறலாமோ என்று என் கண்கள் துடிக்கிறபடி கண்டாயே' என்றான்; அங்ஙனம் சொல்லவே அவனது செய்யவாயையும் செந்தாமரைக் கண்களையும் உற்று நோக்கினாள் பராங்குசநாயகி. அவை பரம விலக்ஷணங்களாயிருந்தன. கீழ்நாட்களில் காணாத அழகு காணக் கிடைத்தது; அதுநோக்கி "நின் செய்யவாய் இருங்கனியும் கண்களும் விபரீதமிந்நாள்" என்கிறாள். விபரீதம் என்பதற்கு 'மாறுபட்டுவிட்டன' என்றும் பொருளாகலாம். 'விலக்ஷணமாயிருக்கின்றன' என்றும் பொருளாகலாம். விலக்ஷணமாயிருக்கின்றன வென்றது—பரம போக்யமாயிருக்கின்றன என்றபடி. ஊடலிலே இங்ஙனே சொல்லத் தகுதியில்லையாயினும் வடிவழகு பரவசப்படுத்திப் பேசுவித்தபடி. * அவஶாஃ ப்ரதிவெதிரெ -. அவசா: ப்ரதி பேதிரே,* என்ற கட்டளை.

முன்னிரண்டடிகள் எம்பெருமானை நோக்கி வ்யக்தமாகச் சொன்ன பாசுரமென்றும், பின்னிரண்டடிகள் அப்படி வெளிப்பாடாகச் சொல்லுகையன்றிக்கே ஹ்ருதயத்தினுள்ளே நினைத்துக்கொண்ட பாசுரமென்றும் கொள்ளத்தகும். இங்ஙனேயான வாயழகும் கண்ணழகும் பொலிந்த இப்பெருமானுடைய பரிபூர்ணாநுபவம் நமக்குக் கிடைக்கவில்லையே; இது கிடைக்கப்பெறும் புண்ணியவதிகள் யாவரோ! என்று உள்ளுக்குள்ளே விஸ்மயப்படுகின்றபடி. மாயிருங்கடலைக் கடைந்த பெருமானாலே என்றது – பெரியபிராட்டியாரைப் பெறுதற்கு இவன் கடல்கடைதலாகிற மிகப்பெரிய காரியம் செய்தானமே; அவளும் ஒரு பாக்யவதியே! என்ற கருத்தினாலாம். (ரு)

3240 ஆலினீளிலையேழுலகுமுண்டு அன்றுநீகிடந்தாய்* உன்மாயங்கள்
மேலைவானவருமறியார் இனியெம்பரமே *
வேலினேர்தடங்கண்ணினார் விளையாடுசூழலைச்சூழவேநின்று
காலிமேய்க்கவல்லாய் எம்மைநீகழறேலே. (௪)

| | | | |
|---|---|---|---|
| ஏழ் உலகும் உண்டு | ஸமஸ்த லோகங்களையும் பிரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்து | வேலின் நேர் தட கண்ணினார் விளையாடு சூழலை | வேல்போன்ற பெரியகண்களையுடையவர்களான மாதர்கள் விளையாடுமிடமான விலாஸஸ்தானங்களை |
| ஆலின் நீள் இலை அன்று நீ கிடந்தாய் | ஆலமரத்தின் இளந்தளிரிலே முன்னொருகாலத்தில் கிடந்தவனல்லையோ நீ; | சூழவே நின்று | பற்றிக்கொண்டிருந்து |
| உன் மாயங்கள் மேலைவானவரும் அறியார் | உனது மாயச்செயல்களை மேற்பட்டவர்களான நித்யஸூரிகளும் அறியார்கள்; | காலி மேய்க்க வல்லாய் | பசுக்களைமேய்க்கவல்ல பெருமானே! |
| இனி எம் பரமே | அப்படியிருக்க எம்மால் அறியப்போமோ? | எம்மை நீ கழறேல் | இந்தப் பொய்கள் எங்களுக்குச் சொல்லவேண்டா. |

* * *—கீழ்ப்பாட்டில் "நின்செய்யவாயிருங் கனியுங் கண்களும் விபரீதமிந்நாள்" என்றதைக்கேட்ட கண்ணபிரான் 'விபரீதமானது என்னிடம் யாதொன்றும் இருக்ககில்லாது; நான் செய்வது எதுவும் ருஜுவாக இருக்குமே யல்லது விபரீத மென்னும்படியாக என்னிடம் ஒன்றுமிருக்க ப்ரஸக்தியில்லை; விபரீதமோ மாயமோ எல்லாம் உங்களிடத்தே யல்லது என்னிடம் ஒன்றுமில்லை' என்றான்; அதற்குக் கூறுகின்றாள்—முன்னடிகள்.

அதுகேட்ட கண்ணபிரான் 'நங்காய்! நான் இங்கே தாமதித்துவந்தேன் என்ற வித்தையே காரணமாகவன்றோ நீ இங்ஙனே மிறுக்குச்செய்வது. நான் தாய்தந்தையர்க்குப் பரதந்திரனல்லேனோ? அவர்கள் என் கையிலே கோலைக்கொடுத்துப் பசுமேய்த்துவா என்றால் நான் அங்ஙனமே சென்று மேய்த்து வரவேண்டாவோ? அதனால் சிறிது தாமதித்தால் அதற்காக இவ்வளவு சீறலாகுமோ?' என்று அநுநயமாகச் சில வார்த்தைகள் சொல்ல, "வேலினேர் தடங்கண்ணினார் விளையாடு சூழலைச் சூழவே நின்று காலிமேய்க்கவல்லாய்!" என்கிறாள் — பசு மேய்ப்பதென்று ஒரு வியாஜம் வைத்துக்கொண்டு, உனக்கு விருப்பமான கண்ணழகிகள் விளையாடுமிடங்களிலே திரிவதன்றோ உன்பணி; இந்தச் சூது நாங்களறியோமோ? என்கிறாள்.

இவள் இங்ஙனே சொன்னவாறே 'இவள் நம்முடைய செய்தியை உள்ளபடியுணர்ந்து வெளியிட்டுவிட்டாளே!' என்கிற வருத்தத்தினால், அர்த்தமில்லாதபடி சில வார்த்தைகளை மிகைத்துச் சொல்ல ஆரம்பித்தான் கண்ணன்; அதற்கு 'எம்மை நீ கழறேலே' என்கிறாள். நீ மேலிட்டு வார்த்தை சொல்லுமிடம் இதுவன்று; வேலினேர்தடங்கண்ணினார் விளையாடு சூழலிலே சென்று சொல்லாய் என்றபடி. (௪)

3241 கழறேல்நம்பீ உன்கைதவம்மண்ணும்விண்ணும்நன்கறியும் * திண்சக்கர
நிழறுதொல்படையாய் உனக்கொன்றுணர்த்துவன்நான் *
மழறுதேன்மொழியார்கள்நின்னருள்சூடுவார் மனம்வாடிநிற்க* எம்
குழறுபூவையொடும் கிளியோடும்குழகேலே. (௫)

| | | | |
|---|---|---|---|
| நம்பீ கழறேல் | பிரானே! மேலிட்டு வார்த்தை செல்வதை எங்களிடம் வைத்துக்கொள்ள வேண்டா? | நிழறு திண் சக்கரம் தொல் படையாய் | இஷ்டப்படி நடந்தப் பெறுகிற திண்ணிய சக்கரமாகிற அநாதியான ஆயுதத்தை யுடையவனே! |
| உன் கைதவம் மண்ணும் விண்ணும் நன்கு அறியும் | உனது கபடங்களை உபய விபூதியும் நன்றாக அறியும்; | உனக்கு நான் ஒன்று உணர்த்துவன் | உனக்கு நான் ஒரு விஷயம் அறிவிக்கக் கேளாய், |

நின் அருள் சூடுவார் மழறு தேன்மொழியார்கள் { உனது க்ருபைக்குப் பாத்திர பூதைகளான மழலைத் தேன் மொழியார்களான மாதர்கள்
மனம் வாடி நிற்க { நெஞ்சுகொதித்து நிற்கும்படியாக
எம் குழறு பூவையொடும் கிளியோடும் குழகேல் { அக்ஷர ரஸமாகப் பேசுகின்ற எமது பூவைப் பறவையோடும் கிளியோடும் லீலாரஸம் கொண்டாடவேண்டா நீ.

* * *—கீழே 'எம்மை நீ கழறேலே' என்று மறுத்துக்கூறினவளவிலும், கண்ணபிரான், 'நங்காய்! பொய்யென்பதைக் கனவிலுமறியாத வென்னை நீ பச்சைப் பசும் பொய்யனாக எண்ணி இப்படி திரஸ்கரித்துத் தள்ளுவது தகுதியன்று; மத்யஸ்தர்களை வைத்துக்கொண்டு நான் மெய்யனோ பொய்யனோ வென்பதை நிர்ணயிக்கவேண்டுமத்தனை' என்று சொல்லிக் கொண்டு மீண்டும் மேலிட்டு வார்த்தைசொல்ல; "கழறேல் நம்பீ! உன் கைதவம் மண்ணும் விண்ணும் நன்கறியும்" என்கிறாள். நிர்ணயம்பெறாத விஷயத்திற்கன்றோ மத்யஸ்தர்களை வைத்துக்கொண்டும் ஸாக்ஷிகளை விசாரித்துக்கொண்டும் தடுமாறவேண்டுவது; உன்னுடைய ஸங்கதி உபயவிபூதியிலும் ப்ரஸித்தமன்றோ? [கைதவமாவது—மாயச்செயல்; இது வடசொல்.] நீ வஞ்சகம் செய்வது இம்மண்ணுலகில் மாத்திரமேயோ? விண்ணுலகிலும் ப்ரஸித்தமன்றோ அது. "சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தரா நிற்கவே யங்கு, ஓர்மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப்போந்து இமிலேற்று வன்கூன் கோட்டிடையாடினைகூத்து அடலாயர்தம் கொம்பினுக்கே" என்கிற திருவிருத்தப் பாசுரத்தின் பொருள் இங்கே அநுஸந்திக்கத்தக்கது.

உன் க்ருத்ரிமத்தை உபயவிபூதியும் நன்கறியும் என்றவாறே, கண்ணபிரான் "அந்தோ! இங்ஙனே அலர்தூற்றிவிடுவது ஒரு வார்த்தையோ? விவேகியான வொருவனை ஸாக்ஷியிட்டு மூதலிக்கவேண்டாவோ?" என்று கூற, அப்படியா? ஸாக்ஷிகளுக்குக் குறையுண்டோ? ஸாக்ஷிகளை நாங்கள் தேடவேண்டுமோ? உன் கையிலேயே ஸாக்ஷி விளங்காநின்றானே; ஆயுதமெடேனென்று ஆயுதமெடுத்தும், பகலை இரவாக்கியும் இங்ஙனேயாக நீ செய்த க்ருத்ரிமங்களுக்கு உடன்பட்டிருந்த திருவாழியாழ்வான் உன்கையிலேயே உள்ளானன்றோ? அவனைக் கேட்கலாமே யென்கிறாள்— திண்சக்கரநிழறு தொல்படையாய் என்கிறாள்.

இவள் இப்படிச் சொன்னவாறே 'அந்தோ! இவள், நாம் வாயைத்திறந்து மறுமாற்றம் சொல்ல இடமில்லாதபடியாக இப்படி ஸாக்ஷியிட்டுவிட்டாளே; இனி நாம் என் செய்வது!' என்று கவிழ்ந்துநின்றான் கண்ணபிரான். அந்த தீனதசையைக்கண்டு 'பிரானே! கவிழ்தலையிட்டிருக்கவேண்டா; நீ எம்மையே அடிபணிந்தாயாகில் நீ மறுமாற்றம் சொல்லிப் பிழைக்க வேண்டிய வகைகளை நாமே உனக்குச் சொல்லித்தருகிறோம் வா என்றார்கள்.

ஸர்வஜ்ஞரான நமக்கும் இவர்கள் ஒன்று உணர்த்துவதாகச் சொல்லாநின்றார்களே!, இது என்ன அழகானபேச்சு! என்று உள்குழைந்த கண்ணபிரான் அந்தப் பேச்சின் இனிமையை எடுத்துரைத்துப் புகழத் தொடங்கினான் —"உங்களுடைய மொழி ஸாமான்யமாக இல்லையே, தேன்போலே இனிதாயிருக்கின்றதே!" என்றான்; அதற்குச் சொல்லுகிறார்கள் — அப்பா! தேன்மொழியார் நாங்கள் அல்லோம்; நின்னருள் சூடும் தேன்மொழியார்கள் வேறேயுளர்; எம்மை அவர்களாக ப்ரமிக்கிறாய்போலும்; அந்த ப்ரமம் வேண்டாகாண் என்றார்கள்; என்று சொல்லிவிட்டுத் தலைமறைய நின்றார்கள்; இவனோடு இந்த ஸம்பாஷணை தானும் போதுமென்று எண்ணி நின்றார்கள்;

அவ்வளவிலே அங்கே சில பூவைகளும் கிளிகளுமிருந்தன; அவற்றோடே லீலாரஸம் கொண்டாட ஆரம்பித்தான் கண்ணபிரான்; அதுகண்டு "நின்னருள் சூடுவார்மனம்வாடி நிற்க எம் குழறு பூவையொடும் கிளியோடும் குழகேலே" என்கிறார்கள். நீ இங்கே வந்தது தெரிந்தாலே உன் காதலிமார்கள் வருந்துவார்கள்; அதற்குமேலே எம்முடைய ஸம்பந்தம்

பெற்ற வஸ்துக்களிலே நீ அபிநிவேசம் காட்டுகிருயென்கிற இதுவும் தெரிந்தால் அவர்களு டைய வருத்தத்திற்கு அளவேயிராது. ஆகவே அவர்கள் மனம்வாடும்படியாக நீ இங்ஙனம் குழகவேண்டா என்றூர்களாயிற்று. (ரு)

3242 குழகியெங்கள்குழமணன்கொண்டு கோயின்மைசெய்துகன்மமோன்றில்லை *
பழகியாமிருப்போம் பரமேயித்திருவருள்கள் *
அழகியாரிவ்வுலகுமூன்றுக்கும் தேவிமைதகுவார்பலருளர் *
கழகமேறேல்நம்பீ! உனக்குமிளேதேகன்மமே. (சு)

| | |
|---|---|
| நம்பீ | பிரானே! |
| குழகி | லீலாரஸம் கொண்டாடி |
| எங்கள் குழமணன் கொண்டு | எங்களுடைய மரப்பாச்சியை யெடுத்துக் கொண்டு |
| கோயின்மை செய்து | கேட்பாரற்ற செயல்களைச் செய்வதனால் |
| கன்மம் ஒன்று இல்லை | உனக்கு ஒருகாரியமும் ஸித்தித் ததாகாது; |
| யாம் பழகி இருப்போம் | நாங்கள் வெகுநாளாகவே உம் மோடு பழகி உமது யோக்ய தைகளைத் தெரிந்துகொண் டிருக்கின்றோம்; |
| இத் திரு அருள்கள் பரமே | உம்முடைய ஆசைப்பெருக் கான காரியங்களுக்கு நாங் கள் இலக்காகப் போருமோ? |
| | [இவை எங்களால் தாங்கமுடியா.] |
| இ உலகு மூன்றுக்கும் | இம்மூவுலகத் திலுள்ளும் |
| அழகியார் | அழகிற்சிறந்தவர்களாயும் |
| தேவிமை தகுவார் | உமக்குத் தேவிகளாயிருக்கத் தகுந்தவர்களாயுமுள்ள மாத ர்கள் |
| பலர் உளர் | பலருண்டு; |
| கழகம் ஏறேல் | எங்கள் திரளிலே பலாத்கார மாகப் புகவேண்டா; |
| கன்மம் | இப்படிப்பட்ட செய்கையானது |
| உனக்கும் இளேது | உன்மனத்தால் பார்த்தாலும் பால்ய ஸௌஸல்யமாகச் தோற்றக்கூடியதே. |

* * *—கீழ் "எம்குழறுபூவையொடும் கிளியோடும் குழகேலே" என்றூர்கள். அந் தப் பூவைகளும் கிளிகளும் உயிருள்ளவையாகையாலே 'நாம் நமது தலைவிகளின் கருத்துக்கு இணங்க வர்த்திக்கவேணும்' என்று தெரிந்துகொண்டு கண்ணபிரான்கையில் பிடிகொடாமே அப்பால் சென்றுவிட்டன; அசேதனங்களான சில லீலோபகரணங்கள் அங்குக்கீழே விழுந்துகிடந்தன; அவற்றைக் கண்ணபிரான் எடுத்துக்கொண்டு சில விலாஸ சேஷ்டிதங்களைச் செய்ய ஆரம்பித்தான்; அதற்குமேலே வார்த்தைகள் பெருகிச்சென்றன; "கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்புதுகிலவைகீறி" "பந்துபறித்துத் துகில்பற்றிக்கீறிப் படிறன்படிறுசெய்யும்" என்னும்படியான கேட்பாரற்ற செய்கைகளைச் செய்யவும் தொடங்கினன்; அதுகண்டு "குழகியெங்கள் குழமணன்கொண்டு கோயின்மைசெய்து கன்மமொன்றில்லை" என்கிறூர்கள்.

கோயின்மை=கோ+இன்மை; அரசனில்லாமை என்று சப்தார்த்தம்; அராஜகமான செய்கை என்பது கருத்து.

கன்மமோன்றில்லை=இதனல் உனக்கு யாதொரு லாபமும் இல்லை என்றபடி. நீ எவ் வளவு குறும்புகள் செய்தாலும் இது உனக்கு கிறக்கேடாகுமத்தனையல்லது நாங்கள் வசப் பட்டு வருவோமென்கிற ஆசைக்கு இடமில்லை என்றவாறு.

"கன்மமொன்றில்லை" என்றவாறே 'நங்காய்! இப்படியும் வெட்டிதாக வார்த்தை சொல்லலாமோ? நான் உன்னுடைய சரக்கன்றோ; உன்னைவிட்டால் எனக்குக் கதியுண்டோ? உன்னையேயன்றோ இரவும் பகலும் நான் சிந்தித்துக்கொண்டிருப்பது' என்றிங்ஙனே அநு நயித்து வார்த்தைசொல்ல "பழகி யாமிருப்போம்" என்கிறூர்கள். அப்பா! உன்னுடைய பச் சைப்பசும் பொய்யுரைகளை நாங்கள் இன்று புதிதாகக் கேட்கிறோமல்லோம் கிடாய்; உன் பொய்யுரைகளிலேயன்றோ நாங்கள் பழகியிருப்பது என்றபடி.

இங்ஙனம் சொல்லக்கேட்ட கண்ணபிரான் 'என்னுடைய பொய்யுரைகளிலும் குறும்புச்செயல்களிலும் நீங்கள் பழகினவர்கள்தானே; சிலர் ஒன்றிலே பழகிவிட்டால் அது இல்லாமல் ஒரு நொடிப்பொழுதும் இருக்கமுடியாதன்றே; என்னுடைய குறும்புகளிலேயே பழகினவுங்களுக்கு என் குறும்புகள் இன்றியமையாதனவன்றே; பரமபோக்யமாகவன்றே இவை உங்களுக்கு இருக்கும்' என்று சொல்லிக்கொண்டே மிகைத்து அல்லல்படுத்த ஆரம்பித்தான்; அதற்கு "பரமே யித்திருவருள்கள்" என்கிறார்கள். அவனுடைய குறும்பான செயல்களையே இங்குத் திருவருள்கள் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார்கள். மேலே பத்தாம் பத்தில் "என் கொலம்மான் திருவருள்கள்!" என்கிறாராழ்வார். அங்கு எம்பெருமானுடைய ஒரு வியாமோஹத்தையே திருவருளென்ற சொல் காட்டுகின்றது. அதுபோலவே இங்கும் அவனுடைய வ்யாமோஹபரீவாஹமான 'தூர்த்த க்ருத்யங்களையே திருவருள்களென்கிறது. பரமே இத் திருவருள்கள்!=உன்னுடைய இப்படிப்பட்ட குறும்புகளை எம்மால் பொறுக்கப்போமோ? என்றபடி. ஹர: என்னும் வடசொல் பரமெனத்திரிந்தது.

எங்களால் பொறுக்கப்போமோ? என்றவாறே 'பின்னை யாரால் பொறுக்கப்போகும்' என்றான் கண்ணபிரான். அதற்கு உத்தரமாக "அழகியாரிவ்வுலகு மூன்றுக்கும் தேவிமைதகுவார் பலருளர்" என்கிறார்கள். த்ரிலோக ஸுந்தரிகளென்று பேர்பெற்று உனக்கேற்கும் தேவிமார்கள் பலருண்டுகாண்; உனக்கு ஏற்காத குரூபிகளான நாங்கள் எதற்கு? என்றபடி. "தக்கார் பலர் தேவிமார்சாலவுடையீர்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரம் இங்கே நினைக்கத்தக்கது.

'உனக்கேற்ற அழகிய தேவிமார்கள் பலருண்டு' என்றவாறே கண்ணபிரான் "எனக்கு ஏற்ற தேவிகள் அழகிகள் நீங்கள் தவிர வேறில்லை; உங்கள் கையில் ஆணையிட்டுத் தருகிறேன் காண்மின்" என்று சொல்லிக்கொண்டே உள்ளே புகத்தொடங்கினான்; அதுகண்டு "கழகமேறேல் நம்பீ" என்கிறார்கள். நீ எத்தனைபேரைத் தீண்டி வந்திருப்பாயோ தெரியாது; மேல் விழுந்து தீண்டாதேகொள் என்றவாறு. கழகம் - கோஷ்டி. (சு)

3243 கன்மமன்றெங்கள்கையில்பாவைபறிப்பது கடல்ஞாலமுண்டிட்ட *
நின்மலாநெடியாய் உனக்கேலும்பிழைபிழையே *
வன்மமேசொல்லியெம்மைநீவிளையாடுதி அதுகேட்கிலென்னைமார் *
தன்மபாவமென்னார் ஒருநான்றுதடிபிணக்கே. (எ)

| | |
|---|---|
| கடல் ஞாலம் உண்டிட்ட நின்மலா நெடியாய் | கடல்சூழ்ந்த வுலகங்களையெல்லாம் ஒருகால் திருவயிற்றினுட்கொண்ட விமலனே! பெரியோனே! |
| எங்கள் கையில் பாவை பறிப்பது கன்மம் அன்று | எங்கள் கையிலுள்ள லீலோபகரணங்களை வலியப்பிடித்திழுப்பதானது செய்யத்தகுந்த காரியமன்று; |
| உனக்கேலும் பிழை பிழையே | இது உனக்கு மிகப்பெரிய அவத்யமேயாகும் (இதுவன்றியும்) |
| எம்மை | எங்களை நோக்கி |
| வன்மமே சொல்லி விளையாடுதி | மருமமான வார்த்தைகளைச் சொல்லி விளையாடுகின்றாய்; |
| என் ஐம்மார் அது கேட்கில் | எங்களுடைய ஸஹோதரர்கள் இப்படியெல்லாம் நீ செய்தும் சொல்லியும் போருகிறாயென்பதைக் கேட்கப்பெற்றார்களாகில் |
| தன்மம் பாவம் என்னார் | நன்மை தீமை யென்று கூடப் பாரார்கள்; |
| ஒரு நான்று தடி பிணக்கே | ஒருகால் உன்னைத் தடியிட்டுத் தகர்க்கும்படியாகவும் நேர்ந்து விடும். |

* * *—கீழே "உனக்குமிளைதே கன்மமே" என்னக் கேட்ட கண்ணபிரான் 'என்மேல் உங்களுக்கு இவ்வளவு வெறுப்பாகில் நீங்கள் சுகமாக இருங்கள்' நான் போய் வருகிறேன், என்னுடைய வஸ்துக்களை நான் எடுத்துக்கொண்டுபோகிறேன்' என்று சொல்லிக்கொண்டே கீழேகிடந்த லீலோபகரணங்களை யெடுக்கப்பார்த்தான்; உடனே ஆய்ச்சிகள்

அவற்றைத் தங்கள் கையிலே யெடுத்துக்கொண்டார்கள்; அவனை எளிதில் போகவொட்டுவார் களோ இவர்கள்தாம்; மேன்மேலும் பிணக்குக்கு இடம் கொடுக்கவேணுமென்றே இவர் களும் நினைத்திருக்கையாலே இந்த அற்பவஸ்துக்களைக்கொண்டுபோனல் போகட்டும் என்றி ராமே 'எங்கள் வஸ்துவை நீ எப்படியெடுத்துக்கொண்டு போவாய்?' என்று சிணுகிட்டு அவற்றைத் தாங்களே வாரியெடுத்துக்கொண்டார்கள்: 'இது நமக்குப் பெருநன்மையேயா யிற்று' என்று கொண்ட கண்ணபிரான் கைநீண்டிச் சண்டையிட அனுகூலமாகச் செய் தார்களே! என்று உகந்து அவர்கள் கைமேலே கையையிட்டு அவற்றைப் பறிக்கப் புகுந்தான்; அப்போது "கன்மமன்று எங்கள் கையில் பாவைபறிப்பது" என்கிருர்கள். 'கன்மமன்று' என்றதற்கு இவர்கள் நினைத்தது ஒருபொருள்: அவன் கொண்டது வேருெருபொருள். 'எங் கள் கையிலுள்ள பாவையைப்பறிப்பது நீ செய்யத்தகுந்த காரியமன்று' என்கிற பொருளை யிட்டு இவர்கள் கன்மமன்று என்ருர்கள். இது உன்னல் செய்யமுடியும்படியான காரிய மன்று என்று இவர்கள் சொல்லுவதாக அவன் கொண்டு, 'எனக்கு அசக்யமானது மொன் றுண்டோ? என்னை ஆரென்று நினைத்திகோள்? * பாலகனென்று பரிபவஞ்செய்யேல், பண் டொருநாள் ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன் * என்று என்தாய் பலகாலும் சொல்லுமே, கேட்டறியீர்களோ? கடல்ஞாலமுண்டிட்ட எனக்கு அஸாத்யமானது மொன்றுண்டோ? என்ருன்.

பிரானே! உனக்கு அஸாத்யமானதொன்று இருப்பதாக நாங்கள் நெஞ்சிலும் நினைத்தி லோமே; அப்படி நாங்கள் சொல்லவுமில்லையே; கடல்ஞால முண்டிட்டவனும் நீயே, நின்மல னும் நீயே; நெடியானும் நீயே; இதில் எமக்கு ஸந்தேஹம் இல்லைகாண்; இப்படிப்பட்ட தீமைகளைச் செய்வது உனக்குப் பிழை என்கிருேமத்தனை என்ருர்கள். நின்மலனை எனக் குமா இது பிழையாகும்? என்ருன்; உனக்கேலும் பிழைபிழையே என்கிருர்கள்.

இவர்கள் இங்ஙனே சொன்னவாறே மேலே ஒன்றும் உத்தரமுரைக்கமாட்டாமல் காதோடே சில சொல்லுவதாகவந்து, சிறுபயல்கள் சேவியிலே வந்து 'காகா குர்' என்னுமா போலே எதோ மருமமான வார்த்தைகளை வலிதாகச் சொன்னன்; அதனல், வன்மமே சொல்லி எம்மை நீ விளையாடுதி என்ருர்கள்.

அதற்கு, 'நான் தப்பாக என்ன சொல்லிவிட்டேன்' என்று, தான் அவர்களுடைய காதிலே சொன்ன குறும்புவார்த்தையை உரக்கச் சொல்லவேணுமென்று வாயெடுத்தான்; உடனே அவனுடைய வாயைப் புதைத்து "அதுகேட்கில் என்னைமார் தன்மபாவ மென்னர்" என்ருர்கள். அந்தக்குறும்பு வார்த்தையைத் தங்கள் வாயாலே அநுவதிக்கக்கூசி 'அது' என்கி ருர்கள். கண்ணு! அந்த அஸப்யமான வார்த்தையை எங்கள் செவியிலே சொன்னதுபோதும்; அதை நீ உரக்கச்சொல்லி, அது எங்கள் உறவினருடைய காதிலே விழுமாகில், பிறகு அவர் கள் பாவமென்றும் புண்ணியமென்றும் பாரார்கள்—என்ருர்கள். (தன்மம்—தர்மம்.)

பாப புண்யங்களுக்கு அஞ்சாமல் என்ன செய்துவிடுவார்கள்? என்ருன் கண்ணன்; ஒருநான்றுதடிபிணக்கே = அது நாங்களறிவோமோ? ஆளுக்கொரு தடி யெடுத்துக்கொண்டு, வந்து தகர்ப்பர்கள்கிடாய்; குத்தும் பூசலுமாயன்ருே தலைக்கட்டும் என்றபடி. (எ)

3244 பிணக்கியாவையும்யாவரும் பிழையாமல்பேதித்தும்பேதியாததோர் *
கணக்கில்கீர்த்திவெள்ளக் கதிர்ஞானமூர்த்தியினய் *
இணக்கியெம்மையெந்தோழிமார் விளையாடப்போதுமினேன்னப்போந்தோமை *
உணக்கிநீவளைத்தால் என்சொல்லாருகவாதவரே. (அ)

| | | | |
|---|---|---|---|
| யாவையும் யாவரும் | அசேதனப்பொருள்களும் சேதனப்பொருள்களுமான ஸகலத்தையும் | ஓர் கணக்கு இல் கீர்த்தி வெள்ளம் | அத்விதீய நிரவதிக கீர்த்தி ப்ரவாஹத்தையும் |
| பிணக்கி | ஸம்ஹாரதசையிலே நாம்ரூபவிபாகமில்லாதபடி ஒன்றாகப் பிசிறிவைத்து (பிறகு ஸ்ருஷ்டிகாலத்திலே) | கதிர் ஞானம் | ஸங்கல்பரூபஜ்ஞானத்தையும் |
| | | மூர்த்தியினாய் | வடிவாகவுடையவனே ! |
| | | எம் தோழிமார் | எமது தோழிமார்கள் |
| | | எம்மை இணக்கி | எங்களை இசைவித்து |
| பிழையாமல் | ஒருவருடைய கருமமும் மாறிப்போகாதபடி | விளையாட போதுமின் என்ன | விளையாட வாருங்கோள் என்றழைக்க |
| பேதித்தும் | தேவயோனி மநுஷ்ய யோனி திர்யக்யோனி முதலியபேதங்களைப் பண்ணினவிடத்தும் | போந்தோமை | (நீ இங்கிருப்பது அறியாமே) வந்த எங்களை |
| | | நீ உணக்கி வளைத்தால் | நீ நெருக்கித் தகைந்தால் |
| பேதியாதது | அவற்றின்கணுள்ள தோஷங்களால் ஸ்வரூபத்துக்குச் சேதம் வாராதபடியான | உகவாதவர் என் சொல்லார் | வேண்டாதார் என்ன தான் சொல்லமாட்டார்கள் ! |

* * *—கீழ் 'ஒருநான்று தடிபிணக்கே' என்றதைக் கேட்ட கண்ணபிரான் 'நங்கைமீர்காள்! என்னைத் தடிகொண்டா அடிக்கப்போகிறீர்கள்? பரமஸந்தோஷம்! அப்படிப்பட்ட ஆண்புலிகளைத்தான் நானும் தேடிக்கொண்டு கிடக்கிறேன்; தடிபிணக்குக்காரர்கள் எத்தனைவர் வருகிறார்களோ வரட்டும்; எனக்கோ தடியும் வேண்டாம் தாம்பும் வேண்டாம்; 'மல்லரை மாட்டிய தேவாதிதேவன்நான்' என்பதை இன்று காட்டிவிடுகிறேனா இல்லையா பாருங்கள்; அப்படியா ஸமாசாரம்! என்னை யாரென்று நினைத்தீர்கள்? இடையர்கையில் உதைபட்டுப் போகிறவன் நானென்றுபார்த்தீர்களோ? அதையுந்தான் ஒருகை பார்த்து விடுவோமே; என் சரக்கறியாதார்க்கு என்சரக்கை இன்றுகாட்டியே தீருகிறேன் பாருங்கள்' என்று, பெரிய ஆவேசங்கொண்டவன்போலப் படபடத்துப் பேசிநின்றான்; அதுகண்ட ஆய்ச்சிகள், 'பிரானே! உன் சரக்கை நாங்கள் அறியாதவர்களல்லோங்காண்; உன்னுடைய ஜாதகம் முழுவதும் எமக்கு நன்கு தெரியுங்கிடாய்; உன் சரக்கை நாங்கள் அறியாதவர்களாகிலன்றோ இத்தனை ஆரவாரம் நீ செய்யவேண்டும்; நீ அறிவிப்பதற்கு முன்னமே எல்லாம் நாங்களே அறிவோங்காண்; என்றார்கள்; அதுகேட்ட கண்ணபிரான் 'நீங்களறிந்தவாற்றைச் சொல்லிக் காட்டுங்கள் பார்ப்போம்' என்றான்; உன்னுடைய மூலகந்தமே பிடித்து நாங்கள் அறிவோங்காண் என்று பீடிகையிட்டுக்கொண்டு அதைச் சொல்லிக்காட்டுகிறார்கள்— "பிணக்கி யாவையும் யாவரும்" என்று தொடங்கி. முன்னிரண்டடிகள் முழுவதும் வேதாந்தங்களிலே ப்ரஸித்தமான பகவத்சக்தி விசேஷத்தை வெளியிடுவன. ஸம்ஹார ஸமயத்திலே ஸகலசேதநாசேதநங்களையும் நாமரூப விபாக ரஹிதமாம்படி கலசி, ஸ்ருஷ்டி ஸமயத்திலே ஒருவர் கருமம் ஒருவர்க்குத் தட்டாதபடி பிரித்து ஸ்ருஷ்டித்தும் தனக்கொரு தோஷமின்றிக்கே யிராநின்ற ஸர்வஜ்ஞமூர்த்தி நீ என்று நாங்கள் அறிவோம் என்று காட்டினபடி. பிரளயத்திற்குப் பிறகு மீண்டும் ஸ்ருஷ்டிக்கிற காலத்தில் ஸகல ப்ராணிகளுடையவும் கருமங்களை அப்படியப்படியே நினைப்பில்கொண்டிருந்து இறையும் மாறுபாடின்றிக்கே அவரவர்களுடைய கருமங்களின்படியே கரணகளேபர ப்ரதானம்பண்ணி ஸ்ருஷ்டிக்கிறபடியை *பிழையாமல்* என்பது காட்டுகிறது. அந்த ஸ்ருஷ்டியானது பலவகைப்பட்டது என்பதைக் காட்டுகிறது *பேதித்தும்* என்பது. அவற்றின் தோஷங்கள் ஒன்றும் தன்னிடத்தில் தட்டாதபடியைக் காட்டுகிறது *பேதியாததோர்* என்பது.

"கணக்கில் கீர்த்தி வெள்ளக்கதிர்ஞானமூர்த்தியினாய்" என்ற விளியைக் காதாரக் கேட்ட கண்ணபிரான் 'கோவியர்காள்! என் பெருமையை நீங்கள் இங்ஙனம் உள்ளபடி தெரிந்து கொண்டிருந்தும் *ஒருநான்று தடிபிணக்கே* என்று கூசாமல் எங்ஙனம் கூறினீர்

கள்? உங்களுடைய அறிவுக்கும் சொல்லுக்கும் ஒரு சேர்த்தியில்லையே! ஏன் இப்படிச் சொன்னீர்கள்? என்றான். அதற்கு உத்தரமாம் பின்னடிகள்.

[இணக்கி யித்யாதி.] உன்னுடைய ஸர்வஜ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் முதலிய குணங்கள் எங்களுக்குத் தெரிந்திருந்தபோதிலும், நாங்கள் விளையாட்டுச் சிறுமிகளன்றோ? எங்கள் பக்கலிலே நீ நடந்துகொள்ளவேண்டிய முறை இதுவோ? நீ முறைதவறிப் பரிமாறினால் நாங்கள் ‘ஒருநான்று தடிபிணக்கே’ என்றால் இதில் என்ன குற்றம்? நீ பராத்பரனாயிருந்துவைத்து உன்னுடைய பரத்வத்திற்குத் தகுதியற்ற காரியங்களைச் செய்தால் விளையாட்டாக நாங்கள்சொன்ன வார்த்தை பிசகோ? என்றார்கள்.

அதற்குக் கண்ணன் நீங்கள் உங்களுக்கு அஸாதாரணமான விடங்களிலேயிருந்து விளையாடலாகாதோ? எனக்கும் உரித்தான இடத்திலே நீங்கள் வந்தது ஏன்? என்றான்.

பிரானே? நாங்களாக வரவில்லை; இங்கே வரமாட்டோமென்றே நாங்கள் சொல்லிக் கிடந்தோம்; ஆனாலும் எம் தோழிமார் சிலர் பலவாறு நிர்ப்பந்தப்படுத்தவே நாங்கள் இணங்கி வரவேண்டியதாயிற்று; அவர்களும் விளையாடவாருங்கோள் என்றழைக்கவே நாங்கள் விளையாடவந்தோமத்தனை; உன்னுடைய விளையாட்டுவேறு, எங்களுடைய விளையாட்டு வேறு. *𑌅𑌖𑌿𑌲𑌭𑍁𑌵𑌨𑌜𑌨𑍍𑌮𑌸𑍍𑌥𑍇𑌮𑌭𑌙𑍍𑌗𑌾𑌦𑌿𑌲𑍀𑌲𑍇—அகிலபுவநஜந்மஸ்தேமபங்காதிலீலே* என்றும் *நளிர் மாமலருந்தி வீட்டைப்பண்ணி விளையாடும்* என்றுஞ் சொல்லுகிறபடியே ஜகத்ஸ்ருஷ்டி முதலியவை உன்னுடைய விளையாட்டு. பந்துங் கழலுங்கொண்டு போதுபோக்குவது எங்களுடைய விளையாட்டு. உன் விளையாட்டு வைதிகம்; எம் விளையாட்டு லௌகிகம்; உனக்கும் எமக்கும் என்ன சேர்த்தியுண்டு? உன் காரியத்தை நீ பாராய்; எம் காரியத்தை நாங்கள் பார்க்கிறோம் – என்று சொல்லிப் பராமுகங்காட்ட ஆரம்பித்தார்கள் கோபிமார்கள்.

அதற்குமேலே கண்ணபிரான் வளைக்கத் தொடங்கினான்; வழிமடக்குவதும் குறுக்கே படுத்துக்கொள்வதுமான செயல்களைச் செய்தான்; அதுநோக்கி ‘உணக்கி நீ வளைததால் என் சொல்லாருகவாதவரே’ என்கிறார்கள். இதுதான் ரஸமே வடிவெடுத்த பேச்சு. உன்னை உகந்திருக்குமெங்களுக்கு இவ்வளைப்பு பரமபோக்யமே; இதற்கு எங்கள் உள்ளம் மெய்யே குழைகின்றதுகாண். உகவாத பாவிகள் இதைக்கண்டால் *அதுகண்டிவ்வூர் ஒன்று புணர்க்கின்றதே* என்னுமாபோலே எதையேனும் தொடுப்பர்கள் என்றுதான் அஞ்சுகின்றோம் என்றவாறு. (ரு)

3245 உகவையால்நேஞ்சமுள்ளுருகி உன்தாமரைத்தடங்கண்விழிகளின் *
அகவலைப்படுப்பான் அழித்தாயுன்திருவடியால் *
தகவுசெய்திலையெங்கள்சிற்றிலும் யாமடுசிறுசோறுங்கண்டு * நின்
முகவொளிதிகழ முறுவல்செய்துநின்றிலையே. (சு)

| | | | |
|---|---|---|---|
| உகவையால் | அந்தரங்கப்ரீதியாலே | யாம் அடு சிறு சோறும் கண்டு | நாங்கள் சமைக்கிற சிறு சோற்றையுங்கண்டு |
| நெஞ்சம் உள் உருகி | நெஞ்சு உள்ளேயுருகி | நின் முகம் ஒளி திகழ | உன்னுடைய திருமுகமண்டலம் நன்கு பிரகாசிக்கும்படியாக |
| உன் தாமரை தடம் கண்விழிகளின் வலை அகப்படுப்பான் | உன்னுடைய தடந்தாமரைக் கண்ணோக்கமாகிற வலையினுள்ளே நாங்கள் அகப்படும்படி பண்ணுவதற்காக | முறுவல் செய்து நின்றிலை | சிரித்துக் கொண்டே பார்த்துக் கொண்டிருக்க வேண்டியிருக்க, அப்படிச்செய்யாமல் திருவடியாலும் அழித்தாயே; |
| உன் திரு அடியால் அழித்தாய் | உன் திருவடியாலுதைத்து நொறுக்கித் தள்ளினாய்; | | |
| எங்கள் சிற்றிலும் | நாங்கள் இழைக்கின்ற சிற்றிலையும் | தகவு செய்திலை | இரக்கமான காரியம் செய்தாயல்லை. |

* * * கீழ்ப்பாட்டில் *உணக்கி நீவளைத்தால்* என்றபடியே அவன் வளைப்பிட்டுக் கிடக்கச் செய்தேயும் இவர்கள் அந்யபரதை பாவிக்கவேண்டி அவனை யொருபொருளாக மதியாதே தோழிமாரோடுகூடச் சிற்றில்இழைத்துச் சிறு சோறு அட்டு விளையாடிக்கொண்டிருந்தார்கள். இவன்றான் இவர்களுடைய கடாக்ஷமல்லது தனக்கு வேறொருதாரகமில்லையென்று துணிந்திருப்பானொருவனாகையாலே எப்படியாவது இவர்கள் தன்னைக்கடாக்ஷிக்கும்படி செய்துகொள்ளவேண்டுமென்று நினைத்து, அவர்கள் இழைக்கும் சிற்றிலையும் சமைக்கும் சிறு சோற்றையும் தன்னுடைய திருவடிகளாலே உதைத்தொழித்தான்; அவனது திருவுள்ளக்கருத்தையறிந்த இவர்கள் அவனுடைய திருமுகத்தைப்பார்த்துப் பேசுகின்றார்கள்;

உன்பக்கலுள்ள ப்ரேம விசேஷத்தாலே நாங்கள் நெஞ்சு உருகி உன் தாமரைத்தடங்கண் விழிகளாகிற வலையிலே அகப்படுகைக்காக எங்கள் சிற்றிலையும் யாம் அடுகின்ற சிறு சோற்றையும் உன் திருவடியால் அழித்தருளினாய்; நாங்கள் விளையாடுகிறபடியைக் கண்ணாரக் கண்டுகொண்டு மகிழ்ந்து நிற்கையன்றோ உனக்கு அழகு; அந்தோ! அது செய்யமாட்டிற்றில்லையே; கால்படைத்த ப்ரயோஜனம் பெற்றாயே யல்லது கண்படைத்த ப்ரயோஜனம் பெற்றாயில்லையே; கண்ணுடையாரில் நீ தலைவனாயிருந்துவைத்து இங்ஙனே கண்ணற்ற காரியம் செய்யவடுக்குமோ? என்கிறார்கள்.

இவர்கள் சிற்றிலிழைப்பதாகவும் சிறுசோறு சமைப்பதாகவும் சொல்லுவதன் கருத்து பகவத் விஷயத்திற் கண் செலுத்தாதே உலகவியற்கைகளிலே கண்ணோட்டமாயிருந்தமையைக்கூறினபடி. பகவத் விஷயத்தில் ஈடுபட்டிருந்தால் ஒருநாழிகை ஸம்ச்லேஷமும் ஒன்பது நாழிகை விச்லேஷமுமாய் வருந்தவேண்டியிருக்கையாலே, அந்த ஈடுபாடும்வேண்டா, இந்த வருத்தமும் வேண்டா, உண்டுடுத்துத் திரிவாரோடே கூடிக்களித்துக் கிடப்போம் என்று அந்யபரராயிருக்கப் பார்த்தாலும் எம்பெருமானுடைய திருவடியழகு வலியப்பிடித்திழுத்துத் தன்னிடத்தே யீடுபடுத்திக்கொண்டு அந்த அத்யவஸாயத்தைக் குலைக்கின்றதென்பது இதற்கு உள்ளுறை பொருள்.

ஊடல்தீர்ந்து கண்ணபிரானோடே கூடல்நேரவேண்டிய ஸமயம் அணித்தாய்விட்டபடியால் அதற்குத் தகுந்தபடி பாசுரம் அமைகின்றது. "அழித்தாய் உன் திருவடியால்" என்பதற்கு எங்களுடைய சிற்றிலையழித்தாய் என்பதே முக்கியமான பொருளன்று; உன்னுடனே கூடோம் என்கிற எம்முடைய அத்யவஸாயத்தையழித்தாய் என்பதே முக்கியமான பொருள்.

3246 நின்றிலங்குமுடியினாய் இருபத்தோர்காலரசுகளைகட்ட *
வென்றிநீண்மழுவா வியன்ஞாலமுன்படைத்தாய் *
இன்றிவ்வாயர்குலத்தைவீடுய்யத்தோன்றிய கருமாணிக்கச்சுடர் *
நின்றன்னால்நலிவேபடுவோ மென்றுமாய்ச்சியோமே. (௰)

| பதம் | பொருள் |
|---|---|
| நின்று இலங்கு முடியினாய் | நிலைநின்று விளங்குகிற திருவபிஷேகத்தை யுடையவனே! |
| இருபத்தோர் கால் அரசு களை கட்ட | இருபத்தொரு தலைமுறையளவும் அரசர்களை வேர்ப்பறியாகப் பறித்த |
| வென்றி நீள் மழுவா | ஜயசீலமான பெரிய மழுப்படையை யுடையவனே! |
| முன் வியல் ஞாலம் படைத்தாய் | முன்பு விஸ்தீர்ணமான ஜகத்தைப் படைத்தவனே! |
| இன்று இவ் ஆயர் குலத்தை வீடு உய்ய தோன்றிய | இப்போது இவ்விடைக் குலத்தை உஜ்ஜீவிக்கச் செய்வதாக அவதரித்த |
| கரு மாணிக்கம் சுடர் | கருமாணிக்கம் போன்ற திருநிறத்தை யுடையவனே! |
| ஆய்ச்சியோம் | இடைச்சிகளான நாங்கள் |
| என்றும் | எந்நாளும் |
| நின் தன்னால் நலிவே படுவோம் | உன்னால் ஹிம்ஸைப்படுகிறவர்களே யன்றி ஸுகப்படுகிறவர்களல்லோம். |

* * * ப்ரணயரோஷமென்பது நெடும்போது பெருகிச்செல்லமாட்டாது; அப்படி நெடுகிச் செல்லுவது ரஸிகர்களுடைய படியுமன்று. ஊடலானது கூடலிலே மூட்டியல்லது நிற்காதாகையினால் இனிக்கூடல் தலைகாட்டத் தொடங்கிவிட்டது. பிரானே! நீ தான் வெற்றி கொண்டாய், நாங்கள் தோற்றோம் என்று முடிக்கிறார்கள். இங்கே ஈட்டு அவதாரிகைகாண்மின்;—"காலால் அழித்தது சிற்றிலையன்றே; இவர்கள் நெஞ்சில் மறத்தையேயிறே. அந்த மறம் போனவாறே மேல்நோக்கிப் பாதாதிகேசமாகப் பார்த்தார்கள்; தங்களை ஜயிக்கையா லுண்டான ஹர்ஷம் வடிவிலே தோற்றும்படி நின்றான்; அவ்வடிவில்பிறந்த வேறுபாட்டைச் சொல்லுகிறார்கள்."

திருவபிஷேகமணிந்து நிற்பது ஜயஸூசக மாகையாலே தங்களை ஜயித்துவிட்டானென்பதைக் காட்டிக்கொண்டு நின்றிலங்குமுடியினாய் என்கிறார்கள். பிரானே! இதற்குமுன்னே நீ திருவபிஷேகமணிந்தது வெறும் தலைச்சுமையேகாண்; எமது மறத்தைப் போக்கி எங்களை வெற்றிகொண்ட இன்று அணிவதுதான் ஏற்றது என்று சொல்லிக்காட்டுகிறபடி.

வியன் ஞாலமுன்படைத்தாய் என்றதும் ஸாபிப்ராயம்; பிரளயத்திலே உருமாய்ந்து கிடந்த பூமியை உண்டாக்கினாப்போலேயன்றோ ப்ரணய ரோஷத்தாலேயழிந்த எங்களை யுண்டாக்கினபடி என்கை. ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்தாப்போலேயன்றோ விரஹப்ரளயங் கொண்டவெங்களை யெடுத்தபடி என்றுமாம்.

பழைய புராணங்களைச் சொல்லுவானேன்? எங்களை *அடியோங்களடிக்குடில் வீடு பெற்றுய்ந்ததுகாண்* என்னும்படியாக ஸகுடும்பமாய் உஜ்ஜீவனப்படுத்துவதற்காகவேயன்றோ நீ ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவில் ஒருத்திமகனாய் ஒளித்து வளர்வது என்கிறார்கள் மூன்றாமடியால். உன்னைப்பிரிந்து நாங்கள் பட்டபாடு உனக்குத் தெரியாதுகாண் என்பது ஈற்றடியின் கருத்து. நாங்கள் பெண்பிறந்தது ஒருநாளும் சுகப்படுவதற்கன்று, எந்நாளும் துக்கப்படுவதற்கே யென்று நிகமனம் செய்திருக்கிற விதனால் இப்போது ஸம்ச்லேஷ ருசி தலைகாட்டினமை விளங்கும். உன்னோடு கூடுவது மறுபடியும் பிரிந்து துக்கப்படுவதற்கேயாதலால் அந்த துக்கத்தை ஸஹித்துக்கொண்டு இப்போது கூடுகிறோமென்றபடி. (ம)

3247 ஆய்ச்சியாகியவன்னையால் அன்றுவெண்ணெய்வார்த்தையுள்* சீற்றமுண்டழு
கூத்தவப்பன்தன்னைக் குருகூர்ச்சடகோபன்*
ஏத்தியதமிழ்மாலை ஆயிரத்துள்ளிவையுமோர்பத்திசையோடும்*
நாத்தன்னால்நவிலவுரைப்பார்க்கு இல்லைநல்குரவே. (கக)

| | |
|---|---|
| அன்று | பண்டொருகாலத்தில் |
| வெண்ணெய் வார்த்தையுள் | வெண்ணெய்க்களவு ஸம்பந்தமான ப்ரஸ்தாவம் வந்தவளவிலே |
| ஆய்ச்சி ஆகிய அன்னையால் | இடைக்குலத்துதித்த யசோதையாகிய தாயாலே |
| சீற்றம் உண்டு | சீற்றங்கொண்டு |
| அழு கூத்தன் | அழுகையாகிற கூத்தைச் செய்தவனை |
| அப்பன் தன்னை | ஸ்வாமியைக் குறித்து |
| குருகூர்ச்சடகோபன்-ஆழ்வார் | |
| ஏத்திய | ஸ்தோத்ரரூபமாகச் செய்த |
| தமிழ் மாலை ஆயிரத்துள் | தமிழ்த்தொடையான ஆயிரம் பாசுரங்களில் |
| இவையும் ஓர் பத்து | இப்பத்துப் பாசுரங்களை |
| இசையொடும் | இசையோடுகூட |
| நா தன்னால் நவில உரைப்பார்க்கு | நாவினாலே செறியச்சொல்லுமவர்களுக்கு |
| நல்குரவு இல்லை | பகவதநுபவம் கிடையாமையாகிற தாரித்ரியம் இல்லையாம் |

* * *—அன்று யசோதைப்பிராட்டி அழப்பண்ணினதும் அதிஸ்நேஹகார்யம், இன்று காதலிகள் அழப்பண்ணினதும் அதிப்ரணய கார்யம் என்பது முன்னடிகளினுள்ளுறை. வெண்ணெய் களவுகண்டதற்காகக் கட்டியடிக்க அழுதான் என்னாமல் வெண்ணெய் வார்த்தையுள் அழுதானென்று மூலமமைந்திருக்கிற ஸ்வாரஸ்யத்தை நோக்கி ஈட்டிலே அருளிச்செய்கிறபடி பாரீர்;—"ஊரிலே வெண்ணெய்களவு போயிற்று என்றார்கள், அவ்வளவிலே நாமிறே இதுக்கிலக்கு என்று அழப்புக்கான். மடம் மெழுகுவார் ஆர்? என்ன, அச்ரோத்ரியன் என்றார்கள்; இப் பரப்பெல்லாம் என்னாலே மெழுகப்போமோ என்றான், அதுபோலே." ()

## ஆறாம்பத்து—மூன்றாந்திருவாய்மொழி நல்குரவுஞ் செல்வும்.

'எவ்விதத்திலும் இவனோடு கூடலாகாது' என்று மிக்க வுறுதியுடனிருந்த நம்மைக் கூடும்படியாக்கிக்கொண்ட இவனுடைய வலிமை என்னே!" என்று விஸ்மயப்பட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் தன்னுடைய அகடித கடநா ஸாமர்த்தியத்தை நன்கு காட்டிக் கொடுத்து அத்தன்மையனான தான் திருவிண்ணகரிலே நித்யஸந்நிதிபண்ணியிருக்கிறபடியை யும் காட்டிக்கொடுக்க, ஆழ்வார் அதுதன்னைப் பேசி இனியராகிறார் இத் திருவாய்மொழியில்.

3248 நல்குரவும்செல்வும் நரகும்சுவர்க்கமுமாய் *
வெல்பகையும்நட்பும் விடமுமமுதமுமாய் *
பல்வகையும்பரந்தபெருமான் என்னையாள்வானை *
செல்வம்மல்குகுடித் திருவிண்ணகர்க்கண்டேனே. (க)

| பதம் | பொருள் |
|---|---|
| நல்குரவும் செல்வும் | தாரித்ரியம் ஐச்வரியமுமாய் |
| நரகும் சுவர்க்கமும் ஆய் | நரகமும் ஸ்வர்க்கமுமாய் |
| வெல் பகையும் நட்பும் | எதிரியைவெல்லுகின்ற பகையும் (அதற்கு எதிர்த்தட்டையான) ஸ்நேஹமுமாய் |
| விடமும் அமுதமும் ஆய் | விஷமும் அமிருதமுமாய் (ஆக இப்படி) |
| பல் வகையும் பரந்த பெருமான் | பலவகையாக விரிந்த விபூதியையுடையனாய் |
| என்னை ஆள்வானை | என்னை அடிமைகொண்ட ஸர்வேச்வரனை |
| செல்வம் மல்கு குடி | செல்வம் நிரம்பிய ஸந்நிதியான |
| திரு விண்ணகர் | திருவிண்ணகரிலே |
| கண்டேன் | காணப்பெற்றேன். |

* * *—ஒன்றோடொன்று சேராதவற்றை யெல்லாம் தன்பக்கலிலே சேரவிட்டுக் கொண்டிருக்கிற பெருமானைத் திருவிண்ணகரிலே 'காணநின்றே னென்கிறார். நல்குரவு - ஏழைமை; அதற்கு எதிரானது ஐச்வரியம்; இவையிரண்டுமா யிருக்கையாவது—இவை யிரண்டையும் அவரவர்களுக்கு உண்டுபண்ணவல்லவனாயிருக்கை. குசேல முனிவனை தரித்ரனாக்கினதும் தானே; செல்வனாக்கினதும் தானே; பின்னையும் தரித்ரனாக்கியதும் தானே.

நரகும் சுவர்க்கமுமாய் = துக்கமே வடிவெடுத்த நரகத்திலே தள்ளுவதும் தானே; சுகமே வடிவெடுத்த சுவர்க்கத்திலே நிறுத்துவதும் தானே. வெல்பகையும் நட்பும் = த்வேஷத்தை விளைப்பதும் தானே, ஸ்நேஹத்தை விளைப்பதும் தானே. தன் பக்கலில் த்வேஷமுடையவர்களை ஸ்நேஹிகளாக்கிக்கொள்ளவும் வல்லன், ஸ்நேஹமுடையவர்களை த்வேஷிகளாக்கிக் கொள்ளவும் வல்லன் என்றுமாம். மஹாத்வேஷியாயிருந்த கண்டாகர்ணனை ஸ்நேஹியாக்கிக்கொண்டான், மஹாஸ்நேஹியாயிருந்த மாலிகனை த்வேஷியாக்கிக்கொண்டான்; *சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்* என்ற பெரியாழ்வார் திருமொழி காண்க. வெல்பகை = 'ஸமாதானத்தாலே மீளுமதன்றியிலே வென்றேவிடவேண்டும் பகை' என்பது ஈடு.

விடமும் அமுதமுமாய் = அரனுக்கு விஷமளித்தவனும் தானே, அமரர்க்கு அமுதமளித்தவனும் தானே. *அமரர்தமமுதே அசுரர்கள் நஞ்சே!* என்கிறபடியே சிலர்க்கு அமிருதமாயும் சிலர்க்கு விஷமாயுமிருப்பவன் என்றுமாம். ஆகவிப்படி பல்வகையும் பரந்த பெருமானென்று அவனுடைய விபூதி விஸ்தாரத்தைச் சொல்லிற்றாயிற்று. திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில் *யாவராய் நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்று ஓராதார் கற்கின்றதெல்லாம் கடை* என்றார். *ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்* என்றபடி எதையும் பகவத்விபூதி

யாகவே நினைப்பார்க்கு தாரித்ரியமென்று ஒரு தாழ்வும் ஐச்வரியமென்று ஒரு மேன்மையும், நரகமென்று ஒரு துக்கமும் சுவர்க்கமென்று ஒரு சுகமும் தோன்றுதபடி எல்லாம் ஒரு நிகராக வே தோற்றுமென்பது இதனுல் அறிவிக்கப்பட்டதாகும். (க)

3249 கண்டவின்பம்துன்பம் கலக்கங்களும்தேற்றமுமாய் *
தண்டமும்தண்மையும் தழலும்நிழலுமாய் *
கண்டுகோடற்கரியபெருமான் என்னையாள்வானூர் *
தெண்டிரைப்புனல்சூழ் திருவிண்ணகர்நன்னகரே. (உ)

| | | | |
|---|---|---|---|
| கண்ட இன்பம் துன்பம் | உலகங்கண்ட ஸுகதுக்கங்களாயும் | கண்டு கொள் தற்கு அரிய பெருமான் | ஒருவரால் பரிச்சேதித்து அறிய முடியாத விபூதி விஸ்தாரத்தை யுடையனாய் |
| கலக்கங்களும் தேற்றமும் ஆய் | கலக்கமும் தெளிவுமாய் | என்னை ஆள்வான் | என்னை அடிமைகொள்பவனான ஸர்வேச்வரனுடைய |
| | | ஊர் | திவ்யதேசம் எதுவென்றால்; |
| தண்டமும் தண்மையும் | நிக்ரஹமும் அநுக்ரஹமுமாய் | தெண் திரை புனல் சூழ் | தெளிந்து அலையெறிகின்ற தீர்த்தம் சூழ்ந்த |
| தழலும் நிழலும் ஆய் | வெப்பமும் தட்பமுமாய் | திரு விண்ணகர் நல் நகர் | திருவிண்ணகரென்கிற அழகிய நகரமாகும். |

* * *— *ஐங்கருவிகண்டவின்பம்* என்கிறபடியே செவி வாய் கண் மூக்கு உடலென்கிற ஐந்து உறுப்புக்களாலும் அநுபவிக்கப்படுகிற இன்பமும் அதற்கு எதிர்த்தட்டான துன்பமும் தானேயாயிருக்கை! வைஷயிக ஸுகாபாஸங்களையே சிலர் இன்பமாக நினைக்கும்படியும் அவற்றையே சிலர் துன்பமாக நினைக்கும்படியும் செய்யுமவ னென்கை.

கலக்கங்களும் தேற்றமும் ஆய்=எத்தனை புத்தகங்கள் படித்தாலும் சிலர் தெளிவின்றிக்கே கலங்கியே கிடப்பர்கள்; சிலர் ஒன்றும் படித்திலரேயாகிலும் ஆசார்ய கடாக்ஷத்தாலே தெளிந்தே யிருப்பர்கள். பட்டர் கோஷ்டியிலேவந்த சதுச்சாஸ்த்ர வித்வானுடையவும் அறிவிலியான பரமைகாந்தியினுடையவும் இதிஹாஸத்தை நினைப்பது.

தண்டமும் தண்மையும்=நிக்ரஹமும் அநுக்ரஹமும் தானிட்ட வழக்கு. *கல்பகோடிஶதேநாபி ந க்ஷமாமி வஸுந்தரே—கல்பகோடி சதேநாபி ந க்ஷமாமி வஸுந்தரே.* *க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு—க்ஷிபாம்யஜஸ்ரமசுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு * என்று நிக்ரஹிக்கவும், *என்னடியாரதுசெய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் * என்று அநுக்ரஹிக்கவும் காணாநின்றோம்.

தழலும் நிழலுமாய்=சீதோஷ்ணங்களும் அவனிட்ட வழக்கு. திருவிருத்தத்தில் * சேமம் செங்கோனருளே * என்கிற பாட்டும் * மல்லிகைகமழ் தென்றலீருமாலோ * என்கிற திருவாய்மொழியும் இங்கே நினைக்கத்தகும். கண்டுகோள்தற்கரிய பெருமான்—ஒருவகையாக நிஷ்கர்ஷித்து அறியமுடியாதவ னென்கை. யுத்தகாண்டக் காப்புச்செய்யுள் கூறுகின்ற கம்பர் "ஒன்றேயென்னி னொன்றேயாம் பலவென்றுரைக்கிற்பலவேயாம்..............நமக்கிங் கென்னோ பிழைப்பம்மா" என்றது இங்கே நோக்கத்தக்கது. (உ)

3250 நகரமும்நாடுகளும் ஞானமும்மூடமுமாய் *
நிகரில்சூழ்சுடராயிருளாய் நிலனாய்விசும்பாய் *
சிகரமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
புகர்கோள்கீர்த்தியல்லாலில்லை யாவர்க்கும்புண்ணியமே. (ங)

| | | | |
|---|---|---|---|
| நகரமும் நாடுகளும் | ராஜதானிகளும் க்ராமங்களுமாய் | சிகரம் மாடங்கள் சூழ் திரு விண்ணகர் சேர்ந்த பிரான் | சிகரங்களையுடைய மாடங்கள் சூழ்ந்த திருவிண்ணகரிலே பொருந்தி வர்த்திக்குமவனை எம்பெருமானுடைய |
| ஞானமும் மூடமும் ஆய் | ஜ்ஞானமும் அஜ்ஞானமுமாய் | | |
| நிகர் இல் சூழ் சுடர் ஆய் இருள் ஆய் | நிகரற்று எங்கும் பரம்பின பிரகாசமும் அந்தகாரமுமாய் | புகர் கொள் கீர்த்தி அல்லால் | ஒளிமிக்க திருக்குணமல்லது |
| நிலன் ஆய் விசும்பு ஆய் | பூமியும் ஆகாசமுமாய்க் கொண்டு | யாவர்க்கும் புண்ணியம் இல்லை | யாவர்க்கும் உஜ்ஜீவநோபாயம் வேறொன்றுமில்லை. |

***—பெரிய நகரங்களிலே சிறந்த போகங்களை அநுபவித்துக்கொண்டு பஞ்சேந்திரியங்களையும் த்ருப்திபண்ணித் திரிவார் சிலர்; க்ராமங்களிலே இரவும் பகலும் க்ருஷிகார்யங்களிலே பரந்து கஷ்டஜீவனமாய்த் திரிவார் சிலர்; இவை யிரண்டுபடியும் தானிட்ட வழக்கென்கிறது. ஞானமும் மூடமுமாய்=பதார்த்தங்களின் ஸ்வபாவங்களை உள்ளபடி க்ரஹிக்கும் யதார்த்த ஜ்ஞானமும் அவற்றை விபரீதமாக க்ரஹிக்கும் அயதார்த்த ஜ்ஞானமும் தானிட்ட வழக்கென்கிறது.

சுடராய் இருளாய்=பிரகாசமும் அந்தகாரமும் தானிட்ட வழக்கென்கிறது. நிலனாய் விசும்பாய்=உருவமுடைத்தாய்த் தோற்றும் பூமியும் உருவமற்றதான ஆகாசமுமாய். ஆகவிப்படி விருத்த விபூதிகனான ஸர்வேச்வரன் திருவிண்ணகரிலே உறைகின்றான்; அவனுடைய குணாநுபவமல்லது நமக்கு வேறு உஜ்ஜீவநோபாயமில்லையென்றதாயிற்று. (௯)

3251 புண்ணியம்பாவம் புணர்ச்சிபிரிவென்றிவையாய் *
எண்ணமாய்மறப்பாய் உண்மையாய்இன்மையாய்அல்லனாய் *
திண்ணமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
கண்ணனின்னருளே கண்டுகொள்மின்கள்கைதவமே. (௰)

| | | | |
|---|---|---|---|
| புண்ணியம் பாவம் | புண்யபாபங்களாயும் | திண்ணம் மாடங்கள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் | திடமான மாடங்கள் சூழ்ந்த திருவிண்ணகரிலே வர்த்திக்கும் ஸ்வாமியான |
| புணர்ச்சி பிரிவு என்ற இவை ஆய் | ஸம்ச்லேஷ விச்லேஷங்களாயும் | | |
| எண்ணம் ஆய் மறப்பு ஆய் | நினைப்பாயும் மறப்பாயும் | கண்ணன் | கண்ணனுடைய |
| உண்மை ஆய் இன்மை ஆய் | அஸ்தி நாஸ்தி சப்தவிஷயங்களாயும் | இன் அருளே | பரம யோக்யமான க்ருபையே |
| அல்லன் ஆய் | எல்லாவற்றுக்கும் அந்தர்யாமியாயிருந்தும் அவற்றின் தோஷங்கள் தட்டாதவனாயு மிருந்து கொண்டு | கண்டு கொள்மின்கள் | கண்டு கொள்ளுங்கோள்; |
| | | கைதவமே | இது பொய்யோ? [பரமார்த்தம் என்றபடி.] |

*** சுகத்திற்குச் சாதனமான புண்ணியமும் துக்கத்திற்குச் சாதனமான பாவமும் அவனிட்ட வழக்கு. புணர்ச்சி பிரிவு=அபிமதவிஷயங்களோடே கூடி வாழ்வது புண்யபலமென்றும், அவற்றைப் பிரிந்துவருந்துவது பாபபலமென்றும் சொல்லுவர்கள்; அந்த ஸம்ச்லேஷ விச்லேஷங்களும் இவனிட்ட வழக்கு.

எண்ணமாய் மறப்பாய்=ஸ்மரணமும் விஸ்மரணமும் இவனிட்ட வழக்கு. உண்மையாய் இன்மையாய்=உளதென்கிற சொல்லுக்கு விஷயமான உண்மையும், இலதென்கிற சொல்லுக்கு விஷயமான இல்லாமையும் இவனிட்ட வழக்கு. அல்லனாய்=புண்யம் பாபம் முதலியவற்றிற்குத் தான் நியாமகனாயிருந்துவைத்தும் அவற்றுக்கு வசப்பட்டிராதவன் என்றவாறு. "ஸகல பதார்த்த அந்தர்யாமிதயா வ்யாப்தனாயிருந்துவைத்தே தத்கததோஷை: அஸம்ஸ்ப்ருஷ்டனாய்" என்பது ஆறாயிரப்படி.

கைதவமே—ஏகாரம் எதிர்மறையில்; கைதவமன்று என்றபடி. ஸத்யமான விஷய மென்கை. ஈடு;—"அன்றிக்கே, கைதவம்–க்ருதக மென்றபடியாய் பண்ணப்பட்டவை யடங்கலும் அவனுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தாலே." (சு)

3252 கைதவம்செம்மை கருமைவெளுமையுமாய் *
மெய்பொய்யிளமைமுதுமை புதுமைபழமையுமாய் *
செய்ததிண்மதிள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடைமூவுலகே. (ரு)

| | |
|---|---|
| கைதவம் செம்மை | கோணலும் நேர்மையுமாய் |
| கருமை வெளுமையும் ஆய் | கறுப்பும் வெளுப்புமாய் |
| மெய் பொய் | மெய்யும் பொய்யுமாய் |
| இளமை முதுமை | யௌவனமும் கிழத்தனமுமாய் |
| புதுமை பழமையும் ஆய் | நவீநத்வமும் ஜீர்ணத்வமுமாய்க்கொண்டு |
| செய்த திண் மதிள் சூழ் | வேலைப்பாடுகளுடன் செய்யப் பட்ட திடமான மதிளாலே சூழப்பட்ட |
| திருவிண்ணகர் | திருவிண்ணகரிலே |
| சேர்ந்த பிரான் | வர்த்திக்கிற ஸர்வேச்வரன் |
| பெய்த காவு கண்டீர் | ஆக்கின சோலையன்றோ |
| பெரும் தேவு உடை மூஉலகு | பிரமன் முதலான உத்க்ருஷ்ட தேவதைகளை யுடைத்தான மூவுலகமும். |

* * * 'பெருந்தேவுடை மூவுலகும் அவன் பெய்த காவு' என்றது ப்ரஹ்மா முதல் பிபீலிகையளவாகவுள்ள ஸமஸ்த ப்ராணிவர்க்கமும் அவனுடைய ரக்ஷ்யகோடி என்கை. கைதவமாவது வக்ரத்வம். செம்மையாவது ருஜுவாயிருத்தல். சிலரிடத்தில் கோணல் தவிர வேறுகிடையாது; சிலரிடத்தில் செம்மைதவிர வேறுகிடையாது; இவை யிரண்டும் அவனிட்ட வழக்கு. கைதவமும் செம்மையுமாகிற இரண்டும் எம்பெருமானிடத்திலேயே உண்டு என்றும் கொள்ளலாம்.

கருமை வெளுமையுமாய் = கண்ணனாய்ப் பிறந்து கரியகோலத் திருவுருவமாய்க் காட்சி தருவன்; நம்பிமூத்தபிரானாய்ப் பிறந்து "முன்னம்பெற்ற வளைவண்ண நன்மாமேனி" என்னும்படி வெளுத்த திருக்கோலமாய் ஸேவை ஸாதிப்பன். இங்கே "முன்னலோர் வெள்ளிப்பெரு மலைக்குட்டன் மொடு மொடு விரைந்தோடப், பின்னைத் தொடர்ந்ததோர் கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவது" என்ற பெரியாழ்வார் திருமொழியை நினைப்பது.

மெய் பொய் = * ஸத்யேந லோகாந் ஜயதி—ஸத்யேந லோகாந் ஜயதி."* என்னும்படியாக ஸத்யம் வீறுபெறுதற்கு ஒரு அவதாரமும் 'பொய்ந்நம்பி புள்ளுவன் கள்வம் பொதியறை' "பொய்யாவுன்னைப்புறம் பல பேசுவ புத்தகத்துக்குள கேட்டேன்" என்னும்படி அஸத்யம் வீறுபெறுதற்கு ஒரு அவதாரமும். *பொய்யர்க்கே பொய்யனாகும்-மெய்யர்க்கே மெய்யனாகும்* என்றதுமுண்டே.

இளமை முதுமை = 'பேதைக்குழவி' என்னும்படியான இளம்பிராயமாயிருக்கச் செய்தேயும் 'எந்தை தந்தைதந்தை தந்தைதந்தைக்கும் முந்தை' என்னும்படியான புராண புருஷத்வத்திலும் குறையில்லையே.

புதுமை பழமையுமாய் = மிகப்பழைய அநுபவமாயிருக்கச்செய்தேயும் 'எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதமே' என்னும் படியாக அப்போதப்போது புதுமைக்கும் குறையில்லாதிருக்குமே. (ரு)

3253 மூவுலகங்களுமாய்அல்லனாய் உகப்பாய்முனிவாய் *
வில்வாழ்மகளாய்த் தௌவையாய்ப்புகழாய்ப்பழியாய் *

தேவர்மேவித்தொழும் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
பாவியேன்மனத்தே உறைகின்றபரஞ்சுடரே. (௬)

| | |
|---|---|
| மூ உலகங்களும் ஆய் | (ஆக்குவதற்கும் அழிப்பதற்கும் நிலமான) மூன்று லோகங்களாயும் |
| அல்லன் ஆய் | (அங்ஙனல்லாத) நித்ய விபூதியாயும் |
| உகப்பு ஆய் முனிவு ஆய் | ராகத்வேஷங்களாயும் |
| பூவில் வாழ் மகள் ஆய் | ஸ்ரீமஹாலக்ஷ்மியாயும் |
| தௌவை ஆய் | மூதேவி யென்கிற அலக்ஷ்மியாயும் |
| புகழ் ஆய் பழி ஆய் | கீர்த்தியாயும் அபகீர்த்தியாயும் இருந்துகொண்டு, |
| தேவர் மேவி தொழும் திரு விண்ணகர்சேர்ந்தபிரான் | தேவர்கள் விரும்பித் தொழுமிடமான திருவிண்ணகரில் உறையும் பெருமான் |
| பாவியேன் மனத்தே | பாவியான என்னுடைய மனத்திலே |
| உறைகின்ற | நித்யவாஸம்பண்ணுகின்ற |
| பரம் சுடர் | பரஞ்சோதியாவன். |

* * * படைக்கப்படுதல், கருமங்களுக்கு வசப்பட்டிருத்தல், ஸத்வ ரஜஸ் தமோ குணமயமாயிருத்தல் என்கிற இவற்றாலே அவிலக்ஷணமாயிருக்கும் மூன்று லோகங்கள்; இத்தன்மைகளுக்கு எதிர்த்தட்டாய்ப் பரமவிலக்ஷணமாயிருக்கும் நித்யவிபூதி; இவையெல்லாம் இவனிட்ட வழக்கென்கிறது. உகப்பாய் முனிவாய்=ஒரு வஸ்துவை ஒருவர் உகந்திருப்பதும், அதுதன்னையே மற்றொருவர் வெறுத்திருப்பதுமான உகப்பும் முனிவும் அவனிட்ட வழக்கு. ஒருவனுக்கே ஒன்றில் ஒருகால் உகப்பும் அவனுக்கே அதுதன்னிலேயே மற்றொருகால் வெறுப்புமாதலால் அவையு மிங்குக் கொள்ளலாம்.

பூவில்வாழ்மகளாய்த் தௌவையாய்=லக்ஷ்மீகடாக்ஷம் பெறுவானொருத்தன், மூதேவி பிடித்துத் திரிவானொருத்தன்; இவை யிரண்டும் அவனதீனம். *நாட்டினான் தெய்வமெங்கும் நல்லதோரருள்தன்னாலே, காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும்வண்ணம், கேட்டிரே நம்பிமீர்காள் கெருடவாகனனும்நிற்கச், சேட்டைதம்மடியகத்துச் செல்வம்பார்த்திருக்கின்றீரே* என்கிற திருமாலையின்படியே சிலர் திருமாலைத்தொழுது உய்வதும் சிலர் தேவதாந்தர பஜனம்பண்ணி அநர்த்தப்பட்டுப் போவதும் அவனிட்ட மாயை என்றவாறு. (௬)

3255 பரஞ்சுடருடம்பாய் அழுக்குப்பதித்தவுடம்பாய் *
கரந்தும்தோன்றியும்நின்றும் கைதவங்கள்செய்தும் * விண்ணோர்
சிரங்களால்வணங்கும் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
வரங்கொள்பாதமல்லாலில்லை யாவர்க்கும்வன்சரணே. (எ)

| | |
|---|---|
| பரம் சுடர் உடம்பு ஆய் | அப்ராக்ருத விக்ரஹயுக்தனுயும் |
| அழுக்கு பதித்த உடம்பு ஆய் | ஹேய ஜகத்ரூப சரீரயுக்தனுயும் |
| கரந்தும் தோன்றியும் நின்றும் | மறைந்தும் வெளிப்பட்டுமிருந்தும் |
| கைதவங்கள் செய்தும் | வஞ்சனைகளைச் செய்தும் (இப்படிப்பட்ட தன்மைகள் திகழ) |
| விண்ணோர் சிரங்களால் வணங்கும் திரு விண்ணகர் சேர்ந்த பிரான் | தேவர்கள் தலைவணக்கித் தொழுமிடமான திருவிண்ணகரிலே உறையும் பெருமானுடைய |
| வரம் கொள் பாதம் அல்லால் | சிறப்புப்பொருந்திய திருவடிகள் தவிர |
| யாவர்க்கும் வன் சரண் இல்லை | யார்க்கும் வலிதான புகலிடம் வேறில்லை. |

* * * எம்பெருமானுக்கு இரண்டு வகையான சரீரங்களுண்டு; அப்ராக்ருதமாய் சுத்தஸத்வமயமான அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹம் ஒன்று; "ஜகத் ஸர்வம் சரீரம் தே." என்கிறபடியே ஸகல ஜகத்தும் அவனுக்கு சரீரமாகையாலே இந்த ஸமஸ்த ஹேயாஸ்பத சரீரம் மற்றொன்று.

கரந்தும் தோன்றியும்=*இராமடமூட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்* என்றும், *கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று* என்றும் (பிள்ளைலோகாசார்யர்) அருளிச்செய்கிறபடியே மறைந்திருப்பதும், *காணவாராயென்றென்று கண்ணும்வாயும் துவர்ந்திருப்பார்க்குக் காணலாம்படி ராமக்ருஷ்ணாதி அவதாரங்களைச் செய்வதும் விவக்ஷிதம். நின்றும்—நூறாண்டு பதினோராயிரமாண்டு நின்றும். கைதவங்கள் செய்தும்=பகலை இரவாக்கியும், ஆயுதமெடேனென்று ஆயுதமெடுத்தும் செய்தவை. கைதவம்—வடசொல்; க்ருத்ரிமம் என்றபடி. "அவதரித்து நிற்கச்செய்தே தன்படிகள் சிசுபாலாதிகளுக்குத் தோற்றாதபடி பண்ணியும் ஆச்ரிதர்க்குத் தோற்றும்படிபண்ணியும்" என்பது ஈடு.

இப்படிப்பட்டவன், பிரமன் முதலான தேவர்கள் தலைபடைத்த ப்ரயோஜனம் பெற்றோம் என்று வணங்கும்படி திருவிண்ணகரிலே உறைகின்றான்; அவனுடைய திருவடிகளல்லது புகலில்லை. (எ)

3256 வன்சரண்சுரர்க்காய் அசுரர்க்குவெங்கூற்றமுமாய் *
தன்சரண்ணிழற்கீழ் உலகம்வைத்தும்வையாதும் *
தென்சரண்திசைக்குத் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
என்சரணென்கண்ணன் என்னையாளுடையென்னப்பனே. (அ)

| | | | |
|---|---|---|---|
| சுரர்க்கு வன் சரண் ஆய் | தேவர்களுக்குச் சிறந்த புகலிடமாய் | தென் திசைக்கு சரண் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் | தென்திசைக்குள்ளே புகலிடமான திருவிண்ணகரிலே தங்கியுள்ள பெருமான் |
| அசுரர்க்கு வெம் கூற்றமும் ஆய் | அஸுரர்களுக்கு வலிய மிருத்யுவாய் | என் சரண் | எனக்கு சரண்யன், |
| உலகம் தன் சரண் நிழல் கீழ் வைத்தும் வையாதும் | உலகத்தைத் தன் திருவடிச் சாயையிலே ஒதுக்கியும் ஒதுக்காமலும் (இருந்துகொண்டு) | என் கண்ணன் | எனக்கு விதேயன், |
| | | என்னை ஆளுடை என் அப்பன் | என்னை அடிமைகொண்ட மஹோபகாரகன். |

* * *—தன்சரண்நிழற்கீழ் உலகம்வைத்தும்வையாதும்=* காதம் பலவும் திரிந்துழன்றேற்கு அங்கோர்நிழலில்லை நீரில்லை உன்பாதநிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்கும் காண்கின்றிலேன் * (பெரியாழ்வார் திருமொழி.) என்று தன்திருவடிகளிலேவந்து சேர்வார்க்கு ஸகலதாபங்களும் தீரும்படி நிழல்கொடுத்தும், விஷயாந்தரங்களின் சாயையிலே யொதுங்கி மகிழ நினைப்பார்க்குத் தாபத்தை வளர்த்தும் இப்படிப்பட்ட தன்மையை யுடையவன் தென் திசைக்குத் திலதமான திருவிண்ணகரிலே திகழாநின்றான், அவனே யெனக்கு ஸர்வாத்மநா புகல் என்றாராயிற்று. (அ)

3257 என்னப்பனெனக்காயிகுளாய் என்னைப்பெற்றவளாய் *
பொன்னப்பன்மணியப்பன் முத்தப்பனென்னப்பனுமாய் *
மின்னப்பொன்மதிள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன் *
தன்னொப்பாரில்லப்பன் தந்தனன்தனதாள்நிழலே.

| | | | |
|---|---|---|---|
| எனக்கு என் அப்பன் ஆய் இகுள் ஆய் என்னை பெற்றவள் ஆய் | எனக்குத் தந்தையாயும் செவிலித்தாயாயும் பெற்றதாயாயும் | மின்ன பொன் மதிள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த அப்பன் | ஒளிவிடும்படி பொன்மயமான மதிளாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலே தங்கும் ஸ்வாமியானவன் |
| பொன் அப்பன் மணி அப்பன் முத்து அப்பன் என் அப்பனும் ஆய் | பொன் மணி முத்து இவற்றின் தன்மைபோன்ற தன்மையை யுடையனும் மஹோபகாரகனுமிருந்துகொண்டு | தன் ஒப்பார் இல் அப்பன் | தன்னோடொத்தார் இல்லாத மஹான்; |
| | | தன தாள் நிழல் தந்தனன் | (எனக்குத்) தனது திருவடிநிழலைக் கொடுத்தருளினான். |

* * * உலகத்தில் பிதாவாயிருப்பவன் தாயாயிருக்க முடியாது; தாயாயிருப்பவள் தோழியாயிருக்க முடியாது; இப்படிப்பட்ட விருத்த தர்மங்களெல்லாம் எம்பெருமான் திறத்தே குடிகொண்டிருக்கின்றன வென்கிறார் முதலடியில்.

இகுளாய் என்கிறவிடத்தில் இருபத்தினாலாயிரப்படி ஸ்ரீஸூக்தி;—"(இகுளாய்) தோழியாய். இது தமிழர் நிர்வாஹம். நம்முடையவர்கள், செவிலித்தாய் என்று நிர்வஹிப்பர்கள்; தாய்க்குத் தோழியாயிருக்குமிறே செவிலித்தாய், அத்தைச் சொல்லுகிறது." என்று. ஈட்டு ஸ்ரீஸூக்தி—"(இகுளாய்) இகுளையென்று தோழிக்குப்பேராய் அத்தைக்குறைத்து இகுளேன்று கிடக்கிறது." என்று. (க०)

3258 நிழல்வெய்யில்சிறுமைபெருமை குறுமைநெடுமையுமாய் *
சுழல்வனநிற்பன மற்றுமாயவையல்லனுமாய் *
மழலைவாய்வண்டுவாழ் திருவிண்ணகர்மன்னுபிரான் *
கழல்களன்றி மற்றோர்களைகணிலம்காண்மின்களே. (ய)

| | |
|---|---|
| நிழல் வெய்யில் | நிழலாயும் வெய்யிலாயும் |
| சிறுமை பெருமை | அணுத்வமாயும் விபுத்வமாயும் |
| குறுமை நெடுமையும் ஆய் | ஹ்ரஸ்வத்வமாயும் தீர்க்கத்வமாயும் |
| சுழல்வன நிற்பன மற்றும் ஆய் | ஜங்கமங்களாயும் ஸ்தாவரங்களாயும் மற்றுமுள்ள பதார்த்தங்களாயும் |
| அவை அல்லனும் ஆய் | அவற்றினுடைய ஸ்வபாவத்தையுடையனல்லாதவனாயும் இருந்துகொண்டு |
| மழலை வாய் வண்டு வாழ் திருவிண்ணகர் மன்னு பிரான் | மழலைப்பேச்சையுடைய வண்டுகள் களித்துவர்த்திக்கிற திருவிண்ணகரிலே நித்யவாஸம் பண்ணுகிற எம்பெருமானுடைய |
| கழல்கள் அன்றி | திருவடிகள் தவிர |
| மற்று ஓர் களைகண் இலம் | வேறொரு ரக்ஷகவஸ்துவையுடையோமல்லோம் |
| காண்மின்கள் | இதை ஸத்யமென்று கொள்ளுங்கள். |

* * * "பாட்டுக்கு க்ரியையும் பத்துக்குக் கருத்தும்போலே நூற்றுக்கு உபதேசப் பத்து" என்கிற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியின்படி ஒவ்வொரு நூறுபாசுரங்களினுள்ளும் ஒவ்வொரு பதிகம் உபதேசபரமாயிருக்குமாதலால் இந்த ஆறும்பத்துக்கு இத் திருவாய்மொழியே உபதேசபரமாகக் கொள்ளத்தக்கது. இது உபதேச ரூபமென்பது மற்ற பாசுரங்களில் வ்யக்தமாகக் காணாமல் இப்பாசுரத்தில் வ்யக்தமாகக் காண்கிறது; "மற்றோர் களைகணிலம் காண்மின்களே" என்றது காண்க. பன்னீராயிரப்படியிலும் இப்பாட்டின் உரையவதாரிகையில் "உபதேசித்து முடிக்கிறார்" என்றருளிச் செய்திருப்பதுங் குறிக்கொள்க. (ய)

3259 காண்மின்களுலகீரென்று கண்முகப்பேநிமிர்ந்த *
தாளிணையன்தன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
ஆணையாயிரத்துத் திருவிண்ணகர்ப்பத்தும்வல்லார் *
கோணையின்றிவிண்ணோர்க்கு என்றுமாவர்குரவர்களே. (கக)

| | |
|---|---|
| உலகீர் காண்மின்கள் என்று | 'உலகத்திலுள்ளவர்களே! இந்த விநோதத்தைக் காணுங்கோள்' என்று (சொல்பவன் போன்று) |
| கண் முகப்பே நிமிர்ந்த தாள் இணையன் தன்னை | கண்ணெதிரே ஓங்கி வளர்ந்த உபயபாதங்களை யுடையவனான எம்பெருமான் விஷயமாக |
| குருகூர் சடகோபன் சொன்ன | நம்மாழ்வார் அருளிச்செய்த |
| ஆணை ஆயிரத்து | பகவதாஜ்ஞா ரூபமான ஆயிரத்தினுள்ளும் |
| திரு விண்ணகர் பத்தும் வல்லார் | திருவிண்ணகர் விஷயமான இப்பதிகத்தை ஓதவல்லவர்கள் |
| விண்ணோர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| கோணை இன்றி | மிறுக்கு இல்லாமல் |
| என்றும் குரவர்கள் ஆவர் | எப்போதும் கௌரவிக்கத்தகுந்தவராவர்கள். |

# ஆறும்பத்து—நான்காந் திருவாய்மொழி குரவையாய்ச்சியரோடு.

கீழ் ஐந்தாம்பத்தில் * பிறந்தவாறும் என்கிற திருவாய்மொழியில் எம்பெருமானுடைய சேஷ்டித விசேஷங்களைச் சிந்தித்து உருகி உள்குழைந்து அந்தோ! அநுபவிக்க முடியவில்லையே யென்று தளர்ந்து பேசினர்; அக்குறை தீர்கின்றது இத்திருவாய்மொழியில். எம்பெருமானுடைய பலபல சேஷ்டித விசேஷங்களை வாயாரச் சொல்லி நன்ருக அநுபவித்து அதனல் தமக்குண்டான பூரிப்பைப் பெருமிடறு செய்து வெளியிடுகின்ருராழ்வார் இத்திருவாய்மொழியில்.

3260 குரவையாய்ச்சியரோடுகோத்ததும் குன்றமொன்றேந்தியதும் *
உரவுநீர்ப்போய்கைநாகம்காய்ந்ததும் உட்படமற்றும்பல *
அரவிற்பள்ளிப்பிரான்தன் மாயவினைகளையேயலற்றி *
இரவுநன்பகலும்தவிர்கிலம் என்னகுறைநமக்கே. (க)

| | |
|---|---|
| ஆய்ச்சியரோடு குரவை கோத்ததும் | கோபிமார்களோடு ராஸக்ரீடை செய்ததென்ன |
| குன்றம் ஒன்று ஏந்தியதும் | கோவர்த்தன மென்கிற மலையொன்றைக் குடையாக வெடுத்த தென்ன, |
| உரவு நீர் பொய்கை நாகம் காய்ந்ததும் | முதிர்ந்த ஜலத்தையுடைத்தான யமுனைப் பொய்கையில் காளியநாகத்தை முனிந்த தென்ன |
| உட்பட | ஆகிய இவை முதலாக |
| மற்றும் பல | மற்றும் பலவகைப்பட்டவையான |
| அரவில் பள்ளி பிரான் தன் மாயம் வினைகளையே அலற்றி | நாகபர்யங்கசயனனுன கண்ணபிரானது அற்புதசேஷ்டிதங்களையே வாயாரப்பேசி |
| நல் இரவும் பகலும் தவிர்கிலம் | வாய்த்த இரவிலும் பகலிலும் ஓய்கின்றிலோம்! |
| நமக்கு என்ன குறை | இங்ஙனே இடைவீடின்றி அநுபவிக்கப்பெற்ற நமக்கு என்ன குறையுண்டு? |

* * * ராஸக்ரீடை, கோவர்த்தநோத்தரணம், காளியமர்த்தனம் என்கிற மூன்று அபதானங்களை இதிற்பேசி இனியராகிருர். இங்கு முதன்முதலாகக் குரவைக் கூத்தைப் பற்றிப் பேசுவானேன்? என்று சங்கித்துக்கொண்டு நம்பிள்ளை யருளிச்செய்வது பாரீர்;— "* மின்னிடைமடவாரிலுண்டான தம்முடைய ப்ரணய ரோஷத்தைப் போக்கித் தம்மைச் சேரவிட்டுக்கொண்டபடி, திருக்குரவையில் பெண்களோடே கலந்து அவர்களை அநுபவிப்பித்தாப்போலே யிருக்கையாலே அது முன்னுகப் பேசுகிருர். தாம் அநுஸந்திக்கிலிறே ஓரடைவாக இழிவது; அவன் அநுபவிப்பித்தபடியே பேசுகிருர். திருக்குரவையிற் பெண்களோடுண்டான கலவியையாயிற்று இவர்க்கு முதலிலே காட்டிக்கொடுத்தது. பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களெல்லாரோடுங் கலந்த ப்ரீதியுண்டாயிற்று இவரொருவரோடே கலந்த ப்ரீதி." "தவிர்கிலன் என்ன குறை வேனக்கே" "தவிர்கிலம் என்னகுறை நமக்கே" என்பன பாட பேதங்கள். (க)

3261 கேயத்தீங்குழலூதிற்றும் நிரைமேய்த்ததும் * கேண்டையோண்கண்
வாசப்பூங்குழல்பின்னைதோள்கள்மணந்ததும் மற்றும்பல *
மாயக்கோலப்பிரான்தன் செய்கைநினைந்துமனங்குழைந்து *
நேயத்தோடுகழிந்தபோது எனக்கேவ்வுலகம்நிகரே. (உ)

| | |
|---|---|
| கேயம் தீம் குழல் ஊதிற்றும் | சிறந்த கானமாக மதுரமான வேய்ங்குழலை ஊதினதென்ன, |
| நிரை மேய்த்ததும் | பசுக்கூட்டங்களை மேய்த்ததென்ன, |

| பதம் | பொருள் |
|---|---|
| கெண்டை ஒண் கண் வாசம் பூ குழல் பின்னை தோள்கள் மணந்ததும் | கெண்டை மீன்போன்று அழகிய கண்களையும் நறுமணம் மிக்க பூக்களணிந்த கூந்தலையுமுடைய நப்பின்னையின் தோள்களோடே அணையப் பெற்றதென்ன இவையும் |
| மற்றும் பல | மற்றும் பலவுமான |
| மாயம் கோலம் பிரான் தன் செய்கை | திவ்யமங்கள விக்ரஹசாலியான கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களை |
| நினைந்து | சிந்தனைசெய்து |
| மனம் குழைந்து | நெஞ்சு நீர்ப்பண்டமாகி |
| நேயத்தோடு எனக்கு கழிந்தபோது | அன்போடு எனக்குக் கழிகின்ற காலத்தின் விஷயத்தில் |
| எவ்வுலகம் நிகர் | உபயவிபூதியும் ஒவ்வாது. |

3262 நிகரில்மல்லரைச்சேற்றதும் நிரைமேய்த்ததும்நீள்நெடுங்கை *
சிகரமாகளிறட்டதும் இவைபோல்வனவும்பிறவும் *
புகர்கோள்சோதிப்பிரான்தன் செய்கைநினைந்துபுலம்பி * என்றும்
நுகரவைகல்வைகப்பெற்றேன் எனக்கேன்னினிநோவதுவே. (௫)

| பதம் | பொருள் |
|---|---|
| நிகர் இல் மல்லரை செற்றதும் | (மிடுக்கில்) ஒப்பில்லாத மல்லர்களை முடித்த தென்ன |
| நிரை மேய்த்ததும் | பசுக்களை மேய்த்த தென்ன |
| நீள் நெடு கை | உயர்ந்த நெடிய துதிக்கையையுடைத்தாய் |
| சிகரம் மா | மலைச்சிகரம்போன்று பெரிதான |
| களிறு | (கஞ்சனது) யானையை |
| அட்டதும் | கொன்றொழித்ததென்ன; இவை போல்வனவும் பிறவும்—; |
| புகர் கொள் சோதி பிரான் தன் செய்கை | மிகவும் ஜ்வலிக்கின்ற ஒளியுருவனை கண்ணபிரானுடைய செயல்களை |
| நினைந்து புலம்பி | நினைத்தும் வாய்விட்டுக் கதறியும் |
| என்றும் நுகர | நித்தியமும் அநுபவிக்கும்படியாக |
| வைகல் வைக பெற்றேன் | காலம் மிகவும் நீளும்படி பெற்றேன்; |
| இனி | இப்படியான பின்பு |
| எனக்கு என் நோவது | எனக்கு க்லேசப்படவேண்டுவதுண்டோ? |

* * * என்றும் நுகர வைகல் வைகப்பெற்றேன்=இப்படிப்பட்ட சேஷ்டிதங்களை நாடோறும் புஜித்துக்கொண்டு காலம் கழியப்பெற்றேன்; (அல்லது) அநுபவிக்கைக்குப் போரும்படி காலமானது நெடுகப்பெற்றேன் என்னவுமாம். (௫)

3263 நோவவாய்ச்சியுரலோடார்க்க இரங்கிற்றும்வஞ்சப்பெண்ணை *
சாவப்பாலுண்டதும் ஊர்சகடமிறச்சாடியதும் *
தேவக்கோலப்பிரான்தன் செய்கைநினைந்துமனங்குழைந்து *
மேவக்காலங்கள்கூடினேன் எனக்கேன்னினிவேண்டுவதே. (4)

| பதம் | பொருள் |
|---|---|
| ஆய்ச்சி நோவ | யசோதைப் பிராட்டியானவள் திருமேனியில் நோவுண்டாகும்படி (அல்லது, பக்தர்களின் மனம் துடிக்கும்படி) |
| உரலோடு ஆர்க்க | உரலோடு சேர்த்துப் பிணைக்க |
| இரங்கிற்றும | ([illegible]ற்கு) ஏங்கியிருந்தபடியென்ன, |
| வஞ்சம் பெண்ணை சாவ | வஞ்சனைசெய்யவந்த பூதனை முடியும்படி |
| பால் உண்டதும் | அவளது முலைப்பாலை உண்டதென்ன, |
| ஊர் சகடம் இற சாடியதும் | (அஸுராவேசத்தாலே) ஊர்ந்து வந்த சகடம் பொடிபடும்படி தகர்த்ததென்ன (ஆக இப்படிப்பட்ட) |
| தேவக் கோலம் பிரான் தன் செய்கை | அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹனை கண்ணபிரானுடைய செயல்களை |
| நினைந்து | அநுசந்தித்து |
| மனம் குழைந்து | நெஞ்சு நெகிழ்ந்து |
| மேவ | பொருந்தும்படி |
| காலங்கள் கூடினேன் | காலங்கள் பலிக்கப் பெற்றேன்; |
| எனக்கு | இங்ஙனே பாக்கியம் பெற்ற எனக்கு |
| இனி வேண்டுவது என் | இனிப்பெறவேண்டுவதொன்றுண்டோ ? |

* * * இங்கே நம்பிள்ளை யீடு;—"ஜீயர் இப்பாட்டை இயலருளிச்செய்யப் புக்கால் நோவ என்றருளிச் செய்யுமழகுகாணும். நோவவென்கிறார்காணும் ஆழ்வார்திருமேனி யிலே கயிறு உறுத்தினாற்போலே." (ச)

3264 வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும் வீங்கிருள்வாய்
பூண்டு * அன்று அன்னைபுலம்பப்போய் அங்கோராய்க்குலம்புக்கதும் *
காண்டலின்றிவளர்ந்து கஞ்சனைத்துஞ்சவஞ்சம்செய்ததும் *
ஈண்டுநானலற்றப்பெற்றேன் எனக்கென்னவிகலுளதே. (ரு)

தேவர் இரக்க — தேவதைகள் பிரார்த்திக்க
வேண்டி — திருவுள்ளமுவந்து
வந்து பிறந்ததும் — நிலவுலகத்தில் வந்து அவதரித்த தென்ன
அன்று — அப்போதே
அன்னை — பெற்றதாயான தேவகி
பூண்டு — (கஞ்சன்பக்கல் பயத்தினால்) எடுத்தணைத்துக்கொண்டு
புலம்ப — இங்கேயிருந்தால் என்ன அபாயம் விளையுமோவென்று கதறி யழுதவளவிலே
வீங்கு இருள் வாய்—செறிந்த இருளிலே
அங்கு போய் — அவ்விடத்தினின்றும் புறப்பட்டுச் சென்று
ஓர் ஆய் குலம் புக்கதும் — இடைச்சேரியிலே பிரவேசித்த தென்ன,
காண்டல் இன்றி வளர்ந்து — விரோதிகளுக்குக் காணுதலில்லாதபடி மறைவாக வளர்ந்து
கஞ்சனை துஞ்ச வஞ்சம் செய்ததும் — கம்ஸன் முடியும்படியாக அவன் திறத்திலே வஞ்சனைசெய்ததென்ன ஆகிய இச்செயல்களை
ஈண்டு — இப்போது (அல்லது) இவ்விடத்தே
நான் அலற்ற பெற்றேன் — நான் வாய்விட்டு உத்கோஷிக்கப்பெற்றேன்;
எனக்கு என்ன இகல் உளது — இனி எனக்கு என்ன குறையுண்டு?

* * * தேவர் இரக்கவந்து பிறந்தது, வேண்டிவந்து பிறந்தது என்று இரண்டாக யோஜித்துக்கொள்வது. தங்களுக்குப் பகைவரான அரக்கரசுரர்களை வந்து முடிக்கவேணு மென்று தேவர்கள் பிரார்த்திப்பவர்களாதலால் துஷ்டர்களை சிக்ஷிப்பதற்காக வந்து பிறந்தமை 'தேவர் இரக்க' என்பதனால் பெறப்படும். பரமபதத்தில் இருந்துகொண்டே ஸங்கல்பமாத் திரத்தினாலாவது திருவாழியாழ்வானை யிட்டாவது துஷ்டர்களைத் தொலைத்திட முடியுமாதலால் அதற்காக பகவான் வந்து பிறக்கவேண்டிய அவசியமில்லை; தன் வடிவழகு, பேச்சினிமை முதலியவற்றைக்காட்டி ஸாதுக்களை வாழ்விக்கவேண்டியே வந்து பிறந்தனனாதலால் அவ்வர்த் தம் 'வேண்டி' என்பதனால் காட்டப்பட்டது. வேண்டி - தான் விரும்பி என்றபடி.

இகல் - துக்கம், விரோதம், குறை. (ரு)

3265 இகல்கொள்புள்ளைப்பிளந்ததும் இமிலேறுகள்செற்றதுவும் *
உயர்கோள்சோலைக்குருந்தொசித்ததும் உட்படமற்றும்பல *
அகல்கொள்வையமளந்தமாயன் என்னப்பன்தன்மாயங்களே *
பகலிராப்பரவப்பெற்றேன் எனக்கென்னமனப்பரிப்பே. (சு)

இகல் கொள் புள்ளை பிளந்ததும் — விரோதபுத்தியுடன் வந்த பகாசுரனை வாய்பிளந்து முடித்த தென்ன
இமில் ஏறுகள் செற்றதுவும் — பிசலையுடைய எருதுகளை (நப்பின்னைக்காகக்) கொன்ற தென்ன
உயர் கொள் சோலை குருந்து ஒசித்ததும் — உயர்ச்சியைக் கொண்ட சோலையிலுள்ள குருந்த மரத்தை முறித்ததென்ன
உட்பட மற்றும் பல — இவை முதலாக மற்றும் பலவான
அகல் கொள் வையம் அளந்த மாயன் என் அப்பன் தன் மாயங்களே — பூமிப்பரப்பை யெல்லாம் அளந்துகொண்ட மாயனை எம்பெருமானுடைய அற்புதச் செயல்களையே
பகல் இரா பரவ பெற்றேன் — பகலும் இரவும் துதிக்கப் பெற்றேன்;
எனக்கு என்ன மனம் பரிப்பு — இனி எனக்கென்ன மனத் துயரமுளது?

* * * கண்ணபிரானுடைய சரித்திரங்களை மாத்திரமே அநுபவிப்பதாகக் கொண்ட இத் திருவாய்மொழியில் இப்பாசுரத்தில் * அகல்கொள் வையமளந்தமாயன் * என்றும், மேலே எட்டாம் பாட்டில் * மாணியாய் நிலங்கொண்டமாயன் * என்றும் வேறு அவதார சரித்திரத்தையுங் கூறினது குறையன்று; "இகல்கொள்புள்ளைப்பிளந்தது" "இமிலேறுகள் செற்றது" "குருந்தொசித்தது" என்றவைபோலே "அகல்கொள் வையமளந்ததும்" என்று இதனையும் ஒரு சரித்திரமாகக்கூறி அநுபவித்தமை காட்டப்படவில்லையே; எம்பெருமானுக்கு விசேஷணமொன்று இட்டதத்தனையே. (௬)

3266 மனப்பரிப்போடு அழுக்குமானிடசாதியில்தான்பிறந்து *
தனக்குவேண்டுருக்கொண்டு தான்தனசீற்றத்தினைமுடிக்கும் *
புனத்துழாய்முடிமாலைமார்பன் என்னப்பன்தன்மாயங்களே *
நினைக்கும்நெஞ்சுடையேன் எனக்கினியார்நிகர்நீணிலத்தே. (௭)

| | | | |
|---|---|---|---|
| தான் | பரஞ்சோதியுருவனை தான் | புனம் துழாய் மாலை முடி மார்பன் என் அப்பன் தன் மாயங்களே | செவ்வித்துழாய் மாலையைத் திருமுடியிலும் திருமார்பிலுமுடையனை எம்பெருமானது ஆச்சரிய சேஷ்டிதங்களையே |
| அழுக்கு மானிட சாதியில் | ஹேயமான மநுஷ்ய ஜாதியிலே | நினைக்கும் நெஞ்சு உடையேன் எனக்கு | அநுஸந்திக்கும் நெஞ்சு படைத்தவெனக்கு |
| மனப் பரிப்போடு பிறந்து | ஸம்ஸாரிகள் விஷயமாகத் திருவுள்ளத்தில் தளர்த்தியோடே வந்து பிறந்து | இனி நீள் நிலத்து நிகர் ஆர் | இனி இப்பெருநிலத்தில் ஒப்பாவார் ஆர்! (ஆருமில்லை.) |
| தனக்கு வேண்டு உரு கொண்டு | தனக்கு இஷ்டமான விக்ரஹங்களைப் பரிக்ரஹித்து | | |
| தான் தன சீற்றத்தினை முடிக்கும் | தன்னுடைய சீற்றத்தைத் தவிர்த்துக் கொள்ளுமவனை | | |

* * *—அரக்கரசுரர் போல்வாரான விரோதிகள் பக்தவர்க்கங்களை நலியுமதுபொறுக்க மாட்டாமே அழுக்கு மானிடசாதியில் வந்து பிறந்து அவர்களை அழியச்செய்யும் சேஷ்டிதங்களை நினைக்கும் நெஞ்சுடைய எனக்கு இந்நிலத்தில் நிகராவார் யாருமில்லை யென்கிறார். கீழ்ப் பாசுரங்களிலும் மேற் பாசுரங்களிலும் சிலசில சேஷ்டிதங்களை விசேஷித்து எடுத்துரைத்து அநுபவிப்பதாக அருளிச்செய்யுமிவர் இப்பாட்டில் அங்ஙனம் ஒருசரித்திரத்தை யெடுத்துரைக்கையன்றிக்கே ஸமுதாய ரூபேண அருளிச்செய்கிறார். இப்பாட்டில் "தான்தன சீற்றத்தினை முடிக்கும்" என்பது உயிரான வாசகம். தண்ணளியே வடிவெடுத்த எம்பெருமானுக்கும் சீற்றமுண்டோ வென்னில்; சௌர்ய வீர்ய பராக்ரமங்களென்கிற குணங்களையும் உடையவனாக ப்ரஸித்திபெற்றிருக்கின்ற பகவானுக்கு எங்ஙனே சீற்றமில்லாமலிருக்கமுடியும்? சீற்றமுண்டானாலல்லது அக்குணங்கள் வீறுபெற வழியில்லையே. காருண்யமும் சீற்றமும் விஷயபேதத்தாலே வ்யவஸ்தைபெறும். பக்த விரோதிகள் திறத்திலே சீற்றமுண்டாகாமலிருக்க முடியுமோ? எம்பெருமான் தன்திறத்தில் எத்தனை அபராதங்கள் செய்வாருண்டாகிலும் அவர்கள் மீது சிறிதும் சீற்றங்கொள்ளான்; பக்தர்களிடத்திலே அபராதப்படுவார்மீது சீற்றமே வடிவெடுத்தவனாயிருப்பன். (௭)

3267 நீணிலத்தோடுவான்வியப்ப நிறைபெரும்போர்கள்செய்து *
வாணனாயிரந்தோள்துணித்ததும் உட்படமற்றும்பல *
மாணியாய்நிலம்கொண்டமாயன் என்னப்பன்தன்மாயங்களே *
காணும்நெஞ்சுடையேன் எனக்கினியென்னகலக்கமுண்டே. (௮)

| | | | |
|---|---|---|---|
| நீள் நிலத்தொடு வான் வியப்ப | மண்ணோரும் விண்ணோரும் ஆச்சரியப்படும்படியாக | வாணன் ஆயிரம் தோள் துணித்ததும் உட்பட மற்றும் பல | பாணாசுரனுடைய ஆயிரந்தோள்களைத் துணித்தது முதலாக மற்றும் பலவான |
| நிறை பெரும் போர்கள் செய்து | நிறைந்த மஹாயுத்தங்களைப் பண்ணி | | |

மாணி ஆய் நிலம் கொண்ட மாயன் என் அப்பன் தன் மாயங்களே — பிரமசாரியாய்ப் பூமியை நீரேற்றுப்பெற்ற மாயனை எம்பெருமானது அற்புதச் செயல்களையே

காணும் நெஞ்சு உடையேன் எனக்கு — ஸாக்ஷாத்கரிக்கவல்ல நெஞ்சுபடைத்தவெனக்கு

இனி என்ன கலக்கம் உண்டே — இனி ஒருவகையான கலக்கமுமில்லை.

3268 கலக்கவேழ்கடலேழ்மலை உலகேழும்கழியக்கடாய் *
உலக்கத்தேர்கோடுசென்றமாயமும் உட்படமற்றும்பல *
வலக்கையாழியிடக்கைச்சங்கம் இவையுடைமால்வண்ணனை *
மலக்குநாவுடையேற்கு மாறுளதோவிம்மண்ணின்மிசையே. (௯)

ஏழ் கடல் ஏழ் மலை ஏழ் உலகும் கலக்க — ஏழுகடல்களும் ஏழுமலைகளும் ஏழுலகங்களுமெல்லாம் கலங்கும்படியாக

கழிய கடாய் — அண்ட கடாஹத்துக்கு அப்பாலே போம்படியாக நடத்தி

தேர் கொடு — தேரைக்கொண்டு

உலக்க சென்ற மாயமும் — முடியச்சென்ற ஆச்சரியமும்

உட்பட மற்றும் பல — இதுமுதலாக மற்றும் பல சேஷ்டிதங்களையும் (பேசி)

வலக்கை ஆழி இடக்கை சங்கம் இவை உடை மால் வண்ணனை — உபயஹஸ்தங்களிலும் திருவாழி திருச்சங்குகையுடையனாய் நீலவண்ணனை எம்பெருமானை

மலக்கும் நா உடையேற்கு — ஸ்வாதீனப் படுத்திக்கொள்ளும்படியான நாவீறுபடைத்த எனக்கு

இ மண்ணின் மிசை மாறு உளதோ — இவ்வுலகின்கண் எதிருண்டோ?

*** [கலக்கவேழ்கடல்.] வைதிகன் பிள்ளைகளை மீட்டுக்கொடுத்ததென்பது கண்ணபிரானுடைய சரிதைகளில் ஒன்று. அதனை இப் பாட்டில் அநுபவிக்கிறார். இப்பாசுரத்தில் முதலடிக்குப் பலவகையாகப் பொருள் கூறுவர். கண்ணனது திருத்தேர் சென்ற காலத்தில் ஏழ்கடலும் ஏழ்மலையும் ஏழுலகங்களும் அதிர்ந்தபடியைச் சொன்னவாறு.

நம்மாழ்வார்க்குப் பராங்குசன் என்று திருநாமம். பரசமயத்தவர்களாகிற மதயானைகட்கு அங்குசம் போன்றிருந்ததுபற்றிப் பராங்குசனென்று திருநாமமாயிற்றென்று சொல்லுவதுண்டாகிலும், பரனை எம்பெருமானுக்கே அங்குசமா யிருந்தவர் என்கிற பொருளே சுவைமிக்கதாகும். இப் பாசுரத்தின் பின்னடிகளில் இது ஸ்பஷ்டமாகும். "வலக்கையாழியிடக்கைச் சங்கமிவையுடைமால்வண்ணனை மலக்குநாவுடையேன்' என்று செருக்குமிகுத்துக் கூறுகின்ற ஆழ்வார் தமது பராங்குசத் திருநாமத்தை விவரித்தபடியேயாகலாம். (௯)

3269 மண்மிசைப்பெரும்பாரம்நீங்க ஓர்பாரதமாபெரும்போர்
பண்ணி * மாயங்கள்செய்து சேனையைப்பாழ்படநூற்றிட்டுப்போய் *
விண்மிசைத்தனதாமமேபுக மேவியசோதிதன்தாள் *
நண்ணிநான்வணங்கப்பெற்றேன் எனக்கார்பிறர்நாயகரே. (௰)

மண் மிசை பெரு பாரம் நீங்க — பூமியின்மேலிருந்த பெருஞ்சுமை தொலையும் படியாக

ஓர் பாரதம் மா பெரு போர் பண்ணி — மஹாபாரத யுத்தத்தை யுண்டாக்கி

மாயங்கள் செய்து — ஆச்சரியச் செயல்களைச் செய்து

சேனையை பாழ் பட நூற்றிட்டு போய் — எல்லாச்சேனையும் பாழ் படும்படி ஸங்கல்பித்து முடித்து இவ்விடம்விட்டுப் புறப்பட்டு

விண் மிசை தன தாமமே புக மேவிய — பரமாகாசத்திலே தன்னுடைய ஸ்தான விசேஷத்திலே சென்று பொருந்தின

சோதி தன் தாள் — பரஞ்சோதிப் பெருமானுடைய திருவடிகளை

நான் நண்ணி வணங்கப்பெற்றேன் — நான் கிட்டி வணங்கப் பெற்றேன்;

எனக்கு பிறர் நாயகர் ஆர் — எனக்கு வேறு நிய...... ஆர்? (ஆருமில்லை.)

*** மாயங்கள் செய்து=(இங்கே ஈடு.) "பகலை இரவாக்குவது, ஆயுதமெடேன் என்று ஆயுதமெடுப்பது, எதிரியுடைய மர்மத்தைக் காட்டிக்கொடுப்பதானவை தொடக்கமானவற்றைச் செய்து."

* விண்மிசைத் தனதாமமே புக மேவியசோதி என்றவிடத்து ஈட்டில் ஓர் ஐதிஹ்யம் காட்டப்பட்டுள்ளது. அதாவது—நம்பெருமாள் ஸந்நிதியில் ஒரு ப்ரஹ்மோத்ஸவம் நடந்து முடிந்தவன்று ஆண்டானும் எம்பாரும் சந்தித்து 'அஹங்கார மமகார தூஷிதராயிருப்பார் பத்துக்கோடிபேர் நடுவே அதிஸுகுமாரமான திருமேனியைக் கொண்டு பத்துநாள் எழுந்தருளி அபாயமொன்றுமின்றியே உத்ஸவஸமாப்தியாகக் காணப்பெற்றோமே! என்று சொல்லி ஒருவரை யொருவர் தெண்டனிட்டுத் தழுவிக்கொண்டார்களாம். அதை நஞ்சீயர் கண்டிருந்து வெளியிட்டருளினர். (ம)

3270 நாயகன்முழுவேழுலகுக்குமாய் முழுவேழுலகும் * தன்
வாயகம்புகவைத்துமிழ்ந்தவையாய் அவையல்லனுமாம் *
கேசவனடியிணைமிசைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தூயவாயிரத்திப்பத்தால் பத்தராவர்துவளின்றியே. கக

| | | | |
|---|---|---|---|
| முழு ஏழ் உலகுக்கும் நாயகன் ஆய் | எல்லா வுலகங்களுக்கும் நிர்வாஹகனாகி | கேசவன் | எம்பெருமானுடைய |
| முழு ஏழ் உலகும் தன் வாயகம் புக வைத்து உமிழ்ந்து | அந்த ஸகலலோகங்களையும் (ப்ரளயம்கொள்ளாதபடி) தன் வாய்க்குள்ளே புகவிட்டுப் பிறகு வெளிப்படுத்தி | அடி இணை மிசை | உபயபாதங்கள் விஷயமாக |
| அவை ஆய் | அவை தானேயாய் | குருகூர் சடகோபன் சொன்ன | ஆழ்வார் அருளிச்செய்த |
| அவை அல்லனும் ஆம் | அவற்றின்படியை யுடையனல்லாதவனுமான | தூய ஆயிரத்து | பரிசுத்தமான ஆயிரத்துள்ளே |
| | | இப் பத்தால் | இப்பதிகத்தினால் |
| | | துவள் இன்றி பத்தர் ஆவர் | அநந்யப்ரயோஜந பக்திமான்களாகப் பெறுவர்கள். |

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து ஐந்தாந் திருவாய்மொழி—துவளில்மாமணிமாடம்.

திருநகரியைச் சேர்ந்த நவ திருப்பதிகளுள் துலைவில்லிமங்கலம் என்பது ஒரு ஆச்சரியமான திவ்யதேசம். இரட்டைத் திருப்பதி யென்றும் அது வழங்கப்பெறும். அத்தலத்தில் ஆழ்வார்தமக்கு உண்டான ப்ராவண்யாதிசயத்தைத் தோழிமார்கள் தாய்மார்க்கு உரைப்பதாக இத்திருவாய்மொழி அமைந்திருக்கின்றது.

3271 துவளில்மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலம்தொழு
மிவளை * நீரினியன்னைமீர்! உமக்காசையில்லைவிடுமினோ *
தவளவொண்சங்குசக்கரமென்றும் தாமரைத்தடங்கணென்றும் *
குவளையொண்மலர்க்கண்கள்நீர்மல்க நின்றுநின்று கு (மி) முறுமே. (க)

| | | | |
|---|---|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! | தவளம் ஒண் சங்கு சக்கரம் என்றும் | வெண்ணிறமாய் அழகியதான சங்கையும் சக்கரத்தையும் சொல்லுகிறவளாயும் |
| துவள் இல் மா மணி மாடம் ஓங்கு | குற்றமற்றுச் சிறந்த ரத்நங்களையுடைய மாடங்கள் விளங்கப்பெற்ற | தாமரை தடம் கண் என்றும் | தாமரைப்போன்று விசாலமான திருக்கண்களைச்சொல்லுகின்றவளாயும் இருந்துகொண்டு |
| துலைவில்லி மங்கலம் | துலைவில்லிமங்கல மென்கிற இரட்டைத்திருப்பதியை | ஒண் குவளை மலர் கண்கள் நீர் மல்க | அழகிய குவளைப்பூப் போன்ற கண்கள் நீர் பெருக |
| தொழும் இவளை | தொழாநின்ற இப்பராங்குசநாயகியை | நின்று நின்று குமிறும் | ஒன்றும் வாய்விட்டுச் சொல்ல மாட்டாமல் நின்று நின்று குமிறுகின்றாளிவள். |
| நீர் இனி விடுமின் | நீங்கள் இனி உபேக்ஷித்து விடுங்கள்; | | |
| உமக்கு ஆசை இல்லை | (இவள் திறத்து) நீங்கள் ஆசை வைக்க இடமில்லை; | | |

(இவளுடைய நிலைமையைச்சொல்லுகிறேன் கேளுங்கள்;)

* * * ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் பிறந்தபோது சோதிடர்களை வரவழைத்து 'இவளுடைய அத்ருஷ்ட பாகங்கள் எப்படியிருக்கிறது சொல்லுங்கோள்' என்று கேட்கையில், சோதிடர்கள் பார்த்து "இவளுடைய பாக்கியம் மிக நன்றாயிருக்கிறது, ஒரு குறையுமில்லை; ஸார்வபௌமனாயிருப்பானொருவனைக் கைப்பிடிப்பாள்; ஆனால் வநவாஸம் அநுபவிக்க நேரும்" என்றார்களாம். அப்படியே இப்பராங்குசநாயகி பிறந்தபோதும் இவளது திருத்தாயார் முதலானோர் சோதிடர்களை அழைத்து பாக்ய விசேஷங்கள் விசாரிக்கையில் "எல்லாம் நன்றாகவே யிருக்கிறது; இவள் உயர்வறவுயர்நலமுடையனான அயர்வறுமமரர்களதிபதியால் மயர்வறமதிநலமருளப்பெறுவள்; உலகம் நிறைந்த புகழ்பெறுவள்; தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகள் சொல்லுவள்" என்று பலவும் சொல்லிவிட்டு, 'ஆனால் இவளுக்கு ஓர் அபம்ருத்யுவுண்டு; அது என்னென்னில்; இவளைத் துலைவில்லிமங்கலத்திலே நீங்கள் கொண்டு சென்றீர்களாகில் இவளை இழக்க நேரும்; ஆகவே அங்குக்கொண்டுபோகாமலிருந்தீர்களாகில் இவளோடே கூடி நீங்கள் நெடுங்காலம் வாழலாம்; இந்த வொரு கண்டத்துக்குத் தப்பிப்பிழைப்பது கஷ்டமே; என்று சோதிடர்கள் சொல்லியிருந்தார்களாம். ஆகிலும் இவளைத் துலைவில்லிமங்கலத்தில் கொண்டுபோகாதிருக்கும்படியான குடியன்றே. இவளைப் பெறுவோமானாலும் சரி, இழப்போமானாலும் சரி; அங்கு அழைத்துக்கொண்டுபோய் ஸேவை பண்ணிவைத்தே தீருவது எனறிருக்கும் குடியாகையாலே அப்படியேசெய்து போரநேர்ந்தது. அதனால் விளைந்த அநர்த்தத்தைத் தோழி எடுத்துரைக்கின்றாள். (க)

3272 குமிறுமோசைவிழவொலித் தொலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு *
அமுதமென்மொழியாளை நீருமக்காசையின்றியகற்றினீர் *
திமிர்கொண்டாலொத்துநிற்கும் மற்றிவள்தேவதேவபிரானென்றே *
நிமியும்வாயொடுகண்கள்நீர்மல்க நெக்கொசிந்துகரையுமே. (உ)

(அன்னைமீர்) தாய்மார்களே!
குமிறும் ஓசை விழவு ஒலி { ஆரவாரிக்கின்ற ஓசையையுடைய உத்ஸவகோலாஹலங்களையுடைத்தான
துலைவில்லிமங்கலம் { இரட்டைத் திருப்பதியிலே
அமுதம் மெல் மொழியாளை { அமுதம்போன்று மதுரமான மெல்லிய வாய்மொழிகளையுடையவளான இப்பெண்பிள்ளையை
நீர் கொண்டு புக்கு { நீங்கள் அழைத்துக்கொண்டு போய்
உமக்கு ஆசை இன்றிஅகற்றினீர் { மறுபடியும் நீங்கள் இவளோடு உறவுபண்ணுகைக்கு ஆசையில்லாதபடி உறவறுத்துக்கொண்டீர்கள்;

(அது எங்ஙனம் தெரிகிறதென்றால்)
இவள் இப்பெண்பிள்ளையானவள்
திமிர்கொண்டால் ஒத்து நிற்கும் { திமிர்கொண்டாற்போலே பேசாதே நிற்கின்றாள்;
மற்று அதுவுமல்லாமல்
தேவதேவபிரான் என்றே { எம்பெருமானது திருநாமத்தைச் சொன்ன மாத்திரத்திலே
நிமியும் வாயொடு நெளிந்தவாயோடுகூடி
கண்கள் நீர் மல்க — கண்கள் நீர்பெருகப் பெற்று
நெக்கு ஒசிந்து கரையும் { கட்டுக்குலைந்து தளர்ந்து உருகுகின்றாள்.

* * * ஸாதாரணமாகத் துலைவில்லித் திருப்பதியின் ஸந்நிவேசந்தானே ஆகர்ஷகமாயிருக்கும்; அதுதன்னிலும் உத்ஸவகாலங்களில் சென்றாலோ "வேதவொலியும் விழாவொலியும்" என்றாற்போலே பலவகையான த்வனிகள் செவியமுதமாகக் கேட்கப்பெற்று அங்கு நின்றும் கால்பேரவொண்ணாதபடி யிருக்கும். அப்படிப்பட்ட உத்ஸவகாலங்களிலும் தாய்மார் இப்பெண்பிள்ளையை அங்கு அழைத்துக்கொண்டு செல்லுகையாலே ஈடுபாடு அதிகமாயிற்றென்கிறாள் தோழி. (உ)

3273 கரைகொள்பைம்பொழில்தண்பணைத் தொலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு *
உரைகொளின்மொழியாளை நீருமக்காசையின்றியகற்றினீர் *
திரைகொள்பௌவத்துச்சேர்ந்ததும் திசைஞாலம்தாவியளந்ததும் *
நிரைகள்மேய்த்ததுமேபிதற்றி நெடுங்கண்ணீர்மல்கநிற்குமே. (ரு)

| | |
|---|---|
| (அன்னைமீர்) | தாய்மார்களே! |
| கரை கொள் பைம் பொழில் தண்பணை | தாமிரபர்ணிக்கரையைக் கபளீகரிக்கின்ற பரந்த சோலைகளையும் குளிர்ந்த நீர்நிலங்களையுமுடைத்தான |
| துலைவில்லிமங்கலம் | இரட்டைத்திருப்பதியிலே |
| உரை கொள் இன் மொழியாளை நீர் கொண்டு புக்கு | புகழ்மிக்க இன்சொல்லையுடையளான இப்பெண்பிள்ளையை நீங்கள் அழைத்துக் கொண்டு சென்று |
| உமக்கு ஆசை இன்றி அகற்றினீர் | மறுபடியும் நீங்கள் இவளோடு உறவு பண்ணுகைக்கு ஆசையில்லாதபடி உறவறுத்துக் கொண்டீர்கள்; |
| | (அது எங்ஙனம் தெரிகிறதென்றால்) |
| (இவள்) | இப்பெண்பிள்ளையானவள் |
| திரை கொள் பௌவத்து சேர்ந்ததும் | அலைகளைக்கொண்ட திருப்பாற்கடலிலே (ஆச்ரித ரக்ஷணார்த்தமாக) வந்து சேர்ந்தபடியையும் |
| திசை ஞாலம் தாவி அளந்ததும் | திசைகளோடு கூடின பூமியை முழுவதும் தாவி அடிக்கீழிட்டுக் கொண்டபடியையும் |
| நிரைகள் மேய்த்ததுமே | பசுக்கூட்டங்களை மேய்த்தபடியையுமே |
| பிதற்றி | வாய்வெருவி |
| நெடு கண் நீர் மல்க நிற்கும் | தனது நெடிய கண்களில் நீர் பெருக நிற்கின்றாள். |

* * * உரைகொள் இன்மொழியாள் என்று இங்கு ஆழ்வார்க்கு அமைந்த விசேஷணம் ஆச்சரியமானது. இதற்குப் பலபடியாகப் பொருள்கொள்ளலாம். உரை என்று கீர்த்தியாய், கீர்த்தி வாய்ந்த மொழியையுடையவள்; (அல்லது) அர்த்தத்தினுள்ளே இழிய வேண்டாதே சப்தந்தானே மிக இனிதாயிருக்கப்பெற்றவள்; (அல்லது) வியாக்கியானங் கொள்ளும் மொழியையுடையவள். உரை என்று வியாக்கியானத்திற்குப் பேராதலால், எத்தனை வியாக்கியானங்கள் அவதரித்தாலும் போராத ஸ்ரீ ஸூக்தியையுடையளென்கிறது. ஆறாயிரம் ஒன்பதினாயிரம் பன்னீராயிரம் இருபத்தினாலாயிரம் ஈடுமுப்பத்தாறாயிரம் என்றிப்படி எத்தனை வியாக்கியானங்கள் அவதரித்தாலும் இன்னமும் வியாக்கியானமிடவேண்டியன்றோ ஸ்ரீஸூக்திவைபவமிருப்பது. (ரு)

3274 நிற்கும்நான்மறைவாணர்வாழ் தொலைவில்லிமங்கலம்கண்டபின் *
அற்கமொன்றுமறவுருள் மலிந்தாள்கண்டீர்இவளன்னைமீர்! *
கற்குங்கல்வியெல்லாம் கருங்கடல்வண்ணன் கண்ணபிரானென்றே *
ஒற்கமொன்றுமிலள் உகந்துகந்துள்மகிழ்ந்துகுழையுமே. (சா)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| இவள் | இப்பெண்பிள்ளையானவள் |
| நிற்கும் நால் மறைவாணர் வாழ் | ஸ்திரமான நான்கு வேதங்களையும் அதிகரித்தவர்கள் வாழுமிடமான |
| துலைவில்லிமங்கலம் கண்டபின் | துலைவில்லித்திருப்பதியை ஸேவிக்கப்பெற்ற பின்பு |
| அற்கம் ஒன்றும் அற உருள் | அடக்கம் சிறிதுமுடையளல்லளாய் |
| மலிந்தாள்கண்டீர் | கைகழிந்துவிட்டாள்காண்மின்; |
| | (அது எங்ஙனம் தெரிகிறதென்றால்) |
| கற்கும் கல்வி எல்லாம் | இவள் பழகுகிற பேச்சுக்களெல்லாம் |
| கரு கடல் வண்ணன் கண்ண பிரான் என்றே | நீலக்கடல் வண்ணனை கண்ணபிரானைப் பற்றியதேயாம்; |
| ஒற்கம் ஒன்றும் இலள் | ஒடுக்கம் சிறிதுமில்லாதவளாய் |
| உகந்து உகந்து உள் மகிழ்ந்து | தன்னுடைய ஆனந்தமிகுதியை நன்றாகக் காட்டிக்கொண்டு |
| குழையும் | உள்குழையாநின்றாள், |

* * * துலைவில்லித் திருப்பதிக்கு இவளை அழைத்துச்சென்றவர்கள் அங்கே வேத பாராயண வைபவங்களையும் கேட்பிக்கவேணுமோ? நான்கு வேதங்களிலும் பாரங்கதான

வர்கள் அங்கே வேதாத்யயனங்கள் செய்யுமழகைக்கண்டாள்; இந்த வேதங்களையெல்லாம் ஆதியிலே நான்முகனுக்கு உபதேசித்தவனன்றோ நம் பெருமான் என்று அவ்வழியாலே அவனிடத்துக் காதல் மிகப்பெற்றாள்; அவனது கட்டளையான நான்மறைகளையும் ஓதுகின்ற பரமபாகவதர்களன்றோ இவர்களென்று ஸ்ரீவைஷ்ணவர்களிடத்திலும் பக்திப் பெருங்காதல் கொள்ளப்பெற்றாள்; இப்படி பகவத்பாகவத பக்தியே வடிவெடுத்தவளான இவளை ஸம்ஸாரிகளான நீங்கள் இனி உறவுகொண்டாடி விரும்பத் தகுதியுண்டோவென்கிறாள் தோழி. (௪)

3275 குழையும்வாண்முகத்தேழையைத் தொலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு *
இழைகொள்சோதிச்செந்தாமரைக்கண்பிரான் இருந்தமைகாட்டினீர் *
மழைபெய்தாலொக்கும்கண்ணநீரினொடு அன்றுதொட்டும்மையாந்து * இவள்
நுழையும்சிந்தையளன்னைமீர்! தொழுமத்திசையுற்றுநோக்கியே. (௫)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| குழையும் | பகவத் குணங்களிலே உருக்கமுடையவளாயும் |
| வாள் முகத்து | ஒளிமிக்க முகத்தையுடையவளாயுமிருக்கிற |
| ஏழையை | இப்பெண்பிள்ளையை |
| துலைவில்லிமங்கலம் கொண்டு புக்கு | துலைவில்லித் திருப்பதிக்கு அழைத்துக்கொண்டு போய் |
| இழை கொள் சோதி | திருவாபரணங்களினாலான சோதியையுடையனும் |
| செம் தாமரை கண் பிரான் | செந்தாமரைபோன்ற திருக்கண்களையுடையனுமான எம்பெருமான் |
| இருந்தமை | வீற்றிருக்கும்படியை |
| காட்டினீர் | நீங்களே காட்டிக்கொடுத்தீர்கள்; |
| இவள் | அதுகாணப்பெற்றவிவள் |
| அன்று தொட்டும் | அந்நாள் தொடங்கி |
| மழை பெய்தால் ஒக்கும் கண்ண நீரினொடு | மழை பெய்தாற்போன்ற கண்ணீரோடே கூடி |
| மையாந்து | வியாமோஹித்து |
| நுழையும் சிந்தையள் | அவனழகிலே உள்புகுந்த நெஞ்சையுடையளாய் |
| அத் திசை உற்று நோக்கி தொழும் | அந்திருப்பதியுள்ள பக்கமே உற்றுநோக்கித் தொழுகின்றாள், |

3276 நோக்கும்பக்கமெல்லாம் கரும்போடுசெந்நெலோங்குசெந்தாமரை *
வாய்க்குந்தண்பொருநல் வடகரைவண்தொலைவில்லிமங்கலம் *
நோக்குமேலத்திசையல்லால் மறுநோக்கிலள்வைகல்நாடோறும் *
வாய்க்கொள்வாசகமும் மணிவண்ணன்நாமமேயிவளன்னைமீர். (௬)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே !, |
| நோக்கும் பக்கம் எல்லாம் | பார்த்த பார்த்த விடமெல்லாம் |
| கரும்பொடு செந்நெல் ஓங்கு | கருப்பும் செந்நெற்பயிர்களும் உயர்ந்து விளங்கப் பெற்றதும் |
| செம் தாமரை வாய்க்கும் | செந்தாமரைகள் நிரம்பப் பெற்றதும் |
| தண் | குளிர்ந்ததுமான |
| பொருநல் | தாமிரபர்ணிநதியினுடைய |
| வட கரை | வடகரையிலேயுள்ளதாய் |
| வண் | சகலவிதமான அழகும் பொருந்தியதான |
| துலைவில்லி மங்கலம் | துலைவில்லித் திருப்பதியை |
| நோக்கும் ஏல் | இப் (பெண்பிள்ளை) பார்த்தாளாகில் |
| அத் திசை அல்லால் மறு நோக்கு இலள் | அந்தத் திக்கு ஒன்று தவிர வேறெவ்விடத்தும் நோக்குடையவளல்லள்; |
| வைகல் நாள் தொறும் | ஒரு நொடிப்பொழுதும் விச்சேதமில்லாமல் ஸகலகாலமும் |
| இவள் வாய் கொள் வாசகமும் | இவளது வாக்கில் வெளிவருகின்ற சொற்களும் |
| மணிவண்ணன் நாமமே | நீலமணிவண்ணனான எம்பெருமானுடைய திருநாமங்களேயாம், |

*** இப்பெண்பிள்ளைபெரும்பாலும் மோஹித்திருக்குமிருப்பே யல்லது கண்ணைத் திறந்து பார்ப்பதென்கிற கதையேயில்லை; ஒருகால் பார்த்தாளாகில் அத்திருப்பதியுள்ள விடமொழிய மற்றோரிடமும் பார்ப்பதில்லையென்கிறாள் தோழி. எந்தவிடம் பார்த்தாலும் கருப்

பஞ்சோலையும் செந்நெற் பயிர்களும் தாமரைக் காடுமாகவே திகழாநின்ற தாமிரபர்ணியின் வடகரையிலே விளங்குமதான துலைவில்லித் திருப்பதியையன்றி மற்றொருதிக்கைக் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை; வாய்கொண்டு பேசப்புகுந்தாலோ வாயில்வரும் பேச்செல்லாம் மணிவண்ணனான அப்பெருமானுடைய திருநாமமாயிருக்குமே யல்லது வேறொன்றும் இவளது வாயில் வாராது என்றவாறு. (சு)

3277 அன்னைமீர்! அணிமாமயில் சிறுமானிவள்நம்மைக்கைவலிந்து *
என்னவார்த்தையும்கேட்குறள் தொலைவில்லிமங்கலமென்றல்லால் *
முன்னம்நோற்றவிதிகொலோ முகில்வண்ணன்மாயங்கொலோ * அவன்
சின்னமும்திருநாமமும் இவள்வாயனகள் திருந்தவே. (எ)

அன்னைமீர் — தாய்மார்களே!,
அணி மா மயில் சிறு மான் இவள் — அழகிற் சிறந்த மயில்போன்றும் சிறிய மான்பேடைபோன்றுமிராநின்ற இப்பெண்பிள்ளை
நம்மை கைவலிந்து — நம்மைக் கைவிட்டொழிந்து
துலைவில்லிமங்கலம் என்று அல்லால் என்ன வார்த்தையும் கேட்க உறாள் — துலைவில்லித் திருப்பதிப் பேச்சு தவிர வேறு எந்தப்பேச்சும் கேட்க விரும்புகின்றிலள்; (இப்படியானவிது)
முன்னம் நோற்ற விதி கொலோ — முன்பு செய்த ஸுக்ருத பலனோ!
முகில்வண்ணன் மாயம் கொலோ — மேகவண்ணனான எம்பெருமானுடைய ஸங்கல்பமோ!
அவன் சின்னமும் திரு நாமமும் — அப்பெருமானுடைய லக்ஷணங்களும் திருநாமங்களும்
திருந்த இவள் வாயனகள் ஏ — மிகத் திருத்தமாக இவளுடைய வாக்கில் விளங்கும்படி என்னே!.

*** ஆழ்வாருடைய பெருமை ஆர்க்கும் நிலமன்று என்று காட்டுகிறது மூன்றுமடி. முன்னம் நோற்ற விதிகொலோ?= இந்த ஜன்மத்திலே இவள் ஒரு ஸுக்ருதம்பண்ணினதாகத் தெரிந்ததில்லை; ஜந்மாந்தர ஸஹஸ்ர ஸஞ்சிதமான ஸுக்ருத விசேஷங்கள் திரண்டு இங்ஙனே பலித்தபடியோ! அல்லது, முகில்வண்ணன் மாயங்கொலோ? எம்பெருமானுடைய விலக்ஷண ஸங்கல்பத்தினாலே இப்படி திருந்தினபடியோ? என்கை. ஒரு சேதநன் தன் முயற்சியினாலே ஸாதிக்கிற அசேதந க்ரியைக்கு இவ்வளவு பலன் பெறுவிக்க சக்தியில்லாமையாலே 'முன்னம் நோற்ற விதிகொலோ' என்று ஸந்தேஹிக்கலாயிற்று. எம்பெருமானுடைய ஸங்கல்பம் இதற்கு முன்பு இப்படி ஒரு வ்யக்தியிலும் பலிக்கக் காணாமையாலே 'முகில்வண்ணன் மாயங்கொலோ' என்று இதுதன்னிலும் ஸந்தேஹிக்கலாயிற்று. (எ)

3278 திருந்துவேதமும்வேள்வியும் திருமாமகளிரும்தாம் * மலிந்
திருந்துவாழ்பொருநல் வடகரைவண்தொலைவில்லிமங்கலம் *
கருந்தடங்கண்ணிகைதொழுத அந்நாள்தொடங்கியிந்நாள்தோறும் *
இருந்திருந்தரவிந்தலோசன! என்றென்றேநைந்திரங்குமே. (அ)

அன்னைமீர் — தாய்மார்களே!
திருந்து வேதமும் வேள்வியும் திரு மா மகளிரும்தாம் — பரிசுத்தமான வேதங்களும் வேதோக்த கருமங்களும் ஸம்பத் ஸம்ருத்தியுமாகிறவிவை
மலிந்து இருந்து வாழ் — நிரம்பியிருந்து விளங்கப்பெற்றதாய்
பொருநல் வடகரை — தாமிரபர்ணியின் வடகரையிலுள்ளதாய்
வண் — தர்சநீயமான
தொலைவில்லி மங்கலம் — தொலைவில்லித் திருப்பதியை
கரு தட கண்ணி — கறுத்துப் பெருத்த கண்களையுடையளான இப்பெண்பிள்ளை
கை தொழுத அந்நாள் தொடங்கி இந்நாள் தொறும் — அஞ்ஜலி பண்ணின வன்று தொடங்கி இன்று வரையிலும்
இருந்து இருந்து — இடையிடையே ஏங்கி யேங்கியிருந்து
அரவிந்த லோசன என்று என்றே — தாமரைக் கண்ணனே பலகாலும் அழைத்து
நைந்து இரங்கும் — பலபடியாலும் சிதிலையாகாநின்றாள்.

* * * துலைவில்லித் திருப்பதியை ஸேவிக்கப்பெற்ற அந்நாள் தொடங்கி இப் பெண் பிள்ளை அத்தலத்து எம்பெருமானது கண்ணழகிலேயே யீடுபட்டுத் தளராநின்றாளென்கிறது. வேதபாராயணங்களும் யஜ்ஞயாகங்களும் ஸம்ருத்தமாய் ஸ்ரீதேவி பூதேவிகளோடே எழுந்தருளியிருக்கப்பெற்ற திருப்பதியென்று தலத்தின் மகிமைகூறுவன முன்னடிகள். (௮)

3279 இரங்கிநாடோறும்வாய்வெரீஇ இவள்கண்ணநீர்களலமர *
மரங்களுமிரங்கும்வகை மணிவண்ணவோவென்றுகூவுமால் *
துரங்கம்வாய்பிளந்தானுறை தொலைவில்லிமங்கலமென்று * தன்
கரங்கள்கூப்பித்தொழும் அவ்வூர்த்திருநாமம்கற்றதற்பின்னையே. (௯)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே ! |
| இவள் | இப்பெண் பிள்ளையானவள் |
| நாள் தொறும் இரங்கி வாய் வெரீஇ | நாடோறும் நெஞ்சழிந்து வாய்வெருவி |
| கண்ண நீர்கள் அலமர | கண்ணீர் பெருக வியாகுலப் பட்டு நின்று |
| மரங்களும் இரங்கும் வகை | மரங்களுங்கூட இரங்கும்படியாக |
| ஓ மணிவண்ண என்று கூவும் | ஓ மணிவண்ணனே! என்று கூப்பிடா நின்றாள்; |
| | (அதுவுமல்லாமல்) |
| துரங்கம் வாய் பிளந்தான் உறை துலைவில்லிமங்கலம் என்று | குதிரை வடிவு கொண்டு வந்த அசுரனுடைய வாயைப் பிளந்த பெருமான் எழுந்தருளியிருக்கின்ற துலைவில்லித் திருப்பதியென்று |
| அவ் ஊர் திருநாமம் கற்றதன் பின்னை | அவ்வூர்த்திருநாமத்தைக் கற்ற பின்பு |
| தன் கரங்கள் கூப்பி தொழும் | தன் கைகளைக் கூப்பி (அவ்வூரை நோக்கி)த் தொழுகின்றாள். |

* * * இவளைத் துலைவில்லித் திருப்பதியிலே கொண்டுபுக்கு அவ்வூர்த் திருநாமத்தை நீங்கள் கற்பிக்க இவள் கற்றதற்பின் அநவரதமும் அவன் திருநாமத்தையே வெருவி அஃறிணைப் பொருள்களுங்கூடக் கரையும்படி மஹத்தான ஆர்த்தியோடே ஓமணிவண்ணாவென்று கூப்பிட்டழைத்துத் துலைவில்லிமங்கலமென்று சொல்லித் தன் கைகளைக் கூப்பித் தொழுகின்றாள்; அன்னைமீர்! இதெல்லாம் உங்களாலே வந்ததத்தனை என்றாள் தோழி. (௯)

3280 பின்னைகொல்நிலமாமகள்கொல் திருமகள்கொல்பிறந்திட்டாள் *
என்னமாயங்கொலோ இவள்நெடுமாலென்றேநின்றுகூவுமால் *
முன்னிவந்தவன்நின்றிருந்துறையும் தொலைவில்லிமங்கலம்
சென்னியால்வணங்கும் * அவ்வூர்த்திருநாமம் கேட்பதுசிந்தையே. (௰)

| | |
|---|---|
| (அன்னைமீர்) | தாய்மார்களே! |
| இவள் | இப்பெண்பிள்ளையானவள் |
| பின்னை கொல் | நப்பின்னைப் பிராட்டியோ! |
| மா நிலம் மகள் கொல் | பெருமைதங்கிய பூமிப் பிராட்டியோ! |
| திருமகள் கொல் பிறந்திட்டாள் | (அல்லது) ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாலக்ஷ்மியே வந்து பிறந்தபடியோ |
| என்ன மாயம் கொலோ | இது என்ன அதிசயமோ! |
| நெடு மால் என்றே நின்று கூவும் | ஸர்வேச்வரா! என்று நிலை நின்று அழைக்கின்றாள்; |
| | (அவ்வளவுமல்லாமல்) |
| அவன் முன்னி வந்து நின்று இருந்து உறையும் | அப்பெருமான் முற்பட்டு வந்து நிற்பது இருப்பதாய் நித்யவாஸம் பண்ணுமிடமான |
| துலைவில்லி மங்கலம் | துலைவில்லித் திருப்பதியை |
| சென்னியால் வணங்கும் | தலையாலே வணங்குகின்றாள் |
| அவ் ஊர் திருநாமம் கேட்பதே சிந்தை | அத்திருப்பதியின் திருநாமத்தை (தன் வாயால்தான் சொல்வதிற் காட்டிலும்)பிறர் சொல்லக்கேட்க வேணுமென்பதே இவளது சிந்தனை. |

* * * பராங்குசநாயகியின் ப்ராவண்யமிகுதியைக் கண்டு 'இவள் பிராட்டிமாரிலே ஒருத்தியோ!' என்று சங்கிக்கின்றமை கூறுவது இப்பாட்டில். ஆழ்வார் க்ருஷ்ணாவதாரத்திலே யீடுபட்டிருக்குந் தன்மையை நோக்குங்கால், ஸாக்ஷாத் நப்பின்னைப்பிராட்டிதானே!

என்னவேணும். வராஹப்பெருமாள் திறத்தில் ஈடுபட்டிருக்குந் தன்மையை நோக்குமளவில் ஸாக்ஷாத் பூமிப்பிராட்டிதானே! என்னலாகும். ஸ்ரீராமாவதாரத்தி லீடுபாட்டை நோக்கில் ஸாக்ஷாத் ஸீதாபிராட்டிதானே! என்ன ப்ராப்தம்.

'பிறந்திட்டாள்' என்பதை, பின்னைபிறந்திட்டாள்கொல்? நிலமாமகள் பிறந்திட்டாள் கொல்? திருமகள் பிறந்திட்டாள்கொல்? என்று யோஜித்துப் பொருள்கொள்வதன்றிக்கே, தனிப்படவும் யோஜிக்கலாம். அதாவது, இவள் பின்னைகொல்? இவள் நிலமாமகள்கொல்? இவள் திருமகள்கொல்? (அன்றியே) பிறந்திட்டாள்கொல்? என்பதாக. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;— "அவர்களுக்கு இவள்படியில்லாமையாலே அவர்களோப்பன்று; லோகமெல்லாம் வாழுகைக்கு இவளொருத்தி பிறந்தாளோ! என்றுமாம்." (ம)

3281 சிந்தையாலும்சொல்லாலும் செய்கையினாலும்தேவபிரானையே *
தந்தைதாயென்றடைந்த வண்குருகூரவர்சடகோபன் *
முந்தையாயிரத்துள்ளிவை தொலைவில்லிமங்கலத்தைச்சொன்ன *
செந்தமிழ்பத்தும்வல்லார் அடிமைசெய்வார்திருமாலுக்கே. (கக)

| | |
|---|---|
| தேவபிரானையே தந்தை தாய் என்று | தேவபிரானையே ஸகலவித பந்துவுமாக அறுதியிட்டு |
| சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் அடைந்த | முக்ய காரணங்களாலும் ஆச்ரயித்த |
| வண் குருகூரவர் சடகோபன் | ஆழ்வார் |
| முந்தை ஆயிரத்துள் | அநாதியான இவ்வாயிரத்தினுள்ளே |
| தொலைவில்லி மங்கலத்தை சொன்ன இவை செந்தமிழ் பத்தும் வல்லார் | தொலைவில்லித் திருப்பதி விஷயமாக அருளிச்செய்த இப்பதிகத்தை ஓதவல்லவர்கள் |
| திருமாலுக்கு அடிமை செய்வார் | பரவாஸுதேவனுக்கு நித்ய கைங்கர்யம் பண்ணப் பெறுவர்கள். |

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆரும்பத்து ஆருந் திருவாய்மொழி—மாலுக்குவையமளந்த.

கீழ்த் திருவாய்மொழி தோழிபாசுரமாகச் சென்றது; இத் திருவாய்மொழி தாய்பாசுரமாகச் செல்லாநின்றது. இதில் பாசுரந்தோறும் 'இழந்தது' என்று வாராநின்றது. சங்கையிழந்தாள், மாமைநிறமிழந்தாள்,சாயையிழந்தாள், மாண்பிழந்தாள், கற்பிழந்தாள், கட்டிழந்தாள் என்றிப்படிப்பலவும் இழந்ததாகச் சொல்லப்படுகிறது. இதனால், பகவத்விஷயத்தில் ப்ராவண்யம் அதி கரித்தமையும், அபேக்ஷிதமானபடி ஸம்ச்லேஷம் கிடையாமையாலே மேனி மெலிந்தமையும், கட்டுக்கு அடங்காமையுமாகிற விவை சொல்லப்படுகின்றன வென்றுணர்க. கீழ்நாலாம்பத்தில் * ஏருளுமிறையோனும் * என்கிற திருவாய்மொழியில் "மாருளன்கவராத மணி மாமைகுறைவிலமே" "மணிமாயன்கவராத மடநெஞ்சால் குறைவிலமே" என்றிப்படித் தாமே வேண்டாவென்று உபேக்ஷித்த ஆத்மாத்மீயங்களெல்லாம் இப்போது தன்னடையே கழிந்து செல்லுகிறபடி சொல்லுகிறது. எம்பெருமானுடைய ஓரோ அவதார சேஷ்டிதங்களையும் ஓரோ திவ்யகுணங்களையும் நினைக்க நினைக்க, தாம் பரவசராய் மேனிமெலிந்து ஆவிநீராயுருகுகின்றமையை ஆழ்வார் அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறாராயிற்று.

3282 மாலுக்கு வையமளந்தமணாளற்கு * நீலக்கருநிற மேகநியாயற்கு *
கோலச்செந்தாமரைக் கண்ணற்கு * என்கோங்கல ரேலக்குழலி இழந்ததுசங்கே. (க)

| | |
|---|---|
| மாலுக்கு | அடியார் பக்கலில் வியாமோஹ முள்ளவரும் |
| வையம் அளந்த மணாளற்கு | பூமி முழுவதையும் (த்ரிவிக்ரம ஞய்) ஸ்வாதீனப்படுத்திக் கொண்ட மணவாளரும் |
| நீலம் கரு நிறம் மேகம் நியாயற்கு | நெய்த்துக் கறுத்த நிறத்தை யுடைய மேகத்தை யொத்தவரும் |
| கோலம் செம் தாமரை கண்ணற்கு | அழகிய செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவருமான எம்பெருமான் விஷயத்தில் ஈடுபட்டதனுல் |
| என் கொங்கு அலர் ஏலம் குழலி இழந்தது | தேனெழுகும் மலர்களணிந்து நறுமணம் மிக்க கூந்தலை யுடையளான என் மகள் இழந்தது |
| சங்கு | கைவளையாம். |

* * * இத் திருவாய்மொழியிலுள்ள விசேஷ்ய பதங்கள் யாவும் விசேஷணமாத்ரமாய் நின்று அந்வயிக்கும். அதாவது—'மால்' என்கிற சொல்லுக்கு இங்கு வியாமோஹ முடையவன் என்று பொருளானாலும் வியாமோஹம் என்றவளவே பொருளாகக் கொள்ளத் தக்க தென்க. இப்படியே ஒவ்வொன்றும் காண்க. "செந்தாமரைக் கண்ணற்கு" என்றதற்கு கண்களையுடையவன் என்று பொருளானாலும் கண்கள் என்றவளவிலேயே பொருளை நிறுத்திக் கொள்க. எதற்காக இப்படியென்னில்; ஒவ்வொரு விசேஷணம்சங்களையும் நினைத்து என் மகள் தளர்கின்றாள் என்று சொல்லுவதே இங்குச் சுவையுடைத்து.

என் கோங்கலரேலக்குழலி=கூந்தலானது தலைக்கு அலங்காரமாயிருக்கும்; கூந்தலில்லாத தலை வெறுக்கத்தக்கதாயிருக்கும். அதுபோல வணக்கத்தோடுகூடிய தலை கொண்டாடத் தகுந்ததாகவும் வணக்கமற்ற தலை வெறுக்கத்தக்கதாகவுமிருக்குமாதலால், கூந்தலென்பதற்கு வணக்கத்தை ஸ்வாபதேசார்த்தமாகக் கொள்ளலாம். வணக்கத்திற்குப் பரிமளமாவது— அந்த வணக்கம் பகவத்விஷயத்தளவிலே நிற்கையன்றிக்கே பாகவதபர்யந்தமாகை. * திருமால் திருப்பேர் வல்லாரடிக்கண்ணி சூடியமாறன் * என்று தாமே பணித்தபடி பாகவத பக்தி நிரம்பியவர் என்றவாறு. (க)

3283 சங்குவில்வாள்தண்டு சக்கரக்கையற்கு * செங்கனிவாய்ச் செய்யதாமரைக்கண்ணற்கு *
கொங்கலர்தண்ணந்துழாய் முடியானுக்கு * என்மங்கையிழந்தது மாமைநிறமே. (உ)

| | |
|---|---|
| சங்கு வில் வாள் தண்டு சக்கரம் கையற்கு | பஞ்சாயுதங்களையும் திருக்கையிலே உடையவரும் |
| செம் கனி வாய் செய்ய தாமரை கண்ணற்கு | சிவந்த கனிபோன்ற அதரத்தையும் செந்தாமரைக் கண்களையுமுடையவரும் |
| கொங்கு அலர் தண் அம் துழாய் முடியானுக்கு | தேனெழுகப் பெற்றுக் குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையைத் திருமுடியிலுடையவருமான எம்பெருமான் விஷயத்திலீடுபட்டதனுல் |
| என் மங்கை இழந்தது | என் பெண்பிள்ளை யிழந்தது |
| மாமை நிறம் | அழகிய நிறமாம். |

* * * மாமை நிறமாவது பெண்மைக்கு அஸாதாரணமான நிறம் என்பர். எம்பெருமானது சில திருக்குணங்களை நினைத்து 'இத்தகைய குணசாலியோடு நமக்கு நித்ய ஸம்ச்லேஷம் வாய்க்கவில்லையே!' என்று நைந்து நிறம் வேறுபட்டாளென்கிறது. (உ)

3284 நிறங்கரியானுக்கு நீடுலகுண்ட * திறங்கிளர்வாய்ச் சிறுக் கள்வரவற்கு *
கறங்கியசக்கரக் கையவனுக்கு * என்பிறங்கிருங்கூந்தல் இழந்ததுபீடே. (௩)

| | |
|---|---|
| நிறம் கரியானுக்கு | கருநிற முடையவரும் |
| நீடு உலகு உண்ட திறம் கிளர் வாய் | (பிரளய காலத்தில்) ஸகல லோகங்களையும் அமுது செய்தபடி தோற்றுகிற திருப்பவளத்தை யுடையவராய்க் கொண்டு |
| சிறு கள்வர் அவற்கு | சிறியவடிவிலே பெரியவுலகங்களை மறைத்துவைத்தவரும் |
| கறங்கிய சக்கரம் கையவனுக்கு | சுழலும் திருவாழியைக் கையிலே உடையவருமான பெருமான் விஷயத்திலீடுபட்டதினுல், |
| என் பிறங்கு இரு கூந்தல் | விளங்குகின்ற அடர்ந்த கூந்தலை யுடையளான என் மகள் |
| இழந்தது பீடு | இழந்தது பெருமையாம். |

* * * நான் பிரிவாற்றாமையாலே உடம்பு வெளுத்துக் கிடக்க அவர் மேனி நிறம் குறியழியாமே பசுகுபசுகென்றிருக்கிற அழகு என்னே! என்று நைகின்றாளென்கை. நீடுலகுண்ட திறம் கிளர்வாய்= *அண்டரண்ட பகிரண்டத்தொருமாநிலமெழுமால்வரை முற்று முண்ட கண்டம்* என்கிறபடியே அன்று உலகமெல்லாம் பிரளயாபத்து அடையாதபடி காத்தருளின திருவாயையுடையவன் என்று கதைகளில் கேட்கிறோமத்தனையன்றி அத்தகைய ரக்ஷகத்வம் நம்மளவில் ஒன்றுமில்லையே! என்று உருகுகின்றாளென்கை. (௩)

3285 பீடுடைநான்முகனைப் படைத்தானுக்கு * மாடுடைவையம் அளந்தமணாளற்கு *
நாடுடைமன்னர்க்குத் தூதுசெல்நம்பிக்கு * என்பாடுடையல்குல் இழந்ததுபண்பே. (௪)

பீடு உடை நான் முகனை — பெருமை பொருந்திய பிரமனை
படைத்தானுக்கு — (தனது திருநாபிக்கமலத்தில்) படைத்தவனும்
மாடு உடை வையம் — வஸுமதியான பூமியை
அளந்த மணாளற்கு — (திரிவிக்கிரமனாகி) அளந்து கொண்ட மணவாளனும்
நாடு உடை மன்னர்க்கு — நாட்டுக்குக் கடவரான பாண்டவர்களுக்காக
தூது செல் நம்பிக்கு — தூதுசென்றவனுமான பெருமான் விஷயத்திலீடுபட்டதனால்
என் பாடு உடை அல்குல் — பரந்தநிதம்பத்தையுடையளான என் மகள்
இழந்தது பண்பு — இழந்தது தன் இயற்கையை.

* * * இப்பாட்டில் தன்மகள் பண்பிழந்தாளாகக் கூறுகின்றாள். பண்பாவது இயற்கையான தன்மை. எம்பெருமானது ஒரோகுணங்களை நினைத்து விகாரப்படுகின்றாளென்றவாறு. கண்ணபிரான் துரியோதனாதியரிடம் தூதுசெல்கிற காலத்திலே பாண்டவர்கள் நாட்டை யிழந்து கிடக்கையாலே அப்போது அவர்களை நாடுடை மன்னராகச் சொல்லலாமோ? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; இதற்கு நம்பிள்ளை அருளிச்செய்கிறார்—"இருக்கைக்கு ஒரு குச்சியும் கொடோம் என்று ராஜ்யம்பண்ணுகிறவர்கள் துர்யோதனாதிகளாயிருக்க, பாண்டவர்களை நாடுடை மன்னரென்கிறது பகவதபிப்ராயத்தாலே" என்று (௪)

3286 பண்புடைவேதம் பயந்தபரனுக்கு * மண்புரைவையம் இடந்தவராகற்கு *
தெண்புனற்பள்ளி எம்தேவபிரானுக்கு * என்கண்புனைகோதை இழந்ததுகற்பே. (௫)

பண்பு உடை வேதம் பயந்த பரனுக்கு — சீர்மைமிக்க வேதங்களை (ப்பிரமனுக்கு) உபகரித்தருளின பரம புருஷனும்,
மண்புரை வையம் இடந்த வராகற்கு — மண்மிக்க பூமியை யிடந்தெடுத்த வராஹ மூர்த்தியும்,
தெண் புனல் பள்ளி எம் தேவ பிரானுக்கு — தெளிந்த நீரையுடைய ஏகார்ணவத்திலே பள்ளிகொண்ட தேவபிரானுமான எம்பெருமான் விஷயத்தில் (ஈடுபட்டு)
என் கண்புனை கோதை இழந்தது — கண்ணைக் கவர்கின்ற கூந்தலையுடையளான என் மகள் இழந்தது
கற்பு — அறிவுடைமை.

* * * இப்பாட்டில் தன்மகள் கற்பிழந்தாளாகக் கூறுகின்றாள் "கற்பு—கல்வி; அதாவது ஜ்ஞானம்" என்பது ஈடு. தன்னறிவையிழந்தாளென்றபடி. அறிவு புஷ்கலமாயிருக்கையாவது—எதிலும் ஸந்தேஹமில்லாமலும் விபரீதவுணர்ச்சியில்லாமலும் மறப்பில்லாமலுமிருத்தல். அறிவையிழக்கையாவது—ஸந்தேஹவுணர்ச்சியும் விபரீதவுணர்ச்சியும் மறப்புமுடைமை. எம்பெருமான் அடியார்களுக்குப் பல காரியங்கள் செய்தருளினதாக சாஸ்த்ரங்களில் சொல்லப்படுகின்றதே! அதெல்லாம் உண்மையாயிருக்குமோ இராதோ என்று தன்மகள் சிலஸமயங்களில் ஸந்தேஹப்படுவதாகவும், சிலஸமயங்களில் 'அதெல்லாம் பொய்தான், வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகளுக்குக் கைக்கூலிகொடுத்து எழுதுவித்துக்கொண்டதத்தனையே' என்று விபரீத நிச்சயம் கொள்வதாகவும் தாய் கூறுகின்றாளென்க. கண்புனை கோதை—கண்டார் கண்ணைக் கவரும்படியான மயிர் முடியையுடைய இப் பெண்பிள்ளை என்றபடி. (௫)

3287 கற்பகக்காவன நற்பலதோளற்கு * பொற்சுடர்க்குன்றன்ன பூந்தண்முடியற்கு *
நற்பலதாமரை நாண்மலர்க்கையற்கு * என்விற்புருவக்கோடி தோற்றதுமெய்யே. (௬)

கற்பகம் கா அன நல் பல தோளற்கு — கற்பகச்சோலைபோன்ற நல்ல பல திருத்தோள்களையுடையவனும்

சுடர் பொன் குன்று அன்ன பூ தண் முடியற்கு — சுடர்மிக்க பொற்குன்றம் போன்ற மிகவழகிய திருவபிஷேகத்தையுடையவனும்

நல் பல தாமரை நாள் மலர் கையற்கு — அப்போதலர்ந்த தாமரைப் பூப் போன்று விலக்ஷணமான பல திருக்கைகளையுடையவனுமான எம்பெருமான் திறத்தி லீடுபட்டதனால்

என் வில் புருவம் கொடி — வில்போன்ற புருவத்தையுடையளான என் பெண்கொடி

தோற்றது — இழந்தது

மெய் — தன்னுடம்பையாம்.

* * * இப்பாட்டில் 'தோற்றது மெய்யே' என்று, தன்மகள் சரீரத்தை இழந்தாளாகச் சொல்லுகிறாள். சரீரம் தன்வசமாயிருக்கையன்றியே பரவசமாகப் பெற்றாளென்றபடி. அதாவது—காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும் என்னும்படியான நிலைமையை எய்தினாளென்கை. என்விற்புருவக்கோடி—கொடியென்றது பெண்ணுக்கு வாசகம்: கொடிபோன்றவள் என்கை; வில்போன்ற புருவத்தையுடைய என்மகள் என்றதாயிற்று. ஆழ்வார் புருவம் நெறித்தவிடத்தே எம்பெருமான் காரியம் செய்யவேண்டும்படி யிருக்கை. அதாவது—ஆழ்வார் ஸம்பந்தமுடையார் பக்கலிலே எம்பெருமானுடைய விஷயீகாரம் செல்லும்படியாகை. * யத்ப்ருபங்கா: ப்ரமாணம் * என்னுமாபோலே. (௬)

3288 மெய்யமர்பல்கலன் நன்கணிந்தானுக்கு * பையரவினணைப் பள்ளியினானுக்கு *
கையொடுகால்செய்ய கண்ணபிரானுக்கு * என்தையலிழந்தது தன்னுடைச்சாயே. (௭)

மெய் அமர் பல் கலன் நன்கு அணிந்தானுக்கு — திருமேனிக்குப் பொருத்தமான பல திருவாபரணங்களை நன்றாக அணிந்து கொண்டிருப்பவனும்

பை அரவு இன் அணை பள்ளியினானுக்கு — படமெடுத்த ஆதிசேஷனாகிய இனிய படுக்கையிலே துயிலமர்ந்தவனும்

கையொடு கால் செய்ய கண்ண பிரானுக்கு — திருக்கைகளும் திருவடிகளும் சிவந்திருக்கப்பெற்றவனுமான கண்ண பிரான் விஷயத்திலீடுபட்டதனால்

என் தையல் இழந்தது — என் மகள் இழந்தது

தன்னுடை சாய் — தனது ஒளியாம்.

* * * இப்பாட்டில் 'என்தையலிழந்தது தன்னுடைச்சாய்' என்கிறாள். சாயா என்னும் வட சொல் சாய் எனத்திரிந்தது. சாயையாவது ஒளி. லாவண்ய மிழந்தாளென்கை. உரு வேறுபாடுற்றாளென்றவாறு. கையொடுகால்செய்ய கண்ணபிரானுக்கு—நீலத்தடவரையிலே செந்தாமரை பூத்தாற்போலே பச்சை மாமலைபோன்ற திருமேனிக்குப் பரபாகமாகக் கையுங்காலும் சிவந்து விளங்கும்படியான ஆச்சரியமான அழகுபடைத்திருப்பது என்னோடே கலக்கைக்காக வென்றிருந்தேன்; அந்தோ! அப்படியில்லையே! என்று தளர்கின்றாளென் மகள் என்கிறாள் திருத்தாய். (௭)

3289 சாயக்குருந்தம் ஒசித்ததமியற்கு * மாயச்சகடம் உதைத்தமணாளற்கு *
பேயைப்பிணம்படப் பாலுண்பிரானுக்கு * என்வாசக்குழலி இழந்ததுமாண்பே. (௮)

குருந்தம் சாய ஒசித்த தமியற்கு — குருந்தமரம் வேரோடு பறியுண்டு சாயும்படி அதனை முறித்த அத்விதீயனும்

மாயம் சகடம் உதைத்த மணாளற்கு — க்ருத்ரிமமான (அஸுராவேசங் கொண்ட) சகடத்தைப் பொடி படுத்தின மணவாளனும்

பேயை பிணம் பட பால் உண் பிரானுக்கு — பூதனையென்கிற பேய்ச்சி பிணமாகும்படி அவளது முலைப் பாலையுண்டவனுமான எம்பெருமான் விஷயத்திலீடுபட்டதனால்

என் வாசம் குழலி — வாசனை பொருந்திய கூந்தலையுடையளான என் மகள்

இழந்தது மாண்பு — இழந்தது தன் மாட்சிமையாம்.

* * * இப்பாட்டில், என்னுடைய பெண்பிள்ளை தன்னுடைய மாட்சியை யிழந்தா ளென்கிறாள். எவ்வளவோ பெருமையாக வாழ்ந்தவள் அப்பெருமையெல்லாம் போய் இங்ஙனே தரைப்பட்டுக்கிடக்கின்ற பரிதாபம் என்னே! என்கிறாள். (அ)

3290 மாண்பமைகோலத்து எம்மாயக்குறளற்கு *
சேண்சுடர்க்குன்றன்ன செஞ்சுடர்மூர்த்திக்கு *
காண்பெருந்தோற்றத்து எம்காகுத்தநம்பிக்கு * என்
பூண்புனைமென்முலை தோற்றதுபோற்பே. (கூ)

மாண்பு அமை கோலத்து { அழகமைந்த வடிவையுடைய னை
எம் மாயம் குறளற்கு { எம்மை யீடுபடுத்திக்கொள்ளும் மாயவாமனமூர்த்தியும்
சேண் சுடர் குன்று அன்ன { உயர்ந்த சோதிமயமான குன்று போன்ற
செம் சுடர் மூர்த்திக்கு { செவ்விய சுடரையுடைய வடிவு கொண்டவனும்
காண் பெரு தோற்றத்து { அனைத்துலகும் காணப்பெற்ற சிறந்த ஆவிர்ப்பாவத்தை யுடைய
என் ககுத்தன் நம்பிக்கு { இராமபிரானுமான எம்பெருமான் விஷயத்திலீடுபட்டதனால்
என் பூண் புனை மென் முலை { ஆபரணங்களையணிந்த மெல்லிய முலைகளையுடையளான என்மகள்
தோற்றது பொற்பு — இழந்தது அழகாம்.

* * * இப்பாட்டில் என்மகள் அழகிழந்தாளென்கிறாள். தன்னழகாலே அவனை வசப்படுத்திக்கொள்ளப் பிறந்தவிவள் அவனழகிலே யீடுபட்டுத் தன்னழகை யிழந்தாளென்று வருந்துகிறாள். (கூ)

3291
போற்பமைநீண்முடிப் பூந்தண்டுழாயற்கு * மற்பொருதோளுடை மாயப்பிரானுக்கு *
நிற்பனபல்லுருவாய் நிற்குமாயற்கு * என் கற்புடையாட்டி இழந்ததுகட்டே. (ய)

பொற்பு அமை நீள் முடி { அழகமர்ந்து உயர்ந்த கிரீடத்திலே
பூ தண் துழாயற்கு { அழகியகுளிர்ந்த திருத்துழாயையுடையவனும்
மல் பொரு தோள் உடை { மல்லர்களோடு போர்செய்த திருத்தோள்களையுடையவனும்
மாயம் பிரானுக்கு { அற்புதச் செயல்களைச்செய்யும் மஹோபகாரகனும்
நிற்பன பல் உரு ஆய் நிற்கும் { ஸ்தாவர ஜங்கமங்களாய் நிற்கின்ற பலவகைப் பதார்த்தங்களுமாயுள்ளவனும்
மாயற்கு { (அப்படியிருக்கச்செய்தேயும் அவற்றின் குற்றங்கள் தன்மீது ஏறப்பெறுமலிருக்கும்) மாயனுமான பெருமான் திறத்திலீடுபட்டதனால்
என் கற்புடையாட்டி { தக்க அறிவுடையளான என்மகள்
இழந்தது கட்டு இழந்தது எல்லாமுமாம்.

* * * இப்பாட்டில் 'என் கற்புடையாட்டி யிழந்தது கட்டே' என்கிறாள் திருத்தாய். கட்டு என்பதற்கு ஸ்த்ரீத்வமர்யாதை என்றும் பொருள், 'எல்லாம்' என்றும் பொருள். ஸ்த்ரீத்வமர்யாதையையிழக்கையாவது:—லஜ்ஜையோடும் அடக்கத் தோடும் கூடியிருக்க வேண்டிய தன்மையை இழத்தலாம். இப்பதிகத்தில் ஒவ்வொருபாசுரத்தில் ஒவ்வொன்றை யிழந்தாளாகச் சொல்லிவந்தாள். பலசொல்லியென்? இழவாதது ஒன்றுண்டோ? எல்லா முமிழந்தாள் என்கிறாள். பொற்பு—அழகு; அது அமைந்த திருவபிஷேகத்தின்மேலே திருத்துழாய் மாலை சாத்தியிருக்குமழகிலே யீடுபட்டு என்மகள் நைகின்றாள். (ய)

3292 கட்டெழில்சோலை நல்வேங்கடவாணனை* கட்டெழில்தென்குருகூர்ச் சடகோபன்சொல்*
கட்டெழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர்* கட்டெழில்வானவர் போகமுண்பாரே. (கக)

| | |
|---|---|
| கட்டெழில் சோலை | நறுமணம் மிக்க சோலையை யுடைத்தான |
| நல் வேங்கடம் வாணனை | திருவேங்கட மலையிலே வாழ்ப வனை எம்பெருமான் விஷயமாக |
| கட்டெழில் தென் குருகூர் சடகோபன் சொல் | அரணழகு பொருந்திய தென் குருகூரில் அவதரித்த ஆழ்வார் அருளிச்செய்த |
| கட்டெழில் ஆயிரத்து | தொடையழகை யுடைத்தான ஆயிரத்தினுள்ளே |
| இ பத்தும் வல்லவர் | இப்பத்துப்பாசுரங்களையும் ஓத வல்லவர்கள் |
| கட்டெழில் வானவர் போகம் | பரமவிலக்ஷணமான நித்ய ஸூரிபோகத்தை |
| உண்பார் | அனுபவிக்கப் பெறுவர்கள், |

* * * கீழ்ப் பத்துப் பாசுரங்களிலும் திருவேங்கட முடையானுடைய ப்ரஸ்தாவமே இல்லாமலிருக்க, இப்போது நிகமத்தில் "நல் வேங்கடவாணனை" என்று திருவேங்கட முடையானைக் குறித்து இத்திருவாய்மொழி அருளிச் செய்ததாகக் கூறினவிது என்னே? எனின்; கீழே மூன்றாம் பத்தில் * சொன்னால் விரோதத்தில் * தென்னா தெனாவென்று வண்டு முரல் திருவேங்கடத்து என்னானையென்னப்ப னெம்பெருமானுளனாக—என்னாவிலின்கவி யானொருவர்க்குங் கொடுக்கிலேன் * என்றருளிச் செய்தவராகையாலே இங்ஙனே கூறக்குறையில்லையென்பர். (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து ஏழாந் திருவாய்மொழி—உண்ணுஞ்சோறு பருகுநீர்.

கீழ்த்திருவாய்மொழி போலே இத்திருவாய்மொழியும் தாய் பாசுரமாகவே செல்லுகிறது. படுக்கைத்தலையிலே பராங்குச நாயகியாகிய மகளுடன் கூடவே படுத்துக் கொண்டிருந்து மகளின் விரஹதாபத்துக்கு உபசாரங்கள் பண்ணிக்கொண்டிருந்த திருத்தாயார் படுக்கையைத் தடவிப்பார்த்தாள்; எங்கும் தேடிப்பார்த்தாள்; மகளைக் கண்டிலள். 'பேய் கொண்டதோ? பிசாசு கொண்டதோ?' என்று சங்கிக்கலாமாயினும் இவளுக்குத் திருக்கோளூரெம்பெருமானிடத்திலிருந்த ஆவலின் மிகுதியை நன்கு அறிந்தவளாகையாலே அத்திருப்பதிக்கே சென்றிருக்கவேணுமென்று அறுதியிட்டு அதை வெளியிட்டுரைக்கும் பாசுரமாகச் செல்லுகிறது இத்திருவாய்மொழி. திருக்கோளூர் சென்று அவ்விடத்து எம்பெருமானோடே நித்யஸம்ச்லேஷம் பண்ணவேணுமென்றிருந்த ஆழ்வாருடைய விருப்பம் இத்திருவாய்மொழியாகப் பரிணமித்து விட்டது போலும்.

3293 உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாம்
கண்ணன் * எம்பெருமானென்றென்றே கண்கள்நீர்மல்கி *
மண்ணினுளவன்சீர் வளம்மிக்கவனூர்வினவி *
திண்ணமென்னிளமான்புகுமூர் திருக்கோளூரே. (க)

| | |
|---|---|
| உண்ணும் சோறு | உண்டு பசிதீர்க்க வேண்டும் படியான சோறும் |
| பருகும் நீர் | குடித்து விடாய் தீர்க்கவேண்டும் படியான நீரும் |
| தின்னும் வெற்றிலையும் எல்லாம் | தின்று களிக்கவேண்டும்படியான வெற்றிலையுமாகிய எல்லாப்பொருள்களும் |
| கண்ணன் எம்பெருமான் என்று என்றே | (எனக்கு) ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே யென்றுபலகாலும் சொல்லி |
| கண்கள் நீர் மல்கி | கண்ணீர் தாரைதாரையாகப் பெற்றிருந்த |
| என் இள மான் | இளமான் போன்ற என்மகள் |
| மண்ணினுள் | பூமண்டலத்துள்ளே |
| சீர் வளம் மிக்கவன் | சீரும் சிறப்பும் மிகுந்தவனை |
| அவன் | அப்பெருமானுடைய |
| ஊர் | திவ்யதேசத்தை |
| வினவி | விசாரித்துக்கொண்டு சென்று |
| புகும் ஊர் | சேர்ந்தவிடம் |
| திருக்கோளூரே | திருக்கோளூராகவே யிருக்க வேணும்; |
| திண்ணம் | இதில் ஸந்தேஹமில்லை. |

* * * படுக்கைத்தலையிலே மகளைக்காணாத திருத்தாயார் 'என்மகள் திருக்கோளூர்க்குத் தான் சென்றிருக்கவேணும்' என்று அறுதியிட்டுக் கூறுகின்றாள். ஆழ்வாருடைய உண்மையான தன்மை முன்னிரண்டடிகளிற் கூறப்படுகின்றது. ஆசார்யஹ்ருதயத்தில் ரிஷிகளிற் காட்டில் ஆழ்வார்க்கு நெடுவாசியருளிச் செய்யுமிடத்து "அவர்களுக்குக் காயோடென்னுமிவையே தாரகாதிகள்; இவர்க்கு எல்லாங் கண்ணனிறே" என்றருளிச்செய்துள்ள சூர்ணை இங்கு அநுஸந்தேயம். ரிஷிகளானவர்களுக்கு * காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து * என்றும் * வீழ்கனியு மூழிலையு மென்னுமிவையே நுகர்ந்து * என்றும் சொல்லுகிறபடியே பலமூல பத்ரவாயு தோயங்களே தாரக போஷக போக்யங்களா யிருக்கும்; * க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமிவோதிதம் * என்னும்படியான இவ்வாழ்வார்க்கோ வென்னில் தாரகாதிகள் அவையன்று, உண்ணுஞ் சோறு பருகும்நீர் தின்னும் வெற்றிலையுமான வெல்லாம் எம்பெருமானேயாம் என்கை.

கண்ணனெம்பெருமா னென்றென்றே கண்கள் நீர்மல்கி='எனக்கு ஸகலவிதமான தாரகபோஷக போக்யங்களும் கண்ணனெம்பெருமானே' என்று பலகால் சொல்லிக்கொண்டு நீர் மல்கு கண்ணினராயிருப்பதே ஆழ்வாருடைய இயல்பாம். இப்படிப்பட்ட பராங்குசநாயகி "அப்பெருமானுடைய திருக்குணங்களும் திவ்யமான ஐச்வர்யமும் மிக மிக விளங்குமிடமான திருக்கோளூர் எங்கிருக்கிறது? எத்தனை தூரம் போரும்?" என்று கேட்டுக்கொண்டே திருக்கோளூர்க்கே சென்று புகுந்திருப்பாள்; வேறு எங்கும் போயிருக்க ப்ரஸக்தியில்லை, இது திண்ணம் என்கிறாள் திருத்தாயார்.

எம்பெருமானார் திவ்ய தேசயாத்திரையாக எழுந்தருளுகையில் திருக்கோளூர்க்கு எழுந்தருளாநின்றார்; அப்போது அங்கு நின்றும் வெளியேறுகின்றாளொரு அம்மையாரைப் பார்த்து 'எங்கு நின்றும் புறப்பட்டபடி?' என்று கேட்க, அவள் 'திருக்கோளூரில் நின்றும்.' என்று சொல்ல, அதுகேட்டு எம்பெருமானார் "அவ்வூரில் புக்க பெண்களும் வெளியே போகக் கடவராயிருப்பர்களோ?" என்றாராம். புகுமூர் என்ற சந்தையின் சுவடறிந்து அருளிச் செய்தபடி. திருக்கோளூர்=பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டில் ஒன்று; திருக்குருகூர் முதலாய நவதிருப்பதிகளுள் ஒன்று. ஸ்ரீமதுர கவிகளின் திருவவதாரஸ்தலம் இதுவே. (க)

3294 ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல் * அவனுடைய
பேரும்தார்களுமேபிதற்றக் கற்புவானிடறி *
சேருநல்வளஞ்சேர் பழனத்திருக்கோளூர்க்கே *
போருங்கொலுரையீர் கொடியேன்கொடி பூவைகளே * (உ)

| | |
|---|---|
| பூவைகளே | பூவைப்பறவைகளே! |
| ஊரும் நாடும் உலகமும் | தானிருந்த ஊரும் நாடும் உலகமுமெல்லாம் |
| தன்னை போல் | தன்னைப்போலவே |
| அவனுடைய | எம்பெருமானுடைய |
| பேரும் தார்களுமே பிதற்ற | திருநாமங்களையும்சின்னங்களையுமே பிதற்றும்படி (செய்யுமவ்வளான) |
| கொடியேன் கொடி | பாவியேனுடைய மகள் |
| வான் கற்பு இடறி | சிறந்த ஸ்த்ரீத்வமர்யாதையைக் கடந்து |
| நல் வளம் சேர் பழனம் | விலக்ஷணமான வளம் பொருந்திய நீர் நிலங்களையுடைத்தான |
| திருக்கோளூர்க்கே சேரும் | திருக்கோளூரிலேயே சென்று சேர்ந்திருப்பள்; |
| போரும் கொல் | (உங்களை நினைத்தாகிலும்) திரும்பிவருவளோ? |
| உரையீர் | சொல்லுங்கள். |

* * * பராங்குசநாயகியின் லீலோபகரணங்களுள் ஒன்றான பூவை யென்னும் பறவைகளை நோக்கித் திருத்தாயார் கேட்கிறாள்; என்பக்கலில் நசையற்று ஒழிந்தாளாகிலும்

உங்களை நினைத்தாவது என்மகள் இங்கு மீண்டு வரக்கூடுமோ? சொல்லுங்கள் என்கிருள். பூவைப்பறவை விடையளிக்க மாட்டாத அஃறிணையென்றறிந்தும் மதிகலங்கிக் கேட்கிறபடி.

ஆழ்வாருடைய நித்யகர்மத்தைச் சொல்லுவன முன்னடிகள். தான்பிறந்த வூரிலுள்ளாரும் அவ்வூர்க்குத் தலையான நாட்டிலுள்ளாரும், கிம்பஹுநா? இவ்வுலகத்திலுள்ளா ரெல்லாருமே தன்னைப்போல் எம்பெருமானுடைய திருநாமங்களையும் லக்ஷணங்களையும் இடையறாது சொல்லிக்கொண்டிருக்கும்படி செய்து போருமவள் என்மகள் என்கிருள். இப்போது இது சொல்லுகைக்கு ப்ரஸக்தி யென்? 'திருக்கோளூரிலே போனவள் திரும்பி வருவளோ'? என்று கேட்கிற திருத்தாயார், இங்கிருக்கிற நாளில் இவள் செய்து கொண்டிருக்கும்படியைச் சொல்லுவானேன்? என்னில்; தானிருந்த தேசத்தை விட்டு வேறோரிடம் போவது உசாத்துணைக்கு அங்கே ஆளுண்டென்று நினைத்தன்றே; இங்குள்ளா ரெல்லாரையும் தன்னைப் போலேயாக்குகையாலே அது இங்கே குறையற்றிருக்க எதுக்குப்போனுள்? என்கைக்காக. இங்கே ஈடு;—"இவ்விருப்பில் என்ன குறையுண்டு? இங்கே ஒரு குறையுண்டாய் அங்கே அது தீரப்போனுளோ? இங்கே * போதயந்த: பரஸ்பரம்பண்ணுகைக்கு ஆளில்லாமே ஒரு தேசவிசேஷம் தேடிப்போனுளோ?"

ஆறுயிரப்படியில்—"திருநாமங்களையும் திவ்ய சிஹ்நங்களையுமே சொல்லிக் கூப்பிடும்படியாகக் கூப்பிடுகிறவிவள்" என்று அருளிச்செய்திருக்கக் காண்கையாலும், இருபத்திநாலாயிரப்படியிலும் ஈட்டிலும் "சொல்லும்படி பண்ணி" என்று அருளிச்செய்திருக்கக் காண்கையாலும் 'பிதற்ற' என்னும் செயவெனச்சத்திற்கு 'பிதற்றும்படி பண்ணிவைத்து' என்கிற வரையில் அர்த்தம் கொள்ளவேணும். கற்புவானிடறி=வான் கற்பு இடறி என்று மொழி மாற்றிப் பொருள் கொள்வது. திவ்யமான தன்னுடைய ஸ்த்ரீத்வ மர்யாதையை அதிக்ரமித்துச் சென்று என்றபடி. (௨)

3295 பூவைபைங்கிளிகள் பந்துதூதைபூம்புட்டில்கள் *
யாவையுந்திருமால் திருநாமங்களேகூவியெழும் * என்
பாவைபோயினித் தண்பழனத்திருக்கோளூர்க்கே *
கோவைவாய்துடிப்ப. மழைக்கண்ணொடென்செய்யுங்கோலோ? (௩)

| | |
|---|---|
| பூவை பைகிளிகள் பந்து தூதை பூ புட்டில்கள் யாவையும் | வகளென்ன பசுமை தங்கிய கிளிகளென்ன பந்துகளென்ன சிறுசோறுசமைக்கும் பானைகளென்ன பூவிடும் குடலைகளென்ன ஆகிய லீலோபகரணங்களான) இவை யெல்லாவற்றாலும் உண்டாகக்கூடிய இன்பம் |
| திருமால் திருநாமங்களே கூவி எழும் | பகவானுடைய திருநாமங்களினுலேயாம்படி அத்திருநாமங்களைச் சொல்லியழைத்து உஜ்ஜீவிப்பவளான |
| என் பாவை | எனது பெண்பிள்ளை யானவள் |
| இனி | இங்கே ஒரு குறையற்றிருக்கச் செய்தேயும் |
| தண் பழனம் திருகோளூர்க்கே போய் | குளிர்ந்த நீர் நிலங்களையுடைய திருக்கோளூர்க்கே புறப்பட்டுப்போய் |
| கோவை வாய் துடிப்ப | கோவைப்பழம் போன்ற அதரம் துடிக்கும்படியாக |
| மழை கண்ணொடு | நீர்பெருகப்பெற்ற கண்களோடே நின்று |
| என் செய்யும் கொலோ | என்னபாடுபடுவளோ! (அவ்விருப்பை நான் காணப்பெற்றிலேனே! என்று அலமருகின்றுளென்க.) |

* * * ஐயோ! என்மகள் திருக்கோளூரிலே எப்பாடு படுகிருளோவென்கிருள் தாய். முன்னடிகளுக்குப் பொருள் கொள்ளுதலில் சிறிது அவதானம் வேண்டும். பூவைபைங்கிளிகள் முதலானவையும் எம்பெருமானுடைய திருநாமங்களையே கூவி யெழும்படியாகச் செய்த என்மகள்—என்று சிலர்க்குப் பொருள் தோன்றக்கூடும்; இது ஆபாதப்ரதீதி யாமத்தனை; பந்து தூதை முதலான அசேதனப் பொருள்களையும் கூடச் சேர்த்திருக்கையாலே அவற்

றுக்கு வாக்ய்யவஹாரப்ரஸக்தி யில்லாமையாலே அப்பொருள் பொருந்தாது. பூவைபைங் கிளிகள் பந்து முதலான லீலோப கரணங்களைக் கண்டால் வரும் லீலாரஸமும் தனக்கு எம் பெருமானைக் காணுமதுவேயாயிருக்கும் என்மகள் என்பதே பொருத்தமான பொருள். இங்கே ஈடு;—வேறொன்றைக் கொண்டு போது போக்க வேண்டும் பருவத்திலும் திரு நாமத்தையே கொண்டு ஜீவித்திருக்குமவள் கிடீர் போனாள். இங்கிருந்தநாள் மற்றொன்று தாரகமாய் அங்கே போய் அவனாலே தரிக்கப்போனாளோ? பூவை தொடக்கமான லீலோப கரணங்களால் பிறக்கும் ஹர்ஷமெல்லாம் ச்ரிய: பதியென்கிற திருநாமத்தைச் சொல்லி அத்தா லேயிறே உண்டாகாநின்றது.'' (௩)

3296 கோல்லையென்பர்கோலோ? குணம்மிக்கனளென்பர்கோலோ? *
சில்லைவாய்ப்பெண்டுகள் அயற்சேரியுள்ளாருமெல்லே! *
செல்வம்மல்கி யவன்கிடந்த திருக்கோளூர்க்கே *
மெல்லிடைநுடங்க இளமான்செல்லமேவினளே. (௪)

இள மான் — இளமான் போன்ற என் மகள்
செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கு — செல்வம் நிரம்பப்பெற்று அப் பெருமான் கண்வளர்ந்தரு ளப்பெற்றதிருக்கோளூரைக் குறித்தே
மெல் இடை நுடங்க — மெல்லிய (தனது) இடை நோரும்படி
செல்ல மேவினளே — புறப்பட்டுச் செல்ல நெஞ்சு பொருந்திவிட்டாளே!, (இதைப்பற்றி)
சில்லை வாய் பெண்டுகள் — வம்புவாயரான நஞ்சேரிப் பெண்களும்
அயல் சேரி உள்ளாரும் — அயல் சேரியிலுள்ள பெண்களும்
கொல்லை என்பர் கொலோ — 'இவள் வரம்பு கடந்து நடந்த வள்' என்று சொல்லிப் பழிப்பர்களோ? (அல்லது)
குணம் மிக்கனள் என்பர் கொலோ — 'விலக்ஷணகுண முடையவள்' என்று சொல்லிக் கொண் டாடுவர்களோ?
எல்லே — என்னாகுமோ!.

*** என் மகளுடைய நடவடிக்கையைக் கண்டு உலகத்தார் உகப்பர்களோ! அன்றி, வெறுப்பர்களோ வென்று சங்கிக்கிறாள் தாய். 'பேறுதப்பாதென்று துணிந்திருப்பதே கடமை' என்று திண்ணிய அத்யவஸாய முடையார் 'இவள் இங்ஙனே படிகடந்து செல் லுகையாவதென்?' என்று வெறுக்கக்கூடும்- 'போற்றுக்கு த்வரிக்கவும் வேணும்' என்றிருக்கு மவர்கள் உகக்கக்கூடும். இரண்டும் ஸ்வரூப மென்று காட்டுகிறபடி.

கோல்லை யென்பர் கோலோ=கொல்லை யென்று வரம்பில்லாததுக்குப் பெயர். 'இவள் வாசற்கடந்து புறப்படக் கடவதல்லாத மரியாதை குலைந்தாள், நிஷித்தாநுஷ்டாநம் பண்ணி னாள்; வரம்பழிந்த செயல் செய்தாள்' என்று நிந்திப்பர்களோ வென்கை. குணம்மிக்கன ளென்பர் கோலோ?='குணாதிக விஷயத்திலே ஈடுபட்டவளாகையாலே அதற்குத் தக்கபடி நன்று செய்தாள்' என்று இவளது குணத்தைச் சொல்லிக் கொண்டாடுவர்களோ? இப்படி சங்கிக்க ப்ரஸக்தி யென்? என்ன, சில்லைவாய்ப் பெண்டுகள் அயற் சேரியுள்ளாருமெல்லே! என்கிறாள். ஸ்த்ரீகளின்வாய் வெறுமனிராது; ஓட்டை வாயைக்கொண்டு ஓயாமல் வம்பளப் பதே அவர்களுடைய பணியாயிருக்கும்; அவ்வளவுமன்றிக்கே பகையாளருமுண்டு; பகைமிக் கால் சொல்லுஞ் சொல்லுக்கொரு வரம்புண்டோ? என்கை. (௪)

3297 மேவிநைந்துநைந்துவிளையாடலுறாள் என்சிறுத்
தேவிபோய் * இனித்தன்திருமால் திருக்கோளூரில் *
பூவியல்பொழிலும் தடமுமவன்கோயிலும்கண்டு *
ஆவியுள்குளிர எங்ஙனேயுகக்குங்கொலின்றே. (௫)

| | |
|---|---|
| என் சிறு தேவி | வயது முதிராதவளும் திவ்யஸ்வபாவமுடையவளுமான என் மகள் |
| மேவி | பகவத் குணங்களிலே யீடுபட்டு |
| நைந்து நைந்து | மிகவும் இளைத்து |
| விளையாடல் உறுள் | (தன் வயதுக்குரிய) விளையாட்டிலும் பொருந்தாதவளாய் |
| போய் | இங்கு நின்றும் போய் |
| தன் திருமால் திருக்கோளூரில் | தனக்கு அஸாதாரணனான எம்பெருமானுடைய திருக்கோளூரில் |
| பூ இயல் பொழிலும் | பூக்களை இயல்பாகவுடைய சோலைகளையும் |
| தடமும் | தடாகங்களையும் |
| அவன் கோயிலும் | அவனது திவ்ய ஸந்நிதியையும் |
| கண்டு | பார்த்து |
| ஆவி உள் குளிர | நெஞ்சு குளிரும்படியாக |
| இன்று எங்ஙனே உகக்கும் கொல் | இன்று எவ்வண்ணம் களித்திருப்பளோ! (அந்நிலைமையை நான் காணப்பெற்றிலேனே!) |

*** திருக்கோளூர்க்கு நடந்த என்மகள் அங்குச் சோலைகளையும் பொய்கைகளையும் அவன் கோயிலையுங்கண்டு ஆச்சரியமான உகப்பை அடைவளே; அந்தோ! அவ்வுகப்பை நான் காணக் கொடுத்து வைக்கவில்லையே! என்று தளர்கின்றாள் தாய். இவள் விளையாட்டுப் பருவத்திலிருக்கச் செய்தேயும் தோழிகளோடே விளையாடவென்று போனால் விளையாட்டிலே அந்வயிக்க மாட்டாள்; அப்போதும் எம்பெருமானை யனுபவிக்க வேணுமென்கிற ஆசையே விஞ்சி அது தன்மனோரதப்படி ஸித்தியாமையாலே நைந்து கிடப்பள். * அறியாக் காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து * என்கிறபடியே அப்படி இளமையே தொடங்கி பகவத் விஷயத்தி லீடுபட்டிருந்தவிவள் இப்போது திருக்கோளூர்க்குச் சென்றாளாயிற்று. அதுதான் ஸாமாந்யமான ஸ்தலமோ? பூஞ்சோலைகளும் தடாகங்களும் மதிளும் மாடமாளிகையும் மண்டபங்களுமாகிற ஸன்னிவேசங்கள் ஆச்சரியமான காட்சியைத் தருமே. அவற்றையெல்லாம் இவள் காணும்போது ஆவியுள்குளிர உகக்குமழகு அத்விதீயமாயிருக்குமே; அவ்வழகு காணக் கொடுத்து வைப்பார் ஆரோ? அந்த பாக்கியம் எனக்கு இல்லையாயிற்றே! என்று தளர்கின்றாள் தாய். (ரு)

3298 இன்றெனக்குதவாதகன்ற இளமானினிப்போய் *
தென்திசைத்திலதமனைய திருக்கோளூர்க்கே
சென்று * தன்திருமால்திருக்கண்ணும் செவ்வாயும்கண்டு *
நின்றுநின்றுநையும் நெடுங்கண்கள்பனிமல்கவே. (சு)

| | |
|---|---|
| எனக்கு | தன்னைப்பிரிந்து நோவுபட்டுக் கிடக்கிற எனக்கு |
| இன்று | இப்பொது |
| உதவாது அகன்ற | உசாத்துணையாக இராதே கைகழிந்துபோன |
| இள மான் | இளமான்போன்ற என் மகள் |
| போய் | வருந்தி வழிநடந்துபோய் |
| தென்திசை திலதம் அனைய | தெற்குத் திசைக்கு அலங்காரமான |
| திருக்கோளூர்க்கே சென்று | திருக்கோளூரிலே பிரவேசித்து |
| இனி | அங்ஙனம் புகுந்த பின்பு |
| தன் திரு மால் | தன்னை வசீகரித்த அத்திருமாலினுடைய |
| திரு கண்ணும் செவ்வாயும் கண்டு | திருக்கண்களையும் செவ்விய அதரத்தையும் கண்டு |
| நெடு கண்கள் பனி மல்க | தனது விசாலமான கண்களில் ஆனந்த பாஷ்பம் நிரம்பப்பெற்று (ஹர்ஷப்ரகர்ஷத்தாலே) |
| நின்று நின்று நையும் | ஒன்றுஞ் செய்யமாட்டாதே சிதிலையாகி நிற்பள். |

*** கீழ்ப்பாட்டில் "எங்ஙனே யுகக்குங்கொல்!" என்றாள்; அவள் உகக்கும்படியைப் பாசுரமிட்டுச் சொல்லுகிறது இப்பாட்டு. இப்படியிப்படி உகப்பள் என்கிறாள் திருத்தாய். (சு)

3299 மல்குநீர்க்கண்ணொடு மையலுற்றமனத்தனளாய் *
அல்லுநன்பகலும் நெடுமாலென்றழைத்தினிப்போய் *

செல்வம்மல்கியவன்கிடந்த திருக்கோளூர்க்கே *
ஒல்கியோல்கிநடந்து எங்ஙனேபுகுங்கொலோசிந்தே? (எ)

| | |
|---|---|
| மல்கு நீர் கண்ணொடு | (என் மகளானவள்) நீர் நிரம்பிய கண்களையுடையவளாயும் |
| மையல் உற்ற மனத்தனள் ஆய் | வியாமோஹம் கொண்ட நெஞ்சையுடையளாயும் |
| நல் அல்லும் பகலும் | நல்ல இரவிலும் பகலிலும் (தவறாது) |
| நெடு மால் என்று அழைத்து | ஸர்வேச்வரனே! என்று கூப்பிட்டுக்கொண்டிருந்து, |
| இனி | இப்போது |
| ஒல்கி ஒல்கி நடந்து | ஒடுங்கியொடுங்கி அசைந்து நடந்து |
| ஒசிந்து போய் | தளர்ந்து சென்று |
| செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே—; | |
| எங்ஙனே புகும் கொல் | எப்படி போய்ச் சேர்ந்திருப்பளோ? |

* * * தன்மகள் திருக்கோளூரெம்பெருமானுடைய திருக்கண்ணும் செவ்வாயுங் கண்டு கண்ணீர் பெருகநிற்பள் என்று கீழ்ப்பாட்டில் ஊஹித்துப்பேசின திருத்தாயார், அவள் திருக்கோளூரளவும் சென்று சேர்ந்தாளாகில்லன்றோ அங்ஙனே யிருப்பது; இவள் தான் அத்தனைதூரம் வழிநடந்து முடிந்து சென்று சேர்ந்த பிறகு நடக்கக்கூடியதை இப்போது சிந்திக்க இடமேது? என்கிறாள். (எ)

3300 ஒசிந்தநுண்ணிடைமேல் கையைவைத்துநொந்துநொந்து *
கசிந்தநெஞ்சினளாய்க் கண்ணநீர்துளும்பச்செல்லுங்கொல்? *
ஒசிந்தவொண்மலராள்கொழுநன் திருக்கோளூர்க்கே *
கசிந்தநெஞ்சினளாய் எம்மைநீத்தவெம்காரிகையே. (அ)

| | |
|---|---|
| ஒசிந்த ஒண் மலராள் கொழுநன் | துவண்ட திருமேனியையுடைய பெரிய பிராட்டியாருக்கு வல்லபனை எம்பெருமான் வர்த்திக்கிற |
| திருக்கோளூர்க்கே | திருக்கோளூரையே நோக்கி |
| கசிந்த நெஞ்சினள் ஆய் | இரநெஞ்சை யுடையளாய்க் கொண்டு |
| எம்மை நீத்த | எங்களை விட்டுப்பிரிந்து சென்ற |
| எம் காரிகை | அழகியாளான என் பெண்பிள்ளை, |
| ஒசிந்த நுண் இடை மேல் | ஏற்கனவே துவண்ட மெல்லிய இடுப்பின்மீது |
| கையை வைத்து | (இளைப்பினால்) கையை வைத்துக் கொண்டு |
| நொந்து நொந்து | மேன்மேலும் நோவு பெற்று |
| கசிந்த நெஞ்சினள் ஆய் | ஈரமான மனத்தையுடையவளாய் |
| கண்ண நீர் துளும்ப | கண்ணீர் பெருகும்படி |
| செல்லும் கொல் | (அவ்வூர்) சென்று சேர்ந்திருக்கக்கூடுமோ? |

* * * என் மகள்தான் எந்த எம்பெருமானை விரும்பிச் சென்றாளோ அவன் பெரிய பிராட்டியார்க்கு வல்லபன் என்னுமிடம் இவள் அறியாள்போலும். "அவள் பக்கலிலே வியாமோஹங் கொண்டிருக்குமிவன் நம்மை லக்ஷியம் பண்ணுவனோ?" என்று இப்பெண் பிள்ளை நினைக்கவேண்டியிருக்க அங்ஙனம் நினையாமல் அப்பெரிய பிராட்டியாருடைய புருஷகாரபலத்தாலே நமக்கொரு குறையிராது என்று நினைத்தோ, அவ்விருவருமான சேர்த்தியழகைச்சேவிப்போ மென்று நினைத்தோ திருக்கோளூர்க்கேசெல்லப் புறப்பட்டாள்; இவள் அத்தனைதூரம் வழிநடந்துசெல்ல வல்லளோ? எங்ஙனே சென்று சேர்ந்திருப்பள் என்கிறாள் திருத்தாய். (அ)

3301 காரியம்நல்லனகளவைகாணில் என்கண்ணனுக்கென்று *
ஈரியாயிருப்பாள் இதெல்லாம்கிடக்க, இனிப்போய் *
சேரிபல்பழிதூயிரைப்பத் திருக்கோளூர்க்கே *
நேரிழைநடந்தாள் எம்மையொன்றும்நினைத்திலளே. (கூ)

| | |
|---|---|
| நேர் இழை | நேர்த்தியான ஆபரணங்களை யணிந்துள்ள என் மகள், |
| காரியம் நல்லனகள் அவை காணில் | பதார்த்தங்களில் நல்லதானவற்றைக் கண்டால் |
| என் கண்ணனுக்கு என்று | 'இவை எம்பெருமானுக்கு ஆம்' என்று அநுஸந்தித்து |
| ஈரியாய் இருப்பாள் | ஈரநெஞ்சையுடையளாக இருப்பவள்; |
| இது எல்லாம் கிடக்க | இங்கே அளவற்ற ஐச்வரியங்கள் கிடக்கவும் |
| இனி | இப்போது |
| போய் | வெளியேறிச் சென்று |
| சேரி பல் பழி தூய் இரைப்ப | சேரியிலுள்ளார் பலபழிமொழிகளைத் தூற்றி கோஷிக்கும்படியாக |
| திருக்கோளூர்க்கே நடந்தாள் | திருக்கோளூரை நோக்கியே நடந்து சென்றாள்; |
| எம்மை ஒன்றும் நினைத்திலள் | எங்களை ஒரு பொருளாக மதித்திலள். |

* * * திருக்கோளூரெம்பெருமான் பக்கலிலே ப்ராவண்யமே வடிவெடுத்த இப் பெண்பிள்ளை ஊராருடைய பழிமொழிகளுக்கும் அஞ்சாதே எங்களையும் ஒரு பொருளாக மதியாதே நடந்து சென்றாளே யென்கிறாள் திருத்தாய். உலகத்தவர்கள் ஏதேனும் நல்ல பொருள்களைக் கண்டால் 'இது நம்முடைய குட்டிக்கு ஏற்றிருக்கும், இது நம்முடைய குழந்தைக்கு ஒத்திருக்கும்' என்று சொல்லிக்காண்பர்கள்; பராங்குச நாயகியோவென்னில், அங்ஙனன்றிக்கே எந்த நல்லபொருளைக்கண்டாலும் 'இது எம்பெருமானுக்குத் தகுந்திருக்கும், இது என் கண்ணனுக்கு ஏற்றிருக்கும்' என்றே சொல்லுவது வழக்கமாம். அங்ஙனம் சொல்லுமிடத்து நெஞ்சு நெகிழ்ந்திருக்குமிருப்பு வெகு ஆச்சரியமாயிருக்கும். "இதெல்லாங் கிடக்க" என்றதற்குப் பலபடியாகக் கருத்துக்கொள்ளலாம். * உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்று பேசிக்கொண்டு கண்கள் நீர்மல்க இங்கே யிருந்தாலாகாதோ? இங்கிருக்குமிருப்பிலே என்ன குறை? இவையெல்லாம் விட்டு அங்கேபோக வேணுமோ? எம்மை ஒன்றும் நினைத்திலளே—எங்களை த்ருணீகரித்துப் போய்விட்டாளே! என்பதுமேலெழுந்த பொருள். இப்படிப்பட்ட மஹாநுபாவையின் அபிமானம் எமக்கு இல்லாமற் போயிற்றே! எம்மைப்பற்றிச் சிறிதேனும் தன் நெஞ்சிலே நினைத்திருந்தாளாகில் ஒருகுறையில்லை யெமக்கு என்பது உள்ளுறையும் பொருள். (௯)

3302 நினைக்கிலேன்தெய்வங்காள் நெடுங்கணிளமானினிப்போய் *
அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனை *
தினைத்தனையும்விடாள் அவன்சேர்திருக்கோளூர்க்கே *
மனைக்குவான்பழியும்நினையாள் செல்லவைத்தனளே. (௰)

| | |
|---|---|
| தெய்வங்காள் | தெய்வங்களே! |
| நினைக்கிலேன் | எனக்கு ஒன்றும் தோன்றவில்லை; |
| நெடு கண் இள மான் | பெருத்த கண்களையுடைய இளமான் போன்ற என் மகள் |
| இனி போய் | இப்போது சென்று |
| அனைத்து உலகும் உடைய | ஸர்வலோக ஸ்வாமியான |
| அரவிந்தலோசனனை | செந்தாமரைக் கண்ணனை |
| தினை தனையும் விடாள் | சிறிது போதும் விடாதவளாய்க்கொண்டு |
| அவன் சேர் திருக்கோளூர்க்கே | அவன் வர்த்திக்கும் திருக்கோளூரை நோக்கியே |
| செல்ல வைத்தனள் | சடக்கெனச் சென்றாள்; |
| மனைக்கு வான் பழியும் நினையாள் | தன் குடிக்கு இது பெரிய பழிப்பாகுமென்பதையும் நினைத்திலள். |

* * * அன்பர்களின் பிரிவுகாலம் * த்ருடி யுகாயதே * ஒருபகலாயிரமூழியாலோ * பலபல ஊழிகளாயிடும் * என்கிறபடியே ஒரு கணப்பொழுதும் ஒருகல்பமாகத் தோன்றுமாதலால், தன் மகள் தன்னைப் பிரிந்துபோய்ப் பல காலம் ஆய்விட்டதாக நினைத்து, அந்தோ! திருக்கோளூர்க்குப் போனவள் போய் ஸேவித்துவிட்டு மீண்டு வரலாகாதோ? அவ்விடத்திலேயே மண்டி விட்டாளே! அங்குறையும் அரவிந்தலோசனனை ஒருக்ஷணகாலமும் விட்டுப் பிரியாதே அவ்விடத்து அநுபவமே யாத்திரையாக ஆய்விட்டாளே! இக்குடிக்கு வரும் பெரும்பழியை நினையாதே கிடக்கிறாளே! என்று அலமருகின்றாள் தாய்.

தெய்வங்காள் நினைக்கிலேன்—*தன்னருகிலுள்ளாரைப் பார்த்துச் சொல்லுகையன்றிக்கே ஆகாசத்தை நோக்கித் தெய்வங்களைப் பார்த்துச் சொல்லுகிறாள். இவ்வுலகிலுள்ளாரைப் போலே தேவதைகள் பழி சொல்லமாட்டாதவர்களாதலால் அவர்களோடே உறவு கொண்டாடுகிறாள். நினைக்கிலேன் என்றால் எதை நினைக்கிலேனென்கிறாளென்று கேள்வி வரும். என்னெஞ்சில் எதுவுமே தோன்றவில்லை; ஹ்ருதயம் சூந்யமாய் விட்டது என்றவாறு. என்மகளின்படி என்னால் சிந்திக்கப்போகிறதில்லை யென்கிறாளென்னவுமாம். தினைத்தனையும்=க்ஷணகாலமும் என்றபடி. தினை என்கிற தானியம் எவ்வளவு சிறிதோ அவ்வளவு சிறுபொழுதும் என்றவாறு.* (ய)

3303 வைத்தமாநிதியாம் மதுசூதனையேயலற்றி *
கோத்தலர்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பத்துநூற்றுளிப்பத்து அவன்சேர்திருக்கோளூர்க்கே *
சித்தம்வைத்துரைப்பார் திகழ்பொன்னுலகாள்வாரே. (கக)

| | |
|---|---|
| வைத்த மா நிதி ஆம் | சேமித்து வைத்த மஹா நிதி போன்ற |
| மதுசூதனையே அலற்றி | எம்பெருமானையே வாய் வெருவி |
| கொத்து அலர் பொழில் சூழ் குருகூர் சடகோபன் சொன்ன | பூங்கொத்து அலருகிற சோலைகளால் சூழப்பட்ட திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் அருளிச் செய்த |
| பத்து நூற்றுள் | ஆயிரத்துள்ளே |
| இப் பத்து | இத்திருவாய்மொழியை |
| அவன் சேர் திருக்கோளூர்க்கே சித்தம் வைத்து | அவன் வர்த்திக்கிற திருக்கோளூரிலேயே மனம் பதிந்து |
| உரைப்பார் | உரைக்க வல்லவர்கள் |
| திகழ் | நித்யமாக விளங்குகின்ற |
| பொன் உலகு ஆள்வார் | பரமபதத்தை ஆளப் பெறுவர்கள். |

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து எட்டாந் திருவாய்மொழி—பொன்னுலகாளீரோ.

*தூதுவிடும்பதிகமான இதில் * வானவர்கோனைக் கண்டு யாமிதுவோ தக்கவாறென்ன வேண்டும் * என்ற பாசுரத்தையும் * எங்குச் சென்றாகிலும் கண்டு இதுவோ தக்கவாறென்மின் * என்கிற பாசுரத்தையும் உயிராகக்கொண்டு இத்திருவாய்மொழி—பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூது விட்டபடியாமென்பர்.*

3304 பொன்னுலகாளீரோ? புவனிமுழுதாளீரோ? *
நன்னலப்புள்ளினங்காள் வினையாட்டியேன்நானிரந்தேன் *
முன்னுலகங்களெல்லாம்படைத்த முகில்வண்ணன்கண்ணன் *
என்னலம்கொண்டபிரான்தனக்கு என்னிலைமையுரைத்தே. (க)

| | |
|---|---|
| நல் நலம் புள் இனங்காள் | சிறந்த நற்குணமுடைய பறவைத்திரள்களே! |
| வினையாட்டியேன் நான் இரந்தேன் | பிரிவாற்றாமைக்குரிய பாபத்தைப்பண்ணின நான் உங்களை வேண்டிக்கொள்கிறேன்; (எதற்காகவென்னில்) |
| முன் உலகங்கள் எல்லாம் படைத்த | முதலில் உலகங்களை யெல்லாம் உண்டாக்கின |
| முகில் வண்ணன் கண்ணன் | காளமேக நிறத்தனும் அடியார்க்கு எளியனும் |
| என் நலம் கொண்ட | எனது நன்மைகளை யெல்லாம் கவர்ந்துகொண்டவனுமிருக்கிற |
| பிரான் தனக்கு | எம்பெருமானுக்கு |
| என் நிலைமை உரைத்து | எனது அவஸ்தையைச் சொல்லி |
| பொன் உலகு ஆளீர் புவனி முழுது ஆளீர் | உபய விபூதியையும் ஆளுங்கோள். (இதுவே எனது வேண்டுகோள்.) |

* * * எம்பெருமான் திறத்தில் புருஷகாரக்ருத்யம் பண்ணுமவர்களுக்கு உபயவிபூதியையும் பரிசளித்தாலும் போதாது என்கிற சாஸ்த்ரார்த்தம் இப்பாட்டில் வ்யக்தமாகிறது. ஸ்ரீவசநபூஷணத்தில் "ஆசார்யனுக்கு ஸத்ருசப்ரத்யுபகாரம் பண்ணலாவது விபூதிசதுஷ்டயமும் ஈச்வரத்வயமும் உண்டாகில்" *என்றருளிச்செய்த ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம். * பொன்னுலகாளீரோ புவனி முழுதாளீரோ * என்று சொல்லுகிற ஆழ்வாருடைய உக்தி ஸாம்ராஜ்யத்தை நோக்குங்கால் உபய விபூதியும் ஆழ்வார் கையிலே ஸ்வாதீநமாகவுள்ளதென்னுமிடம் நன்கு தெரிகின்றதன்றே. எம்பெருமான் தன்னுடையதான சரக்கையும் தன்னடியார்க்கு இஷ்டவிநியோக யோக்யமாகவன்றே ஆக்கி வைத்திருக்கிறான்.

பக்ஷிகளே! நீங்கள் எம்பெருமான் பக்கலிற்சென்று எனது நிலைமையை உரைத்து வந்தால் அதற்குக் கைம்மாறாக நான் உங்களுக்கு உபய விபூதிகளையும் பரிசளிப்பேன் என்பது முதலடியின் கருத்து. இங்கே சிலர் சங்கிக்கக் கூடியதுண்டு; ஆழ்வார் பரமபதம் பெறுகைக்குத்தானே திருவாய்மொழி முகத்தாலே மிகவும் சிரமப்படுகிறார்; பொன்னுலகாளீரோ என்று தைரியமாகச் சொல்லும் படியாய்ப் பரமபதம் இவர் கைப்பட்டதாயிருக்குமாகில் இந்த சிரமம் வேண்டாவன்றே—என்பதாக. இது அரஸிக சங்கையேயாகும். * தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள் சொல்லுகைக்காகவன்றே எம்பெருமான் ஆழ்வாரை இங்கு வைத்துத் துவளப்பண்ணுவது. இவ்வளவால், உபய விபூதியையும் தாமிட்ட வழக்காம்படி பெற்றிருக்கிற ஆழ்வாருடைய ப்ரபாவத்திற்கு ஒரு குறையுண்டோ? (க)

3305 மையமர்வாள்நெடுங்கண் மங்கைமார்முன்பென்கையிருந்து *
நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ? *
கையமர்சக்கரத்து என்கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
மெய்யமர்காதல்சொல்லிக் கிளிகாள்! விரைந்தோடிவந்தே. (உ)

| | |
|---|---|
| கிளிகாள் | கிளிகளே ! |
| கை அமர் சக்கரம் | திருக்கையில் அமர்ந்த திருவாழியையுடையனும் |
| கனி வாய் | கொவ்வைக்கனிபோன்ற அதரத்தை யுடையனுமான |
| என் பெருமானை கண்டு | எம்பெருமானைச் சேவித்து |
| மெய் அமர் காதல் சொல்லி | உடம்போடே அணையவேண்டும்படி எனக்குண்டாயிருக்கிற என் காதலைத் தெரிவித்து |
| விரைந்து ஓடி வந்து | உடனே இவ்விடம் வந்து சேர்ந்து |
| மை அமர் வாள் நெடு கண் | மையணிந்து அழகிய நீண்ட கண்களையுடைய |
| மங்கைமார் முன்பு | தோழிமார் முன்னிலையிலே |
| என் கை இருந்து | என் கையிலே வீற்றிருந்து |
| நெய் அமர் இன் அடிசில் | நெய்யோடு பொருந்திய இனிய அடிசிலை |
| பாலொடு | பாலோடுங்கூட |
| நிச்சல் மேவீர் | நித்யமாக ஸ்வீகரிக்க வேணும். |

* * * என்னுடைய ஆற்றாமையை எம்பெருமானுக்கு அறிவித்துவந்து, நானும் என் தோழிமாரும் கொண்டாட அத்தை அங்கீகரிக்க வேணுமென்று சில கிளிகளை நோக்கி வேண்டுகிறாள். தலைவி தான் செய்ய நினைத்திருக்கும் கைம்மாறுதன்னை முந்துற முன்னம் சொல்லிவிட்டுப் பிறகு அவை செய்யவேண்டிய காரியத்தைச் சொல்லியிருக்கையாலே பாகவத ஸத்காரமே தனக்குப் பரமோத்தேச்யமென்னுமிடம் காட்டப்பட்டது. கீழ்ப்பாட்டிலே உபயவிபூதியையும் கொடுப்பதாகச் சொல்லியற்ற பிறகு இனிமேல் கொடுக்கக்கூடியது என்ன இருக்கிறது? என்று சிலர் சங்கிக்க நேரும். அதற்குப் பரிஹாரமாக நம்பிள்ளை யருளிச்செய்கிறபடி பாரீர்—"முதற்பாட்டில் அவன் பதங் கொடுத்தாள்; அதுக்குமேலே யொருபதம் தேடிக்கொடுக்கிறாள் இப்பாட்டில். அவன் பதமாகிறது உபயவிபூதியுமிறே. அதுக்கு மேலான பதமாகிறது அவனாலே விரும்பப்படும் தன்னைக் கொடுக்கை. தன்னைக் கொடுக்குமிடத்திலும் பின்னை முன்னே யென்னாதே எல்லாருங் காணக் கைமேலேயிறே கொடுக்கப்புகுகிறது." (உ)

3306 ஓடிவந்தென்குழல்மேல் ஒளிமாமலரூதீரோ ?*
கூடியவண்டினங்காள் குருநாடுடையைவர்கட்காய் *
ஆடியமாநெடுந்தேர்ப்படை நீறெழச்செற்றபிரான் *
சூடியதண்துளவமுண்ட தூமதுவாய்கள்கொண்டே. (௫)

| | |
|---|---|
| கூடிய வண்டு இனங்காள் | கூடிக் களித்திருக்கின்ற வண்டுத் திரள்களே! |
| குருநாடு உடைய ஐவர்கட்கு ஆய் | குருக்ஷேத்திரத் தலைவர்களான பஞ்சபாண்டவர்களுக்காக |
| ஆடிய மா நெடு தேர் படை | ஆடலில் சிறந்த குதிரைகளையும் பெரிய தேர்களையும் மற்றுமுள்ள சேனைகளையும் |
| நீறு எழ சென்ற | பொடியாம்படி முடித்த |
| பிரான் | எம்பெருமான் |
| சூடிய | திருக்குழலில் அணிந்துகொண்டிருக்கிற |

| | |
|---|---|
| தண் துளபம் உண்ட | குளிர்ந்த திருத்துழாயிலேயிருந்து மதுபானம் பண்ணின |
| தூ மது வாய்கள் கொண்டு | தெளிந்த மதுவையுடைத்தான வாயையுடையீர்களாய்க் கொண்டு |
| ஓடி வந்து | விரைந்து வந்துசேர்ந்து |
| என் குழல் மேல் | என் கூந்தலிலுள்ள |
| ஒளி மா மலர் | ஒளிபொருந்திய சிறந்த பூவிலே |
| ஊதீர் | உங்களுடைய உத்ஸாஹச் செயல்களைச் செய்யுங்கள். |

* * * எம்பெருமான் பக்கலிற்சென்று என் நிலைமையை அறிவித்து வந்து என் தலைமேலே வர்த்தியுங்கோளென்று சில வண்டுகளைக் குறித்துச் சொல்லுகிறாள். நீங்கள் தூது சென்றால் உங்களைத் தலைமேலே வைத்துக் கொண்டாடுவேனென்கை. கூடிய வண்டினங்காள்!—எம்பெருமான் பக்கலிலே ஒருவரிருவராய்ச் சென்று தூது சொன்னால் அவன் செவி கொடுத்துக் கேளான்; ஒரு கூட்டமாகச் சென்று சொல்லவேணும்: அதற்கு, இனிமேல் கூட்டம் திரட்டவேண்டாமல் ஏற்கனவே திரண்டிருக்கின்றீர்களே, இது என்னுடைய பாக்கியம் என்கிறாள் போலும். (௫)

3307 தூமதுவாய்கள்கொண்டுவந்து என்முல்லைகள்மேல்தும்பிகாள் !*
பூமதுவுண்ணச்செல்லில் வினையேனைப்பொய்செய்தகன்ற *
மாமதுவார்தண்துழாய்முடி வானவர்கோனைக்கண்டு *
யாமிதுவோதக்கவாறு என்னவேண்டுங்கண்டீர்நுங்கட்கே. (௬)

| | |
|---|---|
| முல்லைகள் மேல் | முல்லைப்பூக்களிலே வாழ்கிற |
| என் தும்பிகாள் | எனக்கு இனிய தும்பிகளே! |
| தூ மது வாய்கள் கொண்டு வந்து | தூய மதுவிலே படியவேண்டிய வாயைக்கொண்டு வந்து |
| பூ மது உண்ண செல்லில் | அந்த முல்லைப்பூக்களில் மதுவையுண்ணச் செல்ல நினைத்தீர்களாகில், |
| | (அதற்காக நீங்கள் செய்யவேண்டியதொன்றுண்டு; அது என்னென்னில்) |
| வினையேனை | பிரிந்து வருந்தவேண்டிய பாவத்தைப் பண்ணின என்னோடே |

| | |
|---|---|
| பொய் செய்து | க்ருத்ரிமமான கலவியைப் பண்ணி |
| அகன்ற | பிரிந்துபோன |
| மா மது வார் தண் துழாய் முடி | பெருவெள்ளமான மது ஒழுகுகின்ற குளிர்ந்த திருத்துழாய் மாலையைமுடியிலணிந்துள்ள |
| வானவர்கோனை | நித்யஸூரிநாதனை |
| கண்டு | நேரில் ஸேவித்து |
| யாம் இதுவோ தக்க ஆறு என்ன வேண்டும் நுங்கட்கு | 'நாம் இப்படி மேன்மை கொண்டாடியிருப்பதோ தகுதி?' என்று நீங்கள் சொல்ல வேண்டும். |

* * * என்னை நோவுபடுத்திப்போய் எட்டாநிலத்திலே ஓலக்கமிருக்கை தான் ஒரு ஸ்ரீமத் காம்பீர்யமோவென்று கேளுங்கோளென்று திருநாட்டிலே சில தும்பிகளைத் தூது விடுகிறாள். பூமதுவுண்ணச் செல்லில்—தும்பிகள் எங்கேனும் மதுவைத் தேடிப்பருகுவதற்கு ஆசையோடே எங்கும் திரியும்; பரமபதநாதனுடைய திருமுடியிலே மதுநிரம்பிய செவ்வித் துழாய் மலர் மிகமிகவுள்ளதென்று தெரிந்துகொண்டு அங்கும் செல்லக் கூடுமென்றெண்ணிச் சொல்லுகிற வார்த்தை இது. இப்பாட்டில் * வானவர் கோனைக்கண்டு * என்றதை உயிராகக்கொண்டு இது பரத்வத்தில் விடுகிற தூது என்பர். (௬)

3308 நுங்கட்குயானுரைக்கேன்வம்மின் யான்வளர்த்தகிளிகாள்! *
வெங்கண்புள்ளூர்ந்துவந்து வினையேனைநெஞ்சங்கவர்ந்த *
செங்கண்கருமுகிலைச் செய்யவாய்ச்செழுங்கற்பகத்தை *
எங்குச்சென்ருகிலும்கண்டு இதுவோதக்கவாறென்மினே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| யான் வளர்த்த கிளி காள் | நான் வளர்க்க வளர்ந்த கிளிகளே! | செம் கண் | புண்டரீகாக்ஷனும் |
| வம்மின் | இப்படி வாருங்கள் | கரு முகிலை | காளமேகச்யாமனும் |
| நுங்கட்கு யான் உரைக்கேன் | உங்களுக்கு நான் ஒன்றுசொல்லுகின்றேன்; | செய்யவாய் | சிவந்த அதரத்தை வுடையவனும் |
| வெம் கண் புள் | வெவ்விய கண்ணையுடைய பெரிய திருவடியை | செழு கற்பகத்தை | விலக்ஷண கல்பவ்ருக்ஷம்போன்றவனுமான எம்பிரானை |
| ஊர்ந்துவந்து | நடத்திக்கொண்டு என் பக்கலிலே வந்து | எங்கு ஆகிலும் சென்று கண்டு | எவ்விடத்திலாவது சென்று சேவித்து |
| வினையேனை நெஞ்சம் கவர்ந்த | பாவியான என்னுடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்ட | இதுவோ தக்க ஆறு என்மின் | இதுதானே தகுதியென்று சொல்லுங்கோள். |

*** இப்பாட்டில் "எங்குச்சென்ருகிலுங்கண்டு" என்றதை உயிராகக்கொண்டு இத்திருவாய்மொழி அந்தர்யாமித்வத்திலும் தூதுவிடுகிறதாக நிர்வஹிப்பர்கள். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி:—"* யஉ। கா ந வெஉ என்றெளித்திருக்குமிடமெங்கும் புக்கு." என்ரும். (ரு)

3309 என்மின்னுநூல்மார்வன் என்கரும்பெருமானேன்கண்ணன் *
தன்மன்னுநீள்கழல்மேல்தண்துழாய் தமக்கன்றிநல்கான் *
கன்மின்களென்றும்மையான் கற்பியாவைத்தமாற்றம்சொல்லி *
சென்மின்கள்தீவினையேன் வளர்த்தசிறுபூவைகளே! (சா)

| | | | |
|---|---|---|---|
| தீ வினையேன் வளர்த்த | கொடிய பாவியான நான் வளர்க்க வளர்ந்த | நமக்கு அன்றி நல்கான் | நமக்குத் தவிர வேறொருவர்க்கும் கொடுக்ககில்லான்; |
| சிறு பூவைகளே | சிறுபூவைப்பறவைகளே! | கன்மின்கள் என்று | 'நான் சொல்லிக்கொடுப்பதை அப்யஸியுங்கோள்' என்று சொல்லி |
| என் மின்னு நூல் மார்வன் | மின்போலே விளங்குகின்ற யஜ்ஞோபவீதமணிந்ததிருமார்பை எனக்கு அநுபவிப்பித்தவனும் | | |
| என் கரும் பெருமான் | தன் திருமேனி நிறத்தை எனக்கு அநுபவிப்பித்த பெருமானும் | யான் உம்மை கற்பியா வைத்த | நான் உங்களுக்குக் கற்பித்து வைத்த |
| என் கண்ணன் | எனக்கு ஸர்வாத்மநா விதேயனுமான எம்பெருமான் | மாற்றம் சொல்லி | பாசுரங்களைச்சொல்லிக்கொண்டு |
| தன் நீள் கழல் மேல் மன்னு தண் துழாய் | தனது நெடிய திருவடிகளின் மீது பொருந்தியுள்ள திருத்துழாயை | சென்மின்கள் | அப்பெருமானிடம் செல்லுங்கோள். |

*** சில பூவைகளைத் தூது விடுகிருள். பூவைகளை இவள் அழைக்கும்போதே அவை சிறிது பராமுகமாயிருந்தன; பராத்பரனிடத்தில் நம்மை இவள் தூது போகச் சொல்லுவள்; அவன் நம் வார்த்தையைக் கவனிப்பானே? இதெல்லாம் வீண் ப்ரயாஸந்தானே என்றிருந்தனவாகக் கொண்டு அவற்றுக்கு உத்ஸாஹம் பிறக்குமாறு உரைக்கின்ருள். இப்பாட்டில் இரண்டாமடி உயிரானது. அலங்காரத்தாலும் வடிவழகாலும் ஸௌலப்யத்தாலும் என்னை யீடுபடுத்திக்கொண்டவன், தன்மன்னுநீள்கழல்மேல்தண்டுழாய் நமக்கன்றி நல்கான்— * தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான் * என்னும்படி திருத்தோள் முதலான பல அவயவங்களில் அவர் திருத்துழாய் அணிந்துகொள்வர்; எதை ஆர்க்குக் கொடுத்தாலும் அடிமேல் புனையுமது அடியார்களுக்கே யாகையாலே திருவடிகளில் சாத்தின திருத்துழாயை நமக்கன்றி மற்றையோர்க்குத் தந்திடமாட்டார்; ஆகையாலே நீங்கள் சங்கையின்றிச் செல்லலாம் என்றவாறு.

கற்பியா—செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சம். கற்பித்து என்றபடி. தீவினையேன்வளர்த்த என்பதற்கு மர்மஸ்பர்சியான பொருளை நம்பிள்ளை வெளியிட்டருளுகிறார்;—"என்னுடைய பாபமிருந்தபடி பாருங்கோள்; அவனும் நானும் கூடவிருந்து உங்களைக் கொண்டாடுகையன்றிக்கே உங்களைக்கொண்டு காரியங் கொள்ளும்படியான பாபத்தைப் பண்ணினேன். வயிற்றில் பிறந்தாரையிடுவித்து அபிமதனை அழைத்துக்கொள்ளுகையோபாதி புன்மையில்லையே." (சு)

3310 பூவைகள்போல்நிறத்தன் புண்டரீகங்கள்போலும்கண்ணன் *
யாவையும்யாவருமாய் நின்றமாயனென்னாழிப்பிரான் *
மாவைவல்வாய்பிளந்த மதுசூதற்கென்மாற்றம்சொல்லி *
பாவைகள்தீர்க்கிற்றிரே வினையாட்டியேன்பாசறவே. (எ)

| | |
|---|---|
| பாவைகள் | எனது லீலோபகரணங்களான மரப்பாச்சிகளே! |
| பூவைகள் போல் நிறத்தன் | பூவைப்பூவண்ணனும் |
| புண்டரீகங்கள் போலும் கண்ணன் | புண்டரீகாக்ஷனும் |
| யாவையும் யாவரும் ஆய்நின்ற | ஸகல சேதநாசேதந ஸ்வரூபியும் |
| மாயன் | ஆச்சர்ய சக்தியுக்தனும் |
| என் ஆழி பிரான் | கையுந்திருவாழியுமான அழகை எனக்குக்காட்டித்தந்தவனும் |
| மாவை வல் வாய் பிளந்த | குதிரை வடிவுகொண்டு நலிய வந்த கேசியென்னு மசுரனுடைய வலியவாயைக்கீண்டு அவனை முடித்தவனுமான |
| மதுசூதற்கு | மதுஸூதநனுக்கு |
| என் மாற்றம் சொல்லி | எனது தூதுரைகளைச் சொல்லி |
| வினையாட்டியேன் பாசறவு | பாவியான என்னுடைய நிறக்கேட்டை |
| தீர்க்கிற்றிரே | தீர்க்க வல்லிகோளோ? (தீர்க்கவேணும் என்றபடி.) |

* * * இப்பாட்டுக்கு விளி ஈற்றடியிலேயுள்ளது; 'பாவைகள்' என்றது அண்மைவிளியாகையாலே பாவைகாள்! என்றபடி. பாவையாவது மரப்பாச்சி; அறிவில்லாமைக்கு எல்லைநிலமான பாவைகளையும் பார்த்து இரக்கிறாள். பரமசேதநனை ஸர்வேச்வரனை உபேக்ஷித்துக் கைவாங்கி நின்றான்; சிறிது சைதந்யமுள்ள பக்ஷிகளோ பறந்து போவனவும் அந்யபரங்களுமாயிருந்தன; இனி அசேதனங்களைக்கொண்டு காரியம் பார்க்கையே உற்றதென்று நினைத்தாள் போலும். "அசேதநமுங்கூட வெழுந்திருந்து காரியஞ் செய்ய வேண்டும்படி காணும் இவளவஸ்தை" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

எம்பெருமான் உபேக்ஷித்திருந்தால் இவள் வாளா கிடக்கலாகாதோ என்று நாட்டார் சொல்லுவர்கள்; அந்தோ! அப்படி என்னாலிருக்கப் போகிறதில்லையே! அவனுடைய திருமேனி நிறமும் திருக்கண்ணழகும் மற்றுமுள்ள ப்ரபாவமும் குணசேஷ்டிதங்களும் நினைக்க நினைக்க வாளா விருக்க வொண்ணுமோ? என்கிறாள். (எ)

3311 பாசறவெய்தியின்னே வினையேனெனையூழிநைகேன்? *
ஆசறுதூவிவெள்ளைக்குருகே! அருள்செய்தொருநாள் *
மாசறுநீலச்சுடர்முடி வானவர்கோனைக்கண்டு *
ஏசறும்நும்மையல்லால் மறுநோக்கிலள்பேர்த்துமற்றே. (அ)

| | |
|---|---|
| ஆசு அறு தூவி வெள்ளை குருகே | பழிப்பற்ற சிறகையுடைய பரிசுத்தமான குருகே! |
| வினையேன் | பாவியான நான் |
| பாசறவு எய்தி இன்னே | நிறமழிந்து இவ்வண்ணமாகவே |
| எனை ஊழி நைகேன் | எத்தனைகாலம் நைந்துகிடப்பேன்! |
| ஒரு நாள் அருள் செய்து | ஒருநாள் க்ருபை பண்ணி, |

| | | | |
|---|---|---|---|
| மாசு அறு நீலம் சுடர் முடி | மாசற்ற நீலக்சுடர் பொருந்திய மயிர்முடியையுடையனை | ஏசு அறும் நும்மை அல்லால் | "பழிப்பற்ற உம்மை யொழிய |
| வானவர் கோனை கண்டு | தேவாதிதேவனைக் கண்டு | பேர்த்து மற்று மறுநோக்கு இலள் | பின்னை வேறொரு கதியுடைய ளல்லள்" (என்று சொல்லு.) |

* * * முன்னே நின்றதொரு குருகைத் தூதுவிடுகிறாள். உலகில் துக்கப் பட்டவர்கள் இஷ்ட ஜனங்களைக் கண்டவாறே துக்கம் மேலிடப்பெற்றுக் கதறியழுமாபோலே. குருகேயென்று விளிப்பதற்கு முன்னமே தன் துக்கமேலீட்டை வெளியிடுகிறாள் முதலடியில், பாசறவு எய்தி—பாசு என்று பசுமையைச் சொல்லிற்றாய், அதன் அறவு—நிறவேறுபாடு என்க. பசலை நிறங்கொண்டு என்றபடி. அதைப் பாசுரமிட்டுச் சொல்லமாட்டாமல் இன்னே என்று படியெடுத்துக் காட்டுகிறாள். என்னுடைய வைவர்ணியமிருக்கும்படியை நீங்களே பார்த்துக் கொள்ளுங்கோ ளென்கிறாள். எந்த விஷயத்திலீடுபட்டு இந்த நிறவேறுபாடு உண்டாயிற்றோ அந்த விஷயம் பேச்சுக்கு நிலமானாலன்றோ இதுவும் பேச்சுக்கு நிலமாவது.

"அருள் செய்து ஒருநாள்" என்கிற பாடமே நம்பிள்ளை முதலான ஆசாரியர்களின் காலத்தில் வழங்கிவந்தது. இப்பாடத்தில் இப்பாட்டுக்கு வினைமுற்று [க்ரியாபதம்] இல்லையாகிறது. 'நீபோய்ச் சொல்லவேணும்' என்கிற ப்ரார்த்தனை இருக்கவேணுமே; அது இப்பாட்டில் இல்லை; ஆனாலும் வருவித்துக் கொள்ளலாமென்று நம்பிள்ளை திருவுள்ளம் பற்றுகிறார். பன்னீராயிரவுரைகாரரான வாதிகேஸரி "அருள் செய்யொருநாள்" என்று பாடங் காட்டுகிறார்; "அருள் செய்து என்று பாடமானபோது 'என்று சொல்' என்று வாக்யசேஷமாகக் கடவது" என்றும் எழுதியுள்ளார். 'அருள் செய்து' என்று வினையெச்சமான பாடமே ப்ரஸித்தம். ஈற்றடியின் முதலிலுள்ள 'ஏசறு' என்பதை வினைமுற்றாகக் கொள்ளுகிற வழியையும் நம்பிள்ளை காட்டியருளுகிறார். ஏசறு—துக்கப்படு என்றபடி. நான் படுகிற துக்கத்தை உன் வடிவிலே ஏறிட்டுக்கொண்டு காட்டு என்று தாற்பரியம். (ஏ)

3312 பேர்த்துமற்றோர்களைகண் வினையாட்டியேன்நானொன்றிலேன் *
நீர்த்திரைமேலுலவி இரைதேரும்புதாவினங்காள்! *
கார்த்திரள்மாமுகில்போல் கண்ணன்விண்ணவர்கோனைக்கண்டு *
வார்த்தைகள்கொண்டருளியுரையீர் வைகல்வந்திருந்தே. (க)

| | | | |
|---|---|---|---|
| நீர் திரை மேல் உலவி | நீரலைகளின்மேலே உலாவி | கார் திரள் மா முகில் போல் | கார்காலத்தில் திரண்ட மஹா மேகங்கள் போன்றவனை |
| இரை தேரும் | உணவுப்பொருள்களை ஆராய்கின்ற | கண்ணன் விண்ணவர் கோனை கண்டு | கண்ணபிரானை தேவாதி தேவனைக் கண்டு |
| புதா இனங்காள் | பெருநாரைக்கூட்டங்களே!, | வார்த்தைகள் கொண்டு | அவன் கூறும் வார்த்தைகளைப் பெற்றுக்கொண்டு |
| வினையாட்டியேன் நான் | பாவியான நான் | அருளி வந்து இருந்து | என் பக்கலில் க்ருபைபண்ணி வந்திருந்து |
| பேர்த்து மற்று ஓர் களைகண் ஒன்று இலேன் | (உங்களையொழிய) வேறொரு தஞ்சமுடையேனல்லேன்; (எனக்காக நீங்கள் செய்யவேண்டியது என்னவென்றால்) | வைகல் உரையீர் | (இதுவே போதுபோக்காம்படி) நெடும்போது சொல்லிக் கொண்டிருங்கள். |

* * * புதா வென்பது நாரையிலேயே அவாந்தரஜாதிபேதம்; பெருநாரை யென்பர். அப்பறவைகளைப் பிரார்த்திக்கிறாள். பயிர்கள் உலராநிற்க மேகங்கள் வீணாகக் கடலிலே வர்ஷிக்குமா போலே, தன்னுடைய கடாக்ஷமொழிய வேறொரு கதியின்றியே நான் தளர்ந்து உலர்ந்துகிடக்க, ஆனந்தமஹார்ணவத்திலே நித்ய நிமக்நராயிருக்கின்ற நித்ய ஸூரிகளுக்கே

தன்னை யநுபவிக்கக் கொடுத்துக்கொண்டு அங்கேயேயிருப்பது தகுதியோவென்று ஸ்ரீவைகுண்டநாதனிடத்தில் விண்ணப்பஞ் செய்து, பின்னை அவன் அருளிச் செய்யுமது கேட்டு வந்து அதை எனக்கு அநவரதம் சொல்லிக்கொண்டிருந்து என்னை ஆச்வஸிப்பிக்க வேணுமென்கிறாள். (கூ)

3313 வந்திருந்தும்முடைய மணிச்சேவலும்நீருமெல்லாம் *
அந்தரமொன்றுமின்றி அலர்மேலசையுமன்னங்காள்! *
என்திருமார்வற்கென்னை இன்னவாறிவள்காண்மினென்று *
மந்திரத்தொன்றுணர்த்தியுரையீர் மறுமாற்றங்களே. (ம)

| | |
|---|---|
| வந்து இருந்து | (ஏற்கனவே என் கண்ணெதிரில்) வந்திருந்து |
| உம்முடைய மணி சேவலும் நீரும் எல்லாம் | உங்களுடைய அழகிய சேவல்களும் (அவற்றுக்கு இனிய) நீங்களும் ஆக எல்லாம் |
| அந்தரம் ஒன்றும் இன்றி | இடையூறு ஒன்றுமில்லாமல் |
| அலர்மேல் அசையும் | பூக்களின் மீது உல்லாஸமாக உலாவுகிற |
| அன்னங்காள் | அன்னப்பறவைகளே! |
| என் திருமார்வற்கு | லக்ஷ்மீபதியான எம்பெருமானுக்கு |
| என்னை | என்னைப்பற்றி ப்ரஸ்தாவித்து |
| இவள் இன்ன ஆறு காண்மின் என்று | "இப்பராங்குசநாயகி இவ்வண்ணமானாள் காணும்" என்று |
| மந்திரத்து | அவளும் அவனுமான தனியிடத்திலே |
| ஒன்று உணர்த்தி | ஒரு பேச்சு அறிவித்து |
| மறு மாற்றங்கள் உரையீர் | அதற்கு அவன் சொல்லும் மறுமொழிகளை என்னிடத்தே வந்து சொல்லுங்கோள். |

* * * மஹாகோஷ்டியிலே எழுந்தருளியிருக்கும் ஸமயத்தில் திருவுள்ளம் அந்யபரமாயிருக்குமாதலால் அப்போது சொல்லாதே, திருவோலக்கத்தில் நின்றுமெழுந்து திவ்யாந்த:புரத்திலே யெழுந்தருளினால் அங்கே பிராட்டியுடைய திவ்யஸந்நிதானத்திலே திருவுள்ளத்திற் படும்படி என் திறம் விண்ணப்பஞ்செய்து அவனுரைக்கும் மறுமாற்றங்கொண்டு என்னருகே வந்திருந்து சொல்லவேணுமென்று அன்னங்களைக் குறித்து வேண்டுகிறாள். (ம)

3314 மாற்றங்களாய்ந்துகொண்டு மதுசூதபிரானடிமேல் *
நாற்றங்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தோற்றங்களாயிரத்துள் இவையுமோருபத்தும்வல்லார் *
ஊற்றின்கண்நுண்மணல்போல் உருகாநிற்பர்நீராயே. (கக)

| | |
|---|---|
| நாற்றம்கொள் பூ பொழில்சூழ் குருகூர் சடகோபன் | பரிமளப்ரசுரமான பூஞ்சோலைகள் சூழ்ந்த திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் |
| மாற்றங்கள் ஆய்ந்து கொண்டு | சொற்களை ஆராய்ந்தெடுத்து |
| மது சூதபிரான் அடி மேல் | எம்பெருமான் திருவடி விஷயமாக |
| சொன்ன | அருளிச்செய்த |
| தோற்றங்கள் ஆயிரத்துள் | ஆவிர்ப்பாவரூபமான இந்த ஆயிரத்தினுள் |
| இவை ஒரு பத்தும் வல்லார்:— | |
| ஊற்றின் கண் நுண் மணல்போல் | ஊற்றினிடத்தேயுள்ள நுண்ணிய மணல்போலே |
| நீர் ஆய் உருகா நிற்பர் | நீர்ப்பண்டமாக உருகப் பெறுவர்கள். |

* * * இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைக்கும் பாசுரமிது. இதில் விலக்ஷணமானதொரு பலன் கூறப்படுகின்றது. "ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராயே" என்பது இங்குக் காணும் பயனுரை. இதுவொரு பலனோ வென்று சங்கிக்க வேண்டா; கல்நெஞ்சராயிராமே ஈரநெஞ்சினராயிருந்து உருகப்பெறுவதென்பது ஒரு விலக்ஷணமான பலனன்றோ; ஆகவே இதுவும் பலச்ருதியேயாகும். (கக)

 ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆறும்பத்து ஒன்பதாந் திருவாய்மொழி—நீராய் நிலனாய்.

உரையவதாரிகை:—இப்படி தூதப்ரேஷணம் பண்ணியும் எம்பெருமான் வரக்காணாமையாலே அவனைத் தம்முடைய பெரிய ஆர்த்தியோடே கூடத் திருநாட்டிலே கேட்கும்படி கூப்பிட்டழைக்கிறார்.

3315

நீராய் நிலனாய்த் தீயாய்க்காலாய்நெடுவானாய் * சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய் *
கூராராழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்* ஒருநாள் மண்ணும்விண்ணும்மகிழவே. ()

- நீர் ஆய் நிலன் ஆய் தீ ஆய் கால் ஆய் நெடு வான் ஆய் — பஞ்ச பூதஸ்வரூபியும்
- சீர் ஆர் சுடர்கள் இரண்டு ஆய் — சந்திரஸூர்யர்களாகிற சிறந்த தேஜ:பதார்த்தஸ்வரூபியும்
- சிவன் ஆய் — சிவனுக்கு அந்தர்யாமியும்
- அயன் ஆனாய் — பிரமனுக்கு அந்தர்யாமியுமாயிருக்கும் எம்பெருமானே!
- கூர் ஆர் ஆழி வெண் சங்கு ஏந்தி — கூர்மை பொருந்திய திருவாழியையும் வெள்ளிய திருச்சங்கையும் திருக்கையில் தரித்துக்கொண்டு
- மண்ணும் விண்ணும் மகிழ — உபய விபூதியும் களிக்கும்படி
- கொடியேன் பால் — பாவியேனான என்பக்கலிலே
- ஒரு நாள் — ஒருநாளாகிலும்
- வாராய் — வந்தருளவேணும்.

*** ப்ரஹ்லாதாழ்வானுக்கு எப்பொருளும் எம்பெருமானுருவமாகவே தோன்றியவாறுபோல, சிறந்த மா ஞானிகட்கு எதைக்கண்டாலும் பகவானாகவே தோற்றக்குறையில்லை; ஆழ்வார்க்கும் அப்படியே தோற்றக் குறையில்லை: ஆகவே தூதுவிட்டழைக்க வேண்டிய ஆயாஸம் எதற்காக? என்று சிலர் நினைக்கக்கூடும். எம்பெருமானும் இப்படியே நினைத்திருந்தானாகக் கொண்டு ஆழ்வார் இப்பாட்டில் தம் ருசியை விளங்க வெளியிடுகிறார்; பிரானே! நிலம் நீர் தீ கால் முதலான எப்பொருளுமாய் நீ நிற்கும்படியை நான் அறியாமையில்லை; "சங்கும் சக்கரமும் சிரித்த முகமும் தொங்கும் பதக்கங்களும்" என்றாற்போலே அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹ வேஷத்தைக் கண்டு களிக்க ஆவல்கொண்டிருக்குமடியேனுக்கு ஜகத்ஸ்வரூபனாயிருக்குமிருப்பு என்ன பயனளிக்கும்? நீர் நிலம் முதலானவையெல்லாம் உன் வடிவேயென்று அநுஸந்தித்துக்கொள்வதில் யாதொரு தடையுமில்லை; அப்படி அநுஸந்திப்பதனால் அவற்றில் உனது அஸாதாரணத் திருமேனியைக்காண முடியுமோ? முடியாது; ஆகவே அஸாதாரண லக்ஷணங்களோடே வந்து ஒருநாளாகிலும் காட்சி தந்தருளவேணும்; இதற்காகவே காண் நான் கதறுவது—என்கிறார். (க)

3316 மண்ணும்விண்ணும்மகிழக் குறளாய்வலங்காட்டி *
மண்ணும்விண்ணும்கொண்ட மாயவம்மானே! *
நண்ணியுனைநான் கண்டுகந்துகூத்தாட *
நண்ணியொருநாள் ஞாலத்தூடேநடவாயே. (உ)

- மண்ணும் விண்ணும் மகிழ — உபய விபூதியும் (அழகு கண்டு) உகக்கும்படி
- குறள் ஆய் — வாமனமூர்த்தியாய் (மாவலியிடம் சென்று)
- வலம் காட்டி — தன்னுடைய சக்தியைக்காட்டி
- மண்ணும் விண்ணும் கொண்ட — மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் அளந்துகொண்ட
- மாயம் அம்மானே — அற்புதனான ஸ்வாமியே!
- உனை நான் நண்ணி — உன்னை நான் கிட்டி
- கண்டு உகந்து கூத்து ஆட — கண்ணாரக்கண்டு மகிழ்ந்து பரவசனாய் நர்த்தனம் பண்ணும்படியாக
- நண்ணி — இங்கே வந்து கிட்டி
- ஒரு நாள் — ஒருநாளாகிலும்
- ஞாலத்தூடே நடவாய் — இந்நிலத்திலே நடையழகு காட்டியருளாய்.

* * * கீழ்ப்பாட்டில் "கொடியேன்பால் ஒருநாள் வாராய் என்றழைத்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் ஆழ்வீர்! நீர் அழைக்குமிடத்தே நாம் வந்து விட முடியுமோ? நாமிருக்குமிடத்தே உம்மையழைத்துக் காட்டுவதாகவன்றோ நாம் கருதியிருப்பது; அது ஒரு காலவிசேஷத்திலே யாகும்; இப்போது நம்மை நீர் நிர்ப்பந்தித்து ப்ரக்ருதிமண்டலத்திலே நம்மைக் காண நினைப்பது பயன்பெறாது காணும்" என்று திருவுள்ளமாக, அதற்கு ஆழ்வார் அருளிச் செய்கிறார். 'பிரானே! இப்படியும் திருவுள்ளம் பற்றலாகுமோ? ஆஸுரப்ரக்ருதியான மாவலிபோல்வார்க்கு, அவ்வடிவு தன்னையே இங்கே கொண்டுவந்து இதரஸஜாதீயமாக்கிக் காட்டிற்றிலையோ? என்னளவில்தானோ வஞ்சனை செய்வது?' என்கிறார். (உ)

3317

ஞாலத்தூடேநடந்துநின்றும் கிடந்திருந்தும் * சாலப்பலநாள் உகந்தோறுயிர்கள்காப்பானே! *
கோலத்திருமாமகளோடு உன்னைக்கூடாதே* சாலப்பலநாள் அடியேனின்னும்தளர்வேனோ?(ந)

| | |
|---|---|
| உகம் தோறு | ஒவ்வொரு யுகத்திலும் |
| ஞாலத்தூடே | பூமியிலே அவதரித்து |
| நடந்தும் நின்றும் கிடந்து இருந்தும் | நடப்பது நிற்பது கிடப்பது இருப்பதான செயல்களைச் செய்து |
| சால பல நாள் | பல்லாயிரமாண்டளவும் |
| உயிர்கள் காப்பானே | பிராணிகளை ரக்ஷித்தருள்பவனே! |
| கோலம் திரு மா மகளோடு | உன்னழகுக்கு ஏற்ற அழகுடையளான திருமாமகளுடனே (கூடியிருக்கிற) |
| உன்னை கூடாதே | உன்னைக்கிட்டி யநுபவிக்கப் பெறாமல் |
| சால பல நாள் | (மேலுள்ள) மிகப்பலகாலமெல்லாம் |
| இன்னும் அடியேன் தளர்வேனோ | உன்னுறவு பெற்று வைத்தும் அடியேன் இழந்து துடிப்பது தானோ? |

* * * கீதையில் * பரித்ராணாய ஸாதூநாம்............ஸம்பவாமி யுகேயுகே * என்றதை நினைப்பூட்டி 'ஸமயவிசேஷங்களிலே எத்தனையோ விதமாக அவதாரங்கள் செய்தருளி ஸாது பரித்ராணம் செய்யுமுனக்கு எனக்காக ஒரு திருவவதாரம் செய்கைதான் அரிதோ' வென்கிறார். ஞாலத்தூடே நடந்தும்—ஸ்ரீராமாவதாரத்திலே * ஸிம்ஹவிக்ராந்த காமிநம் * என்னும்படியாகக் காட்டிலே நடையழகு காட்டினாய்; குருடர் முன்னே நடக்குமாபோலேயன்றோ ஆயிற்றது; நடையழகு காண விரும்பியிருக்குமென் முன்னே ஒருகால் நடந்தாலாகாதோ? என்பது உட்கருத்து. (ந)

3318 தளர்ந்தும்முறிந்தும் சகடவசுரருடல்வேறா *
பிளந்துவீயத் திருக்காலாண்டபெருமானே! *
கிளர்ந்துபிரமன்சிவன் இந்திரன்விண்ணவர்சூழ *
விளங்கவொருநாள் காணவாராய்விண்மீதே. (ச)

| | |
|---|---|
| சகடம் அசுரர் உடல் | சகடாசுரனுடைய உடலானது |
| தளர்ந்தும் முறிந்தும் | சின்ன பின்னமாகி |
| வேறு ஆ பிளந்து வீய | இருபிளவாகி உருமாய்ந்தொழியும்படியாக |
| திரு கால் ஆண்ட பெருமானே | திருவடிகளைக் கொண்டு காரியங்கொண்ட ஸ்வாமியே! |
| பிரமன் சிவன் இந்திரன் விண்ணவர் | பிரமன் முதலான தேவர்களெல்லாம் |
| கிளர்ந்து சூழ | உத்ஸாஹத்தோடே வந்து சூழ்ந்து ஸேவிக்க |
| விளங்க | அதனாலே ஒரு விளக்கம் உண்டாகும்படியாக |
| ஒரு நாள் | ஒரு நாளாகிலும் |
| விண் மீது காண வாராய் | ஆகாசத்தின்மேலே கண்ணுக்குத் தோற்ற எழுந்தருளாய். |

* * * * கோலத்திருமாமகளோடு உன்னைக் கூடுகைக்கு விரோதிகள் கனத்திருந்தாலும் சகடாஸுரனை நீயே அநாயாஸமாக நிரஸித்தாப்போலே அந்த விரோதிகளையும் நீயே நிச்சேஷமாக நிரஸித்தருளி எனக்குக் காட்சி தருவதற்கென்றே ஒருநாள் விண்மீதே யெழுந்தருளவேணும்; அப்போது பிரமன் சிவனிந்திரன் முதலான விண்ணவர்கள் உன்னைச் சூழ்ந்து வரவேணும் என்று அபேக்ஷிக்கிறார். இப்பாசுரத்தில் திருக்காலாண்ட பெருமானே! என்பது உயிராயிருக்கும்; எம்பெருமானுடைய திருவடிகள் நமக்கு மாத்திரம் ரக்ஷகமன்று; அவன்றனக்கு நேரும் ஆபத்தையும் அவன் திருவடியே போக்கித் தருமென்கிறது. சகடவசுரன் என்ன வேண்டுமிடத்து, அசுரர் என்று பன்மையாகச் சொன்னது ஒருவனே பலராகத் தோற்றின பயங்கரத்வத்தாலே; பால்வழுவமைதி. (ச)

3319 விண்மீதிருப்பாய்மலைமேல்நிற்பாய் கடற்சேர்ப்பாய்! *
மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும்மறைந்துறைவாய்! *
எண்மீதியன்றபுறவண்டத்தாய் எனதாவி *
உண்மீதாடி உருக்காட்டாதேயொளிப்பாயோ? (ரு)

| | |
|---|---|
| விண் மீது இருப்பாய் | பரமபதத்தில் வீற்றிருப்பவனே! |
| மலை மேல் நிற்பாய் | (அர்ச்சாரூபியாய்) திருமலையிலே நிற்குமவனே! |
| கடல் சேர்ப்பாய் | திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளுமவனே! |
| மண் மீது உழல்வாய் | (ராமக்ருஷ்ணாதி விபவரூபத்தாலே அவதரித்து) பூமியின் மேல் ஸஞ்சரிப்பவனே' |
| இவற்றுள் எங்கும் மறைந்து உறைவாய் | இந்த ஜகத்தில் ஸகலபதார்த்தங்களிலும் அந்தர்யாமியாய் மறைந்து வர்த்திப்பவனே! |
| எண் மீது இயன்ற புறம் அண்டத்தாய் | எண்ணிக்கைக்கு மேலே போகக்கடவதான [எண்ணிறந்த] பஹிரண்டங்களிலுமுளனவனே!, (நீ) |
| எனது ஆவியுள் | என்னுடைய நெஞ்சுக்குள்ளே |
| மீதாடி | மிகவும் நடையாடி விட்டு |
| உரு காட்டாதே | வடிவைக் கண்ணுக்குக்காட்டாமல் |
| ஒளிப்பாயோ | ஒளிக்கின்றாயே! இது தகுதியோ? |

* * * பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரமென்கிற ஐந்து ப்ரகாரங்களைக் கொண்டு அடியார்களை உகப்பித்தருளாநின்ற நீ எனது நெஞ்சிலும் எழுந்தருளியிருந்து வைத்து என்கண்ணுக்குத் தோற்றாதேயிருந்தால் தளரமாட்டேனோ வென்கிறார். உருக்காட்டாதே யொளிப்பாயோ? குணானுபவத்தாலேயே தரிப்பார் சிலருண்டு; அவர்கள் கோஷ்டியிலே நான் சேர்ந்தவனல்லேன்; வடிவு காணப்பெற வேணுமென்கிற ஆசையுடையேனாதலால் என்னை வஞ்சிக்கலாமோ வென்கிறார். (ரு)

3320 பாயோரடிவைத்ததன்கீழ்ப் பரவைநிலமெல்லாம்
தாய் * ஓரடியால் எல்லாவுலகும்தடவந்த
மாயோன்! * உன்னைக்காண்பான் வருந்தியெனைநாளும் *
தீயோடுடன்சேர்மெழுகாய் உலகில்திரிவேனோ. (சு)

| | |
|---|---|
| ஓர் அடி | ஒரு திருவடியை |
| பாய் வைத்து | பரப்பிவைத்து |
| பரவை நிலம் எல்லாம் | கடல் சூழ்ந்த ஸகல பூமியும் |
| அதன் கீழ் | அந்தத் திருவடியின்கீழேயாம்படி |
| தாய் | தாவியளந்து, |
| ஓர் அடியால் | மற்றொரு திருவடியாலே |
| உலகு எல்லாம் தடவந்த | மேலுலக மெல்லாவற்றையும் ஆக்ரமித்த |
| மாயோன் | ஆச்சர்யசேஷ்டிதனே! |
| உன்னை காண்பான் | உன்னைக் காணவேண்டி |
| வருந்தி | பிரயாஸப்பட்டு |
| தீயோடு உடன் சேர் மெழுகு ஆய் | நெருப்போடு சேர்ந்தமெழுகின் தன்மையை யுடையேனாய் |
| உலகில் | இவ்வுலகத்தில் |
| எனை நாளும் திரிவேனோ | எத்தனைநாளும் தட்டித்திரிவதேயோ என்கதி? |

* * * என்னை நீ தேடித்திரிந்த காலத்திலே உனக்கு நான் அகப்பட்டேனில்லை; உன்னை நான் தேடித்திரியுமிக்காலத்திலே எனக்கு நீ அகப்படுகிறாயல்லை என்கிறார் போலு மாழ்வார். இப்போதைய தம்முடைய படிக்குத் தீயோடுடன் சேர் மெழுகை த்ருஷ்டாந்த மாகப்பேசுகிறார். அக்நியிலே புக்குக் கரிந்து போகவும் பெறாதே தூரத்திலிருந்து அழியா திருக்கவும் பெறாதே உருகுவது வலிப்பதாகிறபடி. ஜீவிக்கவும் பெறாதே முடியவும் பெறாதே இப்படி யெத்தனை காலம் திரிவேனோ! என்றாராயிற்று. (சு)

3321

உலகில்திரியும்கருமகதியாய் உலகமாய் * உலகுக்கேயோருயிருமானாய்! புறவண்டத்து *
அலகில்போலிந்த திசைபத்தாயவருவேயோ! * அலகில்போலிந்த அறிவிலேனுக்கருளாயே. (எ)

| | | | |
|---|---|---|---|
| உலகில் திரியும் கருமம் கதி ஆய் | லோகத்தில் வியாபரிக்கிற ஸா தன கர்மஸ்வரூபியாயும் | திசை பத்து ஆய | பத்துத்திசைகளிலும் ஞானத் தாலே வ்யாப்தராயிருக்கின்ற |
| உலகம் ஆய் | அந்தக் கருமங்களை யனுஷ்டிப் பவர்கள் ஸ்வரூபியாயும் | அருவேயோ | முக்தாத்மாக்களை வடிவாக வுடையவனே ! |
| உலகுக்கே ஓர் உயிரும் ஆனாய் | ஸர்வலோகங்களுக்கும் ஏகாத் மாவாயும் நிற்பவனே ! | அலகு இல் பொலிந்த அறிவிலேனுக்கு | எண்ணிக்கையில்லாதபடி விளங்குகின்ற அஜ்ஞானத்தை யுடையேனை என் விஷயத்தில் |
| புறம் அண்டத்து | அண்டங்களுக்கு வெளிப்பட்டிருப்பவர்களாய் | | |
| அலகு இல் பொலிந்த | எண்ணிக்கையில்லாதபடி விளங்குபவர்களாய் | அருளாய் | க்ருபைபண்ணவேணும். |

* * * பிரானே! எல்லாம் உன்னுடைய ஸங்கல்பாயத்தமாயிருக்க, எனக்கு அருள் செய்வதுதானோ மிகை என்கிறார். உலகில் திரியும் கருமகதியாய் என்றது உலகத்தில் காண்கிற ஸாதநரூப கருமங்களெல்லாம் நீயிட்ட வழக்கு என்றபடி. இதன் கருத்தாவது—எந்த ஸாத னம் அனுஷ்டித்தாலும் பலன் தருவது நீயேயன்றோ; அசேதநமான அவை பலனளிக்கமாட் டாவே. பலனளிப்பவன் நீயேயான பின்பு அருள்செய்யத் தட்டென்? என்பதாம். உலகமாய் என்றது அக்கருமங்களை அனுஷ்டிப்பவர்களும் நீயிட்ட வழக்கென்றபடி. அதா வது—சிலர் சில கருமங்களை யனுஷ்டிக்கிறார்களென்று நாம் காணாநின்றாலும் எம்பெருமான் கொடுத்த கரணகளேபரங்களைக்கொண்டும் எம்பெருமான் கொடுத்த இசைவைக் கொண் டுமே அனுஷ்டிக்கின்றார்களாதலால் அனுஷ்டிப்பவர்களும் எம்பெருமானிட்ட வழக் கென்கிறது.

உலகுக்கே ஓருயிருமானாய்—ஒரு சரீரத்தை ஒரு ஆத்மா அதிஷ்டித்துக்கொண்டு அபி மானித்திருந்து நோக்குமா போலே, ஒன்றொழியாத ஸகல பதார்த்தங்களுக்கும் எம்பெருமா னொருவனே ஆத்மாவாயிருந்து நோக்குபவனென்றபடி. உடலான வென்னை நோக்க வேண்டு வது உயிரானவுனக்குக் கடமையன்றோ வென்று காட்டினபடி. புறவண்டத்து அலகிற் போலிந்த திசைபத்தாய வருவேயோ—அண்டத்துக்கு வெளியேயிருப்பாராய், எண்ணிறந்தவர் களாய், ஞானத்தாலே எங்கும் வியாபித்திருப்பவர்களாய், ரூபித்ரவ்யம்போலே கண்ணுக்கு விஷயமன்றிக்கே அரூபியாயிருக்கிற ஆத்மாக்களுக்கு நிர்வாஹகனானவனே! என்றபடி. முக்தாத்மாக்களுக்கும் கடவனே! என்கை. அலகிற்போலிந்த அறிவிலேனுக்கு—அலகில் லாமையாவது எண்ணிக்கையில்லாமை; இதற்கு அறிவில்லாமையிலே அந்வயம். எண்ணி றந்த அறிவு கேட்டையுடையேன் என்றபடி. 'அறிவிலேன்' என்று மூலத்திலுள்ளதேயன்றி 'அறிவில்லாமை' என்கிற சொல் இல்லையே; ஆகவே அந்வயிப்பது எப்படி? என்று சங்கிக்க நேரும். சொல்வடிவில் இல்லையானாலும், பொருள்வடிவில் உண்டு; அறிவிலேன் என்பதற்கு அறிவில்லாமையையுடையேன் என்று பொருளாகையாலே அதில் ஏகதேசமான அறிவில் லாமையிலே 'அலகில்' என்பது அந்வயிப்பதாகக் கொள்க. (எ)

3322 அறிவிலேனுக்கருளாய் அறிவாருயிரானாய்! *
வெறிகொள்சோதிமூர்த்தி அடியேன்நெடுமாலே! *
கிறிசெய்தென்னைப்புறத்திட்டு இன்னம் கெடுப்பாயோ *
பிறிதொன்றறியாவடியேன் ஆவிதிகைக்கவே. (அ)

| | | | |
|---|---|---|---|
| அறிவார் உயிர் ஆனாய் | ஞானிகளை ஆத்மாவாக வுடையவனே ! | பிறிது ஒன்று அறியா அடியேன் ஆவி திகைக்க | வேறொரு புகலறியாத அடியேனுடைய நெஞ்சு கலங்கும்படியாக |
| வெறி கொள் சோதி மூர்த்தி | ஸுகந்தமயமாய் தேஜோமயமாயிருந்துள்ள திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவனே! | கிறி செய்து | ஏதோ சூதுபண்ணி |
| அடியேன் நெடுமாலே | அடியேனிடத்தில் அளவுகடந்த வியாமோஹமுடையவனே! | என்னை புறத்து இட்டு | என்னைப்புறம்புண்டான பற்றுக்களிலே அகப்படுத்தி |
| அறிவு இலேனுக்கு அருளாய் | அறிவிலியான என் விஷயத்திலே அருள் செய்ய வேணும்; | இன்னம் கெடுப்பாயோ | இன்னமும் கெடுக்க நினைக்கிறாயோ ? |

* * * கீழ்ப்பாட்டில் "அறிவிலேனுக்கருளாயே" என்றவாறே எம்பெருமான் அருள் செய்து கொண்டு வந்து நிற்கவேணுமே; அப்படி நிற்கக்கண்டிலர் ஆழ்வார்; பிரானே! உன் திருவடிகளல்லது மற்றொரு உபாயமும் உபேயமுமில்லை யென்று கொண்டிருக்கிற இந்த அத்யவஸாயமுங்கூடக் கலங்கும்படி உன்னைக்காட்டாதே என்னை வஞ்சித்து சப்தாதி விஷயங்களைக்காட்டி என்னை இன்னமுங்கெடுக்கவோ பார்த்தருளிற்று? என்கிறார். அறிவாருயிரானாய்!—இதற்கு இரண்டுபடியாக நிர்வஹிப்பர்; ஞானிகளுக்கு உயிரானவனே! என்னுதல், ஞானிகளை உயிராகவுடையவனே! என்னுதல். ஆசார்யஹ்ருதயத்தில் "என்னை துன்னதாவியிலே அறிவாராத்மாவென்று அவன் மதம் தோன்றும்" என்றருளிச்செய்தபடி ஞானிகளை உயிராகவுடையவனே யென்கிற நிர்வாஹமே முக்கியமாகும், அவன்தானே கீதையில் ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம் என்றருளிச்செய்து வைக்கையாலே "ஜ்ஞாநியானவன் எனக்கு உயிராகவே என்னுடைய மதம்" என்ற அவனது திருவுள்ளத்திற்குச் சேர்ந்த பொருள் இதுவே. (அ)

3323
ஆவிதிகைக்க ஐவர்குமைக்கும்சிற்றின்பம் * பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ? *
தாவிவையம்கொண்ட தடந்தாமரைகட்கே * கூவிக்கொள்ளும்காலம் இன்னம்குறுகாதோ? (கூ)

| | | | |
|---|---|---|---|
| ஆவி திகைக்க | நெஞ்சு கலங்கும்படியாக | வையம் தாவி | பூமி முழுவதையும் அளந்து |
| ஐவர் குமைக்கும் | பஞ்சேந்திரியங்களும் பிடிக்கும்படியான | கொண்ட | ஸ்வாதீனமாக்கிக் கொண்ட |
| சிற்றின்பம் பல | அற்பஸாரங்களான விஷயங்கள் பலவற்றை | தட தாமரை கட்கே | பெரிய திருவடித் தாமரைகளிலே நான் அந்வயிக்கும்படி |
| பாவியேனை நீ காட்டி | பாவியேன் கண்ணிலே நீ காண்பித்து | கூவிக்கொள்ளும் காலம் | என்னை யழைத்துக் கொள்ளுங் காலம் |
| படுப்பாயோ | முடிக்க நினைக்கிறாயோ? | இன்னம் குறுகாதோ | இன்னமும் ஸமீபித்ததாக ஆகக்கூடாதோ ? |

* * * விஷயங்களும் இந்திரியங்களும் நடையாடுகிற நிலத்திலே வைத்து என்னை முடிக்கப் பார்த்தது போதும் பிரானே!; கடுக உன் திருவடிகளிலே யழைத்துக் கொள்ளலாகாதோ வென்கிறார். இப்பாட்டுக்கு ஈட்டின் அவதாரிகை காண்மின்;—"உம்மை இங்குக் கெடுத்ததென்? என்ன; கண்டகாட்சியிலே இழுத்துக்கொள்ளக் கடவதான விஷயங்கள் பா மாறுகிற விடத்தே வைத்தாயாகில் இனிக்கெடுக்கையென்று ஒன்றுண்டோ வென்கிறார் என்னையிங்கே வைத்தபோதே குழியைக்கல்லி மண்ணையிட்டு அமுக்கப் பார்த்தாயன்றோ வென்கிறார்." தாமரைபோன்ற திருவடிகட்கே என்ன வேண்டுமிடத்து 'தாமரைகட்கே என்றது உவமையாகுபெயர். (கூ

3324 குறுகாநீளா இறுதிகூடாவெனையூழி *
சிறுகாபெருகா அளவிலின்பம்சேர்ந்தாலும் *
மறுகாலின்றிமாயோன்! உனக்கேயாளாகும் *
சிறுகாலத்தையுறுமோ? அந்தோதெரியிலே. (ய)

| | | | |
|---|---|---|---|
| மாயோன் | ஆச்சரியமானவனே! | தெரியில் | நிரூபித்துப்பார்க்கில் |
| குறுகா நீளா | ஸ்வரூபத்தில் ஸங்கோச விகாஸமில்லாமலும் | மறுகால் இன்றி | பின்னையொருகாலும் இல்லாத படியாக [மிகவும் அற்பகாலமாக] |
| இறுதி கூடா | முடிவுமில்லாமலும் | | |
| எனை ஊழி | எக்காலத்திலும் | உனக்கே ஆள் ஆகும் சிறு காலத்தை | உனக்கே அடிமைப்படும்படியான ஸ்வல்பகாலத்தை |
| சிறுகா பெருகா | க்ஷய வ்ருத்திகளில்லாமலும் | | |
| அளவு இல் | பரிச்சேதமற்றதாயுமிருக்கிற | | |
| இன்பம் | கைவல்யாநுபவஸுகமானது | உறுமோ | ஒத்திருக்குமோ? |
| சேர்ந்தாலும் | வந்து கூடினாலும் | அந்தோ | ஐயோ! |

*** கீழ்ப்பாட்டில் சிற்றின்பங்களை வெறுத்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! விஷயஸுகம் அல்பமாய் அஸ்திரமாயிருக்குமென்று வெறுத்தீராகில் அநல்பமாய் ஸ்திரமாயிருக்குமதான கைவல்ய மோக்ஷ ஸுகத்தைக் கொள்ளுகிறீரா?' என்று கேட்க, அதற்கு உத்தரமருளிச் செய்கிறாரிப் பாட்டில். கைவல்ய மோக்ஷம் ஆத்மாவுள்ளதனையும் அநுபவிக்குமதாயிருந்தாலும் உன்னுடைய கைங்கர்ய ஸுகம் அடுத்தக்ஷணத்திலின்றிக்கே ஒருக்ஷணமே யாவதானாலும் இத்தைக் கைவிட்டு அத்தைப் பற்றுகை உறும் என்றிருப்பாரோ அறிவுடையார்? சிற்றின்பம் அல்பமும் அஸ்திரமுமாயிருக்குமென்று அதினுடைய தோஷத்தை அடியேன் எடுத்துரைத்தது அதன் ஸ்வரூபத்தைச் சொன்னபடியே யொழிய வேண்டாமைக்கு ஹேதுவாகச் சொன்னபடியன்று. உன் கைங்கர்யமாயிருக்குமது எதுவோ அதுவே எனக்கு வேண்டுவது; அங்ஙனல்லாதது எனக்கு வேண்டாதது. உன் கைங்கர்யமானது அல்பமும் அஸ்திரமுமாக இருந்தாலுங்கூட உன் கைங்கரியமென்கிற காரணத்தினால் இதுவே யெனக்கு வேண்டுவது என்கிறார். (ய)

3325 தெரிதல்நினைதல் எண்ணலாகாத்திருமாலுக்கு *
உரியதொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன் *
தெரியச்சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும் *
உரியதொண்டராக்கும் உலகமுண்டாற்கே. (கக)

| | | | |
|---|---|---|---|
| தெரிதல் நினைதல் எண்ணல் ஆகா | சாஸ்த்ரஜ்ஞானத்தாலும் மனனத்தாலும் த்யானத்தாலும் பரிச்சேதிக்க முடியாத | தெரிய சொன்ன | விசதமாக அருளிச்செய்த |
| | | ஓர் ஆயிரத்துள் | விலக்ஷணமான ஆயிரத்துள்ளே |
| திரு மாலுக்கு | ஸ்ரீமந்நாராயணனுக்கு | இ பத்தும் | இந்தத் திருவாய்மொழி (தன்னைக்கற்குமவர்களை) |
| உரிய | அநந்யார்ஹ சேஷ பூதர்களான | | |
| தொண்டர் தொண்டர் | பக்த பக்தர்களுக்கு | உலகம் உண்டாற்கு | உலகமுண்டவனான எம்பெருமான் விஷயத்திலே |
| தொண்டன் | பக்தரான | உரிய தொண்டர் ஆக்கும் | அநந்யார்ஹ சேஷ பூதராக்கும், |
| சடகோபன் | நம்மாழ்வார் | | |

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# ஆறும்பத்து பத்தாந் திருவாய்மொழி—உலகமுண்ட பெருவாயா.

---

உரையவதாரிகை:—கீழ்த் திருவாய்மொழியில் அபரிமிதமான ஆர்த்தியோடே பரம பதத்தளவும் கேட்கும்படி கூப்பிட்டார். அங்ஙனே கூப்பிடச் செய்தேயும் எம்பெருமான் வந்து முகங் காட்டாமையாலே மிகவும் தளர்ந்து நோவுபட்ட ஆழ்வார், அப்பெருமான் ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து நிலவுலகத்தே வந்து ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் பண்ணி அக்காலத்திலே யிழந்தார்க்கும் இழக்கவேண்டாமல் திருவேங்கடமலையிலே நித்ய ஸூரிகளோடு நித்ய ஸம்ஸாரிகளோடு திர்யக்குக்களோடு வாசியற எல்லாரும் வந்து ஒருமிடராக ஆச்ரயிக்கலாம் படி நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கிறபடியை யநுஸந்தித்து அத்திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் தம்முடைய அநந்யகதித்வத்தை விண்ணப்பஞ் செய்து சரணம் புகுகிறார்—இத்திருவாய்மொழியில்.

ஒன்பது பாட்டாலும் சரண்யன்படி சொல்லி, பத்தாம் பாட்டிலே சரணம் புகுகிறார்.

3326 உலகமுண்டபெருவாயா! உலப்பில்கீர்த்தியம்மானே! *<br>
நிலவும்சுடர்சூழொளிமூர்த்தி நெடியாயடியேனாருயிரே! *<br>
திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே! *<br>
குலதொல்லடியேனுனபாதம் கூடுமாறுகூறாயே. (க)

| | |
|---|---|
| உலகம் உண்ட பெரு வாயா | (ப்ரளய காலத்தில்) உலகங்களையெல்லாம் அமுது செய்த பெருவாயையுடையவனே! |
| உலப்பு இல் கீர்த்தி அம்மானே | முடிவில்லாத புகழையுடைய பெருமானே! |
| நிலவும் சுடர் சூழ் ஒளி மூர்த்தி | அப்ராக்ருத தேஜோமயமான திவ்ய விக்ரஹத்தையுடையவனே! |
| நெடியாய் | மிகப் பெரியோனே! |
| அடியேன் ஆர் உயிரே | அடியேனுக்கும் பரிபூர்ண ப்ராணபூதனே! |
| உலகுக்கு திலதம் ஆய் நின்ற திரு வேங்கடத்து | உலகுக்கெல்லாம் திலகம் போன்றதான திருமலையிலே விளங்குகின்ற |
| எம் பெருமானே | அஸ்மத்ஸ்வாமியே! |
| குலம் தொல் அடியேன் | குலபரம்பரையாக உனக்கு அடிமைப் பட்டிருப்பவனான அடியேன் |
| உன பாதம் | உனது திருவடிகளை |
| கூடும் ஆறு | வந்து சேரும்படியை |
| கூறாய் | அருளிச்செய்யவேணும். |

* * * ஸகல ஜகத்தையும் ரக்ஷிக்குமியல்வை யுடையையாய்க் கொண்டு திருமலையிலே நித்யஸந்நிதி பண்ணியிருக்கிறவுன்னை நான் கிட்டியநுபவிக்கும் விரகு அருளிச்செய்ய வேணுமென்கிறார். உன்னுடைய திருவடியை நான் கிட்டப்பெறாமல் கிலேசிப்பது பிரளயாபத்தோடொக்கும்; இந்த ஆபத்தை நீ போக்கினாலல்லது பிரளயாபத்தைப் போக்கினாயென்கிற புகழ் உனக்கு நிலைநிற்கமாட்டாதென்கிற கருத்துப்பட 'உலகமுண்ட பெருவாயா' என்கிறார். ஆபத்து நேர்ந்தகாலத்தில் தளராதபடி ரக்ஷிக்கைக்காகவன்றோ நீ உலகமுண்டது; அந்த ஆபத்ரக்ஷகத்வம் மெய்யானால் என்னையும் ஆபத்தில் நின்று மெடுத்தருளித் திருவடிகளில் சேர்த்துக்கொள்ள வேண்டாவோவென்றவாறு. (க)

3327 கூறாய்நீறாய்நிலனாகிக் கொடுவல்லசுரர்குலமெல்லாம் *<br>
சீறாவெறியும்திருநேமிவலவா தெய்வக்கோமானே! *<br>
சேறார்சுனைத்தாமரைசெந்தீமலரும் திருவேங்கடத்தானே! *<br>
ஆறாவன்பிலடியேன் உன்னடிசேர்வண்ணமருளாயே. (உ)

| | | | |
|---|---|---|---|
| கொடு வல் அசுரர் குலம் எல்லாம் | மிகக் கொடிய அசுரர்களின் கூட்டமெல்லாம் | தாமரை | செந்தாமரை மலர்கள் |
| கூறு ஆய் | பலபல கண்டங்களாகி | செம் தீ மலரும் | சிவந்த தீப்போன்ற நிறத்தையுடைத்தாய்க் கொண்டு மலரும்படியுள்ள |
| நீறு ஆய் | சாம்பலாகி | | |
| நிலன் ஆகி | தரைப்பட்டிருக்கச் செய்தேயும் | திருவேங்கடத்தானே | திருமலையிலே எழுந்தருளியிருப்பவனே! |
| சீறு | பின்னையும் சீறி | | |
| எரியும் | ஜ்வலியா நிற்கிற | ஆறு அன்பின் அடியேன் | அளவுபடாத அன்பையுடையேனான நான் |
| திரு நேமி வலவா | திருவாழியாழ்வானை வலவருகிலே ஏந்தியிருப்பவனே! | உன் அடி சேர் வண்ணம் | உன் திருவடிகளைச் சேரும்படி |
| தெய்வம் கோமானே — நித்யஸூரிநாதனே! | | | |
| சேறு ஆர் சுனை | சேறு நிரம்பிய சுனைகளிலே | அருளாய் | அருள்புரியவேணும். |

* * * விரோதிகளையெல்லாம் கிழங்கெடுக்கவல்ல திவ்யாயுதத்தினால் ஒளி பெற்றிருக்கிற நீ எனது விரோதிகளையும் போக்கி, நான் உன் திருவடிகளைச் சேரும்படி க்ருபைபண்ண வேணுமென்கிறார். "கொடுவல்லசுரர் குலமெல்லாம் கூறாய் நீறாய் நிலனாகி" என்று அந்வயிப்பது. சத்ருக்களை முதலில் இருதுண்டமாக்கிப் பிறகு நீறாக்கிப் பின்பு அதுவுங்காணவொண்ணாதபடி வெறுந்தரையாக்குமென்று திருவாழியாழ்வானுடைய விக்கிரமம் சொல்லுகிறது. மூலத்தில் ஆகி என்றிருந்தாலும் 'ஆக' என்று எச்சத்திரிபாகக் கொள்ளலாம். கூறாய் நீறாய் நிலனாம்படியாக வென்றபடி. 'ஆக்கி' என்று பிறவினையாகவுங் கொள்ளலாம். 'சீறு' என்பது செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்; சீறியென்றபடி. வலவா—வல்லவன் என்ற சொல் வலவன் என்று தொகுத்தலாய் விளியுருபு ஏற்றதாகக் கொண்டால் 'திருவாழியை அடக்கியாள வல்லவனே!' என்று பொருளாம்.

ஆறுவன்பிலடியேன்—ஆழ்வார்க்கு இதுவொரு நிரூபகமான திருநாமம் போலும். "ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன்", என்றாப்போலே ஆறாதவன்பையே நிரூபகமாகவுடைய அடியேன் என்கிறார். கீழ் மூன்றாமடியில் சுனைகளைப்பற்றி ப்ரஸ்தாவம் செய்தாரே; அந்தச் சுனைகளில் நீர்வற்றினாலும் வற்றும், தம்முடைய அன்பு வற்றாதென்கிறார் போலும். இப்படிப்பட்ட அடியேன் உன் திருவடிகளிலே சேர்ந்து அடிமை செய்யும்படி என் பக்கலிலே க்ருபை பண்ணியருளவேணும்; நீ திருமலையிலே நிற்கிறநிலைக்குப் பயன்பெறவேணும்; எனது அன்புக்கு இரையிடவேணும் என்கிறாராயிற்று. (உ)

3328 வண்ணமருள்கொளணிமேகவண்ணா மாயவம்மானே! *
எண்ணம்புகுந்துதித்திக்குமமுதே இமையோரதிபதியே! *
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்கும் திருவேங்கடத்தானே! *
அண்ணலேயுன்னடிசேர அடியேற்காவாவென்னாயே. (ந)

| | | | |
|---|---|---|---|
| வண்ணம் அருள் கொள் | அருளே வடிவெடுத்த வண்ணமாய் | தெள் நல் அருவி | தெளிந்தழகிய அருவிகள் |
| அணி மேகம் வண்ணா | அழகிய மேகம்போன்ற நிறத்தையுடையவனே! | மணி பொன் முத்து | மணிகளையும் பொன்களையும் முத்துக்களையும் |
| | | அலைக்கும் | கொழிக்குமிடமான |
| மாயம் அம்மானே | ஆச்சரிய குணங்களையுடைய ஸ்வாமியே! | திருவேங்கடத்தானே | திருமலையிலே விளங்குபவனே! |
| | | அண்ணலே | ஸ்வாமியே! |
| எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே | நெஞ்சுக்குள்ளே புகுந்து ரஸிக்கும் அமிருதமானவனே! | உன் அடி சேர | உன் திருவடிகளில் வந்து சேரும்படி |
| இமையோர் அதி பதியே | தேவாதிதேவனே! | அடியேற்கு | அடியேன் விஷயத்திலே |
| | | ஆ ஆ என்னாய்-ஐயோவென்றிரங்கியருள வேணும். | |

* * * கீழ்ப்பாட்டில் 'உன்னடிசேர் வண்ணமருளாய்' என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! நீர் கேட்டபோதே நாம் அருளமுடியுமோ? அதற்கு ஸமயமில்லையோ?' என்ன; இதர விஷயங்களில் போகாதபடியான ஜ்ஞான லாபத்தைப் பண்ணித்தந்தவுனக்கு ப்ராப்தி பண்ணித் தருகை அரிய பெரிய காரியமோ வென்கிறார். வண்ணமருள் கோள் அணிமேகவண்ணா!—அருள்வண்ணங்கொள் அணிமேகவண்ணா என்று அந்வயிக்கலாம். அருள் வண்ணங்கொள்—அருள் தானே வடிவெடுத்த என்றபடி. அருளே திருவேங்கடமுடையானாக மூர்த்தீகரித்த தென்றவாறு. அருள் என்னாமல் 'மருள்' என்றும் சொல் பிரிக்கலாம். வண்ணம்—வடிவானது, மருள்கொள்—கண்டார் நெஞ்சை இருளப் பண்ணக் கடவதாயிருக்கிற என்றபடி. மாயவம்மானே!—வெறும் வடிவழகு மாத்திரமேயல்லாமல் ஆச்சரியமான குண சேஷ்டிதங்களாலும் பெரியனானவனே!. (௩)

3329 ஆவாவென்னாதுலகத்தையலைக்கும் அசுரர்வாணாள்மேல் *
தீவாய்வாளிமழைபொழிந்தசிலையா திருமாமகள்கேள்வா
தேவா! * சுரர்கள்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே! *
பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறுபுணராயே. (௪)

| | | | |
|---|---|---|---|
| ஆ ஆ என்னாது | இரக்கமில்லாமல் | தேவா | தேவனே! |
| உலகத்தை அலைக்கும் | உலகத்தவர்களை ஹிம்ஸிப்பவர்களான | சுரர்கள் முனி கணங்கள் விரும்பும் | தேவர்களும் முனிவர்களும் திரள் திரளாக ஆதரிக்கும் படியான |
| அசுரர் | ஆஸுரப்ரக்ருதிகளினுடைய | திரு வேங்கடத்தானே | திருமலையில் எழுந்தருளியிருப்பவனே ! |
| வாழ்நாள் மேல் | ஆயுளை முடிப்பதற்காக | பூ ஆர் கழல்கள் | (உனது) புஷ்பங்கள் நிறைந்த திருவடிகளை |
| தீ வாய் வாளி | நெருப்பை உமிழ்கிற அம்புகளை | அரு வினையேன் | மஹாபாபியான நான் |
| மழை பொழிந்த சிலையா | மழைபோலே வர்ஷித்தசார்ங்க வில்லையுடையவனே ! | பொருந்தும் ஆறு | கிட்டும்படி |
| திரு மா மகள் கேள்வா | திருமகள் கொழுநனே! | புணராய் | கற்பித்தருளவேணும். |

* * * பிரானே! உன்னைப் பெறுகைக்கு உடலாக நீ சாஸ்த்ரங்களில் காட்டிக் கொடுத்த ஸாதனங்களொன்றும் எனக்கு உபயோகப்படவில்லை; ஆனபின்பு எனக்கென்று தனியேயொரு ஸாதனம் கண்டு தரவேணுமென்கிறார்.

பிரமன் சிவனிந்திரன் முதலான தேவர்களும் ஸநக ஸநந்தநாதி மஹர்ஷிகளும் இதுவே நமக்கு ப்ராப்யஸ்தானமென்று விரும்பி யிறைஞ்சியேத்துமிடமான திருமலைக்கு இறைவனே! கிட்டியநுபவிக்கப்பெறாத பாபத்தைப்பண்ணின நான் உன்னுடைய பூவார்கழல்களைப் பொருந்தும்படியான ஒரு உபாயத்தைக் கல்பித்தருளவேணுமென்றாராயிற்று. பூ ஆர் கழல்—புஷ்பங்கள் நிரம்பிய திருவடி; அல்லது பூப்போன்ற திருவடி. திருவேங்கடமுடையானுடைய திருவடிக்குப் பூவார்கழல்களென்றும், அழகிய மணவாளனுடைய திருவடிக்குத் திருப்பொலிந்த சேவடியென்றும், தேவப்பெருமாளுடைய திருவடிக்குத் துயரறுசுடரடி யென்றும் ஸம்பிரதாயத் திருநாமமென வழங்குவர் பெரியோர். (௪)

3330 புணராநின்றமரமேழ் அன்றெய்தவொருவில்வலவாவோ! *
புணரேய்நின்றமரமிரண்டின் நடுவேபோனமுதல்வாவோ !*
திணரார்மேகமெனக்களிறுசேரும் திருவேங்கடத்தானே! *
திணரார்சார்ங்கத்துனபாதம் சேர்வதடியேனெந்நாளே! (௫)

| | |
|---|---|
| அன்று | ராமாவதாரத்திலே |
| புணரா நின்ற மரம் ஏழ் | ஒன்ரேடொன்று பிணைந்திருந்த ஸப்த ஸாலவ்ருக்ஷங்களை |
| எய்த | துளைபடுத்தின |
| ஒரு வில் வலவா ஓ | ஓ தனிவீரனே ! |
| புணர் ஏய் நின்ற மரம் இரண்டின் நடுவே | சேர்த்தி பொருந்தி நின்ற இரட்டை மருத மரங்களிடையே |
| போன | தவழ்ந்து சென்ற |
| முதல்வா ஓ | ஓ மூலபுருஷனே ! |
| திணர் ஆர் மேகம் என | திண்மை மிக்க மேகங்களென்னும்படி |
| களிறு சேரும் | யானைகள் சேருமிடமான |
| திருவேங்கடத்தானே | திருமலையிலெழுந்தருளி யிருப்பவனே ! |
| திணர் ஆர் சார்ங்கத்து | திண்மைமிக்க ஸ்ரீசார்ங்க வில்லையுடைய |
| உன பாதம் | உனது திருவடிகளை |
| அடியேன் சேர்வது எந்நாள் | அடியேன் அணுகப் பெறுவது என்றைக்கோ ? |

* * * ஆழ்வீர்! நீர் இங்ஙனே கிடந்து துடிப்பதேன்? எப்படியும் உம்முடைய விருப்பம் செய்வதாகவே நினைத்திருக்கிறேமென்று திருவேங்கடமுடையான் திருவுள்ளமாக, அது என்றைக்குச் செய்வதாகத் திருவுள்ளம்? ஒரு நாளிட்டுத் தரலாகாதோ வென்கிறார்.

[திணரார்மேகமித்யாதி.] களிறென மேகஞ்சேரும், மேகமெனக் களிறுசேரும் என்று இரண்டு படியும் அந்வயிக்கப் பொருந்தும். யானைபோன்ற மேகங்களும், மேகம்போன்ற யானைகளும் திருமலையிலே வர்த்திப்பது இயல்பு. * தென்னானாய் வடவானாய் குடபாலானாய் குணபாலமதயானாய் *என்றும்* சோலை மழகளிறே * என்றும் யானை தானாகச் சொல்லலாம்படியும் * ஸ்ரீ வேங்கடாத்ரி சிகராலய காளமேகம் * என்று மேகந்தானாகச் சொல்லலாம்படியும் எம்பெருமானிருக்கிற இருப்புக்கு ஸ்மாரகமானபடி.

திணரார் சார்ங்கத்து உன=உன்கையில் வில் இருக்க நான் இழக்க வேண்டுவதில்லை; இழக்கமாட்டேன்; இனி உன்னைப் பெறும் நாளைச் சொல்லியருளினால் போதுமென்கிறார். (ரு)

3331 எந்நாளேநாம்மண்ணளந்த இணைத்தாமரைகள்காண்பதற்கென்று *
எந்நாளும்நின்றிமையோர்களேத்தி இறைஞ்சியினமினமாய் *
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யும் திருவேங்கடத்தானே! *
மெய்ந்நானெய்தியெந்நாள் உன்னடிக்களடியேன்மேவுவதே. (சா)

| | |
|---|---|
| மண் அளந்த தாமரை இணை | உலகமளந்த உபயபாதங்களை |
| நாம் காண்பதற்கு எந்நாள் என்று | நாம் காண்பதற்குரிய நாள் எந்த நாளென்று |
| இமையோர்கள் | நித்யஸூரிகள் |
| எந்நாளும் நின்று ஏத்தி | நிரந்தரமாக நின்று துதித்து |
| இறைஞ்சி | வணங்கி |
| இனம் இனம் ஆ | திரள் திரளாக |
| மெய் நா மனத்தால் | த்ரிகரணங்களாலும் |
| வழிபாடு செய்யும் | ஆராதனை செய்யுமிடமான |
| திருவேங்கடத்தானே | திருமலையில் எழுந்தருளி யிருப்பவனே ! |
| அடியேன் நான் | அடியேனாகிய நான் |
| மெய் எய்தி | (கனவுபோலன்றிக்கே) மெய்யாகவே யடைந்து |
| உன் அடிக்கள் மேவுவது | உன் திருவடிகளிலே பொருந்துவது |
| எந்நாள் | என்றைக்கோ ! |

* * * கீழ்ப்பாட்டில் "உனபாதம் சேர்வதடியே னெந்நாளே" என்றதற்கு உன் திருவடிகளை நான் சேரப்பெறும் நாள்கூட ஒன்று உண்டா? அது ஏது? என்று ஸந்தேஹித்துச் சொல்வதாகவும் பொருளாகக்கூடுமே; எம்பெருமான் 'ஆழ்வீர்' எந்நாளே யென்று நீர் ஸந்தேஹிப்பதென்? அது ஒரு தேச விசேஷத்திலே நியதமா யிருக்குமே' என்றருளிச்செய்ய, அங்குள்ளாரும் இங்கே வந்தன்றே அநுபவிக்கிறது; அப்படியிருக்க எனக்குமாத்திரம் தேச விசேஷமா? என்கிறார். இப்பாட்டின் இரண்டாமடியில் இமையோர்கள் என்றது நித்யஸூரி

களைச் சொல்லிற்றாகக் கொண்டால் இங்ஙனே ஸங்கதியாகக் கடவது. இனி, ஸ்வர்க்க லோகத்திலுள்ள தேவர்களைச் சொல்லிற்றாகக்கொண்டால், ப்ரயோஜநாந்தரபரர்களானவர் களுங்கூட அநந்ய ப்ரயோஜநரைப்போலே வந்து ஆச்ரயிக்க நிற்கிற விடத்தே நான் இழந்து போவதே! என்கிறாராகக் கொள்க. (சு)

3332 அடியேன்மேவியமர்கின்றவமுதே இமையோரதிபதியே! *
கொடியாவடுபுள்ளுடையானே கோலக்கனிவாய்ப்பெருமானே! *
செடியார்வினைகள்தீர்மருந்தே திருவேங்கடத்தெம்பெருமானே! *
நொடியார்பொழுதுமுனபாதம் காணநோலாதாற்றேனே. (எ)

| | |
|---|---|
| அடியேன் மேவி அமர்கின்ற அமுதே | அடியேன் கிட்டி யநுபவிக்கும்படியான அமிருதமே ! |
| இமையோர் அதிபதியே | தேவாதி தேவனே ! |
| அடு புள் கொடி ஆ உடையானே | (பகைவரைப்) பொசுக்கவல்ல கருடனைக் கொடியாகவுடையவனே ! |
| கோலம் கனி வாய் பெருமானே | அழகிய கனிபோன்ற அதரத்தையுடைய பெருமானே ! |
| செடி ஆர் வினைகள் தீர் மருந்தே | செடிபோலே செழித்த பாபங்களைத் தீர்க்கும் மருந்தானவனே ! |

திருவேங்கடத்து எம்பெருமானே!-;

| | |
|---|---|
| உன பாதம் காண | உனது திருவடிகளைக் காண்கைக்கு |
| நோலாது | நான் ஒரு நோன்பும் அனுஷ்டியாமலிருந்தும் (நோற்றவர்கள் பலன் தாழ்த்தால் படுமாபோலே) |
| நொடி ஆர் பொழுதும் | ஒரு க்ஷண மாத்திரமும் |
| ஆற்றேன் | தரித்திருக்கமாட்டாமல் துடிக்கின்றேன். |

* * * பேறுதப்பாதென்று துணிந்திருத்தல் ஸ்வரூபமாயினும் அத்தலையில் போக்யதை நெஞ்சுக்கு விஷயமாக ஆக, தரித்திருக்க முடியாதபடி பதறவேண்டி யிருக்குமே; அந்தப் பதற்றத்தை யருளிச்செய்கிறாரிப்பாட்டில். அடியேன் மேவியமர்கின்ற அமுதே!—எம்பெருமானுக்கு இவர் சாத்தும் ஒரு திருநாமம்போலே யிராநின்றது இது. தேவஜாதிகள் உப்புச்சாற்றைப் பருகிக் களிப்பர்கள்; அதுவோ இது? இங்குள்ள மற்றையோர்கள் அநுபவிக்கும் போலேயா நான் அநுபவிப்பது? அடியேனுடைய அநுபவம் அஸாதாரணமன்றோ வென்கிறார். உடனே இமையோரதிபதியே! என்றது—அங்குத் திருநாட்டிலே நித்ய ஸூரிகள் உன்னை எப்படி யநுபவிக்கிறார்களோ அப்படி இங்கு அடியேன் அநுபவிப்பவனல்லனோ? என்று காட்டினபடி. திருவாராதனத்தில் பெருமாளுக்கு அமுது செய்தருளப் பண்ணும்போது * அடியேன் மேவியமர்கின்றவமுதே யென்கிற விப்பாசுரத்தை யநுஸந்திப்பதென்று பட்டர் நியமனம். (எ)

3333 நோலாதாற்றேனுனபாதம் காணவேன்றுநுண்ணுணர்வின் *
நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனுமிந்திரனும் *
சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்பும் திருவேங்கடத்தானே! *
மாலாய்மயக்கியடியேன்பால் வந்தாய்போலேவாராயே. (அ)

| | |
|---|---|
| நுண் உணர்வின் | (ஸர்வஜ்ஞதையாலே) நுட்பமான உணர்வையுடையனான |
| நீலார் கண்டத்து அம்மானும் | சிவபிரானும் |
| நிறை நான் முகனும் | (ஞான சக்திகளால்) நிறைந்த பிரமனும் |
| இந்திரனும் | தேவேந்திரனும் |

| | |
|---|---|
| உன பாதம் காண நோலாது ஆற்றேன் என்று | "உன் திருவடிகளைக் காண்கைக்கு ஸாதநாநுஷ்டானம் பண்ணாதேயிருந்து ஆற்ற மாட்டுகின்றிலேன்" என்று சொல்லிக் கொண்டு |
| சேல் ஏய் கண்ணார் பலர் சூழ | கயற் கண்ணிகளான தங்கள் மனைவிமார்கள் பலரோடுங் கூடிவந்து |

| | | | |
|---|---|---|---|
| விரும்பும் | விரும்பிப் பணியுமிடமான | மால் ஆய் மயக்கி வந்தாய்போலே | மயக்கிக்கொண்டு கண்ணனாக வந்தாப் போலே |
| திருவேங்கடத்தானே-திருமலையில் வாழ்பவனே ! | | அடியேன் பால் வாராய் | அடியேன் திறத்தும் வந்து தோற்றவேணும். |

* * * ஸாதநாநுஷ்டானம் என் பக்கலில் ஒன்றுமில்லையென்று சொல்லிக் கொண்டே ஆசைப்பட்டு நாக்கு நீட்டினால் கிடைக்குமோ? என்று எம்பெருமான் திருவுள்ளமாக, ஜ்ஞாந சக்திகளால் குறையற்றவர்களான நீலகண்ட சதுர்முக ஸஹஸ்ராக்ஷ ப்ரப்ருதிகளுங் கூடத் தங்களுடைய உபாய தாரித்ர்யத்தைச் சொல்லிக் கொண்டன்றோ வந்து உன்னைக் காணப் பெறுகிறது என்கிறார். "கோலாதாற்றேனுன பாதங்காண" என்பது—நீலார் கண்டத்தம் மானும் நிறைநான்முகனு மிந்திரனும் சொல்லும் பாசுரமாயிற்று. 'பிரானே! உன் திருவடிகளைக் காண்கைக்கு ஸாதநாநுஷ்டானம் பண்ணாதே யிருந்து வைத்து உன்னையொழிய ஆற்ற மாட்டேன்' என்பதாம் அந்தத் தேவர்களின் வார்த்தை. சேலேய்கண்ணார் பலர் சூழ விரும்பும்—கயல்போன்ற கண்களையுடையவர்களென்று ஸத்ரீகளைச் சொல்லுகிறது; ப்ரக்ருதத்தில் அவரவர்களுடைய பத்நிகளைச் சொல்லிற்றாகிறது; தேவர்கள் வந்து சரணம் புகும்போது தாங்கள் தனித்து வருகையன்றிக்கே மனைவிமார்களோடு கூடி வருவர்களாம்.

மாலாய் மயக்கி அடியேன்பால் வந்தாய்போலே வாராய்—மாலாய் மயக்கி வந்தாய் போலே அடியேன்பால் வாராய் என்று அந்வயிப்பது. மால் என்று கண்ணபிரானைச் சொல்லுகிறது. கண்ணபிரானாய்ப் பிறந்து வியாமோஹ சேஷ்டிதங்களைச் செய்து வஸுதேவாதிகள் முன்னே வந்து நின்றாப்போலே என்முன்னே வந்து நிற்கவேணுமென்று பிரார்த்தித்தபடி. (அ)

3334 வந்தாய்போலேவாராதாய் வாராதாய்போல்வருவானே *
சேந்தாமரைக்கண்செங்கனிவாய் நால்தோளமுதே! யெனதுயிரே! *
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய் திருவேங்கடத்தானே! *
அந்தோவடியேனுனபாதம் அகலகில்லேனிறையுமே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| வந்தாய் போலே வாராதாய் | கைக்கு எட்டினாற் போலே யிருந்து எட்டாதவனே ! | எனது உயிரே | எனக்கு உயிரானவனே ! |
| வாராதாய் போல் வருவானே | எட்டாதவன் போலிருந்து கிட்டி நிற்பவனே ! | சிந்தாமணிகள் பகர் | சிறந்த ரத்னங்களின் ஒளியானது |
| செம் தாமரை கண் | செந்தாமரை போன்ற திருக்கண்களையும் | அல்லை பகல் செய் | இரவையும் பகலாக்குமிடமான |
| செம் கனி வாய் | செங்கனி போன்ற திருப்பவளத்தையும் | திருவேங்கடத்தானே | திருமலையில் வாழ்பவனே ! |
| நால் தோள் | நான்கு திருத்தோள்களையுமுடைய | அந்தோ | ஐயோ ! |
| அமுதே | பரம போக்யனே ! | உன பாதம் | உனது திருவடிகளை |
| | | அடியேன் | அருமைச் சுவடறிந்த நான் |
| | | இறையும் அகல கில்லேன் | ஒரு க்ஷணகாலமும் பிரிந்திருக்க வல்லேனல்லேன். |

* * * தம்முடைய விச்லேஷ வ்யஸநத்தைக் கனக்க அருளிச் செய்கிறார். வந்தாய் போலே வாராதாய்—மாநஸாநுபவம் கரைபுரண்டு போகும்போது நோக்கினால் பாஹ்ய ஸம்ச்லேஷமும் பெற்றோம் என்றெண்ணி த்ருப்தி பிறக்கும்படியா யிருக்குமே; அத்தை மெய்யென்றெண்ணி அணைக்கைக்குக் கைநீட்டினால் கைக்கு எட்டாதபடியன்றோ இருப்பது; அதைச் சொல்லுகிறது இங்கு. வாராதாய் போல் வருவானே!—வந்து தோற்றுகைக்கு ப்ரஸக்தியில்லையென்று நிச்சயித்து ஆசையற்றுக் கிடக்குங்கால், கேட்பாரற்ற ஸ்வாதந்த்ரியத்தாலும் அப்ரதி

ஹாத ஸங்கல்பத்தாலும் ஆகஸ்மிகமாக வந்து நிற்பது முண்டே பகவானிடத்தில்; அதைச் சொல்லுகிறது.

[சிந்தாமணிகள் இத்யாதி] நெஞ்சால் நினைத்தவாறே எதையும் அளிக்கவல்ல ரத்னத் திற்குச் சிந்தாமணி யென்று பெயர். அதுபோற் சிறந்த ரத்னங்களை இங்குச் சிந்தாமணி களென்கிறது. திருமலையிலுள்ள ரத்னங்களைச் சொன்னதாகவுமாம்; திருவேங்கடமுடை யானுடைய திருமேனியிலணிந்துள்ள ரத்னங்களைச் சொன்னதாகவுமாம். அவற்றினுடைய பகர்—ஒளியானது, அல்லைப் பகல் செய்யநின்றதாம்; எப்போதும் பகலாகவே காண்கிற தாயிற்று. (௯)

3335 அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா! *
நிகரில்புகழாயுலகம்மூன்றுடையாய்! என்னையாள்வானே! *
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே! *
புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழ்மர்ந்துபுகுந்தேனே. (௰)

| | |
|---|---|
| அலர்மேல் மங்கை | பூவில் வாழ்மகளான பெரிய பிராட்டியார் |
| இறையும் அகலகில்லேன் என்று | ஒரு க்ஷணமும் பிரிந்திருக்கமாட்டேனென்று சொல்லிக் கொண்டு |
| உறை மார்பா | நித்யவாஸம் பண்ணப் பெற்ற திருமார்வை யுடையவனே! |
| நிகர் நில் புகழாய் | ஒப்பற்றதான புகழை யுடையவனே! |
| உலகம் மூன்று உடையாய் | சேதநாசேதநங்களுக்கெல்லாம் ஸ்வாமியே! |
| என்னை ஆள்வானே | நீசனான என்னையு மடிமை கொள்பவனே! |
| நிகர் இல் | ஒப்பற்றவர்களான |
| அமரர் | தேவர்களும் |
| முனி கணங்கள் | மஹர்ஷி ஸமூஹங்களும் |
| விரும்பும் | விரும்பிவந்து பணியுமிடமான |
| திருவேங்கடத்தானே | திருமலையில் வாழ்பவனே! |
| புகல் ஒன்று இல்லா அடியேன் | அநந்யகதியான நான் |
| உன் அடி கீழ் | உனது திருவடி வாரத்திலே |
| அமர்ந்து புகுந்தேன் | மிகப் பொருத்தமாக அந்வயித்து விட்டேன். |

*** [அகலகில்லேன்.] கீழ் ஒன்பது பாட்டாலும் சரண்யனை ஸர்வேச்வரனு டைய ஸ்வரூபத்தையும் தம்முடைய ஆற்றாமையையும் சொன்னார்; இப்பாட்டில், தம்முடைய அபேக்ஷிதம் சடக்கெனஸித்திக்கைக்காகப் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட் டுக்கொண்டு தம்முடைய ஆகிஞ்சந்யத்தையும் அநந்யகதித்வத்தையும் தெரிவித்துக்கொண்டு திருவேங்கடமுடையான் திருவடிகளிலே சரணம் புகுகிறார்.

எம்பெருமானுடைய திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுநின்ற பெரிய பிராட்டியார் 'இறையும் அகலகில்லேன், இறையும் அகலகில்லேன்' [ஒரு கணப்பொழுதும் பிரிந்திருக்கமாட் டேன்] என்று இதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருக்கிறாளாம். ஒரு நிமிஷ மும் பிரியாதே நித்ய ஸம்ச்லேஷத்துடனிருக்கும்போது அகலுகைக்கு ப்ரஸக்திதானுமில்லையா யிருக்க இந்த வார்த்தை எதற்காகச்சொல்லவேணுமென்னில், போக்யதையின் கனத்தைப் பார்த்தவாறே ஐயோ! அகல நேர்ந்துவிடுமோ என்னவோவென்று அதிசங்கையுண்டாகக் கூடியது; அவ்வதி சங்கை சொல்லுவிக்கச்சொல்லுகிறபடியென்ப.

உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேன்—ஆக இவ்வளவாலும் த்வயத்தில் பூர்வ கண்டம் அநு ஸந்திக்கப்பட்டதாயிற்று. ப்ரபத்தியானது வாசிகமாகவும் காயிகமாகவும் உண்டு. 'என்னை நீ ரக்ஷிக்கவேணும்' என்று வாயினால் பிரார்த்திக்கை வாசிகமாகும். *அஞ்ஜலி: பரமா முத்ரா

க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ* என்கிறபடியே பகவத் ப்ரஸாத ஹேதுபூதமான அஞ்ஜலியை ப்ரயோகித்தல், காகாசுரன் முதலானுரைப்போலே ரக்ஷகவஸ்து இருந்தவிடத்தே வருதல் செய்கை காயிகமாகும். திண்ணிய அத்யவஸாயங் கொள்ளுதல் மாநஸிகமாகும். *ஜ்ஞாநாந் மோக்ஷ மென்று சொல்லுகையாலே மாநஸிகமே சிறந்ததாகும். அதுவே இங்கு உற்றது. அஸ்மதாதிகளுடைய உஜ்ஜீவநார்த்தமாக ஆழ்வார் பாசுரமிட்டு அருளிச்செய்த வித்தனை; இதனுல் ஆழ்வாருடைய ப்ரபத்தி வாசிகமென்று கொள்ளக்கடவதன்று.

3336 * அடிக்கீழமர்ந்துபுகுந்து அடியீர்! வாழ்மினேன்றேன்றருள்கோடுக்கும் *
பாடிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சோன்னவாயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும் *
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பேரியவானுள்நிலாவுவரே. (கக)

அடியீர் — அடியவர்களே !

அடி கீழ் அமர்ந்து புகுந்து வாழ்மின் என்று என்று — 'நம்முடைய திருவடிகளின் கீழே புகுந்திருந்து உஜ்ஜீவித்துப் போருங்கள்' என்று அநவரதமும் காட்டிக் கொடுத்து.

அருள் கொடுக்கும் — க்ருபை பண்ணுகிறவனும்

படி கேழ் இல்லா பெருமானை — ஒப்புயர்வற்ற பெருமை வாய்ந்தவனுமான ஸர்வேச்வரனைக் குறித்து

பழனம் குருகூர் சடகோபன் — நீர்நிலங்களை யுடைய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார்

முடிப்பான் சொன்ன — ஸம்ஸாரத்தை முடிப்பதற்காக அருளிச்செய்த

ஆயிரத்து — ஆயிரத்தினுள்ளும்

திருவேங்கடத்துக்கு இவைபத்தும் — திருவேங்கடமலை விஷயமான இத்திருவாய்மொழியை

பிடித்தார் பிடித்தார் — ஸாக்ஷாத்தாகவும் பரம்பரையாகவும் அவலம்பித்தவர்கள்

பெரிய வானுள் — பரமாகாசமென்கிற பரமபதத்திலே

வீற்றிருந்து நிலாவுவர் — நிலை நின்று வீற்றிருப்பார்கள்.

* * * இத்திருவாய்மொழியைப் பற்றினவர் திருநாட்டிலே நித்யாநுபவம் பண்ணப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகின்ருர். எம்பெருமானுடைய திருக்கையானது திருவடியை நோக்குமாபோலே யிருப்பதுண்டே; அதற்கொரு கருத்துக் காணலாம்; "அடியவர்களே! உங்களுக்கு இந்தத் திருவடியே தஞ்சம்; இதன்கீழே அமர்ந்து புகுந்து வாழ்ந்து போங்கள்" என்று தெரிவிப்பதாகக் கருத்துக்கொள்ளலாம்; அதனை இங்கு முதலடியில் காட்டியருளுகிருர். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே * கிரீடம் ஸ்ரீரங்கே சயிது: * என்கிற ச்லோகத்தில், *நிஹீநாநாம் முக்க்யம் சரணமிதி பாஹுஸ்ததிதர: ஸ்புடம் ப்ரூதே பாதாம் புஜயுகளம் ஆஜாநு நிஹித: * என்றருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம்.

முடிப்பான் சொன்னவாயிரம்—தம்முடைய மநோரதத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக அருளிச்செய்த ஆயிரமென்று உரைத்தார்கள் சில ஆசாரியர்கள்; "* பல நீ காட்டிப் படுப்பாயோ என்கிற ஸம்ஸார விரோதத்தை முடிக்கையிலே திருவுள்ளத்தாலே அருளிச் செய்த வாயிரம்" என்பர் நம்பிள்ளை.

திருவேங்கடத்துக்கு இவைபத்தும்—* வான் திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ் மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும் * என்ற திருவாய்மொழித் தனியன்படியே ஆயிரமும் ஸ்ரீ ரங்கநாதன் விஷயமாக ஸங்கல்பிக்கப்பட்டு அதில் இத்திருவாய்மொழி திருவேங்கடத்துக்குப் பகுத்துக் கொடுக்கப்பட்ட தென்பது நன்கு அறியக்கிடக்கின்றது.

'பிடித்தார் பிடித்தார்' என்ற இரட்டிப்புக்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவர்; (1) சொல்லைப் பற்றினவர்கள். (2) பொருளைப் பற்றினவர்கள் என்று ஒரு நிர்வாஹம். பிடித்தாரைப் பிடித்தவர்கள் என்றபடியாய் ஸம்பந்த ஸம்பந்த ஸம்பந்திகளைச் சொன்னதாக மற்ருெருநிர்வாஹம். [ஆழ்வார் திருவடிகளே சரணம்.] (கக)

# ஏழாம்பத்து முதல்திருவாய்மொழி—உண்ணிலாவிய.

இந்த ப்ராக்ருத மண்டலத்திலே யிருந்தால் என்ன அநர்த்தம் விளையுமோ என்கிற அச்சம் மேலிட்டு ஓலமிடுகிறார் இத்திருவாய்மொழியில்.

3337 * உண்ணிலாவியவைவரால்குமைதீற்றி என்னையுன்பாதபங்கயம் *
நண்ணிலாவகையே நலிவானின்னமெண்ணுகின்றாய் *
எண்ணிலாப்பெருமாயனேயிமையோர்களேத்தும் உலகம்மூன்றுடை *
அண்ணலேயமுதேயப்பனே என்னையாள்வானே! (க)

| பதம் | பொருள் |
|---|---|
| எண் இலா பெரு மாயனே | அளவிடமுடியாத ப்ரக்ருதி தத்வத்தை உபகரணமாக வுடையவனே! |
| இமையோர்கள் ஏத்தும் | தேவர்களாலே துதிக்கப்படுபவனும் |
| உலகம் மூன்று உடை | மூவுலகங்களையும் சேஷமாக வுடையனுமான |
| அண்ணலே | ஸ்வாமியே! |
| அமுதே | பரம போக்யனே! |
| அப்பனே | மஹோபகாரங்கள் செய்பவனே! |
| என்னை ஆள்வானே | என்னை நிர்வஹித்துக் கொண்டு போருமவனே! |
| என்னை | அடியேனை |
| உள்நிலாவிய ஐவரால் குமைதீற்றி | உள்ளே நிரந்தர வாஸம் பண்ணுகின்ற பஞ்சேந்திரியங்களாலும் நலிவுறும்படி பண்ணி |
| உன்பாதபங்கயம் | உனது திருவடித் தாமரைகளை |
| நண்ணிலா வகையே | கிட்டாதபடியாகவே |
| இன்னம் நலிவான் | இன்னும் ஹிம்ஸிப்பதாக |
| எண்ணுகின்றாய் | எண்ணியிருக்கிறாய்போலும். |

* * * பிரானே! உன் திருவடிகளையே சரணமாகப்பற்றின வென்னை இந்திரியங்களை யிட்டு நலியப் பார்க்கிறாயே! இது தகுதியோ? என்கிறார். பகைவர் பாஹ்ய சத்ருக்களென்றும் ஆந்தரசத்ருக்களென்றும் இருவகைப்படுவர்; ஆயுதங்களாலே நமது உடலுக்கு நலிவை விளைக்கும் பகைவர் பாஹ்ய சத்ருக்களாவர். அப்படியன்றிக்கே கண்ணுக்குத் தெரியாதபடி உள்ளேயிருந்துகொண்டே நலிகின்ற பஞ்சேந்திரியங்கள் ஆந்தர சத்துருக்களெனப்படும்; இத்தன்மையை 'உண்ணிலாவிய வைவரால்' என்று ஆழ்வார் தெரிவிக்கின்றார். அசேதநங்களான இந்த்ரியங்களை 'ஐந்தால்' என்று சொல்லவேண்டுமிடத்து 'ஐவரால்' என்றது—இந்த்ரியங்களானவை அசேதனங்களைப் போலன்றிக்கே சேதநர்கள் போலவே நின்று நலியுந் தன்மையைப் பற்ற. திருமங்கையாழ்வாரும் "உடனின்று ஐவரென்னுள் புகுந்து" என்றருளிச் செய்தது காண்க. குமைதீற்றி—குமைக்கும்படி பண்ணி; குமைத்தலாவது ஸஹிக்க வொண்ணாதபடி ஹிம்ஸித்தல். இந்திரியங்கள் ஹிம்ஸித்தால் அதற்காக எம்பெருமானை நொந்து பேசலாமோ வென்னில்; எம்பெருமானுக்கு ஹ்ருஷீகேசனென்று ஒரு திருநாம முண்டு; ஹ்ருஷீகமென்று இந்திரியங்களுக்குப் பெயர்; அவை தானிட்ட வழக்காம்படியிருப்பவன் என்பது பற்றியே ஹ்ருஷீகேசனென்று திருநாமமாயிற்றென்பதை ஆழ்வார் தாம் அறிந்தவராதலால் இங்ஙனே சொல்லுகிறார்போலும். பிரானே! உனக்கு விதேயமல்லவோ அவை; நீ நியமித்தால் கேளாவோ அவை; நீயேயன்றோ அவற்றை ஏவி நலிகின்றாய் என்கிறார். தமக்கு நலிவாவது இன்னதென்பதைக் காட்டுகிறார் "உன் பாத பங்கயம் நண்ணிலா வகையே" என்று. திருவடிகளைக் கிட்டாதொழிகையே இவ்வாத்மாவுக்கு நலிவு என்றிருக்கிறார். நலிவான் இன்ன மெண்ணுகின்றாய்—* அகலகில்லே னிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா! உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே * என்றபின்பும் என்னை இங்ஙனம் நலியப் பார்க்கிறாயே, இது தருமமோ! என்கிறார். (க)

3338 என்னையாளும்வன்கோவோரைந்திவைபெய்து இராப்பகல்மோதுவித்திட்டு *
உன்னைநானணுகாவகை செய்துபோதிகண்டாய் *
கன்னலேயமுதேகார்முகில்வண்ணனே கடல்ஞாலம்காக்கின்ற *
மின்னுநேமியினாய் வினையேனுடைவேதியனே! (உ)

| | |
|---|---|
| கன்னலே அமுதே | பரமபோக்யனே ! |
| கார் முகில் வண்ணனே | காளமேக நிறத்தனே! |
| கடல் ஞாலம் காக்கின்ற | கடல் சூழ்ந்த வுலகங்களை ரக்ஷித்தருள்கின்ற |
| மின்னு நேமியினாய் | உஜ்ஜ்வலமான திருவாழியை யுடையவனே ! |
| வினையேனுடை வேதியனே | பாவியேனான என் திறத்திலே எட்டாதபடி வேத வேத்யனாயிருக்குமவனே ! |
| என்னை ஆளும் வன் கோ ஓர் ஐந்து இவை பெய்து | என்னை அடிமை கொள்ளுகிற கொடிய அரசர்கள் போன்ற இந்த பஞ்சேந்த்ரியங்களை ஏவி வைத்து |
| இராப் பகல் | இரவும் பகலும் |
| மோதுவித்திட்டு | பீடிக்கச் செய்து |
| நான் உன்னை அணுகா வகை | நான் உன்னைக் கிட்டாதபடி |
| செய்து போதி கண்டாய் | பண்ணிப்போருகிறாய். |

*** எலியெலும்பனான வென்னை இந்திரியங்களாலே நோவுபடுத்தி அந்த நோவை அறிவிக்க முடியாதபடி கடக்க நிற்கிறாயே! என்கிறார். ஈச்வரன் ஸர்வ சேஷியா யிருப்பவன்; அவனுக்கு ஜீவாத்மா அடிமைப்பட்டிருப்பன்; அவனுக்கு மனஸ்ஸு விதேயமாயிருக்கும்; மனஸ்ஸுக்கு இந்திரியங்கள் சேஷமாயிருக்கும்—என்றிப்படி ஒரு முறையுண்டு; இந்த முறை கெட்டு என்னை இந்திரியங்கள் ஆளும்படியாவதே! என்கிற பரிதாபத்தைக் காட்டுகிறார் "என்னையாளும் வன்கோ ஓரைந்திவை" என்பதனால். இந்திரியங்களுக்கு நான் ஆட்பட்டு அவற்றின் வழியே ஒழுகவேண்டும்படியான நிலத்திலே என்னை வைத்தாயே! என்று நொந்து சொல்லுகிறது. இப்பாட்டின் முதலடியைத் திருவுள்ளம்பற்றியே மங்கையர்கோன் தமது திருமொழியில் * கோவாய் ஐவரென் மெய்குடியேறிக் கூறை சோறிவைதா வென்று குமைத்துப் போகார், நானவரைப் பொறுக்ககிலேன் * (7-7-9) என்றருளிச் செய்தார். (உ)

3339 வேதியாநிற்குமைவரால் வினையேனைமோதுவித்து * உன் திருவடிச்
சாதியாவகை நீதடுத்தேன்பெறுதியந்தோ *
ஆதியாகியகலிடம்படைத்து உண்டுமிழ்ந்துகடந்திடந்திட்ட *
சோதிநீண்முடியாய்! தொண்டனேன்மதுசூதனனே! (ங)

| | |
|---|---|
| ஆதி ஆகி | காரணபூதனாய்க்கொண்டு |
| அகல் இடம் படைத்து | விஸ்தாரமான ஜகத்தை ஸ்ருஷ்டித்து |
| உண்டு | (பிரளயத்திலே) வயிற்றிலே வைத்து நோக்கி |
| உமிழ்ந்து | பிறகு வெளிபடுத்தி |
| கடந்து | (ஒருகால்) அளந்து |
| இடந்திட்ட | (வராஹரூபியாய்)இடந்தவனே! |
| சோதி நீள் முடியாய் | உஜ்ஜ்வலமாய் நீண்ட திருவபிஷேகத்தை யுடையவனே ! |
| தொண்டனேன் மதுசூதனனே | என்னை யீடுபடுத்திக்கொண்ட மதுசூதனனே ! |
| வினையேனை | பாவியான வென்னை |
| வேதியா நிற்கும் ஐவரால் | இடைவிடாதே நலியும் பஞ்சேந்திரியங்களாலே |
| மோதுவித்து | பீடிக்கச்செய்து |
| உன் திருவடி சாதியாவகை | உன் திருவடிகளைக் கிட்டாதபடி |
| நீ தடுத்து என் பெறுதி | நீ தடை செய்து என்ன பயன் பெற்றாயாகிறாய்; |
| அந்தோ | ஐயோ !. |

*** ஆழ்வீர்! உம்மை நான் இந்த ப்ரக்ருதியிலே வைத்தது ஒரு ப்ரயோஜனத்துக்காகக் காணும்' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, பிரானே! என்னை இப்படி நலிவித்து என்ன ப்ரயோஜனம் கொள்ளப் பார்க்கிறாய்? என்கிறார். 'வேதியாநிற்கும்' என்கிற சொல் 'வெய:' என்கிற வட சொல்லடியாகப் பிறந்தது. தசமீ வேயம், க்ருத்திகா வேயம் என்பது

முதலான வியவஹாரங்களில் வேயபதப்ரயோகம் காண்க. வேதமாவது அடித்தல்; ஹிம்ஸித்தலென்று தாற்பரியம். இடைவீடின்றிக் கொலை பண்ணுவதையே தொழிலாகவுடைய பஞ்சேந்திரியங்களினால் என்னை க்லேசப்படுத்தி உன் திருவடிகளுக்கு தூரஸ்தனாம்படி செய்துவைத்து என்ன ப்ரயோஜனம் பெறப் பார்க்கிறாயென்கிறார். (௫)

3340 சூதுநானறியாவகை சுழற்றியோரைவரைக்காட்டி * உன்னடிப்
போதுநானணுகாவகை செய்துபோதிகண்டாய் *
யாதும்யாவருமின்றிநின்னகம்பாலொடுக்கி ஓராலினீளிலை *
மீதுசேர்குழவி! வினையேன்வினைதீர்மருந்தே! (௬)

| | |
|---|---|
| யாதும் யாவரும் இன்றி | சேதநாசேதநப் பொருள்களொன்றொழியாமல் |
| நின் அகம் பால் ஒடுக்கி | உன் திருவயிற்றின் ஏக தேசத்திலே ஒதுங்கும்படி பண்ணி |
| ஓர் ஆலின் நீள் இலை மீது | ஓர் ஆலமரத்தினுடைய சிறிய இலையின் மீது |
| சேர் குழவி | குழந்தையாய்க் கண்வளர்ந்தருளினவனே ! |
| வினையேன் வினை தீர் மருந்தே | பாவியேனான வென்னுடைய பாவங்களைத் தீர்க்கும் மருந்தானவனே ! |
| ஓர் ஐவரை காட்டி | பஞ்சேந்திரியங்களைக் காட்டி |
| நான் சூது அறியா வகை | நான் உறுவது அறியாதபடி |
| சுழற்றி | என்னை மருளப்பண்ணி |
| உன் அடி போது நான் அணுகா வகை செய்து | உன் திருவடி மலர்களை நான் கிட்டாதபடி பண்ணி |
| போதி கண்டாய் | கண்காணாதபடி கடக்க நிற்கின்றாயே !. |

* * * பிரானே! உன் திருவடிகளைப் பெறுதற்கு உபாயம் உன் திருவடிகளே யென்றிருக்கிற இந்த என்னுடைய அறிவுங்கூட அழியும்படி இந்திரியங்களைக் கொண்டு என்னைக் கலக்கி உன் திருவடிகளைச் சேராதபடி பண்ணவா நினைத்திருக்கிறாய்? என்கிறார். சூது என்பதற்கு க்ருத்ரிமம் என்கிற பொருள் உலகில் ப்ரஸித்தமானாலும் அந்தப்பொருள் இங்கு விவக்ஷிதமன்று; * தொழக் கருதுவதே துணிவது சூதே * சூதாவதென்னெஞ்சத் தெண்ணினேன் * என்ற விடங்களில் போல இங்குப் பொருள் கொள்க. சூது—உறுவது. 'இவ்வாத்மாவுக்கு விஷயப்ராவண்யம் விநாச ஹேது, எம்பெருமானை யநுபவித்தலே உஜ்ஜீவநம்' என்றறிவதன்றோ உறுவது; அப்படி நான் அறியாதபடிக்கு சப்தாதி விஷயங்களைக் காட்டி பிரமிப்பித்து உன் திருவடிமலர்களை நான் கிட்டாதபடி பண்ணிக் கண்ணுக்குத் தோற்றாமே கடக்க நிற்கிறாயே! இது தகுதியோ வென்கிறார். (௬)

3341 தீர்மருந்தின்றியைந்துநோயடும் செக்கிலிட்டுத்திரிக்குமைவரை *
நேர்மருங்குடைத்தாவடைத்து நெகிழ்ப்பானொக்கின்றாய் *
ஆர்மருந்தினியாகுவார்? அடலாழியேந்தியசுரர்வன்குலம் *
வேர்மருங்கறுத்தாய்! விண்ணுளார்பெருமானேயோ! (௭)

| | |
|---|---|
| அடல் ஆழி ஏந்தி | தேசு பொருந்திய திருவாழியைக் கையிலே தாங்கி |
| அசுரர் வன் குலம் | அசுரர்களின் பிரபலமான கூட்டங்களை |
| மருங்கு வேர் அறுத்தாய் | பக்கவேரோடே அறுத்தவனே ! |
| ஓ விண்ணுளார் பெருமானே | ஓ நித்யஸூரிநாதனே! |
| தீர் மருந்து இன்றி | மாற்று மருந்தில்லாதபடி [அபரிஹார்யமாக] |
| ஐந்து நோய் அடும் | ஐந்து வகைப்பட்ட சப்தாதி விஷயங்களாகிற நோய்களாலே முடிக்கக் கடவதான |
| செக்கில் இட்டு | (சரீரமாகிற) செக்கிலே தள்ளி |
| திரிக்கும் ஐவரை | நெருக்குகிற பஞ்சேந்திரியங்களை |
| நேர் மருங்கு உடைத்தா அடைத்து | நேரிலும் பக்கங்களிலுமாக நிறுத்தி |
| நெகிழ்ப்பான் ஒக்கின்றாய் | நெகிழ விடுவான் போலேயிராநின்றாய்; |
| இனி மருந்து ஆகுவார் ஆர் | இனி மருந்தாகக் கூடியவர் யார் !. |

*** நான் ஒரு ஸமாதானம் செய்துகொள்ள முடியாதபடி விஷயங்களாலும் இந்திரியங்களாலும் என்னை நலிந்து நீ கை விட்டால் ரக்ஷகராவார் வேறு உளரோவென்கிறார். என்னை ஹிம்ஸிப்பவர்களும் ஐவர்; ஹிம்ஸைக்குப் பரிகரமான வஸ்துக்களும் ஐந்து என்கிறார். சப்தாதி விஷயங்களாகிற ஐந்து நோய்களாலே பஞ்சேந்திரியங்கள் நலிகின்றமையைச் சொன்னபடி. தீர்மருந்தின்றி என்றது—வேறொரு ப்ரதிக்ரியை பண்ணவொண்ணாதபடி என்றவாறு. ஸர்வசக்தியான ஸர்வேச்வரனாலும் போக்கப் போகாதவையாதலால் இங்ஙனே சொல்லுகிறது. சரீரத்தை இங்குச் செக்கு என்கிறது. செக்கானது சுழன்று கொண்டேயிருப்பதும், தன்னிடத்தில் வந்து விழுந்த எள் முதலிய வஸ்துக்களை ஒரு கணப்பொழுதில் உருமாய்க்குமதுமாயிருத்தலால் இது சரீரத்திற்குப் பொருத்தமான த்ருஷ்டாந்த மென்க.

நேர் மருங்கு உடைத்தா அடைத்து—நேர்—எதிர்; மருங்கு—பக்கம். என்னுடைய எதிரிடமும் பக்கவிடமும் இந்த ஐந்து சத்துருக்களை யுடைத்தாம்படி நெருக்கி என்றபடி. எங்குப் பார்த்தாலும் இவையேயாம்படி செய்து என்கை. இங்கே ஈடு;—"அபிமந்யு என்றொரு பாலனை நலிகைக்கு அதிரத மஹாரதர்களடங்கலும் சூழப் போந்தாப்போலே இந்திரியங்களைக் கையடைப்பாக்கி." (௫)

3342 விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையும்செறும் ஐம்புலனிவை *
மண்ணுளேன்னைப்பெற்றால் என்செய்யாமற்றுநீயும்விட்டால்? *
பண்ணுளாய்கவிதன்னுளாய் பத்தியினுள்ளாய்பரமீசனே! * வந்தேன்
கண்ணுளாய்நெஞ்சுளாய்! சொல்லுளாய்! ஒன்றுசொல்லாயே. (௬)

| | |
|---|---|
| விண் உளார் | விண்ணுலகில் உள்ளவர்களாய்க் கொண்டே |
| பெருமாற்கு | பராத்பரனான உனக்கு |
| அடிமை செய்வாரையும் | அடிமை செய்பவர்களான நித்யஸூரிகளையும் |
| மண்ணுள் | இந்நிலத்திலே |
| செறும் | மேலிட்டு நலியக்கூடிய |
| ஐம்புலன் இவை | இந்த பஞ்சேந்திரியங்கள் |
| என்னை பெற்றால் என் செய்யா | (இவற்றை வெல்லுதற்குரிய வலிமையற்ற) என்னிடம் வந்து சேர்ந்தால் இவை என்னதான் செய்யமாட்டா; |
| மற்று | அதற்குமேலே |
| நீயும் விட்டால் | சக்தனான நீயும் கைவிட்டால் |
| (என் செய்யா) | என்ன செய்யமாட்டா; [எதுவும் செய்யக்கூடுமன்றோ.] |

| | |
|---|---|
| பண் உளாய் | (என்னுடைய) ஆர்த்த ஸ்வரத்தை அறியுமவனே! |
| கவிதன் உளாய் | (என்னுடைய) ஆர்த்தியே வடிவெடுத்த சொற்களை யறியுமவனே! |
| பத்தியின் உள்ளாய் | என்னுடைய ஆற்றாமையை அறியுமவனே! |
| பரம் ஈசனே | பராத்பரனே! |
| என் கண் உளாய் நெஞ்சு உளாய் சொல் உளாய் | என்னுடைய கண்ணோடும் நெஞ்சோடும் வாகிந்திரியத்தோடும் வாசியற உள்ளே ஸந்நிதி பண்ணியிருப்பவனே! |
| வந்து | என்னளவில் வந்து |
| ஒன்று சொல்லாய் | (அபயமாக) ஒரு வார்த்தையருளிச் செய்யவேணும். |

*** நம்மிற் காட்டில் எவ்வளவோ மேம்பட்டவர்கள் என்று ப்ரஸித்திபெற்றவர்களையும் நலியக்கடவ இந்திரியங்கள் என்னை என்னபாடு படுத்தா? என்கிறார். விண்ணுளாருடைய பெருமானுக்கு அடிமைசெய்வாரையும் செறும் என்றும் பொருள்கொள்ளலாம்; விண்ணுளார்—விண்ணுலகத்திலே யிருப்பவர்களாய்க் கொண்டு, பெருமானுக்கு அடிமைசெய்வாரையும் செறும் என்றும் பொருள்கொள்ளலாம். அடிமை செய்வார் என்பதற்கு—அடிமை செய்ய ருசியுடையார் என்றும், அடிமைசெய்து கொண்டிருப்பவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். ஸ்வர்க்கலோக வாஸிகளான இந்திராதி தேவர்களைக் கொள்ளவுமாம்; பரமபத வாஸிகளான கருத்மான் முதலிய நித்யஸூரிகளைக் கொள்ளவுமாம். இரு வகுப்பினர் விஷயமாகவும் இரண்டு இதிஹாஸங்களை ஆசாரியர்கள் எடுத்துக்காட்டி இவ்வர்த்

தத்தை மூதலிக்கின்றார்கள். "மண்ணுளேன்னைப் பெற்றால்" என்ற சொல்நயத்தால் ஆழ்வார் தாம் விண்ணுளாரில் ஒருவர் என்பது தோன்றுமென்ப. (சு)

3343 ஒன்றுசொல்லியொருத்தினில்நிற்கிலாத ஓரைவர்வன்கயவரை *
என்றுயான்வெல்கிற்பன் உன்திருவருளில்லையேல்? *
அன்றுதேவரசுரர்வாங்க அலைகடலரவமளாவி * ஓர்
குன்றம்வைத்தவெந்தாய் கோடியேன்பருகின்னமுதே! (எ)

| | |
|---|---|
| அன்று | பண்டொரு காலத்திலே |
| தேவர் அசுரர் | தேவர்களும் அசுரர்களும் |
| வாங்க | வலிக்கும்படியாக |
| அலை கடல் | அலையெறிகிற கடலிலே |
| அரவம் அளாவி | வாசுகியென்கிற பாம்பைச்சுற்றி |
| ஓர் குன்றம் | மந்தர மலையை |
| வைத்த எந்தாய் | நாட்டின பெருமானே? |
| கொடியேன் பருகு இன் அமுதே | பாவியேனை நானும் பருகும்படியான இன்னமுதமே! |
| உன் திரு அருள் இல்லை ஏல் | உன்னுடைய கிருபை இல்லையாகில், |
| ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத ஓர் ஐவர் வன் கயவரை | ஆறியிருக்கமாட்டாத பஞ்சேந்திரியங்களாகிற பிரபலக் கொடியவர்களை |
| யான் என்று வெல்கிற்பன் | அடியேன் என்றைக்கு வெல்ல வல்லவனாவேன்? |

* * * அடியார்கட்கு அருந்தொழில் செய்தும் அபேக்ஷிதம் தலைக்கட்டுவதையே இயல்வாக வுடையனை உன்னுடைய கருணையில்லையாகில் பிரபலமான இந்திரியங்களை நான் வெல்லுவதென்றொரு பொருளுண்டோ வென்கிறார். ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத—ஒரு விஷயத்திலே சாபலத்தைப் பண்ணி அது கைபுகும்வரையில் அதிலே நிலைநில்லாத என்றபடி. ஒருத்து—ஒருமைப்பாடு. இன்—சாரியை; இல்—ஏழனுருபு. கயவர்—கொடியர். "ஓர் அர்த்தத்திலே நிற்கக் கடவதல்லாத" என்று ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்கையாலே அதற்கீடாக "ஒரத்தனில்" என்று பாடமிருக்கலாம் என்கிறார் ஒரு பெரியார். அர்த்தம் என்பது 'அத்தன்' என்று திரியலாம்; மகரனகரப்போலி. ஆனாலும் "ஒருத்து—ஒருமைப்பாடு" என்று வியாக்கியானங்கள் காண்கையாலே பாடத்திருத்தம் வேண்டாவென்க. (7)

3344 இன்னமுதெனத்தோன்றி ஓரைவர்யாவரையும்மயக்க * நீவைத்த
முன்னமாயமெல்லாம் முழுவேரரிந்து * என்னையுன்
சின்னமும்திருமூர்த்தியும் சிந்தித்தேத்திக்கைதொழவேயருளெனக்கு *
என்னம்மா! என்கண்ணா! இமையோர்தம்குலமுதலே! (அ)

| | |
|---|---|
| என் அம்மா | என் ஸ்வாமியே! |
| என் கண்ணா | எனக்கு எளியவனானவனே! |
| இமையோர் தம் குலம் முதலே | நித்யஸூரிகளின் திரளுக்குத் தலைவனே! |
| ஓர் ஐவர் | சப்தாதி விஷயங்கள் ஐந்தும் |
| இன் அமுது என தோன்றி | இனிய அமிருதம்போல் போக்யமாகத் தோன்றி |
| யாவரையும் மயக்க | எப்படிப்பட்டவர்களையும் மயக்கும்படியாக |
| நீ வைத்த | நீ உண்டாக்கி வைத்த |
| முன்னம் மாயம் எல்லாம் | அநாதியான ஸம்ஸாரத்தையெல்லாம் |
| முழுவேர் அரிந்து | வாஸனையோடே போக்கி |
| என்னை | அடியேனை |
| உன் சின்னமும் திரு மூர்த்தியும் | உனது அஸாதாரண லக்ஷணங்களான சங்கசக்ராதிகளையும் திவ்யமங்கள விக்ரஹத்தையும் |
| சிந்தித்து | நெஞ்சார நினைத்து |
| ஏத்தி | வாயாரத் துதித்து |
| கை தொழ | கையாரத் தொழும்படியாகப் பண்ணி |
| எனக்கே அருள் | எனக்கென்று விசேஷித்த க்ருபையைப் பண்ணவேணும். |

* * * எனக்குண்டான ப்ரக்ருதி ஸம்பந்தத்தையறுத்து, மனமொழி மெய்களாலே உன்னையே நான் நிரந்தரமாக அநுபவிக்கும்படி பண்ணியருளவேணுமென்கிறார். முன்னம் அநுபவிக்குங்காலத்தில் அமுதம்போல் பரமபோக்யமாகத் தோற்றுவதும், பிறகு பரிபாகத்

தில் விஷமாயிருப்பதும் சப்தாதி விஷயங்களுக்குண்டான இயல்பு. இங்கு "இன்னமுதெனத் தோன்றி" என்று முன்னம் தோன்றுகிற ரீதி மாத்திரமே சொல்லப்பட்டது; பரிணமத்தில் விஷமாகுமதென்னுமிடம் இங்குச் சொல்லிற்றில்லையேயாகிலும் அது சொற்போக்கில் அர்த்தாத்ஸித்தம். (ரு)

3345 குலமுதலடும்தீவினைக் கொடுவன்குழியினில்வீழ்க்குமைவரை *
வலமுதல்கெடுக்கும் வலமேதந்தருள்கண்டாய் *
நிலமுதலினியெவ்வுலகுக்கும் நிற்பனசெல்வனவென * பொருள்
பலமுதல்படைத்தாய் என்கண்ணா! என்பரஞ்சுடரே! (சு)

| | |
|---|---|
| நிலம் முதல் | பூமி முதலாக |
| இனி எவ்வுலகுக்கும் | மற்றும் ஸகல லோகங்களுக்கும் |
| நிற்பன செல்வன என | ஸ்தாவர ஜங்கம ரூபமான |
| பொருள் பல | பொருள்கள் பலவற்றையும் |
| முதல் படைத்தாய் | முன்னம் படைத்தவனே! |
| என் கண்ணா | என் கண்ணனே! |
| என் பரம் சுடரே | என் பரஞ்சோதி வடிவனே! |
| குலம் | குலத்தை |
| முதல் அடும் | வேரோடே முடிக்கவல்ல |
| தீவினை | பாபங்களை விளைக்கவல்ல |
| கொடு வன் குழியினில் | (சப்தாதி விஷயங்களாகிற) படுகுழியிலே |
| வீழ்க்கும் ஐவரை | தள்ளக்கூடிய பஞ்சேந்திரியங்களை |
| வலம் முதல் கெடுக்கும் வலமே | மூல பலத்தோடே முடிக்கும்படியான மிடுக்கை |
| தந்தருள் கண்டாய் | அநுக்ரஹித்தருளவேணும். |

* * * விஷயங்களிலே ஆத்மாவைத் தள்ளும் இந்திரியங்கள் என்னை நலியாதபடி பண்ணவேணும் என்று இரக்கிறார். குலமுதலடுந்தீவினை—ஒருவன் பாபம் அவனொருவனோடே போகையல்லாமல் குலமாக முதலற முடிக்க வல்லவையான பாவங்களை விளைக்கக் கூடியதாய், கொடியதாய், அநுபவித்து முடியவொண்ணாதபடியாயிருக்கிற குழியிலே தள்ளி ஹிம்ஸிக்கின்றவர்களாம் ஐவர்; அவர்கள் தாம் பஞ்சேந்திரியங்களென்று பேர்பெற்ற மஹாநுபாவர்கள். அந்தப் பெருமிடுக்காளருடைய மிடுக்கை முதலிலே முடிக்கக் கடவதான உன்னுடைய அநுக்ரஹத்தைப் பண்ணியருள வேணுமென்கிறாராயிற்று முன்னடிகளில். இங்குக் குழியென்றது சப்தாதி விஷயங்களை. இரண்டாமடியில் "வரமே தந்து" என்பது பாட பேதம். (சு)

3346 என்பரஞ்சுடரேயென்றுன்னையலற்றி உன்னிணைத்தாமரைகட்கு *
அன்புருகிநிற்குமதுநிற்கச் சுமடுதந்தாய் *
வன்பரங்களெடுத்தைவர்திசைதிசை வலித்தெற்றுகின்றனர் *
முன்பரவைகடைந்து அமுதம்கொண்டமூர்த்தியோ! (எ)

| | |
|---|---|
| முன் | முன்பொரு காலத்திலே |
| பரவை கடைந்து | கடலைக் கடைந்து |
| அமுதம் கொண்ட மூர்த்தி | அமுதத்தை யெடுத்து உதவிய ஸ்வாமியே!, |
| என் பரம் சுடரே என்று உன்னை அலற்றி | எனக்கு விதேயனான பரஞ்சோதியே! என்றிப்படி உன்னை நோக்கிக் கூப்பிட்டு |
| உன் இணை தாமரைகட்கு | உனது உபய பாதங்கள் விஷயத்திலே |
| அன்பு உருகி நிற்குமது நிற்க | அன்பினாலே உருகியிருக்க வேண்டியது ப்ராப்தமாயிருக்க |
| | (அதற்கு விரோதமாக) |
| சுமடு தந்தாய் | (சரீரமாகிற) சும்மாட்டைத் தந்தாயே!, (அதனால்) |
| வன் பரங்கள் எடுத்து | பிரபலமான விஷய பாரங்களைச் சுமத்தி |
| ஐவர் | பஞ்சேந்திரியங்கள் |
| திசை திசை | ஒவ்வொரு மூலையாக |
| வலித்து | இழுத்து |
| எற்றுகின்றனர் | பீடிக்கின்றனர். |
| ஓ | இது பொறுக்கமுடியவில்லையே. |

* * * பிரானே! உன் திருவடிகளிலே அடிமை செய்கைக்கு இடையூறாய் விஷயாநுபவங்களுக்குப் பாங்கான உடம்பை எனக்குத் தந்தாய்; அதுவே ஹேதுவாகப் பஞ்சேந்திரியங்களும் பொறுக்கவொண்ணாத ஹிம்ஸைகளைச் செய்கின்றன; அவற்றைப் பரிஹரித்தருள வேணும் என்று ஆர்த்தியோடே பெருமிடறு செய்து கூப்பிடுகிறார்.

மூன்றாமடி பரிதாபமே வடிவெடுத்தது. ஒரு எலியெலும்பன் தலையிலே அளவுகடந்த சுமையையெடுத்து வைத்துச் சிலர் சுற்றும் நின்று மூலைக்கொருவராக இழுத்தால் என்ன பாடு படலாகுமென்பது சொல்லப்போமோ? என்றால் தாங்கவொண்ணாத சுமையை என் தலைமேலே வைப்பது; ஒருவரிருவரன்றிக்கே ஐவர் வலிப்பது; அதுதானும் ஒருவழியாக வலிக்கையன்றிக்கே திசைதோறும் வலிப்பது; இப்படியானால் இது பொறுக்கக்கூடிய விஷயமோ பிரானே! என்கிறார். ஈற்றடியினால், அமுதம் கொடுப்பது சிலர்க்கு; விஷம் கொடுத்து உயிரை மாய்ப்பது சிலர்க்கு என்றிப்படி ஒரு விரதம் கொண்டிருக்கிறாயோ? என்று கேட்கிறபடி.(௰)

3347 * கொண்டமூர்த்தியோர்மூவராய்க் குணங்கள்படைத்தளித்துக்கெடுக்கும் * அப்
புண்டரீகக்கொப்பூழ்ப் புனற்பள்ளியப்பனுக்கே *
தொண்டர்தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன் சொல்லாயிரத்துளிப்பத்தும் *
கண்டுபாடவல்லார் வினைபோம்கங்குலும்பகலே. (கக)

| | | | |
|---|---|---|---|
| குணங்கள் கொண்ட | ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்களைக்கொண்ட | தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் | தாஸாநுதாஸரான ஆழ்வார் |
| மூர்த்தி ஓர் மூவர் ஆய் | மும்மூர்த்திகளுமாய் | சொல் ஆயிரத்துள் | அருளிச் செய்த ஆயிரத்தினுள் |
| படைத்து அளித்து கெடுக்கும் | ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகின்ற | இப் பத்தும் | இப் பத்துப் பாசுரங்களையும் |
| அப் புண்டரீகம் கொப்பூழ் | அப்படிப்பட்ட பத்மநாபனாய் | கங்குலும் பகலும் | ஸதாகாலமும் |
| புனல் பள்ளி அப்பனுக்கே | காரண ஜலத்திலே கண்வளர்ந்த பெருமானுக்கு | கண்டு பாடவல்லார் | பொருள்கண்டு பாடவல்லாருடைய |
| | | வினை போம் | பாவங்கள் தொலைந்துபோம். |

* * * "கொண்ட மூர்த்தியோர் மூவராய்க் குணங்கள்" என்றதை "குணங்கள் கொண்டமூர்த்தியோர் மூவராய்" என்று அந்வயித்துக் கொள்வது. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற மூன்று குணங்களுக்கும் தகுதியாக மூன்று திருக்கோலங்களைப் பரிக்ரஹித்தான் எம்பெருமான். ஸத்வகுணங் கொண்ட மூர்த்தி—தானான மூர்த்தி; ரஜோகுணங் கொண்ட மூர்த்தி—பிரமனான மூர்த்தி; தமோகுணங் கொண்ட மூர்த்தி—உருத்திரனான மூர்த்தி. பிரமனுக்கு அந்தர்யாமியாய்ப் படைத்தல் தொழிலைச் செய்தும், ருத்ரனுக்கு அந்தர்யாமியாய் ஸம்ஹாரத் தொழிலைச் செய்தும், தானான தன்மையிலே நின்று காத்தல் தொழிலைச் செய்தும் போருமவன் என்கிறது முதலடி. (கக)

---

## ஏழாம்பத்து இரண்டாந் திருவாய்மொழி—கங்குலும் பகலும்.

தாய்பாசுரமாகச் செல்லுகிறதாயிற்று இத்திருவாய்மொழி. ஸ்ரீரங்கநாதன் திறத்திலே அதிமாத்ரமாக ஈடுபாடுகொண்ட ஆழ்வார் தமது நிலைமையைத் தம் வாயாலே பேசமாட்டாமல் தாய்வாயாலே பேசுகிறாராயிற்று.

3348 கங்குலும்பகலும்கண்டுயிலறியாள் கண்ணநீர்கைகளாலிறைக்கும் *
சங்குசக்கரங்களென்றுகைகூப்பும் தாமரைக்கண்ணென்றேதளரும் *
எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னும் இருநிலம்கைதுழாவிருக்கும் *
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்கின்றாயே. (க)

| | |
|---|---|
| செம் கயல் பாய் நீர் திரு அரங்கத்தாய் | அழகிய மீன்கள் துள்ளி விளையாடுமிடமான திருக்காவேரி சூழ்ந்த கோயிலில் சயனித்தருள்பவனே! |
| | (இப்பெண்பிள்ளையானவள்) |
| கங்குலும் பகலும் | இரவும் பகலும் |
| கண் துயில் அறியாள் | கண்ணுறங்கப் பெறுகின்றிலள்; |
| கண்ண நீர் கைகளால் இறைக்கும் | கண்ணீரைக் கைகளாலே இறைக்க வேண்டும்படி தாரை தாரையாய்ப் பெருக விடா நின்றாள்; |
| சங்கு சக்கரங்கள் | திருவாழி திருச்சங்குகள் இதோ ஸேவை ஸாதிக்கின்றன |
| என்று கை கூப்பும் | என்று சொல்லி அஞ்ஜலி பண்ணி நின்றாள்; |
| தாமரை கண் என்றே தளரும் | (என்னைக் கடாக்ஷித்த) தாமரைக் கண்களன்றோ இவை! என்று சொல்லித் தளர்கின்றாள்; |
| உன்னை விட்டு எங்ஙனே தரிக்கேன் என்னும் | '(ப்ரானே) உன்னைவிட்டுப் பிரிந்து தரிக்கவும் முடியுமோ?' என்கின்றாள்; |
| இரு நிலம் | விஸ்தீர்ணமான பூதலத்தை |
| கை துழாவிருக்கும் | கைகளாலே துழாவா நின்றாள்; (ஸ்ரீ ரங்கநாதனே!) |
| இவள் திறத்து | இப்பெண்பிள்ளை விஷயத்தில் |
| என் செய்கின்றாய் | ஏது செய்வதாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறாய்! |

*** ஸ்ரீ ரங்கநாதனே! இப்பராங்குசநாயகி உன்னைக் காணவாசைப்பட்டு அது பெருமையாலே கண் துஞ்சாதே கண்ணீரைப் பெருக்கிக்கொண்டிரா நின்றாள்; பாவநாப்ரகர்ஷத்தாலே உன்னை நேரில் ஸேவிக்கப்பெற்றதாகக்கொண்டு சங்குசக்கரங்களைநோக்கிக் கை கூப்புகின்றாள்; இவையன்றோ என்னைக் கடாக்ஷித்தருளி இப்பாடுபடுத்தின தாமரைக்கண்கள்' என்று சொல்லி, இப்போது ஸாக்ஷாத்தாகக் காணப்பெறவில்லையே! என்று நொந்து தளர்கின்றாள்; உன்னைப் பிரிந்து தரிக்கமுடியவில்லையே! என்கிறாள்; தன்னுடைய ஸந்தாபத்தைப் பொறுக்கமாட்டாமே தரையெல்லாம் கையாலே துழாவா நின்றாள்; திருவரங்கநாதனே! இவள் திறத்து உமது ஸங்கல்பம் எத்தகைத்தோ தெரியவில்லையே! என்று தாய் அலமருகின்ற பாசுரமாயிருக்கிறபடி. (க)

3349 என்செய்கின்றாயென்தாமரைக்கண்ணாவென்னும் கண்ணீர்மல்கவிருக்கும் *
என்செய்கேனெறிநீர்த்திருவரங்கத்தாயென்னும் வெவ்வுயிர்த்துயிர்த்துருகும் *
முன்செய்தவினையேமுகப்படாயென்னும் முகில்வண்ணாதகுவதோவென்னும் *
முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாய் என்கொலோமுடிகின்றதிவட்கே. (உ)

| | |
|---|---|
| | (இப் பெண்பிள்ளையானவள்) |
| என் தாமரை கண்ணா | என்னை யீடுபடுத்திக்கொண்ட செந்தாமரைக் கண்ணனே! |
| என் செய்கின்றாய் என்னும் | என்னை என் செய்வதாகவிருக்கிறாய்? என்று சொல்லுகின்றாள் |
| கண் நீர் மல்க இருக்கும் | கண்ணீர் ததும்பநின்று ஸ்தப்தையாயிருக்கின்றாள்; |
| எறி நீர் திரு அரங்கத்தாய் | அலையெறிகின்ற திருக்காவேரி சூழ்ந்த திருவரங்கத்தில் துயில்பவனே! |
| என் செய்கேன் என்னும் | (உன்னைப் பெறுதற்கு) என்ன செய்வேன்? என்கிறாள்; |
| வெவ்வுயிர்த்து உயிர்த்து | வெப்பமாகப் பலகாலும் பெருமூச்சுவிட்டு |
| உருகும் | கரைகின்றாள்; |
| முன் செய்த வினையே | முற்பிறவிகளிலே நான் பண்ணி வைத்த கருமமே! |
| முகப்படாய் என்னும் | என் கண்முன்னே வந்து நில் பார்ப்போம் என்கிறாள்; |
| முகில் வண்ணா | காளமேகவண்ணனை எம் பெருமானே! |
| இது தகவோ என்னும் | இதுதானோ உன்னுடைய க்ருபைக்கு லக்ஷணம்! என்கிறாள்; |
| இவ் உலகம் | இந்த ப்ரபஞ்சங்களையெல்லாம் |
| முன் செய்து | முற்காலத்தில் ஸ்ருஷ்டித்து |
| உண்டு உமிழ்ந்து | (காலவிசேஷங்களிலே) உண்பதும் உமிழ்வதும் செய்து |
| அளந்தாய் | அளப்பதும் செய்து பலமுகமாக ரக்ஷித்தருளும் பெருமானே! |
| இவட்கு | இங்ஙனே துடிக்கின்ற என் பெண்பிள்ளைக்கு |
| முடிகின்றது என்கொலோ | (இந்தப் பரிதாபமெல்லாம்) என்னை முடியப்போகிறதோ? |

*** எம்பெருமான் என்னை இப்படி உபேக்ஷிக்கும்படி நான் என்ன பாவம் பண்ணிவிட்டேன்? அப்படி நான் செய்த பாவம் ஏதேனுமுண்டாகில் அது என்னெதிரே வந்து

நிற்கட்டுமே யென்கிருளென்பது "முன்செய்தவினையே முகப்படாயென்னும்" என்றதன் கருத்தாம். "தகுவதோ" "தகவுஇதோ" என்பன பாடபேதங்கள். (உ)

3350 வட்கிலளிறையும்மணிவண்ணாவென்னும் வானமேநோக்கும்மையாக்கும் *
உட்குடையசுரருயிரெல்லாமுண்ட ஒருவனேயேன்னுமுள்ளுருகும் *
கட்கிலீயுன்னைக்காணுமாறருளாய் காகுத்தாகண்ணனேயென்னும் *
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தாய் இவள்திறத்தேன்செய்திட்டாயே. (ங)

(இப் பெண்பிள்ளை)

| | |
|---|---|
| இறையும் வட்கு இல்ள் | சிறிதும் வெட்கமில்லாதவளாகி |
| மணிவண்ணா என்னும் | நீலமணிவண்ணனே! என்று கூப்பிடா நின்றாள்; |
| வானமே நோக்கும் | (யானைக்கு உதவ வந்தாப்போலே நமக்கும் உதவவரக் கூடுமென்று) வானத்தையே நோக்குகின்றாள்; |
| மையாக்கும் | (எதிர்பார்த்தபடி வந்து தோன்றக் காணாமையினால்) மோஹமடைகின்றாள்; |
| உட்கு உடை அசுரர் | வலிமையுடையவர்களான அசுரர்களினுடைய |
| உயிர் எல்லாம் உண்ட | பிராணன்களை யெல்லாம் கவர்ந்த |
| ஒருவனேஎன்னும் | அத்விதீயனே! என்கின்றாள்; |
| உள் உருகும் | உள்ளம் நீர்ப்பண்டமாய் உருகப் பெறுகின்றாள்; |
| கட்கு இலீ | கண்களுக்கு விஷயமாகமாட்டாதவனே! |
| காகுத்தா கண்ணனே! | ஸ்ரீ ராம க்ருஷ்ணாவதாரங்கள் செய்து எல்லார் கண்ணுக்கும் விஷயமானவனே! |
| உன்னை காணும் ஆறு அருளாய் என்னும் | உன்னை நான் கண்ணாரக் காணும் விதம் அருளவேணுமென்கின்றாள்; |
| திண் கொடி மதிள் சூழ் திரு அரங்கத்தாய் | திடமான கொடிகள் விளங்கும் மதிள்களாலே சூழப்பட்ட திருவரங்கத்தில் துயிலும் பெருமானே! |
| இவள் திறத்து | இப்பெண்பிள்ளை விஷயமாக |
| என் செய்திட்டாய் | நீ செய்தது என்னே! |

3351 இட்டகாலிட்டகையளாயிருக்கும் எழுந்துலாமயங்கும்கைகூப்பும் *
கட்டமேகாதலென்றுமூர்ச்சிக்கும் கடல்வண்ணாகடியைகாணென்னும் *
வட்டவாய்நேமிவலங்கையாவென்னும் வடந்திடாயென்றேன்றேமயங்கும் *
சிட்டனேசெழுநீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தேன்சிந்தித்தாயே. (ச)

(இப் பெண்பிள்ளையானவள்)

| | |
|---|---|
| இட்ட கால் இட்ட கையள் ஆய் இருக்கும் | (சில் சமயங்களிலே) கையும் காலும் இட்டது இட்டபடியேயிரா நின்றாள்; |
| | (மற்றுஞ் சில சமயங்களிலே) |
| எழுந்து உலாம் | எழுந்து உலாவுகின்றாள்; |
| மயங்கும் | மயங்கா நின்றாள்; |
| கை கூப்பும் | (அப்படி மயங்கின தசையிலும்) கைகூப்புதல் தவிர்கின்றிலள்; |
| காதல் கட்டமே என்று மூர்ச்சிக்கும் | (பகவத் விஷயத்திலே) காதலைத் தாங்குவது வெகு கஷ்டமென்று சொல்லி மூர்ச்சையடைகிறாள்; |
| கடல் வண்ணா கடியை காண் என்னும் | கடல் வண்ணனே! என் விஷயத்தில் நீ கடுமைகொண்டிருக்கிறாயே! என்கிறாள்; |
| வட்டம் வாய் நேமி வலம் கையா என்னும் | வட்டமான விளிம்பையுடைய திருவாழியை வலத்திருக்கையிலுடையவனே! என்கின்றாள்' |
| வந்திடாய் என்று என்றே மயங்கும் | வாராய் வாராய் என்று பலகாலு மழைத்தும் வரக்காணாது மயங்குகின்றாள்; |
| சிட்டனே! | பரமபவித்திரனே! |
| செழு நீர் திரு அரங்கத்தாய் | நீர்வளம் பொருந்திய கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே! |
| இவள் திறத்து என் சிந்தித்தாய் | இப்பெண்பிள்ளை விஷயமாக நீ சிந்தித்திருப்பது என்ன?. |

3352 சிந்திக்கும்திசைக்கும்தேறும்கைகூப்பும் திருவரங்கத்துள்ளாயென்னும்
வந்திக்கும் * ஆங்கேமழைக்கண்ணீர்மல்க வந்திடாயென்றேன்றேமயங்கும் *
அந்திப்போதவுணனுடலிடந்தானே அலைகடல்கடைந்தவாரமுதே *
சந்தித்துன்சரணம்சார்வதேவலித்த தையலைமையல்செய்தானே. (ரு)

| | |
|---|---|
| அந்தி போது | மாலைப்பொழுதிலே |
| அவுணன் உடல் இடந்தானே | (நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி) இரணியனது உடலைப் பிளந்தவனே! |
| அலை கடல் கடைந்த ஆர் அமுதே | அலையெறிகின்றகடலை(த்தேவர்களுக்காக)க் கடைந்த ஆராவமுதமே! |
| சந்தித்து உன் சரணமே சார்வது வலித்த தையலை மையல் செய்தானே! | உன்னோடே கலந்து உன் திருவடிகளிலேயே லயிக்கவேணுமென்கிற திடமான அத்யவஸாயங்கொண்ட இப் பெண்பிள்ளையை மதி கெடுத்தவனே! |
| | (இப் பெண்பிள்ளையானவள்) |
| சிந்திக்கும் | (ஏற்கனவே விதிவசமாக நேர்ந்திருந்த கலவியைப்பற்றிச்) சிந்தனை செய்கின்றாள்; |
| திசைக்கும் | அறிவு அழியா நின்றாள்; |
| தேறும் | (திடீரென்று) தெளிவு பெறுகின்றாள்; |
| கை கூப்பும் | அஞ்சலி பண்ணா நின்றாள்; |
| திரு அரங்கத்து உள்ளாய் என்னும் | கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே! என்கிறாள்; |
| வந்திக்கும் | தலைவணங்கா நின்றாள்; |
| ஆங்கே | அவ்வளவிலே |
| மழை கண் நீர் மல்க | கண்ணீர் தாரை தாரையாகப் பெருகநின்று |
| வந்திடாய் என்று என்றே மயங்கும் | (எம்பெருமானே!) வாராய் வாராய் என்று பலகாலுஞ் சொல்லி (வரக் காணாது) மோஹிக்கின்றாள். |

3353 மையல்செய்தென்னைமனம்கவர்ந்தானேயென்னும் மாமாயனேயென்னும்
செய்யவாய்மணியேயென்னும் தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளாயென்னும் *
வெய்யவாள்தண்டுசங்குசக்கரம்வில்லேந்தும் விண்ணோர்முதலென்னும் *
பைகொள்பாம்பணையாயிவள்திறத்தருளாய் பாவியேன்செயற்பாலதுவே. (சு)

| | |
|---|---|
| | (இப் பெண்பிள்ளையானவள்) |
| என்னை மையல் செய்து | என்னை வியாமோஹப் படுத்தி |
| மனம் கவர்ந்தானே என்னும் | மனதைக் கொள்ளை கொண்டவனே! என்கிறாள்; |
| மா மாயனே என்னும் | மிகப்பெரிய மாயங்களை யுடையவனே! என்கிறாள்; |
| செய்ய வாய்மணியே என்னும் | சிவந்தஅதரசோபையை உடையையாய்க்கொண்டு நீலமணி போன்றவனே! என்கிறாள்; |
| தண் புனல் சூழ் திரு அரங்கத்து உள்ளாய் என்னும் | குளிர்ந்ததீர்த்தம் சூழ்ந்த கோயிலில் கண்வளர்ந்தருள்பவனே! என்கிறாள்; |
| வெய்ய வாள் தண்டு சங்குசக்கரம் வில் ஏந்தும் | (ஆச்ரித விரோதி விஷயத்தில்) வெப்பமே வடிவெடுத்த பஞ்சாயுதங்களைத் தரித்துக்கொண்டிருக்கிற |
| விண்ணோர் முதல் என்னும் | நித்யஸூரி நாதனே! என்கிறாள்; |
| பை கொள் பாம்பு அணையாய் | படமெடுத்த ஆதிசேஷன்மீது சயனித்தருள்பவனே! |
| இவள் திறத்து | இப் பெண்பிள்ளை விஷயமாக |
| பாவியேன்செயல் பாலது | பாவியேனான நான் செய்யக் கூடியது இருந்தால் அதை |
| அருளாய் | அருளிச்செய்யவேணும். |

*** இவள் விஷயத்தில் என்னால் செய்யத்தக்கது ஒன்றுமில்லையே! என்கிற கருத்தில் ஈற்றடி அமைந்தது. (சு)

3354 பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய் பற்றிலார்பற்றநின்றானே *
காலசக்கரத்தாய்கடலிடங்கொண்ட கடல்வண்ணாகண்ணனேயென்னும் *
சேல்கொள்தண்புனல்சூழ்திருவரங்கத்தாயென்னும் என்தீர்த்தனேயென்னும் *
கோலமாமழைக்கண்பனிமல்கவிருக்கும் என்னுடைக்கோமளக்கொழுந்தே. (எ)

| | |
|---|---|
| என்னுடை கோமளம் கொழுந்து | மிக மெல்லியலாளான என் மகள், |
| பால துன்பங்கள் இன்பங்கள் | அவ்வவ்விடங்களுக்குத் தகுதியாகத்துன்பங்களையும் இன்பங்களையும் |
| படைத்தாய் என்னும் | படைத்தவனே! என்கிறாள்; |
| பற்று இலார் பற்ற நின்றானே என்னும் | அசரண்ய சரண்யனே! என்கிறாள்; |
| கால சக்கரத்தாய் என்னும் | காலசக்ரத்திற்கு நிர்வாஹகனானவனே! என்கிறாள்; |
| கடல் இடம் கொண்ட கடல் வண்ணா என்னும் | திருப்பாற் கடலை இடமாகக் கொண்ட கடல் வண்ணனே, என்கிறாள்; |
| கண்ணனே என்னும் | ஸ்ரீ கிருஷ்ணா என்கிறாள்; |
| சேல் கொள் தண் புனல் சூழ் திரு அரங்கத்தாய் என்னும் | மீன்கள் நிரம்பிய குளிர்ந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலில் வாழ்பவனே! என்கிறாள்; |

என் தீர்த்தனே என்னும் — என்னைப் பவித்திரமாக ஆக்குமவனே! என்கிறாள்;

கோலம் மா மழை கண் பனி மல்க இருக்கும் — அழகு பொருந்திப் பெருத்துக் குளிர்ந்த கண்கள் நீர்பெருக நிற்கின்றாள்.

* * * என்னும் என்கிற வினைமுற்று ஒவ்வொரு விளியோடும் அந்வயிக்கவுரியது. "பாலதுன்பங்களின்பங்கள் படைத்தாய்" என்றதற்குப் பலவகையாகப் பொருள் கூறுவர். எம்பெருமானே! நீ உலகில் இன்பதுன்பங்களைப் படைக்குமிடத்து அவ்வவ்விடங்களுக்குத் தகுதியாகவன்றோ படைப்பது; என்றால் தாங்கவொண்ணாத துன்பத்தைப் படைத்திருக்கின்றாயே! இஃது உனக்குத் தகுதியோ? என்பதான கருத்தை முக்கியமாகக் கொள்க.

பால்—இடம்; பால— இடங்களுக்கேற்ப என்றவாறு. (எ)

3355 கொழுந்துவானவர்கட்கென்னும் குன்றேந்திக்கோநிரைகாத்தவனேனென்னும் *
அழுந்தொழுமாவியனலவெவ்வுயிர்க்கும் அஞ்சனவண்ணனேயென்னும் *
எழுந்துமேல்நோக்கியிமைப்பிலளிருக்கும் எங்ஙனேநோக்குகேனென்னும் *
செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாய் என்செய்கேனென்திருமகட்கே. (அ)

(இப்பெண் பிள்ளையானவள்)

வானவர்கட்கு கொழுந்து என்னும் — நித்ய ஸூரிகளுக்குத் தலையானவனே! என்கிறாள்;

குன்று ஏந்தி — கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்து நின்று

கோ நிரை காத்தவன் என்னும் — பசுக்களின் கூட்டத்தைக் காத்தருளினவனே! என்கிறாள்;

அழும் — கண்ணும் கண்ணீருமாயிருக்கின்றாள்;

தொழும் — அஞ்ஜலி பண்ணாநின்றாள்;

ஆவி அனல வெவ்வுயிர்க்கும் — ஆத்மவஸ்து கொளுந்தும்படி வெப்பமாகப் பெருமூச்சு விடாநின்றாள்;

அஞ்சனம் வண்ணனே என்னும் — அஞ்சனமேனியனே? என்கிறாள்;

(இக் கூக்குரலைக்கேட்டு எம்பெருமான் வரக்கூடுமென நினைத்து)

மேல் எழுந்து நோக்கி — மேலே தலையெடுத்துப் பார்த்து

இமைப்பு இலள் இருக்கும் — இமையாத கண்ணினளாய் இருக்கின்றாள்;

எங்ஙனே நோக்குகேன் என்னும் — எந்த ப்ரகாரத்தாலே உன்னைக் காண்பேன்? என்கின்றாள்;

செழு தடம் புனல் சூழ் திரு அரங்கத்தாய் — மிகச் சிறந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலிலே கண் வளர்ந்தருளுமவனே!

என் திரு மகட்கு — பிராட்டியோடொத்த என் பெண்மகள் விஷயத்திலே

என் செய்கேன் — எதைச் செய்வேன்?

3356 என்திருமகள்சேர்மார்பனேயென்னும் என்னுடையாவியேயென்னும் *
நின்திருவெயிற்றாலிடந்துநீகொண்ட நிலமகள்கேள்வனேயென்னும் *
அன்றுருவேழுந்தழுவிநீகொண்ட ஆய்மகளன்பனேயென்னும் *
தென்திருவரங்கம்கோயில்கொண்டானே தெளிகிலேன்முடிவிவள்தனக்கே. (கூ)

என் திரு மகள் சேர் மார்பனே என்னும் — எனக்குப் புருஷகார பூதையான பிராட்டி சேர்ந்த திருமார்பையுடையவனே! என்கிறாள்;

என்னுடை ஆவியே என்னும் — எனக்கு உயிராயிருப்பவனே! என்கிறாள்;

நின் திரு எயிற்றால் இடந்து நீ கொண்ட — உனது கோரப் பற்களாலே இடந்து ஏற்றுக்கொண்ட

நிலம் மகள் கேள்வனே என்னும் — பூமிப்பிராட்டிக்கு நாயகனே! என்கிறாள்;

அன்று — முன் பொருகால்

உரு ஏழும் — இடிபோன்ற குரலையுடைய ரிஷபங்களேழையும்

தழுவி — மதமொழித்து

நீ கொண்ட — மணந்துகொண்ட

ஆய் மகள் அன்பனே என்னும் — நப்பின்னைப் பிராட்டிக்கு ப்ரியனே! என்கிறாள்;

தென் திரு அரங்கம் கோயில் கொண்டானே — ஸ்ரீ ரங்கநாதனே!

இவள் தனக்கு — இவளுக்கு

முடிவு தெளிகிலேன் — ஆர்த்தி முடியுமாறு அறிகின்றிலேன்.

3357 முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும் மூவுலகாளியேயென்னும் *
கடிகமழ்கொன்றைச்சடையனேயென்னும் நான்முகக்கடவுளேயென்னும் *
வடிவுடைவானோர்தலைவனேயென்னும் வண்திருவரங்கனேயென்னும் *
அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள் முகில்வண்ணனடியே. (ம)

| | |
|---|---|
| இவள் | இப் பெண்பிள்ளையானவள், |
| தனக்கு முடிவு ஒன்று அறிகிலேன் என்னும் | தனது ஆர்த்திக்கு முடிவு ஒன்றும் தெரியவில்லையே! என்கிறாள்; |
| மூ உலகு ஆளியே என்னும் | மூவுலகுக்கும் கடவுளான இந்திரனுக்கு அந்தர்யாமியே! என்கிறாள்: |
| கடி கமழ் கொன்றை சடையனே என்னும் | பரிமளம் மிக்க கொன்றைமாலையைச் சடையிலணிந்த சிவனுக்கு அந்தர்யாமியே! என்கிறாள்; |
| நான்முகக் கடவுளே என்னும் | பிரமதேவனுக்கு அந்தர்யாமியே! என்கிறாள்; |
| வடிவு உடை வானோர் தலைவனே என்னும் | தன்னோடொத்த வடிவுடையரான நித்ய ஸூரிகளுக்கு நாதனே! என்கிறாள்; |
| வண் திரு அரங்கனே என்னும் | ஸ்ரீரங்கநாதனே! என்கிறாள் |
| அடி அடையாதாள் போல் இவள் | திருவடிகளைக் கிட்டமாட்டாள் போலும் என்னும்படி யிருந்தவிவள் |
| முகில் வண்ணன் அடி | மேகவண்ணனை அவனது திருவடிகளை |
| அணுகி அடைந்தனள் | கிட்டியடையப் பெற்றாள். |

3358 முகில்வண்ணனடியையடைந்தருள்சூடியுய்ந்தவன் மொய்புனற்பொருநல்*
துகில்வண்ணத்தூநீர்ச்சேர்ப்பன் வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்சடகோபன் *
முகில்வண்ணனடிமேல்சொன்னசொல்மாலை ஆயிரத்திப்பத்தும்வல்லார் *
முகில்வண்ணவானத்திமையவர்சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே. (கக)

| | |
|---|---|
| முகில் வண்ணன் அடியை அடைந்து | மேகவண்ணனை எம்பெருமானுடைய திருவடிகளை யடைந்து |
| அருள் சூடி உய்ந்தவன் | அவனுடைய திருவருளைத் தலைக்கொண்டு உஜ்ஜீவித்தவரும் |
| மொய் புனல் பொருநல் | உத்தமதீர்த்தமான தாமிரபர்ணியினுடைய |
| துகில் வண்ணம் தூ நீர் சேர்ப்பன் | துகிலின் நிறம்போலே பரிசுத்தமான ஜலத்தின் கரையிலே சேர்ந்திருப்பவரும் |
| வண் பொழில் சூழ் வண் குருகூர் சடகோபன் | வளம்மிக்க சோலைகள் சூழ்ந்த திருநகரிக்குத் தலைவருமான ஆழ்வார் |
| முகில் வண்ணன் அடி மேல் சொன்ன | மேகவண்ணனை எம்பெருமானது திருவடிகளை நோக்கியருளிச் செய்த |
| சொல் மாலை ஆயிரத்து இப்பத்தும் வல்லார் | சொல் தொடையான ஆயிரத்தினுள் இப்பதிகத்தை ஓத வல்லவர்கள் |
| முகில் வண்ணம் வானத்து | முகில் வண்ணனுடைய நிழலீட்டாலே முகில்வண்ணமாயிருக்கின்ற பரமபதத்திலே |
| இமையவர் சூழ | நித்யஸூரிகள் புடைசூழ |
| பேர் இன்பம் வெள்ளத்தே | ப்ரஹ்மானந்த ப்ரவாஹத்தில் |
| இருப்பர் | மூழ்கியிருக்கப் பெறுவர்கள். |

ஸ்ரீ:

## ஏழாம்பத்து—மூன்றாந் திருவாய்மொழி வெள்ளைச்சுரிசங்கு.

கீழ்த் திருவாய்மொழியிலே ஆழ்வாருடைய அரதி பேச்சுக்குநிலமல்லாமேயி[illegible] பெரியபெருமாளுடைய திருக்குணங்களையும் வடிவழகு முதலானவற்றையும் பராங்குசநாயகியான தான் வாய்வெருவியும் திருத்தாயார் சொல்லக்கேட்டும் சிறிது தரிக்கும்படியாயிற்று. மோஹமும் தெளிந்தது. பின்பு அவனைச்சென்று கிட்டியே தீர்வேன் என்னுமாற்றாமை பிறந்து, தென்திருப்பேரையில் வீற்றிருந்த மகரநெடுங் குழைக்காதனிடம் போகவேணுமென்று புறப்பட, பழையபடியே தோழிமாரும் தாய்மாரும் சூழ்ந்துகொண்டு 'உனக்கு இத்தனை ப்ராவண்யமாகாது, நமக்கு இது பழியாய் விளையும்' என்ன, நீங்கள் தடைசொல்லுகிறவற்றால் ஒரு பயனுண்டாகமாட்டாது; நான் மகரநெடுங்குழைக்காதனாலே நெஞ்சு பறியுண்டேன்; ஆனபின்பு நானே போனதாகாமே நீங்கள் என்னோடு உடன்பட்டு அங்கே கொண்டுபோய்ச் சேர்க்கப்பாருங்கள் என்று, பராங்குச நாயகி தனக்குப் பிறந்த துணிவை அவர்களுக்குச் சொல்லுகிறதாகச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

3359 வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித் தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே *
புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீர் என்சொல்லிச்சொல்லுகேனன்னைமீர்காள் !*
வெள்ளச்சுகமவன்வீற்றிருந்த வேதவொலியும்விழாவொலியும் *
பிள்ளைக்குழாவிளையாட்டொலியுமறாத் திருப்பேரெயில்சேர்வன்நானே. (க)

| | |
|---|---|
| அன்னைமீர்காள் | தாய்மார்களே! |
| வெள்ளை சுரி சங்கொடு ஆழி ஏந்தி | வெண்ணிறத்தையும் சுரியையுமுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் ஸுதர்சநத்தையும் ஏந்திக்கொண்டு |
| தாமரைக் கண்ணன் | செந்தாமரைக் கண்ணனை பெருமான் |
| என் நெஞ்சின் ஊடே | எனது நெஞ்சினுள்ளே |
| புள்ளை | கருடப்பறவையை |
| கடாகின்ற ஆற்றை | நடத்துகிறபடியை |
| காணீர் | நீங்கள் அறிகின்றீர்களில்லையே! |
| என் சொல்லி சொல்லுகேன் | இவ்வநுபவத்துக்கு என்ன பாசுரமிட்டு நான் சொல்லுவேன்; |

(இனி நான் செய்ய நினைத்ததாவது)

| | |
|---|---|
| வெள்ளம் சுகம் அவன் வீற்றிருந்த | ஆனந்த வெள்ளமே வடிவெடுத்தவனான பெருமான் வீற்றிருக்குமிடமாயும் |
| வேதம் ஒலியும் விழா ஒலியும் பிள்ளை குழாம் விளையாட்டு ஒலியும் அறு | வேதகோஷமும் உத்ஸவகோஷமும் சிறுபிளளைகளின் விஹார கோலாஹலமும் இடையறுமலிருக்கப் பெற்றதாயுமுள்ள |
| திரு பேர் எயில் | திருப்பேரெயில் என்னுந் திருப்பதியிலே |
| நான் சேர்வன் | நான் சென்று சேரக்கடவேன். |

*** பராங்குசநாயகியானவள் தனது உள்ளத்தினுள்ளே ஒரு பெரிய திருவடித் திருநாள் நடந்து செல்லுகிறபடியைப் பேசி, தென்திருப்பேரையிலே போகவேணுமென்று தனக்குப் பிறந்த துணிவைத் தாய்மாரிடம் கூறுகின்றாள்.

என்சொல்லிச் சொல்லுகேன்—என்ன பாசுரமிட்டு எத்தைச் சொல்லுவது என்கை. உங்கள் கண்ணுக்கு இலக்காகாதாப்போலே என் வாக்குக்கும் இலக்காகிறதில்லையே! என்கிறாள். "புள்ளைக் கடாகின்றவாற்றைக் காணீர்" என்று பேசியாயிற்றே; இன்னமும் பேசவேண்டியது என்ன இருக்கிறதென்னில்; ஒரு மஹாபாரதம் பேசவேண்டாவோ? அது மாட்டுகிற்றிலேனென்கிறாள். 'வெள்ளச்சுகமவன்' வெள்ளைச் சுகமவன்' என்று இருவகையான பாடங்களையும் ஆசிரியர் திருவுள்ளம்பற்றுகிறார். முந்தின பாடத்தில் சுக வெள்ளத்தை யுடையவன் என்று பொருள். ஆனந்தவெள்ளத்தைத் தானுடையவன், (அல்லது) அதை எனக்கு அளித்தவன் என்க. பிந்தின பாட்த்தில் வெள்ளை யென்றது—மறுவற்ற என்றபடி. துன்பங் கலசாத இன்பமாயிருப்பவனென்றவாறு.

பிள்ளைக்குழாவிளையாட்டொலியுமறு என்றது இத்திருப்பதிக்குச் சிறப்பானதொரு விசேஷணம். சிறுபிள்ளைகள் திரண்டு விளையாடுவதென்பது எங்குமுண்டு; இவ்வூரில் அப்பிள்ளைகள் விளையாடுவது கோயில் திருமுன்பேயாயிருக்கும். எம்பெருமான் தானும் அந்த விளையாட்டின் சுவையைக்காண ஆசைப்பட்டானும்; எதிரே பெரியதிருவடி ஸன்னிதியிருந்தது இடைச்சுவராயிருந்தபடியாலே அந்த விளையாட்டைக்காண மறைவாயிருக்கிறதே யென்று வருந்தி 'கருடா! அப்பால் போ' என்று பெருமாள் வெறுத்துரைத்தாராம். இந்த நிலைமை நாளைக்கும் காணலாம். இத்தலத்தின் திருநாமம் பேரெயில் என்பதேயாம். இத்திருவாய்மொழியில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, எட்டு, பத்துஆம் பாட்டுகளில் 'தென்திருப்பேரையில்' என்று பாடங்கொள்வதில் விரோதமில்லாமையாலே இந்தப் பாட்டுக்களில் மாத்திரம் திருப்பேரையென்றே பாடங் கொள்ளலாமென்பாருமுளர்.

மணவாளமாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத்திருவாய்மொழிக்கு இட்ட பாசுரத்தில் 'தெள்ளியமால் தென்பேரை சென்றுபுக' என்றருளிச்செய்யலாமாயிருக்கச் செய்தேயும் அங்ஙனம் அருளிச்செய்யாது 'தெள்ளியமால் தென் திருப்பேர் சென்றுபுக' என்றருளிச்செய்திருப்பதும் உற்று நோக்கத்தக்கது. சோழநாட்டுத்திருப்பதிகளுள் ஒன்றான அப்பக்குடத்தான் ஸன்னிதிக்கே தென் திருப்பேர் என்று திருநாமம். இதுவோ பாண்டியநாட்டுத் திருப்பதி. இதைத் தென் திருப்பேரென்று மணவாளமாமுனிகளருளிச்செய்தது 'திருப்பேரெயில்' என்பதன் ஏகதேசக்ரஹணமாகவாயிற்று. (க)

3360 நானக்கருங்குழல்தோழிமீர்காள்! அன்னையர்காளயற்சேரியீர்காள் *
நானித்தனிநெஞ்சம்காக்கமாட்டேன் என்வசமன்றிதிராப்பகல்போய் *
தேன்மொய்த்தபூம்பொழில்தண்பணைசூழ் தென்திருப்பேரெயில்வீற்றிருந்த *
வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன் செங்கனிவாயின்திறத்ததுவே. (உ)

| | |
|---|---|
| நானம் கரு குழல் தோழிமீர்காள் | ஸுகந்தமணிந்த கருங்குழலை யுடைய தோழிகளே! |
| அன்னையர்காள் | தாய்மார்களே! |
| அயல் சேரியீர் காள் | (செய்தி வினவ வந்த) அக்கம் பக்கத்தவர்களே! |
| இத் தனி நெஞ்சம் நான் காக்க மாட்டேன் | ஸ்வதந்திரமான இந்த நெஞ்சை நான் அடக்கியாள மாட்டுகின்றிலேன்; |
| இது என் வசம் அன்று | இந்த நெஞ்சு எனக்கு விதேயமன்று; |
| இரா பகல் | இரவும் பகலும் |
| போய் | என்னை விட்டுப்போய் |
| தேன் மொய்த்த பூ பொழில் | வண்டுகள் மொய்த்த பூஞ் சோலைகளை யுடைத்தாய் |
| தண் பணை சூழ் | குளிர்ந்த நீர் நிலங்கள் சூழ்ந்திருக்கிற |
| தென் திருப்பேரெயில் வீற்றிருந்த— | |
| வானம் பிரான் | பரமபத நிலயனும் |
| மணி வண்ணன் | நீலமணி வண்ணனுமான |
| கண்ணன் | கண்ணபிரானுடைய |
| செம் கனி வாயின் திறத்தது | சிவந்த கனிபோன்ற அதரத்திலே படிந்திட்டது. |

* * * தாய்மார் முகம் பார்த்துச் சொன்னாள் கீழ்ப்பாட்டில்; அவ்வளவிலே இத்தலைமகளுக்கு ஹிதஞ் சொல்லுகைக்காகத் தாய்மாரும் அயற்சேரியுள்ளாருமாகத் திரண்டு வந்து சேர்ந்து நிற்க, உங்களுடைய ஹிதவார்த்தைகளைக் கேட்க அவகாசமில்லாதபடி மகரநெடுங்குழைக்காதன்பக்கலிலே அவகாஹித்த என்னெஞ்சை மீட்கமாட்டுகின்றிலேன்காண்மின் என்கிறாள். என்னெஞ்சைக் கடல் கொண்டது காண்மினென்கிறாள்.

3361 செங்கனிவாயின்திறத்ததாயும் செஞ்சுடர்நீள்முடித்தாழ்ந்ததாயும் *
சங்கொடுசக்கரம்கண்டுகந்தும் தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும் *
திங்களும்நாளும்விழாவருத தென் திருப்பேரெயில்வீற்றிருந்த *
நங்கள்பிரானுக்குஎன்நெஞ்சம்தோழீ! நாணும்நிறையுமிழந்ததுவே. (௩)

| | |
|---|---|
| தோழீ | வாராய் தோழியே!, |
| என் நெஞ்சம் | எனது நெஞ்சானது |
| செம் கனி வாயின் திறத்தது ஆயும் | செவ்விய கனி போன்ற திருப்பவளத்திலே அபினிவேசம் கொண்டதாயும் |
| செம் சுடர் நீள் முடி தாழ்ந்தது ஆயும் | செவ்விய சுடரையுடைய நீண்ட கிரீடத்திலே ஈடுபட்டதாயும் |
| சங்கொடு சக்கரம் கண்டு உகந்தும் | திருவாழி திருச்சங்குகளைக் கண்டு உவந்ததாயும் |
| தாமரை கண்களுக்கு அற்று தீர்ந்தும் | தாமரை போன்ற திருக்கண்களுக்கு அநந்யார்ஹமாகியும் |
| திங்களும் நாளும் விழா அருத | மாஸோத்ஸவங்களும் நித்யோத்ஸவங்களும் இடையறாத |
| தென் திருப்பேரெயில் வீற்றிருந்த | தென் திருப்பேரைப் பதியிலே யெழுந்தருளியிருக்கின்ற |
| நங்கள் பிரானுக்கு | எம்பெருமான் விஷயத்திலே |
| நாணும் நிறையும் இழந்தது | வெட்கமும் அடக்கமும் தொலையப் பெற்றது. |

* * * நங்காய்! இப்படியும் நாணமற்றுச் சொல்லுவது தகுதியோவென்று தோழி கேட்க; தோழீ! நான் என்செய்வேன்? எனது நெஞ்சானது தென் திருப்பேரை யெம்பெருமானுடைய திருப்பவளத்தழகிலே போய்ப்படிந்தும் திருவபிஷேகத்தினழகிலே தாழ்ந்தும், திருவாழி திருச்சங்குகளை யேந்தியிருக்குமழகுகண்டு உகந்தும், மற்றோரழகுக்கு உரித்தல்லாதபடி தாமரைக்கண்களுக்கு அற்றுத்தீர்ந்தும் நங்கள் பிரானுக்கு நாணும் நிறைவுமிழந்தது; இனி யெனக்கு நாணும் நிறைவுமுண்டாவதற்கு வழி யேது? என்கிறாள் தலைவி. என்னெஞ்சம் நாணும் நிறையுமிழந்தது—நான் தன்னை யிழந்தேன்; தாய்மார் தோழிமார்கள் என்னை யிழந்தார்கள்; நெஞ்சு நாணுநிறையுமிழந்தது. இப்படியெல்லாம் இழவேயாயிருக்கிறது. (௩)

* * * நங்காய் ! உனக்கு அவன் பக்கலுள்ள ஆசாபாசம் அளவுகடந்திருந்தாலும் அவனே யெழுந்தருளுமளவும் இங்கேயிருக்க ப்ராப்தமேயல்லாது அங்குச் செல்லுகை யுக்தமன்றென்று தோழி சொல்ல, அதற்கு விடையிருக்கிறது இப்பாசுரம். இராவணனைக்கொன்ற விஜயலக்ஷ்மியோடே தென்திருப்பேரையிலே யெழுந்தருளியிருக்கிற இருப்பைக் கண்ட நெஞ்சு இன்னமும் மீண்டு வாராது; எனக்கு இங்கொரு துணையுமில்லை; துணையான எனது நெஞ்சை அழைக்கவல்லாருமில்லை; இங்கு ஆரைக்கொண்டு என்ன புருஷார்த்தம் ஸாதிப்பது? இனி என்னெஞ்சு போய்ச் சேர்ந்த தேசத்திலேயே நானும் போய்ச் சேருவதே தகுதியென்கிறுளாயிற்று. (எ)

3366 கண்டதுவேகொண்டெல்லாருங்கூடிக் கார்க்கடல்வண்ணனேடென் திறத்துக்
கொண்டு * அலர்தூற்றிற்றதுமுதலாக் கொண்டவென்காதலுரைக்கில்தோழீ !*
மண்டிணிஞாலமுமேழ்கடலும் நீள்விசும்புங்கழியப்பெரிதால் *
தெண்டிரைசூழ்ந்தவன்வீற்றிருந்த தென்திருப்பேரெயில்சேர்வன்சென்றே. (அ)

| | |
|---|---|
| கண்டதுவே கொண்டு | வெளியில் காணக்கூடிய எனது மேனி நிற மாறுதல் முதலியவற்றையே கொண்டு. |
| எல்லாரும் | தாய்மார் ஊரார் ஆகிற எல்லாரும் |
| கூடி | ஒன்று சேர்ந்து |
| கார் கடல்வண்ணனேடு என் திறத்து கொண்டு | கருங்கடல் வண்ணனை எம்பெருமானுக்கும் எனக்கும் சேர்க்கை யுண்டானதாகக் கொண்டு |
| அலர் தூற்றிற்றது முதல் ஆ கொண்ட | பழி தூற்றினதுவே முதலாக இடங் கொண்ட |
| என் காதல் உரைக்கில் | எனது காதலைப் பாசுரமிட்டுச் சொல்லப்பார்க்கில் |
| தோழீ | தோழியே !, |
| | (என் காதல் எப்படிப்பட்டதென்னில்) |
| மண் திணி ஞாலமும் | மண் செறிந்த பூமியும் |
| ஏழ் கடலும் | (அதைச் சூழ்ந்த) ஸப்த ஸாகரங்களும் |
| நீள் விசும்பும் | இதெல்லாவற்றுக்கும் இடங்கொடுக்கும் மஹாவகாசமான ஆகாசமும் ஆகிய இத்தனைக்கும் |
| கழிய | அவ்வருகுபட்டதாய் |
| பெரிது ஆல் | பெருத்திராநின்றது; |
| | (ஆனபின்பு) |
| தென் திரை சூழ்ந்து | தெளிந்த அலைகளாலே சூழப்பட்டு |
| அவன் வீற்றிருந்த | அப்பெருமான் வீற்றிருக்குமிடமான |
| தென் திரு பேர் எயில் | தென் திருப்பேரைப் பதியை |
| சென்று சேர்வன் | (எனது தாபம் தீரும்படி) சென்று சேரக்கடவேன். |

* * * ஊரார் பழி சொல்வதே யெருவாக எனக்கு வளர்ந்து செல்லுகின்ற காதலானது ஸகலலோகங்களையும் கபளீகரித்துச் செல்லாநின்றது; ஆனபின்பு அவனிருக்கிற திருப்பேரையிலே சென்றல்லது நிற்க மாட்டேனென்கிருள். (அ)

3367 சேர்வன்சென்றென்னுடைத்தோழிமீர்காள்! அன்னையர்காளென்னைத்தேற்றவேண்டா *
நீர்களுரைக்கின்றதென்னிதற்கு? நெஞ்சும்நிறைவுமெனக்கிங்கில்லை *
கார்வண்ணன்கார்க்கடல்ஞாலமுண்ட கண்ணபிரான்வந்துவீற்றிருந்த *
ஏர்வளவொண்கழனிப்பழனத் தென்திருப்பேரெயின்மாநகரே. (கூ)

| | |
|---|---|
| என்னுடைய தோழிமீர்காள் | எனக்கு ஹிதஞ் சொல்லுகின்ற தோழிமார்களே! |
| அன்னையர்காள் | (அப்படிப்பட்ட) தாய்மார்களே! |
| என்னை தேற்ற வேண்டா | (எல்லை கடந்த) என்னைத் தேற்றுவதில் நீங்கள் முயல வேண்டா; |
| இதற்கு | எனது இந்த நிலைமைக்கு |
| நீர்கள் உரைக்கின்றது என் | நீங்கள் சொல்லக்கூடிய வார்த்தை என்ன இருக்கிறது! |
| எனக்கு நெஞ்சும் நிறைவும் இங்கு இல்லை | எனது நெஞ்சும் அடக்கம் முதலிய குணங்களும் இங்கில்லையன்றே |
| | (ஆதலால்) |
| கார் வண்ணன் | நீல வண்ணனும் |
| கார் கடல் ஞாலம் உண்ட | கருங்கடல் சூழ்ந்த ஜகத்தை (ப்ரளயங் கொள்ளாதபடி) அமுது செய்தவனுமான |
| கண்ணபிரான் | ஸ்ரீக்ருஷ்ணபகவான் |
| வந்து வீற்றிருந்த | நித்ய ஸந்நிதி பண்ணியிருக்குமிடமாய் |
| ஏர் வளம் | ஏரினுடைய மிகுதியை யுடைத்தாய் |
| ஒண் கழனி பழனம் | அழகிய கழனிகளையும் நீர்நிலங்களையுமுடைத்தான |
| தென் திரு பேர் எயில் மா நகர் | தென்திருப்பேரெயிலென்கிற திருப்பதியை |
| சென்று சேர்வன் | சென்று சேரக்கடவேன். |

* * * கீழே தென்திருப்பேரெயில் சென்று சேர்வனென்று கூறின தலைவியை நோக்கித் தோழிமாரும் தாய்மாரும் 'இங்ஙனே பதறவேணுமோ? அப்பெருமானே சடக்கென இங்கு எழுந்தருள்வன் காண்; நீ புறப்பட்டுச்செல்லுகை தானும் யுக்தமன்று' என்று சொல்ல அதற்கு 'நீங்கள் என்னை யொன்றும் தேற்றவேண்டா; போகைக்கு நீங்கள் சொல்லுகிற விரோதமென்? போனால் என்ன விரோதம் விளையும்?' என்று இவள் சொல்ல, 'உன்னுடைய தைர்ய சாதுர்யாதிகளுக்குப் போராது' என்று அவர்கள் சொல்ல, அவனுடைய ஸௌந்தர்ய ஸௌசீல்ய காருண்யாதி குணங்களாலே என்னுடைய தைர்ய சாதுர்யாதிகள் அபஹரிக்கப்பட்டுப்போயின வாதலால் உங்கள் வார்த்தை கேட்கும் நிலைமையில் நானில்லை; என்னோடு கலக்கைக்காக அவன் வந்தெழுந்தருளியிருக்கிற தென்திருப்பேரையே சென்று சேர்வேன் காண்மின் என்கிறாள். (கூ)

3368 நகரமும்நாடும்பிறவும்தேர்வேன் நாணெனக்கில்லையென்தோழீமீர்காள் !*
சிகரமணிநெடுமாடநீடு தென்திருப்பேரெயில்வீற்றிருந்த *
மகரநெடுங்குழைக்காதன்மாயன் நூற்றுவரையன்றுமங்கநூற்ற *
நிகரில்முகில்வண்ணன்நேமியான் என்னெஞ்சம்கவர்ந்தெனையூழியானே ? (ய)

| | | | |
|---|---|---|---|
| என் தோழிமீர்காள் | எனது தோழிகளே! | நேமியான் | திருவாழியை யுடையனுமான |
| சிகரம் மணி நெடு மாடம் | சிகரங்களையுடைத்தாய் மணிமயமாய் ஓங்கின மாடங்களை யுடைத்தாய் | மகரநெடுங் குழைக்காதன் | மகரபூஷணைப் பெருமான் |
| நீடு | நெடுங்காலம் விளங்குமதான | என் நெஞ்சம் கவர்ந்து | எனது நெஞ்சை அபஹரித்துக் கொண்டு |
| தென்திருப்பேரெயில் வீற்றிருந்த | தென் திருப்பேரைப்பதியிலே எழுந்தருளியிருக்கின்ற | எனை ஊழியான் | எத்தனை காலத்தான்! (அவன் என் னெஞ்சைக் கவர்ந்தது இன்று நேற்றோ!) |
| மாயன் | ஆச்சர்யகுண சேஷ்டிதங்களை யுடையனாய் | | (ஆனபின்பு) |
| அன்று | பாரதயுத்தம் நடந்தவக்காலத்தில் | நகரமும் நாடும் பிறவும் தேர்வேன் | நகரங்களிலும் நாடுகளிலும் மற்றுமுள்ள விடங்களிலும் (நானே சென்று) ஆராயக்கடவேன்; |
| நூற்றுவரை | துரியோதநன் முதலிய நூறு பேர்களை | எனக்கு நாண் இல்லை | அதுபற்றி எனக்கு லஜ்ஜை யில்லை. |
| மங்க நூற்ற | தொலையும்படி ஸங்கல்பித்தவனும் | | |
| நிகர் இல் முகில் வண்ணன் | ஒப்பற்ற காளமேக வண்ணனும் | | |

* * * சென்று சேர்வேன், சென்று சேர்வேனென்று பலகாலுஞ் சொன்ன பராங்குச நாயகியை நோக்கி 'அம்மா! நீயே சென்று சேர்ந்தேயாகில் ஊரும் நாடும் மற்றுமெல்லாரும் உன்னைப் பழி சொல்லாரோ' என்று தோழிமார் சொல்ல, 'அப்படி பழி சொல்லுவாரையன்றோ நான் தேடுகிறது' என்று இவள் சொல்ல, 'பழி சொன்னால் உனக்கு லஜ்ஜையாகாதோ?' என்று பின்னையும் தோழிமார் கேட்க, அவனுடைய அழகினாலும் ஆச்சர்ய திவ்ய சேஷ்டிதங்களாலும் என்னுடைய நெஞ்சம் லஜ்ஜையும் அபஹரிக்கப்பட்டு எத்தனையோ காலமாயிற்றே!, ஆதலால் இனித்திருப்பேரையிலே நானே போகத் தடையென்? என்கிறாள். "நூற்றுவரையன்று மங்கநூற்ற" என்ற சொற்சேர்த்தியை நோக்கி இங்கு நம்பிள்ளையருளிச்செய்வது பாரீர்—"துர்யோதநாதிகளை வெல்ல எண்ணினாற்போலே என்னெஞ்சை அபஹரிக்கைக்கு எத்தனை காலமெண்ணினானோ?" (ய)

3369 ஊழிதோறூழியுருவும்பேரும் செய்கையும்வேறவன்வையம்காக்கும் *
ஆழிநீர்வண்ணனையச்சுதனை அணிகுருகூர்ச்சடகோபன் சொன்ன *
கேழிலந்தாதியோராயிரத்துள்ளிவை திருப்பேரெயில்மேயபத்தும் *
ஆழியங்கையனையேத்தவல்லாரவர் அடிமைத்திறத்தாழியாரே. (கக)

ஊழி ஊழி தோறு — கல்பங்கள் தோறும்
பேரும் உருவும் செய்கையும் — நாமம் ரூபம் வியாபாரம் ஆகிய இவற்றை
வேறவன் — வேறாகவுடையனாய்க் கொண்டு
வையம் காக்கும் — உலகங்களைக் காத்தருள்பவனாய்
ஆழி நீர் வண்ணனை—கடல் வண்ணனாய்
அச்சுதனை — அடியார்களை ஒருகாலும் நழுவ விடாதவனான பெருமானைக் குறித்து
அணி குருகூர் சடகோபன் சொன்ன — நம்மாழ்வார் அருளிச் செய்த
கேழ் இல் — ஒப்பில்லாத
அந்தாதி ஓர் ஆயிரத்துள் — அந்தாதித் தொடையான ஆயிரத்தினுள்ளும்
திருப்பேரெயில் மேய இவை பத்தும் — தென் திருப்பேரைப்பதி விஷயமான இப்பதிகத்தைக் கொண்டு
ஆழி அம் கையனை ஏத்த வல்லார் அவர் — கையுந் திருவாழியுமான எம்பெருமானைத் துதிக்கவல்லவர்கள்
அடிமை திறத்து — நித்ய கைங்கரியத்திலே
ஆழியார் — ஆழ்ந்தவராவர்.

* * * வியாக்கியானங்க ளெல்லாவற்றையும் ஊன்றி நோக்குமிடத்து மூன்றாமடியில் "மேய பத்தால்" என்கிற பாடம் சிறக்குமென்று தோன்றுகிறது. "அடிமைத் திறத்த ஆழியாரே" என்பதற்கு இரண்டு வகையான பொருள் கூறுவர்; ஆழியார்—ஆழ்ந்தவர்கள். (அல்லது) திருவாழியாழ்வானைப் போன்றவர்கள். * கருதுமிடம் பொருது—கைநின்ற சக்கரத்தன் * என்றபடியே திருவாழியாழ்வான் எம்பெருமான் திருவுள்ளம் பற்றுமிடமெங்குஞ் சென்று பணிசெய்து வருமா போலே விடுத்த திசைக்கருமந்திருத்துமவர்கள் என்றபடி. (கக)

ஸ்ரீ:

## ஏழாம்பத்து—நான்காந் திருவாய்மொழி ஆழியெழ.

கீழ்த்திருவாய்மொழியில், * தென்திருப்பேரெயில் சேர்வன் நானே * என்றும் * சேர்வன் சென்றே * என்றும் திண்ணமாகக் கூறின ஆழ்வார் புறப்பட்டுச் செல்லப்பார்த்தார் * காலாழும் நெஞ்சழியுங் கண்சுழலும் * என்னும்படியான நிலைமையிலே நின்றிருந்தாராகையாலே புறப்பட்டுச் செல்ல வலிமையற்றிருந்தார். வாய் கொண்டு பேசவும் முடியாதபடி பலமழிந்து கிடந்தவிவர்க்கு ஒரு வழியாலே பலமுண்டாக்க வேணுமென்று பார்த்தானெம்பெருமான். தன்னுடைய விஜயாபதான பரம்பரைகளைக் காட்டிக் கொடுத்தால் அவற்றைக் கண்டு பலம் மிக்குத் தரித்திருப்பர் என்று கருதி, உலகளந்தது, கடல் கடைந்தது, நிலமிடந்தது பிரளயத்திலே உலகமுண்டது முதலான அபதானங்களைக் காட்டிக் கொடுத்து, 'ஆழ்வீர் இவற்றை யநுஸந்தித்துத் தரித்து வாழும்' என்ன, ஆழ்வாரும் அவ்வபதானங்களை ஸமகாலத்திற் போலே கண்டு பாசுரந்தோறும் ஒவ்வொரு அபதானமாகப் பேசித்தரிக்கிறார் இத்திருவாய்மொழியில்.

3370 * ஆழியெழச்சங்கும்வில்லுமெழ * திசை வாழியெழத்தண்டும்வாளுமெழ * அண்டம்
மோழையெழமுடிபாதமெழ * அப்பன் ஊழியெழஉலகம்கொண்டவாறே. (க)

ஆழி எழ — திருவாழியாழ்வான் முன்னே உயர்ந்து தோன்றவும்
சங்கும் வில்லும் எழ — பாஞ்சஜந்யமும் சார்ங்கமும் தோன்றவும்
தண்டும் வாளும் எழ — கதையும் நந்தகமும் தோன்றவும்
திசை வாழி எழ — திசைகள் தோறும் மங்களாசாஸனகோஷம் கிளம்பவும்
(உயரவளர்ந்தபடியாலே)
அண்டம் மோழை எழ — அண்டகபாலம் பிளந்து ஆவரண ஜலம் குமிழி கிளம்பும்படியாகவும்
முடி பாதம் எழ — (வளர்ந்த விரைவாலே) திருமுடியும் திருவடியும் ஒக்க கிளம்பும்படியாகவும்
ஊழி எழ — மாவலியால் துன்பப் பட்ட காலம் போய்) நல்ல காலம் வந்து தோற்றும்படியாகவும்
அப்பன் — ஸர்வேச்வரன்
உலகம் கொண்ட ஆறு எ — (திரிவிக்கிரமனாய்) உலகங்களையளந்து கொண்டபடி என்னே!

* * * முதன் முதலாக உலகளந்த விஜயாபதாநத்தை அநுஸந்தித்து உகக்கிறார். உலகில், தலைவனை அரசனுக்கு ஒரு காரியம் ஆகவேண்டியிருந்தால் பரிகரங்கள் முன்னின்று காரியஞ்செய்து தலைவனுக்கு வெற்றியை யுண்டாக்கப்பார்ப்பதென்கிற ஒரு முறை யுண்டே; அந்த ரீதியிலே, ஆயுதங்களில் தலைவனை திருவாழியாழ்வான் முந்துற முன்னம் வியாபரித்தபடியைப்பேசுகிறார் ஆழியெழ வென்று. பெருமாள் காட்டுக் கெழுந்தருளப் புறப்படுவதற்கு முன்னே இளைய பெருமாள் தாம் முற்பட்டதுபோல, எம்பெருமானுடைய திருவடி உலகளக்க நிமிர்வதற்கு முன்னே திருவாழியாழ்வான் தான் முன்னே உயர்ந்து தோற்றினையிற்று.

எம்பெருமான் உலகளந்தபோது பஞ்சாயுதங்களினுடையவும் எழுச்சியைச் சொல்ல நினைத்த ஆழ்வார் முன்னம் 'ஆழியெழச் சங்கும் வில்லு மெழ' என்று மூன்று ஆயுதங்களின் எழுச்சியைச் சொல்லி இரண்டாமடியின் முடிவில் மற்றை யிரண்டாயுதங்களின் எழுச்சியைச் சொல்லுகிறார். இடையில் "திசைவாழி யெழ" என்றதனால் அந்த திவ்யாயுதங்களுக்கும் மங்களாசாஸனம் பண்ணுவாருளரென்று சொன்னதாயிற்று. அண்டம் மோழை யெழ—தாழ்வின்றி வளர்ந்தபடியாலே அண்டகபாலம் பிளந்து ஆவரண ஜலம் குமிழி கிளப்பும்படியாக என்றபடி. தன்னுடைய வளர்ச்சிக்கு அண்டாந்தராளம் இடம் போராமையாலே விம்மி அண்டபித்தி பிளந்து ஆவரண ஜலம் உள்ளே வந்து புகும்படியாக வென்கை. முடி பாதமெழ—திருமுடியும் திருவடிகளும் ஒரு சேர எழ என்று இதனால் வளர்ந்தருளின சட்க்கு சொன்னபடி. ஊழியெழ — ஆஸுரப்ரக்ருதியான மஹாபலி அஹங்கரித்திருந்த கொடிய காலம் தொலைந்து நல்லடிக்காலம் தோன்ற என்றபடி. ஊழி என்பது பொதுவாகக் காலத்தைச் சொல்லுமதனாலும் இங்கு ப்ரகரணம் நோக்கி விலக்ஷணகாலமென்று பொருள்படும். ஆக விங்ஙனேயாக, அப்பன் உலகங் கோண்டவாறே—மஹோபகாரகனான ஸர்வேச்வரன் உலகத்தை அளந்து கொண்டபடி யென்னே! என்று ஈடுபடுகிறார். (க)

3371 ஆறுமலைக்கு எதிர்ந்தோடுமோலி * அரவூறுசுலாய் மலைதேய்க்குமோலி * கடல்
மாறுசுழன்று அழைக்கின்றவோலி * அப்பன் சாறுபட அமுதம்கோண்டநான்றே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அப்பன் | ஸர்வேச்வரன் | அரவு ஊறு கலாய் | வாஸுகி யென்கிற பாம்பினுடம்பைச் சுற்றி |
| சாறு பட | (தேவர்களுக்கு) மஹோத்ஸவமுண்டாம்படியாக | மலை தேய்க்கும் ஒலி | மந்தர மலையிலே தேய்க்கிற ஒலியும் |
| அமுதம் கொண்ட நான்று | (கடல் கடைந்து) அமுதங் கொண்ட காலத்திலே, | கடல் மாறு சுழன்று | கடலானது இடம் வலமாக மாறிச் சுழன்று |
| ஆறு | (கடலிலே சென்று சேர்வதற்காக வந்து கொண்டிருந்த) ஆறுகளானவை | அழைக்கின்ற ஒலி | கோஷிக்கிற கோஷமும் உண்டாயின. |
| மலைக்கு எதிர்ந்து ஓடும் ஒலி | தங்கள் பிறப்பிடமான மலைகளையே நோக்கித் திரும்பி யோடுகிற ஒலியும், | | |

* * * கடல் கடைந்தபடியை யநுஸந்தித்து ஈடுபடுகிறார். மஹா நதிகளெல்லாம் மலைகளினின்று பெருகிக் கடலிலே வந்து சேருமே; அப்படி சேருவதற்காக ஆறுகள் புறப்பட்டு வந்து கொண்டிருந்தனவாம். கடைகிற போது மலைகளிற் காட்டில் கடல் உயருகையாலே ஆறுகள் எதிர்வெள்ளங் கோத்து மலைகளை நோக்கியே திரும்பியோடுகிற வோசை விலக்ஷணமாயிருந்ததென்று முதலடியாற் சொல்லுகிறது. அரவூறு சுலாய் மலை தேய்க்கு மோலி—'ஊறு' என்று பாம்பினுடம்புக்குப் பெயர்; வடமொழியில் (ஹோம:) என்பது போல. வாஸுகியினுடைய உடலைச் சுற்றிக் கடைகிற போதுண்டான சரசரவென்கிற த்வநியும். கடல்மாறு சுழன்றழைக்கின்ற வோலி—மந்தர மலை திரிந்து வருகிறபோது கடல் இடமும் வலமுமாக எதி

ராகச் சுழன்று தன்னிலே யெதிர்த்து கோஷிக்கிற கோஷமும். இவை யெப்போது உண்டாயினவென்னில்; சாறுபட அப்பன் அமுதங் கொண்ட நான்று—தேவர்களுக்கு மஹோத்ஸவமுண்டாம்படியாக என்னப்பன் கடலைக் கடைந்து அமுதங் கொண்ட காலத்திலே. சாறு—உத்ஸவமும் ஸாரமும். சாறுபட—நீர் கோதாம்படியென்று ஆறாயிரம். (உ)

3372

நான்றிலவேழ்மண்ணும் தானத்தவே * பின்னும் நான்றிலவேழ்மலை தானத்தவே* பின்னும்
நான்றிலவேழ்கடல் தானத்தவே * அப்பனூன்றியிடந்து எயிற்றில்கொண்டநாளே. (ங)

| | | | |
|---|---|---|---|
| அப்பன் | ஸர்வேச்வரன் | ஏழ் மலை | ஸப்த குலாசலங்களும் |
| ஊன்றி இடந்து எயிற்றில் கொண்ட நாள் | (பிரளயங்கதையான பூமியைக்) குத்தியிடந்தெடுத்து எயிற்றின் மேலே கொண்டகாலத்தில் | நான்றில | சலியாதவையாகி |
| ஏழ் மண்ணும் | ஏழு தீவுகளான பூமி பேதங்களானவை | தானத்த | தங்கள் ஸ்தானத்திலேயேயிருந்தன; |
| நான்றில | நழுவாதவையாய் | பின்னும் | மேலும், |
| தானத்த | தங்கள் ஸ்தானத்திலேயேயிருந்தன; | ஏழ் கடல் | ஸப்த ஸாகரங்களும் |
| பின்னும் | மேலும் | நான்றில | உடைந்தொழுகாதவையாய் |
| | | தானத்த | தங்கள் ஸ்தானத்திலேயேயிருந்தன. |
| | | ஏ | ஆச்சரியம்!. |

* * * மஹாவராஹ மூர்த்தியாகி நிலத்தை யிடந்தெடுத்த வரலாற்றை யநுஸந்திக்கிறாரிப்பாட்டில். ரஸாதலத்தில் கிடந்த பூமியை என்னப்பன் திருவெயிற்றாலே இடந்தெடுத்தருளின போது ஸப்தத்வீபங்களும் ஸப்த குலபர்வதங்களும் ஸப்த ஸாகரங்களும் தம் தம் ஸ்தானங்களிலே நிச்சலமாயிருக்கும்படி யெடுத்தருளினான், இதென்ன ஆச்சரியம்! என்கிறார். ஒரு வ்யாபாரத்தாலே செய்ததாயிராமல் ஸ்வஸங்கல்பத்தாலே ஆச்சரியமாகச் செய்த வித்தனையென்று ஈடுபடுகிறபடி. (ங)

3373 நாளுமெழ நிலநீருமெழ * விண்ணும் கோளுமெழ எரிகாலுமெழ * மலை
தாளுமெழச் சுடர்தானுமெழ * அப்பன் ஊளியெழ உலகமுண்டவூணே. (ச)

| | | | |
|---|---|---|---|
| நாள் எழவும் | காலவ்யவஸ்தைபேரும்படியாகவும் | மலை தாள் எழவும் | மலைகள் அடிபெயர்ந்து போகவும் |
| நிலம் நீர் எழவும் | நிலமும் நீரும் நிலைகுலைந்து போகவும் | சுடர்தானும் எழ | நக்ஷத்திரம் முதலிய சுடர்ப்பொருள்கள் நிலைகுலையவும் |
| விண்ணும் கோளும் எழ | ஆகாசமும் க்ரஹங்களும் நிலைகுலைந்து போகவும் | அப்பன் | ஸர்வேச்வரன் |
| எரி காலும் எழ | நெருப்பும் காற்றும் நிலைகுலைந்து போகவும் | ஊளி எழ உலகம் உண்ட ஊண் | ஆரவாரமுண்டாம்படி உலகங்களை உண்டருளின உணவு |
| | | ஏ | என்ன ஆச்சரியம்! |

* * * மஹாப்ரளயத்தில் ரக்ஷித்தபடியை இப்பாட்டில் அருளிச்செய்கிறார். கலையென்றும் காஷ்டை யென்றும் முஹூர்த்தமென்றும் நாழிகை யென்றும் யாமமென்றும் இரவென்றும் பகலென்றும் சொல்லுகிற காலப்பகுப்புகள் ஒன்றுமின்றியே காலவ்யவஸ்தை நிலைகுலைந்து போகப்பட்டதாம் பிரளயத்தில்; அது சொல்லுகிறது நாளுமெழ என்று. கால நிபந்தனைக்குக் காரணம் ஆதித்தியனுடைய கதியேயாதலால் பிரளயத்தில் அவ்வாதித்தியன் இலனாகவே காலவ்யவச்சேதங்களும் இல்லையாயினவென்க. நிலம் நீரும் விண்ணும் கோளும் எரிகாலும் மலைசுடர் தானுமெழ ப்ருதிவி முதலான பஞ்ச பூதங்களும் ஸகலகுலாசலங்களும் நக்ஷத்ரஜ்யோதிஸ்ஸுக்களும் ஆகிய இவையெல்லாம் உள்ளே புக உண்டருளினானென்கிறது. மலை தாளுமெழ என்றவிடத்து 'மலையும் தாளும்' என்று பொருளன்று; மலைகளானவை தாளோடே (அடியோடே) பறிந்து உள்ளே புக என்றபடி. வேர்க்குருத்தோடே பறிய வென்க. ஊளி

யேழ—ஊளி யென்று ஓசைக்குப்பெயர்; கீழ்ச்சொன்னவற்றையெல்லாம் உறிஞ்சியுண்கிற போது ஓசை யுண்டாகுமே; அது சொன்னபடி. இனி, ஊளி யென்று பசிக்கும் பேருண்டு: அப்பொருளை முக்கியமாகக் கொண்டார் பன்னீராயிரவுரைகாரர்; "பசித்துண்டானென்று தோன்றும்படியாக" என்பது உரை. (௪)

3374

ஊணுடைமல்லர் ததைந்தவொலி * மன்னர் ஆணுடைச்சேனை நடுங்குமொலி * விண்ணுள் ஏணுடைத்தேவர் வெளிப்பட்டவொலி * அப்பன் காணுடைப்பாரதம் கையறைபோழ்தே. (௫)

| | |
|---|---|
| அப்பன் | ஆச்ரிதபக்ஷபாதியான கண்ணபிரான் |
| காணுடை பாரதம் கை அறை போழ்து | ஆச்சரியமான பாரதயுத்தத்தை அணிவகுத்த போது. |
| ஊண் உடை மல்லர் ததைந்த ஒலி | வலியை யூட்டும் உணவுகளைக் கொண்ட பெருமிடுக்கரான மல்லர்கள் (த்வந்த்வயுத்தம் பண்ணி) நெரிந்துவிழுகிற ஓசையும் |
| மன்னர் | அரசர்களினுடைய |

| | |
|---|---|
| ஆண் உடை சேனை | வீர புருஷர்களை யுடைத்தான சேனைகளானவை |
| நடுங்கும் ஒலி | நடுங்குகிற சத்தமும் |
| விண்ணுள் | விண்ணுலகத்திலே |
| ஏண் உடை தேவர் | மதிப்பராக எண்ணப்பட்ட தேவர்கள் |
| வெளிப்பட்ட ஒலி | (யுத்த விநோதம் காண்கைக்காக) வெளிப்பட்ட ஓசையும் ஆயின. |

*** கண்ணபிரான் பாரதப்போர் நிர்வஹித்தருளின சதிரைப் பேசுகிறாரிப்பாட்டில். மல்லர்கள் ஒருவரோடொருவர் பொருது நெரிந்து விழுந்த வோசை அப்போது வலிதாயிருந்தது. வீரபுருஷர்கள் நிறைந்த ராஜஸேனைகளானவை "க்ருஷ்ணன் ஸாரதியாய் நிற்கிறான்" என்று கேட்டவாறே குடல் குழம்பிக் கூப்பிட்ட வொலி மிகுந்திருந்தது. விண்ணவர்கள் இந்த யுத்தத்தின் அதிசயம் காண்கைக்காக வெளிப்பட்டு நின்று ஸ்தோத்ரம் பண்ணுகிற முழக்கம் விஞ்சியிருந்தது. ஆக இத்தகைய கோஷங்கள் நிரம்பப்பெற்று நடந்தது பாரதப் போர் என்றதாயிற்று. (௫)

3375 போழ்துமெலிந்த புன்செக்கரில் * வான்திசை சூழுமெழுந்து உதிரப்புனலா * மலை கீழ்துபிளந்த சிங்கமொத்ததால் * அப்பன் ஆழ்துயர்செய்து அசுரைக்கொல்லுமாறே. (௬)

| | |
|---|---|
| போழ்து மெலிந்த | போதுபோனவாறே |
| புன் செக்கரில் | செக்கர் வானமிடுகிறவளவிலே |
| வான் திசை | ஆகாசமும் திக்குக்களும் |
| சூழும் எழுந்து | சூழக்கிளம்பி |
| உதிரம் புனல் ஆ | ரத்த வெள்ளமாம்படி |
| அப்பன் | ஆச்ரிதபக்ஷபாதியான நரஸிம்ஹ மூர்த்தி |

| | |
|---|---|
| ஆழ் துயர் செய்து | அளவிறந்த துன்பத்தை விளைத்து |
| அசுரை கொல்லும் ஆறு | இரணியாசுரனைக் கொன்ற விதமானது |
| மலை கீழ்து பிளந்த சிங்கம் ஒத்தது | ஒரு மலையைக் கீழேயிட்டு அதன் மேலேயிருந்து அம்மலையைக் கீண்ட சிங்கம் போன்றிருந்தது, |
| ஆல் | ஆச்சரியம். |

*** ப்ரஹ்லாதாழ்வானுக்காக இரணியனை வதைக்கும் போதுண்டான அதிசயத்தைக் கூறுவதிப்பாட்டு. பொழுது போய் செக்கர் வானமிடுகிறவளவிலே [இரணியனது வரத்தில் அகப்படாத ஸந்த்யா காலத்திலே] பள்ளங்கண்டவிடமெங்கும் வெள்ளம் பரக்குமா போலே ஆகாசமும் திசைகளும் நிரம்ப ரக்த வெள்ளம் கொழித்துப் பரம்பும்படி, ஒரு மலையைக் கீழேயிட்டுக்கொண்டு மேலேயிருந்து அத்தை ஒரு மலை பிளக்கின்றதோ வென்னலாம்படி வியாபரித்தபடி யென்னே! என்று வியக்கிறார். கீழ்து—கிழித்து என்றுமாம். இற்றடியில் 'அசுரரை' என்பது பாடமன்று; அசுரை என்றே பாடம். தொகுத்தல் விகாரம். அசுரனை யென்றபடி. (௬)

3376 மாறுநிரைத்து இரைக்கும்சரங்கள் * இன நூறுபிணம் மலைபோல்புரள * கடல் ஆறுமடுத்து உதிரப்புனலா * அப்பன் நீறுபட இலங்கைசெற்றநேரே. (௭)

| | |
|---|---|
| அப்பன் | ஸ்வாமியான ஸ்ரீ ராமபிரான் |
| இலங்கை நீறு பட செற்ற நேர் | லங்காபுரி பஸ்மமாம்படி த்வம்ஸம் பண்ணின நேர்த்தி (எங்ஙனே யிருந்ததென்றால்) |
| மாறு நிரைத்து இரைக்கும் சரங்கள் | எதிரெதிராக நிரைக்கப்பட்டு சப்திக்கிற சரங்களாலே |
| இனம் நூறு பிணம் | இனமினமாய் நூறு நூறான ராக்ஷஸப்பிணங்களானவை |
| மலை போல் புரள | மலை மலையாகப் புரண்டுவிழவும் |
| கடல் | கடலானது |
| உதிரம் புனல் ஆ ஆறு மடுத்து | ரக்த வெள்ளத்தாலே நிரம்பி ஆறுகளிலே எதிர்த்தோடும் படியாகவுமிருந்தது. |

* * * இலங்கையைப் பாழ்படுத்தின விதம் வியந்து கூறப்படுகிறது இதில். ஓயாதே அம்புகளைப் பொழிகையாலே அம்புகளானவை ஒன்றோடொன்று தாக்கி அதினாலெழுந்தவொலி மிசைத்தது. அரக்கர் பிணங்களானவை நூறு நூறு இனமினமாக மலைபோலே புரண்டு வீழ்ந்தன. கடல் ரத்த வெள்ளத்தாலே நிரம்பி ஆறுகளிலே வரவெதிர்க்க நின்றது. பிராட்டி * சுஇரெணெவ ஶுஂஞெயம் ஸூபா நவஷ்ரயீ ஹவெஸி * என்று சொன்னபடியே சுடுகாடாயிற் றென்கிறார் இலங்கை நீறுபட வென்று. (எ)

3377 நேர்சரிந்தான் கொடிக்கோழிகொண்டான் * பின்னும்
நேர்சரிந்தான் எரியுமனலோன் * பின்னும்
நேர்சரிந்தான் முக்கண்மூர்த்திகண்டீர் * அப்பன்
நேர்சரிவாணன் திண்டோள்கொண்டவன்றே. (அ)

| | |
|---|---|
| அப்பன் | ஸ்வாமியான கண்ணபிரான் |
| நேர் சரி வாணன் | முதுகுகாட்டியோடின பாணாஸுரனுடைய |
| திண்தோள் கொண்ட அன்று | திண்ணிய தோள்களைத் துணித்து வென்றி கொண்ட அக்காலத்திலே |
| கோழி கொடி கொண்டான் | மயிலைக் கொடியாகக் கொண்ட ஸுப்ரம்மணியன் |
| நேர் சரிந்தான் | எதிர்நில்லாமல் சாய்ந்துபோனான்; |
| பின்னும் | அதற்குமேலே |
| எரியும் அனலோன் | ஜ்வலித்துக்கொண்டிருந்த அக்நியும் |
| நேர் சரிந்தான் | எதிர் நில்லாமல் சரிந்தான்; |
| பின்னும் | அதற்குமேலும் |
| முக்கண் மூர்த்தி | முக்கண்ணனான சிவபிரானும் |
| நேர் சரிந்தான் கண்டீர் | அப்படியே முதுகிட்டுப் போனான்கிடீர். |

* * * பாணாஸுரயுத்த விஜயவ்ருத்தாந்தம் கூறுவதிப்பாட்டு. கோடிக்கோழிகொண்டான்—கோழியென்று மயிலுக்கும் பெயர். மயூரத்வஜனான ஸுப்ரஹ்மண்யன் முந்துற முன்னம் பங்கப்பட்டானென்கிறார். [பின்னும் எரியுமனலோன் நேர்சரிந்தான்] ஈடு—"அவ்வளவிலே நாற்பத்தொன்பது அக்நிகளும் பெரிய கிளர்த்தியோடே யெரிந்து தோற்றிற்று; அவையுமெல்லாம் பின்னிட்டன." பரிவாரங்களெல்லாம் பங்கப்பட்டொழிந்த பின்பு தலைவனும் தொலைந்தானென்கிறது மூன்றாமடி. (அ)

3378 அன்றுமண்ணீரெரிகால் விண்மலைமுதல் * அன்றுசுடர் இரண்டுபிறவும் * பின்னும்
அன்று மழையுயிர்தேவும்மற்றும் * அப்பன் அன்றுமுதல் உலகம்செய்ததுமே. (கூ)

| | |
|---|---|
| அப்பன் | ஸ்வாமியான ஸர்வேச்வரன் |
| முதல் | முந்துறமுன்னம் |
| உலகம் செய்ததும் | உலகங்களைப் படைத்ததும், |
| அன்று | அந்த வொரு க்ஷணத்திலேயாம்; |
| மண் நீர் எரி கால் விண் | பஞ்ச பூதங்களையும் |
| மலை முதல் | மலைகள் முதலானவற்றையும் |
| செய்ததும் | படைத்ததும் |
| அன்று | அந்த க்ஷணத்திலேயாம்; |
| சுடர் இரண்டு | சந்திரன் ஸூர்யன் ஆகிற இரண்டு சுடர்ப்பொருள்களையும் |
| பிறவும் | மற்றுமுள்ள நக்ஷத்ராதி தேஜஸ் பதார்த்தங்களையும் |
| செய்ததும் | உண்டாக்கினதும் |
| அன்று | அந்த க்ஷணத்திலேயாம்; |
| பின்னும் | அதுக்குமேலே |
| மழை | மேகங்களையும் |
| உயிர் | மழையினால் பிழைக்கும் உயிர்களையும் |
| தேவும் | மழைக்குக் கடவர்களான தேவர்களையும் |
| மற்றும் | மற்றுமுள்ள திர்யக் ஸ்தாவரங்களையும் |
| செய்ததும் | உண்டாக்கினதும் |
| அன்று | அந்த க்ஷணத்திலே. |

* * * இப்பாட்டின் கருத்தை இரண்டு வகையாக நிர்வஹிப்பர்கள் பூருவாசாரியர்கள். ஆதிஸ்ருஷ்டியைச் சொல்லுகிறதாக ஒரு நிர்வாஹம். கீழே பாணாஸுரனை வென்றி கொண்ட விருத்தாந்தம் சொல்லியிருப்பதாலும் மேற்பாட்டிலும் க்ருஷ்ணாவதார சரிதமொன்று சொல்லியிருப்பதாலும் இப்பாட்டையும் கீழ்ப்பாட்டோடே சேஷமாக்கி பாணாஸுரனுடைய செருக்கையடக்கினவன்று தான் ஜகத்து உண்டாயிற்றென்று ஆழ்வாரருளிச் செய்கிறார். என்பதாக மற்றொரு நிர்வாஹம். இந்த நிர்வாஹத்தின்படி 'அன்று' என்று இப்பாட்டில் அடிதோறும் வருவது வாணனை வென்ற வக்காலத்திலே என்ற பொருளிலாம். ஆத்ய ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறதாக நிர்வஹிக்கிற பக்ஷத்தில் அன்றே என்றது 'எல்லா ஸ்ருஷ்டிகளும் ஏகக்ஷணத்திலேயே' என்றபடி. "க்ரமஸ்ருஷ்டியன்று; யுகபத் ஸ்ருஷ்டியென்று கருத்து" என்பது பன்னீராயிரவுரை. (கூ)

3379 மேய்நிரைகீழ்புகமாபுரள * சுனை வாய்நிறைநீர் பிளிறிச்சோரிய * இன
ஆநிரைபாடி அங்கேயோடுங்க * அப்பன் தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே. (ய)

| | | | |
|---|---|---|---|
| மேய்நிரை | மேய்கிற பசுக்களானவை | இனம் ஆ நிரை பாடி அங்கே ஒடுங்க | மிகவும் ஸம்ருத்தமான திருவாய்ப் பாடியானது அங்கே அடங்கும் படியாகவும் |
| கீழ் புக | கீழே யொதுங்கும்படியாகவும் | அப்பன் | கண்ணபிரான் |
| மாபுரள | (கீழது மேலதாக மலையைப் பிடிக்கையாலே மலையிலுள்ள) மிருகங்கள் புரண்டுவிழும்படியாகவும் | தீ மழை காத்து | விநாச ஹேதுவான மழையைத் தடுக்க |
| சுனைவாய் நிறை நீர் | சுனைகளினுடைய வாயளவும் நிறைந்த நீரானது | | |
| பிளிறி சொரிய | பெரிய ஆரவாரத்தோடு சொரியும்படியாகவும் | குன்றம் எடுத்தான் | கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கினன். |

* * * திருவாய்ப்பாடியில் ஆயர்கள் வழக்கப்படி இந்திரபூஜைக்கென்று சமைத்த சோறு முதலியவற்றையடங்கலும் கண்ணபிரான் அவ்விந்திரனுக்கு இடவொட்டாமல் கோவர்த்தன மலைக்கு இடுவித்துப் பின்பு தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுது செய்துவிட, பிறகு இந்திரன் பசிக்கோபத்தினால் மேகங்களை ஏவி ஏழுநாள் விடா மழை பெய்விக்க, கண்ணபிரான் அக் கோவர்த்தனகிரியைக் குடையாகத் தூக்கிக் கோக்களையும் கோவலரையும் காத்தருளினனென்றவரலாறு ப்ரஸித்தம். அப்போதைய நிலைமையை இப்பாட்டில் அநுபவிக்கிறார். மேய்கிற பசுக்களானவை புல்லும் உமிழாதே அசையிட்டுக்கொண்டு கீழே புகவும், மலைமேலுள்ள மிருகங்களெல்லாம் மலைகுடையாகக் கவிழ்ந்தபடியாலே கீழே புரண்டு விழவும், சுனைகள் வாயளவும் நிறைந்த நீரைப் பெரிய கோஷத்தோடு சொரியவும், திருவாய்ப்பாடியடங்கலும் அங்கே யொடுங்கவும் அப்பன் தீமழை காத்துக் குன்றமெடுத்தானென்றதாயிற்று. (ய)

3380 *குன்றமெடுத்தபிரான் அடியாரோடும் * ஒன்றிநின்ற சடகோபனுரைசெயல் *
நன்றிபுனைந்த ஓராயிரத்துள்ளிவை * வென்றிதரும்பத்தும் மேவிக்கற்பார்க்கே. (கக)

| | | | |
|---|---|---|---|
| குன்றம் எடுத்த பிரான் | கோவர்த்தன மலையை யெடுத்த கண்ணபிரானுடைய | ஓர் ஆயிரத்துள் நன்றி புனைந்த | ஆயிரத்தினுள்ளே நலம் மிக்கதான |
| | | இவை பத்தும் | இத்திருவாய்மொழி |
| அடியாரொடும் | அடியார்களோடு கூட | மேவி கற்பார்க்கு | தன்னை விரும்பிக் கற்குமவர்களுக்கு |
| ஒன்றி நின்ற | ஒருமைப்பட்டிராநின்ற | | |
| சடகோபன் | நம்மாழ்வாருடைய | வென்றி தரும் | பலவகையான விஜயத்தையுங் கொடுக்கும். |
| உரை செயல் | அருளிச்செயலாய் | | |

* * * "குன்ற மெடுத்த பிரானடியாரொடும் ஒன்றிநின்ற சடகோபன்" என்ற சொல்லமைப்பை நோக்கித் திருக்குருகைப் பிரான் பிள்ளான் ஆறாயிரப்படியில் அருளிச் செய்

கிறார் "ஆழ்வார்தாமும் கோவர்த்தனத்தின் கீழே ஆயரோடே கூடிநின்று...—" என்று. குன்றமெடுத்த பிரானுடைய அடியார்கள் குன்றமெடுத்த காலத்திலுமுண்டு, பிற்காலத்திலு முண்டு. குன்றமெடுத்த காலத்தில் அக்குன்றத்தின் கீழே யொதுங்கி நின்றவர்களே அடியா ராவர்; அவர்களோடு ஒன்றிநின்ற சடகோபன் என்க. "வேன்றிதரும் பத்தும் மேவிக் கற்பார்க்கே" என்று ஆழ்வாரருளிய பலச்ருதிக்கேற்ப இற்றைக்கும் இத்திருவாய்மொழியை ஜபித்து விஜயஸித்தி பெறுவது அநுபவஸித்தம். (கக)

## ஏழாம்பத்து—ஐந்தாந் திருவாய்மொழி கற்பாரிராமபிரானை.

கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய சில விஜய சேஷ்டிதங்களைக் காணப் பெற்று அநுபவித்தவாழ்வார் அப்படிப்பட்ட மற்றுஞ் சில சரிதைகளையும் வாயாரப்பேசி அந்தோ! இப்படிப்பட்ட பகவத் குணங்களை யநுபவிக்க இட்டுப் பிறந்தும் ஸம்ஸாரிகள் அந்யபர ராயிருப்பது என்னோ வென்று வியந்தும் திருவுள்ளம் நொந்தும் பேசுகிறதாய்த்து இத்திரு வாய்மொழி.

3381 * கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ ?*
புற்பாமுதலாப் புல்லெறும்பாதியொன்றின்றியே *
நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும் *
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்பெற்றநாட்டுளே. (க)

| | | | |
|---|---|---|---|
| புல் பா முதல் ஆ | புல்லாகிற பதார்த்தம் முதலாகவும் | ஒன்று இன்றியே | ஒருவிதமான ஸாதநாநுஷ்டானமுமில்லாமலிருக்கச் செய்தேயும் |
| புல் எறும்பு ஆதி | மிக அற்பமான எறும்பு முதலாகவும் | நான்முகனார் பெற்ற நாட்டுளே | பிரமன் படைத்த இவ்வுலகுக்குள்ளே |
| நல் பால் அயோத்தியில் வாழும் | (ராமகுணங்கள் நடையாடுகிற) நல்ல தேசமான அயோத்யா புரியில் வாழ்கிற | நல் பாலுக்கு உய்த்தனன் | நல்ல ஸ்வபாவத்தையுடைத் தாம்படி பண்ணினவன்; (ஆதலால்) |
| சராசரம் முற்றவும் | ஸ்தாவர ஜங்கமங்களானவை யெல்லாவற்றையும் | கற்பார் | (உலகில்) கற்க விரும்புமவர்கள் |
| | | இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ | (குணக்கடலாகிய) ஸ்ரீராமனைத்தவிர மற்றொரு வ்யக்தியைக் கற்க நினைப்பார்களோ? |

* * * இராம பிரானுடைய ஒரு விலக்ஷணமான தன்மையை யருளிச் செய்கிறாரிதில் தசரத சக்ரவர்த்தியின் கட்டளையின்படி இராமபிரானைத் தேரிலேற்றிக்கொண்டு போய்க் கங்கைக்கரையில் விட்டுத் திரும்பி வந்த ஸுமந்த்ரன் சக்ரவர்த்தியிடம் சொல்லுகிறான்—[illegible] விஷயே தே மஹாராஜ! ராமவ்யஸநகர்சிதா:, அபி வ்ருக்ஷா: பரிம்லாநாஸ் ஸபுஷ்பாங்குர கோரகா:, உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச, பரிசுஷ்கபலாசாநி வநாந்யுபவநாநி ச * என்றான். மஹாராஜரே! உம்முடைய திருக்குமாரன் நாட்டைவிட்டுக் காட்டுக்குப் புறப்பட்டுச் செல்லுகிறானேயென்கிற துயரத்தினால் மரங்களெல்லாம் வாடியுலர்ந்து போயின; நதிகள், குளங்கள், குட்டைகளெல்லாம் கரையருகிலும் அடிவைக்க வொண்ணாதபடி கொதிப் படைந்தன; சிறிய தோட்டங்கள் பெரிய தோட்டங்களென்கிற வாசியின்றிக்கே பொழில்களெல்லாம் இலையுலர்ந்து அழகழியப் பெற்றன என்றான். இப்படி அசேதநவஸ்துக்களையுங் கூட விகாரப்படுத்திக் கொண்டே காட்டுக்கெழுந்தருளினவன் பதினாலாண்டு கடந்து பிறகு மீண்டு திருவயோதிக்கு எழுந்தருளுகையில் * அகாலபலிநோ வ்ருக்ஷா:—அகால பலிநோ வ்ருக்ஷா: * என்னும்படியாயிற்று. ஆகவிப்படி தன்னுடைய விச்லேஷத்தில் வாடியுலர்ந்தும்

ஸம்ச்லேஷத்தில் செறிப்புற்றேங்கியும் நின்றன. அசேதனங்களென்றால் அவன்றன்னுடைய குணப்பெருமையை என்னென்று சொல்லுவது! புற்பாமுதலா—பா என்று வஸ்துவைச் சொல்லுகிறது; புல்லாகிற வஸ்து முதற்கொண்டு என்றபடி. அன்றியே, பா—பரம்பின, புல் முதலா என்றும் யோஜிப்பதுண்டு. ஒன்றின்றியே நிர்ஹேதுகமாகவென்றபடி. நான்முகனார் பெற்ற நாட்டுளே நற்பாலுக்கு உய்த்தனன்—நற்பாவென்றது நல்ல பான்மை யென்றபடி. விலக்ஷணமான ஸ்வபாவம்; அதாவது இராமபிரானுடைய குணங்களையே தாரகபோஷக போக்யமாகக்கொண்டிருக்கையாகிற வைலக்ஷண்யம். இப்படிப்பட்ட தன்மைக்கு ஆளாம்படி செய்தனன் என்கை. இங்கே நான்முகனார் பெற்ற நாட்டுளே' என்றதற்கு ப்ரயோஜனமென்? என்னில்; பிரமனை நியாமகனாக்கி அவனுக்கு வசப்பட்டதாம்படி செய்திருக்கிற இந்த நாட்டிலே புல்லெறும்பு முதலானவற்றுக்கு வேறே உணவுகள் நியதங்களாயிருக்கவும் அந்த நியதியை (நாட்டின் தன்மையை)த் தவிர்த்தருளினபடி சொல்லுகிறது. (க)

3382 நாட்டில்பிறந்தவர் நாரணற்காளன்றியாவரோ *
நாட்டில்பிறந்து படாதனபட்டுமனிசர்க்கா *
நாட்டைநலியுமரக்கரை நாடித்தடிந்திட்டு *
நாட்டையளித்துய்யச்செய்து நடந்தமைகேட்டுமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| நாட்டில் பிறந்து | (தன்வாசியறியாத இக்கொடிய வுலகத்திலே வந்து பிறந்து | உய்ய செய்து | உஜ்ஜீவனப்படுத்தி |
| படாதன பட்டு | ஸம்ஸாரிகளும் அநுபவியாத கிலேசங்களை யநுபவித்து | நடந்தமை கேட்டும் | பின்பு திருநாட்டுக்கு நடந்தபடியைக் கேட்டிருந்தும் |
| மனிசர்க்கு ஆ | செய்தநன்றியறியாத மனிசர்கள்க்காக | நாட்டில் பிறந்தவர் | (அப்பெருமானுடைய திருக்குணங்கள் நடையாடுகிற) நாட்டிலே பிறந்தவர்கள் |
| நாட்டை நலியும் அரக்கரை நாடி தடிந்திட்டு | உலகத்தை ஹிம்ஸிக்கின்ற ராவணாதி ராக்ஷஸர்களை ஆராய்ந்து சென்று கொன்று | நாரணற்கு ஆள் அன்றி ஆவரோ | நாராயணனை அந்த ஸ்ரீராமனுக்கல்லது மற்றொருவர்க்கு ஆட்படுவர்களோ? |
| நாட்டை அளித்து | (இப்படியாக) நாட்டைரக்ஷித்து | | |

* * * உய்யச்செய்து நடந்தமை யென்றது—நெடுநாள் இருந்து, தன்னாலல்லது செல்லாதபடி பண்ணி அவர்களை யெல்லாம் விட்டுப்போகாதே கூடவே கொண்டுபோனபடியைச் சொன்னவாறு. (உ)

3383 கேட்பார்கள்கேசவன்கீர்த்தியல்லால் மற்றும்கேட்பரோ *
கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும் *
சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன் * திருவடி
தாட்பாலடைந்ததன்மை யறிவாரையறிந்துமே. (ங)

| | | | |
|---|---|---|---|
| கேட்பார் | எம்பெருமானுடைய நிந்தைகளையே காதாரக்கேட்கவேணுமென்கிற விருப்பமுடையவர்களுக்குங் கூட | திரு அடி | ஸ்வாமியான கண்ணபிரானுடைய |
| செவி சுடு | கர்ணகடோரமான | தாள் பால் அடைந்த தன்மை அறிவாரை அறிந்தும் | திருவடிகளிலே ஸாயுஜ்யம் பெற்றபடியை யறிவாரை அறிந்து வைத்தும், |
| கீழ்மை வசவுகளே வையும் | மிகத் தண்ணிய தூஷணைகளையிட்டு தூஷிக்குமவனாய் | கேட்பார்கள் | நல்லது கேட்க வேணுமென்றிருக்குமவர்கள் |
| சேண் பால் பழம் பகைவன் சிசுபாலன் | நெடுங்காலத்துப் பகைவனான சிசுபாலனுங்கூட | கேசவன் கீர்த்தி அல்லால் மற்றும் கேட்பரோ | எம்பெருமானுடைய கீர்த்திகளை யொழிய வேறொன்று கேட்பாரோ? |

* * * நிச்சலும் நிந்திப்பது தவிர வேறொன்றுமறியாத சிசுபாலனையுமுட்படத் தன் திருவடிகளிலே சேர்த்துக்கொண்ட மஹாகுணத்தையறிந்தவர்கள் அப்படிப்பட்ட குணவானு

டைய திருக்குணங்களையன்றே காதாரக் கேட்கவேணுமென்கிறார். கேட்பார்கள் என்றது—செவிடராயிருக்கை யன்றிக்கே செவிப்புலனையுடையவர்கள் என்றபடி. கேசவன் கீர்த்தியைக் கேட்பதே காதுக்கு ப்ரயோஜனமென்றதாயிற்று. * தொண்டர்க்கு இனியானைக் கேளாச் செவியல்ல கேட்டாமே * என்றார் திருமங்கையாழ்வாரும். காது குளிரக் கேட்கவேண்டிய கேசவன் கீர்த்திகளில் ஒரு கீர்த்தியை யெடுத்துரைக்கின்றார் மேல் மூன்றடிகளில். திருவடி தாட்பாலடைந்த=திருவடியென்றது ஸ்வாமி வாசகம். * பூதத்திருவடி தாள்கள் * என்ற இராமானுசநூற்றந்தாதியுங் காண்க. (௩)

3384 தன்மையறிபவர் தாமவற்காளன்றியாவரோ *
பன்மைப்படர்பொருளாதுமில் பாழ்நெடுங்காலத்து *
நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணி * தன்னுள்ளே
தொன்மைமயக்கிய தோற்றியசூழல்கள்சிந்தித்தே. (௪)

| | |
|---|---|
| பன்மை படர் பொருள் ஆதும் இல் பாழ் நெடுங் காலத்து | பலவகைப்பட்ட விரிவான பதார்த்தங்கள் ஒன்றுமில்லாதபடி வெகுகாலம் சூந்யமாயிருந்தபோது |
| நன்மை புனல் பண்ணி | நன்மை மிகுந்த காரண ஜலத்தை முந்துற முன்னம் ஸ்ருஷ்டித்து (பிறகு) |
| நான் முகனை பண்ணி | பிரமனைப் படைத்து |
| தன் உள்ளே | தன்னுடைய ஸ்வரூபத்தின் ஏக தேசத்திலே |
| தொன்மை மயக்கிய | பண்டு தான் ஸம்ஹரித்த பதார்த்தங்களை |
| தோற்றிய | பழையபடி உண்டாக்கின |
| சூழல்கள் | இப்படிப்பட்ட மஹாகுணங்களை |
| சிந்தித்து | சிந்தனை செய்து |
| தன்மை அறிபவர் தாம் | அவனுடைய அஸாதாரண லக்ஷணத்தைஅறியவல்லவர்கள் |
| அவற்கு அன்றி ஆள் ஆவரோ | அப்பெருமானுக்கொழிய வேறொருவனுக்கு அடிமைப் படலாகுமோ? |

* * * ப்ரளயத்திலே மங்கிக்கிடந்த ஜகத்தை மீளவுமுண்டாக்கின மஹா குணத்தை யறிந்து வைத்தால் இப்படிப்பட்ட குணசாலிக்கேயன்றே ஆளாகப் பெறவேணுமென்கிறார் தன்மையறிபவர் என்றது—தத்வஸ்திதியை உள்ளபடியே யறியுமவர்கள் என்றபடி. "விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும், பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதி ஸம்யுதா" என்கிறபடியே நம்முடைய கரணக்ராமங்கள் பகவத் விஷயத்தில் அந்வயிப்பதற்காகவே படைக்கப்பட்டன வென்கிற தத்துவத்தை யறியும் விவேகிகள் என்றதாயிற்று. மற்றும் பலவகையாகவும் நிர்வஹிப்பதுண்டு. (௪)

3385 சூழல்கள்சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ *
ஆழப்பெரும்புனல் தன்னுளழுந்தியஞாலத்தை *
தாழப்படாமல் தன்பாலொருகோட்டிடைத்தான்கொண்ட *
கேழல்திருவுருவாயிற்றுக் கேட்டுமுணர்ந்துமே. (௫)

| | |
|---|---|
| பெரு புனல் தன்னுள் ஆழ அழுந்திய ஞாலத்தை | எல்லையற்ற பிரளய ஜலத்திலே ஆழமாக அழுந்திக் கிடந்த பூமியை |
| தாழப்படாமல் | அநர்த்தப்படாதபடிக்கு |
| தன் பால் ஒரு கோடு இடை தான் கொண்ட | தன் திருமேனியில் ஏகதேசமாயிருப்பதொரு கோட்டினிடத்திலே தானாகவே இடந்தெடுத்துக் கொண்ட |
| கேழல் திரு உரு ஆயிற்று | ஸ்ரீ வராஹரூப மெடுத்தபடியை |
| கேட்டும் உணர்ந்தும் | இதிஹாஸ புராண முகங்களாலே கேட்டும் மனனம் பண்ணியும் வைத்து |
| சூழல்கள் சிந்திக்கில் | தம் தம்முடைய அபிமதங்களைச் சித்திப்பதற்கு விரகு பார்க்குமளவில் |
| மாயன் கழல் அன்றி சூழ்வரோ | ஆச்சரிய சேஷ்டிதனான அப்பெருமானுடைய திருவடிகளையொழிய வேறொன்றை ஆச்ரயிப்பரோ? |

* * * அழிந்த ஜகத்தை யுண்டாக்கினவளவேயல்லாமல், அந்த ஜகத்தை ப்ரளயங் கொள்ள மஹாவராஹமாயெடுத்து ரக்ஷித்த மஹாகுணத்தை யநுஸந்தித்தால் அவன். திருவடிகளே தஞ்சமென்றிருக்க வேண்டாவோ வென்கிறார். சூழல்கள் சிந்திக்கில்—சூழலாவது உபாயம்; 'நமக்கொரு உஜ்ஜீவநோபாயம் சேமித்துவைத்துக் கொள்ள வேணுமே' என்று சிந்திப்பாருண்டே; அங்ஙனே சிந்தைசெய்யுமளவில் என்றபடி.

ஆழப்பெரும்புனல் தன்னுளழுந்திய=ஆழமான மஹார்ணவத்திலே அழுந்திய என்றாவது, பெரும்புனல் தன்னுள் ஆழவழுந்திய என்றாவது யோஜிப்பது. தாழப்படாமல்—காலதாமதத்திலே உருமாய்ந்து போகாதபடி; அனர்த்தப்படாதபடி; தரைப்படாதபடி. ஒருகோட்டிடை= கோடு—தம்ஷ்ட்ரா.

கேட்டும் உணர்ந்தும்=கேட்பது ஒருகால்; அதனை மறவாமல் மேன்மேலும் ஸ்மரிப்பது உணர்வாம். (ரு)

3386 கேட்டுமுணர்ந்தவர் கேசவர்க்காளன்றியாவரோ *
வாட்டமிலாவண்கை மாவலிவாதிக்கவாதிப்புண்டு *
ஈட்டங்கொள்தேவர்கள் சென்றிரந்தார்க்கிடர்நீக்கிய *
கோட்டங்கைவாமனனாய்ச் செய்தகூத்துக்கள்கண்டுமே. (சு)

| | | | |
|---|---|---|---|
| வாட்டம் இலா வண் கை மாவலி வாதிக்க | ஒருகாலும் குறையாத ஔதார்யத்தையுடைய மஹாபலியானவன் (தன் செருக்காலே) நலிய | கோடு அம் கை வாமனன் ஆய் செய்த கூத்துக்கள் கண்டும் | ஏற்றகையையுடைய ஸ்ரீவாமன மூர்த்தியாய்ச் செய்தருளின மநோஹர சேஷ்டிதங்களை யநுஸந்தித்து வைத்தும் |
| வாதிப்பு உண்டு | ஹிம்ஸைபட்டு | | |
| ஈட்டம் கொள் தேவர்கள் சென்று இரந்தார்க்கு | திரண்டு சென்று ப்ரார்த்தித்த தேவர்களுடைய | கேட்டும் உணர்ந்தவர் | புராண முகத்தாலே கேட்டும் அறிவுடையராயிருந்தவர்கள் |
| இடர் நீக்கிய | இடரை நீக்குவதற்காக | கேசவற்கு அன்றி ஆள் ஆவரோ | அந்தப்பெருமானுக்கல்லது மற்றொருவற்கு அடிமையாவரோ? |

* * * தன் மேன்மை பாராமல் தான் இரப்பாளனாய் வாமநப்ரஹ்மசாரியாய் மஹாபலியின் செருக்கையடக்கித் தேவர்களைக் காத்தருளின மஹா குணத்தையறிந்து வைத்து மற்றொருவர்க்கு ஆளாக வொண்ணுமோ வென்கிறார்.

வாதிக்க—பாதிக்க; வாதிப்புண்டு—பாதைப்பட்டு. பாதா என்கிற வடமொழிப் பகுதியுணர்க. ஈட்டங்கொள் தேவர்கள் சென்றிரந்தார்க்கு— சென்றிரந்த ஈட்டங்கொள் தேவர்கட்கு என்று யோஜித்துக்கொள்வது.

[கோட்டங்கை] கோடு+அம் கை=கோட்டங்கை; கோடு என்று கொள்ளுகையைச் சொன்னபடி; அதாவது கையேற்கை. செய்த கூத்துக்கள்=கூத்துப்போலே மநோஹரமான சேஷ்டிதங்களை யென்றபடி. கண்டும்=கண்ணாலே காண்பது போலவே சாஸ்த்ரங்களால் அறிகையும் ஆஸ்திகர்கட்கு ப்ரத்யக்ஷமேயாதலால் இங்ஙனே சொல்லக் குறையில்லை. (சு)

3387 கண்டுந்தெளிந்துங்கற்றார் கண்ணற்காளன்றியாவரோ *
வண்டுண்மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்குவாழுநாள் *
இண்டைச்சடைமுடி யீசனுடன்கொண்டுசாச்செல்ல *
கொண்டங்குத்தன்னோடும் கொண்டுடன்சென்றதுணர்ந்துமே. (எ)

| | | | |
|---|---|---|---|
| வண்டு உண் மலர் தொங்கல் மார்க்கண்டேயனுக்கு | வண்டுகள் மதுபானம் பண்ணுகிற பூமாலையையுடைய (பாலகனை) மார்க்கண்டேயனுக்கு | இண்டை சடை முடி ஈசன் | நிபிடமான ஜடாமண்டலத்தை யுடையவரான சிவபிரான் |
| வாழும் நாள் | ஆயுளுக்காக | உடன் கொண்டு உசா செல்ல | தன்னோடுகூட அவனை யழைத்துக்கொண்டு பேசிக்கொண்டே செல்ல |

| | | | |
|---|---|---|---|
| அங்கு | அந்நிலையிலே | உணர்ந்தும் | புராணாதி முகத்தாலே யறிந்தும் |
| கொண்டு | அவனை விஷயீகரித்து | கண்டும் தெளிந்தும் கற்றார் | கண்ணாரக் கண்டும் நெஞ்சாரத் தெளிந்தும் கற்றவர்கள் |
| தன்னொடும் கொண்டு | தன்னோடே கூட்டிக் கொண்டு | கண்ணற்கு அன்றி ஆள் ஆவரோ | கண்ணபிரானுக்கல்லதுவேறொருவர்க்கு அடிமையாவரோ? |
| உடன் சென்றது | பிரியாதே யிருந்தபடியை | | |

* * * தேவதாந்தர பஜநம் பண்ணிக் கிடந்த மார்க்கண்டேயனை விஷயீகரித்தலாகிற மஹாகுணத்தை யநுஸந்தித்தால் அப்பெருமானுக்கன்றி யாளாவரோ வென்கிறார்.

"கண்டுந் தெளிந்துங்கற்றார்" என்றதை உருபு பிரித்துக் கூட்டி "கற்று தெளிந்து கண்டார்" என்று அந்வயிப்பர் நம்பிள்ளை. முதலிலே யொன்றைக் கற்பது; பிறகு அதிலே மனனத்தினால் தெளிவு பிறப்பது; பிறகு அவ்வர்த்தம் கண்ணாற் கண்ட மாதிரியேயாவது; ஆக விங்ஙனே முறையாதலால். ப்ரிய ஹிதங்களை ச்ரவணம் பண்ணித் தங்களிலே மனனம் பண்ணி அற்றை ஸாக்ஷாத்கரித்தவர்கள் கண்ணனுக்கன்றி யாளாவரோ? என்கை.

சில புராணங்களில் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது, பரமசிவனே மார்க்கண்டேயனுக்கு அபயமளித்ததாகக் காணப்படினும், மஹாபாரதத்தில் ஆரண்ய பர்வத்தில் நூற்றுத் தொண்ணூற்றிரண்டாமத்யாயத்தில் மார்க்கண்டேயன் தானே தருமபுத்திரரை நோக்கிச் சொல்லுமளவில் ஸ்ரீமந்நாராயணனுடைய வார்த்தைகளை அநுவதிக்குமிடத்து "பித்ருபக்தோஸி விப்ரர்ஷே! மாம் சைவ சரணம் கத:" * [பித்ருபக்தோஸி விப்ரர்ஷே! மாம்சைவ சரணம் கத:] என்றுள்ள ச்லோகத்தினால் இவன் ஸ்ரீமந் நாராயணனைச் சரணம் புகுந்தவனென்பது நன்கு விளங்கும். ஸ்ரீபாகவதத்திலும் பன்னிரண்டாம் ஸ்கந்தத்தில் எட்டாமத்தியாயத்தில் "ஆராதயந்ஹ்ருஷீகேசம் ஜிக்யே ம்ருத்யும் ஸுதுர்ஜயம்" என்று ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று. ஸ்ரீமந் நாராயணனை ஆராதித்து, வெல்லவொண்ணாதயமனையும் வென்றொழித்தான் என்றது.

இப்பாட்டில் "இண்டைச் சடைமுடி யீசன்" என்றருளிச் செய்ததன் கருத்தை அடியறிந்து ஆசாரியர்கள் வெளியிட்டருளின அழகு வாசாமகோசரம். ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்தி காண்மின்;— "மாதா பிதாக்களாலே மஹாதபஸா லப்தனாய் அநவரதம் உபலாலிதனாயிருந்த மார்க்கண்டேயன் தன்னுடைய ஆயுரர்த்தமாக ருத்ரனை யாச்ரயிக்க, அவனும் 'மத்ஸமீஹித ஸித்திக்காக நானும் பரமபுருஷனை நோக்கி தபச்சர்யை பண்ணி வர்த்திக்கிறது' என்று சொல்லித் தன்னுடைய தபோவேஷத்தையுங் காட்டி அவனுடைய திருவடிகளையே ஆச்ரயிப்போம் வாவென்று அவனைக்கொண்டு ருத்ரன் வந்து ஆச்ரயிக்க."

உசாச்செல்ல = உசாவிச் செல்ல உசாவுதல் வார்த்தையாடுதல். (எ)

3388 செல்லவுணர்ந்தவர் செல்வன்றன்சீரன்றிக்கற்பரோ *
எல்லையிலாத பெருந்தவத்தால்பலசெய்மிறை *
அல்லலமரரைச் செய்யுமிரணியனாகத்தை *
மல்லலரியுருவாய்ச் செய்தமாயமறிந்துமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| எல்லை இலாத பெரு தவத்தால் | அபரிமிதமான மஹாதபஸ்ஸுக்களாலே | மல்லல் அரி உரு ஆய் செய்த | பெரிய நரசிங்க வடிவையுடையனாய்க் கொண்டு இருபிளவாகச் செய்த |
| பல செய் மிறை | பலவகையாகச் செய்யப்பட்ட லோகபீடையை யுடையனாய் | மாயம் அறிந்தும் | ஆச்சரியத்தை யறிந்துவைத்தும் |
| அமரரை அல்லல் செய்யும் | (விசேஷித்து) தேவர்களுக்குத் துன்பங்களை யுண்டுபண்ணினவனான | செல்ல உணர்ந்தவர் | பூர்த்தியான ஞானத்தைப் பெற்றவர்கள் |
| இரணியன் ஆகத்தை | ஹிரண்யாஸுரனுடைய உடலை, | செல்வன் தன் சீர் அன்றி கற்பரோ | லக்ஷ்மீபதியான அப்பெருமானுடைய திருக்குணங்களையன்றி வேறொன்றைக் கற்பரோ? |

* * * நரசிங்க மூர்த்தியாய்த் தோன்றி ஆச்ரிதரக்ஷணம் பண்ணின மஹாகுணத்தைப் பேசுகிறாரிதில். செல்லவுணர்ந்தவர் என்றது=உணர்ச்சி எவ்வளவு தூரம் செல்லலாமோ அவ்வளவும் செல்ல விவேகிக்கவல்லவர்கள் என்றபடி. ஐச்வர்ய கைவல்யங்களில் மாத்திரம் நின்று விடாதே எல்லை நிலமான பகவதநுபவம் வரையிலும் உணர்ச்சியைச் செல்லவிட்டவர்கள் என்றபடி. அன்னவர்கள் * திருவுக்குந்திருவாகிய செல்வனுடைய சீர்களையேயன்றோ கற்பார். இப்போது தாம் விவக்ஷித்த சீர் இன்னதென்கிறது மேல் மூன்றடிகளில். அளவிறந்த தபஸ்ஸுக்களைச் செய்து அதனால் அபரிமிதமான வரங்களைப் பெற்று, அப்படி வரங்கொடுத்த தெய்வங்களையும் கண்ணீர்பாயவிட்ட இரணியனது உடலை, பெரியவடிவுகொண்ட நரஸிம்ஹ மூர்த்தியாய் தோன்றிப் பிளந்த ஆச்சரியத்தை யறிந்துவைத்தும் அந்த ஆச்ரிதவாத்ஸல்ய குணத்தையல்லது வேறொன்றைக் கற்பரோ ? (௮)

3389 மாயமறிபவர் மாயவற்காளன்றியாவரோ *
தாயம்செறுமொருநூற்றுவர்மங்க வோரைவர்க்காய் *
தேசமறியவோர்சாரதியாய்ச்சென்று சேனையை
நாசம்செய்திட்டு * நடந்தநல்வார்த்தை யறிந்துமே. (௯)

| | |
|---|---|
| தாயம் செறும் ஒரு நூற்றுவர் மங்க | தாயாதி முறையில் சண்டை செய்து கிளர்ந்த துர்யோதநாதிகள் தொலைய |
| ஓர் ஐவர்க்கு ஆய் | விலக்ஷணர்களான பஞ்ச பாண்டவர்களுக்காகி |
| தேசம் அறிய | ஸகலலோக ப்ரஸித்தமாம்படி |
| ஓர் சாரதி ஆய் சென்று | ஒப்பற்ற ஸாரதியாகப் போய் |
| சேனையை நாசம் செய்திட்டு | எல்லாச் சேனைகளையும் அழியச் செய்து |
| நடந்த நல் வார்த்தை அறிந்தும் | தன்னடிச் சோதிக்கெழுந்தருளினனென்கிற நல்வார்த்தையை யறிந்தும் |
| மாயம் அறிபவர் | மிகவும் ஆச்சரியமான பகவத் கதைகளை யறியுமவர்கள் |
| மாயவற்கு அன்றி ஆள் ஆவரோ | அப்பெருமானுக்கல்லது மற்றொருவர்க்கு அடிமை யாவரோ? |

✢ ✢ ✢ பஞ்சபாண்டவர்களுக்குக் கையாளாயிருந்து இழிதொழில் செய்து பார்த்தஸாரதி யென்று பேர்பெற்றுத் தாழநின்று அநிஷ்டவர்க்கங்களை அகற்றின மஹாகுணத்தைப் பேசுகிறார்.

தாயம் செறும்—தாயப்ராப்தியாலே செறுகிற என்றபடி. பங்காளிமுறையாலே சண்டைசெய்தமையைச் சொன்னபடி.

தேசமறியவோர் சாரதியாய்ச் சென்று— இற்றைக்கும் அர்ச்சாவதாரத்திலுங்கூட அனைவருமறிந்துகொள்ளுமாறு பார்த்தசாரதி யென்று பேர்பெற்று நிற்கிறானன்றே. நடந்த—திருநாடேற வெழுந்தருளின என்றபடி. (௯)

3390 வார்த்தையறிபவர் மாயவற்காளன்றியாவரோ *
போர்த்த பிறப்போடு நோயோடுமூப்பொடிறப்பிவை
பேர்த்து * பெருந்துன்பம்வேரற நீக்கித்தன்தாளின்கீழ்ச்
சேர்த்து * அவன்செய்யும் சேமத்தையெண்ணித்தெளிவுற்றே. (௰)

| | |
|---|---|
| வார்த்தை அறிபவர் | சரமச்லோகமாகிற நல்வார்த்தையையறியுமவர்கள், |
| போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பு இவை பேர்த்து | ஸ்வரூபவிளக்கத்தை மறைக்கின்ற பிறப்பு வியாதி கிழத்தனம் மரணம் முதலானவற்றை விட்டுக் கழியும்படி பண்ணி |
| பெரு துன்பம் வேர் அற நீக்கி | கைவல்யாநுபவமாகிற மஹாநர்த்தத்திலும் புகாமே காத்து |
| தன் தாளின் கீழ் சேர்த்து | தன்னுடைய திருவடிகளின் கீழே சேர்த்துக்கொண்டு |
| அவன் செய்யும் சேமத்தை எண்ணி | இப்படியாக அவன் செய்தருளும் க்ஷேமங்களை யநுஸந்தித்து |
| தெளிவு உற்று | தெளிவு பெற்று வைத்து |
| மாயவற்கு அன்றி ஆள் ஆவரோ | அப்பெருமானுக்கல்லது வேறொருவர்க்கு அடிமை யாவரோ? |

✢ ஸர்வதர்மாந் பரித்யஜ்ய இத்யாதி சரமச்லோகமருளிச் செய்த மஹாகுணத்திலே யீடுபட்டுப் பேசுகிறார். வார்த்தை யறிபவர் என்கிறது—✢மாமேகம் சரணம் வ்ரஜ—ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி ✢ என்ற வார்த்தையை யறியுமவர்கள் என்றபடி. முமுக்ஷுப்படியில் சரமச்லோக ப்ரகரணத்தின் முடிவில் இப்பாசுரத்தை சரமச்லோகார்த்தமாக நிர்வஹித்தருளின படி காண்க. ✢ ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி ✢ என்றதின் அர்த்தமே மேல் மூன்றடிகளாலும் பேசப்படுகிறது.

போர்த்த பிறப்பு= ஆத்மஸ்வரூபம் தெரியாதபடி அறிவைக்கெடுக்கும் ஜன்மம். கருமமடியாகப் பிறக்கிறோமாதலால் பிறக்கப்பிறக்க ஒளிமழுங்கி "ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து" என்கிறபடியே கிடக்கிறோமன்றோ. [நோயொடு] அதற்கு மேலே ✢ உடன் பிறந்தே கொல்லும் வியாதி ✢ என்னும்படி பலபல நோய்களும் வந்து புகும். [மூப்பு] இடிவிழுந்தாற்போலே வந்து நிற்குங் கிழத்தனம். [இறப்பு] இப்படியிருக்கச் செய்தே திடீரென்று ஒருநாள் நேரும் மரணம். இவற்றையெல்லாந் தொலைத்து. அதாவது மீண்டு மீண்டும் பிறந்து அனர்த்தப்படாதபடி செய்தருளி யென்றபடி. இதற்கு மேல் பெருந்துன்பமாவது—ஜன்மம் தொலைந்த பின்பும் நேரக்கூடியதான கைவல்ய மோக்ஷமாகிற மஹானர்த்தம். அதையும் ஸவாஸநமாகப் போக்குகையாவது அதிலே நசையறும்படி பண்ணுகை. ஆக இவ்வளவு நன்மைகளையுஞ் செய்து, தன் தாளின் கீழ் சேர்த்து—பாதரேகை போலே தன் திருவடிகளின் கீழ் அந்வயிப்பித்துக் கொண்டு. அவன் செய்யும் சேமத்தை யெண்ணி—இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை யருளிச் செய்வது காணீர்;—"இவனுக்கு ஒன்றுஞ் செய்யாதாரைப்போலே என் செய்வோமென்றிருக்கு மென்னுதல்; இக்கைங்கர்யத்துக்கு நிலவரான நித்யஸூரிகளோடே சேர்த்து யாவதாத்மபாவியாக்கு மென்னுதல்."

'எண்ணித் தெளிவுற்று வார்த்தை யறிபவர் மாயவற்காளன்றி யாவரோ?' என்று அந்வயிப்பது. (௰)

3391 தெளிவுற்றுவீவின்றிநின்றவர்க் கின்பக்கதிசெய்யும் ✢
தெளிவுற்றகண்ணனைத் தென்குருகூர்ச்சடகோபன்சொல் ✢
தெளிவுற்றவாயிரத்துளிவையும் பத்தும்வல்லார்கள் ✢
தெளிவுற்றசிந்தையர் பாமரூழுவுகலத்துள்ளே.

| | | | |
|---|---|---|---|
| தெளிவு உற்று | ஸ்வரூபத்தில் தெளிவு பெற்று | தென் குருகூர் சடகோபன் சொல் | ஆழ்வார் அருளிச்செய்ததான |
| வீவு இன்றி நின்றவர்க்கு | அந்தத் தெளிவுக்கு ஒரு நாளும் விச்சேதமில்லாமலிருப்பவர்களுக்கு | தெளிவு உற்ற ஆயிரத்துள் | தெளிந்த ஆயிரத்தினுள்ளே |
| இன்பம் கதி செய்யும் | இன்பமே வடிவெடுத்ததான கதியைச் செய்விப்பவனை | இவை பத்தும் வல்லார் அவர் | இத்திருவாய்மொழியை ஓத வல்லவர்கள் |
| | | பா மரு மூ உலகத்துள்ளே | பாபபூயிஷ்டமான உலகத்திலிருந்து வைத்தே |
| தெளிவு உற்ற கண்ணனை | தெளிவு தானே வடிவெடுத்திருப்பவனான எம்பெருமானைக் குறித்து | தெளிவு உற்ற சிந்தையர் | தெளிவு பெற்ற மனமுடையராவர். |

## ஏழாம்பத்து—ஆறாந்திருவாய்மொழி பாமருமூவுலகும்.

தம்முடைய ஆர்த்தியெல்லாம் தோற்றப் பரமபத நாதனுடைய திருச்செவியளவும் படும்படியாகப் பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார் இத்திருவாய்மொழியில். அம்மங்கியம்மாள் என்னுமாசிரியர் "இத்திருவாய்மொழியின் சப்தார்த்திகளை நாம் வாயாற் சொல்லவும் காதாற் கேட்கவும் அதிகாரிகளே தவிர, இதில் ஆழ்வார்க்குச் செல்லுகின்ற ஆர்த்தி இப்படிப்பட்டதென்று எடுத்துரைக்க நாம் அதிகாரிகளல்லோம்" என்பராம்.

3392 பாமருமூவுலகம்படைத்த பற்பநாபாவோ *
பாமருமூவுலகுமளந்த பற்பபாதாவோ *
தாமரைக்கண்ணாவோ தனியேன்தனியாளாவோ *
தாமரைக்கையாவோ உன்னையென்றுகொல்சேர்வதுவே. (க)

| | | | |
|---|---|---|---|
| பா மரு மூ உலகும் படைத்த பற்பநாபா ஓ | பலவகைப் பொருள்களும் நிரம்பியுள்ளமூவுலகங்களையுமுண்டாக்கின ஓ பத்மநாபனே | தாமரை கண்ணா ஓ | செந்தாமரைபோன்ற திருக்கண்களை யுடையவனே! |
| | | தனியேன் தனி ஆளா ஓ | துணையற்றவனான என்னை அஸாதாரணமாக ஆள்பவனே! |
| பா மரு மூ உலகும் அளந்த பற்பம் பாதா ஓ | பரம்பின மூவுலகங்களையுமளந்துகொண்ட திருவடித்தாமரைகளையுடையவனே! | தாமரை கையா ஓ | செந்தாமரைக் கையனே! |
| | | உன்னை சேர்வது என்று கொல் | உன்னை நான் சேரப்பெறுவது எந்நாளோ? |

*** ஒவ்வோரவயவத்தாலும் ஒவ்வோர் அதிமாநுஷ சேஷ்டிதத்தைச் செய்தருளின பரமபோக்யனானவுன்னை நான் என்றைக்குக் கிட்டுவதென்கிறார். திருநாபிக்கமலம் செய்த காரியத்தை முதலடியில் அருளிச்செய்கிறார். * உய்யவுலகு படைக்கவேண்டி உந்தியில் தோற்றினாய் நான்முகனை என்கிறபடியே மூவுலகங்களையும் படைக்குமவனான பிரமனை நாபிக்கமலத்தில் உண்டாக்கினது பற்றிக் கொப்பூழ்ச் செந்தாமரையே மூவுலகும் படைத்ததாகச் சொல்லுகிறபடி. யிரானே! உன்னுடைய பரத்வத்தை நிர்ணயிப்பதற்கு வேறு சில ப்ரமாணங்கள் தேடவேணுமோ? உனது திருநாபிக்கமலந்தானே போதாதோ? என்கிறார்.

படைத்தவுலகங்களைப் பிறர் பறித்துக்கொள்ள, அவற்றை மீட்டுக்கொண்ட திருவடியின் செயலைச்சொல்லுகிறார் இரண்டாமடியில். *அடிச்சியோந்தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணாவுன் கோலப்பாதம் என்றும் நின்பாதபங்கயமே தலைக்கணியாய், என்றும் நான் ஆசைப்பட்டிருக்க, ஆசையில்லாதார் தலையிலே திருவடியை வைக்குமவனாயிருக்கின்றாயே! என்று நொந்து சொல்லுகிறபடி. இரண்டடிகளிலும் பாமரு என்பதற்குப் பலவகையாகப் பொருள் கொள்வர்; பா பதார்த்தங்கள்; அவை மருவியிருந்துள்ள மூவுலகம். பா—பாபம்; அது மிக்கிருந்துள்ள மூவுலகம். பா வென்று பரம்புதலாய், அதையுடைத்தான மூவுலகம்.

தாமரைக்கண்ணாவோ! எனவிளித்தவுடனே 'தனியேன் தனியாளாவோ' என்றதனால், திருவிருத்தத்தில் "பெருங்கேழலார் தம்பெருங்கண்மலர்ப்புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம், ஒருவர் நம்போல் வருங்கேழ்பவருளரே" என்று அருளிச்செய்தபடியே முதலில் தம்மை விஷயீகரித்தவை இத்திருக்கண்களேயென்று காட்டினபடி. இவ்விருள் தருமாஞாலத்தில் நான் அத்விதீயனன்றோ; உன் திருக்கண்கள் என்னையாண்டது மற்றொருவர்க்கு நிலமோ? கண்ணழகைக்காட்டி என்னை வலையுளகப்படுத்தி இப்படியோ உபேக்ஷித்து வைப்பது என்கிறார். தாமரைக்கையாவோ! அக்ரூரனைக் கையால் தொட்டு அணைத்தாயே, கண்டாகர்ணனைக் கையால் தொட்டு விஷயீகரித்தாயே; அவ்வளவுக்கும் நான் உரியேனல்லேனோ? என்கிறார். இப்போது எனக்கு அதுவொன்றும் செய்யவேண்டா; இன்னநாள் என்னை நீ சேரப்பெறுவாய் என்று ஒரு நாளிட்டுக்கொடுக்கலாகாதோ வென்கிறார் உன்னையென்றுகொல் சேர்வதுவே யென்று. (க)

என்றுகொல்சேர்வதந்தோ அரன்நான்முகனேத்தும் * செய்ய
நின்திருப்பாதத்தையான் நிலநீரெரிகால் * விண்ணுயிர்
என்றிவைதாம்முதலாமுற்றுமாய் நின்றவெந்தாயோ *
குன்றெடுத்தாநிரைமேய்த்தவைகாத்த எம்கூத்தாவோ * (உ)

| | | | |
|---|---|---|---|
| நிலம் நீர் எரிகால் விண் | பஞ்ச பூதங்களும் | எம் கூத்தா ஓ | குடக்கூத்து முதலிய கூத்துக்களில் வல்லவனான எம்பெருமானே ! |
| உயிர் | பிராணிவர்க்கமும் | | |
| என்ற இவை தான் முதல் ஆ | ஆகிய இவை முதலாக | அரன் நான் முகன் ஏத்தும் | சிவனும் பிரமனும் துதிக்கும் படியான |
| முற்றும் | ஸகல பதார்த்தங்களும் | | |
| ஆய் நின்ற எந்தாய் ஓ | தானே யென்னலாம்படி நின்ற ஸ்வாமியே ! | நின் செய்ய திரு பாதத்தை | உனது சேவடியை |
| ஆ நிரை மேய்த்து | பசுக்களின் கூட்டங்களை மேய்த்து | யான் சேர்வது என்று கொல் | யான் சேரப்பெறுவது எந்நாளோ? |
| குன்று எடுத்து அவைகாத்த | கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்து அப்பசுக்களை ரக்ஷித்தருளின | அந்தோ | ஐயோ ! |

* * * மீண்டும் அதுவே வாய்வெருவுதலாய்ச் சொல்லுகிறார். கீழ்ப்பாட்டில் 'என்று கொல் சேர்வது' என்றாரே; அதற்கு ஒரு மறுமாற்றம் பெற்றிலர். அத்தோடு அந்தோ என்பதையுங்கூட்டியழுகிறார். நான் முடிந்தேனென்கிறார். திருவடிக்கு 'அரன் நான்முகனேத்தும்' என்ற அடைமொழி கொடுத்தது—அவர்கள் துதிப்பதனால் திருவடிக்கு ஒரு பெருமை என்கைக்காக வன்று; அழிப்பதும் ஆக்குவதுமே தொழிலாயிருக்கின்ற அவர்களுங்கூட ஆசைப் படுந்திருவடியன்றோ; நான் ஆசைப்படச்சொல்லவேணுமோ வென்றவாறு. அவர்கள் ஏத்துவது ப்ரயோஜநாந்தரத்துக்காக; நான் ஏத்துவது ஸ்வயம் ப்ரயோஜநமாக என்றுணராய். நிலநீரெரிகால் என்று தொடங்கி, சேதநா சேதநாத்மகமான ஸமஸ்தவஸ்துக்களுக்கும் ஆத்மாவாயிருப்பவனே! என்கிறார். பிரானே! உலகில் எப்பொருளைக்கண்டாலும் அவற்றை நீயாகவே நினைத்து மகிழ்ச்சிகொள்ளும்படியானவனே நான்; ஆயினும் அஸாதாரணமானவுன் திருவடிகளைப் பெற்றாலல்லது என் ஆசை தீராதேயென்று காட்டுகிறபடி. குன்றெடுத்து ஆநிரைமேய்த்து அவைகாத்த—ஆநிரைமேய்க்கைக்காகக் குன்றெடுக்க வேண்டிய அவசியமில்லையாதலால், 'ஆநிரைமேய்த்துக் குன்றெடுத்து அவை காத்த' என்று யோஜித்துக்கொள்வது. (உ)

3394 காத்தவெங்கூத்தாவோ மலையேந்திக்கல்மாரிதன்னை +
பூத்தண்டுழாய்முடியாய் புனைகொன்றையஞ்செஞ்சடையாய் +
வாய்த்தவென்நான்முகனே வந்தென்னாருயிர்நீயானால் +
ஏத்தருங்கீர்த்தியினாயுன்னை எங்குத்தலைப்பெய்வனே. (௩)

| | | | |
|---|---|---|---|
| மலை ஏந்தி கல் மாரி தன்னை காத்த எம் கூத்தா ஓ | கோவர்த்தனமலையைத் தாங்கி நின்று கல் மழையைத் தடுத்தவனும் கூத்தில் வல்லவனுமான எம்பெருமானே ! | வாய்த்த என் நான்முகனே | பிரமனுக்கு அந்தர்யாமியே ! |
| பூ தண் துழாய் முடியாய் | அழகிய குளிர்ந்த திருத்துழாய் மாலையைத் திருமுடியிலுடையவனே ! | ஏத்த அரு கீர்த்தியினாய் | துதித்துத் தலைக்கட்ட முடியாத புகழையுடையவனே ! |
| | | நீ வந்து என் ஆர் உயிர் ஆனால் | நீ யாகவே பரகதஸ்வீகாரமாக வந்து எனக்குத் தாரகனை ஆனபின்பு |
| புனை கொன்றை அம் செம் சடையாய் | சிவந்த ஜடையிலே கொன்றை மாலையைப் புனைந்துள்ள சிவனுக்கு அந்தர்யாமியே ! | உன்னை எங்கு தலைப் பெய்வன் | உன்னை எங்கே கிட்டியநுபவிப்பேன் ? |

+ + "குன்றெடுத்தாநிரை மேய்த்து அவை காத்த வெங்கூத்தாவோ" என்று கோவர்த்தந உத்தரண வ்ருத்தாந்தத்தைக் கூறிக் கூவின ஆழ்வார் மீண்டுமிப்பாட்டிலும் "காத்த வெங் கூத்தாவோ மலையேந்திக் கன்மாரிதன்னை" என்று அது தன்னையே கூறிக் கூவுவது அந்தாதித் தொடை யமைதிக்காகவன்று; ஈடுபாட்டின் மிகுதியாலாம். "மலையேந்திக் கல்மாரிதன்னை" என்ற சொல்தொடையை நோக்கி நம்பிள்ளையருளிச் செய்வது பாரீர்—"கல்லாலே வர்ஷிக்கையாலே மலையை யெடுத்துப் பரிஹரித்தான்; நீராலே வர்ஷித்தானாகில் கடலை யெடுத்து நோக்குங்காணும்" என்று. இதனால், இன்னதைக்கொண்டு இன்ன காரியஞ் செய்வதென்கிற

நியதி எம்பெருமானுக்கில்லை யென்பதும் ஸர்வசக்தனென்பதும் விளக்கப்பட்டதாம். “பூத் தண்டுழாய் முடியாய்! புனைகொன்றையஞ் செஞ்சடையாய்! வாய்த்த வென் நான்முகனே!’. என்ற விளிகள் மூன்றினாலும் * ஸ ப்ரஹ்மா ஸ ஶிவ: * என்ற உபநிஷத்தை அநுவதித்தபடி’ “முனியே நான்முகனே முக்கண்ணப்பா” என்றும் “அரியை அயனையரனை” என்று மருளிச் செய்பவரன்றோ இவ்வாழ்வார். த்ரிமூர்த்திகளின் ஸாம்யவாதமோ ஐக்யவாதமோ ஆழ்வார்க்கு விவக்ஷிதம்போலும் என்று சிலர் நினைப்பது சிறிதும் பொருந்தாது. ஏனெனில் இவ்வாழ்வார் தாமே பெரிய திருவந்தாதியில் – முதலாந்திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர் முதல்வா! நிகரில்குகாருருவா! நின்னகத்ததன்றே. புகரிலகு தாமரையின் பூ – என்ற பாசுரத்தினால் ஸுவ்யக்தமாகப் பரதத்வ நிர்ணயம் செய்தருளியுள்ளாராதலால், [அப்பாசுரத்தின் திவ்யார்த்ததீபிகையுரையில் விரிவு காண்க.] வந்து என்னுருயிர் நீ —எனக்கு அபேக்ஷையின்றியே யிருக்க நீயே வந்து என்னை விஷயீகரித்து உன்னாலல்லது செல்லாதபடி பண்ணி எனக்குத் தாரகனாயிருப்பவனே! என்றபடி. உன்னையெங்குத் தலைப்பெய்வனே!— நீ உயிராய் நான் உடலாயிருக்கும்போது, உடல்தான் உயிரை வந்து கிட்டுவதென்று ஒன்றுண்டோ! நீயே பெறுவித்துக்கொள்ளவேணுமேயல்லது நானாகப் பெறுவதென்பதுண்டோ? என்றாராயிற்று. (௩)

3395 எங்குத்தலைப்பெய்வன்நான் எழில்மூவுலகும்நீயே *
அங்குயர்முக்கட்பிரான் பிரமபெருமானவன் நீ *
வெங்கதிர்வச்சிரக்கையிந்திரன் முதலாத்தெய்வம் நீ *
கோங்கலர்தண்ணந்துழாய்முடி என்னுடைக்கோவலனே. (௪)

| | |
|---|---|
| கொங்கு அலர் தண் அம் துழாய் முடி என்னுடை கோவலனே | மதுவோடு கூடி மலர்ந்த செவ்வித் துழாயையணிந்த மயிர் முடியையுடையனாய் எனக்குப் பரம போக்யனான கோபால க்ருஷ்ணனே! |
| எழில் மூ உலகும் நீயே | விலக்ஷணமான மூவுலகமும் நீயிட்ட வழக்காயிருக்கும்; |
| அங்கு உயர் முக்கண் பிரான் | அந்த லோகத்திலே உயர்ந்தவனான சிவபிரானும் |
| பிரமன் பெருமான் அவன் | அப்படிப்பட்ட நான்முகக் கடவுளும் |
| நீ | நீயிட்ட வழக்காயிருப்பர்கள். |
| வெம் கதிர் வச்சிரம் கை இந்திரன் முதலா தெய்வம் நீ | வெவ்விய பிரதாபம் பொருந்திய வஜ்ராயுதத்தைக் கையிலே யுடைய இந்திரன் முதலான தெய்வங்களும் நீயிட்ட வழக்கே; (ஆனபின்பு) |
| நான் எங்கு தலைப் பெய்வன் | நான் என் முயற்சியினாலேயே உன்னை வந்து கிட்டுவேனோ? |

* * * ஸர்வஸ்மாத்பரனாய் ஆச்ரிதபவ்யனாய் போக்யதை அளவிறந்திருப்பவனான வுன்னை அகிஞ்சனனான நான் எங்கே கிட்டுவதென்கிறார். எழில மூவுலகும் நீயே—உலகத்தில் அவ்வோ பதார்த்தங்களுக்குள்ள உயர்த்தியெல்லாம் நீயிட்ட வழக்கு என்றபடி. இப்படியே மேலடிகளிலுங் கொள்க. முக்கண்ணனுக்குள்ள ஏற்றமும் பிரமனுக்குள்ள ஏற்றமும் இந்திரனுக்கும் அவனைச் சேர்ந்த மற்றுமுண்டான தேவர்களுக்குமுள்ள ஏற்றமுமெல்லாம் நீயிட்ட வழக்கென்றபடி. பிரமன் சிவனிந்திரன் முதலானோர்க்குண்டான ஐச்வரியமெல்லாம் பிரானே உன்னதீனமாக வன்றோ விருப்பது; அப்படிப்பட்ட நீ என்னுடைய பிரதிபந்தங்களையும் போக்கி என்னையுன் திருவடிகளிலே சேர்த்தருளவேணுமென்று கருத்து. (௪)

3396 என்னுடைக்கோவலனே யென்போல்லாக்கருமாணிக்கமே *
உன்னுடையுந்திமலருலகமவை மூன்றும்பரந்து *
உன்னுடைச்சோதிவெள்ளத்தகம்பாலுன்னைக்கண்டுகோண்டிட்டு *
என்னுடையாருயிராரேங்ஙனேகோல் வந்தெய்துவரே. (௫)

| | |
|---|---|
| என்னுடை கோவலனே ! | என்னுடையவனென்று அபிமானிக்கலாம்படியான கோபாலனே !, |
| என் பொல்லா கரு மாணிக்கமே | துளையாத மாணிக்கம் போன்று எனக்கு இனியனானவனே ! |
| என்னுடை ஆருயிரார் | என் ஆத்மாவானவர், |
| உன்னுடை உந்தி மலர் உலகம் அவை மூன்றும் | உனது திருநாபியிலே மலர்ந்த மூவுலகங்களிலுமுள்ள விஷயங்களெல்லாவற்றிலும் |
| பரந்து | சாபல்யப்பட்டிருந்து, |
| உன்னுடை சோதி வெள்ளத்து அகம்பால் உன்னை | உனக்கே அஸாதாரணமாய் விலக்ஷண தேஜோராசி ரூபமாயிருக்கிற ஸ்ரீவைகுண்டலோகத்திலே யிருக்கிறவுன்னை |
| கண்டு கொண்டிட்டு-காணப்பெறுமாறு | |
| எங்ஙனே கொல் வந்து எய்துவர் | எப்படி வந்து சேருவர் ? |

✣ ✣ ✣ லௌகிக விஷயங்களிலே கைகழிந்திருக்கிற என் ஆத்மா உன்னை எங்ஙனேகிட்டக் கடவது என்கிறார். உன்னுடை யுந்திமலருலகமவை மூன்றும் பரந்து = "த்ருஹாஸீகஐமொரஃ-ஓதலக ஞமொரகாஞவ-ஐதிஃ ஸர்வவிஷயங்களிலும் ப்ரவணமான என் ஆத்மா" என்பது ஆறாயிரப்படியருளிச்செயல். உன்னுடைய திருநாபியிலே விஸ்த்ருதமாகாநின்றுள்ள ஸகல லோகங்களிலுமுண்டான சப்தாதிவிஷயங்கள்தோறும் ப்ரவணனாயிருப்பது என்னுடைய நிலைமை என்று தம்முடைய படியைப் பேசிக் கொள்ளுகிறாராழ்வார். நீயோ எட்டாத நிலத்திலிருக்கிறாய்; என்னை எங்ஙனே கண்டுகொள்வது—என்கிறார் மூன்றாமடியினால். என்னுடை ஆருயிரார்—இது க்ஷேபித்துச் சொல்லுகிற வார்த்தை. * வயிறடித்திங்காரார் புகுதுவார் ஐயரிவரல்லால் * [சிறிய திருமடல்] என்றவிடத்திற்போல. மிகவும் துச்சமான என்னுடைய ஆத்மாவானது என்றபடி. பிரானே ! உனக்கே அஸாதாரணமாய் நிரவதிகதேஜோரூபமாய் * ஸுதூகஊந ஞதீஞ்ஷம் தஸ ஸூாநஃ * என்று சொல்லப்படுமதான ஸ்ரீவைகுண்டத்தை யிருப்பிடமாகவுடையையாயிருக்கிற வுன்னை ப்ரக்ருதி ப்ராக்ருதங்களிலுண்டான ஸம்பந்தமும் ஊற்றமும் அற்று எங்ஙனே நான் வந்து சேரப்போகிறேனென்றாராயிற்று. (ரு)

3397 வந்தெய்துமாறறியேன் மல்குநீலச்சுடர்தழைப்ப ✣
சேஞ்சுடர்ச்சோதிகள்பூத்தொரு மாணிக்கம்சேர்வதுபோல் ✣
அந்தரமேல்செம்பட்டோடடியுந்திகைமார்வுகண்வாய் ✣
சேஞ்சுடர்ச்சோதிவிடவுறை யென்திருமார்பனையே. (சு)

| | |
|---|---|
| மல்கு நீலம் சுடர் தழைப்ப | குறைவற்ற நீலமான புகரானது மேன்மேலும் வளர, |
| செம் சுடர் சோதிகள் பூத்த ஒரு மாணிக்கம் சேர்வது போல் | சிவந்த வொளியையுடைத்தான சில கிரணங்களைப் பரப்பினவொரு மாணிக்கம் சாய்ந்து கிடக்குமாபோலே, |
| அந்தரம் மேல் | திருவரை மேல்சாத்தின |
| செம் பட்டோடு | பீதாம்பரத்தோடு |
| அடி உந்தி கை மார்பு கண் வாய் | திருவடிகளும் திருவுந்தியும் திருக்கைகளும் திருமார்பும் திருக்கண்களும் திருப்பவளமுமாகிய இவை |
| செம் சுடர் சோதிவிட | சிவந்தழகிய வொளியைப் பரப்ப |
| உறை | கண்வளர்ந்தருள்கின்ற |
| என் திருமார்பனை | எனது திருமாலை |
| வந்து எய்தும் ஆறு அறியேன் | வந்து கிட்டும் வகை அறிகின்றிலேன். |

✣ ✣ ✣ உன்னைப் பெறுகைக்கு என்பக்கல் ஓர் உபாயமில்லை; நீயே வந்து விஷயீகரிக்கவேணுமென்கிறார். 'உம்மால் ஒரு உபாயாநுஷ்டானம் பண்ணமுடியாதாகில் இழந்து நிற்கலாமே' என்ன, அந்தோ ! இழக்கலாம்படியோ உன்படியிருப்பதென்கிறார். எம்பெருமான் திருவனந்தாழ்வான் மேலே சாய்ந்து கிடக்கும்போது திவ்யரூபத்தின் நீலச்சுடர் மல்காநின்றது; பீதகவாடை திருவடிகள் திருநாபிக்கமலம் திருக்கை திருமார்பு திருக்கண் திருப்பவளம் ஆகிய இவற்றினின்று சிவந்த சுடரையுடைத்தான தேஜஸ்ஸு ப்ரஸரியாநின்றது. இந்த நிலைமைக்கு ஒரு த்ருஷ்டாந்தமிடுகிறார் "செஞ்சுடர்ச் சோதிகள் பூத்தொருமாணிக்கஞ் சேர்வது போல்" என்று. 'செஞ்சுடர்ச் சோதிகள்' என்றதற்கு விவரணம் மூன்றாமடி. மாணிக்கத்தின் ஸ்தானத்தில் திருமார்பனைக் கொள்வது. கமலமலர்மேல் செய்யாளான பிராட்டி விளங்குந்திருமார்பையுடையனான பெருமான் பீதாம்பரம் முதலானவற்றிலிருந்து செவ்விய கிரணங்களைப்படரச் செய்துகொண்டு சாய்ந்திருப்பதான செஞ்சுடர்ச் சோதிகள் பூத்த ஒரு மாணிக்கப்பாறை சாய்ந்துகிடப்பதுபோலுள்ளது என்று வருணித்தவாறு. அந்தரம் என்று இடுப்

பைச் சொல்லுகிறது. "செம்பட்டோடு" என்றவிடத்து, ஓடு—உம்மைப்பொருளது. செவ்வியபட்டாடையும் என்றபடி. "கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறவுன்னை" என்றார் ஆறாயிரப்படியில் பிள்ளான். "திருப்பாற்கடலிலே நீர் உறுத்தாதபடி திருவனந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு அதிலே நாநாவர்ணமாயிருப்பதொரு மேல்விரியை விரித்தாப்போலே சாய்ந்தருள" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. (சு)

3398 என்திருமார்பன்றன்னை யென்மலைமகள் கூறன்றன்னை *
என்றுமென்னாமகளை யகம்பால்கொண்டநான்முகனை *
நின்றசசிபதியை நிலங்கீண்டெயில்மூன்றெரித்த *
வென்றுபுலந்துரந்த விசும்பாளியைக்காணேனே. (எ)

| | |
|---|---|
| என் திரு மார்பன் தன்னை | திருமாலாயிருக்கிற தன்மையை எனக்கு ப்ரகாசிப்பித்தவனும் |
| என் மலை மகள் கூறன் தன்னை | பார்வதீபதியை ப்ரகாரமாகவுடையனுயிருக்கிறபடியை யெனக்கு ப்ரகாசிப்பித்தவனும் |
| என்றும் நாமகளை அகம்பால் கொண்ட என் நான்முகனை | எப்போதும் ஸரஸ்வதியை அந்தரங்க மஹிஷியாகக்கொண்ட நான்முகனை ப்ரகாரமாகவுடையனுயிருக்கிறபடியை எனக்குப்ரகாசிப்பித்தவனும், |
| நின்ற சசிபதியை | இவர்களோடு எண்ணப்பட்டு நிற்கின்ற இந்திரனுக்கு அந்தர்யாமியானவனும் |
| நிலம் கீண்ட | (மஹாவராஹமாகி) பூமியை யுத்தரித்தவனும் |
| மூன்று எயில் எரித்த | த்ரிபுரதஹனம் பண்ணினவனும் |
| புலன் வென்று துரந்த | இந்திரியங்களை ஜயித்து ஓட்டினவனும் |
| விசும்பு ஆளியை | சுவர்க்கத்தை ஆள்கின்ற இந்திரனுக்கு அந்தர்யாமியுமான எம்பெருமானை |
| காணேனே | காணமாட்டேனே? |

* * * என் என்பது இப்பாட்டில் மூன்றிடங்களில் வருகிறது. முதலிடத்தில் மாத்திரம் விசேஷணத்தில் அந்வயிப்பதென்றும், மற்ற இரண்டிடங்களில் விசேஷ்யத்தில் அந்வயிப்பதென்றும் நம்பிள்ளை திருவுள்ளம்பற்றுகிறார். "என் திருமார்பன் தன்னை" என்ற விடத்தில் என் திருவை மார்பிலே யுடையவன் என்று பொருள் கொண்டால், திருமார்பனுக்கு விசேஷணமாகிய திருவிலே என் என்பது இந்வயித்ததாயிற்று. ஆழ்வார், பங்கயத்தாள் திருவருளைக் கொண்டவராதலால், எனக்கு ஸ்வாமிநியான பெரிய பிராட்டியாரென்கிறார். என்னுடைய திருவைத் திருமார்பிலே வைத்துக்கொண்டிருக்கிற நீ என் காரியஞ் செய்யாதொழியலாமோ வென்றபடி.

என் மலைமகள் கூறன் தன்னை = இவ்விடத்தில் என் என்பது விசேஷணமான மலைமகளிடத்தே அந்வயிப்பதன்று. 'மலைமகள் கூறன்' என்னுஞ் சொல் விசேஷ்யபதம். பார்வதீபதியான பரமசிவனைச் சொல்லுகிறது. அவனும் இங்கு விசேஷணஸ்தாநீயனே யாவன்; இச்சொல் அந்தர்யாமியளவுஞ் செல்ல நின்று 'சிவனுக்கு அந்தர்யாமியான எம்பெருமான்' என்று சொல்லுமதாகையாலே, என் என்பது பரம விசேஷ்யபூதனான எம்பெருமானிடத்தே அந்வயிப்பது. மேலே 'என் நான்முகனை' என்றதிலுமிப்படியே.

சிவனை மலைமகளோடே கூட்டிவைத்ததும் எம்பெருமானே; நான்முகனை நாமகளோடே கூட்டிவைத்ததும் எம்பெருமானே. இந்திரனை இந்திராணியோடே கூட்டி வைத்ததும் எம்பெருமானே என்கிற கருத்து இப்பாட்டில் விவக்ஷிதமென்று ஆசாரியர்கள் திருவுள்ளம்பற்றுகிறார்கள். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"ப்ராப்தயௌவனரான புத்ராதிகளை ஸத்ருசவிஷயங்களிலே விவாஹம் பண்ணுவிக்கும் பித்ராதிகளைப் போலே இவர்களுடைய மஹிஷீலாபமும் தந்தாமாலல்ல; ஸர்வேச்வரனாலே யென்கை." என்று.

எயில் மூன்றெரித்தது சிவபிரானுடைய செயல். இதை இங்கு எம்பெருமானுடைய காரியம்போலச் சொன்னது (அதாவது, மஹாவராஹமாய் நிலங்கீண்ட தன் செயலோடொக்கச் சேர்த்துச்சொன்னது, எம்பெருமானே நிர்வாஹகனுயிருந்து செய்வித்தமைபற்றி யென்க.
* விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ: । தஸ்மாத் தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஸம் ஸ விஷேஹே *
என்ற ப்ரமாணவசனமும் நோக்கத்தக்கது. வென்றுபுலன் துரந்த வென்றது—நான்முகனுடைய செயலைச் சொன்னபடி. ஸ்ருஷ்டிக்கு உறுப்பாக இந்த்ரியஜயத்தைப் பண்ணினவாறு கூறி

ற்றென்க. விசும்பாளி யென்று ஸ்வர்க்கலோகநாதனான இந்திரனைச் சொல்லி, அவனுக்கு நிர்வாஹகனென்கிற முறையாலே எம்பெருமானளவுஞ் சொல்லுகிறது. நிலங்கீண்ட என் திருமார்பன் தன்னை எயில் மூன்றெரித்த என் மலைமகள் கூறன் தன்னை வென்றுபுலன்துரந்த நான்முகனை, விசும்பாளியான சசீபதியைக் காணேனோ? என்று அந்வயிப்பது.

இப்பாட்டில், மூன்றாமடியின் முடிவில் 'எரித்த' 'எரித்து' என்கிற பாடபேதங்கள் காண்கின்றன. 'எரித்து' என்ற பாடங்கொள்வது சாலப்பொருந்தும். 'எரித்த' என்ற பாடங் கொள்வதானால், கீழே 'நிலங்கீண்டெயில்' என்ற விடத்து 'நிலங்கீண்ட' என்று பதம் பிரித்துக் கொள்க. தொகுத்தல் விகாரமென்க. (எ)

3399 ஆளியைக்காண்பரியாய் அரிகாண்நரியாய் * அரக்கர்
ஊளையிட்டன்றிலங்கைகடந்து பிலம்புக்கொளிப்ப *
மீளியம்புள்ளைக்கடாய் விறல்மாலியைக்கொன்று * பின்னும்
ஆளுயர்குன்றங்கள்செய்தடர்த்தானையும் காண்டுங்கொலோ. (அ)

| | | | |
|---|---|---|---|
| ஆளியை காண் பரி ஆய் | யாளியைக் கண்ட குதிரை போலவும் | மீளி அம் புள்ளை கடாய் | பெருமிடுக்கனாய் அழகியவனான கருடனை நடத்தி |
| அரி காண் நரி ஆய் | சிங்கத்தை கண்ட நரி போலவும் | விறல் மாலியை கொன்று | பிரபலனான மாலியைக் கொன்று |
| அரக்கர் | ராக்ஷஸர்கள் | பின்னும் | அவ்வளவிலும் விடாதே |
| அன்று ஊளை யிட்டு | அக்காலத்தில் அச்சத்தினாலே கதறிக்கொண்டு | ஆள் | மிகவும் சூரர்களான ஆண் புலிகளை [க்கொன்று] |
| இலங்கை கடந்து | லங்காபுரியை விட்டு | உயர் குன்றங்கள் செய்து | பருப்பருத்த மலைகளாகக் குவித்து |
| பிலம் புக்கு ஒளிப்ப | பாதாளத்திலே புகுந்து ஒளிக்கும்படியாக | அடர்த்தானையும் | அவர்களை யழித்த பெருமானையும் |
| | | காண்டும் கொல் ஓ | காணப்பெறுவோமோ? |

* * * மாலி முதலான ப்ரதிகூலவர்க்கத்தை நிரஸித்தருளின ஸர்வேச்வரனைக் காணப்பெறுவோமோ! என்கிறார். உத்தர ஸ்ரீராமாயணத்தில் (5, 6, 7, 8 ஸர்க்கங்களில்) விரிவாக கூறப்பட்ட வரலாறே இப்பாசுரத்தில் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. இப்படி விரோதி நிரஸநம் செய்யுமியல்வினனான பெருமான் எனது விரோதிகளையடங்கலுஞ் செற்று எனக்குக் காட்சி தருவதென்றைக்கோ என்றாராயிற்று. (அ)

3400 காண்டுங்கொலோநெஞ்சமே கடியவினையேமுயலும் *
ஆண்டிறல்மீளிமொய்ம்பினரக்கன் குலத்தைத்தடிந்து *
மீண்டுமவன்தம்பிக்கே விரிநீரிலங்கையருளி *
ஆண்டுதன்சோதிபுக்க வமரரரியேற்றினையே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | மனமே!, | மீண்டும் | பின்னையும் |
| கடிய வினையே முயலும் | மிகக் கொடிய பரஹிம்ஸா ரூபமான தீவினைகளிலேயே முயற்சி செய்பவனாய் | அவன் தம்பிக்கே | அவனுடன் பிறந்தவனான விபீஷணாழ்வானுக்கே |
| ஆண் | பௌருஷம் மிக்கவனாய் | விரி நீர் இலங்கை அருளி | கடலிடத்துள்ள லங்கா ராஜ்யத்தை யருள் செய்து |
| திறல் | வீர சூர பராக்ரமசாலியாய் | ஆண்டு | அயோத்யையி லெழுந்தருளி நெடுங்காலம் அரசு புரிந்து |
| மீளி | சிங்கம் போன்றவனாய் | | |
| மொய்ம்பின் | பெருமிடுக்கையுடையனான | தன் சோதி புக்க | தன்னடிச் சோதியான பரமபதத்திலே சென்று சேர்ந்த |
| அரக்கன் | இராவணனென்னும் ராக்ஷஸனுடைய | அமரர் அரி ஏற்றினை | நித்யஸூரிநாதனான பெருமானை |
| குலத்தை | குடும்பத்தை | | |
| தடிந்து | தொலைத்திட்டு | காண்டும் கொல் ஓ | காணப்பெறுவோமோ? |

* * * விபீஷண பக்ஷபாதத்தாலே ராவண குலத்தை நிச்சேஷமாக முடித்து அவனுக்கு லங்கா ராஜ்யத்தையுங் கொடுத்துத் தானும் அபிஷிக்தனாய் ராஜ்யம் பண்ணித் தன்னடிச் சோதியேற வெழுந்தருளின ஸ்ரீராமபிரானை, அந்த மேன்மையோடே யிருக்கச் செய்தே நாம் காணவல்லோமோ நெஞ்சமே! என்று தமது திருவுள்ளத்தை நோக்கியருளிச் செய்கிறார். (கூ)

3401. ஏற்றரும்வைகுந்தத்தை அருளும்நமக்கு * ஆயர்குலத்து
ஈற்றிளம்பிள்ளையொன்றாய்ப்புக்கு மாயங்களேயியற்றி *
கூற்றியல்கஞ்சனைக்கொன்று ஐவர்க்காய்க்கொடுஞ்சேனைதடிந்து *
ஆற்றல்மிக்கான் பெரியபரஞ்சோதிபுக்கவரியே. (௰)

| | |
|---|---|
| ஈன்ற இள பிள்ளை ஒன்று ஆய் | அப்போது பிறந்த விலக்ஷணமான பச்சைப்பசுங் குழந்தையாய்க்கொண்டு |
| ஆயர் குலத்து புக்கு | திருவாய்ப் பாடியிலே சென்று சேர்ந்து |
| மாயங்களை யியற்றி | பல பல அற்புதச் செயல்களையே செய்து |
| கூற்று இயல் கஞ்சனை கொன்று | யமன் போன்ற கம்ஸனையும் முடித்து (பிறகு) |
| ஐவர்க்கு ஆய் | பஞ்சபாண்டவர்களுக்குப் பக்ஷபாதியாயிருந்து |
| கொடு சேனை தடிந்து | கொடிய ப்ரதிபக்ஷஸேனைகளை யழியச் செய்து |
| ஆற்றல் மிக்கான் | (இவ்வளவு செய்தும்) மிகுந்த நெஞ்சாறல் கொண்டவனாய் |
| பெரிய பரம் சோதி புக்க அரி | பரமபதஞ் சென்று சேர்ந்த ஹரியான எம்பெருமான் |
| ஏற அரு வைகுந்தத்தை | எப்படிப் பட்டவர்களுக்குங் கிடைக்க வரிதான பரமபதத்தை |
| நமக்கு அருளும் | நமக்குத் தந்தருள்வன். |

* * * ஆழ்வார் தமது திருவுள்ளத்திற்குத் தேறுதலாகக் கூறும் பாசுரமிது. நெஞ்சை நோக்கின விளி மூலத்தில் இல்லையாகிலும், முதலடியில் 'நமக்கு' என்றிருப்பது கொண்டு இங்ஙனே கொள்ளக் குறையில்லை. "தம் திருவுள்ளத்தை ஆச்வஸிப்பிக்கிறார்" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல் "ஏற்றரும் வைகுந்தத்தை யருளும் நமக்கு" என்கிறவிது பாசுரத்தின் முடிவிலே அந்வயிக்கக்கடவது.

ஈற்றிளம்பிள்ளையொன்றாய் ஆயர்குலத்துப்புக்கு—'ஈறு இளம்பிள்ளை' என்றாவது 'ஈன்ற இளம் பிள்ளை' என்றாவது பகுத்துக் கொள்ளலாம். இரண்டு வகையிலும் கருத்து ஒன்றே. மிக இளமை தங்கிய பிள்ளையென்றபடி. இங்கு இது சொல்லுவது எதற்காகவென்னில், அவன் நமக்குப் பரம புருஷார்த்தம் தரவேணுமானால் நம்பக்கலிலே ஏதேனும் கைம்முதல் இருக்க வேணுமே; அஃதில்லாமல் தந்தருளமாட்டானே; அஃதொன்றுமில்லையே என்று தளர வேண்டா; நம்முடைய படியைப் பார்க்கவறியாத பேதைக் குழவிகாண்! என்று அவனுடைய ஸௌலப்யத்தைச் சொல்லுகிறது.

மாயங்களேயியற்றி—ஆயுதசாலையிலே புகுந்து ஆயுதங்களை முறிப்பது, வண்ணானைக் கொன்று பரிவட்டங்களணிந்து கொள்வது, குவலயாபீட மதயானையின் கொம்பை முறிப்பது, மல்லரைத் தகர்ப்பது ஆக இப்படிப்பட்ட ஆச்சரியங்களைச் செய்தமை சொல்லுகிறது இச் செயல்களைச் செய்தபின்னர் அடுத்துச் செய்தது கம்ஸவதமாகையாலே "கூற்றியல் கஞ்சனைக் கொன்று" என்றது. உடலையுமுயிரையும் பிரிக்கும் ஸ்வபாவமுடைய யமனைப்போன்று ஸ்ரீ வஸு தேவ தேவகிகளுக்கு உயிரான கண்ணனைப் பிரித்ததனால் * கூற்றியல் கஞ்ச னென்றார்.

பருவம் நிரம்புவதற்கு முன்னே செய்த செயல்களிவை; இனிப் பருவம் நிரம்பிய பின் செய்தமை சொல்லுகிறது ஐவர்க்காய்க் கொடுஞ்சேனை தடிந்து என்று. இவ்வளவு செய்தும் ஒன்றுஞ் செய்[illegible] ஆற்றல்மிக்கான் என்று. (௰)

3402. * புக்கவரியுருவாயவுணனுடல் கீண்டுகந்த *
சக்கரச்செல்வன்றன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
மிக்கவோராயிரத்துளிவை பத்தும்வல்லாரவரை *
தொக்குப்பல்லாண்டிசைத்துக் கவரிசெய்வரேழையரே. (கக)

அ அரி உரு ஆய் புக்கு } அப்படிப்பட்ட சிங்க வடிவை யுடையனாய்த் தோன்றி
அவுணன் உடல் கீண்டு உகந்த } இரணியாசுரனுடைய உடலை இரு பிளவாக்கித் திருவுள்ள முகந்த
சக்கரம் செல்வன் தன்னை } திருவாழியையுடைய திருமாலைக் குறித்து
குருகூர் சடகோபன் சொன்ன } ஆழ்வார் அருளிச் செய்த
மிக்க ஓர் ஆயிரத்துள் மிகச் சிறந்த ஆயிரத்தினுள்ளே
இவை பத்தும் வல்லாரவரை } இத்திருவாய்மொழியை ஓத வல்லவர்களை
ஏழையர் திருநாட்டிலுள்ள திவ்யாப்ஸரஸ்ஸுக்கள்
தொக்கு திரள் திரளாக விருந்து
பல்லாண்டு இசைத்து மங்களாசாஸனம் பண்ணி
கவரி செய்வர் } சாமரை வீசுதல் முதலிய கிஞ்சித் காரங்களைச் செய்வார்கள்.

* * * இத்திருவாய்மொழி கற்றார் * மதிமுகமடந்தையர் விரும்பிப் பல்லாண்டு பாடி ஸத்கரிக்கும்படியான பெருமையைப் பெறுவர்களென்று பலன் சொல்லித் தலைக்கட்டுகிற பாசுரமிது.

புக்கவரியுருவாய்—அவ்வரியுருவாய்ப் புக்கு என்று அந்வயிப்பது. அகரச்சுட்டு விலக்ஷணப் பொருளது. வாசாமகோசரமாம்படி பரம விலக்ஷணமான ஸிம்ஹ விக்ரஹத்தைப் பரிக்ரஹித்தவனாய் சத்ரு விஷயத்திலே புகுந்து என்றபடி. அவுணனுடல் கீண்டு உகந்த—இரணியனுடலைப் பிளந்தொழித்து 'சிறுக்கனுடைய விரோதி தொலையப் பெற்றோம்' என்று திருவுள்ள முகந்தபடி. [சக்கரச் செல்வன் தன்னை] இரணியனுடலைக் கீண்டகாலத்தில் ஸ்ரீஸுதர்சநாழ்வானுடைய பணியொன்றுமில்லையே; அப்படியிருக்க இங்கே சக்கரச் செல்வனென்பானேன்? என்னில்; எந்த ஸமயத்திலும் சக்கரத்தாழ்வானுடைய பணி இருந்தே தீரும். அவனது பணியில்லாமல் ஒரு காரியமும் நடைபெறாது; ஸுதர்சந சதகத்தில் * ஶக்த்யா ஸௌதர்ஶநஸ்ய ஸ்த நவ வரஶ்ஶோ வ்யாவிரீத் தத்வதோ ஜ்ஞாந் என்பதனால் இவ்வர்த்தம் வ்யக்தமாகும். ராமாவதாரத்தில் அம்புகளிலும், வராஹாவதாரத்தில் தம்ஷ்ட்ரையிலும், நரஸிம்ஹாவதாரத்தில் நகங்களிலும், பரசுராமாவதாரத்தில் மழுவிலும் ............ இப்படியே ஒவ்வோரவதாரத்தில் ஒவ்வொரு வஸ்துவில் திருவாழியாழ்வானுடைய சக்தியாவேசமுளதென்பர்.

ஏழையர் கவரி செய்வர்—ஏழையரென்று ஸ்த்ரீகளுக்குப் பெயர்; * சூழ்விசும்பணிமுகில் திருவாய்மொழியில் "மதிமுகமடந்தையரேந்தினர் வந்தே" என்னப்பட்ட திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் இங்கே விவக்ஷிதர்கள். அவர்கள் திரண்டுகொண்டு இப்பதிகம் வல்லார்களைப் பொலிக பொலிக வென்று மங்களாசாஸனம் பண்ணிச் சாமரை வீசுதல் முதலான கைங்கரியங்களையும் செய்வர்களென்றதாயிற்று.

(கக)



## ஏழாம்பத்து—ஏழாந்திருவாய்மொழி—ஏழையராவி.

---

உரையவதாரிகை:—கீழ்த் திருவாய்மொழியிலே ஆழ்வார் கூப்பிட்ட கூப்பீடு பரமபதத்தளவுஞ் சென்று பரவாஸுதேவனுடைய திருச்செவியில் விழுந்திருக்குமே. அதுகேட்ட அப்பெருமான் ஆழ்வாரை ஒருவாறு தேற்றுவிக்க உருவெளிப்பாடு தோன்றச் செய்தருளினன். அதாவது அவனுடைய திவ்யாவயவங்களை மாநஸஸாக்ஷாத்கார விஷயமாகப் பெற்றாராழ்வார். கண்ணுக்கு ப்ரத்யக்ஷமாகத் தோற்றுமே நெஞ்சுக்கு மாத்திரம் ஸாக்ஷாத்கார விஷயமாகை உருவெளிப்பாடாம். அது இத்திருவாய்மொழியில் செல்லாநின்றது. இது பிராட்டி நிலைமையிலே நின்று பேசுந் திருவாய்மொழி. தாய்மார்களையும் தோழிமார்களையும் நோக்கி "எம்பெருமானுடைய வடிவழகு எனக்கு ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாய்த் தோற்றித் தனித்தனியும் திரளவும் ஒரு முகஞ்செய்து நலியா நின்றதே! இந்த நலிவுக்கு ஆற்றுவேனோ? உங்கள் ஹிம்ஸைக்கு ஆற்றுவேனோ? என்று அலமந்து பேசுகிறாளாயிற்று பராங்குச நாயகி.

கீழ் ஐந்தாம்பத்தில் * எங்ஙனேயோ வன்னைமீர்காள் * என்கிற திருக்குறுங்குடிப் பதிகமும் உருவெளிப்பாடாய்ச் சென்றது; அதிற்காட்டில் இத்திருவாய்மொழிக்கு வாசி யென்னென்னில்; அங்கு ப்ரீதியும் அப்ரீதியும் ஒரு நிகராயிருக்கும்; இங்கு அப்ரீதி தலையெடுத்திருக்கும். தொடங்கும்போதே "இணைக்கூற்றங் கொலோ!" என்கையாலே வாயகத்தினுறைப்பு தெரியவரும்.

3403. ஏழையராவியுண்ணும் இணைக்கூற்றங்கொலோவறியேன் *
ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள்கொலோவறியேன் *
சூழவும்தாமரைநாண்மலர்போல் வந்துதோன்றுங்கண்டீர் *
தோழியர்காளன்னைமீர் என்செய்கேன்துயராட்டியேனே. (க)

| | |
|---|---|
| தோழியர்காள் | தோழிமார்களே! |
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| ஏழையர் ஆவி உண்ணும் இணை கூற்றம் கொலோ | பெண் பிறந்தாருடைய உயிரை முடிக்கவல்ல இரண்டு ம்ருத்யுக்களோ இவை! |
| அறியேன் | அறிகின்றிலேன்; (அன்றியே) |
| ஆழி அம் கண்ண பிரான் | கடல் வண்ணனான கண்ணபிரானுடைய |
| திரு கண்கள் கொலோ | திருக்கண்கள்தானோ! |
| அறியேன் | அறிகின்றிலேன்; |
| சூழவும் | நாற்புறமும் |
| தாமரை நாள் மலர் போல் | அப்போதலர்ந்த செந்தாமரைப் பூப்போலே |
| வந்து தோன்றும் கண்டீர் | வந்து தோன்றுகின்றன காண்மின்; |
| துயராட்டியேன் என் செய்கேன் | துயருறுகின்ற நான் (துயர் தீர்வதற்கு) என்ன செய்வேன்? |

* * * எம்பெருமானுடைய திருக்கண்களிலழகு வந்து தன்னை நலிகின்றபடியைப் பேசுகிறாள். ஓ கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள் என்னைப்

பேதைமை செய்தனவே ஐ என்று திருப்பாணாழ்வாரைத் துடிக்கப் பண்ணின திருக்கண்கள் தம்மையும் துடிக்கப் பண்ணுகிறபடி சொல்லுகிறார். மற்றுமுள்ள அவயவங்கள் கிடக்க முத லிலே திருக்கண்கள் வந்து நலிவானேன்? என்னில்; ஆசார்யஹ்ருதயத்திலே "அதுக்கு ஹேது ஊழிதோறும் சோம்பாது ஒன்றிப் பொருளென்றளி மகிழ்ந்து முற்றுமாய் நின்று நூலுரைத்து யோகு புணர்ந்து கண்காண வந்து ஆள்பார்க்கிறவன் உலகினதியல்வை நல்விடு செய்ய இணைக்குப் பார்வை தேடிக் கழலலர் ஞான முருவின முழுதுமோட்டின பெருங்கண் எங்குமிலக்கற்று அன்பொடு நோக்கான திசையிலே புக்குழன்று மாறிப்படிந்து துளங்குகிறவர் மேலே படப் பக்கநோக்கறப் பண்ணின விசேஷகடாக்ஷம்" என்று பாக்கவருளிச் செய்தபடி யும், ஆழ்வார் தாமே (திருவிருத்தத்தில்) "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழவைத்தார்" என்றருளிச் செய்தபடியும் இவரை முதன்முதலாக விஷயீ கரித்தவை திருக்கண்களேயாதலால் அந்த உறவுகொண்டு அவை முதலிலே வந்து தோன்றின போலும். "பெண்களின் உயிரைக் கொள்ளை கொள்கின்ற இரண்டு ம்ருத்யுக்களோவிவை!" என்று சொல்லுவானேன்? உகந்து அநுபவிக்கலாகாதோ வென்னில்; அவயவியான அப் பெருமான் தானே ஸாக்ஷாத்தாக வந்து தோன்றினானாகில் உகந்து அநுபவிக்கலாம்; அப்படி யில்லையே. அவன்தான் ஒரு விநோதம் செய்வான்போன்று தனது திவ்யாவயவங்களைத் தனித் தனியே போகவிட்டுக் கூத்து பார்க்கிறானாகையாலே உகப்பின்றிக்கே நலிவேயாயிற்று; அதனால் "ஏழையராவி யுண்ணுமிணைக் கூற்றங்கொலோ!" என்று அலறிப் பேசுகிறபடி. ஏழையரென்று ஸ்த்ரீகளுக்குப் பொதுவான பெயர்.

ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள் கோலோ—எம்பெருமானுடைய திருக்கண்களே யிவை என்று ஆழ்வார்க்குத் தெரியாமையில்லை; அது முந்துறமுன்னம் தெரிந்திருக்கச் செய்தே யும் 'ஏழையராவியுண்ணுமிணைக் கூற்றங்கொலோ' என்பதும் 'திருக்கண்கள் கொலோ அறியேன்' என்பதும் அத்திருக்கண்கள் ஹிம்ஸிக்கிற ஹிம்ஸையைச் சொல்லுவிக்கும் பாசுரமாயிற்று. *உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணன்* என்று கேட்டிருக்க, அந்தோ! இப்படி கொலை செய்யுங் கண்களாவதே! என்று திருவுள்ளம் நொந்து சொல்லுகிறபடி.

இத் திருக்கண்களுக்குத் தப்பிப் பிழைக்கலாகாதோவென்ன; ஐயோ! அவை ஏதேனு மொரு பக்கத்திலே தோன்றினால் வேறு பக்கம் நோக்கி உய்யலாமே; அப்படிக்கில்லாதபடி ஜலபலத்தினன்று பார்த்த பார்த்தவிடமெல்லாம் பெருமாளேயானாப்போலே எந்தப் பக்கமாகத் திருப்பினாலும் இவையேயாய் வேறொரு பொருள் தோன்றாதபடியாயிற்றே; தோழிமார் களே! தாய்மார்களே! உங்களுடைய ஹிம்ஸைக்கு நான் ஆற்றுவேனோ? இத் திருக்கண்களின் ஹிம்ஸைக்கு ஆற்றுவேனோ? என்ன செய்வேன் சொல்லுங்களென்கிறாளாயிற்று. (க)

3404. ஆட்டியுந்தூற்றியுந்நின்றன்னைமீர் என்னைநீர்நலிந்தென் *
மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோகொழுந்தோவறியேன் *
ஈட்டியவெண்ணெயுண்டான் திருமூக்கெனதாவியுள்ளே *
மாட்டியவல்விளக்கின்சுடராய் நிற்கும்வாலியதே. (உ)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே ! |
| நீர் | நீங்கள் |
| என்னை ஆட்டியும் தூற்றியும் நின்று | என்னை யலைத்தும் அலர் தூற்றியும் நின்று |
| நலிந்து என் | நலிகிறவிதனால் என்ன பலனுண்டு ? |
| மாடு உயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ | (அக்கண்களின்) அருகே ஓங்கியிருப்பதொரு கற்பகத்தினுடைய கொடியோ கொழுந்தோ ! |

| | |
|---|---|
| அறியேன் | அறிகின்றிலேன் ; |
| ஈட்டிய வெண்ணெய் உண்டான் திருமூக்கு | திரட்டி வைத்திருந்த வெண்ணெயை (களவு வழியாலே) அமுது செய்த கண்ணனுடைய திருமூக்கானது |
| எனது ஆவி உள்ளே | எனது நெஞ்சினுள்ளே |
| மாட்டிய | ஏற்றிய |
| வல்விளக்கின் சுடர் ஆய் நிற்கும் | பெருத்து ஸ்திரமான தீபமொன்று போலே விளங்காநின்றது. |

* * * கண்ணழகு நலிந்தது போராமே மூக்கழகும் நலியும்படியைச் சொல்லியழுகிறாள். பராங்குசநாயகி எம்பெருமானுடைய திவ்யாவயவ ஸௌந்தர்ய லாவண்யங்களைச் சொல்லி அடிக்கடி வாய்வெருவுவதுண்டு ; * செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரையடிக்கள் செப்பொன் திருவுடம்பே * என்றும், * செக்கமலத்தலர் போலும் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலைபோலுந் திருமேனி * என்றுமிப்படி பலகாலுமலற்றுவள். அது கண்ட தாயானவள் ‘சாண்ணீளச் சிறுக்கி இப்படியும் வாய்வெருவலாகுமோ ?’ என்று இனைய பலவுஞ் சொல்லி முனிவதும் பழிதூற்றுவதுமாயிருப்பதுண்டு ; அங்ஙனமலர் தூற்றும் தாயை நோக்கிச் சொல்லுகிறாள் ; தாய்மார்களே ! நீங்கள் சிக்ஷிக்கவும் அதற்கு நான் உடன்படும்படியாகவும் விஷயமில்லையே ;. எம்பெருமானுடைய ஒவ்வோரவயவமும் முந்தி முந்தி மேல் விழுந்து நலியாநின்றதே ! இதற்கு நான் என்செய்வேனென்கிறாள். அந்த அவயவங்களுள் திருமூக்கைப்பற்றி இங்குச் சொல்லுமிவள் ‘மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ’ என்கிறாள். கற்பகக் கொடியோ ! அல்லது கற்பகக் கொழுந்தோ ! என்றே சொல்லலாம்படியுள்ளது. நீர விமர்சித்துப் பார்த்தால் பிறகுதான் எம்பெருமானுடைய திருமூக்கென்னலாயிருந்தது.

ஈட்டியவெண்ணெயுண்டான் திருமூக்கு என்கையாலே இதற்கிணங்க நம்பிள்ளையருளிச் செய்கிறபடி பாரீர் :—“ அநுகூலஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரிக்கமாட்டாதே வெண்ணெய் களவு காணப்புக்குக் கொண்டியிலே பிடியுண்டு, பின்பு அத்தை இல்லை செய்கைக்காக முகத்திலே தடவிக்கொள்ளுமே ; அவ்வெண்ணெய் மூடைநாற்றமும் உருவு வெளிப்பாட்டிலே தோற்றுகிறதாயிற்று இவளுக்கு.” என்பன ஈட்டு ஸ்ரீஸூக்திகள். இவ்விடத்தில் * [illegible] ..... [illegible] * என்ற ஆழ்வானுடைய ஸுந்தரபாஹுஸ்தவ ஸ்ரீஸூக்தியும் சேர்த்து அநுஸந்திக்கத்தகும்.

நங்காய் ! நீ சொல்லுகிறவிது எங்களுக்குத் தெரிகிறதில்லையே !, அது எங்கேயிருக்கின்றது ? காட்டாய் என்று தாய்மார் கேட்க “ எனதாவியுள்ளே மாட்டிய வல்விளக்கின் சுடராய் நிற்கும் ” என்கிறாள். எனது ஹ்ருதயத்தினுள்ளே சுடர்விட்டின பெருவிளக்கினொளியையுடைத்தாய் வலிதாய் நலியாநின்றது என்கை.

3405. வாலியதோர்கனிகொல் வினையாட்டியேன்வல்வினைகொல் *
கோலந்திரள் பவளக்கொழுந்துண்டங்கொலோவறியேன் *
நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான்தொண்டைவாய் *
ஏலும்திசையுளெல்லாம் வந்துதோன்றுமென்னின்னுயிர்க்கே. (௫)

வாலியது ஓர் கனி கொல் } விலக்ஷணமாயிருப்பதொரு பழமோ?
வினையாட்டியேன் வல் வினை கொல் } இப்பழத்தை இப்போதேயநுபவிக்கப் பெறாத பாவத்தையுடையேனான வென்னுடைய வலிய பாவமே ஒரு வடிவு கொண்டதாயிருக்கிறதோ?
கோலம் திரள் } ஸௌந்தர்யம் ஸௌகுமார்யம் முதலான நலங்களெல்லாம் ஒருசேரத் திரண்ட
பவளம் கொழு துண்டம் கொலோ } பவளத்தினுடைய கொழுவியதொரு முறியோ?
அறியேன் } அறிகின்றேனில்லை;
நீலம் நெடு முகில் போல் திருமேனி அம்மான் } கறுத்துப் பெருத்த மேகம் போன்ற திருமேனியையுடைய பெருமானது
தொண்டைவாய் } தொண்டைக் கனியின் நிறத்தை யுடைத்தான அதரமானது
ஏலும் திசையுள் எல்லாம் } பார்த்த பார்த்த திசையெல்லாம்
என் இன் உயிர்க்கு வந்து தோன்றும் } எனது இனிய உயிரை நலிகைக்காக வந்து தோன்றுகின்றது.

* * * எம்பெருமானது திருப்பவளத்தினழகு வந்து நலிகிறபடியைச் சொல்லுகிறாள். முன்பு பிஞ்சாய்ப் பிறகு பக்குவமாய்ப் பின்பு அநுபவ யோக்யமல்லாமற் போகுஞ் சில பழங்களுண்டே; அப்படியல்லாமல் எப்போதும் ஒருபடிப்பட்டே யிருக்கும் கனியோ? என்பது வாலியதோர் கனிகொல் என்பதன் கருத்து.

வினையாட்டியேன் வல்வினைகொல்?—பாபத்தைப் பண்ணின வென்னுடைய பாபமானது பக்குவமாகி அங்கே குடியேறிற்றோ? அம்ருதமே விஷமாம்படியான பாபத்தைப் பண்ணினேன் நானன்றோ. போக்யவஸ்துவே பாதகமானால் போக்தாக்களின் பாபமேயன்றோ வலிதாயிருக்கவேணும்.

கோலந்திரள் பவளக்கொழுந்துண்டங்கொலோ?—ஸௌந்தர்ய ஸாரஸமுதாயமே வடிவெடுத்ததோ வென்னலாம்படியுள்ள பவளத்தினுடைய கொழுவிய துண்டமென்னலாயிருக்கிறதோ? இங்ஙனே பலவாறாகச் சங்கித்து, அவையெல்லாமல்ல; நீலமுகில் வண்ணனுடைய திருப்பவளமேயென்று துணிந்து கூறுகின்றாள் மூன்றாமடியில். இது என்னை முடிக்கைக்காக எல்லாத் திக்குக்களிலும் வந்து தோன்றுகின்றதே! என்செய்வேனென்கிறாள். (௫)

3406. இன்னுயிர்க்கேழையர்மேல் வளையுமிணைநீலவிற்கொல் *
மன்னியசீர்மதனன் கருப்புச்சிலைகொல் * மதனன்
தன்னுயிர்த்தாதை கண்ணபெருமான்புருவமவையே *
என்னுயிர்மேலனவாய் அடுகின்றனவென்றுநின்றே. (௬)

இன் உயிர்க்கு } இனிமையான உயிரைக் கவர்வதற்காக
ஏழையர் மேல் வளையும் } பெண்பிறந்தார் மேலே தானே வளைந்து நலிகிறதாய

| பதம் | பொருள் |
|---|---|
| நீலம் இணை வில் கொல் | நீல நிறத்தையுடைய இரண்டு விற்களோ? |
| மன்னிய சீர் மதனன் | அழியாவழகுடையனான மன்மதனுடைய |
| கரும்பு சிலை கொல் | கரும்புமயமான வில்தானோ? |
| மதனன் தன் உயிர் தாதை கண்ணன் பெருமான் | மன்மதனுக்கு அபிமதனான பிதாவாகிய கண்ணபிரானுடைய |
| புருவம் அவையே | அந்தத் திருப்புருவங்களே |
| என் உயிர் மேலன ஆய் | எனது உயிரையே கணிசித்து |
| என்றும் நின்றே அடுகின்றன | என்றும் ஒருபடிப்பட நின்று நலியா நின்றன. |

* * * எம்பெருமானுடைய திருப்புருவத்தினழகு வளைந்து கொண்டு வந்து நலிகிறபடியைக் கூறுகின்றாள். "தன்கைச் சார்ங்கமதுவேபோல் புருவ வட்டமழகிய" என்ற ஆண்டாள் பாசுரத்தின்படியே புருவத்திற்கு வில்லை உவமை கூறுவதுண்டாதலால், காமிநீ ஜனத்தின் பிராணனையே இலக்காகப் பெற்ற இரண்டு விற்களோவிவை! என்கிறாள். அல்லது மன்மதனுடைய ஸௌந்தர்ய நிகேதநமான இக்ஷு கோதண்டமோ? என்கிறாள். இவனும் * ஸாக்ஷாந்மந்மத மந்மதனேயன்றோ. இவையெல்லாமல்ல; ஸௌந்தர்ய ஸாரனான மதனனுக்கு ஜன்மபூமியான கண்ணபிரானுடைய புருவங்களேயிவை. இவற்றுக்கு என்னுயிரை மாய்ப்பதொன்றே கருமம்; இவற்றுக்கு எங்ஙனே தப்பிப்பிழைப்பேனென்கிறாள்.

ருக்மிணிப் பிராட்டியினிடத்து மன்மதனுடைய அம்சமாக ப்ரத்யும்நன் பிறந்தனனாதலால், மன்மதன் கண்ணபிரானுடைய புதல்வனென்பது நூற்கொள்கை. "காமர்தாதை" "காமன்றன் தாதை" என்ற அருளிச் செயல்களுங் காண்க. (௪)

3407. என்றுநின்றேதிகழும் செய்யவீன்சுடர்வெண்மின்னுக்கொல் *
அன்றியென்னாவியடும் அணிமுத்தங்கொலோவறியேன் *
குன்றமெடுத்தபிரான் முறுவலெனதாவியடும் *
ஒன்றுமறிகின்றிலேன் அன்னைமீரெனக்குய்விடமே. (௫)

| பதம் | பொருள் |
|---|---|
| என்றும் நின்றே திகழும் | எப்போதும் ஒருபடிப்பட நின்று விளங்குமதாய் |
| செய்ய சுடர் ஈன் | சிவந்த சுடரை வெளிப்படுத்துமதான |
| வெண் மின் கொல் | வெண்ணிறமான மின்னலோ!; |
| அன்றி | அல்லது |
| என் ஆவி அடும் அணி முத்தம் கொலோ | என்னுயிரை மாய்க்கின்ற அழகிய முத்துநிரையோ!; |
| அறியேன் | அறிகின்றிலேன்; |
| குன்றம் எடுத்த பிரான் முறுவல் | கோவர்த்தனமலையைக் குடையாக வெடுத்த பெருமானுடைய மந்தஹாஸமானது |
| எனது ஆவி அடும் | என் ஆத்மாவைத் தபியா நின்றது; |
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| எனக்கு உய்வு இடம் | நான் பிழைக்கு முபாயம் |
| ஒன்றும் அறிகின்றிலேன் | சிறிதும் அறிகிறேனில்லை. |

* * * எம்பெருமானுடைய புன்முறுவலின் அழகு வந்து நலிகிறபடியைக் கூறுகின்றாள். தோன்றி மாயும் மின்னல் போலல்லாமல் எப்போதும் மாறாதே விளங்கா நிற்பதாய் செய்ய சுடரை வெளிப்படுத்தா நின்ற மின்னலோவென்று முதலடியால் உல்லேகிக்கிறபடி. திரு

முத்து நிரை வெண்ணிறமுடைத்தாதலால் அது மின்னாகக் கூறப்பட்டது. திருப்பவளத்தின் சிவப்பு நிறமும் முன்னேடுகிறபடியால் செய்யசுடரைச் சேர்த்துக் கூறியபடி. என் பிராணனை முடிக்கவந்த திருமுத்து நிரை தானேயோ என்பது இரண்டாமடி.

குன்றமெடுத்த பிரான் முறுவல்—இந்திரன் பசிக்கோபத்தினால் ஏழுநாள் விடாமழை பெய்விக்க, கோவலரையும் கோநிரையையுங் காத்தருள வேண்டிக் கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்துத் தாங்கி நின்றபோது * கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமுமழிந்தில வாடிற்றில வடிவேறு திருவுகிர் நொந்துமில மணிவண்ணன் மலையுமோர் சப்பிரதம் * என்னும்படி அவலீலையாக நின்ற நிலையை நோக்கி 'அப்பா! நீ தேவதையா? யக்ஷனா? கந்தர்வனா?' என்று இடையர்கள் கேட்க, * ஸுஹம் வோ பாந்தவோ ஜாத:—அஹம் வோ பாந்தவோ ஜாத: * என்று சொல்லிச் சிரித்த நிலைதன்னை இப்போது உருவெளிப்பாட்டில் கண்டாள் போலும். (ரு)

3408. உய்விடமேழையர்க்கும் அசுரர்க்குமரக்கர்கட்கும் *
எவ்விடமென்றிலங்கி மகரம்தழைக்கும்தளிர்கொல் *
பைவிடப்பாம்பணையான் திருக்குண்டலக்காதுகளே *
கைவிடலொன்றுமின்றி அடுகின்றனகாண்மின்களே. (சா)

| | |
|---|---|
| ஏழையர்க்கும் | பெண்டுகளுக்கும் |
| அசுரர்கட்கும் அரக்கர்கட்கும் | அஸுர ராக்ஷஸர்களுக்கும் |
| உய்வு இடம் எவ்விடம் என்று இலங்கி | பிழைக்கும் விரகு ஏது? என்னும்படி விளங்கிக்கொண்டு |
| மகரம் தழைக்கும் தளிர் கொல் | மகரவடிவமாய்த் தழைத்தன சில தளிர்களோ? |
| பை விடம் பாம்பு அணையான் | படமெடுப்பதும் விஷத்தைக் கக்குவதுமான பாம்பைப் படுக்கையாகவுடைய பெருமானுடைய |
| திரு குண்டலம் காதுகளே | திருமகரகுண்டலங்களையுடைய காதுகள் தானே |
| கைவிடல் ஒன்றும் இன்றி | ஓய்வில்லாமல் நிரந்தரமாக |
| அடுகின்றன | நலியாநின்றன; |
| காண்மின்கள் | காணுங்கோள். |

* * * அவனுடைய திருமகரகுண்டலங்களும் திருக்காதுகளும் நலிகிறபடி சொல்லுகிறாள். அஸுர ராக்ஷஸர்களுக்கும் அபலைகளுக்கும் தப்பிச் சென்று பிழைக்குமிடமேது! என்று சொல்லுவனபோல் விளங்கி மகராகாரமாய்த் தழைத்தன சில தளிர்களோ இவை! என்கிற உல்லேகம் முன்னடிகளிற் போதரும். இதனால் திருக்காதுகள் பல்லவம்போல் திகழுமாறு சொல்லிற்றாயிற்று

ஏழையர்க்கும் அசுரர்க்கும் அரக்கர்கட்கும்—அஸுர ராக்ஷஸர்களையும் அபலைகளையும் சேரவெடுத்தது அவயவசோபையைக் கண்டு பாதைப்படுவதில் வாசியற்றிருக்கையாலே. அசுரரும் அரக்கரும் அழகுகண்டால் பொறுக்கமாட்டாதே முடிவர்கள்; அபலைகள் அநுபவிக்கப் பெறாதே முடிவர்கள்.

விரோதிகளுக்குக் கிட்டவொண்ணாதபடி விஷத்தை உமிழ்பவனான திருவனந்தாழ்வான் மேலே சாய்ந்தருளின எம்பெருமானுடைய குண்டலக் காதுகளே இவை. அந்தோ! இவை

இடையில் சிறிது விட்டு நலிகையன்றிக்கே ஓய்வின்றி நலிகின்றனவே! என் செய்வே னென்கிருள். (சு)

3409. காண்மின்களன்னையர்காளென்று காட்டும்வகையறியேன் *
நாள்மன்னுவெண்திங்கள்கொல் நயந்தார்கட்குநச்சிலைகொல் *
சேண்மன்னுநால்தடந்தோள் பெருமான்றன்திருநுதலே *
கோள்மன்னியாவியடும் கொடியேனுயிர்கோளிழைத்தே. (எ)

| | |
|---|---|
| அன்னையர்காள் காண்மின்கள் என்று | தாய்மார்களே! காணுங்கோள் என்று சொல்லி |
| காட்டும் வகை அறியேன் | (உங்களுக்குக்) காட்டும் விதமறிகின்றிலேன்; |
| நாள் மன்னு வெண் திங்கள் கொல் | பூர்வ பக்ஷத்து அஷ்டமீ சந்திரனோ! |
| நயந்தார்கட்கு நஞ்சு இலை கொல் | ஆசைப்பட்டவர்களுக்கு நஞ்சாயிருப்பதொரு இலையோ! |
| சேண் மன்னு நால் தட தோள் பெருமான் தன் | உயர்த்தி பொருந்திய நான்கு பருத்த திருத் தோள்களையுடைய எம்பெருமானது |
| திரு நுதலே | திரு நெற்றியே |
| கோள் மன்னி | மிடுக்குப் பொருந்தி |
| கொடியேன் உயிர் கோள் இழைத்து | பாவியான வென்னுடைய பிராணனை முடிக்கையிலே துணிந்து |
| ஆவி அடும் | என் ஆத்மாவை நலியாநின்றது. |

* * * திருநெற்றியினழகுவந்து நலிகிறபடியைச் சொல்லுகிருள். அவ்வழகை எல்லார்க்கும் காட்டவேணுமென்றும், அதைக்கண்டு தான் படுகிற பாட்டை எல்லாரும் படவேணுமென்றும் இவளுக்கு ஆசையுள்ளது; ஆனால் அவ்வழகு எடுத்துக்காட்டத்தக்கதாக இல்லையே; தனக்குப்போலே அவர்களுக்கும் உரு வெளிப்பாடு உண்டானாலாவது காண்மின்களென்று சொல்லிக்காட்டலாம். அதுவுமில்லை. ஆகவே “அன்னையர்காள்! காண்மின்களென்று காட்டும் வகையறியேன்” என்று தளர்கின்றாள். அவ்வழகு என் கைக்குப்பிடிபடவில்லை; உங்களுக்கோ உரு வெளிப்பாடு உண்டாகவில்லை; எங்ஙனே காட்டுவேன்? நானேயநுபவித்து நானே நலிவுபடுவேனித்தனை என்றாளாயிற்று.

நீங்கள் கண்டாலென்ன? காணவிடிலென்ன? உங்களுக்குக் காட்டவேண்டிய அவசியந்தான் எனக்கென்ன? நான் அநுபவிக்கிறேன் போங்கள் என்று சொல்லி இரண்டாமடியினாலே அநுபவிக்கிருள். [நாள்மன்னு வெண்திங்கள் கோல்! நயந்தார்கட்கு நச்சிலைகோல்!] அஷ்டமியளவான நாளோடே மன்னி அர்த்தாகாரமாகையாலே களங்கமற்று வெளுத்த சந்திரனோ? அல்லது நச்சுவடிவாயிருப்பதொரு இலையோ! என்கிருள். இவ்விடத்து ஈட்டிலே— “மேல்காற்றிலே காட்டப் பரிஹாரமாம் மருந்தாயிற்று இது” என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. உலகில் வியாதிக்ரஸ்தர்மேல் மேல்காற்றுப்பட்டவாறே ரோகம் அபிவிருத்தியடையும் என்று சொல்லுவர்கள். பகவத்விஷயமாகிற மருந்து அதற்கு எதிர்த்தட்டாயிருக்கும்; மேல்காற்றுப் பட்டால் தீரும் என்கை. அபத்யங்களையும் ஸஹிக்கும்படியான ஔஷதம் என்றபடி.

கீழிரண்டடிகளால் பேசப்பட்ட வஸ்து இன்னதென்கிறது மூன்றாமடி. திருத்தோளழகாலே என்னையீடுபடுத்திக்கொண்ட பெருமானுடைய திருநெற்றியே என்னை யிப்பாடுபடுத்தா நின்றதென்கிருள். [கொடியேனுயிர் கோளிழைத்து—கோள்மன்னி ஆவியடும்] பாவியேனான வென்னுடைய உயிரினழகை அழித்துக்கொள்கையிலே விருப்பத்தைப்பண்ணி மிடுக்கையவலம்பித்து என்னாத்மாவை நலியாநின்றது என்றபடி. தோற்புரையே போகையன்றிக்கே ஸத்தையை யழியாநின்றதென்கை. (எ)

3410. கோளிழைத்தாமரையும் கொடியும்பவளமும்வில்லும் *
கோளிழைத்தண்முத்தமும் தளிரும்குளிர்வான்பிறையும் *
கோளிழையாவுடைய கொழுஞ்சோதிவட்டங்கொல் * கண்ணன்
கோளிழைவாள்முகமாய் கொடியேனுயிர்கொள்கின்றதே. (அ)

| | |
|---|---|
| கோள் இழை தாமரையும் | தன்னுடைய வெளியே தனக்கு ஆபரணமாகப் போரும்படியான தாமரையும் [திருக்கண்களும்] |
| கொடியும் | கற்பகக் கொடியும் [திருமூக்கும்] |
| பவளமும் | பவளமும் [திருவதரமும்] |
| வில்லும் | வில்லும் [திருப்புருவங்களும்] |
| கோள் இழை தண் முத்தமும் | தன்னுடைய தேஜஸ்ஸையே தனக்கு ஆபரணமாகவுடைத்தான குளிர்ந்த முத்தும் [தந்தபங்க்தியும்] |
| தளிரும் | தளிரும் [திருக்காதும்] |
| குளிர் வான் பிறையும் | குளிர்ந்து பெருத்த பிறையும் [நெற்றியும்] ஆகிய இவற்றோடே கூடி |
| கோள் இழையா உடைய | தன்னழகே தனக்கு ஆபரணமாயிருக்கிற |
| கொழு சோதி வட்டம் கொல் | பூர்ணமான ஜ்யோதிர் மண்டலமோ ! |
| கண்ணன் | கண்ணபிரானது |
| கோள் இழை வாள் முகம் ஆய் | தன்னொளி தானே தனக்காபரணமான அழகிய முகமென்றொரு வியாஜத்தையிட்டு |
| கொடியேன் உயிர் கொள்கின்றது | கொடியேனை யென்னுடைய உயிரைக் கொள்ளை கொள்ளா நின்றது. |

* * * கீழே ஏழு பாட்டுக்கள் கடந்தன. அவ்வேழு பாட்டுக்களிலும் ஏழு அவயவங்கள் நலிந்தமை சொல்லிற்று. அவையெல்லாம் திருமுகமண்டலத்திலுள்ளே அடங்கியவையாதலால் அவையெல்லாம் ஒன்று சேர்ந்து திருமுகமண்டலமென்று பேர்பெற்று நலிகிறபடியைச் சொல்லுகிறுளிப்பாட்டில்.

அலங்கார சாஸ்த்ரத்தில் ரூபகாதிசயோக்தி யென்றொரு அலங்காரமுண்டு; * வஶ்ய நீலோத்பலத்வந்த்வாத் நிஸ்ஸரந்தி ஶிதாஶ்ஶரா:—பச்ய நீலோத்பலத்வந்த்வாத் நிஸ்ஸரந்தி சிதாச்சரா: * என்று வடநூலார் உதாஹரணம் காட்டுவர். இரண்டு கருநெய்தல் பூக்களிலிருந்து கூர்மையான அம்புகள் புறப்படுகிறபடி பாராய் என்று இதனால் சொல்லுகிறது. இரண்டு கண்களிலிருந்து கடாக்ஷபாதங்கள் விழுகிறபடியைச் சொன்னவாறு. இந்த வகையிலே இப்பாட்டில் முன்னிரண்டடிகள் அமைந்துள்ளன. தாமரை, கொடி, பவளம், வில், முத்து, தளிர், பிறை என்று சொல்லப்பட்டவை உபமேயத்தை மறைத்து உபமானத்தை மாத்திரம் சொன்னபடி. முதற்பாட்டில் "ஆழியங் கண்ணபிரான் திருக்கண்கள்—தாமரை நாண்மலர்போல் வந்து தோன்றும்" என்றபடியே இங்குக் கண்களைத் தாமரையாகச் சொல்லிற்று. இரண்டாம் பாட்டில் "மாட்டுயர்கற்பகத்தின் வல்லி—ஈட்டிய வெண்ணெயுண்டான் திருமூக்கு" என்றபடியே இங்கு மூக்கைக் கொடியாகச் சொல்லிற்று. மூன்றும் பாட்டில் "கோலந்திரள் பவளக் கொழுந்துண்டம்—அம்மான் தொண்டைவாய்" என்றபடியே இங்கு அதரத்தைப் பவளமாகச் சொல்லிற்று. நாலாம் பாட்டில் "இன்னுயிர்க் கேழையர்மேல் வளையுமிணை நீலவில்—கண்ணபெருமான் புருவம்" என்றபடியே இங்குப் புருவத்தை வில்லாகச் சொல்லிற்று. ஐந்தாம் பாட்டில் "என்னுவியடுமணிமுத்தம்—குன்றமெடுத்த பிரான் முறுவல்" என்றபடியே இங்கு முறுவலை முத்தாகச் சொல்லிற்று. ஆறும் பாட்டில் "மகரந்தழைக்குந் தளிர்—திருக்குண்டலக் காதுகள்" என்றபடியே இங்குக் காதுகளைத் தளிராகச் சொல்லிற்று.

ஏழாம் பாட்டில் "நாண்மன்னு வெண்திங்கள்—பெருமான் தன் திருநுதல்" என்றபடியே இங்குத் திருநெற்றியைப் பிறையாகச் சொல்லிற்று. ஆகிய இவற்றையெல்லாம் சேர்த்துக் காணும்போது "சோதிகளெல்லாம் ஒன்று சேர்ந்த சேர்த்தியோ! (அதாவது, ஜ்யோதிர்மண்டலமோ!) என்னலாம்படி யிருக்கையாலே மூன்ருமடியில் 'கோழுஞ்சோதி வட்டங்கோல்' என்ருர். உண்மையில் இவையெல்லாம் ஒன்று சேர்ந்து எம்பெருமானுடைய திருமுகமண்டலமென்று காண்கிறபடியால் அது ஈற்றடியால் சொல்லப்பட்டது. (அ)

3411. கொள்கின்றகோளிருளைச் சுகிர்ந்திட்டகொழுஞ்சுருளின் *
உள்கொண்டநீலநன்னூல் தழைகொலன்றுமாயன்குழல் *
விள்கின்றபூந்தண்டுழாய் விரைநாறவந்தென்னுயிரை *
கள்கின்றவாறறியீரன்னைமீர் கழறுநிற்றிரே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| கொள்கின்ற கோள் இருளை | உலகத்தை யெல்லாம் வியாபிக்கின்ற மிடுக்கையுடைய இருளை | விள்கின்ற பூ தண் துழாய் விரை நாற வந்து | அலர்ந்தழகிய குளிர்ந்த திருத்துழாயின் பரிமளம் வீசும்படி வந்து |
| சுகிர்ந்திட்ட கொழு சுருளின் | பன்னிப் பன்னிச் சுருட்டப்பெற்ற சிறந்த வொரு சுருளினுடைய | என் உயிரை | என் ஆத்மாவை |
| உள் கொண்ட நீலம் நல் நூல் தழை கொல் | (கையழுக்குப் படாமல்)உள்ளே நூற்கப்பட்ட நீல நிறத்தையுடைய அழகிய நூல்திரளோ! | கள்கின்ற ஆறு | கொள்ளை கொள்ளும் விதத்தை |
| அன்று | அதுவன்று, அதுவன்று ; | அன்னைமீர் அறியீர் | தாய்மார்களே! நீங்கள் அறிகின்றீர்களில்லை ; |
| மாயன் குழல் | எம்பெருமானுடைய திருக்குழல் கற்றை என்றிவ்வளவே சொல்லத்தகுமத்தனை; (அத்திருக்குழலானது) | கழறு நிற்றிர் | வீணாக ஏதேனுமொன்றைச் சொல்லிப் பொடிகின்றீர்களோ ! |

* * * திருக்குழல் கற்றையினழகு வந்து நலிகிற படியைச் சொல்லுகிருர். இதில் முன்னடிகள் வெகு விலக்ஷணமானவை. திருக்குழலை ஒருவாறு உல்லேகம் பண்ணுவதும், அந்த உல்லேகமும் உரியதன்று என்று உதறித்தள்ளுவதும் திருக்குழலின் ஒப்பில்லாமையைக் காட்டுதற்காகவென்க. உல்லேகம் செய்தபடி எங்ஙனே யென்னில், பிரளயகாலத்தில் பிரபஞ்சத்தையெல்லாம் வியாபியா நின்ற இருள் உண்டே, அதைப் பிடித்துக்கொணர்ந்து அதில் அஸாரமான அம்சத்தைக் கழித்துப் பரமஸாரமான பாகத்தை நூல் நூற்பதற்காகக் கொள்ளும் ஒரு பஞ்சுச் சுருளை போலே சுருளையாக்கி அதில் நின்றும் நூற்கப்பட்டதொரு நீல நன்னூல் தழையோ! என்று சொல்லலாமென்று பார்த்தார் ; இந்த அபூதோபமையையும் ஸஹியாதபடியன்றே திருக்குழலிருப்பது ; ஆகையாலே உடனே அன்று என்று தாமே மறுத்துவிட்டார் ; பின்னை என்னவென்று சொல்லலாமென்ன, மாயன் குழல் என்றிவ்வளவே [உபமேயந்தன்னையே] சொல்லவேணுமென்று முடித்தபடி.

திருமாலிருஞ்சோலையழகருடைய திருக்குழல் கற்றையை வருணிக்கின்ற கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்திலே—'[illegible]" என்றருளிச் செய்தது இப்பாசுரத்திற்கு ப்ரதிச்சந்தமாகவேயிருக்கும்.

அப்படிப்பட்ட திருக்குழலினழகானது திருத்துழாய் நறுமணத்தோடு கூட வந்து என்னுயிரைக் கொள்ளை கொள்ளா நின்ற விதம் அன்னைமீர்! உங்களுக்குத் தெரிந்திருந்தால் என்னை நீங்கள் கடிந்து பொடிந்து வார்த்தை சொல்லமாட்டீர்கள்; அஃதறியாமையே இங்ஙனம் திரஸ்கரித்துப் பேசுகின்றீர்கள் என்றாளாயிற்று. கழறுதல்—மனம் நோகும்படி பேசுதல். (கூ)

3412. நிற்றிமுற்றத்துளென்று நெரித்தகையராய் * என்னைநீர்
சுற்றியும்சூழ்ந்தும்வைதிர் சுடர்ச்சோதிமணிநிறமாய் *
முற்றவிம்மூவுலகும் விரிகின்றசுடர்முடிக்கே *
ஒற்றுமைக்கொண்டதுள்ளம் அன்னைமீர்நசையென்னுங்கட்கே. (ய)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| நீர் | நீங்கள் |
| என்னை | என்னைக் குறித்து |
| முற்றத்துள் நிற்றி என்று | '(பெண்ணே!) கூசாமல் முற்றத்திலே வந்து நிற்கிறாயே!' என்று அதட்டி |
| நெரித்த கையர் ஆய் சுற்றியும் சூழ்ந்தும் | கையை நெரித்துக் கொண்டு இடை விடாது சூழ்ந்து கொண்டு |
| வைதிர் | நிந்திக்கின்றீர்கள்; |
| சுடர் சோதி மணி நிறம் ஆய் | சுடராய்ப் பரம்பின வொளியையுடைத்தான ரத்னங்களினுடைய நிறத்தையுடைத்தாய்க் கொண்டு |
| இம் மூவுலகு முற்றவும் விரிகின்ற | உலகமடங்கலும் வியாபிக்கிற |
| சுடர் | தேஜஸ்ஸையுடைத்தான |
| முடிக்கே | திருவபிஷேகத்தின் பக்கலிலேயே |
| உள்ளம் ஒற்றுமை கொண்டது | எனது நெஞ்சானது ஒருமைப்பட்டது |
| நுங்கட்கு நசை என் | இனி உங்களுக்கு என் பக்கலில் ஆசை வீண்தான். |

* * * திருவபிஷேகத்தினழகிலே என்னுள்ளமகப்பட்டது. இனியென்னைப் பொடிந்து உங்களுக்கொரு பலனில்லையென்று திண்ணிதாகப் பேசித் தலைக்கட்டுகிறாள். இப்படி வெட்டிதாகச் சொல்லாவிடில் அவர்கள் விடார்கள் போலேயிருந்தது; ஆகவே வெட்டொன்று துண்டிரண்டாகச் சொல்லி முடிக்கிறாள்.

* முற்றத்தூடு புகுந்து நின்முகங்காட்டிப் புன்முறுவல் செய்து * என்றும் * முற்றம் புகுந்து முறுவல் செய்து நின்றீர் * என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் முற்றத்திலே வந்து முறுவல் செய்து நிற்கிற வழக்கமுண்டாகையாலே அதிலாசை கொண்டு பராங்குச நாயகி முற்றத்திலே வந்து நின்றாள்போலும்; அதுகண்ட அன்னைமார் "அந்தோ! இப்படியும் ஒரு துணிவுண்டோ? நாண் மடமச்சங்கொண்டு பதுங்கி யடங்கியிருக்க வேண்டிய சிறுக்கி வெட்கமின்றி வெளிப்புறப்பட்டு முற்றத்திலே வந்து நிற்கையாவதென்?" என்று கை நெரித்து வைதார்களாம்; இப்போது இப்படிப்பட்ட வசவுகளுக்கு இறையும் பயனில்லை போமின் என்கிறாளாயிற்று. * கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண் முடியிலே எனது நெஞ்சு ஐக்கியப்பட்டதானபின்பு என்னை மீட்கையிலே உங்களுக்குண்டான நசை ஊமனார் கண்ட கனவிலும் பழுதாமத்தனையென்று தலைக்கட்டினாள். (கய)

3413. ❀ கட்கரியபிரமன் சிவனிந்திரனென்றிவர்க்கும் *
கட்கரியகண்ணனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
உட்குடையாயிரத்து ளிவையுமொருபத்தும் வல்லார் *
உட்குடைவானவரோடுடனா யென்றும்மாயாரே. (கக)

| | | | |
|---|---|---|---|
| கட்கு அரிய | மனிதர் முதலானோருடைய கண்ணுக்கு இலக்காகாத | உட்கு உடை ஆயிரத்துள் | எம்பெருமானை உள்ளபடி பேசும் வல்லமை வாய்ந்த ஆயிரத்தினுள்ளே |
| பிரமன் சிவன் இந்திரன் என்ற இவர் | பிரமன் சிவன் இந்திரன் என்று சொல்லப்பட்ட இவர்களுடைய | இவையும் ஒரு பத்தும் வல்லார் | இப்பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவர்கள் |
| கட்கும் அரிய | கண்ணுக்கும் காணவரியனான | உட்கு உடை வானவரோடு என்றும் உடன் ஆய் | ஆற்றல் மிக்க நித்யஸூரிகளோடு கூடினவர்களாய் |
| கண்ணனை | எம்பெருமானைக் குறித்து | | |
| குருகூர் சடகோபன் சொன்ன | நம்மாழ்வார் அருளிச் செய்த | மாயார் | ஒரு நாளும் பிரியாதிருக்கப் பெறுவர்கள் |

* * * இத்திருவாய்மொழியை ஓதுமவர்கள் எம்பெருமானைப் பிரிந்து வருந்தாதே நித்யஸூரிகளோடே கூடி நித்யாநுபவம் பண்ணப் பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். "மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்குந் தேவாவோ" என்றருளிச் செய்த பாசுரத்தின் படியே இதில் ஒன்றரையடிகள் அமைந்திருக்கின்றன. பிரமன் சிவனிந்திரன் முதலானோர் நம்முடைய கட்புலனுக்கு இலக்காகாதாப்போலே அவர்களுடைய கட்புலனுக்கு இலக்காகாதவன் எம்பெருமான்; அவன்றன்னைக் குறித்து ஆழ்வாரருளிச் செய்தவாயிரம்.

உட்கு உடை ஆயிரம்—உட்கு—சக்தி; எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதி சேஷ்டிதங்களை உள்ளபடியே யுரைக்கவல்ல சக்தி வாய்ந்த ஆயிரம் என்றபடி. மேலே, உட்குடை வானவர்—எம்பெருமானை இடைவீடின்றி அநுபவிக்கவல்ல சக்தியுடையார் என்க. (கக)

---

## ஏழாம்பத்து—எட்டாந்திருவாய்மொழி—மாயாவாமனனே.

கீழ்த்திருவாய்மொழியிலே ஆழ்வார் உருவெளிப்பாட்டாலே நோவு பட்டார். அந்த நோவைப் பரிஹரிக்க எம்பெருமானால் ஆகாததன்றே. ஆனாலும் சில காரணங்களாலே அவன் திருவுள்ளம் ஒரு ஸமய விசேஷத்தை எதிர்பார்த்திருந்தபடியாலே தாமதிக்கலாயிற்று. அந்தத் திருவுள்ளத்தை ஆழ்வார் தாம் அறியாதவரல்லரே, அறிந்து வைத்தும் ஆறியிருக்குமியல்வினரல்லரே. உயிர் துறந்து முடியவேண்டும்படியான நிலைமை நேர்ந்திருக்கச் செய்தேயும் எம்பெருமான் தம்மை முடியவொட்டாதே நடத்துகிறபடியைக் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டார். இப்படியொரு ஆச்சரியமிருந்தபடியென்! என்று எம்பெருமானையே நோக்கிக்கூற, ஆழ்வீர்! இந்தவொரு ஆச்சரியந்தானோ என்னிடத்தில் நீர் அறிந்தது? என் விசித்திரங்களையெல்லாம் காட்டுகிறேன் பாரும் என்று சொல்லி எம்பெருமான் தன்னுடைய விசித்ர விபூதித்வத்தைக் காட்டியருள, அது கண்டு ஆழ்வார் விஸ்மிதராய்ப் பேசுகிறார் இத்திருவாய்மொழியில்.

3414. மாயாவாமனனே மதுசூதா நீயருளாய் *
தீயாய்நீராய் நிலனாய் விசும்பாய்க்காலாய் *
தாயாய்த்தந்தையாய் மக்களாய்மற்றுமாய்முற்றுமாய் *
நீயாய் நீ நின்றவாறு இவையென்ன நியாயங்களே. (க)

| | | | |
|---|---|---|---|
| மாயா | ஆச்சரியமான செய்கைகளையுடையவனே! | மதுசூதா | மதுகைடபர்களைத் தொலைத்தவனே! |
| வாமனனே | வாமநாவதாரஞ் செய்தவனே! | நீ அருளாய் | உன்படிகளை நீயே அருளிச் செய்யவேணும்; |

| | |
|---|---|
| தீ ஆய் நீர் ஆய் நிலன் ஆய் விசும்பு ஆய் கால் ஆய் | பஞ்ச பூதங்களுமாய் |
| தாய் ஆய் தந்தை ஆய் | மாதா பிதாக்களாய் |
| மக்கள் ஆய் | வயிற்றில் பிறந்த பிள்ளைகளாய் |
| மற்றும் ஆய் | அல்லாதவையுமாய் |
| முற்றும் ஆய் | சொல்லிச் சொல்லாத எல்லா மூமாய் |
| நீ ஆய் | அஸாதாரணமான தன்மை வாய்ந்த நீயாய் |
| நீ நின்ற ஆறு இவை என்ன நியாயங்கள் | நீ நிற்கிற இந்தத் தன்மைகள் என்ன வகைகளோ! |

* * * [மாயாவாமனனே.] விசித்திரமான காரியங்களையும் காரணங்களையுமெல்லாம் விபூதியாகவுடையனுயிருக்கிறபடியை யநுஸந்தித்து இவையென்ன படிகளென்று வியப்புக் கொண்டு அவனையே கேட்கிறுர். இத்திருவாய்மொழியில் சொல்லுகிற ஆச்சரியங்களுக்கெல்லாம் ஸங்க்ரஹமாக, தொடங்கும்போதே மாயா! என்று விளிக்கிறுர். அதற்கொரு லக்ஷ்யங்காட்டு கிறுர் வாமனனே! என்று. அன்றே பிறந்து அன்றே வளர்ந்து மாவலி பக்கலிலே சென்று அவன் முன்னே நின்று தான் சொன்னவையெல்லாம் செய்யவேண்டும்படி வார்த்தை சொல்லி, சிற்றடியைக் காட்டிப் பெரியவடியாலே யளந்துகொண்டு சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறி மன்னு நமுசியை வானிற் சுழற்றி இப்படி செய்த செயல்களொவ்வொன்றும் ஆச்சரிய மன்றே. மதுசூதா—விரோதிநிரஸனத்தில் வந்தால் மதுகைடபர்களைக் கொன்றது ஆச்சரியமான செயலாயிருக்கும். ஒரு ஸமய விசேஷத்திலே மதுகைடபர்கள் எம்பெருமானை யெதிர்த்துப் பெரும்போர்புரிய, எம்பெருமான் இவர்களைத் துடையாலிடுக்கிக் கொன்றருளினுனென்று ப்ரஸித்தம. ஆழ்வான் ஸுந்தரபாஹு ஸ்தவத்தில் திருமாலிருஞ்சோலையழகருடைய திருத்துடைகளுக்கு விசேஷணமிடும்போது "[illegible]" என்றுர்; பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே அழகியமணவாளனுடைய திருத்துடைகளை வருணிக்கும்போது "[illegible]...[illegible]" என்றவளிச்செய்தார். இது வொரு ஆச்சரியமான செயலாதலால் இங்கு மதுசூதா! என்றது.

நீயருளாய் என்றது நீ க்ருபை பண்ணவேணுமென்றபடியன்று; எனக்குத் தெளியவருளிச்செய்யவேணுமென்றபடி. மேலிற் பாசுரங்களிலுமிப்படியே பொருள் காண்க.

தீயாய் நீராய் நிலனய்—தீயாயிருப்பது நீராயிருக்கமுடியாது; நீராயிருப்பது தீயாயிருக்க முடியாது; அவ்வவற்றின் தன்மை வெவ்வேறு பட்டதாதலால் ஒன்று வேறொன்றுயிருக்க முடியாது. எனினும், எம்பெருமானொருவனே தீயாயும் நீராயும் நிலனுயும் விசும்பாயும் வாயுவாயுமிருப்பது ஆச்சரியமே. இப்படியே, தாயாயிருப்பவள் தந்தையாயிருக்கமுடியாது; தந்தையாயிருப்பவன் தாயாயிருக்கமுடியாது; இவர்கள் தாம் மக்களாயிருக்கமுடியாது; எனினும் எம்பெருமானொருவனே தாயாயும் தந்தையாயும் மக்களாயும் ஸகலவித பந்துக்களாயுமிருப்பது ஆச்சரியமே.

நீ நீயாய் நின்றவாறு—தீயாயும் நீராயும் தாயாயும் தந்தையாயுமிருக்கிற விருப்பு ஸாதாரணுகாரமெனப்படும். அஸாதாரணவிக்ரஹத்தோடு கூடியிருக்கும் திவ்யமான விருப்பானது 'நீயாய் நின்றவாறு' எனப்படுகிறது. ஈடு—"பரமபதத்திலே ஸூரிபோக்யனுயிருக்கிற விருப்போடு ஜகதாகாரனுய் நிற்கிற நிலையோடு வாசியற போக்யமாம்படியிறே இவர்க்குப் பிறந்த ஜ்ஞாநவைசத்யம்."

இவை என்ன நியாயங்களே!—இது விஸ்மயப்பட்டுச் சொல்லுகிற வார்த்தை. இது இன்னபடியென்று எனக்குத் தெரிகிறதில்லையே; தெரியவருளிச் செய்யவேணுமென்றாயிற்று.

3415. அங்கண்மலர்த்தண்டுழாய்முடி அச்சுதனேயருளாய் *
திங்களும்ஞாயிறுமாய்ச் செழும்பல்சுடராயிருளாய் *
பொங்குபொழிமழையாய்ப் புகழாய்ப்பழியாய்ப்பின்னும்நீ *
வெங்கண்வெங்கூற்றமுமாய் இவையென்னவிசித்திரமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அம் கள் மலர் தண் துழாய் முடி | அழகிய மதுவைக் கொண்ட பூக்களையுடைத்தான குளிர்ந்த திருத்துழாய் மாலையை யணிந்த மயிர்முடியை யுடைய | இருள் ஆய் | இருளாயும் |
| அச்சுதனே | எம்பெருமானே! | பொங்கு பொழி மழை ஆய் | பொங்கிப்பொழியும் மழையாயும் |
| அருளாய் நீ | அருளிச்செய்யவேணும்; | புகழ் ஆய் பழி ஆய் | கீர்த்தியாயும் அபகீர்த்தியாயும் |
| திங்களும் ஞாயிறும் ஆய் | சந்திரனும் ஸூர்யனுமாயும் | பின்னும் | இன்னமும் |
| செழு பல் சுடர் ஆய் | விலக்ஷணமாயும் பலவாயுமுள்ள நக்ஷத்திரங்களாயும் | வெம் கண் வெம் கூற்றமும் ஆய் இவை | க்ரூரமான கண்களையும் க்ரூர ஸ்வபாவத்தையுமுடைய ம்ருத்யுவாயும் நிற்கிற இந்த ப்ரகாரங்கள் |
| | | என்ன விசித்திரம் | என்ன வேடிக்கைகளோ! |

* * *—கீழ்ப்பாட்டில் 'நீ நீயாய் நின்றவாறு' என்று அஸாதாரணமான ஆகாரத்தை அநுஸந்தித்தாரே; அதனை வாய்விட்டுப் பேசி யநுபவிக்கிறார்—அங்கண்மலர்த்தண்டுழாய் முடியச்சுதனே! என்று. திங்களும் ஞாயிறுமாய்—"யதா ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்" என்றபடியே இருவர்க்கும் இரண்டு காரியங்கள் நியதங்களாயிருக்குமே; தாபத்தையாற்றுவதும் தாபத்தை விளைப்பதும். இவையிரண்டுமவனிட்ட வழக்கு. செழும்பல்சுடராய்—அவரவர்களுக்கு வரக்கூடிய நன்மை தீமைகளுக்கு ஸூசகங்களாய்க் கொண்டு நக்ஷத்திரங்கள் க்ரஹங்கள் முதலியவற்றுக்கும் நிர்வாஹகனென்றபடி. இருளாய்—சுடராயிருப்பவனும் தானே, சுடர்க்கு எதிரான இருளாயிருப்பவனும் தானே. உலகில் ஒளியைத் தேடுவார் சிலரேயாவர்; இருளைத் தேடுமவர்களே பலராவர்; காமுகர்க்கும் கள்ளர்க்கும் இருள் தேட்டமாயிருக்குமே; அன்னவர்கட்கும் உதவியாம்படி இருளாயிருப்பன்.

பொங்குபொழிமழையாய்—ஸகல ப்ராணிகளுக்கும் ஜீவிக்கலாம்படி பயிர்களை யுண்டாக்கி வளர்க்கும் மழையும் தானேயிருக்கும். புகழாய்ப்பழியாய்—* தோன்றில் புகழொடு தோன்றுக, அஃதிலார் தோன்றலில் தோன்றாமை நன்று * (திருக்குறள்) என்றபடி எல்லாரும் விரும்பக் கூடிய புகழும் தானாய், வேண்டாத பழியும் தானாய். வெங்கண் வெங்கூற்றமுமாய்—இவ்வுலகங்கள் அதிப்ரவ்ருத்தியில் கைவளர்ந்தபோது குளிர நோக்குமது தவிர்ந்து வெவ்விய நோக்கையுடைய யமன்போன்று ஸம்ஹாரகனாய். யமனுக்கும் யமனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. உபநிஷத்தில் * ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம் * என்று ஓதிற்று. பகவானுக்கு யமன் ஊறுகாய் என்றது. உலகில் ஊறுகாயின் தன்மை எப்படிப்பட்டதென்று பார்க்கவேணும். ப்ரஸாதம் முதலியவற்றை உட்கொள்ளுவதற்கு ஸாதனமாயிருக்கும் அது. ப்ரஸாதங்களெல்லாம் உட்கொள்ளப்பட்டபிறகு அது மிச்சப்பட்டிருந்தால் அதையுமெடுத்து உட்கொள்ளுகிறோம். இதுபோல ம்ருத்யுவைக் கருவியாகக்கொண்டு எல்லாவற்றையும் அந்தமடைவித்து, பிறகு அந்த ம்ருத்யு தன்னையும் லயமடைவிக்குந்தன்மை இதனால் தெரியவரும்.

இவையென்ன விசித்திரமே அருளாய்—இப்படி சேராச்சேர்த்தியான பதார்த்தங்களெல்

லாமுமாயிருக்கிற தன்மை மிக விசித்திரமாயிராநின்றது, இதனைத் தெரியவருளிச் செய்ய வேணும். (௮)

**3416. சித்திரத்தேர்வலவா திருச்சக்கரத்தாயருளாய் ***
**எத்தனையோருகமும் அவையாயவற்றுள்ளியலும் ***
**ஒத்தவொண்பல்பொருள்கள் உலப்பிலனவாய்வியவாய் ***
**வித்தகத்தால்நிற்றி நீ இவையென்னவிடமங்களே. (௯)**

| | |
|---|---|
| சித்திரம் தேர் வலவா | விசித்திரமாகத் தேரை நடத்த வல்லவனே! |
| திரு சக்கரத்தாய் | திருவாழிப்படையை யுடையவனே! |
| அருளாய் | நீயருளிச் செய்யவேணும்; |
| எத்தனை ஓர் உகமும் அவை ஆய் | க்ருதம் முதலான யுகங்களுக்கெல்லாம் நிர்வாஹகனாய் |
| அவற்றுள் இயலும் | அந்த காலங்களுக்குள்ளே நடப்பதாய் |
| ஒத்த விய ஒண் பல் உலப்பு இல்லன பொருள்கள் ஆய் | ஒருபடியாலே ஒத்தும் மற்றொருபடியாலே வேறுபட்டுமிருக்கிற அழகிய பல எண்ணிறந்த பதார்த்தங்களுமாய் |
| வித்தகத்தால் நீ நிற்றி | ஆச்சரியப்படத்தக்க தன்மையோடே நீ நிற்கின்றாய்; |
| இவை என்ன விடமங்கள் | இவையென்ன சோாச் சேர்த்திகளோ! |

* * *—கீழ்ப்பாட்டில் 'வெங்கண் வெங்கூற்றமுமாய்' என்றாரே; மண்ணின் பாரம் நீக்குதற்கு வடமதுரையிற் பிறந்த பிறவியிலேயே, * மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலைவளையத் திண்தேர்மேல் முன்னின்று அதனை நடத்தின விசித்திரம் நினைவுக்குவர, சித்திரத் தேர்வலவா திருச்சக்கரத்தாய்! என்று விளிக்கிறார். தேரை நடத்தும்போது விசித்திரமான பலபல காரியங்கள் செய்தமையுண்டு. பெரியாழ்வார் தமது திருமொழியில் (4—2—7.) * மன்னர் மறுக மைத்துனன்மார்க்கொரு தேரின்மேல், முன்னங்குநின்று மோழையெழுவித்தவன் * என்கிற பாசுரத்தினால் ஒரு விசித்திரமான இதிஹாஸமருளிச்செய்கிறார்: அதாவது—அர்ஜுநனுடைய தேர்க்குதிரைகள் தண்ணீர்க்கு விடாய்த்து இளைத்தவளவில், அவன்பக்கல் பக்ஷபாதியான கண்ணபிரான், கடினமான ஸ்தலத்திலும் நீர்நாம்பு அறியவல்லவனாதலால், அங்கு வாருணாஸ்த்ரத்தைப் ப்ரயோகித்துக் கீழுள்ள நீரை வெளிக்கிளப்பிக் குதிரைகளைவிட்டு நீரூட்டிப்புரட்டி யெழுப்பிக்கொண்டு போந்து பூட்டிக்கொண்டுவந்து முன்னே நிறுத்த, இதைக்கண்ட மாற்றரசரெல்லாம் 'இக்கண்ணனுக்கு அர்ஜுனன்பக்கல் பக்ஷபாதமிருந்தபடியென்! இனி நாம் இவனை வெல்லுகையென்று ஒன்றுண்டோ?' என்று குடல்மறுகினராம். இப்படியாகச் செய்த பல பல விசித்திரங்கள் காணத்தக்கன. பாரதப்போரில் பீஷ்மாசார்யர் ஒரு அரிய பெரிய வார்த்தை சொல்லுகிறார்—நான் ஓர் அம்பினாலேயே பாண்டவர்கள் ஐவரையும் அவர்களது சேனைத்தொகையையும் அவலீலையாகச் சாடிவிடுவேன்; ஆனால் மாயவனான கண்ணபிரான் அங்குத் தேர்ப்பாகனாய் அமைந்ததனால் என் வல்லமை சிறிதும் பயன்படாதொழிகின்றது; அவன் தேரை நடத்துகிற விதம் விசித்திரமாயன்றோ விராநின்றது என்று. அப்படி எதிரிகளும் வியக்கும்படியான திறமையைத் திருவுள்ளம்பற்றிச் சித்திரத்தேர்வலவா வென்கிறார்.

'சித்திரத்தேர்வலவா!' என்றதற்கு அடுத்தபடியாகத் திருச்சக்கரத்தாய்! என்கையாலே சக்கரத்தாழ்வானைக்கொண்டு செய்த விசித்திரமும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. அர்ஜுனன் பதின்மூன்றாநாட் போரில் தன்மகனான அபிமந்யுவைக்கொன்ற ஜயத்ரதனை [துரியோதனனது உடன்பிறந்தவள் கணவனை] 'நாளை அஸ்தமிப்பதற்குமுன்னே கொல்லாவிடின் தீக்குதிப்பது

உயிர்விடுவேன்' என்று ப்ரதிஜ்ஞைபண்ண, அதனையறிந்த பகைவர்கள் பதினான்கா நாளாகிற மறுநாட்பகல் முழுவதும் ஜயத்ரதனை வெளிப்படுத்தாமல் ஸேனையின்நடுவே நிலவறையில் மறைத்துவைத்திருக்க, அர்ஜுனனது சபதம் பொய்த்துவிடுமேயென்று சிந்தித்த கண்ணபிரான் ஸூர்யனை அஸ்தமிப்பதற்குச் சில நாழிகைக்கு முன்னமே தன் சக்கரப்படையினால் மறைத்துவிட, அப்பொழுது எங்கும் இருளடைந்ததனால் அர்ஜுநன் அக்நிப்ரவேசஞ் செய்யத்தொடங்க, அதனைக் களிப்போடு காணுதற்குத் துரியோதனுதியருடனே ஜயத்ரதன் வந்து எதிர்நிற்க, அச்சமயத்திற் கண்ணன் திருவாழியை வாங்கிவிடவே பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுநன் ஜயத்ரதனைத் தலைதுணித்தனன் என்ற விசித்திர சரித்திரம் இங்கு நினைக்கத்தக்கது. இக்கதையில் ஒரு சங்கை தோன்றும்: * ஸுதர்சநம் பாஸ்கரகோடிதுல்யம் * என்கிறபடியே கோடிஸூர்யப்ரகாசமுடையவனன்றோ திருவாழியாழ்வான்; அன்னவனைக்கொண்டு ஸூர்யப்ரகாசத்தை மறைத்து இருளையுமுண்டாக்கினனென்றால் இது ஸம்பாவிதமோ வென்று. விலக்ஷண ஸங்கல்பத்தாலே இப்படியாக்கினதும் ஒரு விசித்திரமென்று கொள்வது. மற்றும் பரிஹாரவகை வல்லார் வாய்க்கேட்டுணர்க.

எத்தனையோருகமுமவையாய்—க்ருதம் முதலிய யுகங்களுக்கெல்லாம் நிர்வாஹகனே! "𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍 𑌕𑍃𑌤𑍇 𑌯𑌜𑌨𑍍 𑌯𑌜𑍍𑌞𑍈𑌸𑍍 𑌤𑍍𑌰𑍇𑌤𑌾𑌯𑌾𑌂 𑌦𑍍𑌵𑌾𑌪𑌰𑍇𑌽𑌰𑍍𑌚𑌯𑌨𑍍 । 𑌯𑌦𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌦𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌕𑌲𑍌 𑌸𑌂𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯 𑌕𑍇𑌶𑌵𑌮𑍍—த்யாயந் க்ருதே யஜந் யஜ்ஞைஸ் த்ரேதாயாம் த்வாபரேர்ச்சயந், யதாப்நோதி ததாப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேசவம்." என்கிறபடியே நான்கு யுகங்களுக்கும் தருமங்களான த்யானம், யஜநம், அர்ச்சனம், நாமஸங்கீர்த்தனம் ஆகிய இவற்றால் ஆராதிக்கப்படுபவன் என்பது உள்ளுறை. "எத்தனையோர்" என்கையாலே இப்படிப்பட்ட சதுர்யுகங்கள் அனேகமாயிரம் சென்றமை பெறப்படும்.

[அவற்றுள்ளியலும் இத்யாதி.] இப்படி நடக்கின்ற காலகலைகளுக்குள்ளேயுள்ள பொருள்களுக்கு அவதியில்லையே; அவை ஒவ்வொரு படியாலே யொத்தும் வேறொரு படியாலே வேறுபட்டுமிருக்கும். தேவர்கள் மநுஷ்யர்கள் விலங்குகள் என்கிற வகைகளினாலே யொத்திருக்கையும் உணரத்தக்கன. இப்படி பலவகைப்பட்ட பதார்த்தங்கள் எண்ணிறந்தவற்றை விபூதியாக வுடையையாய்.

"வித்தகத்தால்" "வித்தகத்தாய்" என்று பாடபேதங்களுள்ளனவாகக் காட்டுகின்றார் சிலர். ஏதேனுமொரு பாடமே பூருவர்களனைவர்க்குமுடன்பாடென்று கொள்ளலாம்.

இவையென்னவிடமங்களே!—இவையென்ன சோரச்சேர்த்தியான செயல்கள்!. விஷமமென்ற வடசொல் விடமமெனத் திரிந்தது. ஸமமல்லாதது விஷமம். (௩)

3417. கள்ளவிழ்தாமரைகட்கண்ணனே எனக்கொன்றருளாய் *
உள்ளதுமில்லதுமாய் உலப்பில்லனவாய்வியவாய் *
வெள்ளத்தடங்கடலுள் விடநாகணைமேல்மருவி *
உள்ளப்பல்யோகுசெய்தி இவையென்னவுபாயங்களே. (௪

| | | | |
|---|---|---|---|
| கள் அவிழ் தாமரை கண் கண்ணனே | மதுவொழுகுகின்ற தாமரை போன்ற கண்களையுடைய கண்ணபிரானே! | எனக்கு ஒன்று அருளாய் | அடியேனுக்கு இவ்விஷயமொன்று அருளிச்செய்யவேணும்; |

| | |
|---|---|
| உள்ளதும் இல்லதும் ஆய் உவப்பு இல்லன் ஆய் வியன் ஆய் | நித்யமாகையாலே உள்ளது மாய் வேறு அவஸ்தையை யடைகையாலே இல்லாததுமான எண்ணிறந்தவையுமான வேறு வேறு வகைப்பட்ட சேதநாசேதநப்பொருள்களுக்கு நிர்வாஹகனும் |
| வெள்ளம் தடம் கடலுள் | விசாலமான திருப்பாற்கடல் வெள்ளத்திலே |
| விடம் நாகணை மேல் மருவி | (விரோதிகள் அணுகவொண்ணாமைக்காக) விஷத்தை உமிழ்கிற திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே பொருந்தி |
| உள்ளம் | திருவுள்ளத்திலே |
| பல் யோகு செய்தி | பலவகைப்பட்ட ரக்ஷணோபாயங்களைச் சிந்தியாநின்றாய்; |
| இவை என்ன உபாயங்களோ | இவையென்ன விரகுகள்! |

* * * முதன்முதலிலே தம்மை விசேஷ கடாக்ஷம் பண்ணி இவ்வளவு அதிகாரத்திலே கொண்டு நிறுத்தினவை திருக்கண்களேயன்றோ; "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம்" (திருவிருத்தம்) என்று தாமே யருளிச் செய்து வைத்தாரே. அப்படிப்பட்ட திருக்கண்ணழகிலே யீடுபட்டுப் பேசுகிறார். தேனொழுகும் தாமரை போன்ற திருக்கண்களையுடைய கண்ணனே! நீ வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை மெத்தையாக விரித்து அதன்மேலே கள்ளநித்திரை கொள்கின்றாயே, இஃது என்ன வென்று எனக்கருளிச்செய்ய வேணுமென்கிறார்.

உள்ளதும் இல்லதுமாய்—நம்முடைய ஸித்தாந்தத்தில் எல்லாம் உள்ள வஸ்துக்களே யன்றி இல்லாத வஸ்து ஒன்றுமேயில்லையே * ஸதேவநீயதேவ்யக்திமஸதஸ்ஸம்பவ: குத: * என்கிற சாஸ்த்ரார்த்தம் ப்ரஸித்தமன்றோ. அப்படியிருக்க, இல்லது என்பதேன்? எனில்; கேண்மின்; இங்கு இல்லது என்றதற்கு அடியோடு இல்லாதது என்றாவது பொய்யானது என்றாவது பொருளில்லை. 'அழியுந்தன்மையுடையது' என்று பொருள். உள்ளது என்றது அழியாத பொருள் என்றபடி. அசித்தையும் சித்தையும் சொன்னபடி. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் இரண்டாவது அம்சத்தில் பன்னிரண்டாவது அத்யாயத்தில் "ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் புவநாநி விஷ்ணு: வநாநி விஷ்ணுர் கிரயோ திசச் ச, நத்யஸ் ஸமுத்ராச் ச ஸ ஏவ ஸர்வம் யதஸ்தி யந்நாஸ்தி ச விப்ரவர்ய!" என்றுள்ள ச்லோகத்தில் அஸ்தி சப்தத்தாலே சித்தையும் நாஸ்தி சப்தத்தாலே அசித்தையும் சொல்லியிருக்கையாலும், தைத்திரீய உபநிஷத்தில் * ஸத்யம் சாந்ருதம் ச ஸத்யமபவத் * என்றவிடத்து ஸத்ய சப்தத்தால் சித்தையும் அந்ருத சப்தத்தால் அசித்தையும் சொல்லியிருக்கையாலும் அவற்றையடியொற்றி ஆழ்வாரும் உள்ளது இல்லது என்ற சப்தங்களினால் சித்தையும் அசித்தையும் குறித்தனரென்க.

இனி, உள்ளது—உள்ளேயிருப்பது [சரீரத்தினுள்ளேயிருப்பது] என்று பொருளாய் ஆத்மாவைச் சொல்லிற்றாகி, இல்லது—(இல்—வீடு) வீடாகவுள்ளது [ஆத்மாவுக்கு இருப்பிடமாகவுள்ளது] என்று பொருளாய் உடலைச் சொல்லிற்றாகி ஆக இவ்வழியாலே சித்தையும் அசித்தையும் சொல்லிற்றாகவுங் கொள்ளலாம்.

இவ்விடத்தில் ஆறாயிரப்படியருளிச் செயல் காண்மின்;—"நித்யமாயிருக்கையாலே உண்டென்று சொல்லலாம் சேதநனும், பரிணாமஸ்வபாவமாய்க்கொண்டு ப்ரதிக்ஷணம் அவஸ்தாந்தர ஸாக்காகையாலே இல்லையென்னலாம் ப்ரக்ருதியுமாய்." என்று. சேதநாசேதந ஸகல பதார்த்த நிர்வாஹகத்வம் சொன்னபடி. 'உவப்பில்லன' என்கையாலே இவை எண்ணிறந்தவை யென்பதும், 'வியன' என்கையாலே இவை பரஸ்பரம் வேறுபாடுற்றவை யென்பதும் சொல்லிற்றாகும்.

[வெள்ளத்தடங்கடலுள் இத்யாதி] திருப்பாற்கடலிலே, ப்ரதிகூலர்க்குக் கிட்டவொண்ணாதபடி விஷத்தை உமிழாநின்றுள்ள திருவனந்தாழ்வான்மேலே பொருந்தித் திருவுள்ளத்திலே பல ரக்ஷண சிந்தைகளைப் பண்ணா நின்றாய்; நீயும் இங்ஙனே உபாய சிந்தை பண்ணவேணுமோ! ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாயிருக்குமவனுக்கு உபாய சிந்தை வேணுமோ?

இவை என்னவுபாயங்களே?—இன்னமும் அவதரிக்க உபாயம் பார்க்கிறபடியா? அநிஷ்ட நிவ்ருத்திக்கு உபாயம் பார்க்கிறபடியா? இஷ்டப்ராபணத்திற்கு உபாயம் பார்க்கிறபடியா? சிலரை வசப்படுத்திக் கொள்ளுதற்கு உபாயம் பார்க்கிறபடியா? ஒன்றை நிஷ்கர்ஷித்து அருளிச் செய்யவேணுமென்கிறார் போலும். (௪)

3418. பாசங்கள் நீக்கியென்னை உனக்கேயறக்கொண்டிட்டு * நீ
வாசமலர்த்தண்டுழாய்முடி மாயவனேயருளாய் *
காயமும்சீவனுமாய்க் கழிவாய்ப்பிறப்பாய்பின்னும் நீ *
மாயங்கள்செய்துவைத்தி இவையென்னமயக்குக்களே. (௫)

| | | | |
|---|---|---|---|
| வாசம் மலர் தண் துழாய் முடி மாயவனே | நறுமணம் மிக்க பூவையுடைய செவ்வித் திருத்துழாயை யணிந்த மயிர் முடியை யுடைய ஆச்சரியனே!, இப்படிப்பட்ட நீ, | கழிவு பிறப்பு ஆய் | இவற்றுக்கு வரக்கூடிய விநாசமும் உத்பத்தியும் நீயிட்ட வழக்காம்படியாயிருக்க |
| என்னை பாசங்கள் நீக்கி | எனக்குத் தகாத விஷய ஸங்கங்களைக் கழித்து | பின்னும் | பின்னையும் |
| உனக்கே அற கொண்டிட்டு | உனக்கே அற்றுத் தீரும்படி அங்கீகரித்து வைத்து | நீ மாயங்கள் செய்து வைத்தி | அவித்யா கர்மவாஸநாருசிகளாகிற வஞ்சனங்களைப் பண்ணி வையா நின்றாய்; |
| காயமும் சீவனும் | பந்தகமான சரீரமும் பத்த ஜீவனும் | இவை என்ன மயக்குக்கள் | இவை என்ன வ்யாமோஹகங்களாயிருக்கின்றன! |
| | | அருளாய் | அருளிச் செய்யவேணும். |

* * * இப்பதிகத்தின் ப்ரமேயத்திற்குத் தலைமையான பாசுரமிது. என்னை ஆதியிலே விசேஷ கடாக்ஷம் பண்ணிவைத்துப் பின்னையும் எனக்குப் பொருந்தாதபடியான ஸம்ஸாரத்திலே வைத்து நடத்திக்கொண்டு போருகிற இவ்வாச்சரிய மிருந்தபடியை எனக்கருளிச் செய்யவேணுமென்கிறார்.

பாசங்கள் நீக்கி யென்றது—* மயர்வறமதிநலமருளியென்றபடி. உனக்கே அறக்கொண்டிட்டு—* துயரறுசுடரடிதொழுதெழு * என்னும்படி பண்ணி யென்றபடி.

வாசமலர்த்தண்டுழாய்முடிமாயவனே!—புறம்புண்டான பற்றுக்களை யறுத்ததும் தனக்கேயற்றுத் தீரும்படி பண்ணினதும் திருமுடியிலே சாத்தின திருத்துழாய் மாலையினழகைக் காட்டியன்றோ வென்கை. அருளாய்—என்னையிப்படி யீடுபடுத்திக்கொண்டது இங்கே வைத்து நலிவதற்காகவோ, அருளிச்செய்யவேணும்.

மூன்றாமடியின் கருத்து;—தேஹமோ ஆத்மாவோ உத்பத்தி விநாசங்களோ எல்லாம் நீயிட்ட வழக்கன்றோ. இப்படி ஸர்வநிர்வாஹகனான நீ அவித்யாதிகளாகிற வஞ்சனங்களைப் பண்ணி வைக்கின்றாயே! இவையென்ன தெரியாச் செயல்கள்! (௫)

3419. மயக்காவாமனனே மதியாம்வண்ணமொன்றருளாய் *
அயர்ப்பாய்த்தேற்றமுமாய் அழலாய்க்குளிராய்வியவாய் *
வியப்பாய்வென்றிகளாய் வினையாய்ப்பயனாய்பின்னும்நீ *
துயக்காநீநின்றவாறு இவையென்னதுயரங்களே. (௬)

| | |
|---|---|
| மயக்கா | எப்படிப்பட்டவர்களையும் மதி கெடும்படி பண்ணுமவனே ! |
| வாமனனே | (அந்த சக்தியை) வாமநாவதாரத்தில் காட்டினவனே ! |
| மதி ஆம் வண்ணம் ஒன்று அருளாய் | எனக்குக் கலக்கந் தீர்ந்து அறிவுண்டாம்படி அருளிச்செய்யவேணும் ; |
| அயர்ப்பு தேற்றமும் ஆய் | மறப்பும் தெளிவும் நீயிட்ட வழக்காய் |
| அழல் குளிர் ஆய் | தாபமும் குளிர்ச்சியும் நீயிட்ட வழக்காய் |
| வியவு வியப்பு ஆய் | விஸ்மயநீயமும் விஸ்மயமும் நீயிட்ட வழக்காய் |
| வென்றிகள் ஆய் | (உலகில்) விஜய வித்திகளும் நீயிட்ட வழக்காய் |
| வினை பயன் ஆய் | புண்ய பாபரூப கருமங்களும் அவற்றின் பலன்களும் யிட்ட வழக்காய் |
| பின்னும் | அதுக்குமேலே |
| துயக்கு நீ ஆய் | இவற்றிலே சேதநர் கலங்குகிற கலக்கமும் நீயிட்டவழக்காய் |
| நீ நின்ற ஆறு இவை | நீ நிற்கிற இந்த ப்ரகாரங்கள் |
| என்ன துயரங்கள் | என்ன கஷ்டங்களாயிருக்கின்றன !. |

* * * மயக்காவாமனனே !—வடிவழகாலும் நடையழகாலும் பேச்சின் இனிமையாலும் மஹாபலியைப் பிச்சேற்றி நினைத்தது முடித்துக்கொள்ளவல்ல விரகனன்றோ நீ ; தேவர்களின் காரியம் செய்யப்போந்த நீ அந்தத் தேவர்களை நெருக்கின மஹாபலி தானே நெஞ்சு நெகிழ்ந்து உன் கையிலே நீரைவார்த்துத் தானே யிசைந்து தரும்படி மயங்கப் பண்ணினையே !. * மன்னை மனங்கொள்ள வஞ்சித்து நெஞ்சுருக்கி "என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண் மன்னா தருக" என்றவாறே தந்தேன் என்னப் பண்ணினையே ! ; மதியாம் வண்ணம் ஒன்றருளாய்—அநுகூலர் பிரதிகூலர் என்கிற வாசியின்றிக்கே எல்லாரையும் மயங்கப்பண்ணுகை உரியதோ ? நான் தெளிவையுடையேனும்படி என்னைப் பண்ணியருளவேணும் என்கிறார்.

அயர்ப்பாய்த் தேற்றமுமாய்—பகவத்கீதையில் பதினைந்தாமத்யாயத்திலே "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்தஸ் ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநஞ் ச" என்கிறான். ஒன்றையறிவதோ மறப்பதோ எல்லாம் நானிட்ட வழக்கென்கிறான். அழலாய்க் குளிராய்—சீதமும் உஷ்ணமும் தானிட்ட வழக்கு. வியவாய் வியப்பாய்—ஆச்சரியப்படத்தக்க பொருள்களும் ஆச்சர்ய மென்கிற தருமமும் தானிட்ட வழக்கு. வென்றிகளாய்—வெற்றியைச் சொன்னது—பிரதிகோடியான தோல்வியையும் தெரிவிக்கும். ஜயாபஜயங்கள் தானிட்ட வழக்கென்கை. வினையாய்ப் பயனாய்—வினையென்று புண்யபாப ரூபங்களான கருமங்களிரண்டையுஞ் சொல்லுகிறது. பயனென் அவற்றின் பயனான ஸுகதுக்கங்களைச் சொல்லுகிறது.

பின்னும் நீதுயக்காநின்றவாறு—அதற்குமேலே, உன்னையடிபணிந்தாரும் மதிமயங்கும்படி, நீ நிற்கிறவிதம் என்னே !. இவை என்ன துயரங்களே !—இவையுனக்கு லீலையாயிருந்தாலும் உலகுக்குத் துயரமாயிருக்கின்றதே யென்கிறார். (௬)

3420\. துயரங்கள்செய்யுங்கண்ணா சுடர்நீண்முடியாயருளாய் *
துயரஞ்செய்மானங்களாய் மதனாகியுமங்களாய் *
துயரம்செய் காமங்களாய்த் துலையாய் நிலையாய் நடையாய் *
துயரங்கள்செய்துவைத்தி இவையென்ன சுண்டாயங்களே. (எ)

| | |
|---|---|
| துயரங்கள் செய்யும் கண்ணா | துக்கங்களையுண்டாக்குகிற கண்ணனே ! |
| சுடர் நீள் முடியாய் | ஒளிமிக்கு ஓங்கின திருவபிஷேகத்தை யுடையவனே ! |
| துயரம் செய் மானங்கள் ஆய் | துக்கத்தை விளைக்கிற பலவகைப்பட்ட அபிமானங்களாய் |
| மதன் ஆகி | செருக்குமாய் |

| | |
|---|---|
| உகவைகள் ஆய் | ப்ரீதிகளுமாய் |
| துயரம் செய் காமங்கள் ஆய் | துக்கங்களை விளைக்கிற காமங்களாய் |
| துலை ஆய் நிலை ஆய் நடை ஆய் | பரிமாணங்களாய் ஸ்தாவரஜங்கமங்களாய் |
| துயரங்கள் செய்து வைத்தி | (இப்படி சேதநர்களுக்கு) துக்கங்களைப் பண்ணிவைக்கிறாய் ; |
| இவை என்ன சுண்டாயங்கள் | இவை என்ன விளையாட்டுக்களோ ! |
| அருளாய் | அருளிச்செய்யவேணும். |

இங்கு * துயரங்கள் செய்யுங்கண்ணா! என்று எம்பெருமானை விளிக்கின்றார்; * ஏஷஹ்யே வாநந்தயாதி * என்று உபநிஷத்து ஓதுகின்றது ; ஆனந்தப்படுத்துகிறவனாக வோதப்பட்ட எம்பெருமானை நோக்கி ‘துயரங்கள் செய்யுங்கண்ணா’ என்னலாமோவென்னில், ஆழ்வார்க்குக் கண்ணன் செய்யும் துயரம் இன்னதென்பது “சுடர்நீண்முடியாய்” என்ற அடுத்த வார்த்தையினால் விளக்கப்பட்டது. ஈடு—“* முடிச்சோதியிற்படியே திருவபிஷேகத்திலழகைக் காட்டியாயிற்று துக்கங்களைப் பண்ணுவது.” ஆறாயிரப்படி—“உன்னுடைய திருவபிஷேகத்திலழகாலே நலியும் க்ருஷ்ணனே !.” திருக்குரவையிலே ஆய்ச்சியரோடு குழைந்து கலந்து பிரிந்தபோது அவர்கள் ஏற்கெனவே ஸம்ச்லேஷகாலத்தில் அநுபவித்திருந்த வடிவழகை நினைத்து வருந்தினாற் போல்.

துயரஞ் செய் மானங்களாய்—மானமென்ற வடசொல் “மாநோ௨ஹங்காரோ ௨நஸ்மிதாமதா:” என்ற அமரகோசத்தின்படியே அஹங்காரத்தைச் சொல்லும். நற்குலத்திற் பிறந்தோமென்றும் அழகிய வடிவு படைத்திருக்கிறோமென்றும், நிரம்பிய கல்விகளைக் கற்றிருக்கிறோமென்றும் செல்வப் பெருக்குற்றிருக்கிறோமென்றும் இங்ஙனே பல காரணங்களடியாகக் கொண்ட அஹங்காரங்கள் பலபலவாதலால் ‘மானங்கள்’ என்றது; இவை துக்ககாரங்களாகையாலே ‘துயரஞ் செய்’ என்றது. * அரவில் பள்ளிப்பிரான் தன் மாயவினைகளையே யலற்றி இரவு நன்பகலும் தவிர்கிலம் என்ன குறை நமக்கே * என்றும் * எனக்கினியார் நிகர் நீணிலத்தே * என்றுமிப்படி காண்கிற மொழிகள் அஹங்காரங்களாகத் தோற்றினாலும் இவை உள்ளடங்காத ஆனந்தம் பேசுவிக்கிற பேச்சாகையாலே துயரஞ்செய்பவையல்லவென்றுணர்க.

மதனுகி உகவைகளாய்—‘மதம்’ என்கிற வடசொல் மதன் என்று கிடக்கிறது; மகரனகாரப்போலி. மதமாவது பொருள் முதலியவை கிடைப்பதால் வரும் களிப்பு. உகவை—ப்ரீதி. துயரம் செய் காமம்—காமமானது ஹேயமாகவும் உத்தேச்யமாகவுமுண்டு. விஷயாந்தரங்களைப் பற்றின காமம் ஹேயம்; பகவத்விஷயத்தைப் பற்றின காமம் உத்தேச்யம். இராமாநுச நூற்றந்தாதியில் * சேமநல்வீடும் பொருளுந் தருமமும் சீரிய நற்காமமும் என்றிவை நான்கென்பர், நான்கினுங் கண்ணனுக்கேயாமது காமம் * என்றதுங் காண்க.

துலை—பதார்த்தங்களின் தாரதம்யத்தை நிரூபிக்குமதான எடை. நிலை—நிலைத்து நிற்கும் ஸ்தாவர பதார்த்தங்கள். நடை—நடந்து செல்லும் ஜங்கம பதார்த்தங்கள். அல்லது, ஸ்தாவர ஜங்கம பதார்த்தங்களிலுள்ள ஸ்திதி கமனங்களாகிற தருமங்களைச் சொன்னதாகவுமாம்.

துயரங்கள் செய்துவைத்தி—இப்படிப்பட்ட விருத்தவிபூதிகளைச் சிந்திக்கும்போது நெருக்குப்படவேண்டியிருத்தலால் ‘துயரங்கள் செய்து வைத்தி’ என்கிறார். (எ)

3421. என்னசுண்டாயங்களால் நின்றிட்டாயென்னையாளும்கண்ணா *
இன்னதோர்தன்மையையென்றுன்னை யாவர்க்கும்தேற்றரியை *
முன்னையமரர்முதல்வன் வையம் உண்டு அவற்றைப்படைத்து *
பின்னுமுள்ளாய்புறத்தாய் இவையென்னவியற்கைகளே.

| | |
|---|---|
| என்னை ஆளும் கண்ணா | என்னை அடிமை கொள்ளுகிற கண்ணனே !, |
| என்ன சுண்டாயங்களால் நின்றிட்டாய் | என்ன லீலைகளையுடையையாய் நிற்கிறாய் ! |
| இன்னது ஓர் தன்மையை என்று | இன்னபடிப்பட்ட ஸ்வபாவத்தையுடையையாயிரா நின்றாயென்று |
| உன்னை யாவர்க்கும் தேற்ற அரியை | ஒருவர்க்கும் நிர்ணயித்துக் காட்ட முடியாதவனாயிரா நின்றாய் ; |
| முன்னைய மூவுலகும் அவை ஆய் | நித்தியமான மூவுலகங்களுக்கும் நிர்வாஹகனாய் |
| அவற்றை படைத்து பின்னும் | அவற்றை ஸ்ருஷ்டித்து அதுக்குமேலே |
| உள் ஆய் புறத்தாய் | உள்ளிலும் வெளியிலும் வியாபித்திருக்கிறவனே ! |
| இவை என்ன இயற்கைகள் | இவை என்ன ஸ்வபாவங்களாயிருக்கின்றன !. |

* * * இப்பாட்டின் முதலடியில் பாடபேதம் காண்கிறது ; "என்னசுண்டாயங்களால் எங்ஙனே நின்றிட்டாயென்கண்ணா" என்பது சில ஆசாரியர்களின் பாடம் ; "என்ன சுண்டாயங்களால் நின்றிட்டாயென்னையாளுங் கண்ணா" என்பது சில ஆசாரியர்களின் பாடம். அடுத்த பாசுரத்தின் முதலடியிலும் இது மாறிவரும்.

என்னையாளுங்கண்ணா ! என்ன சுண்டாயங்களால் நின்றிட்டாய்—என்னையடிமை கொள்ளுகிற கண்ணபிரானே ! என்ன லீலைகளையுடையையாய் நிற்கிறாய் ! என்று வியக்கிறார். இன்னதோர் தன்மையை யென்றுன்னை யாவர்க்குந் தேற்றரியை—உன்னுடைய ஸ்வபாவமின்னதென்று எப்படிப்பட்ட ஞானிகளாலும் அறுதியிட முடியாதபடியிருக்கின்றதே !, * [illegible] * என்ற ஸுதர்சநசதக ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம்.

உள்ளாய் புறத்தாய்—* [illegible] நாராயண: ஸ்தித: * என்கிறபடியே உள்ளும் புறமுமொக்க எங்கும் வியாபித்திரா நின்றாய் ; அப்படி வியாபிக்குமிடத்தில் அணுபதார்த்தங்களிலும் உள்ளே வியாபித்திருக்கிறாயென்றும் ஒவ்வொரு பொருளிலும் பரிஸமாப்ய வர்த்திக்கிறாயென்றும் வேதாந்தங்கள் கூறுகின்றன ; பிரானே ! அணுவான பதார்த்தங்களிலே உள்ளீடாக வ்யாப்தி உனக்கு எப்படி ஸம்பவிக்கின்றதென்று ஆலோசித்தால் புத்திக்கு ஒன்றுமே யெட்டவில்லை. அன்றியும் உன்னுடைய ஸ்வரூபம் ஓரிடத்தில் பரிஸமாப்ய வர்த்திக்குமானால் அது மற்றோரிடத்தில் இருக்க ப்ரஸக்தியில்லையே ; ஒவ்வொரு வஸ்துவிலும் உன் ஸ்வரூபம் பரிஸமாப்ய வர்த்திப்பதாக சாஸ்த்ரம் ஓதுகின்றதே, இது எப்படி ஸம்பாவிதமென்று ஆலோசித்தால் இதுவும் புத்திக்கு எட்டுகிறதில்லை பிரானே !. ஆனால் எதையும் நீ அவலீலையாகச் செய்து போருகிறாய் ; இவை எங்களுக்கு ஆச்சரியமாயிராநின்றன என்றாராயிற்று. (அ)

3422. என்னவியற்கைகளால் எங்ஙனே நின்றிட்டாயென்கண்ணா *
துன்னுகரசரணம்முதலாக எல்லாவுறுப்பும் *
உன்னுசுவையொளி யூறொலிநாற்றமுற்றும்நீயே *
உன்னையுணரவுறில் உலப்பில்லைநுணுக்கங்களே. (க)

| | |
|---|---|
| என் கண்ணா | எனது கண்ணபிரானே !, |
| என்ன இயற்கைகளால் எங்ஙனே நின்றிட்டாய் | என்ன ஸ்வபாவங்களோடே என்ன ப்ரகாரத்திலே நின்றாய் ; |
| துன்னு கரம் சரணம் முதல் ஆக | நெருங்கிய கரசரணாதிகளான |
| எல்லா உறுப்பும் | எல்லாக்காரணங்களும் |
| உன்னு | விரும்பத்தக்க |
| சுவை ஒளி ஊறு ஒலி நாற்றம் முற்றும் நீயே | ரஸம் ரூபம் ஸ்பர்சம் சப்தம் கந்தம் இவையாகிற ஸகல விஷயங்களும் நீயே; |

| | |
|---|---|
| உன்னை உணர உறில் | இப்படிப்பட்ட வுன்னை நிரூபிக்க நினைக்கில் |
| நுணுக்கங்கள் உலப்பு இல்லை | உன்னுடைய நுட்பத்திற்கு முடிவில்லை. |

* * * கைகால் முதலான வுறுப்புக்களினால் உலகில் அவரவர்கள் செய்யும் ஸகலகாரியங்களும் உன் ஸங்கல்பத்தாலாமவை. ஜலதத்வத்தின் குணமாகிய சுவையும், தேஜஸ்தத்வத்தின் குணமாகிய ரூபமும், வாயுதத்வத்தின் குணமாகிய ஸ்பர்சமும், ஆகாச தத்வத்தின் குணமாகிய சப்தமும், பூமிதத்வத்தின் குணமாகிய கந்தமும் ஆகிய இந்த ஸகல விஷயங்களும் நீயிட்ட வழக்கு. அதாவது, இப்பொருள்களெல்லாவற்றிலும் நீயே அநுப்ரவேசித்திருந்து அவ்வக் காரியங்களை நிர்வஹித்தருளாநின்றாயென்றபடி. உன்னுடைய பெருமையையும் சிறுமையையும் அநுஸந்திக்கப் புக்கால் உன்னுடைய வைலக்ஷண்யத்துக்கு முடிவில்லை என்றாயிற்று. (௯)

3423. இல்லை நுணுக்கங்களே இதனிற்பிறிதென்னும்வண்ணம் *
தொல்லைநன்னூலில்சொன்ன உருவுமருவும்நீயே *
அல்லித்துழாயலங்கலணிமார்ப என்னச்சுதனே *
வல்லதோர்வண்ணம்சொன்னால் அதுவேயுனக்காம்வண்ணமே. (௧௦)

| | |
|---|---|
| இதனில் பிறிது நுணுக்கங்கள் இல்லை என்னும் வண்ணம் | இதிற்காட்டில் வேறு நுட்பமில்லை யென்னும்படி |
| தொல்லை நல்நூலில் சொன்ன | அநாதியான வேதசாஸ்த்ரத்திலே சொல்லப்பட்ட |
| உருவும் அருவும் நீயே | அசித்தும் சித்தும் நீயே; |
| அல்லி துழாய் அலங்கல் அணி மார்ப என் அச்சுதனே | பூந்தாரையுடைத்தான திருத்துழாய் மாலையணிந்த திருமார்பையுடைய என் அச்சுதனே! |
| வல்லது ஓர் வண்ணம் சொன்னால் | கூடுமானவரையில் (யார் ஏது) சொன்னாலும் |
| உனக்கு அதுவே வண்ணம் ஆம் | சொன்னவவ்வளவே உனக்கு வடிவாம். |

* * * ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டப்ரஹ்மம், ஸ்தூலசிதசித்விசிஷ்டப்ரஹ்மம் என வேதாந்திகள் வழங்குவர்கள். காரணாவஸ்த ப்ரஹ்மத்திற்கு ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டப்ரஹ்மமென்று பெயர்; கார்யாவஸ்தப்ரஹ்மத்திற்கு ஸ்தூலசிதசித்விசிஷ்டப்ரஹ்மமென்று பெயர். * ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் * என்று ஓதப்பட்ட நிலை காரணாவஸ்த ஸூக்ஷ்மநிலை. * தாஸ்யவண்யா ஸம்ஜா ஸவாயா ஸமேந்வ்ருக்ஷம் வரிஷ்வஜாதே தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்தி அநச்நந்நந்யோ அபிசாகசீதி * இத்யாதிகளால் ஓதப்பட்ட நிலை கார்யாவஸ்த ஸ்தூலநிலை. ஆக இவ்விரண்டு நிலைமைகளும் ஒரு ப்ரஹ்மத்துக்கேயாதலால் "தொல்லைநன்னூலிற் சொன்ன உருவு மருவும் நீயே" என்கிறது. தொல்லை நன்னூலென்கிறது ப்ரமாணச்ரேஷ்டமான வேதத்தை.

ஈற்றடியை இரண்டு வகையாக நிர்வஹிப்பர்கள்;— வேதங்களும் ஸநகாதியோகிகளும் உன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளைப் பேசப் புகுந்தால் ஏதோ சில பாகம் பேசினார்கள் என்று கொள்ளலாமே தவிர, எல்லாம் பேசி முடித்திட்டார்களென்பதில்லை; அவர்களும் பேசாததாய் இன்னமும் பேசவேண்டுவது அளவு கடந்திருக்குமென்கை. அன்றிக்கே, உனக்கு நல்லராய் உன் குணங்களிலே யீடுபட்டிருக்குமவர்கள் உன்னை ஏதேனுமொருபடி பேசினால் அதையே தன்படியாக நினைத்திருக்குமவன் என்றதாகவுமாம். அன்பர்கள் பேசுகிறபடிக்கெல்லாம் தான் இணங்கியிருக்குமவனென்பது பரம தாற்பரியம். (௧௰)

3424. ஆம்வண்ணமின்னதொன்றென்று அறிவதரியவரியை *
ஆம்வண்ணத்தால் குருகூர்ச்சடகோபனறிந்துரைத்த *
ஆம்வண்ணவொண்டமிழ்கள் இவையாயிரத்துளிப்பத்தும்
ஆம்வண்ணத்தாலுரைப்பார் அமைந்தார்தமக்கென்றைக்குமே. (கக)

| | |
|---|---|
| ஆம் வண்ணம் இன்னது ஒன்று என்று | இன்னபடிப் பட்டிருப்பதொரு ஸ்வபாவமென்று |
| அறிவது அரிய அரியை | (ஒருவராலும்) அறியமுடியாத ஸர்வேச்வரனை |
| குருகூர் சடகோபன் | நம்மாழ்வார் |
| ஆம் வண்ணத்தால் அறிந்து உரைத்த | உள்ளபடியறிந்து அருளிச்செய்த |
| ஆம் வண்ணம் ஒண் தமிழ்கள் இவை ஆயிரத்துள் | தகுதியான சந்தஸ்ஸையுடைய அழகிய தமிழிலான இவ்வாயிரத்துள் |
| இ பத்தும் | இப்பதிகத்தை |
| ஆம் வண்ணத்தால் உரைப்பார் | இயன்றவளவு சொல்லவல்லவர்கள் |
| என்றைக்கும் | ஆத்மாவுள்ளவரைக்கும் |
| தமக்கு அமைந்தார் | க்ருதக்ருத்யர்கள். |

*** [ஆம்வண்ணம்] ஒருவராலும் ஒரு வகையுமறியவொண்ணாத எம்பெருமானை உள்ளபடியே யறிந்து அவனுக்கு ஏற்றவாறு ஆழ்வாரருளிச்செய்த ஆயிரத்தினுள்ளும் இத்திருவாய்மொழியை யதாசக்தி பயிலும்வர்கள் என்றைக்கும் க்ருதக்ருத்யரென்று அவர்களைச் சிறப்பித்துக் கூறுகிறபடி. க்ருதக்ருத்யதா ப்ராப்தியே பலனென்று பயனுரைத்தவாறு.

முதலடியில், எம்பெருமானுடைய படி இன்னதென்று ஒருவராலுமறியவொண்ணாதது என்று கூறியிருப்பது பொருந்துமோ? அவனுடைய படிகளைப் பரக்கப்பேசுவதற்கன்றோ சாஸ்த்ரங்கள் தோன்றியுள்ளன; அவைதாம் அவனுடைய படிகளை நிஷ்கர்ஷித்துக் கூறியிருக்கவில்லையோ? என்று சிலர் சங்கிக்கக்கூடும். இஃது உண்மையே; பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு என்னை யடிபணிவார்க்கு நான் ப்ராப்யன் என்று பலவிடங்களிற் கூறுமெம்பெருமானே ஓரிடத்தில் "நாஸௌ புருஷகாரேண ந சாப்யந்யேந ஹேதுநா। கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந॥", என்கிறான். புருஷகாரபலத்தைக் கொண்டும் மற்று எந்த ஸாதனங்கொண்டும் என்னை வசப்படுத்தமுடியாது; எனக்காகத் தோன்றுகிற போது நானாகவே ஒரு அதிகாரிவிசேஷத்தைத் திருவுள்ளம்பற்றுவேனத்தனை—என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. இங்ஙனமே மற்றொன்றும் காணலாம்; *ச்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்ய வர்த்ததே। ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோऽபி ந வைஷ்ணவ:॥* என்கிற எம்பெருமான் தானே *அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக்। ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:* என்றும், *மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந। தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்॥* என்றுமருளிச்செய்கிறான். தன்னுடைய கட்டளையான ச்ருதிஸ்ம்ருதிஸரணிகளைக் கடந்து துஷ்டனானவன் தன்னளவில் எவ்வளவு பக்தி செய்யினும் பயனில்லை, தனக்கு அவன் த்ரோஹியே என்று ஓரிடத்தில் சொல்லிவைத்து, மற்றும் பலவிடங்களில், எவ்வளவு துஷ்டனானவனும் என்னைக்கபடமாகவாவது அடிபணிந்தானாயின் அவனை என்னோடொப்ப பஹுமானிக்கக்கடவது என்று சொல்லிவைக்கின்றானெம்பெருமான். எதை நம்புவது?

ஆனாலும் சாஸ்த்ரார்த்தம் இப்படி பரஸ்பரம் வ்யாஹதமாயிருக்குமோ? சாஸ்த்ரத்தை உந்மத்த ப்ரலபிதமாக்கவொண்ணுமோ? ஒன்றோடொன்று முரண்படாதபடி ஸமந்வயம் செய்து பொருத்தவல்ல மஹான்களில்லையோ? ஸமந்வயம் செய்திருக்கவில்லையோ வென்னில்; என்

இல்லை; ஸமந்வயம் பெறாதது எதுவுமில்லை. ஆனால் அல்ப ப்ரஜ்ஞர்களுக்கு ஸமந்வயம் அஸாத்யமாகையாலே அமைந்தார்க்கு "ஆழ்வண்ணமின்னதொன்றென்று அறிவதரியவரியை" என்கிறது. முதலடியிலே இப்படிச் சொல்லிவைத்து உடனே இரண்டாமடியிலே "குருகூர்ச் சடகோபன் ஆழ்வண்ணம் கண்டுரைத்த" என்றதன்றோ. இதனால் ஆழ்வார்போன்ற * மயர்வற மதிநலமருளப் பெற்றார்க்கு அறிபவரியனல்லன் என்பது காட்டப்பட்டது. * பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன் * [illegible] * என்றாற்போல.

அமைந்தார் தமக்கு என்றைக்கும் என்றது — காலமுள்ளதனையும் தங்களுக்கு வேண்டிய அநுபவத்திற்குத் தாங்கள் குறையற்றவர்களென்றபடி. அதாவது, ஸ்வயம் க்ருதக்ருத்யர்கள் என்கை. இங்கே நம்பிள்ளை யீடு காண்மின் ;— "அவர்களுக்கு இவ்வாத்மா வுள்ளதனையும் ஈச்வரன்முழங்கைத் தண்ணீர் வேண்டா, ஆழ்வார் பரிக்ரஹமானதுவே போரும். என்றைக்கும் தந்தாமுக்குத் தாமே யமைந்தார்களாயிருப்பர்கள்." (கக)

---

## ஏழாம்பத்து—ஒன்பதாந் திருவாய்மொழி என்றைக்கும்.

கீழ்த் திருவாய்மொழி சென்றது எம்பெருமானுடைய ஒரு ஆச்சர்ய சாதுரியத் தாலேயாயிற்று ஆழ்வார் ஒன்று கேட்க, எம்பெருமான் ஒன்றைச் சொல்லி அவர் கேட்டதை மறப்பிக்குமியல்வினனாகையாலே ஒவ்வொரு ஸமயத்திலே ஒவ்வொரு குணாவிஷ்காரத்தைப் பண்ணுவதும் அதை ஆழ்வார் அநுபவிக்குமாறு செய்வதும் அத்தாலே சிறிது போது கழியும்படியாகச் செய்வதும் ஆக இப்படியே நடந்து வாராநின்றது. இப்படிப்பட்ட எம்பெருமானை இன்று மடிபிடித்துக் கேட்டு உத்தரம் பெற்றேயாக வேணுமென்கிற தீவிரமான ருசி ஆழ்வார்க்கு உண்டாயிற்று. அதனால் எம்பெருமானை வலியப் பிடித்துக்கொண்டு 'பிரானே! என்னுடைய ஆற்றாமையில் குறைகண்டாயோ? உன்னுடைய சக்தியில் குறைகண்டாயோ? எதுக்கு இப்படி யென்னை நலியுமவற்றின் நடுவே வைத்து நலியா நின்றாய்? * பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்புமாய் இந்நின்ற நீர்மையிலே மிக்க அருவருப்புக் கொண்ட வென்னை இக்கொடிய நிலத்திலே வைத்துக் குமைப்பது பரமகாருணிகனான வுனக்குப் பொருந்துமோ? என்ன திருவுள்ளங்கொண்டு என்னையிங்கு இட்டு வைத்திராநின்றாய்? இது தன்னை இன்று நீ சொல்லியேயாகவேணும்' என்றாராழ்வார். அதுகேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! என் கருத்தை நீர் தாம் அறியீரோ? அறிந்துவைத்தும் அறியாதவர் போலக் கேட்கின்றீரே; நமக்கும் நம்முடையவர்களுக்கும் போதுபோக்குக்கு உரித்தான செவிக்கினிய செஞ்சொற்களைப் பாடித் தருகைக்காகவன்றோ நாம் உம்மை இந்நிலத்திலே வைத்திருப்பது; அப்படியிருக்க ஏன் பதறுகிறீர்?' என்ன, அதுகேட்ட ஆழ்வார் 'பிரானே! இதுவோ உன் கருத்து? ஸர்வேச்வரனாய் அவாப்தஸமஸ்தகாமனாயிருந்துள்ள உனக்கும் ஒரு குறையுண்டாகி அக்குறையை என்னாலே தீர்த்துக் கொள்ளப் பார்ப்பதாகிறவிது என்றாயிருந்தது! உனக்குச் சில ப்ரபந்தங்கள் வேண்டினால் அவையியற்றுவதற்குரிய அறிவு ஆற்றல் முதலியவை நிரம்பிய வ்யாஸ பராசர வால்மீகி முதலானாரைக் கொண்டும் * இன்கவிபாடும் பரமகவிகளான முதலாழ்வாரைக் கொண்டும் பாடுவித்துக் கொள்ளலாகாதா? நீசனேன் நிறையொன்றுமிலேனைக் கொண்டு பாடுவித்துக்கொள்ளத் திருவுள்ளம் கொண்டபடி என்னே! இது என்ன நீர்மை! இது என்ன

வாத்ஸல்யம்! என்று பெருநன்றி பாராட்டி, இதற்கீடாக நான் செய்வதொரு கைம்மாறு கண்டிலேனே! என்று தடுமாறுவதாய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

3425. என்றைக்குமென்னை உய்யக்கொண்டுபோகிய *
அன்றைக்கன்றென்னைத் தன்னாக்கியென்னால்தன்னை *
இன்தமிழ்பாடியவீசனை யாதியாய் *
நின்றவென்சோதியை என்சொல்லிநிற்பனோ. (க)

| | |
|---|---|
| என்னை | நெடுநாளாக எம்பெருமானுடைய விஷயீகாரம் பெறாதிருந்த வடியேனை |
| என்றைக்கும் | முதலிலேயே சாச்வதமாக அங்கீகரித்து(அவ்வளவேயன்றிக்கே) |
| போகிய அன்றைக்கு அன்று | நிகழ்கின்ற நாள்தோறும் |
| உய்யக் கொண்டு | விசேஷ கடாக்ஷம் பண்ணி |
| என்னை தன் ஆக்கி | இப்படி விஷயீகரிக்கப்பட்டவென்னைத் தன்னோடொத்த ஜ்ஞான சக்திகளுடையேனும் படி யாக்கி |
| என்னால் | என்னை உபகரணமாகக் கொண்டு |
| தன்னை | வேதங்களுக்கு மெட்டாத பெருமை பொலிந்த தன் விஷயமாக |
| இன் தமிழ் பாடிய | இனிய தமிழ்ப் பிரபந்தத்தைப் பாடுவித்துக் கொள்கின்ற |
| ஈசனை | ஸ்வாமியாய் |
| ஆதி ஆய் நின்ற என் சோதியை | இத்திருவாய்மொழிக்கு மூலகாரணமாயிருந்து எனக்கு வடிவழகைக் காட்டிக்கொடுத்த பெருமானைக் குறித்து |
| என் சொல்லி நிற்பன் | எத்தைச் சொல்லித் தரிப்பேன்! |

* * * மிகவும் நீசனாயிருக்கிறவென்னை ஞானம் சக்தி முதலியன வுடையேனும்படி பண்ணி என்னையிட்டுத் திருவாய்மொழி பாடுவித்துக் கொண்ட வுபகாரத்தை நினைக்க நினைக்கத் தரித்திருக்ககில்லேனே! என்கிறார். என்றைக்கும், போகிய அன்றைக்கன்று என்னை உய்யக் கொண்டு என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை இன்தமிழ் பாடியவீசனை ஆதியாய்நின்ற வென் சோதியை என் சொல்லி நிற்பன்! என்று அந்வயம். என்திறத்தில் ஒருநாள் பண்ணின விஷயீகாரமே காலமுள்ளதனையும் உஜ்ஜீவிக்கப் போரும் என்னும்படியாகவன்றோ விஷயீகரித்தது. முதல்தன்னில் விஷயீகரிக்கும்போதே தம்மை ஆத்மாந்த கைங்கர்யத்தில் விஷயீகரித்தபடியை என்றைக்கும் என்றதனால் அருளிச் செய்தபடி. ஒருகால் பண்ணிவிட்ட விஷயீகாரமேயன்றிக்கே, கழிகிற நாள்தோறும் நாள்தோறும் இப்படியேயன்றோ விஷயீகரித்தது! என்று வியக்கிறார் இரண்டாமடியில்.

என்னைத் தன்னாக்கி யென்பதற்கு இரண்டு படியாக நிர்வஹிப்பர்கள்; * தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையேயொக்க அருள்செய்வர் * என்கிற கணக்கிலே ஜ்ஞான சக்திகளால் தன்னோடொக்கும்படி பண்ணி யென்னுதல். தனக்கேயாம்படி விஷயீகரித்து என்னுதல்.

என்னால் தன்னை இன்தமிழ்பாடிய—ஐயோ! என்னிலைமையென்ன? தன்னிலைமை யென்ன! ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளுக்கும் எட்டாத தன்னை அல்பசக்திகனான என்னைக் கொண்டு இனிய தமிழ் நூலைக் கவிபாடுவித்துக் கொள்ளுகையாகிறவிது என்னே! என்று ஈடுபடுகிறார்.

இன் தமிழ் பாடிய வீசனை—இனிமையான தமிழ்ப்பாஷையென்று பொதுவாகத் தமிழின் இனிமை சொல்லுகிறதன்று இங்கு; தமிழ் என்றது—தமிழினாலாகிய இத் திருவாய்மொழிப் பிர

பந்தத்தைச் சொன்னபடியாய், இன் என்கிற அடைமொழி அதிலே அந்வயிக்கும். * இளைய புன்கவிதை * என்றாற்போலே இழித்துச் சொல்லவேண்டியிருக்கப் புகழ்ந்து கூறலாமோ வென்று சங்கிக்கவேண்டா ; இது எம்பெருமானுடைய திருவாக்கேயன்றி என் வாக்கன்று என்று ஒரு தடவைக்குப் பத்துதடவை சொல்லுகிறாராதலால் தம் வாக்கைப் புகழ்தலாகிற குற்றம் தோன்ற இடமில்லையென்க. பாடிய என்பதற்கு - பாடுவித்துக் கொண்ட என்கிற அர்த்தம் தவிர மற்றொரு இன்சுவைப் பொருளும் நம்பிள்ளை யருளிச் செய்கிறார்—" * ஹா உ ஹா உ ஹா உ * என்று முக்தன் ஸாமகானம் பண்ணுமாபோலே அவனும் இவரோட்டை யநுபவத்தால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு தென்னாவென்று பாடுமாயிற்று." என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. திருவாய்மொழியை அவதரிப்பித்து அதன் போக்யதையிலே எம்பெருமான் தானே யீடுபட்டு ஆனந்தத்திற்குப் போக்குவீடாக ஆலாபனையிட்டுப் பாடும்படியைச் சொன்னவாறு.

ஆதியாய் நின்ற என்பதற்கு - ஜகத் காரணபூதனாய் நின்றவென்கிற பொருள் சிலர்க்குத் தோன்றும் ; அதுவன்று பொருள் ; தமக்கு உள்ளீடாக நின்று பாடுகையாலே திருவாய்மொழிக்கு மூலபூதனென்றபடி.

என் சோதியை—தம்முடைய கவிக்கு அவனுடைய வடிவழகே ஊற்றுவாய் என்கிறது. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி—பீதாம்பரத்தை விழவிட்டுத் தன் வடிவழகைக் காட்டினான் ; திருத்திரை யெடுத்தால் கூப்பிடுமாபோலே கூப்பிட்டேன், அது கவியாய்த் தலைக்கட்டிற்று. வடிவழகைக் காட்டியாயிற்று கவிக்கு உள்ளுறை கொடுத்தது." என்று. [பீதாம்பரத்தை விழவிட்டு—தன் போர்வையை நீக்கி என்றபடி.]

என் சொல்லி நிற்பனோ?—பெற்ற வுபகாரத்திற்குப் பெருநன்றி பாராட்டுதலாகச் சில வார்த்தைகள் சொல்லுவதென்பது உலகவியற்கை ; தாம் பெற்ற மஹோபகாரத்திற்கு ஈடு மெடுப்பு மில்லாமையாலே என்ன பேச்சுப் பேசி நன்றி பாராட்டுவதென்று தடுமாறுகிறார். (க)

3426. என்சொல்லி நிற்பன் என்னின் னுயிரின்றொன்றாய் *
என்சொல்லால்யான்சொன்ன இன்கவியென்பித்து *
தன்சொல்லால்தான்தன்னைக் கீர்த்தித்தமாயன் * என்
முன்சொல்லும்மூவுருவாம் முதல்வனே. (உ)

| | |
|---|---|
| என் இன் உயிர் | என்னுடைய ஹேயமான ஆத்ம வஸ்துவானது |
| இன்று ஒன்று ஆய் | இன்று தனக்கொரு வஸ்துவாக, |
| என் சொல்லால் யான் சொன்ன இன் கவி என்பித்து | என்னுடைய சொல்லாலே நான் கர்த்தாவாகச் சொன்ன இனிய பிரபந்தமென்று நாட்டிலே பிரவிததமாக்கி |
| தன் சொல்லால் | தன்னுடைய உக்திகளாலே |
| தான் தன்னை கீர்த்தித்த | தானே தன்னைக் கவி பாடிக் கொண்டவனாய் |
| என் முன் சொல்லும் மாயன் | எனக்குள்ளேயிருந்து முன்னுருச் சொல்கின்ற ஆச்சர்யபூதனாய் |
| மூ உரு ஆம் முதல்வன் | த்ரிமூர்த்தியா யிருப்பவனான காரணபூதனைக் குறித்து |
| என் சொல்லி நிற்பன் | எதைச் சொல்லித் தரிப்பேன் ? |

* * * தானே தன்னைக் கவி பாடிவைத்து நான் தன்னைக் கவி பாடினதாக உலகில் ப்ரஸித்த மாக்குவதே! இது என்கொல்! என்று தலைசீய்க்கிறார். பாசுரம் தொடங்கும்போதே என் சொல்லி நிற்பன்! என்கிறார். நெடுங்காலமாக விமுகனாய்ப் போந்தவென்னை நிர்ஹேதுகமாக விஷயீகரித்தபடியை நினைத்தால் நான் எத்தைச் சொல்லித் தரையில் கால்பாவுவதென்கிறார்.

பொருளல்லாத வென்னையுமொரு பொருளாகக் கொண்டு என் சொல்லால் யான் சொன்ன பாசுரமென்று உலகத்தார் நம்பும்படியாக்கி, என்னைக் கருவியாகக்கொண்டு தன் சொற்களை யிட்டே திருவாய்மொழி பாடிய நுனின இந்த மஹாகுணத்திற்கு என்ன பாசுரமிட்டுச் சொல்வது!

என் முன் சொல்லும்—அவன், முன்னே சந்தையிட, பின்னே சொன்னேன். உபாத்யாயர்கள் சிஷ்யர்களுக்கு வேதமோதுவிக்க, அவர்கள் ஓதுகிறப்போலே நடந்ததாயிற்றிது.

மூவுருவாம் முதல்வனே—தான் அயனுக்கும் அரனுக்கும் அந்தர்யாமியாயிருந்து சில காரியங்களைச் செய்ய, அக்காரியங்கள் அவர்கள் தாமே செய்ததாக ப்ரஸித்தமானப்போலே இத்திருவாய்மொழியிலும் எனக்கு கர்த்ருத்வப்ரஸித்தியுண்டாயிற்று என்கை இந்த வாக்கியத்தின் பரம தாற்பரியம். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் ;—" ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அவனை அத்யயநம் பண்ணுவித்து தேவர்களுக்கு வெளிச் சிறப்பைப் பண்ணுவித்து 'அது தன்னை ப்ரஹ்மா செய்தான்' என்று அவன் தலையிலே யேறிட்டும், ருத்ரனுக்கு அந்தராத்மாவாய்ப் புக்கு நின்று த்ரிபுரதஹநத்தைப் பண்ணுவித்து ருத்ரன் செய்தானென்று அவன் தலையிலே யேறிட்டும் விருது பிடிக்கப் பண்ணினப்போலே தானே ப்ரபந்தத்தைப் பண்ணி நான் பண்ணினேனென்று என் தலையிலே யேறிட்டு எனக்கொரு ப்ரஸித்தியைத் தந்தான். தானே கார்யஞ் செய்து பிறர் தலையிலே யேறிடுகை அவனுக்குப் பண்டே ஸ்வபாவங்கீடீர்." (உ)

3427. ஆம்முதல்வனிவனென்று தற்றேற்றி * என்
நாமுதல்வந்துபுகுந்து நல்லின்கவி *
தூமுதல்பத்தர்க்குத்தான் தன்னைச்சொன்ன * என்
வாய்முதலப்பனை யென்றுமறப்பனோ. (௩)

| | |
|---|---|
| இவன் முதல்வன் ஆம் என்று | 'குருகூர்ச்சடகோபனாகிய இவன் ப்ரபந்நஜநகூடஸ்தனாகக் கடவன்' என்று திருவுள்ளம் பற்றி |
| தன் தேற்றி | தன் விஷயமான தெளிவை எனக்குப் பிறப்பித்து |
| என் நா முதல் வந்து புகுந்து | என்னுடைய நாவிலே தானே வந்து புகுந்து |
| நல் இன் கவி | பரம போக்யமான சொல் தொடைகளை |
| தூ முதல் பத்தர்க்கு | முமுக்ஷுக்களுக்கு அநுபவிக்கலாம்படி |
| தான் தன்னை சொன்ன | தானே தன்னைப் பாடின |
| என் வாய் முதல் அப்பனை | என் வாக்குக்கு முதல்வனான மஹோபகாரகனை |
| என்று மறப்பனோ | என்றைக்காவது மறப்பனோ? [ஒரு நாளும் மறக்கமாட்டேன்.] |

* * *—அன்பர்களுக்காக என்னைக்கொண்டு தான் தன்னைக் கவிபாடின மஹோபகாரகனை ஒரு நாளாவது மறக்கப்போமோ வென்கிறார்.

ஆம் முதல்வனிவனென்று—இதற்கு இரண்டு வகையாக நிர்வாஹம் ; முதல்வன் என்கிறவிது எம்பெருமானிடத்திலே அந்வயிப்பதாக ஒரு நிர்வாஹம். அது ஆழ்வாரிடத்திலே அந்வயிப்பதாக மற்றொரு நிர்வாஹம். இந்த எம்பெருமானே ஜகத்காரணபூதனென்று தன் பக்கலிலே யெனக்குத் தெளிவு பிறக்கும்படியாகப் பண்ணி என்பது முதல் நிர்வாஹத்தின் பொருள். குருகூர்ச்சடகோபனாகிற இவன் ஸம்ஸாரிகளைத் திருத்திப் பரமைகாந்திகளும் விஷயத்திலே முதல்வனாகக் கடவன்—தலைவனாகக்கடவன் என்று திருவுள்ளம்பற்றி என் பக்கலிலே தன் ஸ்வரூபாதிகளைத் தெளியப்பண்ணி என்பது இரண்டாம் நிர்வாஹத்தின் பொருள்.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள்; "காரண வாக்யங்களில் உபாஸ்யனாகச் சொல்லப்படுகிறான் தானேயென்று தன் பக்கலிலே தெளியும்படி பண்ணியென்னுதல்; அன்றிக்கே, பரம பதத்தோபாதி ஸம்ஸாரத்தையும் திருத்த நினைத்தோம்; அதுக்கு இவன் முதலாம்—அடியாமிவனென்று என் பக்கலிலே தன் ஸ்வரூபாதிகளைத் தெளியப் பண்ணியென்னுதல். இங்கேயருளிச் செய்யும் வார்த்தை—திருப்புற்றுக்குக் கிழக்கே கரியமாணிக்காழ்வார் திருமுன்பின் ஸோபானத்திலே ஆளவந்தார் எழுந்தருளியிருக்க, உடையவர் திருப்புற்றுக்குக் கிழக்காக எழுந்தருளி நிற்கக் கண்டு * ஆமுதல்வனிவன் * என்றருளிச் செய்தாராம் என்று."

ஸ்ரீகாஞ்சீ ஹஸ்திகிரியின் திருமடைப்பள்ளி ப்ரதக்ஷிண வீதியிலே ஆளவந்தார் யாதவப்ரகாசனோடே யிருந்த எம்பெருமானாரைத் திருக்கச்சிநம்பிகள் மூலமாகத் தெரிந்துகொண்டு 'ஆம்முதல்வனிவன்' என்று குளிரக் கடாக்ஷித்தருளின ஐதிஹ்யத்தையருளிச் செய்தபடி. இதனால், இரண்டாவது நிர்வாஹம் ஆளவந்தார் திருவுள்ளத்திற்கு மிகவுமிணங்கினதென்று காட்டினபடி. "ஸ்ரீஹஸ்த்யத்ரௌ ஸூத்ரஸாவிதி" என்கிற அதிகரண ஸாராவளி ச்லோகத்தில் (ஸூத்ரஸௌள) என்றதும் இப்பொருளதே.

என் நாமுதல் வந்து புகுந்து—ஸ்ரீராமாயணத்திற் காட்டில் திருவாய்மொழிக்குண்டான ஏற்றஞ் சொல்லுகிறது இதனால். எம்பெருமான் நான்முகனுக்கு நியமிக்க, அவன் தன் மஹிஷியான ஸரஸ்வதியை ப்ரேரிக்க, அவள் வால்மீகி பகவானுடைய நாவிலே ஆவேசித்து அவதரித்ததாயிற்று ஸ்ரீராமாயணம். அங்ஙனம் ஓர் இடையீடின்றிக்கே என்னுடைய நாவிலே தானே முற்பாடனாய் வந்து புகுந்து தானே பேசினானென்கிறார்.

தூமுதல் பத்தர்க்கு—நித்யஸூரிகளுக்கும் போக்யமாக. அல்லது முமுக்ஷுக்களுக்கென்றபடியுமாம். இப்படிப்பட்ட மஹோபகாரகனை என்றேனும் மறக்க விரகுண்டோ? (௩)

3428. அப்பனையென்று மறப்பனென்னாகியே *
தப்புதலின்றித் தனைக்கவிதான்சொல்லி *
ஒப்பிலாத்தீவினையேனை உய்யக்கொண்டு *
செப்பமேசெய்து திரிகின்றசீர்கண்டே. (௪)

| | | | |
|---|---|---|---|
| என் ஆகியே | என்னைக்கொண்டே | உய்ய கொண்டு | உஜ்ஜீவிப்பிக்கத் திருவுள்ளம்பற்றி |
| தப்புதல் இன்றி | ஒருவகையான அவத்யமும் தட்டாதபடி | செப்பமே செய்து திரிகின்ற | எனக்கு ரக்ஷணமே பண்ணிக் கொண்டு போருகிற |
| தனை தான் கவி சொல்லி | தன்னைத்தானே கவிபாடி | சீர்கண்டு | சீலத்தைக் கண்டுவைத்து |
| ஒப்பு இலா தீ வினையேனை | ஒப்பற்ற பாபியான என்னை | அப்பனை என்று மறப்பன் | அப்பெருமானை என்றைக்காவது மறக்கமுடியுமோ? |

* * * தானே தன்னைக் கவி பாடிக்கொண்டானாகில் ஓர் ஆச்சரியமில்லை; பாடுகைக்குப் பாங்கின்றியே யிருக்கிற வென்னைக் கொண்டு தப்புதலில்லாமல் கவி பாடின இந்த மஹோபகாரத்தை நான் எங்ஙனே மறக்கமுடியுமென்கிறார்.

"அப்பனையென்று மறப்பன்" என்றவிடத்து ஈட்டில்—"உபகாரகனானவனை நான் என்று மறப்பன்? இனி அவன் உபகாரம் பண்ணினால்தான் மறக்கப்போமோ?" என்று

(பழைய தெலுங்கு பதிப்பில்) பாடம் காண்கிறது. "இனி அவன் அபகாரம் பண்ணினால் தான்" என்று திருத்தவேணும். இருபத்திநாலாயிரப்படியில்—"இவ்வுபகாரம் பண்ணினவனை, இனி அபகாரம் பண்ணினால் தான் மறப்பனோ?" என்கிற ஸூக்தி காண்க. அப்பன் என்பதற்கு உபகாரகனென்று பொருள். "என்னைத் ... தன்னை நிறுத்தனைக் கவிதான் சொல்லி" என்றவிடத்திற்கு எம்பார் அருளிச்செய்வராம்—"தான் பாடினானாகில் ஒரு தப்புமில்லாமல் தலைக்கட்டும்; நான் பாடினேனாகிலும் வருந்தி ஒருவிதமாகத் தலைக்கட்டலாகும்; இவ்விரண்டுமல்லாமல் என்னை உபகரணமாகக்கொண்டு கவிபாடாநிற்கச் செய்தேயும் என் ஸம்பந்தத்தால் வந்த தோஷம் தட்டாதபடி கவிபாடித் தலைக்கட்டினான்." என்று.

ஒப்பிலாத் தீவினையேனை—ஸர்வஜ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் முதலானவற்றில் தான் ஒப்பிலாதவனாயிருக்குமாபோலே தீவினையில் நான் ஒப்பில்லாதவனாயிருந்தேன். அப்படிப்பட்டவென்னை, அடியோடு தீவினையின் நாற்றமே யறியாதவர்கள் பெறும் பேறு பெறுவித்தருளினானே! இஃதென்ன ஔதார்யமென்று ஈடுபடுகிறார். (ச)

3429. சீர்கண்டுகொண்டு திருந்துநல்லின்கவி *
நேர்படயான்சொல்லும் நீர்மையிலாமையில் *
ஏர்விலாவென்னைத்தன்னாக்கி என்னால்தன்னை *
பார்பரவின்கவி பாடும்பரமரே. (ரு)

| | |
|---|---|
| சீர் கண்டு கொண்டு | பகவத்குணங்களை அவகாஹித்து |
| திருந்து நல் இன் கவி | திருத்தமுற்று விலக்ஷணமாய் மதுரமான பாசுரங்களை |
| யான் நேர்பட சொல்லும் நீர்மை இலாமையால் | நேர்த்தியாகப் பாடுகைக்குரிய சக்தி எனக்கில்லாமையாலே |
| ஏர்வு இலா என்னை தன் ஆக்கி | தகுதியற்ற வென்னைத் தன்னோடொக்கக் கடாக்ஷித்து |
| என்னால் | அப்படி கடாக்ஷிக்கப்பெற்ற அடியேனைக்கொண்டு |
| தன்னை | தன் விஷயமாக |
| பார் பரவு இன் கவி பாடும் பரமர் | நிலவுலகம் முழுதும் கொண்டாடும்படியான இனிய பாசுரங்களைப்பாடும் பரமபுருஷராயிராநின்றார்! |

* * * தன்னைக் கவிபாடுகைக்குத் தக்க ஆற்றலும் ஆசையுமில்லாதிருந்த வென்னைக்கொண்டு, உலகமெல்லாங் கொண்டாடும்படியான பாசுரங்களைப் பாடுவித்துக் கொண்டானே! என்ன ஸர்வேச்வரனோ வென்கிறார். எம்பெருமான் விஷயமாகக் கவிபாட வேணுமானால் முந்துற முன்னம் அவனுடைய திருக்கல்யாண குணங்களைக் கண்டுகொள்ள வேணுமே; கடல் போன்ற வக்குணங்களில் ஒரு திவலையும் கண்டறிந்தவனல்லனே நான் என்கிறார். குணஜ்ஞானமில்லையாகிலும், கட்டளைப்பட்டு லக்ஷணோபேதமான கவியை யியற்றும் பெற்றியாவது இருக்க வேணுமே; அதுவுமில்லையே யெனக்கு. இவை யில்லாமையாலே கவி பாடுகைக்குத் தகுதியற்றவன் நான். இப்படிப்பட்டவென்னை தன்னைப்போலே ஹேயப்ரத்யநீகத்வ ஸர்வஜ்ஞத்வாதி குணவிசிஷ்டனாக்கி என்னைக்கொண்டு உலகமெல்லாம் கொண்டாடும்படியான பாசுரங்களைப் பாடுவித்துக்கொண்டு இப்பாசுரங்களினாலேயே தன்னைப் பராத்பரனாக அபிமானிக்கின்றானே! என்று உள் குழைகின்றார்.

இரண்டாமடியின் முடிவில் "நீர்மையிலாமையில்" என்பதற்கு 'யோக்யதை யில்லாமலிருக்கச் செய்தேயும்' என்று பொருள். அன்றிக்கே இதனை ஏழாம் வேற்றுமையாகக்கொண்டு,

நீர்மையிலாமையில் ஏர்விலாவென்னை—யோக்யதையின் அபாவத்தில் ஒப்பற்றிருக்கிறவென்னை என்று பொருள் கொள்ளவுமாம். ஒப்பற்ற அயோக்யனை யென்றபடி. இது ஆறுயிரப்படி நிர்வாஹம். (௬)

3430. இன்கவிபாடும் பரமகவிகளால்
தன்கவிதான் தன்னைப் பாடுவியாது * இன்று
நன்குவந்தென் னுடனாக்கி என்னால்தன்னை *
வன்கவிபாடும் என்வைகுந்தநாதனே. (௬)

| | |
|---|---|
| என் வைகுந்த நாதன் | பரமபதநாதனான எம்பெருமான் |
| இன் கவி பாடும் பரம கவிகளால் | மதுரமான கவிகளைப் பாடவல்ல முதலாழ்வார்களைக் கொண்டு |
| தன் கவி தான் தன்னை பாடுவியாது | தனக்குத் தகுதியான பாசுரங்களைத்தான் பாடுவித்துக்கொள்ளாமல் |
| இன்று நன்கு வந்து என் உடன் ஆக்கி | இப்போது எனக்கருள் செய்ய வேணுமென்று வந்து என்னைக் கருவியாகக்கொண்டு |
| என்னால் | என் வாயிலாக |
| தன்னை வன் கவி பாடும் | தன் விஷயமான சிறந்த பாசுரங்களைப் பாடிக்கொள்கிறான்!. |

* * * தனக்குச் சில பாசுரங்கள் வேணுமானால் அவற்றைப் பாடவல்ல மஹாகவிகள் பலருமுண்டே; வ்யாஸபராசரவால்மீகிப்ரப்ருதிகளான மஹர்ஷிகளும் முதலாழ்வார்களுமுண்டாயிருக்க, அவர்களைக்கொண்டு கவி பாடுவித்துக்கொள்ளாதே என்னைக் கருவியாகக் கொண்டு கவி பாடுவதே யென்று தலைசீய்க்கிறார்.

இன் கவிபாடும் பரமகவிகளென்பதற்கு ஸம்ஸ்க்ருத கவிகளையும் தமிழ்க்கவிகளையும் அர்த்தமாகக் கொள்வர். வ்யாஸபராசரவால்மீகி ப்ரப்ருதிகளான வடசொற் கவிவரர்களும், முதலாழ்வார்கள் திருமழிசைப்பிரான் போல்வாரான செந்தமிழ்க் கவிவரர்களுமுண்டாயிருக்க, அவர்களைக்கொண்டு தனக்குவேண்டிய பிரபந்தங்களை எவ்வளவும் பாடுவித்துக் கொள்ளலாமே; அது செய்யாதே என்னைக்கொண்டு கவி பாடுவித்துக்கொள்ளுமதுவே ப்ரயோஜநமாக வந்து, தான் ஸ்ரீவைகுண்டநாதனான பெருமையை எனக்குத் தோற்றுவித்து, வைகுந்தநாதனென்று என் வாயினாற் சொன்னாலொழியத் தன்னை வைகுண்டநாதனாக நினையாதவனாய், என் பாட்டினாலேயே தனக்கு வைகுண்டநாதத்வம் ஸித்தித்ததாக நினைக்குமவனாய் இப்படி பாடுவித்துக் கொண்டானே, இது என்ன நீர்மை! என்று உருகுகிறார்.

மூன்றாமடியில், நன்கு! வந்து, என்றும், நன்கு உவந்து என்றும் பிரிப்பர். (௬)

3431. வைகுந்தநாதன் என்வல்வினைமாய்ந்தறச் *
செய்குந்தன் றன்னையென்னாக்கி என்னால்தன்னை *
வைகுந்தனாகப் புகழவண்டீங்கவி *
செய்குந்தன் றன்னை எந்நாள்சிந்தித்தார்வனே. (எ)

| | |
|---|---|
| வைகுந்தநாதன் | பரமபதநாதனான எம்பெருமான் |
| என் வல் வினை மாய்ந்து அற | என்னுடைய பிரபல பாபங்கள் தொலையும்படி செய்பவனாய் (அதனால்) |
| குந்தன் | பரிசுத்தி பெற்றவனாய் |
| தன்னை என் ஆக்கி | என்னோடு ஒரு நீராகக் கலந்து |
| என்னால் தன்னை வைகுந்தன் ஆக புகழ | என்னைக்கொண்டு தன்னை வைகுண்டபதியாகப் புகழும்படி |

| | | |
|---|---|---|
| வண் தீம் கவி | உதாரமதுரங்களான பாசுரங்களை | |
| செய குந்தன் தன்னை | செய்யும்படியான உபகாரஸ்வபாவ முடைய தன்னை | |
| சிந்தித்து எந்நாள் ஆர்வன் | அநுஸந்தித்து எப்போது த்ருப்தி பிறப்பது? | |

* * * என்னைக்கொண்டு பரமபோக்யமான கவியைப் பாடுவித்துக்கொண்ட பரமோபகாரத்திற்கு இவனைக் காலமுள்ளதனையும் அநுபவித்தாலும் த்ருப்தி பெறமாட்டேனென்கிறார். * அயர்வறுமமரர்களதிபதியாயிருந்து வைத்து நித்ய ஸம்ஸாரியான என் பக்கலிலே வந்து மேல்விழா நின்றானே!, என்னுடைய வல்வினைகளையெல்லாம் போக்கி அதனால் குந்தனென்னும் திருநாமத்தையுடையவனாயினானே!, என்னைத் தன்னைப்போலே தூயனாக்கி என்னைக்கொண்டு தன்னை வைகுண்டநாதனாகப் புகழச்செய்து அதனால் தான் ஸந்துஷ்டனாகிறானே! இந்த நீர்மையை நான் எத்தனை நாள் சிந்தித்தாலும் த்ருப்திபெறக் கூடியதாக இல்லையே; என் செய்வேன்! என்றாராயிற்று.

இப்பாட்டில் குந்தன் என்பதற்குப் பலபடியாகப் பொருள் கொள்ளுவர்கள்; 'குந்த: குந்தர: குந்த:' என்று ஸஹஸ்ரநாமமாதலால் குந்தனென்று திருநாமஞ் சொன்னபடியாகலாம். அத்திருநாமத்திற்கு சங்கராசார்யர் உரைத்த பொருள்—(1) குந்தமலர்போல் அழகான அங்கமுடையவர்; ஸ்படிகம் போலத் தெளிவாயிருப்பவரென்கை. (2) பரசுராமாவதாரத்தில் பூமியைக் கச்யபருக்கு யாகதக்ஷிணையாகக் கொடுத்தவர். (3) பூமியை க்ஷத்ரியர்களின் மாமற் கண்டித்தவர்—என்று. இதற்கு பட்டர் அருளிச்செய்த அர்த்தமாவது—ஞானம் வைராக்யம் முதலிய முற்படிகள் ஏறினவர்களுக்குப் பரபக்திபரஜ்ஞான பரமபக்திகளாகிய மேற்படிகளைக் கொடுப்பவர் என்று. வடமொழியில் குந்தமென்று ஆயுதவிசேஷத்திற்குப் பெயராதலால், வல்வினை மாய்ந்தறச் செய்குந்தன்—விரோதிநிரஸநம் செய்யவல்ல ஆயுதவிசேஷத்தையுடையவன் என்றுமாம்.

வண்டீங்கவி என்றவிடத்து, வண் தீம் கவி என்று பதவிபாகம். தீம் என்று இனிமை. (எ)

3432. ஆர்வனோவாழியங்கை எம்பிரான்புகழ் *
பார்விண் நீர்முற்றும் கலந்துபருகினும்
ஏர்விலாவென்னைத்தன்னாக்கி என்னால்தன்னை *
சீர்பெறவின்கவி சொன்னதிறத்துக்கே. (அ)

| | | | |
|---|---|---|---|
| ஏர்விலா என்னைத் தன்னாக்கி | தகுதியற்ற வென்னைத் தன்னோடொக்க வருள் செய்து | ஆழி அம் கை எம்பிரான் புகழ் | சக்ராபாணியான அந்த எம்பெருமானுடைய திருப்புகழை |
| என்னால் தன்னை சீர்பெற இன் கவி சொன்ன திறத்துக்கு | என்னைவிட்டுத் தன் விஷயத்தில் சிறப்புண்டாம்படி இனிய பாசுரங்களைச் சொன்னபடிக்கு | பார்விண் நீர் முற்றும் கலந்து பருகினும் ஆர்வனோ | மண்ணிலுள்ளாரும் விண்ணிலுள்ளாரும் க்ஷீராப்தியிலுள்ளாரும் ஒன்றுசேர்ந்து புகழ சேர்ந்தாலும் நான் த்ருப்தியடைவேனோ? |

* * * என்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட இந்த மஹாகுணத்திற்கு உபயவிபூதியிலுமுள்ளாருடைய சக்தியையும் வாக்கு முதலிய உபகரணங்களையும் நானொருவனே பெற்று அநுபவித்தாலும் த்ருப்திபெறமாட்டேனென்கிறார்.

பார்விண்ணீர் முற்றுங் கலந்து பருகிலும் என்பதற்கு இரண்டுவகையாகத் தாற்பர்யம் கொள்வர்; (1) எங்குமுள்ள சேதநர்களெல்லாரோடுங்கூடி [எல்லாருமாகச் சேர்ந்து] அநுபவித்தாலும் ஆர்வனே! (2) எங்குமுள்ள எல்லாருடையவும் சக்தியையும் உபகரணங்களையுங் கொண்டு அநுபவித்தால்தான் ஆர்வனே! (அ)

3433. திறத்துக்கேதுப்பரவாம் திருமாலின்சீர் *
இறப்பெதிர்காலம் பருகிலுமார்வனே *
மறப்பிலாவென்னைத்தன்னாக்கி என்னால்தன்னை *
உறப்பலவின்கவி சொன்னவுதவிக்கே. (கூ)

| | |
|---|---|
| மறப்பு இலா என்னை | மறப்புக்கு விஷயமில்லாதபடி ஸ்மரணமே யில்லாதிருந்த வென்னை |
| தன் ஆக்கி | தன்னோடொக்க விஷயீகரித்து |
| என்னால் தன்னை உற பல இன் கவி சொன்ன உதவிக்கு | என்னைக்கொண்டு தனக்குப் பொருத்தமாகப் பல இனிய பாசுரங்களைப் பாடுவித்த மஹோபகாரத்திற்கு, |
| திறத்துக்கு ஏய்துப்பரவு ஆம் திருமாலின் சீர் | எந்த விஷயத்திலும் பொருத்தமான ஸாமர்த்தியத்தையுடைய திருமாலின் குணங்களை |
| இறப்பு எதிர் காலம் | இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் கூட்டிக்கொண்டு |
| பருகிலும் | அநுபவித்தாலும் |
| ஆர்வனே | பர்யாப்தி பெறுவேனோ?. |

* * * கீழ்ப்பாட்டிற் சொன்னது தன்னையே இன்னமும் சிறிது சித்திரித்துப் பேசுகிறார்.

நிகழ்காலத்தில் மாத்திரமன்று; இறந்தகாலத்தில் எத்தனை சேதநர்கள் கழிந்தார்களோ, இனி, எதிர்காலத்தில் எத்தனை சேதநர்கள் தோன்றுவர்களோ அவர்களெல்லாருடையவும் சக்தியையும் உபகரணங்களையுங் கொண்டு அநுபவித்தாலும் ஆரமாட்டேன்; அவர்களோடு கூடியநுபவித்தாலும் ஆரமாட்டேன் என்றாராயிற்று. (கூ)

3434. உதவிக்கைம்மாறென்னுயிரென்ன வுற்றெண்ணில் *
அதுவுமற்றாங்கவன்றன்ன தென்னால்தன்னை *
பதவியவின்கவி பாடியவப்பனுக்கு *
எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே. (கo)

| | |
|---|---|
| உதவி கைம்மாறு | திருவாய்மொழி பாடுவித்துக் கொண்ட வுதவிக்குப் பிரதியுபகாரம் |
| என் உயிர் என்ன வுற்று எண்ணில் | என்னுடைய ஆத்மா—என்று சொல்ல நினைத்தால் |
| அதுவும் அவன் தன்னது | அவ்வாத்மவஸ்துவும் அவனுடைய பொருளாகவே யிராநின்றது; (ஆகையால்) |
| என்னால் தன்னை பதவிய இன் கவி பாடிய அப்பனுக்கு | என்னையிட்டுத் தன்னை மதுரமாகப் பாடுவித்துக் கொண்ட எம்பிரானுக்கு |
| இங்கும் அங்கும் | உபய விபூதியிலும் |
| செய்வது | செய்யக்கூடிய கைம்மாறு |
| எதுவும் ஒன்றும் இல்லை | மிக அற்பமானதுமில்லை |

* * * அவனுடைய பேருதவிக்கு தகுபடியாதொரு கைம்மாறு இல்லையென்கிறார். ஆழ்வீர்! உபகாரஸ்ம்ருதிக்குத் தகும் பேருகிறதில்லையென்று நீர் புண்பட்டு இதை மீண்டுமீண்டும் பேசுவானேன்? உம்மதாயிருப்பதொரு பொருளை அவனுக்குக் கைம்மாறாகக் கொடுத்துப் பிழைத்துப்போகமாட்டீரோவென்ன; ஆம்; என்ன கொடுப்பது? என் ஆத்மாவை அவனுக்குக்

கொடுக்கலாமென்று பார்த்தாலோ, அதுவும் பண்டே அவனுக்கு அடிமையாதலால் இங்குமங்கும் இதுக்கொரு கைம்மாறு செய்யலாவதில்லையே, என்று தடுமாறுகின்றார். (க௦)

3435. இங்குமங்கும் திருமாலன்றியின்மைகண்டு *
அங்ஙனே வண்குருகூர்ச்சடகோபன் *
இங்ஙனேசொன்ன ஓராயிரத்திப்பத்தும் *
எங்ஙனேசொல்லிலும் இன்பம்பயக்குமே. (கக)

| | |
|---|---|
| இங்கும் அங்கும் | இவ்விபூதியிலுண்டான ஆச்ரயண வேளையிலும் அவ்விபூதியிலுண்டான கைங்கர்ய தசையிலும் |
| திருமால் அன்றி இன்மை கண்டு | லக்ஷ்மீபதியல்லது வேறொருவர் உத்தேச்யரல்லாமையை யறுதியிட்டு |
| அங்ஙனே வண் குருகூர் சடகோபன் | அவ்வண்ணமாகவே யிருப்பவரான ஆழ்வார் |
| இங்ஙனே சொன்ன | இப்படியருளிச் செய்த |
| ஓர் ஆயிரத்து இப் பத்தும் | ஆயிரத்துள் இப்பதிகம் |
| எங்ஙனே சொல்லிலும் | எப்படிச் சொன்னாலும் |
| இன்பம் பயக்கும் | ஆனந்தாவஹமாகும். |

* * * இஹலோக பரலோகங்களிரண்டிலும் திருமாலல்லது தஞ்சமில்லை யென்னுமிடத்தை யநுஸந்தித்து, (அதாவது) ஸாதநாநுஷ்டானவேளையோடு பலாநுபவவேளையோடு வாசியற இவ்வாத்மாவுக்கு திவ்யதம்பதிகளே தஞ்சமென்று அத்யவஸாயங்கொண்டு அந்த ப்ரபத்தியே வடிவெடுத்திருப்பவரான ஆழ்வார் தம்மைத் திருவாய்மொழி பாடுவித்தருளின இம்மஹோபகாரத்தைப் பற்றிப் பேசின இத்திருவாய்மொழி அஹ்ருதயமாகவோ ஸஹ்ருதயமாகவோ எப்படியநுஸந்தித்தாலும் இன்பம் பயக்குமென்று இதனையே பலனாகச் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. (கக)

## ஏழாம்பத்து—பத்தாந் திருவாய்மொழி இன்பம் பயக்க.

எம்பெருமான் தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட பேருதவிக்குக் கைம்மாறு ஒன்றுங் காணாமே தடுமாறினார் கீழ்த்திருவாய்மொழியில். இப்படிப்பட்ட இவருடைய தடுமாற்றத்தை யாற்றுதற்காக எம்பெருமான், ஆழ்வீர்! நீர் என் தடுமாறுகின்றீர்? நீரும் ஒன்று செய்து நெஞ்சாறல் தீர்க்கலாம்படி யன்றோ நாம் கருதியிருக்கின்றோம்; பண்டு திருவயோத்தியிலே நாம் குசலவர்கள் வாயாலே ஸ்ரீராமாயணம் செவிசாத்தினோமென்று கேள்விப்பட்டிருப்பீரே; அப்படியே திருவாறன்விளையிலே திருவாய்மொழி கேட்பதாகப் பாரித்திருக்கின்றோம். ஆனால் ஸ்ரீராமாயணம் கேட்டபோது நாம் பிராட்டியைப் பிரிந்திருந்தோமாதலால் தனியேயிருந்து கேட்டோமென்று ஒரு குறையுண்டு; இப்போது அப்படி யன்றிக்கே நாமும் நம் பெண்டுகளுமாயிருந்து கேட்க அறுதியிட்டிருக்கின்றோம்; நீர் அங்கே வந்து திருவாய்மொழி கேட்பித்து ஒருவாறு நெஞ்சாறல் தீர்ப்பெறலாமே யென்று பணிக்க, அதுகேட்ட ஆழ்வார், என்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக் கொண்ட உபகாரத்தளவோடு நில்லாமல் அது கேட்கவும் பாரியா நின்றாரே! இது என்ன மஹோபகாரம்! என்று உவகை தலைமண்டை கொண்டு அந்தத் திருவாறன்விளைத் திருப்பதியிற் சென்று திருவாய்மொழி கேட்பித்தலாகிற கைங்கரியத்தைச் செய்யப் பாரிக்கிறார் இத்திருவாய்மொழியினாலே.

3436. இன்பம்பயக்கவெழில்மலர்மாதரும்தானும் இவ்வேழுலகை *
இன்பம்பயக்கவினிதுடன்வீற்றிருந்தாள்கின்ற எங்கள்பிரான் *
அன்புற்றமர்ந்துறைகின்றவணிபொழில்சூழ் திருவாறன்விளை *
அன்புற்றமர்ந்துவலம்செய்து கைதொழும் நாள்களுமாகுங்கொலோ. (க)

| | |
|---|---|
| எழில் மலர் மாதரும் தானும் | அழகிய தாமரைமலரிற் பிறந்த பெரிய பிராட்டியாரும் தானும் |
| இன்பம் பயக்க | பரஸ்பரம் ஆனந்தம் மேலிடும்படியாக |
| இனிது உடன் வீற்றிருந்து | இனிமையோடு கூட வெழுந்தருளியிருந்து |
| இ ஏழ் உலகை | இவ்வுலகங்களையெல்லாம் |
| இன்பம் பயக்க ஆள்கின்ற | இனிமையுற அடிமை கொண்டருளா நிற்கிற |

| | |
|---|---|
| எங்கள் பிரான் | எம்பெருமான் |
| அன்புற்று அமர்ந்து உறைகின்ற | மிகவும் திருவுள்ளமுகந்து வர்த்திக்கிற |
| அணி பொழில் சூழ் திருவாறன் விளை | அழகிய சோலைகள் சூழ்ந்த திருவாறன்விளைத் திருப்பதியை |
| அன்புற்று அமர்ந்து | அன்போடு பொருந்தி |
| வலஞ் செய்து | ப்ரதக்ஷிணம் பண்ணி |
| கை தொழும் நாள்களும் ஆகும் கொல் | கை தொழும்படியான நாட்களும் ஸமீபிக்குமோ? |

* * * எம்பெருமான் பிராட்டியோடு கூடி ஆனந்தமயனாக எழுந்தருளியிருக்குமிடமான திருவாறன் விளையிலே அநுபவித்து அடிமை செய்யுங்காலமும் ஆகுமோ வென்கிறார். ஸம்ஸாரி சேதநர்கள் எம்பெருமானோடு சேர்ந்து ஆனந்தமநுபவிப்பது போல, அவ்வெம்பெருமான் தானும் பிராட்டியோடு சேர்ந்தே ஆனந்தமநுபவிக்கப் பெறுகின்றானென்பது முதலடியிற் போதரும்.

“இவ்வேழுலகை இன்பம் பயக்க” என்றவிடத்தில் ஈடு—; மாதாபிதாக்களிருவரும் சேரவிருந்து பரியப்புக்கால் ப்ரஜைகளுக்கு ஒரு குறைவுகளும் பிறவாதிறே. ஆக, இருவருமான சேர்த்தியாலே தங்களுக்கு ஆனந்தமுண்டாக, அச்சேர்த்தியைக் காண்கையாலே லோகத்துக்கு ஆனந்தமுண்டாக, அது தன்னைக் கண்டு, ப்ரஜை பால்குடிக்கக் கண்டுகக்கும் தாயைப்போலே இவர்களுக்குண்டான ப்ரீதியைக்கண்டு அத்தாலே தாங்கள் இனியராயிருப்பர்களாயிற்று.”

திருவாய்மொழி கேட்கைக்குப் பாங்காயிருப்பதொரு தேசம் பெற்றோமென்று பெறாப் பேறு பெற்றாப்போலே விரும்பி யெழுந்தருளியிருக்கிற தேசமென்பது தோன்ற “இனிதுடன் வீற்றிருந்தாள்கின்ற” என்கிறார். இப்படிப்பட்ட பெருமாள் அவ்விடத்திலிருப்பை ஸ்வயம் ப்ரயோஜநமாகக் கருதி, அவதாரங்கள் போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம் பண்ணுமிடமாய், அவன் தன் விபூதியோடே யிருந்து திருவாய்மொழி திருச்செவி சாத்துகைக்கீடான பரப்பையுடைய பூம்பொழில்களாலே சூழப்பட்டதான திருவாறன் விளையை ப்ரதக்ஷிணம் பண்ணி நமஸ்கரிக்கும்படியான காலமாகுமோ வென்கிறாராயிற்று. (க)

3437. ஆகுங்கொல்ஐயமொன்றின்றி அகலிடம்முற்றவும் * ஈரடியே
ஆகும்பரிசுநிமிர்ந்த திருக்குறளப்பனமர்ந்துறையும் *
மாகந்திகழ்கொடிமாடங்கள்நீடுமதிள் திருவாறன்விளை *
மாகந்தநீர்கொண்டுதூவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலோ. (உ)

ஐயம் ஒன்று இன்றி ஆகும் கொல் — (நமது மநோரதம்) நிஸ்ஸந்தேஹமாக ஸித்திக்குமோ?

அகல் இடம் முற்றவும் — விஸ்தீர்ணமான உலகங்களெல்லாம்

ஈர் அடியே ஆகும் பரிசு நிமிர்ந்த — இரண்டடியிலேயே அடங்கும்படி வளர்ந்தருளின

திரு குறள் அப்பன் — ஸ்ரீவாமநமூர்த்தி

அமர்ந்து உறையும் — விரும்பி வர்த்திக்குமிடமாய்,

மாகம் திகழ் — [illegible] ஆகாசத்[illegible] விளங்குகிற

கொடி மாடங்கள் நீடு மதிள் — [illegible] நீண்ட திருமதிள்களையுமுடைத்[illegible]

திருவாறன்விளை மா கந்தம் நீர் கொண்டு தூவி — சிறந்த பரிமளம் பொருந்திய தீர்த்தத்தைக் [illegible] தூவி

வலம் செய்து — ப்ரதக்ஷிணம் பண்ணி

கை தொழ கூடும் கொல் — அஞ்ஜலி பண்ண நேருமோ?

* * * "ஆகுங்கொல் ஐயமொன்றின்றி" என்கிறவிது ஆழ்வாருடைய மநோரதமாகவுமாம், திருக்குறளப்பனுடைய மநோரதமாகவுமாம். பாட்டின் முடிவிலே "கைதொழக் கூடுங்கொலோ" என்றிருப்பதனால் 'ஆகுங்கொல் ஐயமொன்றின்றி' என்பது புநருக்தமாகாதோ வென்னில், ஆகாது; முதலில் ஸாமாந்யமாக மநோரதித்து, மேலே விவரிக்கிறபடியென்று கொள்ளலாம். வாமநமூர்த்தியின் எண்ணமாக அந்வயிக்குமிடத்தில் இந்த சங்கைக்கே ப்ரஸக்தியில்லை. அகலிடம் முற்றவும் ஈரடியால் அளக்க ஆகுங்கொல்! என்கிற ஐயமின்றியே நிமிர்ந்து அளந்தானென்று கொள்க.

மாகந் திகழ் — மேகமாவது என்கிற வடசொல் மாகம் என்று கிடக்கிறது. எம்பெருமான் திருவடிகளாலளந்த ஆகாசப் பரப்படங்கலும் வியாபியாநின்றுள்ள கொடிகளையுடைத்தான மாடங்களையும் ஓங்கியிருந்துள்ள மதிட்களையுமுடைத்தான திருவாறன்விளையை சந்தநகர்ப்பூராதி ஸுகந்தத்ரவ்யவாஸிதமாய் ஹிமசீதளமான நீர்கொண்டு தூவி வலஞ்செய்து கைதொழும் பாக்கியம் வாய்க்குமோ! என்றாராயிற்று. மேகமந்த்ரமென்ற வடசொல் மாகந்த மென்று திரிந்தது.

இந்த திவ்யதேசத்திற்கு மங்களாசாஸநார்த்தமாக எழுந்தருளும் பெரியார்கள் ஆழ்வாருடைய இப்பாசுரப்புக்கிணங்க ஸுகந்தசந்தனச் சேற்றைத் திருமதிளிலே தூவி வழிபாடு செய்வது வழக்கம். (உ)

3433. கூடுங்கொல்வைகலும் கோவிந்தனைமதுசூதனைக்கோளரியை *
ஆடும்பறவைமிசைக்கண்டு கைதொழுதன்றியவனுறையும் *
பாடும்பெரும்புகழ்நான்மறை வேள்வியைந்தாறங்கம்பன்னினர்வாழ் *
நீடுபொழில்திருவாறன்விளைதொழவாய்க்குங்கொல்நிச்சலுமே. (௩)

வைகலும் கூடும் கொல் — (நமது மநோரதம்) எப்போதும் நிறைவேறப்பெறுமோ?

கோவிந்தனை — ஆயர்தலைவனும்

மதுசூதனை — மதுகைடபஹந்தாவும்

கோள் அரியை — மிடுக்கனான ஸிம்ஹமானவனுமான எம்பெருமானை

ஆடு பறவை மிசை கண்டு — வெற்றியையுடைய கருடன் மேலே கண்டு

கைதொழுது — அஞ்ஜலிபண்ணி

அன்றி — அவ்வளவேயல்லாமல்

அவன் உறையும் — அப்பெருமான் நித்யவாஸம் பண்ணுமிடமாய்,

பாடும் பெரு புகழ் நால் மறை ஐந்து வேள்வி ஆறு அங்கம் பன்னினர் வாழ் — உலகப்பாடப்படுகிற மிக்க புகழையுடைய நான்கு வேதங்களென்ன, பஞ்சமஹாயஜ்ஞங்களென்ன, சிக்ஷை முதலான ஆறங்கங்களென்ன இவற்றிலே மிக்க பரிசயமுள்ளவர்கள் வாழுமிடமாய

| | |
|---|---|
| நீடு பொழில் | [illegible] சோலைகளையுடையதான |
| திருவாறன்விளை | திருவாறன்விளைப்பதியை |
| நிச்சலும் தொழ வாய்க்கும் கொல் | [illegible] தொழுதுகொண் [illegible] கும்படியான பாக்கி [illegible] வாய்க்குமோ? |

* * * பாட்டின் முதலிலே "வாய்க்குங்கொல் நிச்சலும்" என்றிருக்கச் செய்தேயும் தொடக் கத்தில் "கூடுங்கொல் வைகலும்" என்றது ஆதர நிசயத்தையும் விரைவு மிகுதியையும் [illegible] டும். அங்குறையும் [illegible] ஆச்ரித வாத்ஸல்யத்தைக் கண்டு கோவிந்தனை என் றூர்; விரோதிநிரஸனமிடுக்கைக் கண்டு 'மதுசூதனைக் கோளரியை' என்றூர்.

"ஆடும் பறவை மிசைக்கண்டு" என்ற சொல் நயத்தை நோக்கி நம்பிள்ளை யருளிச் செய்யும் விசேஷார்த்தம்—திருவாறன்விளையை உத்தேச்யமாகக் கொண்டு எம்பெருமானை அங்கே காணவேணுமென்று நாம் அவ்விடந்தேடிச் சென்றால், அவன் திருநகரியை உத்தேச்ய மாகக்கொண்டு இங்கே நம்மைக் காணவேணுமென்று ஆடும் பறவைமிசையேறி வருவனே; அன்னவனை நடுவழியிலே கண்டு—என்று.

கைதொழுதன்றி—கைதொழுவது மாத்திரமேயல்லாமல் என்றபடி. வேதாத்யயன பரர் களும் பஞ்சமஹாயஜ்ஞபராயணர்களும் வாழுமிடமென்கிறது மூன்றுமடி. (௯)

3439. வாய்க்குங்கொல்நிச்சலுமெப்பொழுதும் மனத்தீங்குநினைக்கப்பெற *
வாய்க்கும்கரும்பும்பெருஞ்செந்நெலும் வயல்சூழ்திருவாறன்விளை *
வாய்க்கும்பெரும்புகழ்மூவுலகீசன் வடமதுரைப்பிறந்த *
வாய்க்கும்மணிநிறக்கண்ணபிரான்றன் மலரடிப்போதுகளே. (௰)

| | |
|---|---|
| வாய்க்கும் கரும்பும் பெரு செந்நெலும் வயல் சூழ் | செழித்த கரும்புகளும் ஓங்கிய செந்நெற்களுமான கழனிகள் சூழப்பெற்ற |
| திருவாறன்விளை | திருவாறன் விளைப்பதியிலே, |
| வாய்க்கும் பெரு புகழ் | வாய்த்த மிக்க கீர்த்தியையுடையவனும் |
| மூ உலகு ஈசன் | மூவுலகங்களுக்கும் ஸ்வாமியும் |
| வட மதுரை பிறந்த | வடமதுரையில் அவதரித்தவனும் |
| வாய்க்கும் மணி நிறம் | அநுபவிக்க வாய்த்த நீலரத்னம் போன்ற நிறத்தையுடையவனுமான |
| கண்ணபிரான் தன் | ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய |
| மலர் அடி போதுகள் | விகஸிதமான திருவடித்தாமரைகளை |
| எப்பொழுதும் | இடைவீடின்றி |
| ஈங்கு மனத்து நினைக்க பெற | இங்கேயிருந்து மனத்திலே நினைக்கும்படியான பேறு பெறுதற்கு |
| நிச்சலும் வாய்க்கும் கொல் | எப்போதும் பாக்கியம் வாய்க்குமோ? |

* * * திருவாறன்விளையிலே சென்று அநுபவிக்க ப்ராப்தியில்லையாகிலுமாகுக; அங்கு நின்ற ருளின எம்பெருமான் திருவடிகளை இங்கேயிருந்தாகிலும் நிரந்தரமாகச் சிந்தனை செய்யும் பாக்கி யம் வாய்க்குமோ வென்கிறூர். நிச்சலும் என்று சொல்லி, பின்னை எப்பொழுதும் என்கைக்குக் கருத்து ஏனென்னில்; இங்கு ஈடு காண்மின் ;—"நித்யாக்நிஹோத்ரம் போலே ஒரு கால விசேஷத்திலேயாய்ப் போகவொண்ணாது; எல்லாவவஸ்தைகளிலுமுண்டாகவேணும்" என்று. ஒருவா நித்யம் அக்நிஹோத்ரம் பண்ணுகிறுனென்றால் இரவும் பகலும் அதுவே தொழிலாக இருக்கிறுனென்பதில்லையே; ஒரு நாளைக்கு ஒரு சிறுபோது அக்நிஹோத்ரம் பண்ணினாலும் நித் யாக்நிஹோத்ரியென்று பெயர் வந்துவிடுமன்றே. அப்படியாகாமே அநவரதமும் நினைக்கப் பெறவேணுமென்கிறது. மனத்தீங்கு—ஈங்கு என்று பிரிக்க. உத்தேச்யமானதொன்றை அது

பவிப்பதிற்காட்டிலும் அநுபவிக்க மநோரதிக்குமளவே நன்று என்பதை இங்கு நம்பிள்ளை மிக அழகாக விவரித்தருளுகிறார்; "துர்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத꞉ । யதி நாசம் ந விந்தேத தாவதாஸ்மி க்ருதீ ஸதா ॥—துர்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத꞉, யதி நாசம் ந விந்தேத தாவதாஸ்மி க்ருதீ ஸதா." என்கிற ஜிதந்தாச்லோகம் இங்கு ரஸமயமாக வியாக்கியானிக்கப் பெற்றுள்ளது. "நாட்டார் மநோரத மென்றும் அநுபவமென்றும் இரண்டாகவிறே சொல்லிப் போருவது; எனக்கு இதெல்லாம் வேண்டா; இம்மநோரத மாத்ரத்தாலே க்ருதக்ருத்யன் நான். சரீரஸம்பந்தமற்றுப் பரமபதத்திலேபோய் ஏற்றமாக அநுபவிக்குமதிற்காட்டில் நான் பேறாக நினைத்திருப்பது இத்தையே" என்கிற ஈட்டு ஸ்ரீஸூக்திகள் ரஸிக்கத்தக்கன. இங்கு, இளையாற்றுக்குடி நம்பி யென்பாரொரு பரமபக்தருடைய இதிஹாஸமொன்றும் அருளிச்செய்யப்பட்டுளது. அவர் திருநாட்கள்தோறும் கோயிலுக்கு வந்து பெருமாளை ஸேவித்துப்போவராம். போனால், மீண்டும் திருநாள் வருமளவும் அதனையே போதுபோக்காக ஸ்மரித்துக்கொண்டிருப்பாராம். அவர் நூறு வயஸ்ஸும் புகுகையாலே பலஹாநி பிறந்து திருமுளைத் திருநாளில் பெருமாள் புறப்பட்டருளுகைக்கு உதவவந்து புகுரப்பெற்றிலர். பெருமாளும் தேடியருளிக் காணாமை 'நம் இளையாற்றுக்குடியான் வந்திலன், நம் கண்ணாலமல்லவோ' என்று திருவுள்ளமானாராம். அவர் தாம் ஆறாந்திருநாளிலே ஸேவித்திருக்கச் செய்தே 'நாம் உனக்குச் செய்யவேண்டுவதென்?' என்று கேட்டருள, 'தேவரீர் தந்தருளின சரீரத்தைக்கொண்டு போரக்காரியங் கொண்டேன்; இனி போக்குவரத்துக்கு யோக்யமாகாதபடி போரஜரித்தது' என்ன, 'வாராய்! மெய்யே ~~யினைத்தாயாகில்~~ இங்ஙனே யிரு' என்றருளிச் செய்தார். பெருமாள் நடுவில் திருவாசலுக்கவ்வருகே யெழுந்தருளுங்காட்டில் திருநாட்டுக் கெழுந்தருளினார்". (௪)

3440. மலரடிப்போதுகளென்னெஞ்சத்து எப்பொழுதுமிருத்திவணங்க *
பலரடியார்முன்பருளிய பாம்பணையப்பனமர்ந்துறையும் *
மலரில்மணிநெடுமாடங்கள் நீடு மதிள் திருவாறன்விளை *
உலகமலிபுகழ்பாட நம்மேல்வினையொன்றுநில்லாகெடுமே. (௫)

| | | | |
|---|---|---|---|
| மலர் அடி போதுகள் | பரமபோக்யமான திருவடித் தாமரைகளை | மலரில் | (தேவர்கள் வர்ஷித்த) புஷ்பங்களோடு கூடின |
| என் நெஞ்சத்து எப்பொழுதும் இருத்தி | எனது நெஞ்சிலே அநவரதமும் இருக்கும்படி பண்ணி | மணி நெடு மாடங்கள் | மணிமயமான ஓங்கின மாடங்களையும் |
| வணங்க | தன்னையே வணங்குமாறு; | நீடு மதிள் | நெடிய திருமதிள்களையு முடைத்தான |
| பலர் அடியார் முன்பு அருளிய | மற்றும் பல பக்தர்கள் இருக்கச்செய்தேயும் அவர்களுக்கு முன்னே எனக்கு க்ருபை பண்ணின | திருவாறன்விளை | திருவாறன்விளைப்பதியினுடைய |
| பாம்பு அணை அப்பன் | அனந்தசாயியான எம்பெருமான் | உலகம் மலி புகழ் | உலகமெங்கும் நிறைந்த திவ்ய கீர்த்திகளை |
| அமர்ந்து உறையும் | உகந்து வர்த்திக்குமிடமாய் | பாட | பாடவல்லவிலே |
| | | நம் மேல் வினை ஒன்றும் நில்லா கெடும் | நம்மிடத்துள்ள பாவங்கள் ஒன்றும் மிச்சப்படாதபடி எல்லாம் தொலைந்துபோம் |

* * அடியார்கள் அநுபவிக்கைக்காக அநந்தசாயியானவன் வர்த்திக்கிற திருவாறன்விளையினுடைய பெரும்புகழைப்பாட, நம் பாபமொன்றும் நில்லாதே தொலைந்தொழியுமென்கிறார்.

[பலரடியார் முன்பருளிய] இவ்விடத்து ஈட்டு ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யமானவை ;— "ஸ்ரீவேதவ்யாஸபகவான் ஸ்ரீவால்மீகி பகவான் ஸ்ரீபராசரபகவான் * இன்கவி பாடும் பரம கவிகளென்று சொல்லப்படுகிற முதலாழ்வார்களெல்லாருமுண்டாயிருக்க, என் பக்கலிலே விசேஷகடாக்ஷம் பண்ணுவதே! [ஸஹஸ்ரோநந ஈஹதா ஸஹஸ்ரஈஹ ஈ வெக்ஷத] முதலிக ளெல்லாருமிருக்கச்செய்தே திருவடிபக்கலிலே விசேஷகடாக்ஷம் பண்ணினாப்போலேயாயிற்று பலருமுண்டாயிருக்க இவரை விஷயீகரித்தபடி."

இங்கு ஆழ்வானுடைய அற்புதமான இதிஹாஸமொன்று (ஈட்டில்) காட்டப்பட்டுளது. கேண்மின் ; அக்காலத்திலே அரசாண்டுவந்த சோழராஜன் வைஷ்ணவ த்ரோஹியாகையாலே ஆங்காங்குள்ள விஷ்ணுப்ரதிமைகளை யெடுத்து எறிந்துவிடவேணுமென்று முயன்றபோது அவ னுக்கு இஷ்டரானவர்கள் 'மந்த்ரபூர்வகமாக ப்ரதிஷ்டை செய்யப்பட்ட விஷ்ணுபிம்பங்களை யழி யச்செய்தால் ஊருக்குப் பெருத்த தீங்கு விளையும்' என்று சொல்ல, அதுகேட்ட சோழன் 'அந்த ப்ரதிமைகளில் தெய்வசக்தியை உத்வாஸநம் பண்ணியழியச் செய்வோம்' என்று நிச்ச யித்து ஒரு ப்ராஹ்மணனுக்குப் பணங்கள் கொடுத்து 'நீ க்ஷுத்ராஞ்ஜநமிட்டுக் கொண்டு உத்வாஸநம் பண்ணு' என்று ஆஜ்ஞாபிக்க, அவனும் திவ்யதேசங்களிலே சென்று அப்படியே அத்ருச்யாஞ்ஜநமிட்டுக்கொண்டு உத்வாஸநம் பண்ணி பகவத் விக்ரஹங்களைக் கடலிலே யெடுத் தெறிகிற செய்தியை எம்பெருமானார் திருச்செவிசாத்தி 'நாம் நெடுநாளாக இத்திருவரங்கம் பெரியகோயிலை விடாதே நோக்கிக்கொண்டு போருகிறோம் ; இவ்விடத்துக்கும் அழிவுவரும்படி ஆஸுரவர்க்கம் மேலிடாநின்றது; இனிமேல் செய்யவேண்டுவதென்?' என்று வியாகுலப்பட்டுப் பெரியநம்பியோடே சிந்தித்திருக்க, 'நான் பெருமாளுடைய திருவெல்லையிலே ஒரு ப்ரதக்ஷிணம் வரும்படியாக உம்முடைய சிஷ்யர்களில் ஒருவரை என் பின்னே அனுப்பவேணும் ; என் பின்னே வாராநின்றால் 'ஒருவன் பின்னே போகிறோம்' என்று தன்னெஞ்சில் படாதே நிழல் போலே என்னைப் பின்செல்பவனாக இருக்கவேணும் ; அப்படிப்பட்ட ஒரு சிஷ்யனைப் பார்த் தனுப்பும்' என்று பெரியநம்பி திருவாய்மலர்ந்தருள, இப்படிப்பட்ட ஆத்மகுணபரிபூர்ணரான சிஷ்யர் ஆழ்வானொருவரேயென்பது உடையவர்க்கு நன்கு தெரிந்திருந்தும் இதனைப் பெரியநம்பி திருவாக்கினால் வெளியிடுவிக்க வேணுமென்றெண்ணிக்கொண்டு நம்பியை நோக்கி 'இப்படிப் பட்ட சிஷ்யர் இவ்விடத்தில் இருப்பதாகத் தெரியவில்லையே' என்று சொல்லி நிற்க, 'நம் கூரத் தாழ்வானை அனுப்பலாகாதோ?' என்று நம்பி நியமித்தருள, அருகிலிருந்த ஆழ்வான் இதைக் கேட்டு 'நம்பிகள் நம் ஸ்வரூபத்தினுண்மையை இங்ஙனேயறிந்து பல சிஷ்யர்களின் முன்னே இப்படி யருளிச்செய்யும்படியான பாக்கியம் பெற்றோமே! என்று பெருமகிழ்ச்சியடைந்து, நம்பிகளின் திருவுள்ளப்படியே பிரதக்ஷிணத்திற்குப் பின் சென்றார், "பலரடியார் முன்பரு ளிய" என்றவிடத்திற்கு இது மிகவும் பொருத்தமான இதிஹாஸம். (ரு)

3441. ஒன்றுநில்லாகெடும்முற்றவும் தீவினையுள்ளித்தொழுமின்தொண்டீர் *
அன்றங்கமர்வென்றுருப்பிணிநங்கை அணிநெடுந்தோள்புணர்ந்தான் *
என்றுமெப்போதுமென்னெஞ்சம்துதிப்ப உள்ளேயிருக்கின்றபிரான் *
நின்றவணிதிருவாறன்விளையென்னும் நீணகரமதுவே. (சா)

| | |
|---|---|
| அன்று அங்கு | முன்பொரு காலத்தில் |
| அமர் வென்று | பூசலிலே வெற்றி பெற்று |
| உருப்பிணி நங்கை | ருக்மிணிப் பிராட்டியினுடைய |
| அணி நெடு தோள் புணர்ந்தான் | அலங்காரங்களால் பரம போக்யமான திருத்தோள்களை யணைந்தவனும் |

| | | | |
|---|---|---|---|
| என்றும் எப்போதும் துதிப்ப என் நெஞ்சம் உள்ளே இருக்கின்ற பிரான் | ஓயவின்றி நான் துதிக்கும்படி எனது நெஞ்சினுள்ளே யிருப்பவனுமான பெருமான் | தொண்டர் | தொண்டர்களே! |
| நின்ற | நித்யவாஸம் பண்ணுகிற | உள்ளி தொழுமின் | சிந்தித்துத் தொழுங்கோள்; |
| அணி திருவாறன் விளை என்னும் நீள் நகரம் அது | அழகிய திருவாறன் விளை யென்கிற அந்த நகரத்தை | தீவினை ஒன்றும் நில்லா முற்றவும் கெடும் | கொடிய பாவங்களொன்றும் சேஷியாதபடி நிலைகுலைந்து முழுதும் நசித்துப்போம். |

* * * எம்பெருமான் பக்கலில் சாபலமுடையாரை விளித்து உங்களுடைய ஸகல துக்கங்களும் தொலையும்படி திருவாறன்விளையை நெஞ்சாலே நினையுங்கோளென்கிறார்.

ஒன்றும் நில்லா கெடும் முற்றவும் தீவினை—பாபங்களை நாமே போக்கிக்கொள்வதாக முயலுமளவில் சிறிது கிடக்கச் சிறிது போகும்; அங்ஙனன்றிக்கே ஸர்வசக்தியான அவன் தானே போக்குகையில் வாஸனையோடே போகக்கடவதாயிற்று. ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் « [illegible] »—மேருமந்தரமாத்ரோபி ராசி: பாபஸ்ய கர்மண:, கேசவம் வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நச்யதி." என்று கூறினது இங்கே அநுஸந்தேயம்.

அமர்வென்று உருப்பிணி நங்கையணி நெடுந்தோள் புணர்ந்த வரலாறு வருமாறு;—விதர்ப்பதேசத்தில் குண்டினமென்கிற பட்டணத்தில் பீஷ்மகனென்கிற அரசனுக்கு ருக்மன் முதலிய ஐந்து பிள்ளைகளும் ருக்மிணி யென்கிற ஒரு பெண்ணுமிருந்தனர். அந்த ருக்மிணியானவள் ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அவதாரம். அவளுக்கு யுக்தவயது வந்தவுடனே கண்ணபிரான் அங்குச் சென்று இப்பெண்ணை எனக்குத் தாரைவார்த்துக் கொடுங்களென்று கேட்க, ருக்மனென்பவன் அவளைச் சிசுபாலனுக்குக் கொடுக்க நினைத்துக் கண்ணனுக்குக் கொடுக்கலாகாதென்று தகைந்துவிட்டு, சிலநாள் கழிந்தபின் அந்த ருக்மிணியின் கலியாணத்திற்காக ஸ்வயம்வரம் கோடித்து ஸகல தேசத்தரசர்களையும் வரவழைத்திட்டனன். இதனிடையில் ருக்மிணி "அன்றிப் பின் மற்றொருவற் கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ் சோலையெம்மாயற்கல்லால்" என்ற துணிவையுடையளாகையால் தன்னை எவ்வகையினாலாகிலும் மணந்து செல்லும்படி கண்ணபிரானிடத்து ஓர் அந்தணனைத் தூதுவிட்டிருந்தாள். கண்ணபிரானும் அங்ஙனமே பலராமன் முதலியோரைக் கூட்டிக்கொண்டு அப்பட்டணத்திற் கெழுந்தருளி கல்யாண முஹூர்த்ததினத்திற்கு முதனாள் அந்த ருக்மிணியைத்தான் ப்ரகாசமாக வெடுத்துத் தேரிலேற்றிக் கொண்டு ஊர்நோக்கிப் புறப்படப்புக, சிசுபாலன் முதலிய சில அரசர்கள் கண்ணனை யெதிர்த்துப் போர் செய்யமுயல, பலராமனும் தானுமாக அவர்களை வலியடக்கி வென்று ஓட்டிவிட, பின்பு (ருக்மிணியின் தமையனான) ருக்மன் மிகவும் வெகுண்டு ஆக்ரஹப்பட்டுக் கண்ணனை முடிப்பதாக ஒங்கிவர, அவனைக் கண்ணபிரான் ருக்மிணியின் ப்ரார்த்தனையின்படி உயிர்க்கொலை செய்யாமல் அவனது மீசையையும் குடுமியையும் சிரைத்துப் பங்கப்படுத்தினன். « [illegible] —சைலேந பத்த்வா தமஸாதுகாரிணம் ஸச்மச்ருகேசம் ப்ரவபந் வ்யரூபயத்" என்பது ஸ்ரீபாகவதம். இங்ஙனே விரோதிகளைத் தொலைத்துப்பிறகு ருக்மிணிப்பிராட்டியைத் திருமணம் புணர்ந்தாராயிற்று. (அ)

3442 நீணகரமதுமலர்ச்சோலைகள்சூழ் திருவாறன்விளை *
நீணகரத்துறைகின்றபிரான் நெடுமால்கண்ணன்விண்ணவர்கோன் *
வாணபுரம்புக்குமுக்கட்பிரானைத்தொலைய வெம்போர்கள்செய்து *
வாணனையாயிரந்தோள் துணித்தான் சரணன்றிமற்றொன்றிலமே. (எ)

| | |
|---|---|
| மலர்ச்சோலைகள் சூழ் | பூஞ்சோலைகள் சூழ்ந்த |
| திருவாறன் விளை அதுவே நீள் நகரம் | திருவாறன் விளையென்கிற தலமே பரமப்ராப்யம்; |
| நீள் நகரத்து | (அந்த) மஹாநகரத்தில் |
| உறைகின்ற பிரான் | நித்யவாஸம் பண்ணுகிற மஹோபகாரகனாய் |
| நெடு மால் | (அடியார் திறத்து) மிக்க வியாமோஹமுடையனாய் |
| கண்ணன் | ஸ்ரீக்ருஷ்ணனாகத் திருவவதரித்தவனாய் |
| விண்ணவர் கோன் | நித்யஸூரிகளுக்குத் தலைவனாய் |
| வாணபுரம் புக்கு | பாணாஸுரனுடைய நகரிலே சென்று |
| முக்கண் பிரானை தொலைய | சிவபிரான் பங்கமடையும்படி |
| வெம் போர்கள் செய்து | கொடிய யுத்தத்தை நடத்தி |
| வாணனை ஆயிரம் தோள் துணித்தான் | பாணாஸுரனுடைய ஆயிரம் தோள்களையும் துணித்தவனான எம்பெருமான் |
| சரண் | (அந்தத் திருப்பதியை யடைதற்கு) உபாயபூதன்; |
| அன்றி மற்று ஒன்று இலம் | கீழ்ச் சொன்னவை தவிர ப்ராப்ய ப்ராபகங்களை யுடையோமல்லோம். |

* * * திருவாறன்விளையென்கிற திருப்பதியே தமக்கு ப்ராப்யமென்றும் அங்கு உறையும் எம்பெருமானே அதற்கு உபாயபூதனென்றும் தம்முடைய ஸித்தாந்தத்தை வெளியிடுகிறார் இப்பாட்டில். இத்திருப்பதியின் சுவையை யறியாதார்க்கன்றோ பரமபதம் ப்ராப்யமாவது; இதன் சுவையறிந்தார்க்குப் பரமபதம் ஒரு பொருளாகத் தோன்றுமோ? இத்தலமேயன்றோ பரமபதமாவது. எம்பெருமானுக்குங்கூட ப்ராப்யபூமி இதுவான பின்பு இவ்வர்த்தத்தில் ஸம்சயமுண்டோ? விரோதிகளைப்போக்கி இத்தலத்தில் வாஸத்தையளிப்பதற்கு உபாயபூதன் அப்பெருமானேயாவன்.

அன்றி மற்றொன்றிலமே என்றவிடத்து ஈடு — "இங்ஙனல்லது ப்ராப்ய ப்ராபகங்கள் மாறாடக்கடவோமல்லோம்" என்று. எம்பெருமானை ப்ராப்யனாகக்கொண்டு அவனைப் பெறுதற்கு உபாயமாக இத்திருப்பதியைக்கொள்வர் சிலர்; அது தகுதியற்றதென்று ஆழ்வார் தம்முடைய அத்யவஸாயத்தை வெளியிட்டருளினாராயிற்று. (எ)

3443 அன்றிமற்றொன்றிலம்நின்சரணேயென்று அகலிரும்பொய்கையின்வாய் *
நின்றுதன் நீள்கழலேத்தியவானையின் நெஞ்சிடர்தீர்த்தபிரான் *
சென்றங்கினிதுறைகின்றசெழும்பொழில்சூழ் திருவாறன்விளை *
ஒன்றிவலஞ்செய்யவொன்றுமோ தீவினையுள்ளத்தின்சார்வல்லவே. (அ)

| | |
|---|---|
| அகல் இரு பொய்கையின் வாய் நின்று | மிகப் பெரிய பொய்கையிடத்திலே (முதலையின் வாயிலகப்பட்டு) நின்று |
| நின் சரண் அன்றி மற்று ஒன்று இலன் என்று தன் நீள் கழல் ஏத்திய ஆனையின் | 'உன் திருவடிகளையொழிய மற்றொரு புகலுடையேனல்லேன்' என்று தன்னுடைய திருவடிகளைத் துதித்த கஜேந்த்ராழ்வானுடைய |

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சு இடர் தீர்த்த பிரான் | நெஞ்சிலிருந்த இடரைப் போக்கின பெருமான் | | (அப்படி கூடுமாகில்) |
| சென்று அங்கு இனிது உறைகின்ற-; | | | |
| செழும் பொழில் சூழ் திருவாறன்விளை (யை)-; | | தீ வினை உள்ளத்தின் சார்வு அல்லவே | பாவங்கள் நெஞ்சில் பொருத்தமுடையனவல்லவாம், |
| ஒன்றி வலம் செய்ய ஒன்றுமோ | கிட்டி வலஞ் செய்யக் கூடுமோ? | | |

* * * திருவாறன்விளையிலே புகவே நம்முடைய ஸகல துக்கங்களும் தொலையுமென்கிறார். கஜேந்திராழ்வானுடைய துயரைத் தீர்த்தவன் அங்ஙனமே நம்போல்வாருடைய துயரையும் தீர்க்கத்திருவாறன்விளையிலே வந்து நித்யஸந்நிதி பண்ணியிராநின்றான்; அங்குச்சென்று கிட்டி நாம் வலஞ் செய்யக்கூடுமோ? கூடுமாகில் கொடிய பாவங்களெல்லாம் நம்முள்ளத்தில் பொருத்தமற்றவையாகிப் பறிப்பறந்தொழியும் என்றதாயிற்று.

பொய்கையில் முதலைவாயிலகப்பட்டு "கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே—கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே," என்னும்படி முதலை நீருக்கிழுக்க, தான் தரைக்கிழுக்க, இப்படியாகப் பல வருஷங்கள் ஸ்வப்ரவ்ருத்தியாலே உய்யப்பார்த்த கஜேந்திராழ்வான் 'இந்த ஸ்வப்ரவ்ருத்தியானது பகவத்ப்ரவ்ருத்திக்கு விரோதியாய் நின்றது; இதற்கு நிவ்ருத்தியுண்டாலல்லது அவனருள் பெருகாது' என்று துணிந்து "நின்சரணே யன்றி மற்றொன்றிலம்" என்று அத்யவஸாயங்கொண்டு எம்பெருமானது திருவடிகளை யேத்தினமை முன்னடிகளிற் கூறப்பட்டது.

ஆனையின் நெஞ்சிடர்தீர்த்த பிரான்—ஆனைக்கு இடராவது உயிர் தொலைகிறதே யென்கிற இடரன்று; வெகுசிரமப்பட்டுப் பறித்த செவ்விப்பூவைத் திருவடிகளிலே ஸமர்ப்பிக்கப்பெறு தொழிகிறோமோ! என்று உண்டான இடர். 'நாமடியாக எம்பெருமானுக்கு என்ன அவத்யம் விளைகிறதோ!' என்று தோன்றிய இடர் என்னவுமாம். அதாவது, பரமபக்தனான கஜேந்திராழ்வானைக் காத்தருளாத எம்பெருமான் ரக்ஷகனென்னத் தகுதியுடையனல்லன் என்று உலகத்தார் ஸித்தாந்தம் செய்துவிடப் போகிறார்களே யென்று யானை இடர்பட்டதென்கை. (அ)

3444 தீவினையுள்ளத்தின்சார்வல்லவாகித் தெளிவிசும்பேறலுற்றால் *
நாவினுள்ளுமுள்ளத்துள்ளுமமைந்த தொழிலினுள்ளும்நவின்று *
யாவரும்வந்துவணங்கும்பொழில் திருவாறன்விளையதனை *
மேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலென்றுமென்சிந்தனையே.

| | | | |
|---|---|---|---|
| தீ வினை உள்ளத்தின் சார்வு அல்ல ஆகி | பாவங்கள் நெஞ்சில் சேர்த்தியற்று [ஹ்ருதயம் நிர்த்தோஷமாகி] | நாவினுள்ளும் உள்ளத்துள்ளும் அமைந்த தொழிலினுள்ளும் நவின்று யாவரும் வந்து வணங்கும் | மநோவாக்காயங்களிலே பயின்று யாவரும் வந்து வணங்குமிடமான |
| தெளி விசும்பு ஏறல் உற்றால் | திருநாட்டிலே போகப்ராப்தமானாலும் [அங்குச் செல்ல விருப்பமற்று] | | |
| | | | பொழில் திருவாறன் விளையதனை* |
| | | மேவி வலம் செய்து கைதொழ கூடும்கொல் என்றும் | பொருந்தி வலஞ்செய்து கை தொழ ப்ராப்தமாகுமோ! என்று இதனையே யெண்ணுகின்றது. |
| என் சிந்தனை | எனது நெஞ்சானது. | | |

* * * திருவாறன்விளையை யநுபவிக்க ப்ராப்தமாகும்போது ஸ்ரீவைகுண்டம் கிடைப்பதானாலும் தம்முடைய திருவுள்ளம் அதனைப் பொருள்படுத்தாதென்று கூறும் முகத்தால் இத்திருப்பதியில் தமக்குள்ள ஆதராதிசயத்தை வெளியிட்டருளுகிறார். பாவங்களெல்லாம் தொலைந்து பரமபதத்திலேறப் பெறுகையாகிற ஒரு ஸமயவிசேஷம் வந்து கிட்டினாலும் என்னெஞ்சானது அதில் ருசியற்று, பரமபோக்யமான திருவாறன்விளையையே கிட்டித் தொழ நேருமோ வென்று பாரியா நிற்கும் என்றாராயிற்று. (க)

3445 சிந்தைமற்றொன்றின்திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும் *
சிந்தையினால்செய்வதானறியாதன மாயங்களொன்றுமில்லை *
சிந்தையினால்சொல்லினால்செய்கையால் நிலத்தேவர்குழுவணங்கும் *
சிந்தைமகிழ்திருவாறன்விளையுறை தீர்த்தனுக்கற்றபின்னே.

| | |
|---|---|
| சிந்தையினால் சொல்லினால் செய்கையால் | மனோவாக்காயங்களாலே |
| நிலத்தேவர் குழு வணங்கும் | பாகவத கோஷ்டி வணங்கப் பெற்ற |
| சிந்தை மகிழ் திருவாறன்விளை உறை | மனோஹரமான திருவாறன்விளையிலே வாழ்கிற |
| தீர்த்தனுக்கு அற்ற பின் | பரமபவித்திரனை பெருமானுக்கு அற்றுத் தீர்ந்த பின் |
| சிந்தை மற்று ஒன்றின் திறத்தது அல்லா தன்மை | எனது மனம் வேறொன்றை உத்தேச்யமாக நினைத்திராத படியை |
| தேவபிரான் அறியும் | ஸர்வஜ்ஞனை எம்பெருமான் தானே அறியக் கடவன்; |
| சிந்தையினால் செய்வ | நெஞ்சால் செய்யப்படுமவற்றில் |
| தான் அறியாதன மாயங்கள் ஒன்றும் இல்லை | அவன் தானறியாத வஞ்சனங்களொன்று மில்லையே. |

* * * ஆழ்வீர்! இப்போது நீர் திருவாறன்விளையிலே ப்ராவண்யம் முற்றியிருந்தீராகிலும், பலகாலும் பரமபதம் பரமபதமென்று வாய்வெருவிக்கிடந்தீராதலால் எம்பெருமான் அதையே கொள்ளுமென்று நிர்ப்பந்தித்துக் கொடுத்தானாகில் என் செய்வீரென்று சிலர் கேட்பதாகக் கொண்டு அதற்கு உத்தரமுரைக்கிறார் இப்பாட்டில். அந்த ஸர்வேச்வரன் ஸர்வஜ்ஞனன்றோ. என்னினைவை அவன்றான் அறியானோ? அவன் புருஷார்த்தப்ரதன் என்று ப்ரஸித்தனல்லனோ. புருஷன் அர்த்தித்ததையன்றோ அவன் கொடுத்தருள்வன். எனது சிந்தை திருவாறன்விளை தவிர மற்றொன்றையும் கணிசியாதிருக்கும்படியை அவன் அறிய அசக்தனல்லனே; அறிந்துவைத்து எங்ஙனே மற்றொன்று தன்னைக் கொடுப்பன்? என்கிறார்.

"மற்றென்கிறது பரமபதத்தின் பேர் சொல்லுகையுங்கூட அஸஹ்யமானபடி." என்ற ஈடு காண்க. (கo)

3446 தீர்த்தனுக்கற்றபின்மற்றோர் சரணில்லையென்றெண்ணி * தீர்த்தனுக்கே
தீர்த்தமனத்தனாகிச் செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தீர்த்தங்களாயிரத்துள்ளிவைபத்தும் வல்லார்களை * தேவர்வைகல்
தீர்த்தங்களேயென்றுபூசித்து நல்கியுரைப்பர்தம்தேவியர்க்கே. (கக)

| | |
|---|---|
| தீர்த்தனுக்கு அற்ற பின் | பரமபவித்திரனை எம்பெருமானுக்கு அநந்யார்ஹப் பட்ட பின்பு |
| மற்று ஓர் சரண் இல்லை என்று எண்ணி | வேறொரு உபாயமில்லையென்று அறுதியிட்டு |

| | | | |
|---|---|---|---|
| **தீர்த்தனுக்கே தீர்த்த மனத்தனன் ஆகி** | அப்பெருமானுக்கே அனந்யார்ஹமாகப்பட்ட நெஞ்சையுடையவராய்க் கொண்டு | இவை பத்தும் வல்லார்களை | இப்பதிகத்தை ஓத வல்லவர்களைப் பற்றி |
| **செழு குருகூர் சடகோபன் சொன்ன—;** | | தேவர் | நித்யஸூரிகள் |
| | | வைகல் | எப்போதும் |
| | | தம் தேவியர்க்கு | தங்கள் மஹிஷிகளிடத்திலே |
| **தீர்த்தங்கள் ஆயிரத்துள்** | ஆயிரம் பாட்டும் ஆயிரம் தீர்த்தங்களென்னும் படியாக வுள்ளவிதிலே | தீர்த்தங்களே என்று பூசித்து நல்கி உரைப்பர் | 'இவர்கள் பரமபவித்திரர்களே' என்று ஸபஹுமானமாகச் சொல்லுவர்கள். |

* * * இத்திருவாய்மொழியை ஓதுமவர்களை நித்யஸூரிகள் போரவும் கௌரவிப்பர்களென்று அதனையே பலனாகக் கூறித் தலைக்கட்டுகிறார். ஆயிரம் பாசுரங்களும் ஆயிரம் தீர்த்தங்களாயிற்று. இந்தப் பதிகத்தை அப்யஸிக்கவல்லார்களை திருவடி திருவனந்தாழ்வான் ஸேனைமுதலியார் தொடக்கமான நித்யஸூரிகள் 'இவர்கள் பரமபவித்திரர்கள்' என்று ஆதரித்துக் கொண்டு போந்து, தங்கள் மஹிஷிகளை ஸ்நேஹித்துக் கொண்டாடும் தசையிலே அவர்களிடத்தில் இந்த விசேஷத்தையே சொல்லிக் களிப்பார்கள் என்றதாயிற்று.

திருவடியின் தேவிகள் ருத்ராஸுகீர்த்திகள்; ஸேனைமுதலிகளின் தேவிகள் ஸூத்ரவதி என்றிப்படி ப்ரஸித்தமன்றோ; அவர்களையே இங்குத் தம் தேவியர் என்கிறது, (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம். எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
திருவாய்மொழி யுரையில்
ஏழாம்பத்து முற்றிற்று.